# அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த லீலாம்ருதம்



ஸ்ரீமதி. மாதங்கி பாலாஜி

# அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த லீலாம்ருதம்

ஸ்ரீமதி. மாதங்கி பாலாஜி



ஸ்ரீ குரு தத்த பாதுகா க்ஷேத்திர ராஜிதம்

மாருதிபுரம் (உத்திரமேரூர்).

## நூல் விவரப் பட்டியல்


நூலின் பெயர் : **அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த லீலாம்ருதம்**

மொழிபெயர்ப்பு : ஸ்ரீமதி. மாதங்கி பாலாஜி





வெளியீடு : ஸ்ரீமதி. மாதங்கி பாலாஜி & ஸ்ரீ குரு தத்த பாதுகா க்ஷேத்திர ராஜிதம், மாருதிபுரம் (உத்திரமேரூர்)

பிரதிகளுக்கு : சுந்தர் சாய் - *9789404451*
மாதங்கி பாலாஜி - *9942219947*

தக்ஷனை : **ரூ 350.00**

முதல் பதிப்பு : **ஜூன் 2023**

மொத்த பக்கங்கள் : *480* + *8* வண்ணபடங்கள்

அட்டை படம் : **சேகர் சானே**, புனே

நூலின் அளவு : *18 x 24cm*

தாளின் தரம் : *70gsm N.S. Paper*

டைப்செட்டிங் : **ஜெமினி டிசைன்ஸ்**, சென்னை - *98404 87404*

அச்சிட்டார் : கைலாஷ் பிரிண்டர்ஸ், சென்னை - *94440 89506*

**Shrimant Maharaj Malojiraje III Sanyuktaraje Bhosle**

**Rajasaheb of Akkalkot**



The Estate Office, New Palace, Akkalkot 413216, Solapur

• E-mail: estateofficeakkalkot@gmail.com

Ref. No. :

Date : 24/04/2023



To,

Mathangi Balaji,

Chennai

I hereby congratulate you for the successful completion of Akkalkot Maharaj Shri Swami Samarth's Leelamruth in Tamil Language. I wish you all the best for this book and all success for your future endeavors.

Malojiraje

Shrimant Malojiraje Sanyuktaraje Bhosle

Rajasaheb Akkalkot




# SREE CHAKRA DATTA SREE PADA SREE SAI PEADAM TRUST

No:3/13,Jayatheertharao Street, L.I.C Colony Pammal, Chennai - 600075
(PAN:AAZTS8428F),(Regd.No.46/IV/2020) Contact:7305243994,9884280428
Email:info@sreechakradattasreepadapeadam.org


Date: 24.04.2023

மதிப்புரை



**DigambaraDigambaraSripadaSrivallabhaDigambara!!**
**DigambaraDigambaraSrichakraDattatreyaDigambara!!**

It is nothing but the grace of Aadhi guru Dattatreya Swami and his immense blessings on all the beings. Swami has taken the mahasankalpa to manifest as paripoorna Avatar during the most difficult days of Kaliyuga repeatedly to offer solace and guidance to all. Thus He manifested himself as SripadaSrivallabha as his first Avatar in Pitapuram (A.P.) in 1320 A.D. Then as Sri NarasimmaSaraswathi, as Shri Swami Samarth - Maharaj of Akkalkot (Maharashtra) and so on... at different places and different periods of this yuga. The most recent and very popular manifestation being "ShirdiSai."

As we all know, ShirdiSai has been showering his immense Love and blessings on all without any bias of religion, caste, social status whatsoever. ShirdiSai is guiding us by His unlimited power for 160 years and is known for his simplicity and preaching practical methods of devotion common for all as Sri Guru Datta method of spirituality.

One such Avathar of 'BakthaVaathsalya' of Sri guru Datta manifested himself as "Shri Swami Samartha", popularly known as **'Maharaj of Akkalkot'** as he spent and blessed all for substantial number of years in Akkalkot,Maharashtra. His leelas are immeasurable,innumerable and astounding. Unfortunately,we don't have sufficient information in Tamil on all His leelamruth.

We are very happy to note that lot of efforts have been put by search and research to bridge this gap by Smt.MathangiBalaji who has already authored a Tamil translation of **"Sampoorna SripadaSrivallabhaCharithamrutham"**, recently in the "year 2022". It is by the sankalpa of Sathguru that such a young educated Lady in an active Family Life has been chosen to do this divine work. Her dedication and devotion with wondrous blessings of Sri Guru Datta has blossomed as bringing out the exceptional Leelas of 'Shri Swami Smartha' in her book in Tamil

Through this we sincerely wish the expanse of Sri Guru DattaAvathara and the Leela be made known to Tamils,throughout the world in order to spread the interest and devotion to the Aadhi guru and the immense Blessings of Swami Samartha be showered on one and All.

May SripadaSrivallabhaSwamy Bless and guide Smt.MathangiBalaji and her family in this unique service to Sathguru

SamasthaLokah: SukhinoBhavanthu!

Sree Vallabhaanandamayi



**HIS HOLINESS DHAKSHINA SHIRDI PEETAM**
**DWARAKAMAI ASHRAM**
Thavathiru. SriLaSri. Dr.A.V.SHANTHIKUMARA SWAMIGAL
**'N' Block, Aura Homes, Lake Area 8th Street, 2nd Cross, (Near Mattuthavani),**
**Madurai - 625107 Cell: 99940-23032**



## ஆசியுரை



சாந்தா மஹாந்தோ நிவஸந்தி ஸந்தோ
வஸந்தவல் - லோகஹிதம் சரந்த :

'உயர்ந்த சாந்தர்களான சாதுக்கள் எப்போதும் வசந்த காலத்தைப் போல உலகுக்கு நன்மை செய்கின்றனர்' என்பது விவேக சூடாமணியில் ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதர் வாக்கு.

ஸ்ரீ தத்தாத்ரேயரின் அற்புத அவதாரமான அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் திவ்ய வரலாற்றை அழகாக தொகுத்து 'அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த லீலாம்ருதம்' என்னும் இந்நூலை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அடியவரான ஸ்ரீமதி. மாதங்கி பாலாஜி அவர்கள் 'ஸ்வாமியின் பிரசாதமாக' நம் கைகளில் வழங்கியுள்ளார் என்பதில் மிக மகிழ்வடைகிறோம்.

இந்நூல் நவ காண்டங்களாகப் பிரிக்கப்பட்டு, 206 அத்தியாயங்களில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பிரகடன தினத்திலிருந்து பிரமாண்டம் முழுவதும் தன் கைக்குள் அடக்கி, நிகழ்த்திய அற்புதங்களை வரிசையாக (chronological order) எடுத்துச் சொல்லிய விதம் மிகச் சிறப்புடையது. தமிழ்நாட்டின் வடதிசையில் உள்ள காஞ்சிபுரத்தை சைவர்களுக்கு சிவகாஞ்சி, வைஷ்ணவர்களுக்கு விஷ்ணுகாஞ்சி என்று ஏற்படுத்திக் கொடுத்தது, தென்கோடியில் உள்ள இராமேஸ்வர கோடி தீர்த்தத்தின் புண்ணியத்தைக் கவர்ந்து பின் திருப்பித் தந்தது என பல அற்புத நிகழ்வுகளை இன்னும் சொல்ல வேண்டுமென்றால், 'பார்ப்பதற்கு வேடிக்கையும், உண்ண விருந்தும் வேண்டுமென்றால் வரலாம்' எனும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அருள்வாக்கின்படி, 'ஸ்வாமியிடமிருந்து அருள் அனுபவத்தை பெற வேண்டுமென்றால் இந்நூல் ஒன்றைப் பாராயணம் செய்தால் போதுமானது' என்று சொல்லலாம்.



**HIS HOLINESS DHAKSHINA SHIRDI PEETAM**
**DWARAKAMAI ASHRAM**
Thavathiru. SriLaSri. Dr.A.V.SHANTHIKUMARA SWAMIGAL
**'N' Block, Aura Homes, Lake Area 8th Street, 2nd Cross, (Near Mattuthavani),**

---

சித்திரை மாதத்தில் நிகழ்ந்த அனுபவங்கள் இந்நூல் முழுவதும் நிறைந்து காணப்படுகின்றன. இச்சித்திரை மாத வஸந்த ருதுவில் அடியேன் ஆசியுரை வழங்க வேண்டுமென்பது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஸங்கல்பம். என்னே அவர் அருளாடல், அருளின் திருவிளையாடல்!

ஸமர்த்தரின் அஷ்டோத்திர சத நாமாவளியில் ஒவ்வொரு நாமமும் தத்துவத்தின் உட்பொருளோடு அமைந்துள்ளது. அதில் ஒன்று, 'ஓம் பந்தநாதீத பக்தி கிரண பந்தாய நம:' - 'எல்லாக் கட்டுகளையும் கடந்தவர்; ஆனால் பக்தர்களின் பக்தி கிரணத்திற்குக் கட்டுப்பட்டவர்' என்பதாகும்.

"பக்தி வலையில் படுவோன் காண்க" - திருவாசகம்
"பக்தர் கணப்ரிய நிர்த்த நடித்திடு குக" - திருப்புகழ்
"அன்பெனும் குடில்புகும் அரசே" - திருவருட்பா
"ஏகதா அபி ஏகாதசதா பவதி" - நாரத பக்தி சூத்ரம்

எந்த இறை வழிபாடும் பக்தி இல்லாவிட்டால் பயன்தராது. தோத்திரங்களாலும் , சாத்திரங்களாலும் பக்தியே பக்தியோடு துதிக்கப்படுகிறது. மனமார்ந்த பக்தியே முக்திக்கு வழிகாட்டும் என்பதில் ஐயமில்லை.

எனவே, திருவினைத் திருவாகி தருவினை மருவும் கங்கையாய் அருவினை அகற்றும் ஸமர்த்த ஸத்குருவின் இந்நூலை பாராயணம் செய்து, அவர்தம் பாத கமலங்களில் பக்தி கொள்வோம்.

ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர் சந்நிதியில் 'தாய்' என்று ஸ்ரீபாதரால் அடையாளம் காட்டப்பட்ட என் அன்பின் அம்மா ஸ்ரீமதி. மஞ்சரி, ஸ்வாமியின் ஸங்கல்பத்தால் பக்தர்கள் அருள் அனுபவம் பெறுவதற்காக நிர்மாணிக்கப்பட்ட, 'ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஸ்ரீ குரு தத்த பாதுகா க்ஷேத்ரம்' சார்பாக இந்நூல் வெளியிடப்படுவது இன்னும் இரட்டிப்பு மகிழ்ச்சி.




**HIS HOLINESS DHAKSHINA SHIRDI PEETAM**

**DWARAKAMAI ASHRAM**

Thavathiru. SriLaSri. Dr.A.V.SHANTHIKUMARA SWAMIGAL

**'N' Block, Aura Homes, Lake Area 8th Street, 2nd Cross, (Near Mattuthavani),**


---

இந்நூலை சிறப்பாக ஆக்கி அளித்த ஸ்ரீமதி. மாதங்கி பாலாஜி அவர்களுக்கும், இந்நூலை வெளியிட்டு மகிழும் ஸ்ரீமதி. மஞ்சரி அவர்களுக்கும், இந்நூலை இனிமேல் பாராயணம் செய்யப் போகும் பக்தர்களுக்கும், அவர்கள் 'வேண்டத்தக்கது அறிந்து, வேண்டிய முழுவதும் தர வேண்டுமாய்' என் ஸத்குரு சீரடிநாதன் திருவருள் புரிய வேண்டிக் கொள்கிறேன்.

"ப்ரக்ஞாபுர நிவாஸினம் அக்ஞானோபாதி நாஸகம் |
ஸுக்ஞான ஸம்ப்ரதாயகம் ஸமர்த்த தேஸிகம்ஸ்ரயே ||"

(ப்ரக்ஞாபுரம் என்ற அக்கல்கோட்டில் எப்பொழுதும் வசிப்பவரும், அஞ்ஞானமாகிய உபாதியை அழிப்பவரும், உயர்ந்த ஞானத்தை ஆசிர்வதித்து வழங்குபவரும் ஆன ஸமர்த்த குருநாத பகவானை வணங்குகிறேன்)




**ஸ்ரீ சாயிநிலையம், மதுரை** **(Dr. அ. வே. சாந்திகுமார சுவாமிகள்)**

*24.04.2023*

17/7A, பழனியப்பா முதல் தெரு,
அயனாவரம், சென்னை - 600023.



## அணிந்துரை

பரமபதத்தின் அதிசயத்தை வர்ணித்தால் மனிதர்கள் முகமலர்ச்சியுடன் கேட்பார்கள். ஆனால் அப்பதத்தை அடைவதற்கான வழிமுறைகளை கூறும்போது முகம் தொங்கிப் போய்விடும். மனிதர்களில் உயர்நிலையை வேண்டாதவர் எவரும் இல்லை. அதன் பொருட்டு உழைக்க முன்வருபவர்கள் யாரும் இல்லை. உலகப் பொருட்களின் மீதுள்ள பற்று, செய்வினையின் கொடுமை அவ்வளவு பலமானவை.

உலகவியலில் அன்பு கருணை காட்டி பொதுச்சேவை செய்து வாழ்வோரும் இதுபோன்றே தவித்து நிற்கின்றனர். பரம சுகத்தை அறியாது உலக சேவையை எப்படி செய்ய முடியும். பெருந்தன்மையும், விவேகமும், சாந்தியும், சக்தியும் நிறைந்த ஒருவனே அதற்கு தகுதியானவன் அல்லவா?

தனக்குள்ளே குறைகள் நிறைந்திருக்க அதை நீக்கிக்கொள்ளாது, உலகின் குறைகளை நீக்க முன்வருவது அறிவாகுமா? தன் அகத்தில் உள்ள அழுக்குகளை நீக்கிக் கொண்டு உலக சேவைக்கு தயாராவதற்கும், தன் ஆன்ம விடுதலைக்கும் மகா ஆத்மாக்களின் துணையைப் பெறுவதே ஒரே வழியாகும். அப்படிப்பட்ட துணையே “சத்சங்கம்” ஆகும். அப்படிப்பட்ட “சத்சங்கமே” பரம்பொருளிடம் நம்மை கொண்டு சேர்க்கும்.

கலியின் கோரப்பிடியில் அகப்பட்டுக் கொண்டிருக்கும் நமக்குக் கிட்டிய சத்சங்கம் “சுவாமி சமர்த்தர்”, மகாராஷ்டிர மாநிலம் சோலாப்பூர் மாவட்டத்தில் உள்ள அக்கல்கோட் என்ற திருத்தலத்தில் 1856 ல் இருந்து 1878 வரை தொடர்ந்து 22 ஆண்டுகள் வாழ்ந்து மக்களுக்கு அருள்பாலித்து

சமாதியடைந்து, சமாதிக்குப் பின்னரும் அடியவர்களுக்கு அருட்காட்சி தந்தருளும் ஞானக்கதிரவன் சுவாமி சமர்த்த மகராஜ்.

முக்தர்களில் இருவகையுண்டு, சாமான்ய முக்தர், நித்திய முக்தர். பிறவியின் மாயையில் அகப்பட்டவரே சாமான்ய முக்தர். பின்னர் உலக அனுபவத்தாலும், அறிவினாலும் தன்னை சூழ்ந்திருக்கும் மாயையை தவிர்ப்பதற்காக மோனம், தவம் முதலிய சாதனங்களால் உயர்தர ஞானத்தினைப் பெற்றவர்கள். இவர்களிடம் உள்ள ஆத்ம சக்தி ஒரு சிலரை மட்டுமே முன்னுக்கு கொண்டுவரப் போதுமானதாக இருக்கும்.

நித்திய முக்தர் என்பது வேறுவகை, இவர் பிறவியிலேயே தெளிந்த மனமுடையவர். உலக இன்ப துன்பங்களுடன் போராடி அவற்றை வெல்ல வேண்டிய துன்பம் இவருக்கு கிடையாது. இவர்கள் இளம் வயதினிலேயே ஆத்ம வித்தையை சாதித்து, சமாதியில் பலகாலம் கூடி தன் சக்தியை வளர்த்துக்கொண்டு ஞான சூரியனாய் விளங்குபவர்கள். எண்ணற்ற பக்தர்கள் இவர்கள்பால் இழுக்கப்பட்டு நற்கதி பெறுவார்கள். இவர்களது வாக்கே மறைபொருளாகும். இவர்களது பார்வையே அனுக்கிரகமாகும், சுவாமி சமர்த்தர் இம்மாதிரியான நித்திய முக்தர் என்பது இக்காவியத்தை பாராயணம் செய்பவரால் நன்கு உணர முடியும். நித்திய முக்தரின் லட்சணங்களை சுவாமி சமர்த்தர் என்ற மகாபுருஷரிடம் ஆரம்பம் முதலே உண்டென்பதை இச்சரித்திரம் நமக்கு நன்கு சுட்டுகிறது.

சுவாமி சமர்த்தர் தன்னை அனுகிய சமான்ய பக்தர்களுக்கு மட்டுமல்லாது, தன்னை உயர்ந்த ஞானிகளுக்கு இணையாக வரித்துக் கொண்டிருப்போருடைய முட்டாள் தனமான மூடநம்பிக்கைகளையும், பிற்போக்கான பழைய சாஸ்திர சம்பிரதாயங்களையும் உடைத்து எறிந்து சகஞானியரிடையே தனித்துவமாக திகழ்கிறார்.

மத, இன, சாதீய துவேசங்களை போற்றுபவர்களுடைய கோணல் புத்திகளை திரைச்சீலைகளென கிழித்து தொங்க விடுகிறார். தன்னையே நம்பியிருப்போன் மனிதனாயினும், மிருகமாயினும் அவர்களுக்கு நல்லாசிரியனாக நின்று ஞானமளித்துக் காக்கின்றார்.

சுவாமி சமர்த்தர் அருளிய அற்புதங்களில் இருந்து தொகுக்கப்பட்ட இரத்தினங்கள்தான் இக்காவியம். பலர் பலவிதங்களில் சமர்த்தரின் லீலைகளை தொகுத்திருக்கிறார்கள். இருப்பினும், பூர்வ புண்ணிய பலன்களால், குருவின் அனுகிரகத்தை பரிபூரணமாக பெற்று, தன் அகநோக்கு சிந்தனையில் தேடுதல்

உள்ளவரான அன்புச் சகோதரி திருமதி. மாதங்கி பாலாஜி அவர்களால் சமர்த்தரின் பல்வேறு நூல்களையும், வரலாற்று ஆவணங்களையும் ஆராய்ந்து முழுமையாக எழுதப்பட்டதே இக்காவியம்.

ஆசிரியர் அவர்கள் வயதில் சிறியவராயினும், மிகப்பெரிய காரியத்தினை சாதித்துள்ளார். இது பூர்வ ஜென்ம வாசனையின்றி வேறேது. அவருக்கும் அவரது எழுத்துப்பணிக்கு உதவியாய் செயல்பட்ட அவரது குடும்பத்தாருக்கும் எமது சிரம் தாழ்ந்த நன்றிகளைக் கூறி மனதார வாழ்த்துகிறோம். இன்னும் பலப்பல மகான்களது சரிதத்தை, புதிய செய்திகளோடும், பக்தி உணர்வோடு மனநிறைவைத்தரும் பேராற்றலுடன் படைக்க வேண்டி பகவான் சாயிநாதரை வேண்டுகிறோம்.

மேற்கொண்டு, இப்புனித நூலின் மேன்மையையும், சக்தியையும் வர்ணிக்க அடியேனால் முடியவில்லை. படிப்பவர் அவரவர்கள் தாமே இவ்வமிர்தத்தை உண்டு உணர்ந்து கொள்ள வேண்டியதுதான். முதல் பக்கத்தில் இருந்து கடைசி பக்கம் வரை பேரின்ப பெருவெள்ளம் கரைபுரண்டு ஒடுவதை வாசிப்பவர்களே உணர்ந்து கொள்வார்கள்.

இக்காவியம், ஞான மார்க்கிகளுக்கு சுடர்விட்டு ஒளிரும் ஒளி விளக்காகவும், பக்தி மார்க்கிகளுக்கு மானச பூஜையாகவும் திகழும் என்பதில் எள்ளவும் ஐயமில்லை. ஞானப்பசி எடுத்த புண்ணியவான்களே! அன்பிற்குரிய திவ்ய மூர்த்தியாகிய சுவாமி சமர்த்தரை காணுவோமா என்று தவம் செய்யும் பக்தி மான்களே! இக்காவியத்தை அனுதினமும் பாராயணம் செய்து, சமர்த்தரின் அருள் நோக்கிற்கு ஆளாகுங்கள், பிறவிப்பயனைப் பெற்று வாழுங்கள்.

**எல்லாம் சாயி! எல்லாமே சாயி!**

பணிவுடன்,

சென்னை
*22.4.2023*

**வே.ஸ்ரீராம்.**
"சாய் தியானாலயா"

# சமர்ப்பணம்

मनश्चेन्न लग्नं गुरोरंघ्रिपद्मे
ततः किं ततः किं ततः किं ततः किम् ॥

மனஸ்சேத் ந லக்னம் குரோரங்க்ரிபத்மே
தத: கிம் தத: கிம் தத: கிம் தத: கிம் ||

இந்த அற்புதமான வரியானது ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் இயற்றிய குரு அஷ்டகம் என்னும் ஸ்லோகத்தில் வருகிறது. **“ஒருவன் எவ்வளவு பெரிய பாக்கியசாலியாக இருப்பினும், அவனுடைய மனம் குருவின் கமலப் பாதங்களில் ஒன்றாவிட்டால், அவன் மனிதனாகப் பிறந்ததற்கு எந்தவித பயனும் இல்லை”** என்பதே அதன் பொருள். மாதா, பிதா, குரு, தெய்வம் என்பார்கள். தெய்வத்திற்கும் முன் குருவிற்கான இடம் அளிக்கப்பட்டு இருக்கிறது. இதிலிருந்து குருவின் மகிமையை நாம் உணர்ந்து கொள்ளலாம். ஏழு உலகத்தையும் எழுதுகோலாக வைத்து, அதில் ஏழு கடலையும் எழுதப் பயன்படும் மையாக நிரப்பினாலும் குருவின் பெருமைப் பற்றி முழுமையாக எழுத இயலாது. ஏனெனில் கடவுளையே குருதான் காட்டுகிறார் என்பதால் குருவிற்கு அவ்வளவு மகிமையும் பெருமையும் உள்ளது என்று கபீர்தாஸ் அவர்கள் குருவின் பெருமை பற்றி கூறியுள்ளார். குருபக்தியே கலியுகத்திற்கான சரியான மார்க்கம் என்று அனைத்து ஞானிகளும் போதனை செய்கின்றனர்.

ஸ்ரீ தத்தாத்ரேயர் குருக்களுக்கெல்லாம் முதன்மையான குருவாக, இந்த பிரபஞ்சம் உருவான நாளில் இருந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார். அவர் கலியுகத்தில் பல பூரண அவதாரங்களாகவும், அம்ச அவதாரங்களாகவும் தோன்றி மக்களை நல்வழிப்படுத்திக் கொண்டிருக்கிறார். அவர் **‘அக்கல்கோட்**





**மஹராஜ் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தராக'த்** தோன்றி பல அற்புதமான லீலைகள் மூலம், அனைத்து பக்தர்களின் வாழ்விலும் ஒளியூட்டி இருக்கிறார். இந்த புத்தகத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்தூல சரீரத்தில் வாழ்ந்த சமயத்தில் நிகழ்த்திய அற்புதமான நிகழ்ச்சிகள் விவரிக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீ தத்தாத்ரேயரின் கருணையால் என்னைக் கருவியாகக் கொண்டு படைக்கப்பட்ட சம்பூர்ண ஸ்ரீ ஸ்ரீபாத ஸ்ரீவல்லப சரிதாம்ருதம் என்னும் நூல் முடிவடைந்து வெளியாவதற்கு முன்பே, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் லீலா-வினோதத்தை தமிழில் முழுமையாக படைக்க வேண்டும் என்கிற ஆவல் எழுந்தது. அதற்கான தேடலில் இறங்கிய போது முகம் தெரியாத மும்பையைச் சேர்ந்த மராட்டி அன்பரான திரு. சஞ்சய் சங்கர் அவர்களின் அறிமுகம் கிடைத்தது. அவர் எங்களை அக்கல்கோட் முழுவதும் சுற்றிக்காட்டி ஸ்வாமியின் பல லீலைகள் பற்றி விவரித்தார். அவருடன் புது அரண்மனை சென்ற சமயத்தில் அக்கல்கோட்டின் இப்போதைய ராஜாவான மாலோஜி ராஜே III யின் அறிமுகம் கிடைத்து அவர் இந்த புத்தகத்திற்கு வாழ்த்துரை வழங்க சம்மதித்தது, ஸ்ரீ ஸ்வாமியின் லீலை தவிர வேறொன்றும் இல்லை. பல பிரயத்தனங்கள் செய்து சேகரிக்கப்பட்ட தகவல்களைக் கொண்டு எழுதப்பட்ட **"அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த லீலாம்ருதம்"** என்னும் இந்த பொக்கிஷம் உங்கள் கையில் இப்போது தவழ்ந்து கொண்டிருக்கிறது.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நிகழ்த்திக் காட்டிய லீலைகளை வெறும் வார்த்தைகளால் வர்ணிப்பதற்கு சாத்தியம் இல்லை. இன்றும் அவருடைய பக்தர்களுக்கு பல வழிகளில் தன் இருப்பை வெளிகாட்டிக் கொண்டிருக்கிறார் என்பதில் எந்தவித ஐயமும் இல்லை. அதற்கு சான்றாக இந்த புத்தகம் எழுதும் போது நிகழ்த்திய லீலைகள், ஸ்வாமி பக்தர்கள் மீது கொண்டுள்ள பெரும் கருணையின் வெளிப்பாடு (கடைசி பக்கத்தில் விரிவாக விவரிக்கப்பட்டுள்ளது). பக்தர்கள் அனைவரும் இந்த நூல் மூலம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு அருகில் சென்று, அவருடைய அற்புதமான கருணையைப் பெற வேண்டும் என்று மனதார பிரார்த்தனை செய்து கொள்கிறேன்.

இந்த படைப்பில் எனக்கு ஊக்கமளித்து பெரிதும் உதவியாக இருந்த என் கணவர் திரு. பாலாஜி, இரு மகள்கள் செல்வி. சஞ்சனா மற்றும் செல்வி. சம்யுக்தா மற்றும் தத்த பக்தர்கள் அனைவருக்கும் என் நன்றிகளை சமர்ப்பிக்கிறேன். இந்த பொக்கிஷத்தைப் படித்துவிட்டு தன் அனுபவங்களைப் பகிர்ந்து கொண்ட 'பாராயணப் பகலவன்' திரு.சுந்தர் சாய் அவர்களுக்கும்,

அணிந்துரை அளித்து இந்த புத்தகத்திற்கு மேலும் மெருகூட்டிய **'சாய் மகராஜ் குருவைத் தேடி'** இதழின் ஆசிரியரும் வாழும் குருவான திரு.ஸ்ரீராம் சாய் அவர்களுக்கும், தத்த பக்தரான திரு.நாராயணன் அவர்களுக்கும் மனதார நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஸ்ரீசக்ர தத்த ஸ்ரீபாத ஸ்ரீ சாய் பீடத்தின் பீடாதிபதியான மாதா ஸ்ரீ வல்லபானந்தமயியுடைய அருளாசி கிடைத்தது மிகுந்த நிறை உணர்வை அளிக்கிறது. அவர்களுக்கு என் நன்றிகளையும் நமஸ்காரங்களையும் தெரிவித்துக் கொள்கிறேன். சிறிய அவகாசத்தில் மிக அற்புதமான ஆசியுரை வழங்கிய தவத்திரு. ஸ்ரீலஸ்ரீ *Dr. A.V.* சாந்தகுமார ஸ்வாமிகளுக்கும் என் இதயம் கனிந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

மேலும் இந்த புத்தகத்தை **'ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த மஹராஜ் ஸ்ரீ குரு தத்த பாதுகா க்ஷேத்திரம்'** சார்பாக வெளியிடுவதற்கு சம்மதம் தெரிவித்த பக்த சிரோன்மணி ஸ்ரீமதி.மஞ்சரி ரமேஷ் அவர்களுக்கும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். ஸ்ரீ ஸ்வாமியைப் பற்றி தன் அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டு, இப்பணிக்கு பெரிதும் ஊக்கமளித்த ஸ்வாமி பக்தரான திரு. ஓங்கார் தாம்லேவுக்கும் என் நன்றிகளை காணிக்கை ஆக்குகிறேன்.

பக்தர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அற்புதமான லீலைகளை பாராயணம் செய்து, அவர் கூறிய வழியில் நடந்து நற்கதி அடைய வேண்டுமாய் எல்லாம் வல்ல ஸ்ரீ குரு தத்தாத்ரேயரிடம் பிரார்த்தனை செய்து கொள்கிறேன்.

ஓம் த்ராம் தத்தாத்ரேயாய நம:
ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!

**மாதங்கி பாலாஜி**
*sripadharcharithram.tamil@gmail.com*

# ஸ்ரீ குரு தத்த பாதுகா க்ஷேத்ர ராஜிதம்,

மாருதிபுரம்



ஸ்ரீ குருப்யோ நம:
குலதேவதாயை நம:
ஸ்ரீ மாதா பவானியை நம:

ஸ்ரீ குரு தத்த பாதுகா க்ஷேத்ர ராஜிதம், மாருதிபுரம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த சேவா சமஸ்தானமாக மலர்ந்தது ஒரு தெய்வீக அனுபவம் மற்றும் ஸ்வாமி சங்கல்பம் என்பது ஒரு அற்புதமான லீலா கடாக்ஷம்.

எமது பெற்றோர் திருமதி. சரஸ்வதி அம்மாள் மற்றும் தந்தை ஸ்ரீ இரமணதாஸ், எமது வம்சாவழி மூதாதையர்கள் அனைவரையும் சிரம் தாழ்த்தி வணங்கிக் கொள்கிறேன். சிறுவயது முதலே வைணவ சம்பிரதாயத்தில் வளர்ந்து, திருமணத்திற்குப்பின் ஸ்மார்த்த வழிபாட்டில் கலந்து, பின்னர் சித்தர் வழிபாட்டில் ஈர்க்கப்பட்டேன். குலதெய்வமோ பெரியபாளையம் பவானி அம்மா.

2011இல் எம் வாழ்க்கையில் பரிபுராணனான சாய் மஹராஜ் ஆட்கொண்டு ஸ்ரீ குரு தத்த பரம்பரையில் வழிநடத்தி 2013 இல் கலியுக முதல் தத்த அவதாரியான ஸ்ரீ ஸ்ரீபாத ஸ்ரீவல்லபரிடம் சென்று, 2015 இல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஸ்வப்ன தரிசன பாக்கியம் பெற்றேன். ஆலயம் எழுப்ப ரூபாய் 9 கேட்க, ஒன்றும் புரியாத நிலை. யார் இவர்! நம் வழிபாட்டில் இல்லாத, பக்தியுமின்றி ஒரு அனுக்கிரஹம்! அதைத் தொடர்ந்து 2016 இல் ஸ்ரீபாதரின் அத்தி மரத்திலான பாதுகை கிடைக்கப்பெற்று இல்லத்திலேயே நித்திய வழிபாடு, பாராயணம் என்று நடைபெற்றுக் கொண்டிருந்தது. அந்த நிலையில் ஒரு அகத்தூண்டலால் **'பூமி தானம்'** செய்ய எண்ணம் உதிக்க, ஹனுமான் சாலிசா பாராயணம் செய்ய 108 முறை உத்தரவாகி, 2017இல் மாருதிபுரம் என்னும் இடத்தில் (திருப்புலிவனம்-சாலவாக்கம் ரோட்டில்) குருபூர்ணிமா நன்னாளில், சாய் மஹராஜுக்காக ஒரு சிறு குடில் அமைத்து, அகண்ட தீபம் ஏற்றி அன்னதானம் செய்யத் துவங்கி 2021 ஆம் ஆண்டு பிப்ரவரி 24 ஆம் தேதி முறையாக ஆலயம் எழுப்ப பூமி பூஜை செய்யப்படும் வரை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வருகை புதிராகவே இருந்தது. தெளிவற்ற நிலையில் பல

சவால்களையும், விதவிதமான ஒத்துழையாமை பிரச்சனைகளையும் சந்தித்து மனம் கலங்கிய வேளையில், மஹாபெரியவா மணிமண்டபத்தில் மஹாபெரியவா உத்தரவும் கிடைக்க, அற்புதமான தெய்வ வழி மற்றும் தெளிவு கிடைத்தது. பிப்ரவரி 18ஆம் தேதி ஸ்வப்னத்தில் ஸ்வாமி சமர்த்த மஹராஜாக வருவதாக ஒரு காட்சி. இவை அனைத்துமாக 100% சத்யம் என ஊர்ஜிதமாக மஹாபெரியவா திருவுளச்சீட்டு மூலம் ஆசீர்வதித்தார். ஸ்வாமி சமர்த்தரும் பூமி பூஜையன்று (பிப்ரவரி 24) பகிரங்கமாய் அனுக்கிரஹம் செய்தருளி, ஆலயத் திருப்பணியை துவக்கி வைத்தார்.

மிகச்சரியாக 2022இல் அதே பிப்ரவரி 24இல், குருவாரம் (வியாழக்கிழமை) இரவு 8 மணி குருஹோரையில் மும்மூர்த்திகளாக ஸ்ரீ ந்ருஸிம்ஹ சரஸ்வதி, சத்குரு சாய் மஹராஜ் சகிதமாக, அக்கல்கோட் மஹராஜ் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்- **'குரு நிவாஸ்'** என்ற எமது இல்லத்திற்கு வந்து அமர்ந்து- 100 நாட்கள் கர்ப்பவாசம் செய்து, **'குரு நிவாஸ்'** என்கிற திருநாமத்திற்கும் ப்ரமாணம் அளித்ததுடன், ஆலயத்திற்கு- "ஸ்ரீ குரு தத்த பாதுகா க்ஷேத்ர ராஜிதம்" என்று அடையாளப்படுத்தி அருளினார்.

இந்த அற்புதமான தெய்வீக லீலாம்ருதம், ஸ்வாமியின் அனுக்கிரகத்தோடு ஸ்தல வரலாறாக மலர இருக்கிறது (ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ருத்ர தாண்டவத்தை விரிவாக அனுபவிப்போமாக!)

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த மஹராஜ் ஒரு விஸ்வரூப காட்சி அளித்து நம் ஆலயத்தை- தாம் நின்ற திருக்கோலமாய் உணர்த்தியருளினார்.

| | | |
|---|---|---|
| தமது திருப்பாதம் முதல் இடுப்புவரை | - | கீழ்த்தளமாக |
| இடுப்பு முதல் கழுத்துவரை | - | கருவறையாக |
| தலைப்பகுதி | - | கோபுரமாக |
| கிரீடமாக | - | கலசம் அமைவதாக தெரிவித்தார். |

வட விருக்ஷம் குடையாக அமைந்திருப்பதுடன், இத்தகைய அமைப்பு சாத்தியமா என நம் மனம் சிந்திக்க- சாத்தியம், பரம சத்தியம் என திருவருளாய் கம்பீரமாக ஆலயம் அமைத்து உச்சகட்ட அற்புதத்தை நிகழ்த்திய கருணா விலாசம் பக்தவத்சலன் கருணை.

ஆலயம் அமைக்க எண்ணத்தை உதிக்க வைத்தது முதல் ஒவ்வொரு அசைவிலும், கட்டுமானப் பணி நிகழ்வு முதல் பிரதிஷ்டாபனம், கும்பாபிஷேகம், மண்டலாபிஷேகம் (48 நாட்கள்) விசேஷ தின பூஜைகளின் போதும்

ஸ்வாமியின் லீலா வைபவம் நிகழ்காலத்திலும் ப்ரத்யக்ஷமாக ஸ்ரீ குரு தத்த கருணா கடாக்ஷத்திற்கும் சான்றாக விளங்குகிறது.

ஸ்ரீ குரு தத்த பந்துக்கள் அனைவரும் தவறாது மாருதிபுரம் வாருங்கள்!! கம்பீரமான ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஆலயத் தோற்றத்துடன் கருணாம்ருத வர்ஷத்தில் நனைந்து கரைந்து கலந்து விடுங்கள்!! குருவருள் திருவருளாய்ப் பெருகி கோடி ஜென்ம புண்ணியம் பெற்றிடுவோம் வாரீர்!!

மாருதிபுர வாஸாய வித்மஹே
ஞானானந்தாய தீமஹி
தந்நோ ஸ்ரீ குரு
ஸ்வாமி சமர்த்த ஸாயி தத்த ப்ரச்சோதயாத்

குருகடாக்ஷம் பரிபூரணமஸ்து
ஜெய் குரு தேவ தத்த:
ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த!!

**-மஞ்சரி ரமேஷ்பாபு**

**ஸ்ரீ குரு தத்த பாதுகா க்ஷேத்ரம்**

மருதம் குளக்கரை (மாருதிபுரம்)
உத்திரமேரூர் தாலுக்கா காஞ்சிபுரம், தமிழ்நாடு - 603406
தொடர்புக்கு: 9940941049, 9789404451

தினசரி பூஜை / அன்னதானம் / கோ ஸம்ரக்ஷணம் / ஏழை மாணவர்களுக்கு வித்யாதானம் ஆகியவற்றிற்கு நன்கொடை அளிக்க,
*HDFC A/C No: 50200057752558*
*IFSC : HDFC0000879 KANCHIPURAM CURRENT A/C*
*VIRTUAL PAYMENT : 9940941049 @ hdfcbank*

ஸ்வாமி சமர்த் மஹராஜ் சேவா சமஸ்தானத்தின் செயல் திட்டத்தில் பங்களிக்கும் நன்கொடைகள் 80G வரிவிலகிற்கு உட்பட்டவையாகும்.




திகம்பரா திகம்பரா ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த ஸாய் தத்த திகம்பரா!!

ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!



# பாராயணம்

இந்த புனிதப் புத்தகம் தினசரி பாராயணத்திற்கு உகந்ததாகக் கருதப்படுகிறது. பாராயணம் ஏக-தின பாராயணமாகவோ (முழு புத்தகத்தையும் ஒரே நாளில் பாராயணம் செய்வது) அல்லது சப்தாஹ பாராயணமாகவோ (ஏழு நாட்களில் பாராயணம் செய்வது) அல்லது நவ-தின பாராயணமாகவோ மேற்கொள்ளலாம். அவ்வாறு பக்தி சிரத்தையுடன் பாராயணம் செய்யும் போது நம் பிரார்த்தனைகள் அனைத்தும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் திருப்பாதங்களைச் சென்றடைந்து, பக்தர்களுக்கு புதிய நம்பிக்கை உருவாகும்.

**சப்தாஹ பாராயண முறை :**

| | |
|---|---|
| நாள் 1 | அறிமுகம் & திகம்பரர் |
| நாள் 2 | அவதூதர் |
| நாள் 3 | தயாகரன் & ஸ்மர்த்ருகாமி |
| நாள் 4 | கருணாமூர்த்தி |
| நாள் 5 | பக்தப்ரியன் & யோகீஸ்வரர் |
| நாள் 6 | பரப்பிரம்மம் |
| நாள் 7 | பரிபூரணன் & நிறைவு |

**நவ-தின பாராயண முறை :**

| | |
|---|---|
| நாள் 1 | அறிமுகம் & திகம்பரர் |
| நாள் 2 | அவதூதர் |
| நாள் 3 | தயாகரன் |
| நாள் 4 | ஸ்மர்த்ருகாமி |
| நாள் 5 | கருணாமூர்த்தி |
| நாள் 6 | பக்தப்ரியன் |






| நாள் 7 | யோகீஸ்வரர் |
|---|---|
| நாள் 8 | பரப்பிரம்மம் |
| நாள் 9 | பரிபூரணன் & நிறைவு |

பாராயணம் செய்த பின்னர் பதினோரு பேருக்கு அன்னதானம் அளித்தாலோ அல்லது ஏதாவது தத்த க்ஷேத்திரத்திற்கு தேவைப்படும் செலவிற்கான பணம் அளித்தாலோ, பாராயணத்தின் முழு பலனைப் பெறலாம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**





## ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் தாரக மந்திரம்
(மராத்தி)

நிஷன்க் ஹொயி ரே மனா, நிர்பய ஹொயி ரே மனா
(निशंक होई रे मना,निर्भय होई रे मना।)

ப்ரசண்ட ஸ்வாமிபள பாடீஷீ, நித்ய ஆஹே ரே மனா
(प्रचंड स्वामीबळ पाठीशी, नित्य आहे रे मना।)

அதர்க்ய அவதூத ஹே ஸ்மர்த்ருகாமி
(अतर्क्य अवधूत हे स्मर्तुगामी)

அஷக்ய ஹீ ஷக்ய கர்தீல ஸ்வாமி(1)
(अशक्य ही शक्य करतील स्वामी ॥१॥)

ஜிதே ஸ்வாமிசரண திதே ந்யூன்ய காய
(जिथे स्वामीचरण तिथे न्युन्य काय),

ஸ்வயே பக்த பிராரப்த கடவி ஹீ மாய
(स्वये भक्त प्रारब्ध घडवी ही माय।)

ஆக்னேவினா கால ஹீ நா நெஹி த்யாலா
(आज्ञेवीना काळ ही ना नेई त्याला),

பரலோகி ஹீ நா பீதி தயாலா
(परलोकी ही ना भीती तयाला)

அஷக்ய ஹீ ஷக்ய கர்தீல ஸ்வாமி(2)
(अशक्य ही शक्य करतील स्वामी ॥२॥)

உகாச்சி பிதோசி பய ஹே பளு தே
(उगाची भितोसी भय हे पळु दे),

வஸே அந்தரி ஹீ ஸ்வாமிஷக்தி களு தே
(वसे अंतरी ही स्वामीशक्ति कळु दे।)

ஜகீ ஜென்ம ம்ருத்யு அஸே கேள ஜ்யான்ஸா
(जगी जन्म मृत्यु असे खेळ ज्यांचा),

நகோ காப்ரூ தூ அஸே பால த்யானஸா
(नको घाबरू तू असे बाळ त्यांचा)

அஷக்ய ஹீ ஷக்ய கர்தீல ஸ்வாமி(3)
(अशक्य ही शक्य करतील स्वामी ॥३॥)

கரா ஹோயீ ஜாகா ஸ்ரக்தேசஹித
(खरा होई जागा श्रद्धेसहित),

கசா ஹோசி த்யாவின தூ ஸ்வாமிபக்த
(कसा होसी त्याविण तू स्वामिभक्त।)

ஆடவ கிதீதா திலி த்யானிச்ச சாத்
(आठव कितीदा दिली त्यांनीच साथ),

நகோ டகமகு ஸ்வாமி தேதீல ஹாத்
(नको डगमगु स्वामी देतील हात)

அஷக்ய ஹீ ஷக்ய கர்தீல ஸ்வாமி(4)
(अशक्य ही शक्य करतील स्वामी ॥४॥)

விபூதி நமநாம தியானார்த்தி தீர்த்த
(विभूति नमननाम ध्यानार्दी तीर्थ),

ஸ்வாமிச்ச யா பஞ்சாம்ருதாத
(स्वामीच या पंचामृतात।)

ஹே தீர்த்த கேயி ஆடவி ரே பிரச்சிதி
(हे तीर्थ घेइ आठवी रे प्रचिती),

நா சோடிதி தயா, ஜயா ஸ்வாமி கேதீ ஹாதீ (5)
(ना सोडती तया, जया स्वामी घेती हाती ॥५॥)

அஷக்ய ஹீ ஷக்ய கர்தீல ஸ்வாமி
(अशक्य ही शक्य करतील स्वामी।)

। श्री स्वामी समर्थ ।

# குருவின் முக்கியத்துவம்

ஸ்ரீ குருப்யோ நமஹ: எல்லாம் வல்ல கணபதியை வணங்கி, அனைத்து படைப்புகளுக்கும் ஆதாரமான ஸ்ரீ தத்தாத்ரேயரை வணங்கி, ஸ்ரீ தத்த பரம்பரையில் உதித்த அனைத்து குருமார்களின் பாதத்தை வணங்கி, என் மூதாதையர்களுக்கு என் வணக்கத்தை சமர்ப்பித்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சரித்திரத்தை எழுதத் துவங்குகிறேன்.

இறைவனின் படைப்பின் துவக்கம் முதலே மனிதன் தொடர்ந்து பரிணாமம் அடைந்து கொண்டே இருக்கின்றான். இருப்பினும், அவனுடைய இறுதி இலக்கான முழுமை நிலையை அவனால் அடைய முடியவில்லை. அப்படி அவன் அந்த நிலையை அடைவானெனில் இந்த பிரபஞ்சம் முழுவதும் எங்கும் நிறைந்திருக்கும் தெய்வீகத்தையும், அதன் ஆதாரத்தையும், இந்த படைப்பின் மூலக்கூறு பற்றியும் அதில் பொதிந்திருக்கும் உண்மை மற்றும் பல்வேறு பெயர்கள் மற்றும் உருவங்கள் பற்றியும் அறிந்துகொள்வான்.

இந்த முழு படைப்பில் மனிதப் பிறவி மட்டுமே உன்னதமான உயர்ந்த பிறவியாக கருதப்படுகிறது. மற்ற உணர்வுள்ள உயிரினங்களுக்கு மறுக்கப்பட்ட அறிவு, பகுத்தறியும் தன்மை மற்றும் ஞானம் ஆகிய திறன்கள் மனிதனுக்கு மட்டுமே வழங்கப்பட்டுள்ள உயர்வான தகுதிகள். அதனால்தான் கடவுள் மனிதனை படைப்பு ஏணியின் உச்சத்தில் வைத்துள்ளார். அவனுடைய பகுத்தறியும் திறனைக் கொண்டு அவனுக்குள் இருக்கும் தெய்வீகத்தை உணர்ந்துகொண்டு விழிப்படைய வேண்டும். அவன் தன் எண்ணங்கள், வார்த்தைகள் மற்றும் செயல்களை தன் தினசரி வாழ்க்கையில் வெளிப்படுத்துவதன் மூலம் தன்னை கடவுளின் உருவமாக பரிணாமம் அடையச் செய்ய முடியும். வேதங்களில் **"ஜீவோ ப்ரம்மைவ நாபர:"** என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது 'ஜீவனும் பிரம்மமும் வெவ்வேறு அல்ல' என்பதுதான் அதன் பொருள்.

ஒருவன் ஆன்மிக முன்னேற்றம் அடைய வேண்டுமானால் அதற்காக கடுமையாக போராட வேண்டும். தீவிரமான முயற்சி இருக்குமாயின் தெய்வீக

அருள் எந்தவித தடையும் இல்லாமல் பொங்கி எழுந்து மனிதனுக்கு நல்வழி காட்டி அவனை வழிநடத்தும். மேலும் அவன் பிறவியின் பலனை அடையச் செய்யும். அந்த தெய்வீக அருள் பெரும்பாலும் குருவின் உருவத்தில்தான் நம்மிடம் வரும். 'குரு'- 'கு' என்றால் இருள், 'ரு' என்றால் 'அகற்றுபவர்' என்று பொருள்படும். எனவே 'குரு' என்றால் 'இருளை அகற்றுபவர்' என்று பொருள்படும். குரு அவருடைய சீடனின் மனதில் போதனைகள் அளித்து ஞானத்தை அளிக்கிறார்.

ஆத்ம சாக்ஷாத்காரத்திற்கும் (தன்னை உணர்தல்), ஆன்மிக முன்னேற்றத்திற்கும் மனிதப் பிறவி மட்டுமே மிகவும் உயர்ந்ததும் அரிதான வாய்ப்புமாக அமைகிறது. மனிதன் இதை உணர்ந்துகொண்டு தன் வாழ்நாள் முழுவதும் சாதகமாக உபயோகித்துக் கொண்டு தன்னை பிறப்பு-இறப்பு சுழற்சிகளில் இருந்து விடுவித்துக் கொள்ளவும், கடவுளுடன் ஒன்றரக் கலந்து பேரானந்த நிலையை அடைவதற்கான முயற்சியிலும் ஈடுபட வேண்டும். அப்படிப்பட்ட நிலை மோக்ஷம், முக்தி, கைவல்யம் மற்றும் பல்வேறு பெயர்களில் அழைக்கப்படுகிறது. ஒரு ஜீவாத்மாவுக்கு இது மட்டுமே ஒரே நோக்கமாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட வாய்ப்பை இந்த மனிதப்பிறவியில் இழந்துவிட்டால், அடுத்தப் பிறவி மனிதப்பிறவியாக இருக்கும் என்பதற்கு உத்தரவாதம் உண்டா என்ன? நாம் நம் மேன்மையான பிறவிகளில் இருந்து தாழ்ந்திறங்கி கீழ்ப்பிறவிகள் எடுத்தோமானால் பிறப்பு-இறப்பு சுழற்சிகளில் மாட்டிக்கொண்டு தவிக்க நேரிடும்.

மனிதன் முதலில் தன் பூர்வ ஜென்மங்கள் மூலம் பெற்றுக்கொண்ட மிருகப் பண்புகளை களைய வேண்டும். அவன் மனிதனுக்குரிய உயரிய பண்புகளை தன்னுள் ஸ்தாபித்துக் கொண்டு தன் இலக்கை நோக்கி பயணிக்க வேண்டும். அவன் தன் மனதை கர்ம யோகம் மூலம் தூய்மை ஆக்கிக் கொள்ளவேண்டும். அதாவது அவனுக்குரிய கடமைகளை எந்தவித அகம்பாவமும் இல்லாமல், செய்த பரோபகாரங்களுக்கும் பலனை எதிர்பார்க்காமல் செய்து முடிக்க வேண்டும். மனம் மற்றும் அறிவை தூய்மையாக்கிக் கொள்ளவும், கடவுளின் மீது பக்தியை அதிகரித்துக் கொள்ளவும், அனைவரிடமும் அன்புடன் நடந்து கொள்வதற்கும் சத்சங்கத்தை நாட வேண்டும் (சத்சங்கம்- பக்தி மற்றும் நற்பண்புடையவர்களின் நட்பு). சத்சங்கம் ஆன்மிகத்தில் பல மாயாஜாலங்களை செய்யும். ஒரு மனிதன் கடவுளை நோக்கி அவன் மேற்கொள்ளும் பயணத்தை துரிதப்படுத்தும்.

அவன் தேடிக்கொண்டிருக்கும் கடவுளை அவன் அருகில் அழைத்துவரும். இதுதான் சத்சங்கம் மற்றும் பக்திமான்களுடனான நட்பின் சக்தி. மேலும் ஒரு சத்குருவின் தொடர்பு இருக்குமாயின், சாத்தியமற்றது அனைத்தும் சாத்தியமாகும். அவர் ஞானம் என்னும் கண்ணாடியை தன் சீடன் முன் சுமந்துகொண்டு அவனுக்கு கடவுளை வெளிப்படுத்துவார். சத்குரு தன் சீடனை முழுவதுமாக தன் இயல்பில் இருந்து உருமாற்றி தன்னைப் போலவே மாற்றிவிடுவார்,அதாவது கடவுளைப் போலவே! ஒரு பொற்கொல்லன் எப்படி கரியில் இருந்து தங்கத்தை பிரித்து எடுக்கிறானோ அதே போன்று என்று கூறலாம். சத்குருவும் கடவுளும் வெவ்வேறு அல்ல. கடவுளின் அனுகிரகம் இல்லாமல் ஒருவருக்கு சத்குருவின் கடாக்ஷம் கிடைக்காது.

முதலில் சத்குருவை பிரார்த்தனை செய்து அடைந்தாலே நம் பாதி வேலை முடிந்தது. அவர் நம் கையை பிடித்துக்கொண்டு வழிநடத்துவார். அதற்கு நாம் முதலில் அவரிடம் முழுமையாக சரணாகதி அடைய வேண்டும். அவர்தான் நம் மாதா, பிதா, குரு மற்றும் தெய்வம். நீங்கள் ஒரு சத்குருவை கண்டுபிடித்துவிட்டீர்கள் என்றால் கண்டிப்பாக ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் என்பதை உணர்ந்துகொள்ளலாம்.

**குரூர் பிரம்மா குரூர் விஷ்ணு குரூர் தேவோ**
**மஹேஸ்வர: குரு சாக்ஷாத் பரப்பிரம்மா**
**தஸ்மை ஸ்ரீ குரவே நம:**

குருவே பிரம்மா, குருவே விஷ்ணு, குருவே மகேஸ்வரன். குருவே உண்மையில் பரப்பிரம்மா. அந்த குருவின் பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்கிறேன்.

எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாமல் முழு மனதுடன் சரணாகதி அடையும் போது குருவின் அருளை முழுமையாகப் பெற முடியும். ஒருவனுக்கு குருவின் கடாக்ஷம் முழுமையாக கிடைத்துவிட்டால், அவனுடைய வாழ்க்கை ஆசீர்வதிக்கப்பட்ட ஒன்றாக ஆகிவிடும். அவனுக்குத் தேவை என்பதே இருக்காது- மேலும் அவன் வாழ்க்கை முழுமை பெற்ற ஒன்றாக ஆகிவிடும்.

**அபான சரிகே கரிதி தாட்கால்**
**நஹி கால வேல தயா லாகி 1**

இவ்வாறு துக்காராம் பாடுகிறார். அதாவது "குரு ஒரு சீடனை உண்மை அல்லாத ஒன்றிலிருந்து உண்மைக்கும், இருளில் இருந்து வெளிச்சத்திற்கும்,




மரணத்தில் இருந்து அழியா நிலைக்கும் வழி நடத்துவார்" என்பதே அதன் பொருள். ஆகவே குருவின் கடாக்ஷத்தை பெற்ற ஒருவன் பூரணமாகி விடுகின்றான். நீங்கள் தயார் நிலையில் இருக்கின்றீர்கள் என்றால் குருவே உங்களைத் தேடி வந்து விடுவார். அப்படிப்பட்ட உன்னதமான நிலைக்கு அனைவரையும் அழைத்துச் செல்லுமாறு கடவுளை பிரார்த்தனை செய்து கொண்டு இந்த அத்தியாயத்தை நிறைவு செய்கிறேன்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 2

# இந்தியாவும் ஆன்மிகமும்

இந்தியா மிகவும் ஆசீர்வதிக்கப்பட்ட நிலம் என்பதில் ஐயமில்லை. கடவுள் அவ்வப்போது இங்கு பல அவதாரங்கள் எடுத்து வந்துள்ளார். அவர் அனைத்து யுகங்களிலும் இங்கு அவதரித்துள்ளார். தெய்வீக அவதாரங்கள் மட்டுமல்லாது ரிஷிகள், மஹாபுருஷர்கள் பலர் தோன்றி இந்த தேசத்தின் புனிதத்தை ஒளியூட்டிக் கொண்டே இருக்கின்றனர். இந்திய வரலாற்றில் இதுபோன்று பல எண்ணிலடங்கா ஆன்மிக ஒளிகள் தோன்றி மனிதனின் மனதையும் எண்ணத்தையும் ஒளியூட்டிக் கொண்டே இருக்கிறது. இந்திய சம்பிரதாயத்தில் ஒரு முனிவரும் கடவுளும் வெவ்வேறாக கருதப்படுவதில்லை. அவர்கள் இருவரும் ஒன்றே!

**பிரம்ம வித் ப்ரம்மைவ பவதி**

அதாவது "பிரம்மத்தை உணர்ந்தவர் (அறிந்தவர்) தானே பிரம்மம் ஆகிறார்".

கடவுள் அவதாரமாகவோ அல்லது ஏதாவது சத்குருவாகவோ தன்னை வெளிப்படுத்திக் கொண்டு மக்களை ஆன்மிகப் பாதையில் வழிநடத்திக் கொண்டே அமைந்திருக்கும் வண்ணம் இந்த இந்திய மண் புண்ணியம்

செய்துள்ளது. பலசமயம் கடவுளே குரு ரூபமாக தன்னை வெளிப்படுத்திக் கொண்டுள்ளார். இதுவே இந்தியாவின் தனித்துவம். இந்தியாவை தவிர வெளிநாடுகளில் உதித்த மகான்கள் பலரை அங்குள்ள மக்கள் சரியாக அடையாளம் கண்டுகொள்ள தவறிவிட்டனர். ஆனால் அதிர்ஷ்டவசமாக இந்தியாவில் இது போன்று நடக்கவில்லை. இந்திய மக்கள் கடவுளையும் குருக்களையும் உடனடியாக அடையாளம் கண்டுகொண்டு கௌரவித்து வணங்கினர். இந்தியர்களுக்கு நம்பிக்கை என்னும் ஞானம் இருக்கிறது. இது அவர்களுடைய மரபு; அது அவர்களுடைய இரத்தத்திலேயே கலந்திருக்கிறது. நம் இந்திய கலாச்சாரம் இன்றுவரை பல காலமாக நிலைத்திருப்பதற்கு இந்த நம்பிக்கைதான் காரணம். இதே மற்ற பல தேசங்களை பார்த்தால் அவர்களுடைய கலாச்சாரம் முற்றிலும் மாறுபட்டு, இருந்த சுவடே இல்லாமல் மறைந்துவிட்டது. ஆன்மிகம் என்னும் நூல் இந்திய கலாச்சாரத்தில் இருக்கும் வரை அதற்கு எந்தவித பாதிப்பும் ஏற்படாது. கடவுளின் பூமியான இந்த நிலத்தில் மனிதர்களின் மனதில் தொடர்ந்து ஆன்மிக ஒளி துளிர்விட்டு எரிந்து கொண்டே இருக்கும்.

இந்தியாவில் கடவுளை பல உருவங்களில் வணங்குகின்றோம். அந்த உருவங்கள் கற்கள், மரங்கள், நதிகள், மலைகள், சூரியன், ஆகாயம் முதல் சிலைகள், தெய்வீக புருஷர்கள், உருவத்துடன் கூடிய தெய்வங்கள் மற்றும் உருவமற்ற பிரம்மம் வரை அனைத்து வடிவங்களிலும் வணங்கப்படுகின்றன. இந்த அனைத்து விதமான வழிபாட்டு முறைகளையும் சிரத்தையுடன் கடைபிடிக்க குறிப்பிட்ட பக்தர்கள் உள்ளனர். ஹிந்து மதத்தில் பல்வேறு வகையான பிரிவுகள் உள்ளன. அவரவர்களின் தெய்வங்கள் குறிப்பிட்ட பெயர்களாலும் உருவங்களாலும் அழைக்கப்படுகின்றன. பல்வேறு வகையான நம்பிக்கைகளும் வழிபாட்டு முறைகளும் இருந்தாலும், அதில் எந்தவித குழப்பமும் அடையத் தேவையில்லை. ஏனென்றால், இவை அனைத்தும்

**ஈஸாவாஸ்ய மிதம் சர்வம்- அனைத்திலும் நான் இருக்கிறேன்**

என்னும் அடிப்படையில் இருக்கிறது. அவர் கல், செடிகள், ஊர்வன, மிருகங்கள், மனிதன் மற்றும் அனைத்துவிதமான உயிரினங்கள் மற்றும் இந்த பிரபஞ்சத்தின் அனைத்து இடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கிறார். அவரே இவை அனைத்தினுள்ளும் இருக்கும் உண்மைத்தன்மை. அவர் எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறார். இந்த ஞானத்தை தெரிந்து கொள்வதுதான் ஹிந்து மதத்தின் தத்துவம். இந்த ஞானத்தை ஒருவர் அடைய வேண்டுமானால்,

இந்த படைப்பில் உள்ள எல்லாவற்றின் மீதும் அன்பு செலுத்த வேண்டும். ஒரு ஹிந்து எல்லா செடிகளின் மீதும் அன்பு செலுத்துவதை குறிக்கும் வகையில் துளசி செடியை தெய்வமாக மதித்து வணங்குகிறான். இதேபோல் மிருகங்களின் மீது அன்பு செலுத்தும் வகையில் பசுவை தெய்வமாக வணங்குகிறான். இந்த சுபாவத்தின் மூலம் அகங்காரம் என்னும் சுவற்றை தகர்த்தெறிந்து, தன்னை அன்பால் பெருக்கிக்கொண்டு, இந்த படைப்புடன் ஒன்றாக்கிக் கொள்ளும் பிரபஞ்ச பார்வையை பெறுகிறான்.

ஏகம் சத், தத்விப்ரா பஹூதா வதந்தி- உண்மை ஒன்றுதான், அதை விழிப்படைந்தவர்கள் பலவாறு அழைக்கிறார்கள். இந்த வாக்கியத்தின்படிதான் இப்பொழுதுள்ள இந்திய மத கோட்பாடு இயங்கிக் கொண்டிருக்கிறது.

ஒரு மரத்தில் உள்ள இரண்டு இலைகள் கூட ஒரே மாதிரி இருப்பதில்லை. அப்படியென்றால் மனிதர்கள்? மனிதர்கள் ஒவ்வொருவரும் தனித்துவமானவர்கள். அவரவர்களுடைய குணம், ஞானம், விருப்பு-வெறுப்பு ஆகியவை வேறுபட்டுதான் இருக்கும். அதேபோல் ஆன்மிக பரிணாம வளர்ச்சியின் போது அவரவர்களுடைய ஞானத்தை பொறுத்து அவர்களின் நிலைகள் வேறுபடும். இதனால்தான் ஒரே மாதிரியான ஆன்மிகக் கோட்பாடுகள் மற்றும் பாதை அனைவருக்கும் பொருந்துவதில்லை. ஒரே சட்டை அனைவருக்கும் பொருந்துமா என்ன? இல்லையே! ஆகவே ஆன்மிகப் பரிணாம வளர்ச்சியின் போது ஒவ்வொருவரும் தனக்கே உரித்தான பாதை, தனித்துவமான வழிபாட்டு முறைகள் மற்றும் பயிற்சிகளை பின்பற்றி அவரவருடைய வேகத்தில் முன்னேறி முடிவில் உண்மையை அடைய வேண்டும். மலையின் அனைத்துவிதமான பாதைகளும் உச்சியை அடைவது போல, அனைத்து நதிகளும் கடலில் சங்கமிப்பது போல எல்லா மதங்களும், அனைத்துவிதமான நம்பிக்கைகளும் முடிவில் ஒரே இறைவனைத்தான் சென்று சேர்கிறது. இதுதான் இந்து மதத்தின் அடிப்படைத் தத்துவம். இது அசைக்கமுடியாத மற்றும் பலமான அடித்தளம். இதுதான் அதன் அழிக்கமுடியாத உயிர்த்தன்மை. இதுவே அதன் உயர்ந்த மகத்துவம். இதை ஒரே வரியில் குறிப்பிடும் வகையில்

**அத்வேஷ சர்வ பூதானம் மைத்ரஹ கருணாமேவசா - யாருக்கும் எந்த தீங்கும் செய்யாமை மற்றும் அனைவரிடமும் கருணையோடு இருத்தல்.**

கடவுள் ஒவ்வொருவரின் நம்பிக்கைக்கு ஏற்றவாறு அவரவர்கள் வழிபடும் பெயர் மற்றும் உருவத்தின் மூலம் பதிலளிக்கிறார் என்று பகவத்கீதையில் கூறப்பட்டுள்ளது. ஒருவர் வழிபட தேர்ந்தெடுத்திருக்கும்

வஸ்துவின் மூலம், அவரவர்களின் திறன் மற்றும் விருப்பத்தை பொறுத்து அனைத்து வேண்டுதல்களும் இந்த பிரபஞ்சம் முழுவதும் வியாபித்திருக்கும் ஒரே கடவுளிடம் வந்து சேர்ந்துவிடும். எல்லா உருவங்களும் பெயர்களும் பரமாத்மாவின் பல்வேறு வடிவங்கள்தான். தூய்மையான மனதும் நம்பிக்கையும் மட்டும் இருந்தால் போதுமானது. உருவமற்ற கடவுளின் முகம் பக்தனின் பாவனையை பொறுத்து வெளிப்படும். அதனால்தான் இந்து சமுதாயத்தில் பலவகையான சம்பிரதாயங்கள் செழித்து வளர்ந்தன. இதை பல தெய்வ வழிபாடு என்று எடுத்துக்கொள்ளக் கூடாது. இது தூய்மையான ஒரு தெய்வ வழிபாடுதான்- ஒருவர் வழிபாடு செய்யத் தேர்ந்தெடுக்கும் தெய்வம் அவருக்கான அடையாள உருவம் மட்டுமே. ஒரு பக்தன் ஆன்மிகத்தில் முன்னேறும் போது அவருடைய பக்தி முதிர்ந்து ஞானமாகும், பின்னர் அத்வைத நிலைக்கு முன்னேறி, பக்தனுக்கும் வழிபடும் வஸ்துவிற்கும் இடையே உள்ள பாகுபாடு சமன்படுத்தப்பட்டு, பரமாத்மாவுடன் ஒன்றாகும் நிலைக்கு ஞானமூட்டப்படுவார். இதுதான் பண்டரிபுரத்தில் இருக்கும் விட்டலின் உருவச்சிலையை வழிபட்டு தியானேஸ்வர் மஹராஜ், துக்காராம் மஹராஜ், ஏக்நாத் மஹராஜ், ராமதாஸ் மற்றும் மற்ற சிறந்த ஞானிகள் அடைந்த நிலை. முடிவில் அவர்கள் அனைவருக்கும் சிலை அடையாளமாக விளங்கிய பரமாத்மாவுடன் ஐக்கியம் ஆகிவிட்டனர். ஏகத்துவத்தில் இருந்து ஒன்றர கலப்பதே ஆன்மிக பரிணாமத்தின் உச்ச நிலை ஆகும். தொடர்ந்து அடுத்த அத்தியாயத்தில் பல்வேறு சம்பிரதாயங்கள் பற்றி அறிந்து கொள்வோம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 3

# தத்த சம்பிரதாயம்

இந்தியாவில் பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு குருமார்கள் தோன்றினார்கள். வேதங்களை உள்ளடக்கிய இந்து மதம் அதாவது சனாதன தர்மத்தில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் தோன்றிய குரு அல்லது அவதாரம் அல்லது ஒரு மஹாபுருஷரை மையப்படுத்தி பல வகையான சம்பிரதாயங்கள் உதித்தன. பலவகையான சம்பிரதாயங்கள் இருப்பினும் அவற்றுக்குள் எந்தவித

வேறுபாடும் கிடையாது. ஒவ்வொரு சம்பிரதாயமும் தனித்துவம் நிறைந்ததாகவும் மிகவும் செழிப்பானதாகவும் இருந்தாலும், அவற்றினுள் ஒரு நல்லிணக்கம் உண்டு. வைஷ்ணவ சம்பிரதாயம் விஷ்ணுவை மையமாகக் கொண்டும், சைவ சம்பிரதாயம் சிவனை மையமாகக் கொண்டும், பௌத்த சம்பிரதாயம் புத்தரை மையமாகக் கொண்டும், ஜைன சம்பிரதாயம் தீர்த்தங்கரர்களைப் பற்றியும் மையப்படுத்துகிறது. அதேபோல் இந்தியாவில் பலவகையான சம்பிரதாயங்கள் தோன்றி, அவை செழித்தோங்கி வளர்ந்திருக்கிறது. மற்றும் அவற்றை பலர் பின்தொடர்கிறார்கள். ஒரு மனிதன் தான் பின்பற்றும் சம்பிரதாயத்தின் மூலம் தன்னம்பிக்கை, பலம் மற்றும் நம்பிக்கை ஆகியவற்றை பெற்று அவற்றிற்கு உண்மையாக நடந்து கொள்கிறான். வாழ்க்கை என்னும் சுழலில் அவன் சிக்கித் தவிக்கும் போது, அவனிடம் உள்ள நம்பிக்கையே அவனை அனைத்து துயரங்களையும் தாங்கிக்கொள்ளச் செய்து அவனுக்கு கவசமாகவும் பாதுகாப்பு அரணாகவும் விளங்குகிறது. அவனுடைய இஷ்ட தெய்வத்தின் மேல் அவன் கொண்டிருக்கும் அசைக்க முடியாத நம்பிக்கையானது அவனை பாதுகாக்கும்.

இந்தியாவில் தத்த சம்பிரதாயம் பிரதானமான இடம் வகிக்கிறது. அனைத்து விதமான நம்பிக்கைகளும் தத்த சம்பிரதாயத்துடன் ஒத்துபோகின்றன. தத்த சம்பிரதாயத்தில் விஷ்ணுவும் சிவனும் ஒன்றுபோல வணங்கப்படுகிறார்கள். கர்ம யோகம், பக்தி யோகம், ராஜ யோகம் மற்றும் ஞான யோகம் ஆகிய அனைத்து ஆன்மிக முறைகளும் முழுமையாக இந்த சம்பிரதாயத்தில் ஒன்றரக் கலந்திருக்கிறது. இந்த சம்பிரதாயம் மிகவும் தொன்மையானது, ஏனெனில் இது தத்த அவதாரம் (மும்மூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு மற்றும் சிவன் ஒன்று சேர்ந்த ஐக்கிய வடிவம்) தோன்றிய நாளில் இருந்து இருக்கிறது. இந்த சம்பிரதாயத்தை புத்துயிர் பெறச்செய்யும் பொருட்டு ஸ்ரீ தத்தாத்ரேயர் ஸ்ரீ ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர், ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி, ஸ்ரீ மாணிக் பிரபு , ஸ்ரீ அக்கல்கோட் மஹராஜ் ஸ்வாமி சமர்த்தர் மற்றும் ஷீரடி சாய்பாபாவாகவும் அவதரித்தார். ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதிதான் முன்னூறு வருடங்களுக்கு பிறகு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தராக மீண்டும் தோன்றியுள்ளதாக நம்பப்படுகிறது. மஹாபுருஷர்களுக்கு முடிவு என்பதும் உண்டா என்ன? அவர்கள் அழிவே இல்லாதவர்கள் ஆயிற்றே!

ஒரு பனிப்பாறை பிரமாண்டமாக மலையைப் போன்று பெரியதாக இருந்தாலும், சிறிதளவு மட்டுமே கடலுக்கு வெளியே தெரியும்படி இருக்கும், மீதிப் பகுதி தண்ணீருக்குள் மூழ்கி இருக்கும். அதேபோலத்தான் துறவிகள் மற்றும் மகாபுருஷர்களின் வாழ்க்கையும் இருக்கும். அவர்களுடைய சைதன்யமும் நம்முடைய சைதன்யமும் முற்றிலும் வேறுபட்டதாக இருக்கும். நாம் பூமிக்கு தொடர்புடைய சைதன்ய நிலையில் இருப்போம் ஆனால் அவர்களோ தெய்வீக

மற்றும் கண்டங்களை எல்லாம் கடந்த சைதன்ய நிலையில் வாசம் செய்வார்கள். அவர்களுடைய புற வாழ்க்கைக்கு பின்னால், பிரமாண்டமான செழிப்புடன் கூடிய அக வாழ்க்கை இருக்கும். அதை ஒரு சாதாரண மனிதனால் புரிந்துகொள்ள முடியாது. மேலும் ஒரு துறவியின் வாழ்க்கை நம்மை திசைதிருப்பும்படி இருக்கும்.

பூஜை, பிரார்த்தனை, தியானம் போன்ற பலவிதமான ஆன்மிக வழிபாடுகள் உள்ளன. ஒரு பக்தன் இந்த வழிபாட்டு முறைகளின் மூலம் பரமாத்மாவின் அருள் மற்றும் கருணையை பெற முடியும். அந்த பக்தனுக்கு தூய மனம், அசைக்கமுடியாத நம்பிக்கை மற்றும் தீவிரமான ஆன்மிகத் தேடல் ஆகியவை இருக்குமாயின் அவனுடைய வேண்டுதல்களுக்கு கடவுள் (தெய்வீக கருணை) உடனடியாக பதில் அளிப்பார். இந்தியாவில் பலவகையான சம்பிரதாயங்கள் உள்ளன. ஒவ்வொன்றிலும் அவரவரின் நம்பிக்கையை பொறுத்து ஒரு குறிப்பிட்ட தெய்வ உருவம் அதாவது- சிவன், தத்தாத்ரேயர், விஷ்ணு, கணபதி, காளி, காயத்ரி, சரஸ்வதி மற்றும் லக்ஷ்மி ஆகிய தெய்வங்களை வழிபடுகிறார்கள். ஒவ்வொரு சம்பிரதாயத்திற்கும் அதற்கே உண்டான கோட்பாடுகள் மற்றும் வழிமுறைகள் உண்டு. இந்த சம்பிரதாயம் என்னும் சுடர் நம் இந்திய நாட்டில் உள்ள அனைத்து வீடுகளிலும் தொடர்ந்து ஒளிர்ந்து கொண்டிருப்பதால்தான் நம் ஆன்மிகத்தின் பாரம்பரியம் தொடர்ந்து கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு சம்பிரதாயத்தின் பாதை வெவ்வேறாக தோன்றினாலும் அது ஒரே இலக்கைத்தான் சென்றடைகிறது.

தத்தாத்திரேய சம்பிரதாயம் நம் நாட்டில் உள்ள மிகவும் தொன்மையான மற்றும் மிகவும் உயர்ந்த சம்பிரதாயம் ஆகும். இந்த சம்பிரதாயத்தின் சாராம்சம் ஒவ்வொரு தனிநபர், அனைத்து ஜீவராசிகள் மற்றும் நம் பிரபஞ்சத்தின் நன்மைகளை மையப்படுத்தி உள்ளதால் இது மிகவும் புகழ்பெற்று விளங்குகிறது. இச்சம்பிரதாயத்திற்கென தனிப்பட்ட அம்சங்கள் இருந்தாலும், இது மற்ற அனைத்து சம்பிரதாயங்களில் உள்ள நல்ல கருத்துக்களை உள்ளடக்கிய ஒன்றாக விளங்குகிறது. இது எந்தவிதமான சம்பிரதாயத்திற்கும் முரண்பட்டு இல்லாமல், அனைத்திற்கும் ஒத்திசைவாக உள்ளது. **'அவதாரம்'** என்கிற வார்த்தைக்கு **'கீழிறங்கி வருதல்'** என்பது பொருள், அதாவது உருவமற்ற தெய்வீகம், உருவம் மற்றும் குணங்களுடன் பூமிக்கு வருதல் என்பதுதான் அதன் பொருள்.

குரு தத்தாத்ரேயர் கலியுகத்தில் பல பூரண அவதாரங்களாகவும் அம்ச அவதாரங்களாகவும் தோன்றி மக்களுக்கு நல்வழி போதித்தார். குரு தத்தாத்ரேயர் பற்றியும் அவரின் அவதாரங்கள் பற்றியும் வரும் அத்தியாயங்களில் பார்ப்போம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

*அத்தியாயம் 4*

# ஆதி குரு தத்தாத்ரேயர்

குரு தத்தாத்ரேயர் அத்ரி மகரிஷி மற்றும் அனசூயா தேவியின் மகன். அத்ரி மகரிஷி பிரம்மாவிடமிருந்து பிறந்தவர். அவர் பல வருடங்கள் தவம் புரிந்து பிரம்ம ஞானம் அடைந்தார். அவர் கர்தம முனிவரின் மகளான அனசூயாவை மணந்து கொண்டார்.

அனசூயா அவளின் பெயருடைய பொருளுக்கேற்ப அசூயை (பொறாமை) இல்லாதவளாக விளங்கினாள். அவளுக்கு யார்மீதும் வன்மம் கிடையாது; மாறாக அனைத்து உயிரினங்களின் மீதும் அபரிமிதமான அன்பு மட்டுமே கொண்டிருந்தாள். அவள் ஒரு பதிவிரதை, தன் கணவரை தெய்வமாக மதிப்பவள். அவள் பதிவிரதைகளில் (கணவர் மீது மிகுந்த பக்தி நிறைந்தவர்கள்) மிகவும் சிறந்தவளாகக் கருதப்படுகிறாள். அவளுடைய பெருமை மூவுலகங்களிலும் பரவியிருந்தது. அனசூயையின் புகழைக் கண்ட சொர்க்கத்தின் அதிபதியான இந்திரனுக்கு, அவனுடைய சக்திகள் அனைத்தும் சூரியனின் பளபளப்புக்கு முன்னர் எரியும் விளக்கின் வெளிச்சம் இருப்பது போல இருந்தது. அவன் மும்மூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு மற்றும் சிவனை அணுகி, வளர்ந்து கொண்டே வரும் அனசூயையின் பதிவிரதாத்துவத்திற்கு எப்படியாவது களங்கம் ஏற்படுத்துமாறு கேட்டுக்கொண்டான். அதற்கு அவர்கள் சம்மதித்தனர். அவர்கள் மூவரும் தங்களை முனிவர்களாக மாற்றிக்கொண்டு அத்ரி மகரிஷி வசிக்கும் குடிலுக்குச் சென்று பிக்ஷை கேட்டனர். அச்சமயத்தில் அத்ரி முனிவர் தன் நித்திய அனுஷ்டானங்கள் செய்வதற்காக ஆற்றங்கரைக்குச் சென்றிருந்தார். அனசூயா வெளியே வந்து அம்மூவரையும் வரவேற்றாள். அவர்கள் மூவரும் ஒரு வினோதமான நிபந்தனை விடுத்தனர். அவள் சமைத்த உணவைப் பரிமாறும் போது ஆடைகள் இல்லாமல் பரிமாற வேண்டும் என்றனர். இது என்ன சங்கடமான நிலைமை என்று அனசூயா யோசித்தாள். அதிதிகள் (விருந்தாளிகள்) கடவுளின் அம்சம் ஆயிற்றே! அவர்களை திருப்திப்படுத்தியாகவேண்டும் என்கிற காரணத்தால் அதற்கு சம்மதித்தாள். உடனே அவளுடைய மனதில் ஒரு எண்ணம் உதித்தது. **"வந்திருக்கும் அதிதிகள் குழந்தைகளாக இருந்தால் அவள் அவர்களுக்கு தாய்!**




**அப்படியென்றால் அவர்களுக்கு அவள் ஆடையின்றி உணவளிக்கலாம்".** தூய பதிவிரதைகளின் எண்ணம் உடனடியாக உண்மையாகிவிடும் என்பதால் அவர்கள் மூவரும் குழந்தைகளாக மாறினர். அவள் அம்மூவருக்கும் தாய்ப்பாசத்துடன் உணவளித்தாள்.

அப்போது தன் அனுஷ்டானங்களை முடித்துத் திரும்பிய அத்ரி மகரிஷி, மூன்று குழந்தைகளை அனசூயா தாலாட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்தவுடன் அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. அனசூயா தன் கணவரைப் பார்த்தவுடன் எழுந்து வந்து அக்குழந்தைகளை அவர் பாதத்தினருகில் சமர்ப்பித்துவிட்டு, **"குழந்தைகள் இல்லாத நமக்கு கடவுள் அளித்த வரம் இவர்கள்"** என்று கூறினாள். அத்ரி மிகவும் மகிழ்ந்து அவர்களுக்கு தத்தர் (கொடுப்பது என்று பொருள்படும்) என்று பெயரிட்டார். பின்னர் அம்மூன்று கடவுள்களும் தன் உண்மையான உருவமான பிரம்மா, விஷ்ணு மற்றும் சிவனாக காட்சியளித்தனர். அனசூயாவின் போற்றத்தக்க பதிவிரதாத்துவம் எப்படியெல்லாம் இம்மூவரின் சக்திகளையும் ஸ்தம்பனம் செய்கிறது என்னும் உண்மையை விவரித்தனர். பிரம்மா சந்திரனாகவும், சிவன் துர்வாசராகவும் விஷ்ணு தத்தாத்ரேயராகவும் ஆனார்கள். முனிவர் தம்பதி இவர்கள் மூவரும் தங்களுடைய மகன்களாகவே தொடர்ந்து இருக்கவேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். அவர்களும் சம்மதித்தனர். மூன்று கடவுள்களும் ஒரே உடலுக்குள் ஐக்கியம் ஆனார்கள். ஆனால் அந்த உடல் ஆறு கரங்களும், மூன்று தலைகளும் கொண்டிருந்தது. இந்த முறையில்தான் ஸ்ரீ தத்தாத்ரேயர் இந்த பூமியில் அவதரித்து, இப்போதும் **"தத்த குரு"** என்கிற பெயருடன் நிலைத்திருக்கிறார்.

ஸ்ரீ தத்தாத்ரேயருக்கு அத்தி மரத்தின் கீழ் வசிப்பது என்றால் மிகவும் பிடிக்கும். அவர் ஜடாமுடியுடன் காணப்படுவார். தன் ஆறு கரங்களில் ஒவ்வொன்றிலும் திரிசூலம், உடுக்கை, சங்கு, சுதர்சனச் சக்கரம், பிக்ஷை பாத்திரம் மற்றும் ஜபமாலை ஆகியவற்றை வைத்திருப்பார். அவர் உடல் முழுவதிலும் விபூதியைப் பூசிக் கொண்டு புலித்தோலை ஆடையாக அணிந்து கொண்டிருப்பார். அவருடன் எப்போதும் பசுவும் நான்கு நாய்களும் இருக்கும். அவர் மரப்பாதுகைகளை அணிந்துகொண்டு எப்போதும் தியான நிலையிலேயே இருப்பார். மூன்று தலைகள் பிரம்மா, விஷ்ணு மற்றும் சிவனை குறிக்கும். பசு பூமித்தாயையும், நான்கு நாய்கள் நான்கு வேதங்களான ரிக், யஜுர், சாம மற்றும் அதர்வண வேதங்களையும் (தர்மத்தை உள்ளடக்கிய அழியாத நான்கு நூல்கள்) குறிக்கிறது.

ஸ்ரீ தத்தாத்ரேயர் ஒரு பரிவ்ராஜகர். அதாவது எப்போதும் அலைந்து கொண்டு, கிழக்கிலிருந்து மேற்கிற்கும், வடக்கிலிருந்து தெற்குக்கும் ஒவ்வொரு இடமாக திரிந்து கொண்டே இருப்பார். அவர் படைப்பில் உள்ள அனைத்தும் ஏதோ ஒரு படிப்பினையை உணர்த்துகிறது என்னும் ஞானம் கொண்டிருந்தார். கடவுளின் ஒவ்வொரு படைப்பும் நமக்கு குரு, அதை நாம் உற்றுநோக்கி கவனித்து புரிந்துகொள்ள வேண்டும் என்று போதித்தார். அதனால்தான் அவருக்கு கடல், வானம் போன்ற 24 குருக்கள் இருந்தது. அவர் ஒரு சிறந்த யோகி, அவதூதர், பரமஹம்சர் மற்றும் குருக்களுக்கெல்லாம் குரு. ஸ்ரீ தத்தாத்ரேய அவதாரத்தின் மகிமைகளையும் சிறப்புகளையும் பற்றி ஒரு சாதாரண மனித அறிவால் விவரிக்க முடியாது. அது மும்மூர்த்திகளின் ஐக்கிய ஸ்வரூபம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

*அத்தியாயம் 5*

# தத்த சம்பிரதாயம் மற்றும் தத்த அவதாரங்கள்

ஸ்ரீ தத்தாத்ரேயருக்கு பல சீடர்கள் இருந்தாலும், அவர்களில் கார்த்தவீரியன், பரசுராமன், யது, அலார்க்கா, ஆயு மற்றும் பிரஹலாதன் ஆகியோர் மிகவும் முக்கியமானவர்கள். இவர்கள் அனைவரும் புராண காலத்தவர்கள். பிற்காலங்களில், அதாவது கலியுகத்தில் ஸ்ரீ தத்தாத்ரேயர் ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர், ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி, ஸ்ரீ மாணிக் பிரபு, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மற்றும் ஷீரடி சாய்பாபா போன்ற அவதாரங்களாக தோன்றி தத்த சம்பிரதாயத்தை நிலைநிறுத்தினார்.

தத்த சம்பிரதாயத்தின் கோட்பாடுகள் தத்த பிரபோத், தத்த மஹாத்மியம் மற்றும் ஸ்ரீ குரு சரித்திரம் ஆகியவற்றில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. அவற்றின் சாராம்சமாவது:

1. ஒவ்வொரு மனிதனும் முதலில் தன்னை அறிந்து கொள்ளவேண்டும். அதாவது தன்னுடைய உண்மை, கடவுளை அறிந்து கொள்ளவேண்டும்.

2. அனைத்து உயிரினங்களும் பிரம்மத்தின் சாராம்சம்; பிரம்மம் எல்லாவற்றிலும் உண்மைத்தன்மையாக வியாபித்திருக்கிறது; அதுவே அனைத்தும் தோன்றி, நிலைத்து மறைவதன் உற்பத்தி ஸ்தானம். இம்மூன்று பண்புகளில் இருக்கும் ஒற்றுமை மற்றும் பந்தத்தை அறிந்து கொள்வதன் மூலம் ஒவ்வொரு மனிதனும், கடவுளுக்கும்-மனிதனுக்கும், இந்த படைப்புக்கும் இடையே உள்ள உறவுகள் பற்றி தெரிந்துகொள்ளலாம்.

3. ஒருவர் உண்மையை பகுத்துணரும், அப்படிப்பட்ட உண்மை நிலையை அடைய வேண்டுமென்றால், அவர் துறவறம் மற்றும் யோகம் வாயிலாக தன்னுடைய அகங்காரத்தை நிர்மூலமாக்க வேண்டும். ஒருவரின் அஹங்காரம் அழிந்துவிட்டால் அவர் கடவுள் ஆகிவிடுவார். அவர் உண்மைத் தன்மையுடன் ஒன்றர கலந்த நிலையில் இருப்பதை அறிந்து கொள்வார்.

4. ஒருவர் அப்படிப்பட்ட உன்னதமான நிலையை அடைய வேண்டுமானால் அதற்கு குருவின் கடாக்ஷம் அவசியமாகிறது. அவர் முழுவதுமாக குருவின் பாதங்களை சரணடைய வேண்டும். குருவின் கருணை "ஞானம் என்னும் கண்ணாடியை" நம் முன்னே தாங்கிக்கொண்டிருப்பதால், நம்மால் எளிதில் பிரம்மத்தை அறிந்துகொள்ள முடியும்.

தத்த சம்பிரதாயம் ஸ்ரீ தத்தாத்ரேயரின் உருவத்தை பிரம்மத்தின் உருவமாக நினைத்து வழிபடவும், குருவின் வழிகாட்டுதல் எவ்வளவு முக்கியம் என்பதைப் பற்றியும் எடுத்துரைக்கிறது. குருவே கடவுள்; குருவின் அருள் இருந்தால் மட்டுமே ஒரு மனிதன் பிறப்பு-இறப்பு சுழற்சியில் இருந்து விடுபட்டு சம்சாரம் என்னும் பிடியில் இருந்து விடுபட முடியும். ஆத்ம சாக்ஷாத்காரம் (தன்னை அறிதல்) என்னும் இலக்கை அடைய யோகப் பயிற்சி மிகவும் அவசியம் ஆகிறது. தத்தாத்ரேய குரு ஒரு மகாயோகி - அவர் யோகிகளுக்கெல்லாம் உயர்ந்த குரு. தத்த சம்பிரதாயம் தன் சீடர்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள போதனைகளை அளிக்கிறது:

1. நாம ஸ்மரணம் மற்றும் தியானம்;
2. எண்ணம், வார்த்தை மற்றும் செயலின் தூய்மை;
3. அனைத்து உயிரினங்களிடத்தும் கருணை மற்றும் அன்பு;
4. குருவின் பாதங்களில் சுயநலமில்லாமல் சரணடைவது;

தெய்வீகத்தை அடைந்து அதனுடன் கலப்பதும்தான் ஒரு மனிதனின் முக்கியமான குறிக்கோளாக இருக்கவேண்டும். குரு தத்தாத்ரேயர் அஷ்டாங்க யோகத்தை கற்பித்தார். அதாவது யோகத்தின் எட்டு வகையான பாதைகள்-

1. யமம் - தார்மீக ஒழுக்கம்
2. நியமம் -ஆன்மிக ஒழுக்கம்
3. ஆசனம் - உட்காரும் நிலை (யோகாசனம்)
4. பிராணாயாமம் - மூச்சை கட்டுப்படுத்துதல்
5. பிரத்தியாகாரம் - புலன்களை கட்டுப்படுத்துவது
6. தாரணம் - ஒருமுகப்படுத்துதல்
7. தியானம் - மன ஓட்டங்களை கட்டுப்படுத்துதல்
8. சமாதி- பிரம்மத்துடன் ஐக்கியம் ஆவது.

அஷ்டாங்க யோகத்தை பயிற்சி செய்தால் மனதை கட்டுப்படுத்துவதில் தேர்ச்சி பெறமுடியும். தூய்மையான அமைதியான மனது எண்ண அதிர்வலைகளின் தொந்தரவுகளில் இருந்து விடுதலை பெற்ற ஒன்றாக ஆகி, எப்போதும் அமைதி மற்றும் சாந்தமான நிலையிலேயே நிலைத்திருக்கும். அப்படிப்பட்ட அமைதியான நிலையில் உள்ளுணர்வுகளை தன்னை நோக்கி செலுத்தும் போது, நான் என்பது தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும். அதுதான் கைவல்யம் என்று அழைக்கப்படும் தன்னை அறிந்த நிலை. பிரம்மத்தை உணர்ந்த ஒருவனே பிரம்மத்துடன் ஐக்கியம் ஆகிறான்.

மனிதனின் மனதுக்கு அலைபாயும் (சித்த விருத்தி) குணம் உண்டு. யோகமுறைகள் சித்த விருத்திக்கான நிவாரணம் என்று அழைக்கப்படுகிறது. அதாவது மன ஓட்டங்கள் மற்றும் அலைபாயும் மன எண்ணங்களை கட்டுப்படுத்தும். சித்த விருத்தி மனிதனின் உள்ளுணர்வுகளில் ஐந்து நிலைகளில் இருப்பதாக கூறப்படுகிறது. அவையாவன, பிரமாண, விபர்யாச, விகல்ப, நித்ர மற்றும் ஸ்மிருதி ஆகியன ஆகும். **பிரமாண** என்கிற நிலையில் பொருட்களை எப்படி இருக்கிறதோ அதே நிலையில் பார்க்கும் மனோநிலை; **விபர்யாச** என்பது நாம் கயிற்றை பாம்பு என்பதாக பார்க்கும் மனோநிலை; **விகல்ப** என்பது இல்லாத ஒன்றை இருப்பதாக பார்க்கும் மனோநிலை, அதாவது பாலைவனத்தில் இருக்கும் கானல் நீர் போல; **நித்ர** என்பது ஆழ்ந்த தூக்க மனோநிலை; **ஸ்மிருதி** என்பது நம் கடந்த கால நிகழ்வுகளை பற்றிய நியாபகங்கள்; ஒரு மனிதனின் மனது இந்த ஐந்து நிலைகளையும் கடந்த ஒன்றாக ஆகும்போது அது யோகம் என்று அழைக்கப்படும்.




யோகத்தை ஒழுங்கான முறையில் பயிற்சி செய்ய வேண்டும் என்றால் அதற்கு வைராக்கியம், அதாவது புற உலகத்தின் மீது பற்றின்மை ஏற்பட வேண்டும். சம்சாரத்தில் (குடும்ப வாழ்க்கை) சுழலும் ஒரு சாதாரண மனிதனால் யோகத்தை முழுமையாக பயிற்சி செய்ய முடியாது. அதனால்தான் இந்த சம்பிரதாயம் துறவறத்தை பரிந்துரைக்கிறது. இந்த துறவறம் என்பது புற அளவில் மட்டுமல்லாது மனதளவிலும் உண்டாக வேண்டும். அதாவது வெளிப்புற நடவடிக்கைகள் மட்டுமல்லாது எண்ணங்களிலும் துறவு நிலை ஏற்பட வேண்டும். நம் மனதில் உள்ள அகங்காரம் முழுவதுமாக அழிக்கப்பட வேண்டும்.

சந்நியாசம் அனைவருக்கும் பரிந்துரைக்கப்பட்டுள்ளது என்றாலும் அது வாழ்க்கையின் நான்காவது நிலையாகத்தான் இருக்கவேண்டும். வாழ்க்கையின் மற்ற நிலைகளான பிரம்மச்சரியம், கிருஹஸ்தாச்ரமம், மற்றும் வானப்ரஸ்தம் ஆகிய நிலைகளை கடந்த பின்னர் சந்நியாச நிலை. தொடக்கத்திலிருந்தே சந்நியாச நிலையில் இருப்பவர்கள் கண்டிப்பாக ஆத்ம சாக்ஷாத்காரத்தை உணர்வர். இந்த நிலைக்கு மிகுந்த சுயக்கட்டுப்பாடு, அதீத மன உறுதி மற்றும் பற்றின்மை ஆகியவை தேவை என்கிற போதிலும், இந்த வழிதான் கடவுளை விரைவாக அடைவதற்கான சுலபமான வழி.

**தத்த அவதாரங்கள்**

1. ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர்
2. ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி
3. அக்கல்கோட் மஹாராஜ் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்
4. ஸ்ரீ மாணிக் பிரபு
5. ஷீரடி ஸ்ரீ சாய்நாதர்

ஸ்ரீ தத்தாத்ரேயர் இந்த தெய்வீக அவதாரங்கள் வாயிலாக தன் ஆன்மிக சக்தி மற்றும் தெய்வீக பேரொளியால் இந்த பூமியை புனிதமாக்கி மக்களை நல்வழிப்படுத்தினார். அடுத்து வரும் அத்தியாயங்களில் முதல் இரண்டு அவதாரங்களை பற்றி சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளது. மூன்றாவது அவதாரமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பற்றி வரும் அத்தியாயங்களில் விரிவாக பார்ப்போம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 6

# ஸ்ரீ ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர் (ஸ்ரீ தத்தாத்ரேயரின் முதல் கலியுக அவதாரம்)

(கி.பி.1320-1350)

ஸ்ரீ குரு சரித்திரத்தில் அத்தியாயம் 5, 8 மற்றும் 9 ஆகியவற்றில் ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர் பற்றி விளக்கப்பட்டுள்ளது. ஸ்ரீபாத ஸ்ரீவல்லபரின் சரித்திரம் முழுமையாக சம்பூர்ண ஸ்ரீ ஸ்ரீபாத ஸ்ரீவல்லப சரிதாம்ருதத்தில் விளக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீ ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர் பிதாபுரம் (ஆந்திர மாநிலம் காக்கிநாடா அருகில் இருக்கிறது) என்னும் ஊரில் ஒரு பிராமண குடும்பத்தில் பிறந்தார். ஸ்ரீபாதரின் தந்தை பெயர் அப்பல ராஜசர்மா , தாய் பெயர் சுமதி. சுமதி ஒரு பதிவிரதை, தன் கணவருக்கு சேவைகள் செய்து கொண்டு குடும்பத்தை நல்ல முறையில் நடத்திக் கொண்டிருந்தாள்.

ஒரு அமாவாசை தினத்தன்று அவர்களுடைய வீட்டில் பித்ருக்களுக்கு ஸ்ரார்த்தம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. பிராமணர்கள் சடங்குகளை செய்து கொண்டிருக்கும்போது ஒரு சந்நியாசி வந்து பிக்ஷை கேட்டார். சாப்பாடு அப்போது தயாராகி இருந்தாலும் பிராமணர்கள் உணவருந்தாமல் இருந்தனர். பிராமணர்கள் உணவருந்தாமல் பிக்ஷை அளிப்பதற்கு சுமதிக்கு குழப்பமாக இருந்தது. ஸ்ரார்த்த தினங்களில் பிரதான பிராமணர்கள் உணவருந்தாமல் யாராவது சாப்பிட்டு விட்டால் ஸ்ரார்த்த பலன் கிடைக்காமல் போய்விடும். இந்த குழப்பத்துடன் அவள் சந்நியாசியின் முகத்தைப் பார்த்தாள். அவர் சாதாரண மனிதன் போல் அவளுக்குத் தோன்றவில்லை. கடவுள்தான் இத்தோற்றத்தில் தன்னைச் சோதிக்க வந்திருப்பாரோ என்று எண்ணியவாறே எது சரி எது தவறு என்பதையெல்லாம் யோசிக்காமல் அவருக்கு உணவளித்துவிட்டாள். ஆஹா! வந்திருப்பது குரு தத்தாத்ரேயர் ஆயிற்றே! ஸ்ரீ தத்தாத்ரேயர் மிகவும் மகிழ்ச்சி அடைந்து, **"அம்மா! நான் மிகவும் திருப்தியாக இருக்கிறேன். உங்களுக்கு வேண்டும் வரங்களை கேளுங்கள்"** என்றார்.

சுமதிக்கு அளவுகடந்த மகிழ்ச்சி ஏற்பட்டு, **"ஸ்வாமி, நீங்கள் என்னை அம்மா என்று அழைத்தது உண்மையாகட்டும்"** என்று கேட்டுக்கொண்டாள். உடனே அதற்கு ஸ்ரீ தத்தர், **"ததாஸ்து!"** என்றார். இதைக் கூறியவுடன் அவர் மறைந்துவிட்டார். சில காலங்களுக்குப் பின்னர் ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரமான ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர் அவளுக்கு மகனாகப் பிறந்தார். உண்மையில், அது ஒரு சாதாரண பிறப்பு அல்ல. அந்த வீட்டில் கடவுளே குழந்தையாக ஸ்ரீபாதர் என்கிற பெயரில் அவதரித்தார்.

ஸ்ரீபாதருக்கு ஏழு வயதாகும் போது பூணூல் அணிவிக்கப்பட்டது. அவருக்கு பதினாறு வயதிருக்கும் போது அனைத்து வேத சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து ஞான ஒளியாக மின்னிக் கொண்டிருந்தார்.

அவருக்கு திருமண வயது வந்துவிட்டது என்று அவரிடம் கூறிய போது, **"துறவறம்தான் என் மனைவி, அனைத்து பெண்களும் என் தாயைப் போன்றவர்கள். சாதுக்கள் அனைவரையும் வழிநடத்த வேண்டியதுதான் இந்த உலகத்தில் என் பிறப்பு ஏற்பட்டதற்கான காரணம்"** என்றார். இவ்வாறு கூறிவிட்டு தன் பெற்றோர்களிடம் துறவறம் மேற்கொள்வதற்காக விடைபெற்றுக்கொண்டு வீட்டை விட்டு செல்ல அனுமதி கேட்டார். இதற்கு சம்மதம் தெரிவிக்க பெற்றோர்களுக்கு மிகவும் சிரமமாக இருந்தது. இப்படிப்பட்ட உன்னதமான மகனை விட்டுப் பிரிய மனம் வருமா என்ன? அவர்களுடைய மற்ற இரு மகன்களில் ஒருவர் செவிடு-ஊமை மற்றொருவர் குருடாக இருந்தமையால் அது மிகவும் பரிதாபகரமான சூழ்நிலையாக இருந்தது. ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர் இவர்களை விட்டுச் சென்றால், வயதான காலத்தில் பெற்றோர்களை யார் கவனித்துக் கொள்வார்கள்? குடும்பத்தின் நிலைமை என்னவாகும்?

ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர் அவர்களுடைய கவலையை புரிந்து கொண்டார். அவர் தன் சகோதரர்களை தனதருகில் அழைத்து, தெய்வீக அன்பு பொங்கும் பார்வையால் உற்று நோக்கினார். என்ன ஒரு ஆச்சரியம்! அவர்களுடைய உடல் மற்றும் மன நோய்கள் மறைந்து போயின. அவர்களின் உடல்நிலை சரியாகி வேத ஞானம் பெற்றனர். அனைவருக்கும் மிகுந்த சந்தோஷமாக இருந்தது. அவர்கள் இருவருக்கும் சந்தோஷமான மற்றும் ஆரோக்கியமான நல்வாழ்க்கை அமையும் என்று ஸ்ரீபாதர் ஆசீர்வதித்தார். அவர்களை பெற்றோர்களுக்கு பக்தி சிரத்தையுடன் சேவை புரியுமாறு கட்டளையிட்டுவிட்டு, இந்த பிறவியிலேயே மோக்ஷம் அளிப்பதாக உறுதி அளித்தார்.

பின்னர் ஸ்ரீபாத ஸ்ரீவல்லப குரு தன்னுடைய பணிகளை நோக்கிப் பயணம் செய்யத் துவங்கினார். தன் பெற்றோர்களிடம் விடைபெற்றுக்

கொண்டு சென்றார். அவர் தன் தாயைப் பார்த்து, "**அம்மா, நீங்கள் வருந்தக்கூடாது. நான் செய்து முடிக்க வேண்டிய கடமைகள் இருக்கிறது. அறியாமையில் மூழ்கியிருக்கும் இந்த உலகத்தை நான் மீட்க வேண்டும். மனிதநேயத்தை காப்பாற்றவே நான் உங்களுக்கு மகனாக பிறந்தேன்; நான் அனைவருக்கும் கடவுள் நம்பிக்கையை புகுத்தி, தெய்வீக மகிமையை உணர்த்த வேண்டும்**" என்றார். அவர் தன் பந்துக்கள் அனைவரையும் தன் அன்பான அறிவுரையால் சமாதானம் செய்துவிட்டு ஒரு நொடிப்பொழுதில் அவர்கள் பார்வையை விட்டு மறைந்தார். அவர் தனது யோக சக்தியை உபயோகப்படுத்தி,மனதின் வேகத்தை ஒத்த வேகத்தில் காசியை சென்றடைந்து அங்கு மறைந்த நிலையில் தங்கியிருந்தார். பின்னர் பத்ரிக்கு சென்று அங்குள்ள தெய்வத்தை தரிசனம் செய்த பின்னர் தெற்கு நோக்கி பயணம் செய்தார். பின்னர் கோகர்ணம்-மஹாபலேஸ்வரர் (கர்நாடகா) வந்து, அங்கேயே மூன்று வருடங்களுக்கு தங்கிவிட்டு கடைசியாக குருவபுரத்தை சென்றடைந்தார்.

குருவபுரத்தில் ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர் தவங்கள் மேற்கொண்டார். ஒருநாள், அம்பிகா என்கிற பெயருடைய விதவைப் பெண் வறுமை மற்றும் வாழ்க்கை மேல் வெறுப்பு ஏற்பட்டு, தன் வாழ்க்கையை முடித்துக் கொள்ள ஆற்றங்கரைக்கு வந்தாள். தற்செயலாக ஸ்ரீபாத ஸ்ரீவல்லபரும் ஆற்றங்கரைக்கு வந்திருந்தார். ஸ்ரீபாத ஸ்ரீவல்லபரின் தெய்வீக ஒளி ததும்பும் முகத்தைக் கண்ட அப்பெண்ணின் இதயம் பேரானந்தம் அடைந்தது. அவள் உடனே அவருடைய பாதத்தைத் தொட்டு வணங்கினாள். அவள் அவரிடம் கெஞ்சும் தொனியில், "**ஸ்வாமி, அடுத்த பிறவியிலாவது எனக்கு உங்களைப் போன்ற ஒரு மகன் வேண்டும்**" என்று கேட்டுக்கொண்டாள். ஸ்ரீகுரு அவளை ஆசீர்வதித்துவிட்டு, "**தினமும் விடியற்காலையில் சங்கரரை வணங்கினால் உன் ஆசை நிறைவேறும். சனிப்பிரதோஷ வழிபாடு செய்யவும்**" என்று கூறி ஆசீர்வதித்தார். அவரே உருவாக்கிய இந்த சூழ்நிலையால், தனக்கு அடுத்த பிறவியில் வரப்போகும் தாயை ஆசீர்வாதம் செய்து, தான் மீண்டும் அவதரிக்கப் போகும் தன் சங்கல்பத்தை இதன் மூலம் வெளிப்படுத்துகிறார்.

ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர் கி.பி. 1350 ஆம் ஆண்டு கிருஷ்ணா நதியில் இறங்கி மறைந்து போனார். அவருடைய ஸ்தூல உடல் மறைந்து போனாலும் அவருடைய கருணையை அவர் பக்தர்களால் இன்றும் உணர முடிகிறது. அவருடைய சைதன்யம் எப்போதும் வெளிப்பட்டுக்கொண்டே இருக்கிறது.

**ஜய ஜய ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 7

# ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி (ஸ்ரீ தத்தாத்ரேயரின் இரண்டாவது கலியுக அவதாரம்)

(கி.பி. *1378-1459*)

ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி கரஞ்சா(மகாராஷ்டிரா) என்னும் ஊரில் பிறந்தார். அவருக்கு அவருடைய பெற்றோர்கள் நரஹரி என பெயரிட்டனர். பொதுவாக குழந்தைகள் பிறந்தவுடன் அழும், ஆனால் அவர் பிறந்த போது அழுவதற்கு பதில் "**ஓம்**" என்று உச்சரித்தார். இது அனைவருக்கும் மிகுந்த ஆச்சரியத்தை அளித்தது. அக்கம்பக்கத்தில் இருந்தவர்கள் அனைவரும் இந்த அதிசயக் குழந்தையை பார்க்க வந்தனர். நரஹரியின் பெற்றோர்களான மாதவ் மற்றும் அம்பாபவானிக்கு தங்கள் குழந்தையை பார்க்க பலர் வருவது மிகவும் சந்தோஷமாக இருந்தாலும், அவர் '**ஓம்**' என்கிற வார்த்தையைத் தவிர வேறு எதுவும் பேசாமல் இருப்பது துயரத்தை ஏற்படுத்தியது. அவருடைய அன்னை மிகுந்த துயரத்துடன் அழுதுகொண்டே, **"நம்மால் நம் குழந்தையின் மழலை பேச்சை கேட்கவே முடியாதா"** என்று ஏங்கினாள். எனினும் அவர் ஓம்,ஓம்... என்று கூறிக்கொண்டே இருப்பதால் ஒருநாள் கண்டிப்பாக பேசுவார் என்கிற நம்பிக்கையை மட்டும் அவர்கள் இழக்கவில்லை.

பின்னர் அவர் சங்கேத பாஷையில் பேசத் துவங்கினார். பூணூல் அணிவிக்கப்பட்ட பின் நன்றாக பேசுவார் என எண்ணினர். ஆனாலும் அவர்கள் கவலைபட்டுக் கொண்டுதான் இருந்தனர். ஒருநாள் அவர்களை சமாதானப் படுத்தும் விதமாக நரஹரி ஒரு இரும்புப் பாத்திரத்தை தொட்டவுடன் அதை தங்கமாக மாற்றிக் காட்டினார். நரஹரிக்கு ஏழு வயதாக இருக்கும் போது அவருக்கு பூணூல் அணிவிக்கப்பட்டது. அப்போது ஒரு மிகப்பெரிய அற்புதம் நிகழ்ந்தது. ஊமையாக இருந்த நரஹரி அனைத்து வேத விற்பன்னர்கள் முன்னிலையில் வேதம் ஓதினார். பெற்றோர்களின் சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. அவர்கள் ஆனந்தக் கண்ணீர் வடித்தனர்.

அந்த சந்தோஷம் தொடர்ந்து நிலைத்திருக்கவில்லை. முறைப்படி பூணூல் அணிவிக்கப்பட்டபின் மகன் தாயிடம் பிக்ஷை கேட்கவேண்டும். அப்படி நரஹரியின் தாய் அவரை பிக்ஷை கேட்குமாறு கூறியவுடன், அதை





உண்மையாக்கும் வண்ணம் தான் சந்நியாசம் ஏற்றுக்கொண்டு வீட்டை துறந்து செல்ல அனுமதி கேட்டார். இதைக் கேட்டவுடன் தாய்ப்பாசத்தினால் அவள் அழுது புலம்பினாள். இந்த யோசனையை கைவிடுமாறு கெஞ்சினாள். நரஹரி அவளை தேற்றிவிட்டு தன் கரத்தை அவள் தலைமீது வைத்து, அவர் ஸ்ரீபாத ஸ்ரீவல்லபராக இருந்த போது அவளுக்கு அளித்த வரங்கள் பற்றி நினைவூட்டினார். ஆனாலும் அவள் தன் மகனிடம் இன்னும் சில காலங்களுக்காவது தனக்கு மகனாக இருக்கும்படி கேட்டுக்கொண்டாள். ஸ்ரீ குரு தனக்கு இரண்டு சகோதரர்கள் பிறக்கும் வரை அவளுடன் இருப்பதாக உறுதியளித்தார். பின்னர் ஒரு நன்னாளில், நரஹரி தன் பணியை நிறைவேற்றுவதற்காக வீட்டைத் துறந்து கிளம்பினார். அவருடைய அவதார நோக்கம் மத மற்றும் ஆன்மிக நம்பிக்கையுள்ள மக்களை உயர்த்துவதற்கும் தர்மத்தை நிலைநாட்டுவதற்கும் எடுக்கப்பட்டது.

நரஹரி முதலில் பனாரஸுக்குச் (காசி) சென்று ஸ்ரீ கிருஷ்ண சரஸ்வதியைச் சந்தித்துவிட்டு, அங்கு தங்கினார். அங்குள்ள கங்கை நதியில் ஸ்நானம் செய்துவிட்டு காசி விஸ்வநாதரை மூன்று முறை தரிசனம் செய்வார். ஸ்ரீ கிருஷ்ண சரஸ்வதியை தனக்கு சந்நியாசத்தை துவங்கி வைக்குமாறு கேட்டுக் கொண்டார். ஸ்ரீ கிருஷ்ண சரஸ்வதி நரஹரியின் ஈடுபாடு, கட்டுப்பாடு மற்றும் பக்தியைக் கண்டு ஆனந்தப்பட்டு சந்நியாசம் அளிக்க சம்மதம் தெரிவித்து அவருக்கு ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி என்று நாமகரணம் செய்து வைத்தார். அனைவரின் நன்மைக்காகவும், ஞானத்திற்காகவும் அவர் காசியை சுற்றி பல்வேறு இடங்களில் ஞான யக்ஞங்கள் அதாவது பிரசங்கங்கள் நிகழ்த்தினார். அவரால் நூற்றுக்கணக்கானவர்கள் ஆன்மிகப் பாதையில் வழி நடத்தப்பட்டார்கள். காசியில் இருந்து அவர் தன் சீடர்களுடன் பத்ரிகாரண்ய காட்டுக்குச் சென்றார். பின்னர் ஒவ்வொரு இடமாக பிரயாணம் செய்து கொல்கத்தாவுக்கு அருகில் உள்ள கங்கா சாகர் என்ற இடத்தை அடைந்தார். அவர் நதியோரம் நடந்து பயணம் செய்து அலகாபாத் வந்தடைந்தார். இவ்வாறு இருபத்தோரு வருடங்கள் ஓடின. ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதிக்கு தன் பெற்றோர்கள் மற்றும் சகோதரர்களை ஆசீர்வதிக்க வேண்டும் என்ற விருப்பம் எழும்பியது. அதனால் அவர் தான் பிறந்த இடமான கரஞ்சாவுக்கு வந்தார். ஒரு நாள் காலையில் திடீரென அவர் வீட்டில் தோன்றியது அனைவருக்கும் தாங்க முடியாத சந்தோஷத்தை அளித்தது.

**ஸ்ரீ குரு சரித்திரம்** என்னும் நூலில் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி செய்த பல லீலைகள் விவரமாக விளக்கப்பட்டுள்ளது. இந்த லீலைகள் அவர் செய்த அற்புதங்களை பற்றி விளக்குவதற்கு மட்டுமல்லாது, மக்களுக்கு இதன் மூலம்

நம்பிக்கையை ஊட்டி அவர்களை ஆன்மிகத் தேடல் என்னும் பாதைக்கு இழுத்து வருவதற்காகத்தான் நடைபெற்றது.

அக்காலகட்டத்தில் முகமதியர்கள் கொடுங்கோல் ஆட்சி நடத்தி வந்தனர். ஹிந்து வேத தர்மம் அழியும் நிலையில் இருந்தது. ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி ஹிந்துக்களுக்கு ஆன்ம விழிப்புணர்வு மற்றும் நம்பிக்கையை ஏற்படுத்தும் வகையில் பல சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியின் சீடர்களில் ஒருவரான சாயம்தேவன் முகமதிய அரசரிடம் வேலை செய்துகொண்டிருந்தார். இந்த அரசன் மிகவும் இரக்கமற்றவனாகவும் ஹிந்து மதத்தை சேர்ந்தவர்களுக்கு பல கொடுமைகள் ஏற்படுத்திக் கொண்டிருந்தான். ஒவ்வொரு வருடமும் ஒரு ஹிந்துவை கொல்ல வேண்டும் என்ற நடைமுறையை கொண்டிருந்தான். அன்று சாயம்தேவனுடைய முறை வந்ததால் முகமதிய அரசன் அவரை கூப்பிட்டு அனுப்பினான். சாயம்தேவன் கிளம்புவதற்கு முன்னால் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியை வணங்கிவிட்டு தன்னை காப்பாற்றுமாறு பிரார்த்தனை செய்து கொண்டார். ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி அவரை காப்பாற்றுவதாக உறுதி அளித்தார். சாயம்தேவர் மிகுந்த பயத்துடன் சென்று அரசர் முன் நின்றார். ஆனால் ஆச்சரியமாக அன்று அரசன் வேறு விதமான மனோநிலையில் இருந்தான். அவருக்கு மிகுந்த மரியாதை அளித்து பரிசுகள் கொடுத்து அரசன் கௌரவித்தான். இந்த முகமதிய அரசன் தன் முற்பிறவியில் ஒரு சலவைத் தொழிலாளியாக பிறந்து அரசனாக பிறப்பான் என்று ஸ்ரீபாத ஸ்ரீவல்லபரிடம் வரம் பெற்றவன் (ரவிதாஸ்). இதைப் பற்றி விரிவாக ஸ்ரீ குரு சரித்திரம் மற்றும் ஸ்ரீபாத ஸ்ரீவல்லப சரிதாம்ருதம் ஆகியவற்றில் விளக்கப்பட்டுள்ளது.

பின்னர் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி த்ரியம்பகேஸ்வர், நாசிக் மற்றும் பரலி வைஜ்யநாத் போன்ற இடங்களுக்குச் சென்றார். கடைசியாக சென்ற இடத்தில் ஒரு வருட காலம் தங்கி தபஸ் செய்தார். பின்னர் கிருஷ்ணா மற்றும் பஞ்சகங்கை நதிகளின் சங்கமமான ஔதும்பார் மற்றும் அமராபூர் ஆகிய இடங்களுக்குச் சென்றார். அவர் அமராபூரில் பன்னிரண்டு வருடங்கள் தங்கியிருந்தார். அவர் மேற்கொண்ட தவங்களின் பலனால் அந்த இடம் மிகவும் புனிதம் வாய்ந்த இடமாக மாறி, அவருடைய பெயரால் நரசோபவாடி என்று அழைக்கப்படலாயிற்று. பின்னர் அவர் அமராபூரில் இருந்து கிளம்பி கானகாபூர் என்கிற இடத்திற்குச் சென்று 24 வருடங்கள் தங்கியிருந்தார். இந்த இடம் அவர் தவம் செய்வதற்கு ஏற்றவாறு இருந்ததால் அவருக்கு இது மிகவும் பிடித்தமான இடமாக இருந்தது. அவர் இங்கு நீண்ட நாட்கள் தங்கியிருந்

தமையால் அங்கு அவர் பல அற்புத நிகழ்ச்சிகளை நிகழ்த்திக் காட்டினார். ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி தன் பக்தர்களின் உடல் மற்றும் மன நோய்களை நீக்கி அருள் புரிந்ததால், அவர் ஒரு மகாசித்த புருஷர் என்று அனைவரும் வழிபட்டனர். இந்துக்கள் மட்டுமல்லாது முகமதியர்களும் அவரை சத்குருவாக வணங்கினர்.

அதற்கு பின்னர் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி மீண்டும் த்ரியம்பகேஸ்வருக்கு கும்பமேளாவில் கலந்து கொள்வதற்காக சென்றார். பிறகு கானகாபூருக்கு மீண்டும் வந்து சேர்ந்தார். அவர் தன்னுடைய பிறவிப்பணி முடிவுக்கு வந்து கொண்டிருப்பதை உணர்ந்து கொண்டார். கானகாபுரத்தில் வசிக்கும் மக்களிடம் விடைபெற்றுக் கொண்டு, அவருடைய சீடர்களில் ஏழு பேரை மட்டும் அழைத்துக் கொண்டு பீம-அமரஜ நதிகள் சங்கமிக்கும் இடத்திற்குச் சென்றார். அங்கிருக்கும் புனிதம் வாய்ந்த அஸ்வத்த மரத்தின் (அரச மரம்) கீழ் சில நிமிடங்கள் நின்றார். அந்த நதியின் ஓட்டத்தை சுட்டிக் காட்டி, இது கங்கை மற்றும் யமுனையின் சங்கமம் என்று கூறினார். **"இந்த அரச மரத்தை வணங்கிவிட்டு தியானம் செய்தால் உங்கள் பிரார்த்தனைகள் அனைத்தும் நிறைவேறும். உங்கள் வாழ்க்கை ஆசீர்வதிக்கப்படும்"** என்று கூறிவிட்டு, தான் இந்த உலகத்தை விட்டு கிளம்பப்போகும் தன் எண்ணத்தை வெளிப்படுத்தினார். ஸ்ரீ குருவின் முடிவைக் கேட்டவுடன் சீடர்களுக்கு தாங்கமுடியாத துயரம் ஏற்பட்டது.

வாழை இலையைக் கொண்டு படகு ஒன்று தயாரிக்கப்பட்டு அது மலர்களால் அலங்கரிக்கப்பட்டது. அது நீரோடையில் வைக்கப்பட்டது. ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி அதில் அமர்ந்து கொண்டவுடன் அவருடைய சீடர்கள் அவருக்கு பூஜைகள் செய்தனர். ஆனால் அவர்களுடைய மனது மிகுந்த பாரமாக இருந்தது. ஸ்ரீ குரு அவர்களை தேற்றும் விதமாக தான் ஸ்ரீசைலம் மல்லிகார்ஜுனர் வசிக்கும் கதலி வனத்துக்குச் (வாழைத்தோட்டம்) செல்லப் போவதாகக் கூறினார். தான் அங்கு சென்றடைந்துவிட்டதன் அடையாளமாக பூக்கள் இந்த நீரோடையில் மிதந்து வரும் என்று கூறினார். ஆச்சரியமிக்க வண்ணம் அவர் கூறியவாறே பூக்கள் நீரோடையின் போக்குக்கு எதிர்திசையில் வந்து சேர்ந்தது. சீடர்கள் அதை பிரசாதமாக ஏற்றுக்கொண்டு, ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி எப்போதும் தங்களுடன் இருப்பதாக எண்ணிக்கொண்டனர்.

ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம் என்பதால் அவர் சரஸ்வதி, விஷ்ணு, சிவன், கணபதி, நரசிம்மர் மற்றும் தத்தாத்ரேயர் ஆகியோரை பற்றி போதனைகள் செய்தார். சனாதன தர்மத்தைக் காக்க வேண்டிய பிராமணர்களை வழிநடத்தி தத்த சம்பிரதாயத்தை பற்றி பரப்புவதுதான்

அவருடைய அவதார நோக்கம். அதன் விளைவால், இந்த சம்பிரதாயம் மகாராஷ்டிரா முழுவதும் பரவியது. இந்துக்கள் மத்தியில் மதப் பற்று தாழ்ந்த நிலைக்குச் சென்று, இஸ்லாம் பரவத் தொடங்கிய நேரத்தில் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி மக்களுக்கு மறுமலர்ச்சி மற்றும் மன வலிமையை ஏற்படுத்தினார். அவர் தங்கியிருந்த இடங்களான நரசோபவாடி, ஔதும்பார் மற்றும் கானகாபூர் ஆகிய இடங்கள் புனித க்ஷேத்திரங்களாக மாறின. ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியின் அறிவுரை யாதெனில்:

**"மிகவும் குறைவான கால மனித வாழ்க்கையில், மனிதன் தன் பக்தியின் மூலம் தெய்வீகத்தை உணர்ந்து கொள்ள வேண்டும். உங்கள் வாழ்க்கை சத்குருவின் கிருபையால் பாதுகாப்பாக உள்ளது என்று உணர்ந்து கொள்ளுங்கள். உங்களுடைய புத்தி மற்றும் விவேகத்தால் தூய்மையான சிந்தனைகளை வளர்த்துக் கொள்ளுங்கள். எவரையும் உடலாலோ, மனதாலோ அல்லது வார்த்தையாலோ துன்புறுத்தாதீர்கள். உங்கள் அனைவருடைய ஆழ்மனதில் வசிக்கும் கடவுளை உணர்ந்து கொள்ள முயற்சி செய்யுங்கள்."**

இதை நாமும் கடைப்பிடித்து வாழ்ந்தால் ஸ்ரீ தத்தாத்ரேயரின் அருள் கிடைப்பது திண்ணம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**



அத்தியாயம் 8

# ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்

(கி.பி. *1149* - கி.பி.*1878* வரை)

நாம் இப்போது இந்த புத்தகத்தின் கதாநாயகனான ஸ்ரீ சமர்த்தர் பற்றி விரிவாக வரும் அத்தியாயங்களில் பார்ப்போம். கடலுக்கு அடியில் இருக்கும் பனிமலை எவ்வளவு பெரியதாக இருப்பினும் சிறிதளவு மட்டுமே வெளியே தென்படுவது போல, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சரித்திரம் சிறிதளவு மட்டுமே வெளியுலகத்திற்குத் தெரியவந்துள்ளது. அவருடைய சரித்திரத்தின் பெரும்பகுதி யாருக்குமே தெரியாது. ஆனால் தெரிந்த சிறிதளவு கூட பெரும் வியப்பை ஏற்படுத்தக்கூடிய ஒன்றாகவும், மகா சரித்திரமாக, காலத்தைக் கடந்த ஒன்றாக விளங்குகிறது. அவருடைய லீலைகளை ஒரு புத்தகத்தினுள் அடக்குவது வானத்தை ஒரு கைக்குள் அடக்குவதற்கு முயற்சி செய்வது போல் ஆகும். ஆனால் நமக்கு தெரிந்த சிறிதளவே மிக அற்புதமாகவும், உணர்ச்சியூட்டும் வகையிலும், அனைவருக்கும் ஒளியூட்டும் வகையிலும் அமைந்திருக்கும். இவற்றைக் கேட்டாலே, நாம் புனித கங்கையில் நீராடிய பலனைப் பெறலாம். நான் முன்பு கூறியது போலவே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பெருமைகளை முழுமையாக உணர்ந்துகொள்ள எவராலும் முடியாது. ஏனென்றால் அவர் சில சமயம் பார்ப்பதற்கு வினோதமாகவும், விசித்திரமாகவும் சாதாரண மனிதன் போல தோற்றம் அளிக்க மாட்டார். அவர் சிவபெருமான் போல வழக்கத்திற்கு மாறான வகையில் நடந்து கொள்வார். பாம்பை ஆபரணமாக தரித்துக் கொண்டு, மண்டை ஓடுகளை மாலையாக அணிந்து கொண்டு, விபூதியை உடல் முழுவதும் பூசிக்கொண்டு, வினோதமான-அமங்கலமான தோற்றங்களுடன் சிவன் காட்சியளிக்கவில்லையா? ஆனால் அவரே அனைத்து நற்குணங்களும் நிறைந்தவர்; கருணைமிக்கவர்; சர்வ ஞானம் நிறைந்தவர். சிவ மஹிமா ஸ்தோத்திரத்தில், புஷ்பதந்தா கந்தர்வர் சிவனின் மகிமைகளை இவ்வாறு கூறுகிறார்:




**அதீத: பம்தானம் தவ ச மஹிமா வாங்மனஸயோ:॰**
**அதத்வ்யாவ்றுத்த்யா யம் சகிதமபிதத்தே ஸ்ருதி |**
**ஸ கஸ்ய ஸ்தோதவ்ய:॰ கதிவிதகுண:॰ கஸ்ய விஷய:॰**
**பதே த்வர்வாசீனே பததி ன மன:॰ கஸ்ய ன வச:॰ ||**

(சிவபெருமானே! உங்களுடைய மகிமைகளை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. மனதால் கூட புரிந்து கொள்ள முடியாது. உங்களை யாரால் தான் வர்ணிக்க முடியும்? வேதங்களே பேச்சற்று நிற்கின்றன. விவரிக்க முடியாத ஒன்றை விவரிக்க முடியுமா? உங்கள் கருணையால், உருவமற்ற ஒன்று உருவம் எடுத்துள்ளீர்கள். உங்களுடைய புனிதம் வாய்ந்த இந்த உருவத்தை நாங்கள் தியானிக்கிறோம்).

இந்த ஸ்தோத்திரம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கும் பொருந்தும். இந்த புத்தகத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மகிமைகளின் சிறிதளவை மட்டுமே எடுத்துக் கூறினாலும், அந்த சிறு துளியே அமிர்தம் உண்ட பேரானந்தத்தை அனைவருக்கும் அளிக்கும்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 9

# ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மர்மமான முறையில் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளுதல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்ரீ தத்தாத்ரேயரின் மூன்றாவது கலியுக அவதாரம். அவர் நான்காவது அவதாரமாக தன்னை வெளிப்படுத்திக் கொண்டாலும் (வருடங்களை கணக்கில் கொண்டால் ஸ்ரீ மாணிக் பிரபு மூன்றாவது அவதாரம்) ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியே மீண்டும் அவதரித்திருப்பதாக கூறப்படுகிறது. ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி கானகாபூரை விட்டுக் கிளம்பி ஸ்ரீசைலத்தில் உள்ள கதலி வனத்துக்கு சென்றதாக நாம் முந்தைய அத்தியாயத்தில் பார்த்தோம். சில வருடங்களுக்குப் பிறகு அவர் இமயமலையில் உள்ள பத்ரிக்கு சென்றார். அங்கு

அவர் சமாதி நிலையில் இருந்தார். அவர் 300 வருடங்களுக்கு சமாதி நிலையில் இருந்ததாக அவருடைய பக்தர்கள் கூறுகின்றனர்.

ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியின் உடலை சுற்றி ஒரு பெரிய புற்று உருவானது. பின்னர் அவருக்கு என்னவானது என்பது யாருக்கும் தெரியாது. பல வருடங்களுக்குப் பிறகு ஒரு விறகு வெட்டியின் கோடாரி தற்செயலாக அந்த புற்றின் மீது விழுந்துவிட்டது. அந்த கோடரியின் மீது இரத்தக்கறை இருப்பதை கண்ட விறகு வெட்டி அதிர்ச்சி அடைந்தான். என்ன ஒரு அதிசயம்! அந்த புற்றினுள் ஒரு யோகி தவம் செய்து கொண்டிருந்தார். அந்த யோகி சமாதி நிலையில் இருந்து எழுந்து, தன் கண்களை மெதுவாகத் திறந்து பயந்து நடுங்கிக் கொண்டிருந்த விறகு வெட்டியைப் பார்த்தார். அந்த யோகி அன்போடு மெதுவாக அவனிடம் பேசத் துவங்கினார். **"குழந்தாய்! நடந்தவைகளை எண்ணி நீ வருத்தப்படாதே! நான் இந்த உலகத்தில் மீண்டும் தோன்றி என் பணிகளை துவக்க வேண்டிய நேரம் வந்துவிட்டது. இதுதான் கடவுளின் விருப்பம்"** என்றார். (ஒரு சிலர் இந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் ஸ்ரீசைலத்தில் உள்ள கதலிவனத்தில்தான் நடைபெற்றது என்றும், ஸ்ரீ ஸ்வாமிகள் புற்றிலிருந்து வெளியே வந்த பின்னர் மற்ற இடங்களுக்கு பயணித்தார் என்று கூறுகின்றனர். ஆனால் இதில் எது சரி என்பதை நாம் யோசிப்பது அல்லது விவாதிப்பது தேவையற்றது.)

புற்றில் இருந்து வெளியே வந்தது ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி அல்ல, அது இன்னொரு அவதாரமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்! கோடாரி விழுந்ததால் ஏற்பட்ட காயத்தின் தழும்பு அவர் தொடையில் இருப்பதை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பல பக்தர்கள் கவனித்துள்ளனர். இமயமலையில் உள்ள பல குகைகளில் இன்றும் பல யோகிகள் தவம் செய்து கொண்டிருப்பதாக பல நூல்கள் வாயிலாக நாம் அறிந்திருக்கிறோம். இன்றும் பல யோகிகள் தங்கள் சிஷ்ய கூட்டங்களுடன் வயதுகளைக் கடந்து சமாதி நிலையில் அங்கு இருக்கின்றனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் எறும்புப் புற்றில் இருந்து வெளியே வந்தவுடன் தன் சுற்றுப்பயணத்தை கி.பி.1758 இல் இமயமலையில் உள்ள பல்வேறு பகுதிகளில் துவங்கினார். பின்னர் மற்ற இடங்களுக்குச் சென்றார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வரலாற்றை எழுதிய பலருக்கும் அவரின் இளமைக் காலங்கள் பற்றித் தெரியாது. ஆனால் அவருடைய முக்கியமான சீடர்களில் ஒருவரான ஸ்வாமி சுத மஹராஜ் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கிருஷ்ணரைப் போல எட்டு வயது சிறுவனாக செலிகெடா (உத்திர பிரதேசம்) என்னும் இடத்தில் முதலில் தோன்றினார் என்கிறார். இது நடைபெற்ற வருடம் கி.பி.




*1149* என்று கணித்துள்ளனர். செலிகெடாவில் ஸ்ரீ ஸ்வாமியின் வெளிப்பாடு பின்வருமாறு நிகழ்ந்தது என்று கூறப்படுகிறது: **"ஹஸ்தினாபுரம் (பஞ்சாப்) என்னும் ஊருக்கு அருகில் செலிகெடா என்கிற கிராமம் இருக்கிறது. அங்கு விஜய் சிங் என்கிற குழந்தையுடன் கோலி விளையாட ஸ்ரீ ஸ்வாமிகள் பூமியை பிளந்துகொண்டு எட்டு வயது சிறுவனாக தன்னை வெளிப்படுத்திக் கொண்டார்"**. இந்த நிகழ்ச்சி சித்திரை மாதம் சுத்த துவிதியை அன்று நடைபெற்றதால் ஒவ்வொரு ஆண்டும் இந்த நாளை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் **"பிரக்ரித்தி தினம்"** (வெளிப்பாடு தினம்) ஆக கொண்டாடப்படுகிறது. பல காலங்களுக்கு முன்னர் நடைபெற்ற இந்த நிகழ்ச்சியை எப்படி நம்புவது என்கிற சந்தேகம் எழுந்தபோது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரே இதை உண்மை என்று நிரூபித்தார்.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், சுத மஹராஜை அழைத்து தன்னருகில் அமருமாறு கூறினார். **"இனி உன் குடும்ப பொறுப்புகளை விட்டு விட்டு என்னுடைய புகழை பரப்ப வேண்டியதுதான் உன் பணி"** என்று கூறியவுடன் ஸ்வாமி சுத மஹராஜுக்கு கண்ணீர் பொங்கி வழிந்தது. உடனே ஸ்ரீ ஸ்வாமி அவரிடம், **"என்ன அழுகிறாயா? பார் எனக்கு எவ்வளவு பெரிய வயிறு இருக்கிறது. உன் கையை இங்கு வை"** என்று கூறியவுடன் அவருக்கு தன் பூர்வ ஜென்மங்கள் அனைத்தும் நினைவுக்கு வந்தன. விஜய் சிங் வேறுயாருமல்ல ஸ்வாமி சுத மஹராஜ்தான் என்கிற உண்மை அன்று ஸ்ரீ ஸ்வாமிகளே அவருக்கு உணர்த்தினார்.

அஹமது நகரைச் சேர்ந்த நானா ரேக்கி என்கிற ஜோதிடர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஜாதகத்தை அவருடைய கைரேகையை பார்த்துக் கணித்துள்ளார். அதை ஸ்ரீ ஸ்வாமிகளே சரியான கணிப்பு என்று அங்கீகரித்துளார். சுத மஹாராஜ் நானா ரேக்கியை அக்கல்கோட்டுக்கு அழைத்து வந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் ஜாதகத்தைக் கணிக்குமாறு அவரிடம் கூறினார். நானா ஜாதகத்தை சில நாட்களில் கணித்து ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சமர்ப்பணம் செய்தார். அச்சமயத்தில் அங்கு பஜனை நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகள் அந்த ஜாதகத்தை வாங்கி பூக்கூடையில் தூக்கி எறிந்தார். பஜனை முடிந்தவுடன் ஒரு பக்தரிடம் ஜாதகத்தைக் கொண்டு வரும்படி கூறினார். அப்போது அதன் மீது சந்தனம் குங்குமம் வைக்கப்பட்டு அட்சதைகள், துளசி, பூக்கள் தோன்றியிருந்தன. அதை வாங்கிப் பார்த்த ஸ்ரீ ஸ்வாமிகள் மிகவும் மகிழ்ச்சி அடைந்து நானாவின் வலது கையின் மீது தன் கரத்தால் ஓங்கி அடித்தார். அதில் விஷ்ணு பாதம் மற்றும் ஆத்ம லிங்கத்தின் குறிகள் தோன்றின. அவை நானாவின் கடைசி காலம் வரை மறையாமல் அப்படியே இருந்தன.





ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஜாதகம் கணிக்கப்பட்டிருந்தாலும் அவர் பிறந்த இடமோ, பெற்றோர்கள் பற்றிய விவரங்களோ, அவருடைய உண்மையான பெயரோ யாருக்கும் தெரியாது. எவரால்தான் பிறப்பற்ற ஒருவரின் பிறப்பை கண்டுபிடிக்க முடியும்? பின்னாட்களில் கூட அவர் தன் உண்மையான பெயர், வயது, பெற்றோர்கள் பற்றி விவரமாகக் கூறியதில்லை. ஸ்ரீ ஸ்வாமியின் வயதைக் கூட யாராலும் சரியாக கூற முடியவில்லை. அவருக்கு 300 வயதுக்கு மேல் இருக்கலாம் என்று ஊகிக்கின்றனர். அதனால் அவர் புராண புருஷர் என்று அழைக்கப்படுகிறார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒரு அவதூதர் (அவதூதர்-ஆன்மிகத்தில் மிகவும் உயர்ந்த நிலையில் இருப்பவர். அவர்கள் அனைத்து படைப்புகள் மீதும் எந்தவித பேதமும் இன்றி அன்பைப் பொழிவர். அவர்களுடைய சிறு தொடுதல் கூட பல மாற்றங்களை உருவாக்கும். பகவத்கீதையில் கூட அவர்களைப் பற்றி உயர்வாக கூறப்பட்டுள்ளது), மகாயோகி, ஞானி, அனைத்து சக்திகளையும் தன்னுள் கொண்டவர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம் என்பதால் அனைத்துவிதமான தெய்வீக குணங்களையும் தன்னுள் கொண்டிருந்தார்.

ஒருமுறை வெளிநாட்டவர் (பார்சி) ஒருவர் வேலை நிமித்தமாக கொல்கத்தாவிலிருந்து மும்பைக்கு வந்திருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழைக் கேள்விப்பட்டு அவரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட்டிற்கு வந்திருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளை சந்தித்து பல விஷயங்களைக் கேட்டு தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலில் வந்திருந்தார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமிகளை பார்த்தவுடன் அவர் பேச்சற்று அவர் முகத்தையே பார்த்துக் கொண்டே இருந்தார். யார்தான் அந்த தேஜஸ்வியின் முகத்திலிருந்து தங்கள் பார்வையை அகற்ற முடியும்! சில நிமிடங்களுக்குப் பின்னர் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"நீங்கள் எங்கிருந்து வந்திருக்கிறீர்கள்?"** என்று கேட்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் அவரிடம், **"நான் முதலில் கதலிவனத்திருந்து என் பயணத்தை துவங்கினேன். நான் பின்னர் பல இடங்கள் சுற்றித் திரிந்த போது கொல்கத்தா போன்ற இடங்களுக்குச் சென்றேன். அங்கிருந்த காளியை தரிசனம் செய்தேன். பின்னர் கங்கைக் கரையோரம் உள்ள ஹரித்வார், கேதார், கங்கோத்ரி, பத்ரி, துவாரகா, அயோத்யா போன்ற இடங்களில் சஞ்சாரம் செய்துவிட்டு கோதாவரி நதிக்கரையை வந்தடைந்தேன். சில நாட்கள் மங்கள்வேடாவிலும் சில நாட்கள் ஹைதராபாத்திலும் தங்கியிருந்தேன். பின்னர் பண்டரிபுரம், பேகம்பூர் மற்றும் மோஹோல் ஆகிய இடங்களுக்கு சென்றேன். இந்த இடங்களிலெல்லாம் சில**





**வருடங்கள் வாசம் செய்தபின்னர் அக்கல்கோட் வந்தடைந்தேன். இங்கு வந்தடைந்த பின்னர் நான் எங்கும் செல்லவில்லை"** என்று கூறினார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் தெய்வீக தோற்றத்தைப் பற்றி யார்தான் விவரிக்க முடியும்? அனைத்து வார்த்தைகளும் செயலற்று போகும், மனிதனின் எல்லாவித முயற்சிகளும் தோல்வி அடைந்துவிடும். மிகவும் முயற்சி செய்தால் அவருடைய 'வெளிப்புற தோற்றத்தை மட்டுமே விவரிக்க இயலும் அல்லது மேலோட்டமாக மட்டுமே கூறலாம். அவருக்குள் பொதிந்திருக்கும் மகிமைகளை நம் சாதாரண கண்கள் எப்போதாவது உணரும். மனித கண்களுக்கு அவை திகைப்பூட்டும் விதமாகவே அமைந்திருக்கும். அவருடைய அசாதரணமான குணங்கள், வினோதமான வழிமுறைகள் மற்றும் விசித்திரமான பழக்கங்கள், அவருடைய பேச்சு, செயல் ஆகியவை அவர் ஒரு பித்தனோ என்பது போலத் தோன்ற வைக்கும். ஆனால் இவை அனைத்தும் ஒரு அவதூதருடைய பண்புகள். அவர்கள் நம்மைப் போல் இந்த பூமிக்கு தொடர்புடைய வஸ்துக்களுக்கு தொடர்பான சமநிலையில் இல்லாமல் எப்போதும் வேறொரு நிலையில் நிலைத்திருப்பார்கள். அவர்களுடைய செயல்களுக்கு சரியான அர்த்தம் கற்பிப்பதும் அவற்றை பற்றிப் பேசுவதும் எளிதான காரியமல்ல. அவர்களுடைய நெருங்கிய சீடர்கள் அப்பேச்சுக்களுக்கும் சைகைகளுக்கும் சில அர்த்தங்கள் கூறினாலும், அவை அவர்களின் அனுமானம்தான். ஸ்வாமி சமர்த்தர் தான் கூறியவைகளுக்கு விளக்கங்கள் அளித்ததில்லை. அதைப்பற்றி அவர் கவலைப்பட்டதும் இல்லை. ஆன்மிகத்தில் நல்ல முன்னேற்றம் அடைந்தவர்கள் கூட அவர் கூறுவதை மிகவும் அரிதாகத்தான் புரிந்து கொள்வர்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மகிமைகள் நிறைந்த சூரியனைப் போலத் தோன்றினார். அவருடைய முக்கியமான சீடர்களுள் ஒருவரான மாதவ சாஸ்திரி அவரை கீழ்வரும் கவிதையால் விவரிக்கிறார்:

**"பிறப்பற்றவரே, இல்லாத இடத்திலிருந்து வெளியானவரே, சூரியனைப் போல அற்புதமானவரே, கடவுள்களால் போற்றப்படுபவரே, அழகான உடலும் ஒளிபொருந்திய கண்களும் கொண்டவரே, கருணை நிறைந்தவரே, பௌர்ணமி நிலவைப் போல முகமுடையவரே, முழங்காலுக்கு கீழ் வரை நீளமான கைகள் கொண்டவரே, இடுப்பில் கௌபீனம் மட்டும் அணிந்தவரே, வாழைத்தண்டைப் போல மிருதுவான தொடைகள் உடையவரே, தாமரைப் போல மிருதுவான பாதங்கள் உடையவரே"** என்று பலவாறு அழகாக வர்ணிக்கிறார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய முகம் எப்போதும் தேஜஸுடன் காணப்படும். பேரின்ப நிலையே முற்றும் உணர்ந்த ஆத்மாக்களின் தனித்துவமான அடையாளம்.





அவருடைய முகத்தை சுற்றி எப்போதும் ஒளிவட்டம் சூழ்ந்திருக்கும். அந்த ஒளிதான் அவருடைய தெய்வீக ஆற்றல். அவர் முதன்முதலில் தோன்றும் போதே வயது அதிகம் ஆனவராக இருந்தாலும், இளமையாகத்தான் தோற்றமளிப்பார். அவர் எப்போதும் பிரகாசத்தோடும் மலர்ச்சியோடும் காணப்பட்டார். அவருடைய உடலில் சுருக்கங்களே இருக்காது. அவர் ஆஜானுபாகுவாக ஆறு அடிக்கு மேல் உயரத்துடன் இருப்பார். அவர் பரந்த தோள்களுடன், அழகு நிறைந்தவராகவும், கோதுமை நிறத்தில் இருப்பார். அவருக்கு பெரிய காதுகள். காதுகளின் மடல்கள் மிகவும் மெலிதாகவும் அவர் அசையும் போதும் காற்று வேகமாக வீசும் போதும் அவையும் சேர்ந்து அசையும். கணபதியைப் போன்றே இவருக்கும் பெரிய வயிறு இருக்கும். அவருடைய நெற்றி அகலமாகவும், புருவங்கள் நரைத்துக் காணப்படும். அவருடைய கண்கள் நம் ஆன்மாவை துளைப்பது போல தீர்க்கமாக இருக்கும். நம் அனைவருடைய எண்ணங்களும் அவருக்கு வெட்ட வெளிச்சமாக தெரியும். அவருடைய ஒளிபொருந்திய கண்கள் நிறைப்பேரறிவு நிறைந்தது. அவருடைய முழு உருவமும் தனித்துவமான, கம்பீரமான பிரமிப்பூட்டும் வகையில் இருக்கும். அவர் நடக்கும் போது மிகவும் வேகமான அடிகள் எடுத்து வைப்பார், அதனால் அவருடைய வேகத்திற்கு எவராலும் ஈடுகட்ட முடியாது. அவருடைய தோற்றத்தைப் பார்த்து அவர் ஒரு புராண புருஷர் என்றோ பண்டைய காலத்து முனிவர் என்றோ மஹாமுனிவர் என்றோ கூறத்தான் முடியுமா என்ன!

அவர் நெற்றியில் எப்போதும் சந்தனத் திலகம் இருக்கும். அவர் எப்போதும் கௌபீனம் (கோவணம்) மட்டுமே அணிந்து கொண்டிருப்பார். அவருடைய பற்கள் வரிசையாக இருக்கும். அவர் துளசி மற்றும் ருத்ராக்ஷ மாலைகளை சூடிக்கொண்டு, ரத்தினம் பதித்த காதணிகள் அணிந்து கொண்டிருப்பார். அவர் எவருக்கும் புரியாத சக்தி வாய்ந்த மந்திரங்களை முணுமுணுத்துக் கொண்டே இருப்பார் அல்லது ஒரு சில வார்த்தைகள் மட்டுமே பேசுவார்.

அவர் தன் பக்தர்களை கெட்ட வார்த்தைகளால் வசை பாடுவது வழக்கம். உண்மையில் அது அவருடைய மகா ஆசீர்வாதம். இந்து, முஸ்லிம்,பார்சிகள் மற்றும் கிறித்துவ மதம் போன்ற அனைத்து மதத்தவர்களும் அவர்பால் ஈர்க்கப்பட்டனர். அதேபோல் அவரும் கோவில்களுக்கும் மடங்களுக்கும் செல்வது போலவே மசூதிக்கும் செல்வார்.

அவரைக் காணும் பேரதிர்ஷ்டம் கொண்ட பக்தர்கள் அவரை பல்வேறு விதங்களிலும் தோரணைகளிலும் (மரத்தடியில் அமர்ந்தவாறு, வேலிக்கருகில்

படுத்தவாறு, கோவிலுக்குள், அல்லது ஆற்றங்கரை ஓரமாக) தரிசனம் பெற்றுள்ளனர். எப்படியிருப்பினும் அவருடைய தோற்றம் கம்பீரமாக மதிப்புமிக்க வகையில் இருக்கும். அவரை முதன்முறையாக தரிசிப்பவர்களால் கூட அவருடைய உயர்ந்த ஆன்மிக நிலையை உணர்ந்து கொள்ள முடியும். அவர் தன் இஷ்டம் போல இனிமையாகப் பேசுவார். அவருடைய வார்த்தைகள் இனிமை பொருந்தியதாகவும், சிலசமயம் மிகவும் கெட்ட வார்த்தைகள் நிறைந்ததாகவும் இருக்கும். அவருடைய முகம் கருணை, அன்பு மற்றும்



இரக்கம் நிறைந்ததாக இருக்கும். சிலசமயம் நரசிம்மரைப் போல கோபமான உருவத்தோடும் இருப்பார். அவருடைய உணர்ச்சிகள் எப்போதும் மாறிக்கொண்டே இருக்கும். அவருடைய செயல்கள் அல்லது வார்த்தைகள் அல்லது நடவடிக்கைகள் ஆகியவற்றை மற்றவர்களால் புரிந்துகொள்ள முடிகிறதா இல்லையா என்பதைப் பற்றி அவர் கவலைப்பட்டதே இல்லை. அவர் எப்போதும் தன்னுடைய உலகத்தில் குழந்தை போலவே இருப்பார். உலகியல் வாழ்க்கையில் துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் மக்களை காப்பதிலேயே அவருடைய கவனம் இருக்கும். அவருடைய அவதாரம் தத்த சம்பிரதாயத்துடன் தொடர்புள்ளதால், அவருடைய அவதாரமும் அதன் நோக்கத்தை நிறைவேற்றுவதற்காகவும், மனித நலனுக்காகவும் நிகழ்ந்தது.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் திருவுருவப் படங்களைப் பார்த்தால் அதில் அவர் தன் கையில் ஒரு கோலிகுண்டை வைத்திருப்பார். **"பிரம்மாண்டம் முழுவதும் தன் கைக்குள் அடக்கம் என்பதையும், தன்னால் முடியாதது எதுவும் இல்லை"** என்பதையும் உணர்த்துவதாக இத்தோற்றம் உள்ளது.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சமாதி நிலையில் இருந்து வெளியே வந்த பின்னர், வடக்கில் இருந்து தெற்கு வரை அனைத்து இடங்களுக்கும் சுற்றுப்பயணம் மேற்கொண்டார் (இமயமலையில் இருந்து கன்னியாகுமரி வரை). அவருடைய பயண விவரங்கள் யாருக்கும் சரியாகத் தெரியாது. அவர் ஒரே நேரத்தில் பல இடங்களில் தோன்றினார் என்றும் கூறப்படுகிறது. மேலும் அவருடைய வாழ்க்கைச் சரித்திரத்தில் சில பகுதிகளை எவரும் பதிவிடாமல் விட்டது நம்முடைய துரதிர்ஷ்டம். அந்த பயண நேரங்களில் அவரைப் பார்த்த சில பக்தர்கள் சில குறிப்புகள் அளித்துள்ளனர். அப்போது அவருடைய பெயர் **"ஸ்வாமி சமர்த்தர்"** என்று இல்லை. அவரை சிலர் **"சஞ்சல் பாரதி"** (அலைந்து கொண்டிருக்கும் ஸ்வாமி) அல்லது **"நரசிம்ம பாரதி"** என்று கூறுவர். அவர் எங்கு சென்றாலும் அவருடைய ஆஜானுபாகுவான தோற்றத்தினாலும், தனித்துவமான குணங்களினாலும், அவருடைய தெய்வீக சக்திகளினாலும் தன்னை வெளிப்படுத்திக் கொள்வார். ஸ்ரீ ஸ்வாமி பல இடங்களில் அலைந்த போது நடைபெற்ற சுவையான லீலைகளை நாம் வரும் அத்தியாயங்களில் படித்து ரசிக்கலாம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 10

# இமயமலை லீலைகள்

**சந்நியாசிக்கு தத்த தரிசனம் அளித்தல்:**

ஒரு துறவி இமயமலையில் ஸ்ரீ தத்தரை தரிசிக்க வேண்டும் என்கிற நோக்கத்தில் ஒரு குகையில் அமர்ந்து கொண்டு தனிமையில் கடுந்தவம் மேற்கொண்டார். அது ஒரு கடுமையான மார்கழி குளிர் காலம். மிகவும் கடுமையாக முயற்சி செய்தபோதும் எந்தவித முன்னேற்றமும் ஏற்படவில்லை. மிருகங்களும், வேசிகளும் கூட நற்கதி பெறும்போது தனக்கு எந்தவித முன்னேற்றமும் ஏற்படவில்லையே என்று அவர் வருந்தினார். சில நாட்களுக்குப் பின்னர் அவரது மனக்கண்ணில், **"இமய மலையில் ஒரு மாமரம் இருக்கிறது. அதனருகில் ஒரு குகை இருக்கிறது. அங்கு சென்றால் தத்த தரிசனம் பெறலாம்"** என்கிற ஒரு காட்சி தோன்றியது. உடனே அவருடைய உறக்கம் கலைந்தது. அடுத்தநாள் அந்த சந்நியாசி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அமர்ந்திருந்த குகை வாயிலுக்குச் சென்றார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பதிலாக மூன்று தலைகளுடன், ஆறு கரங்களுடன், ஜடாமுடி மற்றும் பிறை சந்திரனுடன் அழகான மாலை அணிந்து கொண்டு பட்டு பீதாம்பரத்துடன் ஒரு தெய்வீக உருவத்தைக் கண்டார். ஆனந்தமடைந்த சந்நியாசி அவரை நமஸ்கரித்து விட்டு, **"தத்த தரிசனத்தால் புண்ணியம் அடைந்தேன். என் தவம் பலன் அளித்துவிட்டது. என் அனைத்து ஜென்மங்களிலும் உங்களுடைய பக்தனாக பிறந்து உங்களுக்குச் சேவை செய்ய வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தை பற்றிக்கொண்டார். அன்பின் மறு உருவமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவரை தூக்கி எழுப்பி, **"அப்படியே ஆகட்டும். எப்போதும் எனக்கு சேவைகள் செய்து வாழ்வாயாக"** என்று கூறி ஆசீர்வதித்துவிட்டு மறைந்துவிட்டார். சந்நியாசி தன் குடிலுக்கு வந்து எப்போதும் ஸ்ரீ ஸ்வாமிகளையே நினைத்துக்கொண்டு தன் வாழ்நாளை கழித்தார்.

**சீன தம்பதி:**

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இமயமலையில் உள்ள அடர்ந்த காட்டுப் பகுதியில் நடந்து சென்று கொண்டிருந்த போது ஒரு சீன தம்பதி மூலிகைகளை

சேகரித்துக் கொண்டிருப்பதை பார்த்தார். அவர்கள் ஸ்ரீ ஸ்வாமி கௌபீனம் மட்டும் அணிந்து கொண்டிருப்பதை வினோதமாகப் பார்த்தனர். அவரை கேலி செய்து விட்டு மரங்களுக்கு பின் சென்று இருவரும் காதலில் ஈடுபடத் துவங்கினர். அப்போது ஸ்ரீ ஸ்வாமி கூர்மையாக அவர்களைப் பார்த்தவுடன் அந்த பெண் ஆணாக மாறிவிட்டாள் (ஒரு சிலர் இருவருடைய பாலினமும் மாறிவிட்டன அதாவது 'ஆண் பெண்ணாகவும், பெண் ஆணாகவும் மாறிவிட்டது என்று கூறுகின்றனர்). இருவரும் என்ன நடக்கிறது என்று புரியாமல் அதிர்ச்சியடைந்தனர். அவர்கள் ஸ்ரீ ஸ்வாமியின் புனிதத்தன்மையை உணர்ந்துகொண்டு தாங்கள் துடுக்குத்தனத்துடன் பேசியதை மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் எவ்வளவு விரைவாக கோபத்தை வெளிப்படுத்துகிறாரோ அதே வேகத்தில் சாந்தமாகவும் மாறிவிடுவார். கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமி அவர்களை மன்னித்தவுடன் அந்த பெண் மீண்டும் தன் பழைய உருவத்தைப் பெற்றாள். ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களை ஆசீர்வதித்து **"என்னையே எப்போதும் நினைத்துக் கொண்டு சேவை செய்யுங்கள். நல்வாழ்வு பெறுவீர்கள்"** என்று கூறி அனுப்பி வைத்தார். அவர்கள் இருவரும் தங்கள் நாட்டுக்குச் சென்று நன்மக்களைப் பெற்று ஸ்ரீ ஸ்வாமியின் பக்தர்களாக வாழ்ந்தனர். என்ன ஒரு விசித்திரமான திருவிளையாடல்! ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரால் மட்டுமே இதுபோன்ற லீலைகளை நிகழ்த்த முடியும்!

**மானை வேடர்களிடமிருந்து காப்பாற்றுதல்:**

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மாமரத்தின் கீழ் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். அப்போது ஒரு குட்டி மான் பயந்து நடுங்கிக் கொண்டு அவரிடம் அடைக்கலம் கேட்டு ஓடி வந்தது. அந்த மானை சில வேடர்கள் வேட்டையாட துரத்திக்கொண்டு வந்தனர். ஸ்வாமி சமர்த்தர் அந்த மானை அன்போடு அரவணைத்துக் கொண்டார். துரத்திக்கொண்டு வந்த வேடர்கள் அந்த மானை அவர்களிடம் விடக்கோரி துப்பாக்கியை வைத்துக்கொண்டு மிரட்டினர். ஏதுமறியா இந்த வாயில்லா ஜீவனை ரட்சிப்பதைத்தானே ஸ்ரீ ஸ்வாமி விரும்புவார்! கோபம் அடைந்த வேடர்கள் தங்கள் துப்பாக்கியால் ஸ்வாமியை சுட முயன்ற போது அவர்களுடைய துப்பாக்கி வேலை செய்யவில்லை. இதைக் கண்டு அவர்கள் அனைவரும் திகைப்படைந்து நின்றனர். மேலும், அவர்கள் அனைவரும் தங்கள் இடத்தை விட்டு நகர முடியாதபடி ஸ்தம்பனம் ஆகியிருந்தனர். அப்போதுதான் அவர்களுக்கு இந்த மனிதர் சாதாரணமானவர் இல்லை என்ற ஞானம் ஏற்பட்டது. வேடர்கள்

அனைவரும் தங்களுடைய நடத்தைக்காக மன்னிப்பு கேட்டுக்கொண்டனர். ஸ்வாமி அவர்கள் அனைவரையும் மன்னித்தருளி, இனி மிருகங்களை துன்புறுத்தக் கூடாது என்று கூறி அருளினார்.

**மான் ஜோடிக்கு அருள் புரிதல்:**

மேலே கூறியுள்ள நிகழ்ச்சி நடைபெற்ற பின் ஒரு மான் தம்பதி தன் குட்டியை தேடிக்கொண்டு அங்கு வந்தன. அவைகளை கண்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. அவர் அந்த மான்களிடம்: **"நீங்கள் உங்கள் முந்தைய பிறவியில் கானகாபுரில் பிறந்து மிகவும் தெய்வ பக்தியுள்ள பிராமணர்களாக வாழ்ந்து வந்தீர்கள். ஆனால் துறவிகளை அவமதித்ததால் இந்த பிறவியை எடுத்துள்ளீர்கள்"** என்று கூறிக்கொண்டே அந்த மானின் தலையைத் தொட்டார். முன்ஜன்ம புண்ணியங்களினால் அந்த மானுக்கு பேசும் திறன் கிடைத்தது. உடனே ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் நமஸ்கரித்து விட்டு "ஸ்வாமி, நான் பிராமணனாக பிறந்த போது உங்களுக்கு சேவை செய்யும் பாக்கியம் பெற்றேன். துறவிகளை துன்புறுத்தியதால் நான் ஏழு பிறவிகள் எடுத்தேன். முதலாவது வியாதிகள் நிறைந்த பிராமணராக. அடுத்து ஒரு எருதாக பிறந்து துன்பங்கள் அனுபவித்தேன். மூன்றாவதாக வைதுர்ய நகரத்தில் ஒரு சூத்திரனாகப் பிறந்து என் மனைவியுடன் ஏழ்மையை அனுபவித்தேன். நான்காவது ஒரு இசைக்கலைஞனாக பிறந்து வாழ்க்கையில் பல துக்கங்களைச் சந்தித்தேன். நான் காசியில் தங்கியிருந்த போது பாலியல் ரீதியான பாவங்கள் செய்தேன். அதனால் அடுத்த பிறவியில் கழுதையாகப் பிறந்தேன். ஆறாவது பிறவி ஒரு பொற்கொல்லன். நான் அப்போது தங்கத்தைத் திருடினாலும் என் மனைவி துறவிகளுக்கு தாராளமாக செல்வத்தை வழங்கியதால் என் அடுத்த பிறவியில் மானாகப் பிறந்து உங்களை தரிசிக்கும் புண்ணியம் பெற்றேன்" என்று கூறி முடித்தது. இதற்கிடையில் தொலைந்துபோன மான்குட்டி தன் பெற்றோர்களிடம் வந்து சேர்ந்தது. குடும்பமாக இணைந்தவுடன் அவை மிகுந்த மகிழ்ச்சி அடைந்தன. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அடுத்த பிறவியில் நீங்கள் மனிதர்களாக பிறந்து தென்பகுதியில் என்னுடைய தரிசனம் பெறுவீர்கள் என்று கூறி ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார்.

**புலிகளுக்கு அளித்த வரம்:**

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இமய மலையில் வசித்துக் கொண்டிருந்த போது குகையில் அமர்ந்து கொண்டு துறவிகளுடன் ஆன்மிக சம்பாஷணையில்

ஈடுபடுவார். அப்போது இரண்டு புலிகள் குகை வாயிலில் அமர்ந்து கொண்டு அங்கு நடைபெற்றுக்கொண்டிருந்த சம்பாஷணைகளை உன்னிப்பாக கவனித்துக் கொண்டிருந்தன. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பேச்சைக் கேட்டால் யாருக்குத்தான் வசீகரம் ஏற்படாது? அதற்கு அந்த புலிகளும் விதிவிலக்கல்ல. அப்போது ஸ்ரீ ஸ்வாமிகளின் பார்வை அப்புலிகளின் மீது விழுந்தது. அவர் அந்த புலிகளிடம், **"ஞானிகளே, நீங்கள் ஏன் இந்த குகை வாயிலில் இருளில் அமர்த்திருக்கிறீர்கள்? யானை மீது சவாரி செய்து வெற்றி வாகை சூடுங்கள்"** என்றார்.ஸ்ரீ ஸ்வாமிகள் புலிகளை உற்றுப் பார்த்தவுடன் அவை பேசும் திறன் பெற்றன. அந்த புலிகள், **"ஸ்வாமி, உங்கள் தரிசனத்தால் புண்ணியம் அடைந்தோம். நாங்கள் இருவரும் ஏன் இப்படியொரு புலி ஜென்மம் எடுத்தோம்?"** என்று கேட்டன. **"நீங்கள் உங்கள் பூர்வ ஜென்மத்தில் படித்த சிறந்த பண்டிதர்களாக இருந்தீர்கள். ஆனால் மிகவும் அகங்காரம் கொண்டவர்களாக மாறி பிராமணர்களையும் துறவிகளையும் மிகுந்த துன்பத்திற்கு உட்படுத்தினீர்கள். அவை எந்த அளவிற்கு என்றால், அவர்களை வீழ்த்திவிட்டு அவர்களிடம் நீங்கள் வெற்றி பெற்றுவிட்டதாக கடிதம் பெற்றுக் கொள்வீர்கள். இந்த அகங்காரம் நிறைந்த நடத்தைகள்தான் உங்களுடைய புலி ஜென்மத்திற்குக் காரணம்"** என்றார். இதைக் கேட்டவுடன் அவ்விரண்டு புலிகளும் நமஸ்கரித்து தங்கள் இருவரையும் மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டன. கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமி அவைகளிடம், **"இந்த புலி ஜென்மத்தில் உங்களுக்கு எந்தவித முன்னேற்றமும் இருக்காது. உங்கள் அடுத்தப் பிறவியில் நீங்கள் இருவரும் காசியில் நற்பிராமணர்களாக பிறந்து ஞானம் பெற்று, பல தெய்வீக சேவைகள் புரிந்த பின்னர் மோக்ஷம் அடைவீர்கள்"** என்று கூறி ஆசீர்வதித்தார்.

இவ்வாறு அவர் இமயமலை பகுதியில் பல அற்புதமான லீலைகள் நிகழ்த்தியுள்ளார். அவர் எங்கு சென்றாலும் குகைகளுக்குள் தவத்தில் இருக்கும் யோகிகள் வெளியே வந்து அவருக்கு மரியாதை செலுத்திவிட்டு, தங்கள் யோகப் பாதையில் ஏற்படும் சந்தேகங்களுக்கு தீர்வு பெற்றுக் கொள்வர். அவர் இமய மலையில் அமைந்திருக்கும் ஹரித்வார், ரிஷிகேஷ், பத்ரிநாத், கேதார்நாத், கங்கோத்ரி மற்றும் யமுனோத்ரி போன்ற அனைத்து புண்ணிய க்ஷேத்திரங்களுக்கும் பயணம் செய்து பல பக்தர்களை காத்து ரட்சித்திருக்கிறார். இமய மலையில் இருந்த அதே நேரத்தில் பல இடங்களிலும் சஞ்சாரம் செய்திருக்கிறார். அப்படியென்றால் அவர் இமயமலை பகுதியில் இந்த குறிப்பிட்ட காலகட்டத்தில் மட்டும்தான் தங்கியிருந்தார் என்று குறிப்பிட்டு கூற முடியாது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 11

# புரி ஜெகன்நாதர் ஆலயத்திற்கு வந்த யாத்ரீகர்கள்

## அல்வணிபுவாவின் காய்ச்சலை குணப்படுத்துதல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பயணங்களின் போது புரி வந்தடைந்தார். அவர் அங்கு தங்கியிருந்தபோது, அல்வணிபுவா என்கிற பக்தரும் அவருடைய நண்பர்களும் பரோடாவிலிருந்து யாத்திரையாக புரிக்கு வந்திருந்தனர். துரதிர்ஷ்டவசமாக அவர்கள் அனைவரும் மிகுதியான காய்ச்சலால் அவதியுற்றனர். அவர்களுக்கு எந்த மருத்துவ உதவியும் கிடைக்கவில்லை. அனைவரும் இறந்து விடுவோமோ என்கிற பயத்தில், தங்கள் நம்பிக்கையை இழந்து விட்டனர். இறைவனிடம் பிரார்த்தனை செய்வதைத் தவிர வேறு வழி ஒன்றும் அவர்களுக்குத் தெரியவில்லை. அப்போது ஆஜானுபாகுவான, அதியற்புதமான தோற்றத்துடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவர்கள் முன் தோன்றினார். தாயுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களுடைய உடலை அன்போடு தடவிக்கொடுத்தார். என்ன ஒரு அற்புதம்! அவர்களுடைய காய்ச்சல் உடனே குறையத் தொடங்கியது! அவர்கள் அனைவரும் குணமடைந்தவுடன் ஸ்வாமிகளைப் பார்த்து **"நீங்கள் யார்? உங்கள் ஊர் எது?"** என்று வினவினர். **"உலகத்தில் உள்ள எல்லா இடங்களும் என்னுடைய ஊர். நான் அனைத்து இடங்களிலும் சுற்றித் திரிவேன். ஆனால் எனக்கு சஹ்யாத்ரி,கிர்னார் மற்றும் பெனாரஸ் ஆகிய இடங்கள் மிகவும் இஷ்டம். இவற்றைத் தவிர மாடாபூர்,கர்விர், குருவபூர்,ஔதும்பார், கரஞ்சா, நரசோபவாடி மற்றும் கானகாபூர் ஆகிய இடங்களுக்கும் நான் செல்வேன்"** என்றார். அல்வணிபுவா வந்திருப்பவர் முன்பிருந்த அதே நரசிம்ம சரஸ்வதிதான் என்பதை புரிந்துகொண்டு அவர் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்தார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரே தன் கையால் அவர்களுக்கு உணவு பரிமாறினார். உடல் நிலை நன்கு தேறிய பின் அவர்கள் தங்கள் பயணத்தைத் தொடர்ந்தனர். பின்னாட்களில் அவர்கள் அக்கல்கோட்டில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தபோது தங்களுக்கு புரியில் உதவியது வேறு எவரும் அல்ல ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்தான் என்பதை புரிந்துகொண்டனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம் என்பது அனைத்து இடங்களிலும் பரவியது.




**பண்டிதருக்கு கண்பார்வை அளித்தல்**

பண்டிட் என்கிற பிராமணன் ஒருவர் பூரிக்கு யாத்திரையாக வந்திருந்தார். அவருக்கு பிறவியிலிருந்தே கண்பார்வை கிடையாது. ஸ்ரீ அல்வணிபுவா மற்றும் அவர் நண்பர்களின் காய்ச்சலை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் குணப்படுத்தியதை தெரிந்துகொண்டு அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து வணங்கிவிட்டு, **"நான் உங்களுடைய மகிமைகளை கேள்விப்பட்டு வந்திருக்கிறேன். நீங்கள் பூர்ணமான தத்த அவதாரம். நீங்கள் நினைத்தால் இந்த முழு பிரம்மாண்டத்தையும் அழித்துவிட்டு புதிதாக உருவாக்கலாம். நான் உங்களை என் கண்களால் கண்டு ஆனந்தப்பட வேண்டும். இந்த அற்பனுக்கு அருள் புரிய வேண்டும் ஸ்வாமி! உங்களை பார்த்து விட்டு உங்கள் பாதத்திலேயே என் உயிரை விட்டுவிடுகிறேன்"** என்று கதறி ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தை தன் கண்ணீரால் அபிஷேகம் செய்தார். கருணையின் மறுவடிவமான ஸ்ரீ ஸ்வாமிகள் தான் கழுத்தில் அணிந்திருந்த மாலையை எடுத்து பண்டிதரின் கழுத்தில் அணிவித்தார். அது பிரசாதம் அல்லவா! பண்டிதர் அதை உடனே தன் கண்களில் ஒற்றிக் கொண்டார். என்ன ஒரு ஆச்சரியம்! அந்த புனிதமான பூமாலை பண்டிதரின் கண்களைத் தொட்டவுடன் அவருக்கு கண் பார்வை கிடைத்தது. அவர் கண்களை திறந்தவுடன் அவர் கண் முன்னால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் இடுப்பில் கைகளை வைத்துக் கொண்டு ஆஜானுபாகுவாக நின்றுகொண்டிருந்தார். பண்டிதரின் ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தை இறுக்கமாக பிடித்துக்கொண்டு **"ஸ்வாமி! நான் ஒரு பிறவிக்குருடன். உங்கள் அருளால் பார்வை பெற்றேன்! நான் என் வாழ்நாள் முழுவதும் உங்களுக்குச் சேவை செய்ய அனுமதிக்க வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆசீர்வாதத்தோடு விடைபெற்றுக்கொண்டு தன் சொந்த ஊருக்குச் சென்றார்.

**வயதான எண்ணெய் வியாபாரியின் தொலைந்துபோன மனைவி**

ஒரு எண்ணெய் வியாபாரி ஸ்ரீ ஜெகன்நாதரை தரிசிக்க புரிக்கு யாத்திரையாக வந்திருந்தார். புரி க்ஷேத்திரம் எப்போதும் பக்தர்களின் கூட்டத்தால் நிரம்பி வழியும். அந்த கூட்டத்தில் எண்ணெய் வியாபாரியின் மனைவி தொலைந்து விட்டாள். எட்டு நாட்களாகியும் எங்கு தேடியும் அவள் கிடைக்கவில்லை. செய்வதறியாது தன் நம்பிக்கையை இழந்து நின்றவருக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்தான் ஒரே அடைக்கலம்! அவர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜின் பாதத்தை பிடித்துக்கொண்டு, **"ஸ்வாமி, நான் என் மனைவியை எட்டு நாட்களுக்கு முன் தொலைத்து விட்டேன். அவளை எங்கு தேடியும்**

**கிடைக்கவில்லை. அவளில்லாமல் எங்கள் குடும்பம் நிலைகுலைந்துவிடும். தயவுசெய்து அவளை கண்டுபிடித்துக் கொடுங்கள்"** என்று கதறினார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவர் மீது இரக்கம் கொண்டு, **"ஏ! முட்டாள் கிழவா! உனக்கு எண்பது வயதாகிவிட்டது. இன்னும் உனக்கு காம இச்சை அடங்கவில்லையா? சாவு உன்னை நெருங்கிக் கொண்டிருக்கிறது. உன் உடல் நடுங்கிக் கொண்டிருக்கிறது. உன் அங்கங்கள் தளர்ந்து விட்டன. எப்போது உன் மனதை கட்டுப்படுத்தப் போகிறாய்? அவளில்லாமல் என் குடும்ப வாழ்க்கையே போய்விட்டது என்று கூற உனக்கு வெட்கமாக இல்லை? நீ யார், நீ எங்கிருந்து வந்தாய்? நீ எங்கே போகப் போகிறாய்? இதைப்பற்றியெல்லாம் சிந்தித்தாயா? இந்த மாயையில் கட்டுண்டு இருக்காதே. நீ என்னுடைய பழைய பக்தன். மறந்துவிட்டாயா?"** என்று கூறிவிட்டு அந்த கிழவரின் நெற்றியில் விபூதியை பூசிவிடுமாறு தன் சேவகன் ஒருவரிடம் கூறினார். விபூதியை பூசிய மாத்திரத்தில் தன் பூர்வ ஜென்மம் அவருக்கு நியாபகம் வந்தது. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தைப் பற்றிக்கொண்டு, **"ஸ்வாமி, என்னை இந்த குடும்ப பந்தத்திலிருந்து விடுவித்து உங்களுக்கே என் வாழ்நாள் முழுவதும் சேவை செய்ய அனுமதிக்க வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்துகொண்டிருக்கும் போதே அவருடைய மனைவி அங்கு வந்து சேர்ந்தாள். அவள் தன் கணவரை பார்த்து மகிழ்ச்சியடைந்து ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்தாள். அவர்கள் இருவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு தங்கள் சொந்த ஊருக்குச் சென்றனர். ஆஹா! எவ்வளவு கடுமையான தொனியில் அந்த கிழவரை கண்டித்தாலும் அவருக்கு அருள் புரிவதில் எந்த குறையும் வைக்கவில்லையே!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 12

# ஹரித்வாரில் நிகழ்த்திய லீலைகள்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் புரியை விட்டுக் கிளம்பி ஹரித்வார் வந்தடைந்தார். அங்கு அவர் பல அற்புதங்கள் நிகழ்த்திக் காட்டினார். நோயுற்ற பலரை குணமாக்கினார். பார்வையற்றவர்களுக்கு பார்வை கிடைத்தது, செவிடர்களின் காது கேட்கத் தொடங்கியது, மேலும் பல்வேறு நோய்களால் துன்பப்பட்டுக்

கொண்டிருந்தவர்கள் அவருடைய வெறும் தொடுதலால் மட்டுமே குணமானார்கள். ஏறக்குறைய புரியில் இருந்த அதே நேரத்தில் ஹரித்வாரிலும் ஸ்ரீ ஸ்வாமி தோன்றினார். அங்கு தேவல் என்னும் இடத்தில் சிலருக்கு யோக ரகசியங்களை கற்பித்தும், சில அற்புதமான லீலைகளை நடத்திக் காட்டிவிட்டு தன் பாதுகைகளை அங்கு விட்டுச் சென்றார்.

**பசுவைக் கொன்ற பிராமணன்**

ஹரித்வாரில் மிகவும் தீய வழிகளை பின்பற்றும் ஒரு பிராமணன் இருந்தான். அவன் அங்கு வரும் யாத்ரீகர்களை மிகுந்த தொல்லைகளுக்கு உட்படுத்துவான். அனைவரையும் நடத்துவது போல அவன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடமும் வந்து கர்வத்துடன் பல கேள்விகள் கேட்டான். அனைத்தையும் அறிந்த ஸ்ரீ ஸ்வாமிகள் அவன் கேட்ட கேள்விகளுக்கு பதில் அளிக்காமல், **"முதலில் நீ யார் என்பதை தெரிந்து கொள். நீ உன் முந்தைய ஜென்மத்தில் வேடனாகப் பிறந்து பல அப்பாவி மிருகங்களை கொன்று குவித்தாய். அவற்றை உண்டதோடு மட்டுமல்லாமல், போதை வஸ்துக்களைக் குடித்துக்கொண்டு பல பெண்களை கற்பழித்திருக்கிறாய். நீ ஹஸ்தினாபுர ராஜகுமாரனை கொன்றதால் அந்நாட்டு சிப்பந்திகள் உன் மூக்கை அறுத்து உன் தலையை சுக்குநூறாக உடைத்துவிட்டனர். பின்னர் நீ ஒரு செருப்பு தைக்கும் தொழிலாளியின் வீட்டில் தங்கியிருந்தாய். அங்கும் பல பாவங்கள் செய்தாய். சில நாட்களுக்குப் பின்னர் மிருகங்கள் உன்னைக் கொன்று தின்றுவிட்டன. உன் பூர்வ ஜென்மங்களில் செய்த புண்ணியங்கள் இன்னும் சிறிது மீதம் இருந்தமையால் நீ இந்த பிறவியில் பிராமணனாக பிறந்துள்ளாய். அறிவு கெட்டவனே! உன் பூர்வஜென்ம வாசனை இன்னும் மாறாமல் நேற்று இரவு நீ ஒரு பசுவைக் கொன்று தின்று மகாபாவம் செய்துள்ளாய். நீ ஒரு மகாகொடுமைக்காரன். மகாபாவி"** என்று கூறினார்.

வந்திருப்பவர் ஒரு சாதாரணமானவர் இல்லை என்பதை அவன் உணர்ந்து கொண்டான். அவனுடைய உடல் நடுங்கத் தொடங்கியது. தான் செய்த குற்றத்திற்காக ஸ்வாமிகளின் காலில் விழுந்து தேம்பித் தேம்பி அழுதான். தன்னை மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டான். உடனே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இறந்து கிடக்கும் பசு இருக்கும் இடத்திற்கு தன்னை அழைத்துச் செல்லுமாறு கூறினார். அவன் ஸ்வாமிகளை மற்ற பிரமணர்களுடன் அங்கு அழைத்துச் சென்றான். அனைத்து பிராமணர்களும் அவனுக்கு ஏதாவது விமோசனம் அளிக்குமாறு கேட்டுக் கொண்டனர். ஸ்ரீ ஸ்வாமிகள், **"அந்த பிராமணனை முன்னே வரச்சொல். ஏ! பிரமணா பின்னால் என்ன செய்துகொண்டிருக்கிறாய்?**




**ஏ! துஷ்டா...**" என்று அழைத்தவுடன் அவன் பயத்தில் நடுங்கிக்கொண்டு அவர் முன்னால் வந்து நின்று அவர் பாதத்தை பற்றிக் கொண்டு தன்னை காப்பாற்றுமாறு கதறினான். ஸ்ரீ ஸ்வாமி அவனிடம், **"நீ உண்மையிலேயே வருந்துகிறாய் என்றால் இந்த பசுவின் உயிரை திருப்பி அளித்துவிடு. நீ பசுஹத்தி பாவத்திலிருந்து விடுபடுவாய்"** என்று கூறினார். அவன் உடனே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பாதபூஜை செய்து, அந்த புனித நீரை எடுத்து இறந்த பசுவின் மீது தெளித்தான். என்ன ஒரு ஆச்சரியம்! இறந்து கிடந்த அந்த பசு ஒன்றுமே நடக்காதது போல எழுந்து நடந்து சென்றது. இந்நிகழ்ச்சியை பார்த்த அனைவரும் வாயடைத்து நின்றனர். அவர்கள் அனைவரும் **'ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தா!'** என்று கோஷமிட்டனர்.

பின்னர் அந்த பிராமணன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் **"நீங்கள் யார்?"** என்று கேட்டதற்கு, **"நான் ஒரு யஜுர்வேதி பிராமணன். என்னுடைய பெயர் நரசிம்மபான். என்னுடைய பூர்வாஸ்ரமம் ஆலமரம். என்னுடைய பூர்வீகம் தத்த நகரம்"** என்று கூறினார். அவர் அவனுக்கு வேதங்களிலிருந்து சில வாக்கியங்களை சொல்லிக்கொடுத்தார். அவற்றை தினமும் பாராயணம் செய்யுமாறு கூறினார். மனிதப் பிறவி பற்றியும் ஒரு பிராமணனின் கடமைகள் மற்றும் பொறுப்புகள் பற்றியும் வலியுறுத்திக் கூறினார். **"ஒரு பிராமணன் என்பவன் பிரம்மத்தைப் பற்றி உணர்ந்து கொண்டவனாக இருக்க வேண்டும். அனைவரையும் பிரம்மத்திடம் அழைத்துச் செல்பவனாக இருக்க வேண்டும். அவன் அனைவருக்கும் மூத்த சகோதரன் போல நடந்து கொண்டு, அனைவரின் ஆன்மிக முன்னேற்றத்திற்குக் காரணமாக இருக்க வேண்டும். ஒரு பிராமணனே அனைவருடைய ஆன்மிக பாதுகாவலன். இந்த வேலையைத்தான் கடவுள் பிராமணனுக்கு அளித்துள்ளார்"** என்று கூறி அருளினார்.

மஹாபாவம் செய்த ஒருவருக்கு எவ்வளவு பெரிய அருளை வழங்கி விட்டார்! ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை கருணையின் வடிவம் என்று கூறுவதைத் தவிர வேறு ஏதாவது வார்த்தைகள் உண்டோ?

### பிராமண குஷ்டரோகிகளுக்கு கருணை புரிதல்

ஹரித்வாரில் இரண்டு பலம் நிறைந்த பிராமணர்கள் வாழ்ந்து வந்தனர். அவர்கள் இருவரும் தாங்கள் பலசாலி என்கிற இறுமாப்பில் வெறி கொண்டிருந்தனர். மக்களிடமிருந்து பணத்தை சூறையாடிவிட்டு கொன்றுவிடுவது, துறவிகள் போன்ற புனிதமானவர்களை அவதூறாகப் பேசுவது போன்றவற்றால்





இன்பம் அனுபவித்துக் கொண்டிருந்தனர். இவர்களின் கொடுமைகளை தடுத்துநிறுத்த யாருக்கும் துணிவு இல்லை. இறுதியில் இவர்கள் செய்த கொடுமைகளின் பலனால் குஷ்டரோகத்தினால் பாதிக்கப்பட்டனர். அவர்களின் விரல்களும் பாதங்களும் அழுகி அருவருப்பாக ஆனது. அவர்களின் குடும்பத்தினரே அவர்களை வெறுத்து ஒதுக்கினர். தங்களுடைய தவறுகளை உணர்ந்துகொண்டு தெருத்தெருவாக பிச்சை எடுத்து வந்தனர். அவர்கள் ஊரில் உள்ளவர்கள் அனைவரும், **"முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்"** என்பது போல பலவாறு கேலி செய்து வந்தனர். மனிதனுக்கு நேரம் நல்ல பலனைத் தரும் போது பல நல்ல காரியங்களை செய்து புண்ணியங்களை சேர்த்துக்கொள்ள வேண்டும். அப்படிச்செய்யாமல் அகம்பாவம் மற்றும் ஆணவத்துடன் நடந்து கொண்டால் கெட்ட நேரம் வரும்போது தாளமுடியாத துன்பங்களை சந்திக்க நேரிடும். இந்த இருவருக்கும் இப்படிப்பட்ட சூழ்நிலைதான் உருவானது.

இவ்வளவு துன்பங்கள் செய்திருந்தாலும் அவர்களுக்கு பூர்வ ஜென்மத்தின் புண்ணியம் சிறிதளவு மீதம் இருந்த காரணத்தால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் தரிசனம் பெற்றனர். அவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"நாங்கள் செய்த பாவங்களுக்கு எல்லையே இல்லை. செய்யாத கொடுமைகள் இல்லை. நாங்கள் பிராமணர்களாக பிறந்தும் உங்களுக்கு துளியும் சேவை செய்யாமல் பெருமிதத்துடன் நடந்து கொண்டோம். எங்களுக்கு தண்டனை கொடுங்கள். எங்களால் இந்த நோயின் கொடுமையை தாங்க முடியவில்லை. என்ன செய்வது? எங்களைவிட கொடுமைக்காரர்கள் எவரும் இந்த உலகத்தில் இல்லை. ஆனாலும் எங்களுக்குக் கருணை புரியுங்கள் ஸ்வாமி"** என்று கூறிவிட்டு தங்கள் உடல் வேதனை தாங்க முடியாமல் தரையில் உருண்டனர்.

கருணாமூர்த்தியான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவர்களின் பூர்வ ஜென்ம புண்ணியங்களினால் தன் கருணை கடாக்ஷத்தை பொழிந்தார். ஒரு தாய் தன் குழந்தை அழுதவுடன் எப்படி ஓடுவாளோ அதேப்போலவே அவர்களிடம் ஓடிச்சென்று தன் புனிதமான பாதகமலங்களினால் அவர்களின் உடலைத் தீண்டினார். அவர்களின் எரிச்சலும் வலிகளும் இருந்த இடம் தெரியாமல் மறைந்தன. அவர்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதத்தில் விழுந்து வணங்கிவிட்டு, **"ஸ்வாமி, பன்னிரண்டு ஆண்டுகளாக இந்த வலியினால் தவித்துக் கொண்டிருந்தோம். எங்கள் பூர்வ ஜென்ம பாக்கியங்களினால் உங்கள் தரிசனம் கிடைத்தது. தயவுசெய்து உங்களுக்கு சேவை செய்ய எங்களை அனுமதிக்க வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டனர். ஸ்ரீ ஸ்வாமி அவர்களிடம்,

**“இப்போது நீங்கள் கிளம்பலாம். உங்களுடைய கர்வம், அகந்தை, இறுமாப்பு ஆகியவற்றை கைவிட்டு, மீதம் இருக்கும் உங்கள் வாழ்க்கை முழுவதும் என் நாமத்தையே கூறிக் கொண்டிருங்கள். நீங்கள் மகிழ்ச்சியோடு வாழ்வீர்கள்”** என்று கூறி ஆசீர்வதித்தார். கொடுமைக்காரர்களையும் மன்னிக்கும் கருணாமூர்த்தியின் அருளால் அந்த இரு பிராமணர்களும் மீண்டும் ஆரோக்கியம் பெற்று சந்தோஷத்துடன் வாழ்ந்தார்கள்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 13

# நாராயண தீர்த்தத்துக்கு வருதல்

## அனைவருக்கும் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளுதல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஹரித்வாரில் இருந்து கிளம்பி குஜராத்தில் உள்ள கட்ச் பகுதிக்கு வந்தடைந்தார். அங்கிருக்கும் திருவிக்ரம் என்கிற இடத்தில் உள்ள நாராயண தீர்த்தத்துக்குச் சென்றார். அங்கிருக்கும் கோவிலை ஒரு துறவியும் அவரது நான்கு சீடர்களும் கவனித்து வந்தனர். அவர்கள் அனைத்து யாத்ரீகர்களிடமும் பணம் வசூலிப்பர். பணம் அளிக்கவில்லையென்றால் அவர்களை தீர்த்தத்தில் நீராட அனுமதிக்கமாட்டார்கள். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அந்த தீர்த்தத்தில் நீராட விரும்பி அங்கு சென்றார். அவர்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம், **“இங்கு நீராட வேண்டுமானால் ஒரு ரூபாய் வரி செலுத்த வேண்டும்”** என்று கூறி அவருடைய வழியை மறித்தனர். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி அவர்களிடம் பணம் தர மறுத்துவிட்டார். அவர்கள் வந்திருப்பது யாரென்று தெரியாமல், **“பணம் தரவில்லை என்றால் ஒரு அடிகூட எடுத்துவைக்க முடியாது”** என்று மிரட்டினர். உடனே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கலகலவென சிரிக்கத் தொடங்கினார். திடீரென அவர்களின் தலைக்கு மேல் பறந்து சென்று ஆகாயத்திலே நடந்து சென்று அந்த தீர்த்தத்தின் மத்தியில் போய் அமர்ந்து கொண்டார். இதைக் கண்டவுடன் வந்திருப்பவர் ஒரு மகாபுருஷர் என்பதை

 

புரிந்துகொண்டு அவர்கள் தங்கள் குருவிடம் சென்று நடந்தவற்றை விவரித்தனர். ஏதாவது சபித்து விடுவாரோ என்று பயந்து நடுங்கிக் கொண்டிருந்தனர்.

அந்தத் துறவி தன் சீடர்களுடன் வந்து, **"ஸ்வாமி எங்களை மன்னிக்க வேண்டும். நான் பலரை ஏமாற்றி பணம் பறித்திருக்கிறேன். இந்த புனிதமான இடத்தில் இருந்துகொண்டு பல துறவிகளை பணத்திற்காக அவமதித்திருக்கிறேன். நான் துறவியாக இருப்பினும் என் வாழ்நாள் முழுவதும் தங்க நகைகளை அணிந்துகொண்டும், வாசனைப் பொருட்களை பூசிக்கொண்டும் ஆடம்பரமாக வாழ்ந்து கொண்டிருக்கிறேன். கடவுளுக்கு அருகில் எப்போதும் இருந்தாலும் எனக்கு பணத்தாசைதான் அதிகம். இந்த பாவத்தில் பெரும்பங்கு என்னுடைய பிரதான சீடனான ராதாகண்டுக்கும் இருக்கிறது. அவன் யாரிடமும் பாகுபாடு இல்லாமல் கொடூரமாக நடந்துகொள்வான். நாங்கள் கேடுகெட்டவர்கள். எங்களை தயவுசெய்து மன்னியுங்கள் ஸ்வாமி! ஒரு மகன் எவ்வளவு பெரிய கொடுமைக்காரனாக இருப்பினும் அவனுடைய தாய் அவனை துன்புறுத்த மாட்டாள். தாயுள்ளம் கொண்டவரே! எங்களை மன்னித்து எங்களுடைய குடிலுக்கு நீங்கள் வரவேண்டும்"** என்று அழைத்தார். ஸ்ரீ ஸ்வாமி சிரித்துக் கொண்டே, **"என்னை தொந்தரவு செய்யாதீர்கள்"** என்று கூறியவாறு தண்ணீரின் மீது நடந்தே வெளியே வந்தார். அனைவரும் அவரின் பாதத்தை பற்றிக்கொண்டு ஆஸ்ரமத்திற்கு வரவேண்டும் என்று கெஞ்சினர்.

அவர்கள் அனைவரின் பிரார்த்தனைக்கு இணங்கி அவர்களுடன் கோவிலுக்கு வருகை புரிந்தார். அனைவரும் அவரை வணங்கிவிட்டு அவருக்கு நைவேத்தியம் படைத்தனர். அனைத்து பிராமணர்களும் சாப்பிட அமர்ந்தனர். அப்போது அந்த கூட்டத்திலிருந்த ஒரு பிராமணனுக்கு சந்தேகம் எழும்பியது. அவர் தன் மனதுக்குள்ளேயே, **"இந்த மஹாபுருஷர் தண்ணீரின் மீது நடந்து சென்றார் என்பது உண்மைதான். இவர் மந்திரவாதியா இல்லை யோகியா? யாருக்குத் தெரியும்! பார்ப்பதற்கு போலி ஆசாமி போலத்தான் தெரிகிறார். வேதங்களில் ஒதுக்கப்பட்ட சில வித்தைகளை இவர் பிரயோகம் செய்கிறாரோ என்னவோ!"** என்று எண்ணியவாறே அமைதியாக இருந்தார்.

உடனே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அந்த பிராமணரிடம், **"நான் போலியானவனாக இருந்தால் நீ என்ன செய்யப் போகிறாய்? வேதங்களாலும் யோகிகளாலும் ஒதுக்கப்பட்ட வித்தைகளை நான் கையாள்கிறேனா என்ன?"** என்று கேட்டவுடன் அந்த பிராமணன் மௌனமாக இருந்தார். அற்புதங்களைக் கண்டு மக்கள் மயங்குவது சகஜம். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சர்வ வல்லமையையும் ஞானத்தையும் அந்த பிராமணர் உணர்ந்து கொண்டார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின்




பாதத்தில் விழுந்து வணங்கிவிட்டு, **"உங்களை யாரென்று புரிந்து கொள்ளாமல் சந்தேகப்பட்டுவிட்டேன் ஸ்வாமி! நீங்கள் சாக்ஷாத் தத்தாத்ரேயர்தான்! நீங்கள்தான் பரபிரம்மம்! அறியாமையால் உங்களை சந்தேகப்பட்டுவிட்டேன். இந்த குழந்தையின் தவறுகளை தாயுமானவனான நீங்கள் மன்னிக்க வேண்டும்"** என்று கூறிக்கொண்டே அவர் பாதத்தில் தன் தலையை வைத்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் மன்னித்தருளினார் என்பதை கூறத்தான் வேண்டுமா!

**பாம்புக்கு விடுதலை அளித்தல்**

மேலே குறிப்பிடப்பட்டுள்ள பிராமணன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தன் வீட்டுக்கு அழைத்துச் சென்று பிரம்மாண்டமாக வரவேற்றார். அனைவரும் வயிறார அறுசுவை உணவுகளை உண்டனர். ஸ்வாமி அந்த பிராமணரிடம், **"உன் பெற்றோர்கள் எங்கே?"** என்று விசாரித்தார். அதற்கு அந்த பிராமணன் அவர்கள் 35 வருடங்களுக்கு முன்பே இறந்து விட்டதாக கூறினார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், **"அப்படியா! உன் தந்தை உன் குழந்தையின் தொட்டிலை ஆட்டிக் கொண்டிருக்கிறார்"** என்று கூறினார்.

அவர் அப்படிக் கூறிய சிறிது நேரத்திற்குப் பின்னர் அங்கு ஒரு நாகம் வந்தது. கூடியிருந்தவர்கள் அனைவரும் அந்த நாகத்தைக் கொல்ல முற்பட்டனர். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரோ அவர்களை தடுத்து விட்டு, அந்த நாகத்தை தன் கையில் எடுத்து பாசத்தோடு தடவிக் கொடுத்தார். அவர் அந்த நாகத்திடம், **"உன்னுடைய முன் ஜென்மத்தில் நீ எவரிடமும் அன்பாகவே நடந்து கொள்ளவில்லை. நீ ஒரு சுயநலம் நிறைந்தவனாக இருந்தாய். இருப்பினும் உன்னுடைய பூர்வ ஜென்மத்து வாழ்க்கை, வீடு மற்றும் மகனை நீ இன்னும் மறக்கவில்லை! உன் பந்தங்களை அறுத்தெறிந்துவிட்டு, உன் விஷத்தன்மைகளை விட்டுவிடு"** என்று கூறிவிட்டு அந்த நாகத்தை ஏரிக்கு அருகே கொண்டு சென்று அதை செல்ல அனுமதித்தார். அப்பாம்பு ஏரிக்குள் சென்று தன் வழியில் பயணம் செய்யத் தொடங்கியது. பின்னர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், **"இப்போது இவருடைய பாவங்கள் அனைத்தும் கழிந்துவிட்டன. அடுத்த பிறவியில் ஒரு உன்னதமான யோகத்தன்மை நிறைந்த குடும்பத்தில் பிறப்பார்"** என்று கூறினார். இந்நிகழ்ச்சிகளை கண்ட பிராமணரும் அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் ஆச்சரியத்தில் மூழ்கி நின்றனர். அனைவரும் ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தா என்று பாடி மகிழ்ந்தனர்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த் !!**





# அத்தியாயம் 14

# துவாரகையில்..

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நாராயண தீர்த்தத்தில் இருந்து மறைந்து துவாரகைக்கு வந்தடைந்தார். அங்கு அவர் சில நாட்களுக்கு மட்டுமே தங்கியிருந்தார்.

**யோகியின் சந்தேகங்களை தீர்த்து வைத்தல்**

புரேபுவா என்கிற யோகி ஒருவர் குரு தத்தாத்ரேயரின் தரிசனத்தைப் பெற வேண்டும் என்கிற ஆர்வம் கொண்டிருந்தார். அவர் தன் கனவில் ஸ்ரீ தத்தாத்ரேயரை அவருடைய மூன்று தலைகளுடன் பார்த்தார். பின்னர் அம்மூன்று தலைகளும் மறைந்து அந்த உருவம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தராக மாறுவதைக் கண்டார். அந்த கனவில் கண்ட அதே உருவத்தை அவர் துவாரகையில் கண்டார். அவருக்கு ஆன்மிக விஷயங்கள் புரிதலில் சில சந்தேகங்கள் இருந்தன. அவர் அவற்றை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் கேட்டார். ஸ்ரீ ஸ்வாமி அந்த சந்தேகங்களை உபநிஷத்துக்களிலிருந்து மேற்கோள் காட்டி தீர்த்து வைத்தார். பின்னர் தன் புனிதமான கரங்களினால் அவரைத் தொட்டார். உடனே புரேபுவா சமாதி நிலையை அடைந்து சிறிது நேரத்திற்கு அதே நிலையில் இருந்தார். இந்த அற்புதமான காட்சிகளை துவாரகையில் உள்ள பலர் கண்டு ஆச்சரியம் அடைந்தனர். துவாரகை முழுவதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழ் பரவியது.

**பார்வையற்றவனுக்கு பார்வை அளித்தல்**

துவாரகையில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை காணக் கூடியிருந்தவர்களில் சூர்தாஸ் என்கிற ஒருவனும் இருந்தான். அவனுக்கு பார்வை கிடையாது. அவனுக்கு ஸ்ரீ கிருஷ்ணனை தன் கண்களால் தரிசிக்க வேண்டும் என்கிற ஆவல் மிகுதியாக இருந்தது. புரேபுவா சூர்தாஸின் விருப்பத்தைப் பற்றி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் தெரிவித்தார். உடனே ஸ்ரீ ஸ்வாமி அவனுடைய குடிலுக்குச் சென்று, **"சூர்தாஸ், நீ யாரை பார்க்க வேண்டும் என்று விரும்பினாயோ அவர் உன் முன்னால் நின்று கொண்டிருக்கிறார்"** என்று கூறிவிட்டு தன் கைகளால் சூர்தாஸின் கண்களைத் தொட்டுவிட்டு, திறந்து பார்க்குமாறு கூறினார். அப்போது சூர்தாஸுக்கு பார்வை கிடைத்துவிட்டது! சூர்தாஸ் தன்





கண்களால் கருமையான நிறத்திலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டான். அவன் முழுவதுமாக திருப்தி அடைந்தான். பின்னர் தன்னை உறுதிப்படுத்திக் கொள்ளும் விதமாக மீண்டும் அந்த உருவத்தைப் பார்த்த போது அது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தராக தெரிந்தது. அவன் அவரைப் பார்த்து ஆனந்தப் பரவசம் அடைந்து அவருடைய பாதகமலங்களில் விழுந்து நமஸ்கரித்து, **"ஸ்வாமி நான் ஒரு பிறவிக் குருடன். உங்களுடைய அருளினால் எனக்குப் பார்வை கிடைத்தது. என்னை தயவுசெய்து இந்த பிறப்பு-இறப்பு சுழற்சியில் இருந்து விடுவித்து மோக்ஷம் அளியுங்கள்"** என்று கேட்டுக்கொண்டான். பின்னர் ஸ்ரீ ஸ்வாமி அவனுக்கு அவ்வாறே வரம் அளித்தார்.

**ராவ்ஜிக்கு அருள் புரிதல்**

ராவ்ஜி வாமோரிக்கர் என்கிற அடியவருக்கு அருள்புரிய வேண்டும் என்று புரேபுவா ஸ்ரீ ஸ்வாமிகளை வேண்டிக்கொண்டார் (ராவ்ஜி வேறுயாருமல்ல வாமன்புவா வாமோரிக்கரின் தந்தை ஆவார்). அதற்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தாம் ஏற்கனவே அவரை வாரணாசியில் இரண்டு முறை சந்தித்திருப்பதாகவும், ஒரு முறை அவருடைய வயதான தாயின் நோயை குணப்படுத்தியதாகவும் இரண்டாவது முறை அவருடைய கஷ்டங்கள் சிலவற்றை தீர்த்து வைத்ததாகவும் கூறினார். அதை நினைவு படுத்திக்கொண்ட ராவ்ஜி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை **"தாங்கள்தான் அந்த பரப்பிரம்மம்"** என்று கூறி புகழ்ந்து கீர்த்தனைகள் பாடினார். இதைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்த ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், **"உன் மூத்த மகன் மிகுந்த ஞானியாகி தென்திசையில் முசல்மான் ஒருவன் ஆட்சி புரியும் இடத்தில் என்னைச் சந்திப்பான். உன் இரண்டாவது மகன் சிவபக்தனாகி பிரம்மச்சாரியாக வாழ்வான். உன் மூன்றாவது மகன் (வாமன்புவா) குரு சம்பிரதாயத்தை கடைப்பிடித்து கதாகாலட்சேபம் செய்வான்"** என்று கூறி ஆசீர்வதித்தார். அந்த இடத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் **"ஸ்ரீ கிருஷ்ண தத்தாத்ரேய நரசிம்ம முனி"** என்கிற பெயரில் புகழடைந்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**





## அத்தியாயம் 15

# கிர்னாரில் ...

குஜராத் மாநிலத்தின் ஜூனாகத் மாவட்டத்தில் உள்ள ஜூனாகத் நகரத்திற்கு அருகில் கிர்னார் என்னும் மலை உள்ளது. இந்த மலையில் ஸ்ரீ தத்தாத்ரேயர் பல காலம் வாழ்ந்ததாக நம்பப்படுகிறது. இங்கு கோரக்நாத் போன்ற புல முனிவர்களும் சித்தர்களும் தவம் புரிந்துள்ளனர். இந்த மலைகளின் ஒன்றில் அம்பா பவானி தேவிக்கும் கோவில் உள்ளது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் ஸ்ரீ த்த்தாத்ரேயரின் அவதாரம் அல்லவா? அதனால் அவரும் இந்த புனிதமான மலையில் சில நாட்களுக்குத் தங்கியிருந்தார். ஸ்ரீ தத்தாத்ரேயர் எந்த இடத்தில் தங்கி தவம் புரிந்தாரோ அதே இடத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் தங்கி பல அற்புதங்கள் நிகழ்த்தினார்.

### ஊனமுற்ற துறவிக்கு அருளுதல்

கிர்னார் மலையில் அமைந்துள்ள ஹனுமன்தாரா என்கிற இடத்திற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் சென்றார். அங்கு ஊனமான ஒரு துறவி வாழ்ந்து கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழைக் கேள்விப்பட்டு அவரை தரிசிக்க மிகுந்த ஆவல் கொண்டிருந்தார். அவருடைய ஊனத்தின் காரணத்தால் அவரால் ஸ்ரீ ஸ்வாமிகள் இருக்கும் இடத்திற்குச் செல்ல முடியவில்லை. இருந்த இடத்திலேயே அவரை மனமுருகி, **“கடவுளே! எனக்கு உன் தரிசனம் கிடைக்காதா? இந்த ஏழை நொண்டிக்கு உன்னை வந்து பார்க்க முடியவில்லையே! என்னால் நகரக்கூட முடியவில்லையே... குருவே இங்கு வந்து எனக்கு தரிசனம் அளிப்பாயா?”** என்று புலம்பிக்கொண்டே தரையில் உருண்டார். அனைத்தையும் அறிந்திருந்தவரல்லவா ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்! அந்த ஊனமுற்ற துறவி தன் மனதில் பிரார்த்தனை செய்து கொண்டது அவர் காதுகளில் விழாதா என்ன? கன்றுக்குட்டி எப்படி தன் தாய்பசுவை நோக்கி ஓடுமோ அதே போல தன் பக்தரின் பிரார்த்தனைகளை கேட்டவுடனேயே, நினைத்த மாத்திரத்தில் ஸ்ரீ ஸ்வாமியும் ஓடோடிச் சென்றார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அந்த ஊனமுற்ற துறவியிடம், **“ஊனமுற்றவரே, உங்கள் கண்களை மூடிக்கொண்டு எங்கேயும் திரும்பிப் பார்க்காமல் என்னிடம் வாருங்கள்!”** என்று கூறினார். அந்த ஊனமுற்ற துறவி வேறு எதைப்பற்றியும் யோசிக்காமல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கூறியபடியே




அடி எடுத்து வைத்தார். என்ன ஒரு ஆச்சரியம்! அவரால் நடக்க முடிந்தது. அவர் மெதுவாக நடந்து ஸ்ரீ ஸ்வாமி இருக்கும் இடத்தை வந்தடைந்தார். அவர் ஆனந்தத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதகமலத்தில் விழுந்து வணங்கினார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் ஆசிகள் பெற்றுக்கொண்டு அவர் க்ஷேத்ராடனம் மேற்கொண்டார்.

### அம்பா பவானியுடனான சந்திப்பு

அம்பா பவானி மலையில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அம்பா பவானியை சந்தித்தார். அவள் அவரிடம் ஏன் இந்த இடத்தை விட்டுச் சென்றார் என்று கேட்டாள். **"மழை மேகம் அனைத்து இடங்களுக்கும் சென்றாலும் வறண்ட இடத்தில் மட்டும்தான் பொழியும். நான் எல்லோரிடத்திலும் அருள் மழை பொழிய வேண்டும் என்பதே இந்த அவதாரத்தின் நோக்கம். அம்மா! என்னுடைய பணிக்கு நீங்கள் ஆசிகள் அளிக்க வேண்டும்"** என்று கேட்டுக்கொண்டார். பின்னர் அங்கிருக்கும் கமண்டலு தீர்த்தத்தில் நீராடி விட்டு விடைபெற்றுச் சென்றார்.

### சேவதாசுக்கு அருளுதல்

ஸ்ரீ ஸ்வாமி கிர்னாரில் இருந்தபோது அவர் சஞ்சல் பாரதி (உலாவும் துறவி) என்று அழைக்கப்பட்டார். அப்போது சேவதாஸ் என்கிற ஒரு பக்தர் ஸ்வாமியை தரிசிக்க வந்திருந்தார். அவர் தன்னுடைய ஆன்மிக முன்னேற்றத்திற்கு உதவுமாறு ஸ்வாமியிடம் கேட்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமிகள், **"ஆன்மிக முன்னேற்றம் அடைய வேண்டுமென்றால் சித்த சுத்தி (தூய்மையான உள்ளம்) அவசியம். அதை அடைய வேண்டுமென்றால் எந்தவித பலனும் எதிர்பார்க்காமல் செயல்கள் புரிய வேண்டும், நாம் நம் கடமைகளை சுயநலம் இல்லாமல் வழிபாட்டின் ஒரு பகுதியாக நினைத்து செயல்பட வேண்டும். இப்படியே நடைமுறைப்படுத்தினால் நம்முள் இருக்கும் அகங்காரம் மெதுவாக அழிந்து, நம் பார்வை விசாலமாகும். மேலும் நம் உள்ளமும் விரிவடையும். நம்முடைய மனது தூய்மை அடைந்துவிட்டால், அப்போது சத்குருவின் தேவை அவசியமாகிறது. அவரைச் சரணடைந்து அவருக்கு சேவைகள் புரிய வேண்டும். பரமாத்மாவை பற்றியே சதா சிந்திப்பது, கேட்பது மற்றும் பிரதிபலிப்பது ஆகியவற்றில் மட்டுமே கவனம் கொண்டு, அந்த பாதையில் முன்னேற வேண்டும். இப்படிச் செய்தால் தவறான கருத்துக்களும் எண்ணங்களும் மறைந்து போகும். அறிவாற்றல் அகற்றப்படும். பிரம்மத்தைப் பற்றிய ஞானத்தை உணர்ந்து கொள்ள முடியும்"**




என்று கூறினார். இந்த போதனைகளுக்குப் பின் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சேவதாஸுக்கு ஸ்ரீ தத்தாத்ரேயராக தரிசனம் அளித்தார். மேலும் அவருக்கு யோக ரகசியங்களை கற்றுக் கொடுத்து, தன்னை உணர்ந்து கொள்வதற்கான வழிமுறைகளுக்கு பயிற்சி அளித்தார். சேவதாஸும் அவருடைய நண்பர்களும் பாக்கியம் பெற்றவர்கள். இல்லையேல் இப்படிப்பட்ட ஆசீர்வாதம் யாருக்கு கிடைக்கும்? அவர்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நாமத்தை ஜெபித்துக் கொண்டே கிர்னாரை விட்டுக் கிளம்பினர்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 16

# அம்பேஜோகையில்...

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கிர்னாரில் இருந்து மறைந்து மஹாராஷ்டிர மாநிலத்தில் உள்ள அம்பேஜோகை என்னும் இடத்திற்கு வந்தடைந்தார். அந்த ஊரில் ஸ்ரீ ஸ்வாமி பார்ப்பதற்கு கரடுமுரடான ஒரு கிராமவாசி போன்ற தோற்றத்தோடு தன்னை வெளிப்படுத்திக் கொண்டார். அவர் அங்கு தங்கியிருந்த போது தன்னை ஒரு வெகுளியாகக் காட்டிக்கொண்டார். அவர் ஆடு-மாடுகளை மேய்க்கும் மக்களோடு தங்கியிருந்தார்.

### பெண்ணை ஆணாக மாற்றுதல்

அந்த கிராமத்தில் ஆடுகளை மேய்க்கும் ஒரு சிறு பெண் இருந்தாள். அவளுக்கு ஐந்து வயதிருக்கும். பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருப்பாள். ஆனால் அவளுடைய பெற்றோர்கள் மிகவும் பணத்தாசை பிடித்தவர்களாக இருந்தனர். அவளுக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை மிகவும் பிடிக்கும். அவள் ஆடு-மாடுகளை மேய்க்கும்போது கொண்டுவரும் உணவுகளை ஸ்ரீ ஸ்வாமிகளோடு பகிர்ந்து கொள்வாள்.அவளுடைய பெற்றோர்கள் ஏழ்மையின் காரணமாக ஒரு தந்திரமான திட்டம் தீட்டினர். அவளை ஒரு பணக்காரருக்கு ஆண் குழந்தை போல் வேடமிட்டு விற்றுவிடலாம் என்று முடிவெடுத்தனர். எப்படியும் திருமணம் ஆகி செல்ல வேண்டியவள் தானே, இப்போதே சென்றுவிட்டால் என்ன! இந்தப் பெண்ணாவது பணக்கார வீட்டில்

சந்தோஷமாக வாழட்டும் என்று அவர்கள் மற்றவர்களுடைய வாயையும் அடைத்தனர்.

அந்தப் பணக்காரரர் இது கடவுளின் கருணை என்று எண்ணிக்கொண்டு அந்தச் சிறுமியை தத்தெடுத்துக் கொண்டார். ஆண் வேடத்தில் இருந்த பெண் காலப்போக்கில் அழகான இளைஞனாக மாறினாள். எப்போது தன் குட்டு வெளிப்படுமோ என்கிற பயத்துடன் அவள் இருந்தாள். அந்தப் பணக்காரரர் தன் மகனுக்கு திருமணம் செய்ய வேண்டும் என்று எண்ணினார். திருமணம் நிச்சயமானது.

திருமணத்தின் சடங்குகளுள் ஒன்றான மஞ்சள் பூசும் சடங்கிற்காக மணமகள் வீட்டிலிருந்து அனைவரும் வந்தனர். அப்போது அவர்கள் மாப்பிள்ளை பெண் என்று கண்டுபிடித்து விட்டனர். பிரச்சனை அதிகமானது. பணக்காரருக்கு விஷயம் தெரிந்து மன்னரிடம் புகார் அளித்தார். விவசாயி அவரை ஏமாற்றி விட்டதாக கூறினார். மன்னர் ஏதுமறியா அப்பெண்ணை கொல்ல வேண்டும் என்று தீர்ப்பளித்தார். சிப்பந்திகள் அந்தத் தீர்ப்பை நிறைவேற்றுவதற்காக அவளை மலைக்குக் கொண்டு சென்றனர். அவள் தாங்கமுடியாத வேதனையில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை மனமுருகி தன்னைக் காப்பாற்றுமாறு பிரார்த்தனை செய்தாள். அவள் மலையிலுள்ள மாமரத்தின் கீழ் அமர்ந்திருக்கும் தன் தாத்தாவை தரிசனம் செய்ய அனுமதிக்குமாறு கேட்டுக்கொண்டே இருந்தாள். சிப்பந்திகளில் சிலர் அவள் மீது இரக்கம் கொண்டு அந்த மரத்தினருகில் அழைத்து வந்தனர். அவள் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகில் சென்று **"தாத்தா, என்னை காப்பாற்றுங்கள்! நான் உங்கள் ஜாதிப்பெண் தானே! என்னை இவர்கள் கொல்லப்போகிறார்கள்"** என்று கதறியவாறே அவர் பாதங்களை பிடித்துகொண்டாள். அந்த ஏழைப் பெண்ணின் வேண்டுதலை செவிமடுத்து ஸ்ரீ ஸ்வாமிகள் அவளை அழைத்து தனக்கருகில் அமர்த்திக்கொண்டார். **"பயப்படாதே! நான் சாவுடன் கூட சண்டையிடுவேன்"** என்று கூறிக்கொண்டே அந்த சிப்பந்திகளுக்கு நரசிம்ம மூர்த்தி போல கோபத்துடன் காட்சியளித்தார்.

அவர் அவர்களிடம் **"அந்த பணக்காரனும் மன்னனும் உடனடியாக இங்கு வரவேண்டும். இல்லையேல் உங்களனைவரையும் எரித்து சாம்பலாக்கிவிடுவேன்"** என்று கர்ஜனை செய்தார். உடனே அவர்கள் ஓடிச்சென்று இருவரையும் அழைத்து வந்தனர். அவர்கள் இருவரும் நடந்ததை கேள்விப்பட்டு நடுங்கிக்கொண்டே நின்றுகொண்டிருந்தனர். ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களை




பார்த்து, **"நன்றாக பாருங்கள்! இது ஆணா அல்லது பெண்ணா?"** என்று கேட்டார். அனைவரின் ஆச்சரியத்திற்கும் இணங்க அங்கு பெண்ணுக்கு பதிலாக ஒரு ஆண் நின்று கொண்டிருந்தான்! **"உடனடியாக இவனுக்கு திருமண ஏற்பாடு செய்யுங்கள்"** என்று கூறினார். இந்த லீலையுடன் மஹாபாரதத்தில் வரும் ஷிகண்டியின் கதையை நாம் ஒப்பிடலாம்.

ஸ்ரீ ஸ்வாமிகள் நினைத்தால் அவரால் எதுவானாலும் செய்ய முடியும் என்பதை இந்த லீலையின் மூலம் நம்மால் உணர்ந்து கொள்ள முடிகிறது. அவரின் மீது அசாதாரணமான நம்பிக்கை வைத்து பிரார்த்தனை செய்தால் தன் பக்தனை அவர் எந்தவிதமான இக்கட்டான சூழ்நிலைகளில் இருந்தும் காப்பாற்றுவார் என்பது தெள்ளத் தெளிவாகிறது. பூரணமான பக்தியும் நம்பிக்கையும் இருந்தால் அனைத்தும் சாத்தியம். அவர் நம்மை ஏழு கடலுக்கும் அப்பால் எடுத்து செல்வார் என்பதில் எந்தவித ஐயமும் இல்லை.

அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமியின் இந்த லீலையை பார்த்து **'ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி உண்டாகட்டும்'** என்று கோஷம் எழுப்பினர்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 17

# ராமேஸ்வரத்தில்...

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அம்பேஜோகையில் இருந்து பல இடங்களுக்குச் சென்ற பின்னர் தமிழகத்தில் உள்ள ராமேஸ்வரம் வந்தடைந்தார். இங்கு வந்தடைந்தவுடன் அவர் பல்வேறு லீலைகளை நடத்திக் காட்டினார். மக்களின் துயரங்களை நீக்குவது, கவலையில் இருப்பவர்களுக்கு உதவி புரிதல் அதுமட்டு மல்லாமல் அவரை எவர் காண வந்தாலும் ஆசீர்வதித்து திருப்தியுடன் அனுப்பி வைப்பார். ராமேஸ்வரத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் எப்போதும் ஒரு மாமரத்தினடி யிலேயே அமர்ந்து கொண்டிருப்பார். அவர் உணவைப் பற்றியோ நிழலைப் பற்றியோ உடைகளைப் பற்றியோ ஒருபோதும் கவலைப்பட்டதே இல்லை.

### குமாஸ்த்தாவுக்கு அருள் புரிதல்

ஸ்ரீ ஸ்வாமிகள் மூன்று நாட்கள் தொடர்ந்து மாமரத்தடியில் சமாதி நிலையிலேயே அமர்ந்து கொண்டிருப்பதை அந்த கோவிலில் பணிபுரியும் ஒரு பிராமண குமாஸ்தா கவனித்தார். இவர் ஒரு சாதாரண மனிதனாக இருக்க முடியாது, இவர் ஒரு மஹாபுருஷர் என்பதை அவர் உணர்ந்து கொண்டார். அவர் மெதுவாக ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று தான் அளிக்கும் உணவை ஏற்றுக்கொண்டால் பாக்கியம் அடைவேன் என்று கூறினார். அந்த குமாஸ்தாவின் அன்பைப் புரிந்துகொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள், அவர் அனுப்பும் உணவில் சிறிதளவை மட்டும் தினமும் ஏற்றுக் கொண்டார்.

ஒரு நாள் அந்த குமாஸ்தா ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து தனக்கு அறுபது வயதாகியும் இன்னும் புத்திர பாக்கியம் கிடைக்கவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்தார். தனக்கு அருள் புரியுமாறு வேண்டிக்கொண்டார். **"உனக்கு மகன் பிறப்பான். ஆனால் அவன் உன்னை விட்டுச் சென்றுவிடுவான், இப்போது கிளம்பு!"** என்று கூறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அந்த இடத்தை விட்டுக் கிளம்பிவிட்டார். ஸ்ரீ ஸ்வாமிகள் அந்த இடத்தை விட்டு கிளம்பினாலும் அந்த மரத்தடியில் உணவு படைப்பதை அவர் நிறுத்தவில்லை. எப்போதும் சிறிதளவு உணவை மட்டும் எடுத்துக்கொள்ளும் ஸ்ரீ ஸ்வாமிகள் அன்றிலிருந்து முழு உணவையும் உண்ணத் தொடங்கினார். காலப்போக்கில் அவருடைய மனைவி ஒரு மகனைப் பெற்றெடுத்தாள்.

ஒரு நாள் அவர் உணவை மரத்தடியில் வைத்துவிட்டு வரும் போது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பதிலாக ஒரு பிசாசு அந்த உணவை உண்பதைக் கண்டார். நடப்பதை அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒரு நாள் அவர் ஸ்வாமி தரிசனம் செய்வதற்காக ராமேஸ்வரம் கோவிலுக்குச் சென்றார். அங்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இருப்பதைக் கண்டார். உடனே தன் மகனை ஸ்ரீ ஸ்வாமியிடம் ஆசீர்வாதம் வாங்கிக் கொள்ள அழைத்து வர வேண்டும் என்று அவர் எண்ணினார். அப்போது அவருடைய மகனுக்கு ஏழு வயதிருக்கும். அவன் கோவிலுக்குள் வர விரும்பாமல் பிடிவாதமாக இருந்தான். அவனை கட்டாயப்படுத்தி ஸ்ரீ ஸ்வாமிகளின் முன் கொண்டு வந்தவுடன் அவன் ஒரு அசிங்கமான உருவமாக மாறி தன்னை விடுவிக்குமாறு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் கேட்டுக் கொண்டது. உடனே கீழே விழுந்தவுடன் அவனுடைய உயிர் பிரிந்தது. இறந்த உடல் பத்தடிக்கு மேலே பறந்து சென்று பார்ப்பதற்கு மிகவும் அசிங்கமாகவும் கொடூரமாகவும் காணப்பட்டது.





நடப்பது ஏதுமறியாமல் பிராமண தம்பதி திடுக்கிட்டு நின்று கொண்டிருந்தனர். அந்த பிராமணப் பெண் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"இவன் உங்கள் அருளால் பிறந்தவன். இவன் எப்படி இறந்து போனான்? இது யாருடைய உடல்? இவ்வளவு அசிங்கமாக உள்ளதே! ஸ்வாமி, உங்கள் தரிசனம் எங்கள் விதியை இப்படி மாற்றி விட்டதே!"** என்று கேட்டுக் கதறினாள். முற்றும் உணர்ந்த ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவர்களைப் பார்த்து, **"உங்களுக்கு மகன் பிறப்பான் ஆனால் அவன் சென்றுவிடுவான் என்று நான்தான் முன்பே கூறினேனே! நீங்கள் தினமும் எனக்காக மரத்தடியில் வைத்த உணவை அந்த மரத்தில் குடியிருந்த ஒரு பிசாசு உண்டு வந்தது. அந்த பிசாசு தன் விசுவாசத்தை வெளிப்படுத்தும் விதமாக உங்களுக்கு மகனாகப் பிறந்தது. நான் இப்போது இந்த பிசாசுக்கு விடுதலை அளித்து விட்டேன். இந்த உடலை எரித்து விடுங்கள்"** என்று கூறினார். அங்கு கூடியிருந்த அனைவரும் **"ஸ்வாமி, இந்த உடலை எப்படி தூக்குவது?"** என்று கேட்டனர். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **"இவன் உடல் முழுவதும் விபூதியை பூசிவிடுங்கள். அது முன்பிருந்த உருவத்திற்கு மாறிவிடும்"** என்று கூறி அனுப்பினார்.

அந்த பிராமணன் ஈமச்சடங்குளை ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியபடியே முடித்துவிட்டு வருத்தத்துடன் அழுதுகொண்டே வந்தார். **"ஸ்வாமி, எனக்கும் வயதாகிவிட்டது. மகனும் இல்லை. எனக்கு புத்திர பாக்கியம் அருளுங்கள்"** என்று கேட்டுக்கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகள் **"உனக்கு மகன் பிறப்பான்"** என்று கூறி அவரை ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார். சிறிது நாட்களுக்குப் பிறகு அவருடைய மனைவி கர்ப்பம் தரித்து ஒரு ஆண் மகனைப் பெற்றெடுத்தாள். அதன்பின்னர் அவர்களுடைய பக்தி பன்மடங்காகப் பெருகியது. அவர்கள் தங்கள் இறுதி காலம் வரை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை வழிபட்டு சந்தோஷமாக வாழ்ந்தனர்.

### கோடி தீர்த்தத்தில் நிகழ்த்திய அற்புதம்

ராமேஸ்வரம் கோவிலில் கோடி தீர்த்தம் என்று ஒரு தீர்த்தம் உள்ளது. இந்த தீர்த்தத்தில் நீராடினால் மிகவும் புண்ணியம் என்பதினால் அங்கு தினமும் பல பக்தர்கள் வந்து நீராடுவர். அங்கிருந்த பூஜாரிகள் நாராயண தீர்த்தத்தில் இருந்த பூஜாரியைப் போலவே மிகவும் பேராசை பிடித்தவராக இருந்தனர். அங்கு வரும் பக்தர்கள் பணம் அளிக்கவில்லை என்றால் அவர்களை நீராட அனுமதிக்க மாட்டார்கள். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அங்கு நீராடச் சென்றார். அனைவரையும் போல ஸ்ரீ ஸ்வாமிகளிடமும் பணம் கேட்டனர்.





அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **"நானோ சந்நியாசி, என்னிடம் ஏது பணம்? கடவுள் அளிக்கும் நீர் அனைவருக்கும் கிடைக்க வேண்டும். பணம் இருப்பவர் இல்லாதவர் என்கிற வேறுபாடு பார்க்கக் கூடாது"** என்று கெஞ்சும் தொனியில் அறிவுரை கூறினார். அந்த பூஜாரிகள் கர்வ மிகுதியால் அவரை உள்ளே அனுமதிக்கவில்லை. ஸ்ரீ ஸ்வாமிகள் உடனே, **"எந்த புண்ணியத்திற்காக இங்கு நீராடுகிறார்களோ அந்த புண்ணியம் இனி இங்கிருக்காது"** என்று கோபமாகக் கூறிவிட்டு சென்று விட்டார்.

பூஜாரிகள் அவர் கூறுவதை துளியும் சட்டை செய்யவில்லை. ஆனால் அந்த தீர்த்தம் முழுவதும் புழுக்கள் நிரம்பி துர்நாற்றம் அடிக்கத் தொடங்கியது. அவர்கள் பல அபிஷேகம் மற்றும் பூஜைகள் செய்தும் எந்தவித மாற்றமும் இல்லை. அவர்கள் சிருங்கேரி சென்று சங்கராச்சாரியாரை சந்தித்து நடந்தவற்றை விவரித்தனர். சங்கராச்சாரியார் தியானத்தில் இவர்கள் ஒரு சந்நியாசியை அவமதித்தால்தான் இவ்வாறு நிகழ்ந்துள்ளது என்பதை அறிந்து கொண்டார். வந்தவர் ஒரு சாதாரண சந்நியாசி அல்ல அவர் ஒரு தத்த அவதாரம் என்பதையும் உணர்ந்து கொண்டார். அவரிடம் உடனடியாகச் சென்று மன்னிப்பு கேட்கவேண்டும் என்று கூறி அனுப்பி வைத்தார். ஊருக்கு வந்தவுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தேடி அலைந்தனர். அவரை எங்கு தேடியும் கிடைக்காமல் இறுதியில் ராமேஸ்வர சிவ லிங்கமே ஸ்ரீ ஸ்வாமிகளாக அமர்ந்திருப்பதைக் கண்டனர். அவர்களைப் பார்த்து ஸ்ரீ ஸ்வாமி, **"சிருங்கேரி பயணம் நன்றாக இருந்ததா? சங்கராச்சாரியாரை பார்த்தீர்களா?"** என்று கேட்டவுடன், அவர் முன் அவர்கள் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்துவிட்டு தங்களை மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டனர்.

கருணையின் மொத்த உருவமான ஸ்ரீ ஸ்வாமி அவர்களை மன்னித்து சில அறிவுரைகள் வழங்கினார். **"நீங்கள் பக்தர்களின் துயர் துடைக்க வேண்டிய உன்னதமான பூஜாரிகள். நீங்கள் எவரிடமும் பணம் வசூலிக்காமல் உங்கள் கடமைகளை பக்தி சிரத்தையுடன் நிறைவேற்ற வேண்டும்"** என்று கூறி அனுப்பி வைத்தார். அவரின் பரிபூரணமான ஆசீர்வாதத்தினால் அந்த தீர்த்தம் தன் புண்ணியத்தை மீண்டும் பெற்றது.

தெய்வீகம் நம் கண் முன்னே இருந்தாலும் அதை நம் மாயக் கண்களால் உணர்ந்து கொள்ள முடிவதில்லை! இதன் காரணமாகத்தான் அவதாரங்கள் பல அற்புதங்களை செய்து நமது அறியாமை மற்றும் மாயையை விலக்குகின்றனர் என்பது இந்த லீலைகளினால் நமக்கு தெளிவாகிறது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 18

# காஞ்சிபுரத்தில்...

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ராமேஸ்வரத்திலிருந்து கிளம்பி காஞ்சிபுரம் வந்தடைந்தார். காஞ்சிபுரம் க்ஷேத்ரம் பதினெட்டு சக்தி பீடங்களில் ஒன்றான காமாக்ஷி அம்மனின் உறைவிடம். இங்கு ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்த ஸ்ரீ யந்திரம் உள்ளது. சமீபத்தில் ஸ்ரீசக்ரபுரம் என்று அழைக்கப்படும் காஞ்சிபுரத்தைச் சுற்றி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கோவில்கள் உருவாகியிருப்பது இந்த நகரத்தின் சிறப்பை பறைசாற்றுகிறது.

**சைவர்கள்-வைணவர்கள்**

காஞ்சிபுரத்தில் சைவர்கள் மற்றும் வைணவர்கள் இருவரும் சமமான அளவில் வாழ்ந்து வந்தனர். அக்காலத்தில் காஞ்சிபுரம் சிவகாஞ்சி மற்றும் விஷ்ணுகாஞ்சி என்று இரண்டாக பிரிந்திருந்தது. அப்போதிருந்த அரசாங்கம் இரண்டு காஞ்சியையும் வைணவர்களிடம் ஒப்படைக்க வேண்டுமானால் அதற்கு அவர்கள் பெற்றுக்கொண்ட சரியான பரிசுப் பத்திரங்களை அவர்களிடம் சமர்ப்பிக்க வேண்டும் என்ற நிபந்தனை விடுத்தனர். அப்படி அவர்கள் தகுந்த பத்திரங்களை சமர்ப்பிக்கவில்லை என்றால் காஞ்சிபுரம் முழுவதையும் தங்கள் கட்டுப்பாட்டில் எடுத்துக்கொள்ளப் போவதாகக் கூறினர். இது வைணவர்களுக்கு மிகுந்த சங்கடத்தை ஏற்படுத்தியது.

இந்த பிரச்சனைகள் நடந்து கொண்டிருந்த சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சிவகாஞ்சியில் இருந்தார். வைணவர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தஞ்சம் அடைந்தனர். கருணையின் மறுவடிவான ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களைப் பார்த்தவுடன் அரசாங்க அதிகாரிகள் அனைவரையும் அவரிடம் அழைத்து வரச்சொன்னார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களிடம், **"ஏ! மாதர்சோத் (கெட்டவார்த்தை) இந்த இரண்டு கிராமங்களையும் கைப்பற்றிக் கொண்டு அனைவரையும் பசியால் துன்புறுத்திக் கொல்லப் போகிறீர்களா?"** என்று கேட்டவுடன் **"எங்களுக்கு சரியான ஆதாரம் கிடைத்தால் விட்டு விடப் போகிறோம்!"** என்றனர். **"இதோ இங்கே ஓடுகிறதே இந்த நதியில் போய்த் தேடுங்கள். அங்கிருக்கும் கல்லில் அனைத்தும் எழுதப்பட்டிருக்கிறது"** என்று கூறினார். அதிகாரிகள் அங்கு சென்று தேடிய போது ஒரு கல்லில் அனைத்து

 

சான்றுகளும் பொறிக்கப்பட்டிருந்தன. அந்த கிராமம் பரிசளிக்கப்பட்ட தினம், மாதம், வருடம், யார் பரிசளித்தார்கள், எந்த காரணத்திற்காக போன்ற அனைத்து விஷயங்களும் அதில் இருந்தது.

அதிகாரிகள் இரு கிராமங்களையும் விடுவித்தனர். வைணவர்களின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளை முழு நம்பிக்கையுடன் வணங்கி நைவேத்தியங்கள் படைத்து தங்கள் நன்றிகளை வெளிப்படுத்தினர்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 19

# ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ராஜூர் வருதல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பின்னர் மஹாராஷ்டிர மாநிலத்தில் உள்ள ராஜூர் என்ற இடத்தைச் சென்றடைந்தார். அப்போதெல்லாம் ஸ்ரீ ஸ்வாமிகளை **"சஞ்சல் பாரதி"** என்று அனைவரும் அழைப்பர். அங்கு பழைய மடம் ஒன்று இருந்தது. அவர் அந்த மடத்திற்குச் சென்றார். அவர் அந்த மடத்திற்கு வந்தவுடன் அவரை தத்தாத்ரேயரின் அவதாரம் என்று உணர்ந்து கொண்டு அனைவரும் தரிசனம் செய்து வந்தனர். அந்த மடத்திற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் புனருத்தாரணம் செய்தார். லால்பாரதி மற்றும் அங்கிருக்கும் பல பக்தர்களுக்கும் யோகப்பாதையை துவக்கி வைத்தார். அந்த மடத்திற்கு சர்காரிடமிருந்து வருடத்திற்கு 1000 ரூபாய் நிரந்தர வருமானம் கிடைக்குமாறு ஏற்பாடு செய்தார். இவ்வாறு மடத்தின் தினசரி நடவடிக்கைகள் எந்தவித தொய்வும் ஏற்படாமல் தொடர்ந்து நடைபெற்று வந்தது.

ஒருநாள் தன் பாதுகைகளை ராஜூரில் உள்ள மடத்தில் விட்டுவிட்டு அங்கிருந்து கிளம்பினார். அந்த பாதுகைகள் இன்றும் அந்த மடத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. பின்னர் உடுப்பிக்கு சென்று ஸ்ரீ கிருஷ்ணரை தரிசனம் செய்துவிட்டு பண்டரிபுரம் வந்தடைந்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 20

# பண்டரிபுரத்தில் பண்டரிநாதனாக...

### பண்டரிபுர நதிக்கரையில்

எப்போதும் போலவே ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமிகள் ராஜூரில் இருந்து திடீரென மறைந்து பண்டரிபுரத்தில் உள்ள சந்திரபாகா நதிக்கரையில் தென்பட்டார். அப்போது அந்த நதியில் வெள்ளம் பிரவாகம் எடுத்து வந்தது. படகு சவாரிக்கு அனுமதி இல்லை. எப்படிப்பட்ட வெள்ளமாக இருந்தாலும் ஸ்ரீ ஸ்வாமிகளை என்ன செய்துவிட முடியும்? அந்த வெள்ளப்பெருக்கின் மீது தன் பாதுகைகளோடு நடந்து சென்று அக்கரையை அடைந்தார். இந்த காட்சியைப் பார்த்த பண்டரிபுர மக்கள் அனைவரும் அவரைப் பலவாறு போற்றி துதித்தனர். (இந்த நிகழ்ச்சி நடைபெற்றபோது ஸ்ரீ ஸ்வாமிகள் ராஜூரில் தங்கியிருந்தார். இருப்பினும் அவர் பண்டரிபுரத்திலும் காணப்பட்டார் என்று சிலர் கூறுகின்றனர்).

### வயதான பக்தருக்கு பண்டரிநாதனாக காட்சியளித்தல்

யாத்ரீகர்கள் கூட்டம் ஒன்று சந்திரபாகா நதிக்கரையில் தங்கியிருந்தனர். அவர்களுள் பாண்டுரங்கன் மீது அதீத பக்தி கொண்ட சோம்நாத் என்ற பெயருடன் ஒரு வயதான வார்க்கரி இருந்தார். கோவிலில் பக்தர்கள் கூட்டம் அதிகமாக இருந்ததால் அவரால் ஸ்வாமி தரிசனத்துக்குச் செல்ல முடியவில்லை. ஸ்வாமி மகராஜ் அவர் முன் விட்டல பாண்டுரங்கனாக காட்சி அளித்தார்.

இதைக் கண்டவுடன் பெரியவர் திக்குமுக்காடிப் போனார். தேஜஸுடன் கூடிய உருவத்தில் தன் பாண்டுரங்கனை கௌபீனம் அணிந்து கொண்டு நீளமான கைகள்-கால்களுடன் பார்த்தவுடன் அவர் மூர்ச்சையடைந்தார். ஸ்ரீ ஸ்வாமி தன் விஸ்வரூப தரிசனத்திலிருந்து சாதாரண நிலைக்கு திரும்பினார். அவர் சோம்நாத்தின் அருகில் அமர்ந்து கொண்டு, **"உன் பாண்டுரங்கனை உன் உள்ளம் நிறையும் அளவுக்கு தரிசனம் செய்தாயா?"** என்று கேட்டார். சோம்நாத் புவா என்ன கூறுவது என்று தெரியாமல் வாயடைத்து நின்று கொண்டிருந்த போது, ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அந்த இடத்தை விட்டுச் சென்றுவிட்டார்.

அதே யாத்ரீக குழு சில நாட்களுக்கு பின்னர் மங்கள்வேடாவுக்கு சென்றபோது சோம்நாத் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பதிலாக பண்டரிநாதனைக் கண்டார். அவர் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. இனி தன்

மீதமுள்ள வாழ்நாள் முழுவதும் ஸ்ரீ ஸ்வாமிக்கே சேவை செய்யலாம் என்று முடிவு செய்து அங்கேயே தங்கிவிட்டார். ஒன்பது ஆண்டு காலம் சேவை செய்த பின்னர் மங்கள்வேடாவில் அவர் உயிர் பிரிந்தது.

இந்த நிகழ்ச்சிகளோடு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் முதல் கட்ட சரித்திரம் நிறைவடைகிறது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நிகழ்த்திய லீலைகள் அனைத்தையும் ஒரு மாயாஜாலங்கள் என்கிற பாணியில் புரிந்துகொள்ளக் கூடாது. அவை அனைத்தும் ஏதோ ஒரு உள்ளர்த்தத்துடன் நிகழ்த்தப்பட்டன. ஒரு அவதாரம் ஏதோ ஒரு காரணத்திற்காக பூமியில் உதித்துள்ளது என்பதை மக்களுக்கு உணர்த்துவதற்காக அவை அனைத்தும் நடந்தேறின. மேலும் அவர் எந்த இடங்களுக்கு முதலில் சென்றார் என்கிற வரிசையை யாராலும் சரியாக குறிப்பிட முடியவில்லை. சில சமயம் அவர் பல இடங்களிலும் ஒரேநேரத்தில் தோன்றி லீலைகள் புரிந்திருக்கலாம் என்று நம்பப்படுகிறது.

பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகள் மங்கள்வேடா என்கிற இடத்திற்கு கி.பி. *1838* இல் வந்தடைந்தார். இங்கு *12* ஆண்டுகள் தங்கியிருந்து பல லீலைகள் புரிந்திருக்கிறார். அவற்றை தொடர்ந்து வரும் அத்தியாயங்களில் பார்ப்போம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 21

# மங்கள்வேடாவில் தங்கியிருத்தல்

கி.பி. *1838* ஆம் வருடத்தில் பண்டரிபுரத்தில் இருந்து கிளம்பிய ஸ்ரீ ஸ்வாமிகள், மங்கள்வேடா என்னும் இடத்தை வந்தடைந்தார். அவர் *12* ஆண்டுகள், அதாவது ஒரு புஷ்கரம் இங்கு தங்கியிருந்தார். மங்கள்வேடா சோலாப்பூர் மாவட்டத்தில் அமைந்துள்ளது. இந்த இடத்தை ஆன்மிகத் துறவிகள் பலர் புனிதமாக்கியுள்ளனர். தாமாஜி பான்ட், கன்ஹோபாத்ரா, சோகா மேளா, கோவிந்த பாபா, முனி பாபா, பாலகிருஷ்ண புவா போன்ற சான்றோர்களால் மங்கள்வேடா புனிதம் அடைந்துள்ளது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இந்த இடத்தில் தங்கி மேலும் புனிதம் வாய்ந்ததாக மாற்றினார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மங்கள்வேடாவுக்கு முதன்முதலாக வந்தபோது அவரை யாராலும் சரியாக அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. சிலர் அவரை திகம்பர் புவா என்று அழைத்தனர். மற்றவர்கள் அவரை சஞ்சல் பாரதி என்றும் மற்ற சிலர் சைதன்ய நரசிம்ம சரஸ்வதி என்றும் அழைத்தனர். சில சமயம் குழந்தை போலவும், சில சமயம் பித்து பிடித்தவர் போலவும், சில சமயம் பிசாசு பிடித்தவர் போலவும் நடந்து கொள்வார். அவர் ஊருக்கு வெளியே இருந்த காட்டுப் பகுதியில் தங்கியிருந்தார். அந்த வழியாக செல்லும் பயணியர்கள் எந்த உணவை அளித்தாலும் அதை உட்கொண்டார். அவர் உணவைப் பற்றி ஒருபோதும் கவலைப்பட்டதில்லை, அதனால் பிக்ஷை எடுக்க தன் இருப்பிடத்தை விட்டு நகரவே இல்லை. அவருக்குள் இருந்த ஆன்மிக சக்தி அவர் உடலுக்கு சக்தி அளித்துக் கொண்டிருந்தது. அப்படியே ஊருக்குள் நுழைந்தாலும் அழுக்கான இடங்களில் அமர்ந்து கொள்வார். சுகாதாரம் பற்றியெல்லாம் யோசனையே இல்லாமல் எப்போதும் பேரானந்த நிலையிலேயே இருப்பார்.

பாலகிருஷ்ண புவா என்கிற ஒருவர் ஸ்ரீ ஸ்வாமிகளை அடையாளம் கண்டுகொண்டார். இவர் ஸ்ரீ தத்தாத்ரேயர்தான் என்பதை உணர்ந்து கொண்டு அவருக்குப் பல சேவைகள் புரியத் தொடங்கினார். அவர் எப்போதெல்லாம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசிக்கிறாரோ அப்போதெல்லாம் அவர் பண்டரிபுரத்தில் உள்ள ஸ்ரீ கிருஷ்ணர் எப்படி இடுப்பில் கை வைத்துக் கொண்டு நின்று கொண்டிருப்பாரோ அதேபோல் தரிசனம் செய்தார். ஸ்ரீ பாலகிருஷ்ண புவாவுக்கு எப்போதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நினைவாகவே இருந்தது. அவரை எப்போதும் தரிசனம் செய்து கொண்டே இருக்க வேண்டும் போல இருந்தது. அவர் தன்னையே மறந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நினைவுகளில் ஆழ்ந்திருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் மங்கள்வேடாவில் தங்கியிருந்த சமயத்தில் சில ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் பின்வரும் இந்த அற்புதமான லீலையை கண்டனர்.

ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒரு ஆற்றின் கரையில் அமர்ந்து கொண்டிருந்தார். ஆற்றின் அக்கரையில் இருந்து ஒளி பொருந்திய உடலுடன் இரண்டு உருவங்கள் ஸ்ரீ ஸ்வாமிகளை நோக்கி வந்தன. அந்த இரண்டு உருவங்களின் முகத்தைச் சுற்றி ஒளிவட்டம் இருந்தது. அவர்கள் யாருக்கும் புரியாத ஒரு பாஷையில் பேசிக் கொண்டார்கள். அந்த உருவத்தில் ஒன்று, **“ஏன் அழுகிறாய்?”** என்றது. மற்றொன்று **“ஏன் அழைத்தாய்?”** என்றது. ஸ்ரீ

ஸ்வாமி சமர்த்தர் "ஏன் அதைச் செய்கிறாய்?" என்றார். அவர்களின் உரையாடல் இதுபோன்று விசித்திரமாகவே இருந்தது. சிறிது நேரத்திற்குப் பிறகு அவர்கள் மூவரும் அருகில் இருந்த மலைமேல் ஏறினர். அவர்கள் மூவரும் சிறிது நேரத்திற்கு ஆழ்ந்த உரையாடலில் ஈடுபட்டனர். இறுதியாக ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மட்டும் தனியாக இறங்கி வந்தார். இந்த நிகழ்ச்சி குரு தத்தாத்ரேயரின் மூன்று அவதாரங்களான ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர், ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி மற்றும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஆகிய மூவரும் ஒன்று கூடி ஏதோ ஒரு தெய்வீக பணிக்கான திட்டம் தீட்டியுள்ளனர் என்று அனைவராலும் நம்பப்படுகின்றது.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை முதலில் பைத்தியக்கார பிச்சைக்காரன் என்று நினைத்த மங்கள்வேடா மக்கள் அனைவருக்கும் தன் அற்புதமான லீலைகள் மூலம் தன்னை ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம் என்பதை வெளிப்படுத்திக் கொண்டார். பிறகு மக்கள் கூட்டம் கூட்டமாக அவரை தரிசிக்க வரத்தொடங்கி அவருடைய தீவிரமான பக்தர்கள் ஆனார்கள். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மங்கள்வேடாவில் செய்த அற்புதங்களை தொடர்ந்து வரும் அத்தியாயங்களில் பார்ப்போம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 22

# கிருஷ்ணம் பட் வீட்டு மலட்டுப் பசு

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மங்கள்வேடா வந்து அப்போது சிறிது காலம்தான் ஆகியிருந்தது. வேதம் மற்றும் சாஸ்திரங்களில் கைதேர்ந்தவரான கிருஷ்ணம் பட் என்கிற பிராமணர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்தார். அப்போது ஸ்ரீ ஸ்வாமி ஸ்ரீ தாமாஜி கோவிலில் அமர்ந்து கொண்டிருந்தார். அவரை அங்கு கண்டவுடன் கிருஷ்ணம் பட் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதகமலத்தில் விழுந்து நமஸ்கரித்தார். கிருஷ்ணம் பட் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"ஸ்வாமி, நீங்கள் எங்கிருந்து வந்திருக்கிறீர்கள் என்பது எனக்கு தெரியாது. இப்போது இரவு நெருங்கிக் கொண்டிருக்கிறது. நாளை நீங்கள் என் வீட்டிற்கு**

**வந்து எங்கள் வீட்டை புனிதமாக்க வேண்டும்**" என்று கேட்டுக்கொண்டார். கிருஷ்ணம் பட்டின் உண்மையான பக்தியில் அகமகிழ்ந்த ஸ்ரீ ஸ்வாமிகள் அவருடைய வீட்டுக்கு வருவதாகக் கூறினார்.

கூறியது போலவே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அடுத்த நாள் அவர் வீட்டுக்குச் சென்றார். ஸ்ரீ ஸ்வாமிகளை ஒரு இடத்தில் அமரச் சொல்லிவிட்டு தன் மனைவியை ,அவருக்கு ஏதாவது உணவு சமைக்குமாறு கூறினார். அவருடைய மனைவி கீதா பாய்க்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. அடுக்களையில் அரிசி துளியும் இல்லை. அதை புரிந்துகொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள் "**எனக்கு தஷ்மி ரொட்டி**" என்றால் மிகவும் பிடிக்கும் என்று கூறினார். வீட்டில் இருந்த பொருட்களை வைத்து ரொட்டி தயார் செய்வதற்கு ஆயத்தம் ஆனாள். அதற்கு தேவையான பால் வாங்குவதற்காக வெளியே கிளம்பினாள். அதை கவனித்த ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், "**உங்கள் வீட்டிலேயே பசு இருக்கும் போது ஏன் வெளியே சென்று வாங்க வேண்டும்?**" என்று கேட்டார். "**ஸ்வாமி, இந்த பசு எங்களுக்கு பால் கொடுப்பதை நிறுத்தி நான்கு வருடங்கள் ஆகிவிட்டது**" என்று கூறினாள். "அப்படியா, பாத்திரம் கொண்டுவந்து பால் கறந்து பார்" என்று கூறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமி அந்த பசுவிடம் சென்று, "**காயத்ரி கோமாதா, இந்த பிராமணன் மிகவும் ஏழ்மையானவர். நீ அவரிடம் அன்பாக நடந்து கொள்ளவில்லையென்றால் அவர் என்ன செய்வார்! அவர் குடும்பத்தை காப்பாற்ற வேண்டாமா?**" என்று கூறி அதனை தடவிக் கொடுத்தார்.

கீதாபாய் அந்த பசுவிடம் பால் கறக்கத் துவங்கியவுடன் அருவி போல் பால் கொட்டியது. பிராமண தம்பதி சந்தோஷத்தில் திக்குமுக்காடி நின்றனர். ஏழைகளின் பங்காளனான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கருணைக்கு எல்லைதான் ஏது?

கீதா பாய் சமைத்துக் கொடுத்த ரொட்டியை வயிறார உண்டபின்னர் அவர்களை ஆசீர்வதித்து அவர்களின் ஏழ்மையை முழுவதுமாக நீக்கிவிட்டு விடைபெற்றுச் சென்றார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**




## அத்தியாயம் 23

# பாம்பு தங்கமானது

மங்கள்வேடாவில் பசப்பா தேளி என்கிற எண்ணெய் வியாபாரி ஸ்ரீ ஸ்வாமிகளை தொடர்ந்து கவனித்துக் கொண்டே இருந்தான். அவர் எப்போதும் முட்களின் நடுவில் படுத்திருந்தாலும் அவருடைய முகத்தின் தேஜஸ் அவனுக்கு பல உண்மைகளை உரைத்தது. இவர் யாராக இருக்கக்கூடும் என்று அவன் மனதில் நினைத்தவுடன், **"நான் யாராக இருந்தால் உனக்கென்ன?"** என்று அவர் பதிலளித்தார். பசப்பா இவர் ஒரு மகாபுருஷர் என்பதை உணர்ந்துகொண்டு அவர் மீது அதீத பக்தியுடன் இருந்து வந்தான். அவர் எங்கு சென்றாலும் அவனும் அவரை பின்தொடர்வான்.

பசப்பா ஒரு பரம ஏழை. தன் குடும்பத்தை சமாளிப்பது அவனுக்கு மிகப்பெரிய சவாலாக இருந்தது. அவனுடைய மனைவிதான் சம்பாதித்து குடும்பப் பொறுப்புகளை நிர்வகித்துக் கொண்டிருந்தாள். தன் கணவனோ பொறுப்பில்லாமல் ஒரு பைத்தியகாரத் துறவியின் பின்னால் அலைவது அவளுக்கு மிகுந்த கோபத்தை ஏற்படுத்தியது. இப்படியே பல ஆண்டுகள் உருண்டோடின.

ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அடர்ந்த வனப்பகுதியில் உலாவிக் கொண்டிருந்த போது பசப்பாவும் அவரை பின்தொடர்ந்தான். திடீரென பாம்புகள் கூட்டமாக வந்தன. பசப்பா பயத்தில் நடுங்கிக்கொண்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பின்னால் பதுங்கிக் கொண்டான். ஸ்ரீ ஸ்வாமியோ எந்த கலக்கமும் இல்லாமல் இருந்தார். **"பசப்பா பயப்படாதே! உனக்கு எவ்வளவு பாம்புகள் வேண்டுமோ அத்தனை பாம்புகளையும் எடுத்து உன் பையில் போட்டுக் கொண்டு வீட்டுக்கு செல்"** என்றார். பசப்பாவுக்கு பயம் இருந்தாலும் ஸ்ரீ ஸ்வாமியின் வாக்கை மீறக்கூடாது என்கிற எண்ணத்தில் இரண்டடிக்கு மேல் நீளமுள்ள ஒரு பாம்பை எடுத்து தன் பையில் போட்டுக்கொண்டு தன் அக்குளில் வைத்துக்கொண்டான். **"பையில் இருப்பதை வைத்துக்கொண்டு சந்தோஷமாக உன் குடும்பத்தை நடத்து. இப்போது வீட்டுக்குக் கிளம்பு"** என்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஆணையிட்டார்.

பயத்தில் நடுங்கிக் கொண்டே ஒரு வழியாக அவன் வீடு வந்து சேர்ந்தான். வீட்டுக்கு வந்து பையை திறந்து பார்க்கும் போது பை கனமாக இருந்தது. உள்ளே பாம்புக்கு பதில் தங்கக்கட்டி இருந்தது! ஸ்ரீ ஸ்வாமியின்





வார்த்தைகளை நம்பினால் அவர் எவ்வளவு பெரிய பரிசை அளிப்பார் என்பதை இந்த நிகழ்ச்சியின் மூலம் நாம் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியும். நமக்கு பாம்பு போல எவ்வளவு பெரிய இடர்கள் வந்தாலும் குருவின் கடாக்ஷம் கிடைத்து விட்டால் அனைத்தும் ஒரு நொடிப்பொழுதில் மறைத்துவிடும் என்பதை எடுத்துக் கூற இந்த நிகழ்ச்சியை விட வேறென்ன சான்று வேண்டும்? பசப்பா அந்த தங்கத்தை வைத்துக் கொண்டு, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை நினைத்துக் கொண்டே தன் மீதமுள்ள நாட்களை சந்தோஷமாக கழித்தான்.

எந்த மக்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை பரிகாசம் செய்தார்களோ அவர்கள் அனைவரும் அவருடைய பராக்கிரமங்களை உணர்ந்து கொள்ளத் துவங்கினர். பலர் அவருடைய பக்தர்களாக மாறினார். அவருடைய புகழ் திக்கெட்டும் பரவத் தொடங்கியது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 24

# வறண்ட கிணற்றில் தண்ணீர் வரவழைத்தல்

மங்கள்வேடாவில் பாபாஜி பட் என்கிற பிராமணர் ஒருவர் வாழ்ந்து வந்தார். ஸ்ரீ ஸ்வாமி எப்போதும் அவர் வீட்டுக்குச் சென்று வருவார். சில சமயம் அவர் வீட்டில் தங்கவும் செய்வார் (15 நாட்கள் முதல் ஒரு மாதம் வரை). ஒரு வெயில் காலத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவர் வீட்டுக்குள் நுழைந்து தன் தாகத்தை தணித்துக்கொள்ள தண்ணீர் கேட்டார். வீட்டில் இருந்த அவருடைய மனைவி ஸ்ரீ ஸ்வாமிகளை தன் வீட்டில் கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைந்து அவருக்காக தண்ணீர் கொண்டுவரச் சென்றாள். அவர்கள் வீட்டில் இருந்த தண்ணீர் மிகவும் அழுக்காக கலங்கி இருந்தது. அடடே! இப்படி ஒரு கலங்கிய தண்ணீரை எப்படி ஸ்ரீ ஸ்வாமிக்கு கொடுப்பது என்ற யோசனையோடு அக்கம்பக்கத்தில் உள்ளவரின் வீட்டிலிருந்து தண்ணீர் கேட்க

ஓடினாள். மேலும் அவர்கள் வீட்டிலிருக்கும் கிணறும் வற்றிப்போய் இருந்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவருக்கே உரிய பாணியில் பலமாக சிரித்துக்கொண்டே, **"அம்மா! ஏன் இவ்வளவு தொலைவு செல்கிறீர்கள்? உங்கள் வீட்டு கிணற்றிலேயே குளுமையான இனிப்பு தண்ணீர் இருக்கிறதே! எதற்காக வேறொரு கிணற்றைத் தேடி ஓடுகிறீர்கள்?"** என்று கேட்டார். **"ஸ்வாமி, எங்கள் வீட்டு கிணற்றில் வெயில் காலங்களில் தண்ணீர் வற்றிவிடும். அதனால் வெளியே சென்று தண்ணீர் கொண்டு வருகிறேன்"** என்று பவ்யமாக கூறினாள். **"அப்படியா! வா பார்க்கலாம்"** என்று கூறிக்கொண்டே ஸ்ரீ ஸ்வாமிகளும் அவளுடன் சேர்ந்து கிணற்றடிக்கு சென்றார். அங்கு சென்று அந்த கிணற்றில் ஸ்ரீ ஸ்வாமி சிறுநீர் கழித்தார். என்ன ஒரு ஆச்சரியம்! அந்த கிணற்றில் இருந்து கங்கை பிரவாகம் எடுத்து ஓடி வருவது போல குபுகுபுவென தண்ணீர் பொங்கியது. அந்த கங்கையே தன் கடவுளின் தாகத்தைத் தணிக்க ஓடிவந்து விட்டாளோ? இந்த அற்புதத்தைக் காண அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் வந்தனர். இந்த நிகழ்ச்சியைக் கேள்விப்பட்டு வெளியே சென்றிருந்த பாபாஜி பட் ஓடோடி வந்தார். கிணற்று நீர் மிகவும் இனிப்பாகவும் தூய்மையாகவும் இருந்தது. இந்நிகழ்ச்சி நடைபெற்றதற்கு பிறகு அவர்கள் வீட்டில் தண்ணீர் பஞ்சமே இல்லை. ஸ்ரீ ஸ்வாமிகளின் மகிமைகளை என்னவென்று விவரிப்பது! அதற்கு சரியான வார்த்தைகள் உண்டோ!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 25

# கண் பார்வை அருளுதல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மங்கள்வேடாவில் தங்கியிருந்த சமயத்தில் அம்மை நோய் தாக்கத்தால் கண்பார்வை இழந்த தன் மகனை அழைத்துக் கொண்டு ஒரு தாய் வந்தாள். அந்த குழந்தையின் கண் பார்வையை சரி செய்வதற்காக அவள் பல வைத்திய முறைகளை கையாண்டும் எதுவும் பலனளிக்கவில்லை. அவள் வேறு வழி தெரியாமல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் அடைக்கலம்

அடைந்தாள். அவள் தன் குழந்தையின் நிலையை ஸ்ரீ ஸ்வாமியிடம் கூறி கதறி அழுதாள். நம் கதறல்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை உருக வைக்காதா! அவருடைய அருட்பார்வை அந்த குழந்தையின் மீது விழுந்தது.

உடனே அவர் அருகில் இருந்த மரத்திலிருந்து இலைகளை பறித்து அதை கசக்கிவிட்டு அந்த குழந்தையின் கண்களில் வைத்து ஒரு துணியால் கட்டு போட்டுவிட்டார். அதை மூன்று நாட்களுக்கு அவிழ்க்கக் கூடாது என்றும் தாய் மூன்று நாட்களுக்கு உபவாசம் இருக்க வேண்டும் என்றும் கூறி அனுப்பி வைத்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கூறிய படியே அப்பெண்மணி செய்தாள். பிறகென்ன! அந்த குழந்தைக்குக் கண்பார்வை மீண்டும் கிடைத்தது என்று கூறத்தான் வேண்டுமா?

ஸ்ரீ தத்த அவதாரிகளின் வைத்திய முறைகள் எப்போதும் வினோதமாகவும், விசித்திரமாகவும் இருக்கும். இது போன்ற தவிர்க்க வேண்டிய பொருட்களைக் கொண்டு ஸ்ரீ தத்தாத்ரேயரின் அனைத்து அவதாரங்களும் வைத்தியம் செய்திருப்பத்தை நாம் இங்கு நினைவு கொள்வோம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 26

# இஸ்லாமிய அவுலியா

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மங்கள்வேடாவுக்கு அருகில் இருக்கும் பட்வர்தன் என்னும் வனப்பகுதியில் தங்கியிருந்தார். இஸ்லாமியர் ஒருவர் எப்போதும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக வருவார். அந்த இஸ்லாமியர் பரம ஏழை. அவர் வீடுவீடாகச் சென்று யாசகம் பெற்று உணவருந்துவார். அவர் ஸ்வாமிக்கு புகைக்குழாய் (மண்குழாய்- புகையிலை நிரப்பி புகைபிடிக்க பயன்படுத்தப்படும்) தயாரித்துக் கொடுப்பார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் எப்போதாவது விரும்பி புகைபிடிப்பதுண்டு.

ஒருமுறை அவ்வாறு அவர் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக காட்டுக்குச் சென்ற போது அவருடைய சேவைகளால் ஸ்ரீ ஸ்வாமிகள் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். தன் திருக்கரங்களால் அந்த இஸ்லாமியரின் தலையை

தொட்டார். அவர் உடனடியாக சமாதி நிலைக்குச் சென்றார். என்ன ஒரு பேரதிர்ஷ்டம்!

சிறு சேவைகளாலேயே மகிழ்ச்சி அடையும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அந்த இஸ்லாமியரை உன்னதமான நிலைக்குக் கொண்டு சென்றார். அவர் பின்னாட்களில் அவுலியா என்று அழைக்கப்படும் இஸ்லாமிய துறவியானார். அவர் இடம் இடமாக அலைந்து கொண்டு, வெளித்தோற்றத்தில் ஒரு பித்து போலத் தெரிந்தாலும் அவர் உண்மையில் ஒரு மகாயோக நிலையில் இருந்தார்.

இந்த இஸ்லாமியர் பின்னர் பண்டரிபுரம், சதாரா போன்ற இடங்களுக்கு பயணம் செய்து இறுதியில் கிருஷ்ணா நதியின் கரையில் நிரந்தரமாகத் தங்கினார். அவருடைய வினோதமான தோற்றத்தினால் ஊரில் உள்ளவர்கள் அனைவருக்கும் அவரை அடையாளம் தெரிந்திருந்தது. அவர் எப்போதும் தனிமையை விரும்பினார். அவர் அனைவர் மீதும் கற்களை வீசி எறிவார். அப்படி செய்தால் எவரும் அவருக்கு அருகில் வரமாட்டார்கள் என்பதினால் இவ்வாறு நடந்து கொள்வார். அவர் கற்களைத் தூக்கி வீசும் போது யாருக்கும் காயம் ஏற்படாதவாறு வீசுவார். அப்படி தெரியாமல் யார் மீதாவது கற்கள் பட்டுவிட்டால் அவர்கள் மிகவும் ஆசீர்வதிக்கப்பட்டதாக நினைத்துக் கொள்வார்கள். தங்கள் விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறி விடும் என்று நம்பினர். நாம் மனதார செய்யும் சிறு சிறு சேவைகளில் கூட மிகவும் மகிழ்ச்சி அடைந்து மிகப்பெரிய வரங்களை அள்ளித் தருவதில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு இணை அவர் மட்டுமே!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 27

# ஏழை நெசவாளிக்கு அருளுதல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மங்கள்வேடாவில் வாசம் செய்த காலத்தில் ஏழை நெசவாளி ஒருவன் எப்போதும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்ய வருவான். அவன் பிக்ஷை எடுத்துதான் தன் ஜீவனத்தை நடத்தி வந்தான். ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்த பின்னர் அவருக்கே தன்னை அர்ப்பணித்து சேவை செய்து தன் காலத்தைக் கழித்து விடலாம் என்று முடிவு செய்தான். இவ்வாறு மூன்று மாதங்களுக்கு அவனுடைய சேவை தொடர்ந்து கொண்டிருந்தது.

அவனுடைய ஒருமுகமான சேவைகளால் ஸ்ரீ ஸ்வாமிகள் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவனுடைய கனவில் பிரத்யக்ஷமாகி, **“உன் தந்தை ஒரு மிகப்பெரிய வியாபாரி. அவர் பண்டரிபுரத்தில் நடந்த ஒரு திருவிழாவிற்குச் சென்றார். எதிர்பாராத விதமாக அவர் அங்கு இறந்து விட்டார். உன் தாய் அவர் இறப்பதற்கு முன்பே இறந்து விட்டாள். உன் தந்தை உன் வீட்டில் பின்புறத்தில் உள்ள துளசிச் செடிக்குக் கீழ் பெரும் புதையலை புதைத்து வைத்துள்ளார். நீ அந்த செல்வங்களை எடுத்துக்கொள்”** என்று கூறினார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியபடியே அந்த நெசவாளரும் துளசிச் செடிக்குக் கீழ் தோண்டினான். என்ன ஒரு ஆச்சரியம்! அங்கு ஒரு புதையல் இருந்தது. அந்த ஏழை நெசவாளி அச்செல்வங்களை வைத்துக் கொண்டு தன் மீதமுள்ள வாழ்க்கையை சந்தோஷமாகக் கழித்தான். அவனுடைய பக்தி பலமடங்காகப் பெருகி ஸ்ரீ ஸ்வாமிக்கு அவன் தொடர்ந்து சேவைகள் செய்து கொண்டிருந்தான்.

அந்த நெசவாளியின் வீட்டில்தான் அந்த புதையல் பல நாட்களாக இருந்தது. முதலில் அவன் பல துன்பங்களை அனுபவித்து பிக்ஷை எடுத்து வாழ்ந்து வந்தாலும், ஒரு குருவை அடையாளம் கண்டு கொண்டு, எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாமல் அவருக்கு சேவைகள் செய்யும் போது அவர் நம் சேவைகளை ஏற்றுக்கொண்டு நம் கர்மாக்களை கழித்து, நமக்கு என்ன தேவையோ அதை அவரே செய்து விடுவார் என்பது நமக்கு இந்த லீலையில் மூலம் தெளிவாகிறதல்லவா?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 28

# குழந்தை வரம்

மங்கள்வேடாவில் மிகவும் தாழ்த்தப்பட்ட ஒரு தம்பதி வாழ்ந்து வந்தனர். மனைவிக்கு 52 வயதாகிவிட்டது. அவர்களுக்கு குழந்தையில்லை. அதனால் அவள் எப்போதும் வருத்தமான மனநிலையிலேயே இருந்தாள். அவளுக்கு பக்தி மிகவும் அதிகம்.

ஒருநாள் அவளை பசப்பா தேளி (அத்தியாயம் 23) சந்தித்தார். அவர்கள் பேசிக்கொண்டிருந்திருந்த போது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரைப் பற்றி அவளிடம்





கூறினார். அவளை ஸ்ரீ ஸ்வாமிகளின் மீது பக்தி கொண்டு சரணடையுமாறு வலியுறுத்தினார். அதுமட்டுமல்லாமல் தினமும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்தால் உன் விருப்பம் கண்டிப்பாக நிறைவேறும் என்று கூறினார். அவள் பசப்பாவை சந்தித்த நாளிலிருந்து தினமும் காட்டுக்குச் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்த பிறகுதான் உணவருந்துவாள். இதேபோல் அவள் பொறுமையோடு நம்பிக்கையை இழக்காமல் தொடர்ந்து இரண்டு வருடங்களுக்குச் செய்து வந்தாள்.

அவளுடைய வைராக்கியத்தில் மகிழ்ந்த ஸ்ரீ ஸ்வாமி அவளிடம், **"அதோ தூரத்தில் அங்கு ஒரு மரம் தெரிகிறதே, அதிலிருக்கும் பிசினுடன் சர்க்கரையை கலந்து சாப்பிடு. நீ நினைத்த காரியம் நிறைவேறும்"** என்று கூறினார். அப்பெண்மணியும் எந்தவித மாற்று யோசனையும் இல்லாமல் ஸ்ரீ ஸ்வாமி கூறியப்படியே செய்தாள்.

ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய மரம் வாகை. அதிலிருந்து வெள்ளை நிறத்தில் பால் வடியும். அந்த பெண் அம்மரத்திலிருந்து பாலை எடுத்து அருந்தினாள். சிறிது நாட்களுக்குப் பின்னர் ஒரு அழகான ஆண் குழந்தையை பெற்றெடுத்தாள். அவள் தன் குழந்தையை தூக்கிக்கொண்டு கணவனோடு சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதத்தில் குழந்தையை படுக்க வைத்து ஆசீர்வாதம் வாங்கிக் கொண்டாள்.

நமக்கு ஒரு காரியம் நடக்க வேண்டுமென்றால் அது நடக்கும் வரை கண்டிப்பாக பொறுமை காக்க வேண்டும். இப்பெண்மணியைப் போன்று நம்பிக்கை இழக்காமல் பொறுமையோடு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை துதித்தோமானால் நம் பிரார்த்தனைகளும் நிறைவேறாமல் போகுமா என்ன?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 29

# ஜனாபாய்க்கு விட்டல் காட்சி

மங்கள்வேடாவில் ஜனாபாய் என்கிற ஏழைப் பெண்மணி வசித்து வந்தாள். அவள் விட்டலனின் பரம பக்தை. ஒவ்வொரு வருடமும் ஆஷாட ஏகாதசியின் போது அவள் பண்டரிபுரத்துக்கு நடந்து செல்வது வழக்கம்.

ஒரு வருடம் அவள் பண்டரிபுரத்துக்கு நடந்து சென்று கொண்டிருந்தபோது அடாத மழை பெய்தது. இடியும் மின்னலும் புயலுமாக பயங்கரமான மழை. மழை நிற்பதற்கான சாத்தியக்கூறு இல்லை. என்ன ஆனாலும் சரி என்று விட்டலனின் நாமத்தை கூறிக்கொண்டே மழையில் நடக்கத் தொடங்கினாள். ஆனால் மின்னல் ஒளி அவளுக்கு பயத்தை உண்டாக்கியது. சரி! மரத்தின் நிழலில் ஒதுங்கலாம் என்று பார்த்தபோது, ஒரு மரத்தடியில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சிரித்துக் கொண்டே நடப்பவைகளை பார்த்துக் கொண்டிருந்தார்.

ஜனாபாய் ஸ்ரீ ஸ்வாமிகளை கண்டவுடன் அவர் பாதத்தில் விழுந்து வணங்கிவிட்டு தான் எல்லா ஆஷாட ஏகாதசியிலும் ஸ்ரீ விட்டல் தரிசனம் செய்ததாகவும் இந்த முறை அது நடைபெறாது போல் இருக்கிறது என்று கூறி அழுதாள். அப்போது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவளிடம், "விட்டல் பண்டரிபுரத்தில் மட்டும்தான் இருக்கிறானா? வேறெங்கும் இல்லையா?" என்று கேட்டார். மேலும் அவளிடம், **"உன் மனதில் குடிகொண்டிருக்கும் விட்டலனைப் பார் அவன் எப்போதும் உனக்குள்ளேதான் இருக்கிறான்"** என்று கூறியவுடன் அவளுக்கு அனைத்துமே விட்டல்மயமாக காட்சியத்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவளை தன் கண்களை மூடிவிட்டு பிறகு திறந்து பார்க்கச் சொன்னார். அவள் கண்களை மூடியவுடன் அவர் விட்டலை போல எழுந்து நின்று இடுப்பில் கையை வைத்துக் கொண்டார். அவள் கண்களை திறந்தாள். ஆஹா! ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை விட்டலாகக் கண்டாள். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவளுக்கு, **'உடலே பண்டரிபுரம். அதிலிருக்கும் ஆத்மாதான் விட்டல்'** என்கிற உண்மையை உணர்த்தினார்.

இந்த நிகழ்ச்சி நடைபெற்றதற்கு பின்னர் அவள் பண்டரிபுரம் செல்லவேயில்லை. அவள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் தரிசனத்திலேயே திருப்தி அடைந்தாள். ஜனாபாய் எவ்வளவு பெரிய பாக்கியசாலி. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடமிருந்தே அற்புதமான அறிவுரையைப் பெற்றுக்கொண்டாள்! அவ்வளவு எளிதில் அனைவருக்கும் இந்த பாக்கியம் கிடைக்குமா? தூய்மையான பக்தியின் அதிர்வலைகள் மட்டுமே குரு மற்றும் கடவுளைச் சென்று சேரும். உணர்ச்சிகளற்ற பஜனைகள் அல்ல!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 30

# ராமதாசி புவாவின் கர்வத்தை அடக்குதல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மங்கள்வேடாவில் தங்கியிருந்த போது சாளம்பே என்கிற ஊரில் உள்ள மடத்திற்குச் சென்றார். அந்த மடத்தை ராமதாஸி புவா கவனித்து வந்தார். சாளம்பே மடம் பட்வர்த்தர்களுக்கு சொந்தமானது. ராமதாஸிபுவா ஆன்மிகத்தில் தனக்கு ஞானம் அதிகம் என்கிற கர்வம் அவருக்கு மிகுதியாக இருந்தது.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அந்த மடத்தில் தங்கியிருந்த போது மதியம் உணவருந்தி விட்டு அயர்ந்து உறங்கிவிட்டார். ராமதாஸிபுவாவுக்கு அலுவல் நிமித்தமாக அவசரமாக வெளியே செல்ல வேண்டியிருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகளோ அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கிறார். என்ன செய்வதென்று தெரியாமல் கதவை வெளியில் இருந்து பூட்டிக் கொண்டு சென்றுவிட்டார்.

அந்த கிராமத்திற்கு அருகில் பீமா நதி ஓடிக் கொண்டிருக்கிறது. மாலை நேரத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பீமா நதிக்கரையில் ஆளரவம் இல்லாத இடத்தில் உலாவிக் கொண்டிருப்பதை சிலர் கவனித்தனர். இந்த விஷயம் கிராமம் முழுவதும் காட்டுத்தீ போல பரவி, ராமதாஸிபுவாவின் காதுகளுக்கும் வந்தது. தான் கதவை பூட்டிவிட்டு அல்லவா வந்தோம் ஸ்ரீ ஸ்வாமிகள் எப்படி நதிக்கரையில் இருக்க முடியும்! சாவி என்னிடம் இருக்கிறதே! இது என்ன குழப்பம்! என்று எண்ணியவாறே மடத்தை நோக்கிச் சென்றார்.

மடம் அவர் பூட்டியபடியே இருந்தது. அவருடன் இருந்த மக்கள் அனைவரும் ராமதாசிபுவாவின் ஆன்மிக முன்னேற்றத்தை பற்றி கேலி செய்தனர். உடனே அவர் நதிக்கரைக்குச் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தேடிக் கண்டுபிடித்தார். அவர் அடைந்த ஆச்சரியத்திற்கு எல்லையே இல்லை. அவர் ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களில் விழுந்து வணங்கிவிட்டு தன்னை மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டார். இந்த நிகழ்ச்சி நடந்த பின்னர் ராமதாஸிபுவாவின் அஹங்காரம் முற்றிலுமாக நீங்கியது. மேலும் சோலாப்பூரைச் சேர்ந்த பரசுராம் பட் என்கிற அடியவர் இந்த நிகழ்ச்சியை நேரில் கண்டிருக்கிறார்.

இதே போன்ற லீலைகளை நாம் மற்ற மஹான்களின் (சேஷாத்திரி ஸ்வாமிகள், திருவண்ணாமலை) வரலாறுகளிலும் கேள்விப்பட்டிருக்கிறோம். முக்தி நிலையை அடைந்த ஆத்மாக்களை எங்காவது அடைத்துதான் வைக்க முடியுமா? சாதாரண பூட்டுதான் அவர்களை கட்டுப்படுத்தி விடுமா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 31

# வருவாய் அதிகாரிக்கு (மாம்லத்தார்) அருளுதல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மங்கள்வேடாவில் தங்கியிருந்த போது இன்னொரு சுவாரசியமான சம்பவம் நடைபெற்றது. ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காக போஸே என்கிற கிராமத்திலிருந்து ஸ்ரீ யஷ்வந்த் மஹாதேவ் (தேவ் மாம்லத்தார்) என்கிற வருவாய்த்துறை அதிகாரி ஒருவர் வந்திருந்தார். அவருக்கு சில நாட்களுக்கு முன்பு ஒரு கனவு தோன்றி, அதில் ஒரு சந்நியாசி அவருக்கு சாளக்கிராமத்தை அளித்துவிட்டு, **"இந்த சாளக்கிராமத்தினால் உனக்கு இந்த உலக வாழ்க்கையிலும் ஆன்மிக வாழ்க்கையிலும் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டு துறவியாக ஆவாய்"** என்று கூறி ஆசீர்வதித்தார். பின்பு கண்விழித்ததும் அவருக்கு அருகில் ஒரு சாளக்கிராமம் இருந்ததைக் கண்டு அவர் மிகுந்த ஆச்சரியம் அடைந்தார்.

சில நாட்களுக்குப் பிறகு அவருக்கு ஸ்ரீ ஸ்வாமியை தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது. அவர் மிகவும் மகிழ்ச்சியடைந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்து விட்டு எழும்ப மனமில்லாமல் அப்படியே அதே நிலையில் இருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் யஷ்வந்த்தின் தலையை தொட்டு ஆசீர்வதித்துவிட்டு, **"உன் சாளக்கிராமம் எங்கே?"** என்று கேட்டார். யஷ்வந்த் மிகவும் மகிழ்ச்சி அடைந்து **"மஹராஜ், நீங்கள் ஸ்ரீ தத்தரின் முழு அவதாரம்"** என்று கூறிவிட்டு மீண்டும் மீண்டும் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்துக் கொண்டே இருந்தார். பிறகு யஷ்வந்த் மஹாதேவ் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு பாதபூஜை செய்துவிட்டு பிராமணர்களுக்கு போஜனம் அளித்துவிட்டு கிளம்பிச் செலவதற்காக அனுமதி கேட்டார். **"நீ கிளம்பலாம். நீ உலகம் முழுவதும் துறவி என்று புகழடைவாய்"** என்று கூறி ஆசீர்வதித்தார்.

அதற்கு பின்னர் தேவ் மாம்லத்தார் மிகுந்த நேர்மையுள்ளவராகவும் பக்திமானாகவும் வாழ்ந்து வந்தார். உதவி என்று கேட்டு வருபவர்களுக்கு தயங்காமல் வாரி வழங்குவார். அவருக்கு நான்கு குழந்தைகள் பிறந்து இறந்தாலும் ஸ்ரீ ஸ்வாமிகள் ஏதோவொரு காரணத்திற்காகத்தான் இவ்வாறு செய்கிறார் என்கிற எண்ணத்தோடு பக்தி மாறாமல் இருந்தார்.

 

ஒருமுறை அவர் நாசிக் நகருக்கு அருகேயுள்ள சடானா என்கிற ஊரில் நீதிபதியாக நியமிக்கப்பட்டிருந்தார். கி.பி. 1870-71 இல் சடானாவில் பயங்கரமான பஞ்சம் ஏற்பட்டது. மிருகங்கள் பட்டினியால் உயிரிழந்தன. மக்கள் பசி தாகத்தால் தவித்தனர். அவர் தன் வீட்டிலிருந்த நகைகளைக் கூட விற்று மக்களுக்கு உணவளித்து உதவினார். இருப்பினும் நிலைமை எதுவும் மாறவில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் சர்க்காரின் கஜானா சாவியை எடுத்து அதிலிருந்த பணத்தை ஆயிரக்கணக்கான மக்களுக்கு விநியோகம் செய்தார். மக்கள் அவரை வாயார வாழ்த்திவிட்டுச் சென்றனர்.

இந்த விஷயம் சர்க்காருக்கு எட்டியது. துணை ஆட்சியர் அவரை விசாரணைக்கு அழைத்து கஜானாவை சோதிக்க வந்தார். என்ன ஒரு ஆச்சரியம்! அப்போது கஜானா பணத்தில் எதுவும் குறையவே இல்லை. **'யோகக்ஷேமம் வஹாம்யகம்'** என்கிற கீதை வரியின் பொருளானது: **'என்னுடைய பக்தனின் நலனுக்காக நானே அவனுடைய பாரங்களை சுமப்பேன்'** என்பதாகும். அதேபோல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் அத்யந்த பக்தனை தவிக்கவிட்டுவிடுவாரா? அவரை இக்கட்டான நிலையில் இருந்து காப்பாற்றிவிட்டார்.

இந்த நிகழ்ச்சி நடைபெற்ற பின்னர் தேவ் மாம்லத்தாருக்கு வேலையில் நாட்டம் இல்லை. வேலையை ராஜினாமா செய்துவிட்டு, தன் மனைவி கோபிகா பாயை அழைத்துக்கொண்டு க்ஷேத்ராடனம் கிளம்பினார். அவர்கள் இருவரும் தீவிரமான யோகப்பயிற்சிகள் மேற்கொண்டு இருவரும் சேர்ந்தே மஹாசமாதி அடைந்தனர்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கருணையினால் இந்த தம்பதி மிகவும் உயர்ந்த நிலையை அடைந்தனர். குருவை முழுமையாக சரணடைந்து, இந்த உலக வாழ்க்கைக்கு தேவையான சிறு சிறு கோரிக்கைகளுக்காக அணுகாமல் ஆன்மிகப் பாதையில் முன்னேற்றம் அடைய வேண்டும் என்று கேட்கும் போது, அவர் எப்படிப்பட்ட உன்னதமான நிலையை அளிக்கிறார் என்பதற்கு இந்த நிகழ்ச்சி ஒரு எடுத்துக்காட்டு.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**





## அத்தியாயம் 32

# மங்கள்வேடாவில் இன்னும் சில லீலைகள்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கி.பி. 1838 முதல் கி.பி. 1850 வரை 12 ஆண்டுகள் மட்டுமே மங்க்ள்வேடாவில் தங்கி சில லீலைகள் மூலம் தான் ஒரு மஹாபுருஷர் என்பதை வெளிப்படுத்திக் கொண்டார். அவர் அங்கு தங்கியிருந்தபோது பொதுஜன தொடர்பை பெரும்பாலும் விரும்பவில்லை. குறைவான லீலைகள் மட்டுமே செய்ததனால் அவரை சில பாக்கியசாலிகள் மட்டுமே அடையாளம் கண்டுகொண்டனர். முந்தைய அத்தியாயங்களில் விவரிக்கப்பட்டுள்ள லீலைகள் மட்டுமல்லாமல் இன்னும் சில லீலைகள் அவர் அங்கு நிகழ்த்தியிருக்கிறார். ஆனால் அவை நமக்கு விவரமாகக் கிடைக்கவில்லை. அவற்றை இந்த அத்தியாயத்தில் சுருக்கமாகக் காணலாம்:

- மங்கள்வேடாவில் உள்ள கிணற்றில் நீர் இல்லாமல் வற்றிப்போய் இருந்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் கோரிக்கை வைத்தவுடன் அவர் அந்த கிணற்றை நிரப்பி அருளினார்.
- மங்கள்வேடாவில் மராட்டிய இனத்தைச் சேர்ந்த ஒரு இளமையான துறவி ஒருவர் இருந்தார். அவருக்கு ஸ்ரீ விட்டலன்தான் மானசீக தெய்வம். அவருக்கு தன் மானசீக தெய்வத்தை தரிசிக்க வேண்டும் என்கிற ஆவல் அதிகமாக இருந்தது. அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை சந்தித்தபோது, **"நீ துவாரகைக்கு சென்று அங்கு மண் காசுகள்(செப்பு காசுகள் போன்ற அளவில்) செய்து கொண்டிரு. உனக்கு ஸ்ரீ விட்டலனின் தரிசனம் ஒரு நாள் கிடைக்கும்"** என்று கூறி அனுப்பி வைத்தார். அந்த துறவியும் துவாரகைக்கு சென்று ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியபடியே செய்தார். அவருக்கு மூன்று முறை விட்டல் தரிசனம் கிடைத்தது.

இவ்வாறு அனைவருக்கும் ஆசி வழங்கிக் கொண்டும் பலருடைய நோய்களை குணப்படுத்திக் கொண்டும், பலருடைய கர்மாக்களை அவர்களுக்கே தெரியா வண்ணம் சிறு சிறு லீலைகள் மூலம் கழித்துக் கொண்டும் மங்கள்வேடாவில் 12 ஆண்டு காலம் தங்கியிருந்த ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் திடீரென ஒரு நாள் அங்கிருந்து கிளம்பினார். அவர் அங்கிருந்து பண்டரிபுரம் வழியாக மோஹோல் என்கிற இடத்தை வந்தடைந்து அங்கு





கி.பி.1850-1855 வரை தங்கியிருந்தார். பண்டரிபுரம் செல்லும் வழியிலும் மோஹாலிலும் சில அற்புதமான லீலைகள் புரிந்து தன்னை ஒரு மஹாபுருஷர் என்று வெளிப்படுத்திக் கொண்டார். அவற்றை விவரமாக வரும் அத்தியாயங்களில் காணலாம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 33

# எனக்கு செருப்பு வேண்டும்!

இந்த அத்தியாயத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மங்கள்வேடாவிலிருந்து கிளம்பி பண்டரிபுரத்துக்குச் சென்று கொண்டிருந்த போது நடைபெற்ற அற்புதமான நிகழ்ச்சியை விரிவாகக் காணலாம். கர்மர்கர் என்கிற விவசாயியின் விளைநிலத்தை பண்டரிநாத் மற்றும் ஏக்நாத் என்கிற சகோதரர்கள் வாங்கி விவசாயம் செய்து வந்தனர்.

ஸ்ரீ ஸ்வாமிகள் பண்டரிபுரத்துக்கு நடந்து சென்றுகொண்டிருந்தபோது அவர்களுடைய விளைநிலத்தை தோராயமாக மதியம் ஒன்று அல்லது இரண்டு மணிக்கு கடந்து சென்றார். வெயில் சுட்டெரித்தது. அந்த வெயிலில் எவராலும் செருப்பு அணியாமல் நடந்து செல்லவே முடியாது. அப்போது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பண்டரிநாத்தை பார்த்து **“உன் செருப்புகளை எனக்குக் கொடு”** என்று கேட்டார். பண்டரிநாத்திற்கு ஸ்ரீ ஸ்வாமிகளை பார்த்து என்ன தோன்றியதோ தெரியவில்லை உடனே தன் செருப்புகளை அவிழ்த்துக் கொடுத்துவிட்டான்.

ஸ்ரீ ஸ்வாமிகள் பண்டரிநாத்தின் செருப்புகளை அணிந்துகொண்டு வேகமாக நடந்து சென்று அவர்கள் கண்ணோட்டத்தை விட்டு மறைந்து போனார். அவர்கள் இருவருக்கும் ஸ்ரீ ஸ்வாமி எங்கே சென்றார் என்றே தெரியவில்லை. ஏக்நாத் தன் சகோதரனிடம், **“அவர் பைத்தியக்காரர் போல**

**இருக்கிறார். அவர் எங்கே சென்றாரோ தெரியவில்லை. அவரிடம் உன் செருப்புகளை அளித்துவிட்டாயே! காகா (மராத்தி) வந்து கேட்டால் என்ன சொல்வது?"** என்று கோபித்துக்கொண்டான். பண்டரிநாத்திற்கு கவலை தொற்றிக்கொண்டது.

ஒரு சில நிமிடங்களில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மீண்டும் அங்கு வந்து பண்டரிநாத்திடம், "இதோ உன் செருப்புகள். நீயே வைத்துக்கொள். இப்போது உன் காகா கோபப்பட மாட்டாரே?" என்று கூறிவிட்டு வெறுங்காலில் நடந்து சென்று நொடிப்பொழுதில் காணாமல் போனார். இந்த பைத்தியக்காரர் இங்கு எங்கோ ஒளிந்து கொண்டு நாம் பேசுவதை கேட்டுவிட்டு இவ்வாறு நடந்து கொள்கிறார் என்று இருவரும் நினைத்துக் கொண்டனர். சகலமும் அறிந்த ஸ்ரீ ஸ்வாமிகளின் தோற்றத்தைப் பார்த்து இவ்வாறு முடிவு செய்து கொண்டது இவ்விருவரின் சிறு புத்தி.

பண்டரிநாத் தன் செருப்புகளை அணிந்து கொண்டு வேலைகளில் மும்மரமானான். சோலாப்பூரிலிருந்து திரும்பி கொண்டிருந்த சிலர், அரைமணி நேரத்திற்கு பின்னர் அவ்வழியை கடந்து சென்றனர். அவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளை பற்றித்தான் பேசிக்கொண்டிருந்தனர். இதைக் கேட்டவுடன் இருவருக்கும் ஆச்சரியம் தாங்க முடியவில்லை. ஒரு சாதாரண மனிதனால் இவ்வளவு விரைவாக எப்படி அவ்வளவு தூரம் செல்ல முடியும்! அவர் கண்டிப்பாக ஒரு மஹாபுருஷராகத்தான் இருக்க வேண்டும் என்பதை இருவரும் உணர்ந்து கொண்டனர்.

ஸ்ரீ தத்தாத்ரேயர் எப்போதும் இதுபோன்ற வினோதமான தோற்றங்களில் தன்னை வெளிப்படுத்திக் கொள்வார் என்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். அதன் உண்மைத்தன்மையை விளக்கும் விதமாக இந்த நிகழ்ச்சி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரால் நிகழ்த்தப்பட்டுள்ளது.

இதுதான் மங்கள்வேடாவில் (அருகில்) நடைபெற்ற கடைசி நிகழ்ச்சி. இதற்குப் பின்னர் அவர் மங்கள்வேடாவுக்கு மீண்டும் வரவேயில்லை. மங்கள்வேடா மண் எவ்வளவு புண்ணியம் செய்திருக்கிறது! பன்னிரண்டு ஆண்டு காலம் தொடர்ந்து ஸ்ரீ ஸ்வாமிகளின் பாத ஸ்பரிசத்தை அனுபவித்துக் கொண்டே இருந்திருக்கிறது!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

### அத்தியாயம் 34

# ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மோஹோலில்...

மங்கள்வேடாவை விட்டுக் கிளம்பிய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பண்டரிபுரம் வழியாக மோஹோல் சென்றடைந்தார். அவர் பண்டரிபுரத்தை கடந்து வரும்போது பீமா நதியில் மிகுதியான வெள்ளப்பெருக்கு இருந்தது. படகு சவாரிக்கு வாய்ப்பே இல்லை என்கிற நிலை இருந்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒரு சில படகோட்டிகளிடம் தன்னை அக்கரைக்கு கொண்டு சேர்க்குமாறு கேட்டார். எவரும் வரத் தயாராக இல்லை. இச்சூழ்நிலையில் அக்கரையை சென்றடைவது என்பது முடியாத காரியம். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரால் முடியாது என்பது உண்டா என்ன? அனைவரின் ஆச்சரியத்திற்கும் இணங்க ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நதியின் மீது நடந்தே அக்கரையை அடைந்தார். அப்போது வெள்ளம் கரைபுரண்டு ஓடிய போதும் ஸ்ரீ ஸ்வாமிகளின் முட்டி வரை மட்டுமே நனைந்திருந்ததை நேரில் கண்ட அனைவரும் ஆச்சரியத்தில் உறைந்து நின்றனர். எவ்வளவு பேரதிர்ஷ்டம் வாய்ந்தவர்கள்! இந்த அற்புதமான காட்சியை கண்டு இன்புற்ற புண்ணியவான்கள்!

**ஒழுக்கநெறியின் முக்கியத்துவம்**

அது கணேச சதுர்த்தி உற்சவ சமயம். மோஹோலில் ஸ்ரீ கணேஷ் சோஹோனி என்கிற மாம்லத்தார் ஒருவர் இருந்தார். அவர் வீட்டில் கணேச சதுர்த்தி உற்சவம் விமர்சையாகக் கொண்டாடப்படும். அப்போது அவர் வீட்டில்தான் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தங்கியிருந்தார். அன்று அவர் வீட்டில் ஜோராக கீர்த்தனைகள் பாடிக்கொண்டிருந்தனர். வெளியே ஜோவென்று மழை கொட்டிக் கொண்டிருந்தது. அப்போது திடீரென ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அந்த வீட்டை விட்டு கிளம்பினார். அனைவருக்கும் மிகவும் பதற்றம் ஏற்பட்டது. என்ன நடந்ததோ தெரியவில்லையே! என்கிற பதைபதைப்புடன் அனைவரும் சென்று ஸ்ரீ ஸ்வாமிகளை உள்ளே வருமாறு அழைத்தனர். சோஹோனி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் மழை கடுமையாக இருக்கிறது என்றும் மிகவும் இருள் சூழ்ந்துள்ளது என்றும் கூறி உடனடியாக உள்ளே வருமாறு அழைத்தார். அவர் அழைப்பதை துளியும் சட்டை செய்யாமல், **"நீ ஒழுக்கமற்றவன். உன் வீட்டில் தூய்மை இல்லை"** என்று கூறிக்கொண்டே வேகமாக காட்டுக்குச் சென்றுவிட்டார்.




ஸ்ரீ ஸ்வாமிகளை துரத்திக் கொண்டே சோஹோனி சிறிது தூரம் சென்றார். ஸ்வாமிகள் வரப்போவதில்லை என்பதை உணர்ந்துகொண்டவுடன் **"மீண்டும் நான் உங்களை எப்போது சந்திப்பது"** என்று கேட்டார். அதற்கு **"மாம்பழப் பருவம் வரும்போது"** என்று கூறிக்கொண்டே காட்டினுள் சென்றுவிட்டார்.

சோஹோனி தீவிரமான பக்தராக இருப்பினும் அவர் காம மயக்கத்தில் இருந்தார். அவர் தன் வீட்டில் ஒரு காமக்கிழத்தியை தங்க வைத்திருந்தார். இந்த நடத்தை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு பிடிக்காததால் அந்த வீட்டில் அவர் தங்கவில்லை. சில நாட்களுக்குப் பின்னர் சோஹோனியின் மூத்த அதிகாரி ஒரு ஆய்வுக்காக வந்திருந்த போது சோஹோனியின் நடவடிக்கைகள் பற்றி அறிந்து கொண்டார். அவரின் நலத்தை விரும்பி, அவர் சோஹோனியை தனியாக அழைத்து **"நீ உன் நடவடிக்கைகளை மாற்றிக் கொள்ளவேண்டும். இது ஒரு சர்க்கார் அதிகாரிக்கு அழகல்ல"** என்று அறிவுரை கூறினார். அதற்கு சோஹோனி இது தன் தனிப்பட்ட விஷயம் யாரும் இதில் தலையிடக் கூடாது என்று கூறிவிட்டார். இது அந்த அதிகாரிக்கு மிகுந்த கோபத்தை ஏற்படுத்தியது. அவர் மீது சில வழக்குகள் போடப்பட்டது. இதன் காரணமாக வேலையை இழந்தார். இந்நிகழ்ச்சி கி.பி.1851-52 இல் நடைபெற்றது. அவர் அந்த காமக்கிழத்தியுடன் சில நாட்கள் சோலாப்பூரில் தங்கியிருந்தார். சிறிது நாட்களுக்குப் பின்னர் அவள் அவரை விட்டு சென்றுவிட்டாள். அவருக்கு வரிசையாக துன்பத்திற்கு மேல் துன்பம் ஏற்பட்டு வாழ்க்கையே துன்பமயமாக மாறியது. சில காலங்களுக்குப் பின்னர் வழக்கிலிருந்து விடுபட்டு சோலாப்பூரிலேயே தங்கியிருந்தார்.

அது ஒரு மாம்பழக் காலம். அவரின் தீய கர்மாக்கள் முழுவதுமாக கழிந்திருக்க வேண்டும். அதன் காரணமாக, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் தரிசனம் பெரும் பாக்கியம் அவருக்குக் கிடைத்தது. ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமிகள் திகம்பரர் (ஆடைகள் இல்லாமல்- ஸ்ரீ தத்தாத்ரேயர் எப்போதும் திகம்பரராகத்தான் அனைவருக்கும் காட்சி அளிப்பார்) போல அவருக்குக் காட்சியளித்து அருளினார். அவர் இரண்டு மாம்பழங்களை சோஹோனியிடம் அளித்துவிட்டு மறைந்து விட்டார். அன்றிலிருந்து அவருக்கு நல்ல நேரம் துவங்கியது. அவருக்கு பரோடாவில் ஒரு நல்ல வேலை கிடைத்தது. அவர் ஆன்மிகத்திலும் நல்ல முன்னேற்றம் அடைந்தார்.

இந்த லீலையின் மூலம் நாம் குருவின் வாக்கை மீறக் கூடாது என்பதை நன்றாக புரிந்து நடந்துகொள்ள வேண்டும். குருவின் அறிவுரைகளை நம்

வாழ்க்கையில் நடைமுறை படுத்தினால் மட்டுமே அவருடைய அனுக்கிரகத்தை முழுமையாகப் பெற முடியும். சோஹோனி குருவை அலட்சியப்படுத்தியதால் அதற்கான தண்டனையைப் பெற்றார். அவர் காரணத்தை உணர்ந்து கொண்டு தன்னை மாற்றிக்கொண்டவுடன் குருவின் கருணை கடாக்ஷம் உடனடியாக கிடைக்கப்பெற்று இழந்த செல்வத்தையும் நிம்மதியையும் மீண்டும் பெற்றார். குருவின் வாக்கே வேத வாக்கு என்பதை நாம் கடைபிடித்தால், நம் வாழ்க்கை கண்டிப்பாக முன்னேற்றம் அடையும் என்பதற்கு இந்த நிகழ்ச்சி ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

**பிராமணரின் மகனை மீண்டும் உயிர் பெறச் செய்தல்**

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மோஹோலில் தங்கியிருந்த போது அங்கிருந்த ஓடைக்கு நடுவே இருக்கும் ஒரு குகையில் தங்கியிருந்தார். அந்த குகையின் வாயிலில் பெரிய பாறை ஒன்று இருக்கும். அந்த ஊரில் இருந்த பிராமணர் ஒருவரின் மகன் எதிர்பாராத விதமாக இறந்துவிட்டான். பிராமண தம்பதி செய்வதறியாது கடவுளிடம் பிரார்த்தனை செய்தனர். ஊர் மக்கள் அனைவரும் இந்த தம்பதியை தேற்றும் எண்ணத்தில், **"நம் ஊரில் சந்நியாசி ஒருவர் உலாவிக் கொண்டிருக்கிறார். அவர் பார்ப்பதற்கு மிகவும் சக்தி வாய்ந்தவராகத் தோன்றுகிறார். அவரிடம் சென்று பிரார்த்தனை செய்தால் ஏதாவது வழி கிடைக்கலாம்"** என்று கூறி வழிகாட்டினர். அந்த பிராமணர் ஸ்ரீ ஸ்வாமியை தேடி ஊர் முழுவதும் அலைந்தார், அவரால் ஸ்ரீ ஸ்வாமிகள் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. மனமுடைந்து வீடு திரும்பியவரை ஒரு பெண் இடைமறித்து **"வாருங்கள்! நான் உங்களுக்கு ஸ்ரீ ஸ்வாமியைக் காட்டுகிறேன்!"** என்று கூறி குகைக்கு அருகில் அழைத்துச் சென்று **"ஸ்வாமிகள் உள்ளே தான் இருக்கிறார். அவரை அழையுங்கள்"** என்று கூறினாள். **"ஸ்வாமி, வந்து எங்களை காப்பற்றுங்கள்!"** என்று பிரார்த்தனை செய்தவாறு குகைவாயிலில் அவர் அங்கபிரதக்ஷணம் செய்தார். எப்படி திரௌபதியைக் காப்பற்ற ஸ்ரீ கிருஷ்ணர் ஓடோடி வந்தாரோ அதே போல ஸ்ரீ ஸ்வாமிகளும் தன் சமாதி நிலையைக் கலைத்துக் கொண்டு வெளியே வந்தார். அவர் அந்த பிராமணரின் கைகளைப் பற்றிக் கொண்டு, **"பிராமணரே! உன் மகனை குதிரை மேல் அமர்த்தி கடற்கரைக்குக் கொண்டு செல்"** என்று கூறினார். அங்கிருந்தவர்கள் எவராலும் அதன் உண்மையான அர்த்தத்தை புரிந்து கொள்ள முடியவில்லை. **"ஏ! பிராமணரே! உங்கள் பிரார்த்தனை நிறைவேறிவிட்டது"** என்று அந்தப் பெண் கூறிவிட்டு சென்றுவிட்டாள். பிராமணரும் ஸ்ரீ ஸ்வாமியை நமஸ்காரம்





செய்துவிட்டு வீட்டுக்கு வந்து பார்த்தபோது, என்ன ஆச்சரியம்! அவருடைய மகன் எழுந்து அமர்ந்து கொண்டிருந்தான். அந்த பிராமணர் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. அவர் தன் மகனுக்கு விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களால் அலங்காரம் செய்து, ஒரு குதிரை மீது அமர்த்தி ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக குகைக்கு அழைத்துச் சென்றார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளை பலவாறு புகழ்ந்து தன் நன்றிகளை தெரிவித்தார். அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் **"ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி உண்டாகட்டும்"** என்று மகிழ்ச்சியுடன் கோஷம் எழுப்பினர். அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தர்களாக மாறி மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 35

# கவே ஸ்வாமிகள்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மோஹோலில் கணேஷ் சோஹோனியின் வீட்டில் தங்கியிருந்த சமயத்தில் கவே ஸ்வாமி என்கிற ஒரு மஹாயோகியைச் சந்தித்தார். கவே ஸ்வாமிகளுக்கு தோராயமாக 125 வயது இருக்கலாம். அவர் ஹட யோகத்தில் மஹா ஞானியாக விளங்கினார். அவர் யோக நிலையில் இருக்கும் போது தரையில் இருந்து இரண்டடிக்கு மேல் மிதந்து கொண்டிருப்பது போலக் காணப்படுவார். அவர் யோகத்தில் சிறந்து விளங்கியதால் அவரால் கடந்த, நிகழ் மற்றும் எதிர்காலங்களை எளிதாக அறிய முடிந்தது.

கவே ஸ்வாமிகளும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் சந்தித்துக் கொண்டபோது இருவரும் பலமணி நேரத்திற்கு தனிமையில் பேசிக்கொண்டிருந்தனர். அந்த சம்பாஷணையின் போது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஹட யோகப் பயிற்சி மட்டும் பயனற்றது என்பதை விவரித்துவிட்டு உண்மையான யோகத்தைத் தீவிரமாகப் பயிற்சி செய்யுமாறு அறிவுறுத்தினார். அதற்கு பின்னர் கவே ஸ்வாமிகள் தன் பாதையை மாற்றிக்கொண்டார். சிறிது காலத்தில் அவர் சமாதி அடைந்தார்.






ஒருவர் யோக நிலையில் எவ்வளவு அதீதமான உயர்ந்த நிலையில் இருப்பினும், குருவின் அருள் எவ்வளவு அவசியம் என்பதை இந்த நிகழ்ச்சியின் மூலம் நாம் புரிந்து கொள்ளலாம். குருவின் அருட்பார்வையால் கவே ஸ்வாமிகள் முழுவதுமாக தூய்மை ஆனார். அவருக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஸ்பரிசம் கிடைத்த மாத்திரத்திலிருந்து உயர்ந்த சமாதி நிலையை அடைந்து எளிதாக மோக்ஷ நிலையைப் பெற்று நற்கதி அடைந்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 36

# எனக்கு பிரம்மத்தை காட்டுங்கள்

மோஹோலில் கோஷ்டி(நெசவாளர்) ஜாதியைச் சேர்ந்த ஒருவர் வசித்து வந்தார். அவர் எப்போதெல்லாம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை சந்திக்கிறாரோ அப்போதெல்லாம் **"எனக்கு பிரம்மத்தை காட்டுங்கள்"** என்று கேட்டுக்கொண்டே இருப்பார். மோஹோலில் ஒரு நாகநாதர் கோவில் உள்ளது. ஒரு முறை ஸ்ரீ ஸ்வாமிகளும் கோஷ்டியும் அந்த கோவிலில் இருந்தனர். ஸ்வாமிகள் அந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொண்டு கோஷ்டியை அழைத்து, **"வா உனக்கு பிரம்மத்தை காட்டுகிறேன்"** என்று கூறிவிட்டு **"இதோ! பிரம்மம்"** என்று கூறிய சில நொடிகளில் அவர்களை சுற்றி பாம்புகளாக இருந்தன. கோஷ்டி பயத்தில் நடுங்கினார். அவருக்கு மனக்கலக்கம் ஏற்பட்டு பித்து பிடித்தவன் போல பல நாட்களுக்குத் திரிந்து கொண்டிருந்தார்.

சில நாட்களுக்கு பின்னர் கவே ஸ்வாமிகள் ஸ்ரீ ஸ்வாமிகளை அணுகி கோஷ்டிக்கு தயை புரியுமாறு கேட்டுக்கொண்டார். ஸ்ரீ ஸ்வாமி உடனே சம்மதித்து அவரை குணப்படுத்தினார். அதற்குப் பின்னர் கோஷ்டி பிரம்மத்தை பற்றி ஸ்ரீ ஸ்வாமிகளிடம் கேட்கவேயில்லை.

நாம் குருவிடமோ அல்லது கடவுளிடமோ ஏதாவது பிரார்த்தனை செய்தால் நம் வரையறையை உணர்ந்து கொண்டு பிரார்த்திக்க வேண்டும்.

ஒன்று வேண்டும் என்றால் முதலில் அதற்குண்டான நிலைக்கு நாம் நம்மை தகுதியாக்கிக் கொள்ள வேண்டும். இல்லையேல் இந்த கோஷ்டிக்கு ஏற்பட்ட நிலைதான் நமக்கும் ஏற்படும். பிரார்த்தனை நிறைவேறிவிடும் ஆனால் நாம் அந்த தகுதியை அடையாததால், அதில் ஏற்படும் சிரமங்களை தாங்கிக் கொள்ள முடியாதபடி ஆகிவிடும்.

ஆகவே இந்த நிகழ்ச்சியின் மூலம் **"தகுதியானவற்றிற்கு மட்டுமே ஆசைப்பட வேண்டும் என்பதையும் பேராசை பெரும் நஷ்டத்தை உண்டாக்கும்"** என்பதையும் ஸ்ரீ ஸ்வாமிகள் அனைவருக்கும் உணர்த்தியிருக்கிறார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 37

# நானே பண்டரிநாதன் ...

தான்துல்வாடி என்கிற கிராமத்திலிருந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக ஒரு பிராமணன் வந்திருந்தார். அவர் பண்டரிநாதனுடைய பரம பக்தர். அவர் வார்கரியாக வருடத்திற்கு இருமுறை பண்டரிபுரத்திற்கு சென்றுவிடுவார். அப்படி ஒருமுறை அவர் பண்டரிபுரம் பயணம் மேற்கொண்டபோது வழியில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை கண்டார். ஸ்ரீ ஸ்வாமிகளின் தேஜஸ்வியான முகமும், பிரமிக்கவைக்கும் ஆஜானுபாகுவான உடலமைப்பை பார்த்த மாத்திரத்தில் அவருக்கு மதிமயக்கம் ஏற்பட்டு விட்டது. அவர் தன்னை மறந்து, தான் ஒரு வார்க்கரி என்பதை நினைவில் கொள்ளாமல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடனேயே தங்கிவிட்டார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பிடித்தவாறு பஜனைப் பாடல்களை பாடிக்கொண்டு பக்திப்பெருக்கில் அவருடனே தங்கியிருந்தார்.

ஒருநாள் அவ்வாறு பரவசமாக பஜனை செய்து கொண்டிருந்தபோது அவர் சமாதி நிலைக்கு சென்றுவிட்டார். ஒரு சில மணி நேரங்களுக்குப் பின்னர் சாதாரண நிலைக்கு திரும்பினாலும் அவருடைய கண்களிலிருந்து

பேரானந்தம் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. அனைவரும் அவருடைய அனுபவங்களை விவரிக்குமாறு கேட்டனர். **"ஆஹா! என்ன ஒரு அற்புதமான காட்சி! ஸ்வாமி சமர்த்தர்தான் பண்டரிநாதன். பண்டரிநாதன் பண்டரிபுரத்தில் மட்டும் இல்லை அவர் இங்கேயும் இருக்கிறார்"** என்று பேரானந்தமாகக் கூறினார்.

அந்த பிராமணருக்கு மட்டுமல்லாமல் அங்கு கூடியிருந்தவர்கள் அனைவருக்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பண்டரிநாதனாக காட்சியளித்தார். ஆஹா! எவ்வளவு பாக்கியம் செய்திருக்கிறார்கள்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 38

# மல்ஹாரி தரிசனம் (சிவன்)

கைவினைக்கலைஞன் ஒருவன் மோஹோலில் வசித்து வந்தான். அவன் தினமும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்யாமல் உணவருந்தமாட்டான். அப்படி ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக சென்று கொண்டிருந்தபோது தன் குலதெய்வமான மல்ஹாரி மார்த்தாண்ட் என்று அழைக்கப்படும் சிவனை தரிசனம் செய்ய வேண்டும் என்று எண்ணியவாறே ஸ்ரீ ஸ்வாமிகள் தங்கியிருந்த இடத்தைச் சென்றடைந்தான். அவனைக் கண்டவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள், **"உன் குலதெய்வத்தின் தரிசனத்தைப் பெற்றுக்கொள்"** என்று கூறிக்கொண்டே ஜடாமுடியுடன் சிவனாக அவனுக்குக் காட்சியளித்தார்.

சிவன் ரூபத்தில் காட்சியளித்த ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து வணங்கிவிட்டு, **"ஸ்வாமி, உங்களுடைய சிவ தரிசனத்தில் என் 42 பிறவிகள் விடுவிக்கப்பட்டு விட்டன. கருணை கொண்டு என்னை உயர்ந்த நிலைக்கு கொண்டு செல்ல வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டான். அதற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் அவனிடம், **"அனுதினமும் என்னையே நினைத்துக் கொண்டு பஜனைகள் செய். எல்லா உயிரினங்களிடமும் தெய்வீகத்தை**

**உணர்ந்து கொள்ள முயற்சி செய்"** என்று அறிவுரை கூறி அனுப்பி வைத்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியவாறே அவன் தன் வாழ்நாளை கழித்து தெய்வீகத்துடன் ஒன்றறக் கலந்தான்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 39

# ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சோலாப்பூர் வருகை

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மோஹோலில் சுமார் ஐந்து வருடங்கள் தங்கியிருந்தார்(கி.பி. *1850-1855*). பின்னர் அவர் சோலாப்பூர் என்கிற இடத்திற்குச் சென்று அந்த மண்ணையும் புனிதமாக்கினார். இந்த இடத்தில் அவர் சில மாதங்கள் மட்டுமே தங்கியிருந்தார். மோஹோலிலிருந்து திடீரென கிளம்பிய ஸ்ரீ ஸ்வாமி, சோலாப்பூர் சென்றடைந்து ராம் பாவ் குர்ஜர் என்கிற அடியவரின் வீட்டில் தங்கியிருந்தார். பின்னர் அந்த ஊரில் இருந்த ஒரு தத்தாத்ரேயர் கோவிலில் திகம்பரராக (ஆடைகள் ஏதுமின்றி) அமர்ந்திருந்தார். மாலையில் அங்கு தரிசனத்துக்காக வந்த பக்தர்கள் இவர் பைத்தியாகாரர் போல தோற்றம் அளிக்கிறார் என்று எண்ணிக்கொண்டு பயந்து ஒதுங்கி சென்றனர். ஆனால் அந்த பக்தர்களில் சிந்தோபந்த் டோல் என்கிறவரும் வந்திருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளின் தேஜஸ்வியான உருவத்தைக் கண்டு இவர் கண்டிப்பாக ஒரு சாதாரண மனிதனாக இருக்கமுடியாது என்றும் இவர் ஒரு மகாபுருஷர் என்பதையும் உணர்ந்து கொண்டு, அவருடைய பாதத்தில் விழுந்து வணங்கினார். உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் அவரிடம், **"நான் பைத்தியக்காரனோ மஹாபுருஷரோ, யாராக இருந்தால் உனக்கென்ன?"** என்று சத்தமாக கேட்டார். ஸ்ரீ ஸ்வாமிகள் டோலின் மன ஓட்டத்தை உணர்ந்து கொண்டவுடன் இவர் என்ன சித்திகள் கற்றவரோ! இல்லை சித்த புருஷராக இருப்பாரோ! என்று எண்ணினார். அதையும் அறிந்து கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள், **"நான் சித்த புருஷராக இருந்தால் என்ன? உனக்கு நான் என்ன செய்ய வேண்டும்? வந்த வழியை பார்த்துக் கொண்டு போ!"** என்று கூச்சலிட்டார். ஆஹா! நம் மனதை படித்து விட்டாரே! என்று எண்ணியவுடன், **"சரி நான் மனதை படிப்பவனாக**





**இருந்தால் என்ன, இல்லாவிட்டால் என்ன?"** என்று கேட்டார். டோல் ஆச்சரியமடைந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதத்தை இறுக்கமாகப் பற்றிக் கொண்டு **"நீங்கள் என்னுடைய வீட்டுக்கு வர வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். பாதத்தை இறுக்கமாகப் பற்றிக் கொண்டவர்களை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஏமாற்றுவாரா என்ன! அவர் உடனே டோலின் வீட்டுக்குச் சென்றார்.

சிந்தோபந்த் டோல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தன் வீட்டுக்கு அழைத்து வந்து உணவளித்து, அவருக்கு உறங்குவதற்கான படுக்கை அமைத்துக் கொடுத்து அவர் பாதங்களை பக்தியோடு பிடித்து விட்டார். என்னே பாக்கியம் செய்தவர்! ஒரு மகாபுருஷரை அடையாளம் கண்டுகொண்டது மட்டுமல்லாமல் அவருக்கு சேவைகளும் செய்து தன் பிறவிப்பலனை அடைந்துவிட்டார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 40

# நான் உணவருந்த மாட்டேன்!

சிந்தோபந்த் டோல் ஸ்ரீ ஸ்வாமி சமத்தாரிடம் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் பிரசன்னமான மனோநிலையில் இருக்கும் போதெல்லாம் தன் வீட்டுக்கு அழைத்து வந்து உபசரிப்பார். அப்படி ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமிகள் டோலுடைய வீட்டின் தாழ்வாரத்தில் அமர்ந்திருந்தார். டோல் குளித்துக் கொண்டிருந்தார். அப்போது தாஜிபா சோஹோனிக்கும் டோலுக்கும் இடையே ஒரு உரையாடல் நிகழ்ந்தது. **"இந்த சந்நியாசி கிடைத்த இடத்திலெல்லாம் உண்கிறார். அவர் நம்மோடு அமர்ந்து சரிசமமாக உணவருந்தக் கூடாது. அவருக்கென ஒரு தட்டு வைத்து ஓரமாக அமரவைத்து உணவளிக்க வேண்டும்"** என்று பேசிக்கொண்டே தாழ்வாரத்திற்கு வந்தார். உடனே ஸ்ரீ ஸ்வாமி அவரிடம், **"உனக்கு சந்தேகம் இருக்கிறது. இனி நான் உன் வீட்டில் உணவருந்த மாட்டேன்"** என்று கூறிவிட்டு அவருடைய வீட்டை விட்டுக் கிளம்பிச் சென்றார்.

தான் மிகப்பெரிய தவறு செய்துவிட்டதை உணர்ந்து கொண்ட டோல், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதத்தை பிடித்துக் கொண்டு தன்னை மன்னிக்குமாறு கெஞ்சினார். பக்தர்களின் கெஞ்சல்களுக்கு இளகாத குருவும் உண்டோ? உண்மையாக தன் தவறுகளை உணர்ந்துவிட்டால் உடனடியாக மன்னிப்பும் குருகடாக்ஷமும் கிடைத்துவிடுமே! ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் சிந்தோபந்த் வீட்டுக்குச் சென்று அவர் அளித்த போஜனத்தை ஏற்றுக்கொண்டு அவர் வம்சத்திற்கே புண்ணியம் சேர்த்தார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் எப்போதும் சாதி பாகுபாட்டை ஏற்றுக்கொண்டதில்லை. அனைத்து ஜீவராசிகளும் கடவுளுக்கு சமம் என்கிற கோட்பாடுடன் இருந்தார். நாம் ஒருவருக்கு உணவளிக்கும் போது அவர்களை ஸ்ரீமன் நாராயணனாகத்தான் கருத வேண்டும். ஜாதிப்பாகுபாடு பார்க்கக் கூடாது. இந்த உண்மையை சிந்தோபந்துக்கு உணர்த்த வேண்டும் என்பதற்காகத்தான் இந்த லீலையை அவர் நிகழ்த்தினாரோ!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 41

# விஷ்ணுபந்தின் கையெழுத்து

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சிந்தோபந்த் டோலின் வீட்டுக்கு வந்திருந்தார். ஸ்ரீ ஸ்வாமி தன்னுடைய வீட்டுக்கு வரும்போதெல்லாம் டோல் மிகுந்த பக்தி சிரத்தையோடு அவருக்கு பாதபூஜை செய்து வரவேற்று சந்தனம், அத்தர் போன்ற வாசனை திரவியங்களால் அலங்கரித்து வணங்குவார். அன்றைய தினம் ஸ்ரீ ஸ்வாமி அவர் வீட்டுக்கு சரியாக காலை பத்து மணிக்கு வந்திருந்ததால் உணவிருத்திவிட்டு செல்லுமாறு டோல் கூறினார். சிந்தோபந்துடைய மகன் விஷ்ணுபந்த் ஆட்சியர் அலுவலகத்தில் குமாஸ்தாவாக பணிபுரிந்து கொண்டிருந்தான். அவன் தன் பணிக்கு நேரம் தவறாமல் செல்லும் பழக்கம் உடையவன். ஸ்ரீ ஸ்வாமி உணவருந்தாமல் அவனால் உணவருந்த முடியாது. நேரம் ஆகிக் கொண்டிருந்தமையால் அவன் இருப்பு கொள்ளாமல்

இருந்தான். அவனுடைய தந்தை அவனை உணவருந்திவிட்டு செல்லுமாறு கூறியபோதிலும் அவன் காத்திருப்பதாகக் கூறிவிட்டான்.

பின்னர் ஸ்வாமி உணவருந்தி முடித்ததும், அவன் வேகவேகமாக உணவருந்திவிட்டு அலுவலகத்திற்கு விரைந்தான். அனைவரும் தங்கள் வருகையை பதிவு செய்துவிட்டுதான் அலுவலத்தினுள் செல்ல வேண்டும். விஷ்ணுபந்த் அந்த அதிகாரியிடம் தான் இன்று தாமதமாக வந்ததற்கு மன்னித்து, பதிவேட்டை அளிக்குமாறு கேட்டான். அதற்கு அந்த அதிகாரி **"நீதான் ஏற்கனவே கையெழுத்திட்டு விட்டாயே! ஏன் தாமதமாக வந்ததாக கூறுகிறாய்?"** என்று கேட்டவுடன், அவனால் அவருடைய வார்த்தைகளை நம்ப முடியவில்லை. உடனே அவரிடமிருந்த பதிவேட்டை வாங்கிப் பார்த்தபோது அச்சுஅசலாக அவனுடைய கையெழுத்து இருந்ததைக் கண்டு ஆச்சரியத்தில் ஸ்தம்பித்து நின்றான். தன்னுடைய அலுவலக நண்பர்கள் அனைவரிடமும் நடந்தவைகளை கூறி ஆனந்தப் பரவசம் அடைந்து கண்ணீர் விட்டான்.

தன்னிடம் சரணடைந்த ஒரு பக்தனை எப்படியாயினும், எந்த ரூபம் எடுத்து வந்தும் காப்பேன் என்பதை உறுதிப் படுத்தும் விதமாக இந்த நிகழ்ச்சி நடைபெற்றது என்பது நமக்கு தெள்ளதெளிவாகிறது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 42

# சித்தேஸ்வர் கோவிலின் குளம்

சோலாப்பூரில் சித்தேஸ்வரர் கோவில் என்கிற பிரசித்தி பெற்ற கோவில் ஒன்று உள்ளது. அந்த கோவிலில் நடைபெற்ற இரண்டு நிகழ்ச்சிகளை இந்த அத்தியாயத்தில் காணலாம்.

### 1. சித்தேஸ்வரர் கோவில் குளம் வறண்டு விட்டது

அது கோடைக்காலம் என்பதால் குளத்தின் நீர் முழுமையாக வற்றிவிட்டது. மக்கள் நான்கு மைல்கள் நடந்து சென்று தண்ணீர் கொண்டுவர

வேண்டியிருந்தது. இது அனைவருக்கும் மிகுந்த சிரமத்தை உண்டாக்கியது. ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சித்தேஸ்வர் கோவிலுக்கு வந்தார். மக்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று, **"மஹராஜ், நாங்கள் அனைவரும் தண்ணீர் பஞ்சத்தால் தவித்துக் கொண்டிருக்கிறோம். குடிக்கக் கூட தண்ணீர் இல்லை. தயவு கொண்டு எங்களை காப்பாற்றுங்கள்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டனர். ஸ்ரீ ஸ்வாமிகள் உடனே அந்த குளத்தின் அருகில் சென்று வெகுநேரத்திற்கு சிறுநீர் கழித்துக் கொண்டே இருந்தார். அவர் சிறுநீர் கழித்து முடித்த அடுத்த நொடியே வானத்தில் மேகம் திரண்டு கொண்டு வந்து, காற்று பலமாக வீசத் தொடங்கி மழை பொழியத் தொடங்கியது. சிறிது நேரத்திற்குப் பிறகு நீர் அனைத்து இடங்களிலும் நிரம்பியிருந்தது. இந்த நிகழ்ச்சி நடைபெற்ற பிறகு கடுமையான கோடை காலத்தில் கூட அந்த குளம் வற்றியதில்லை.

## 2. முகுந்த புவா என்கிற பிராமணர்

சோலாப்பூரில் முகுந்தா என்கிற பிராமணர் ஒருவர் இருந்தார். அவர் தினமும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக செல்வார். அப்போதெல்லாம் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"மஹராஜ், என்னை தயவுசெய்து இந்த சம்சார பந்தத்திலிருந்து விடுவியுங்கள்"** என்று பிரார்த்தனை செய்து கொள்வார். **"ஆசைகள் அற்றவனாக மாறி உன்னிடம் இருக்கும் அனைத்தையும் துறந்தால் உனக்கு உடனடியாக சந்தோஷம் கிடைக்கும்"** என்று ஸ்ரீ ஸ்வாமி ஒரு நாள் அவரிடம் கூறினார். இந்த வார்த்தைகளை ஸ்ரீ ஸ்வாமிகளுடைய வாயிலிருந்து கேட்ட மாத்திரத்தில் முகுந்தா சமாதி நிலையை அடைந்தார்.

பிறகு மக்களின் தொந்தரவுகளில் இருந்து தன்னை தனிமைப்படுத்திக் கொள்வதற்காக முகுந்த புவா மௌனம் அனுஷ்டிக்கத் தொடங்கினார். அவர் யாரிடமும் எதுவுமே கேட்க மாட்டார். சித்தேஸ்வரர் கோவில் குளத்தில் குளிப்பதை அவர் வழக்கமாகக் கொண்டிருந்தார். அந்த கோவிலில் இருந்த அதிகாரி ஒருவருக்கு புவா அங்கு குளிப்பது பிடிக்கவில்லை. அதனால் அவரிடம், **"நீங்கள் இனிமேல் இந்த குளத்தில் குளித்தால் தண்டிக்கப்படுவீர்கள்"** என்று எச்சரித்தார். அதைப்பற்றி துளியும் கவலை கொள்ளாமல், முகுந்த புவா தன் நடவடிக்கைகளைத் தொடர்ந்து கொண்டிருந்தார். இதைக்கண்ட பணியாள் ஒருவன் அவரை அடிக்கத் தொடங்கினான். ஆனால் புவா எந்தவித சலனமும் இல்லாமல் அமைதியாக இருந்தார். அடித்துக் கொண்டிருந்த வேலையாளுடைய உடல் முழுவதும் வலி ஏற்படத் தொடங்கியது. அதனால்




செய்வதறியாது அந்த வேலையாள் புவாவை ஒரு அறைக்குள் பூட்டி வைத்துவிட்டு மேலதிகாரியிடம் தெரிவித்தான். அடுத்தநாள் அதிகாரிகள் வந்து பார்த்தபோது புவா குளத்தில் நீந்திக் கொண்டிருந்தார். அனைவரும் ஆச்சரியத்தில் உறைந்தனர். மக்கள் அனைவரும் புவாவுடைய பாதத்தில் விழுந்து நமஸ்கரித்தனர். அதிகாரிகள் அவரிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டனர். பின்னாட்களில் அவர் மௌனி புவா என்கிற பெயருடன் புகழடைந்தார். ஒருவருக்கு குருவின் பாதுகாப்பு முழுமையாக இருக்கும் போது, அவருடைய நிழலைக் கூட மரணத்தினால் நெருங்க முடியுமோ!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 43

# இது கோடைக்காலம்...

சிந்தோபந்த் டோல் சர்காரில் வேலை செய்துவிட்டு ஓய்வு பெற்றவர். அதனால் அவருக்கு ஓய்வூதியம் கிடைத்துக் கொண்டிருந்தது. அவருக்கு அப்போதைய அக்கல்கோட்டின் மகாராஜாவான சஹாஜி ராஜாவிடமிருந்து பணியில் வந்து சேருமாறு அழைப்பு வந்தது. டோல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரையும் தன்னோடு அக்கல்கோட்டிற்கு வருமாறு அழைத்தார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமிகளோ தற்போது வெயில் மிகவும் அதிகமாக இருக்கிறது, தன்னால் அதை தாங்கிக் கொள்ளமுடியாது அதனால் தான் மழை காலத்தில் அங்கு வருவதாகக் கூறினார். புயலோ, வெயிலோ அல்லது வெள்ளமோ ஸ்ரீ ஸ்வாமிகளை ஏதாவது செய்துவிடுமா என்ன! அவருடைய வார்த்தைகளுக்கும் நடவடிக்கைகளுக்கும் சூட்சமமான காரணங்கள் பல இருக்கும். அதை அனைவராலும் புரிந்து கொள்ள முடியாது.

சஹாஜி ராஜாவின் முடிவு நெருங்கிக் கொண்டிருந்தது. அந்த வருடத்தின் மழைக்காலம் வெயில் காலம் போல இருந்தது. இதைத்தான் ஸ்ரீ ஸ்வாமிகள் **“கோடைக்காலம்”** என்று கூறினார். சில நாட்களில் மகாராஜாவின் உடல்நிலை மோசம் அடைந்து அவருடைய உயிர் பிரிந்தது. அது ஆஷாட மாதம். அந்த வருடத்தின் மழைக்காலமான நான்கு மாதத்திலும் மழை பொழியவே இல்லை.




தீபாவளிக்குப் பிறகு கார்த்திகை மாதத்தில் மழை பொழிந்து நல்ல விளைச்சல் இருந்தது. இந்த நிகழ்ச்சிகள் நடைபெற்ற பின்னர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் லலிதா பஞ்சமியன்று அக்கல்கோட் வந்தடைந்தார். இருபத்திரண்டு வருடங்கள் அங்கேயே தங்கியிருந்து தன் பக்தர்களின் விருப்பங்கள் அனைத்தையும் நிறைவேற்றி வைத்தார். அவர் தான் **"பக்தர்களின் கற்பகவிருட்சம்"** என்பதை அக்கல்கோட்டில் தங்கி நிரூபித்தார். வரும் அத்தியாயங்களில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட்டில் தங்கி நிகழ்த்திய அசாத்தியமான லீலைகளை படித்து அனுபவிப்போம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

### அத்தியாயம் 44

## சோலாப்பூரிலிருந்து அக்கல்கோட் வந்தடைதல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட் என்னும் புண்ணியம் வாய்ந்த இடத்திற்கு வந்த பிறகுதான், அவருடைய அவதாரத்தின் நோக்கம் பற்றி முழுமையாக அனைவருக்கும் வெளிப்பட்டது. பிரஞ்ஞானபுரம் என்று பண்டைய காலத்தில் அழைக்கப்பட்ட அக்கல்கோட், ஞானிகள் நிறைந்த ஒரு இடமாக இருந்தது. பெர்சியன் மொழியில் அக்கல்கோட் என்றால் ஞானத்தின் கோட்டை என்று பொருள்படும். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இங்கு 22 ஆண்டு காலம் (கி.பி. 1856 முதல் 1878 வரை) தங்கியிருந்து இந்த இடத்தை மேலும் புனிதப் படுத்தினார். அவர் மஹாசமாதி அடைந்த பின்னரும் இந்த இடத்தின் புனிதத் தன்மை குறையாமல் இருப்பதை இன்றும் நம்மால் உணர முடிகிறது.

கார்த்திகை மாதம் சிந்தோபந்த் டோல் அக்கல்கோட்டிலிருந்து சோலாப்பூருக்கு வந்திருந்தார். அப்போது மீண்டும் அவர் அக்கல்கோட்டுக்கு திரும்பும் போது ஸ்ரீ ஸ்வாமி மஹராஜும் அவருடன் கிளம்பினார். டோல் இரண்டு குதிரைகளை வாடகைக்கு எடுத்துக் கொண்டு ஒன்றில் தான் அமர்ந்து கொண்டு மற்றொன்றில் ஸ்ரீ ஸ்வாமிகளை அமர்த்தி ஒரு வேலையாளை அழைத்துக் கொண்டு அக்கல்கோட்டிற்கு கிளம்பினார்.

அவர்கள் நான்கு மைல் தூரம் சென்றவுடன் ஆட்சியர் அலுவலகத்திலிருந்து டோலுக்கு அழைப்பு வந்திருப்பதாக கூறி ஒருவன் வந்து கூறினான். சிந்தோபந்த் தன் வேலையாளை அழைத்து, **"நான் சென்றுவிட்டு உடனே வந்து விடுகிறேன். ஸ்ரீ ஸ்வாமிகள் எங்கும் செல்லாமல் பார்த்துக் கொள்"** என்று கூறிவிட்டு சோலாப்பூருக்குச் சென்றார். ஸ்ரீ ஸ்வாமிகளை யாராவது கட்டுப்படுத்த முடியுமா என்ன? சிந்தோபந்த் டோல் சென்றவுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒரு தோட்டத்திற்குள் சென்று மறைந்துவிட்டார். அங்கிருந்து கிளம்பியவர் நேராக அக்கல்கோட்டில் உள்ள கண்டோபா கோவிலின் தாழ்வாரத்தில் சென்றமர்ந்து கொண்டார்.

சிந்தோபந்த் டோல் தன் வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்டு வந்து பார்த்தபோது ஸ்ரீ ஸ்வாமிகள் அங்கு இல்லை, வேலையாள் மட்டும்தான் இருந்தான். அவருக்கு மிகுந்த கோபம் ஏற்பட்டு வேலையாளை கடிந்து கொண்டார். வேலையாள் பயந்து தன் கைகளை கட்டிக்கொண்டு, **"ஐயா, நான் எவ்வளவோ முயற்சி செய்தேன். ஸ்வாமிகள் நான் சொல்வதை கேட்கவில்லை. என்னை யாரும் கட்டுப்படுத்த முடியாது"** என்று கூறிவிட்டு நடந்து சென்று ஐந்து அல்லது பத்தடிக்கு அப்பால் மறைந்துவிட்டார். தனக்கு மீண்டும் ஸ்வாமியின் தரிசனம் கிடைக்குமோ கிடைக்காதோ என்றெண்ணி டோல் மிகவும் வருத்தமடைந்தார். அவர் அக்கம்பக்கத்தில் உள்ளவர்களிட மெல்லாம் ஸ்ரீ ஸ்வாமிகளை பற்றி விசாரித்தார், ஆனால் எந்த பலனும் இல்லை.மிகவும் வருத்தத்துடன் குதிரையில் வேகமாக சவாரி செய்து அக்கல்கோட் வந்தடைந்தார்.

சோலாப்பூரிலிருந்து அக்கல்கோட் நுழையும் போது அங்கு ஒரு கண்டோபா கோவில் இருக்கும். ஸ்ரீ ஸ்வாமி மகராஜ் அந்த கோவிலில் அமர்ந்திப்பதை கண்ட டோல் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். விரைவாக குதிரையை விட்டு இறங்கி அவரை தன் வீட்டுக்கு வருமாறு அழைத்தார். **"என்னுடைய வீடு வேறு"** என்று அவருக்கு பதிலளித்துவிட்டு டோலுடைய வீட்டுக்கு வர மறுத்துவிட்டார். பிறகு ஸ்ரீ ஸ்வாமி அந்த இடத்திலிருந்து எழுந்து சென்று அக்கல்கோட்டின் எல்லையில் மூன்று நாட்களுக்கு அன்னம் நீர் இல்லாமல் அமர்ந்திருந்தார்.

அந்த எல்லையில் ரிசால்தர் அஹ்மத் அலி கான் என்கிற யவனர் ஒருவர் ஸ்ரீ ஸ்வாமிகளை கவனித்துக் கொண்டிருந்தார். அவர் நான்காவது நாள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து, ஹுக்கா வேண்டுமா என்று கேட்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் சரி என்று கூறினார். ஸ்ரீ ஸ்வாமிகள் பார்ப்பதற்கு பைத்தியக்காரர்

போல தோற்றமளிக்கிறார் என்றெண்ணிக் கொண்டு, குழாயில் புகையிலையை நிரப்பி ஆனால் நெருப்பு வைக்காமல், அதை அப்படியே அவரிடம் கொடுத்தார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமிகள் சாதாரண மனிதரா என்ன! மகராஜ் காலியான ஹூக்காவை வாங்கிப் புகைக்க துவங்கியவுடன் அதிலிருந்து புகை வெளிவரத் தொடங்கியது. அதைக் கண்ட ரிசால்தர் இவர் கண்டிப்பாக ஒரு சாதாரண மனிதராக இருக்க முடியாது என்பதை உணர்ந்து கொண்டார்.

ஸ்ரீ ஸ்வாமி மூன்று நாட்களாக உணவருந்தவில்லை என்பதை அறிந்திருந்த ரிசால்தர் அவருக்கு உணவளிக்க ஏற்பாடுகள் செய்தார். அருகிலிருக்கும் ஏதாவது பிராமணரின் வீட்டில் உணவுக்கு ஏற்பாடு செய்யலாம் என்றெண்ணியவாறு சோளப்பாவின் வீட்டுக்கு ஸ்ரீ ஸ்வாமிகளை அழைத்து வந்தார். இந்த முறையில்தான் ஸ்ரீ ஸ்வாமிகள் தன் அத்யந்த பக்தரான சோளப்பா மகராஜின் வீட்டுக்கு விருந்தாளியாக வந்தடைந்தார். வரும் அத்தியாயங்களில் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் தான் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி என்பதை பலருக்கு உணர்த்தியதையும் மற்றும் அக்கல்கோட்டில் செய்த அற்புதமான லீலைகள் பற்றியும் விரிவாக படித்து ரசிக்கலாம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 45

# ஸ்ரீ ஸ்வாமி மகராஜ் சோளப்பாவின் வீட்டில்..

ரிசால்தர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை சோளப்பாவின் வீட்டுக்கு அழைத்து வந்து நடந்த நிகழ்ச்சிகளை பற்றி அவரிடம் கூறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு உணவளிக்குமாறு கேட்டுக்கொண்டார். சாப்பாடு தயார் செய்யப்பட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை அமர வைத்து உணவு பரிமாறப்பட்டது. ஸ்ரீ ஸ்வாமி உணவை உட்கொள்ளாமல் உணவு பரிமாறப்பட்ட தட்டை ரிசால்தரை தொடச் சொன்னார். ஆனால் ரிசால்தர் மிகவும் தயக்கப்பட்டார் (அந்நாட்களில் ஜாதி பாகுபாடு மிகவும் வியாபித்திருந்தது). ஸ்ரீ ஸ்வாமிகளோ எதையுமே பொருட்படுத்தாமல், **"பயப்படாதே! இந்த தட்டை உன் கையில் பிடித்துக்கொள்"**

என்று கூறினார். அந்த தட்டை ரிசால்தர் வாங்கி ஸ்ரீ ஸ்வாமிகளிடம் கொடுத்தவுடன் மகராஜ் உணவருந்தத் துவங்கினார்.

அந்த வீட்டிலிருந்த பெண்கள் இவர் பார்ப்பதற்கு பைத்தியக்காரர் போல இருக்கிறாரே, இவரை ஏன் வீட்டுக்கு அழைத்து வந்தார் என்று சோளப்பாவை கடிந்து கொண்டனர். அடுத்த நாளும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அங்கேயே தங்கியிருந்தார். அந்த வீட்டிலிருந்த பெண்களுக்கெல்லாம் அவர் அங்கு தங்கியிருப்பது பிடிக்கவேயில்லை. அவர் சமைத்த உணவுகளையெல்லாம் அசுத்தம் (ஆச்சாரக் குறைவு) செய்வதாக கோபித்துக் கொண்டனர். சோளப்பாவுக்கு பித்து பிடித்துவிட்டது என்று எண்ணினர். ஆனால் சோளப்பாவுக்கோ ஸ்ரீ ஸ்வாமியின் மீது பக்தி குறைவதற்கு பதிலாக பன்மடங்காக அதிகரித்தது.

மகராஜ் அவர்களை சோதிக்கும் விதமாக பலவகையான தொல்லைகள் கொடுத்தார். வீட்டிலுள்ள தானியங்களை பசுக்களுக்கு உண்ணக் கொடுப்பது, வீட்டிலிருப்பதை எடுத்து பிச்சைக்காரர்களுக்கு அளிப்பது, எங்கு வேண்டுமானாலும் வீட்டினுள்ளோ அல்லது வெளியேயோ மலம் கழிப்பது போன்ற பலவகையான இன்னல்கள் அளித்தார். இவ்வளவு விதவிதமான பிரச்சனைகளை அளித்தாலும் சோளப்பாவின் பக்தியில் எந்தவித குறையும் ஏற்படவில்லை. இதுபோன்ற சிறு சிறு இன்னல்களை அவர் தாங்கிக் கொண்டிருந்தமையால் அவருக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் என்னும் மகா பொக்கிஷம் கிடைத்தது. அதன் பலன்களை அவர் மட்டுமல்லாமல் அவருடைய பரம்பரையே இன்றும் அனுபவித்துக் கொண்டிருக்கின்றனர். ஏனென்றால் அவருடைய வீட்டில்தான் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சமாதி மந்திர் அமைந்துள்ளது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 46

# தான் மகான் என்று நிரூபித்தல்

ஒரு முறை சோளப்பாவின் மனைவி நல்ல தரமான தானியங்களை வாங்கி அவற்றை சுத்தப்படுத்தி ஒரு பானை முழுவதும் நிரப்பி வைத்திருந்தாள். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவற்றை யாருக்கும் தெரியாமல் எடுத்து சோளப்பாவின்





பசுக்களுக்கு உண்ண அளித்துவிடுவார். அதனால் தானியங்கள் சீக்கிரமாக தீர்ந்து விடும். அது ஒரு பண்டிகைக்காலம். சோளப்பாவின் மனைவி பூரண் போளி செய்வதற்குத் தேவையான தரமான கடலைப் பருப்புகளை வாங்கி ஒரு பானை முழுவதும் நிரப்பி வைத்திருந்தாள். பானையை சென்று சோதித்தபோது காலியாக இருந்தது. இது ஸ்ரீ ஸ்வாமிகளின் வேலைதான் என்பதை அவள் தெரிந்து கொண்டு சோளப்பாவிடம் புகார் கூறினாள். சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளிடம் இதைப் பற்றி விசாரித்த போது, **“எனக்கு எதுவுமே தெரியாது. நீ உன் பசுவிடம்தான் கேட்கவேண்டும்”** என்று கிருஷ்ணர் எதுவுமே தெரியாமல் யசோதையிடம் கூறுவது போலக் கூறினார். சோளப்பாவோ பரம ஏழை. பெரிய குடும்பத்தின் செலவுகளை சமாளிப்பது அவருடைய மனைவிக்கு மிகப்பெரிய சவாலாக இருக்கும். அவளுக்கு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஒரு சாதாரண மனிதர் இல்லை என்பதை உணர்ந்து கொள்ளும் அளவிற்கு தகுந்த பக்குவம் இல்லை. அவள் எப்போதும் ஸ்ரீ ஸ்வாமிகளின் மீது கோபமும் ஆவேசமும் கொண்டிருந்தாள். ஆனால் சோளப்பாவோ அதற்கு எதிர்மாறான எண்ணத்தோடு இருந்தார்.

ஸ்ரீ மாலோஜிராவ் ராஜாவின் அரண்மனையில் உள்ள வேலையாட்கள் அக்கல்கோட்டில் மஹாபுருஷர் ஒருவர் வந்திருப்பதாக அவரிடம் கூறினர். அதற்கு மஹாராஜா, **“அவர் உண்மையானவர் தானா என்பதை எப்படி நம்புவது? அவர் இப்போதே என் கண் முன்னால் வந்து தரிசனம் அளித்தாரானால், நான் அவரை மஹாபுருஷர் என்று நம்புகிறேன்”** என்று கூறிய அடுத்த நொடி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவர் முன்னால் திகம்பரராக காட்சியளித்தார்.(இந்த நிகழ்ச்சி அக்கல்கோட் பழைய அரண்மையில் உள்ள கணபதி கோவிலில் நடந்தது என்று கூறுகிறார்கள்). மஹாராஜா ஆச்சரியத்தில் உறைந்தார். அவருக்கு ஸ்ரீ ஸ்வாமிகளின் மீது பக்தி பெருக்கெடுத்தது. சில நிமிடங்களுக்குப் பின்னர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அந்த இடத்தை விட்டு நடந்து சென்றார்.

சில நாட்களுக்குப் பின்னர் பம்பாயின் கவர்னர் சோலாப்பூருக்கு வருகை புரிந்திருந்தார். அவர் மாலோஜிராவ் ராஜாவை தன்னை வந்து சந்திக்குமாறு அழைத்திருந்தார். மாலோஜிராவ் ராஜா சிந்தோபந்த் டோலை தன்னோடு அழைத்துக் கொண்டு சோலாப்பூருக்கு புறப்பட்டார். டோல் ராஜாவிடம், **“தாங்கள் அரசு நிமித்தமாக செல்வதால் சோளப்பா வீட்டில் தங்கியிருக்கும் மகானிடம் ஆசி பெற்றுவிட்டு செல்லலாமே”** என்று ஆலோசனை கூறினார். அதற்கு ராஜா சம்மதம் தெரிவித்து, அவர்கள் சோளப்பாவின் வீட்டுக்குச்

சென்றனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சோளப்பாவின் வீட்டிலுள்ள கட்டில் ஒன்றில் அமர்ந்திருந்தார். ராஜா பல்லக்கை விட்டு இறங்கிய பின் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கோபமான முகத்தை பார்த்தவுடன் அருகில் செல்ல அவருக்கு தயக்கமாக இருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகள் அவரை பார்த்து, **"வா இங்கே!"** என்று அழைத்தவுடன் ராஜா அவருக்கருகில் தரிசனத்துக்காக சென்றார். அப்போது ஒரு காவலாளி வைத்திருந்த பெரிய கத்தியை ஸ்ரீ ஸ்வாமிகள் வாங்கி ராஜாவின் கையில் கொடுத்தார். ஒரு வேலையாள் அவன் கையில் வைத்திருந்த எச்சில் துப்பும் பாத்திரத்தை வாங்கி ராஜாவிடம் கொடுத்தார். ராஜாவுக்கு எதுவும் புரியவில்லை. அவர் விடைபெற்றுக் கொண்டு டோலுடன் சோலாப்பூர் சென்றடைந்தார்.

கவர்னர் கிளம்பும் அவசரத்தில் இருந்தார். அதனால் ராஜாவுக்கு குண்டுகள் வெடித்து தகுந்த வரவேற்பு கிடைக்கவில்லை. அது அவருக்கு மிகுந்த வருத்தத்தை ஏற்படுத்தியது. கவர்னருக்கும் அரசருக்கும் இடையே உரையாடல் நடைபெற்றது. அந்த ஊரில் ஆயுதங்கள் வைத்துக்கொள்ள தடைகள் இருந்தன. அந்தத் தடைகளை கவர்னர் முற்றிலுமாக நீக்கினார். இதைக் குறிக்கும் வகையில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அரசரின் கையில் வாளையும், அவருக்கு சரியான மரியாதை அளிக்கப்படாது என்பதை உணர்த்தும் வகையில் அந்த பாத்திரத்தையும் கொடுத்து முன்பே குறிப்பால் உணர்த்தினார்.

இதை புரிந்துகொண்ட மாலோஜிராவ் ராஜாவுக்கு ஸ்ரீ ஸ்வாமிகளின் மீதிருந்த பக்தி பன்மடங்காகப் பெருகியது. ஸ்ரீ ஸ்வாமிகள் சோளப்பாவின் வீட்டில் தங்கியிருந்தமையால் அவருடைய செலவுகளுக்கென மாதம் 5/- ரூபாய் சோளப்பாவுக்கு அளிக்கப்பட்டது. இது ஸ்ரீ ஸ்வாமிகள் கொடுக்கும் சிறு சிறு பரீட்சைகளை பொருட்படுத்தாமல் இருந்தமைக்கு சோளப்பாவுக்கு கிடைத்த நிரந்தரமான பரிசு.

ஸ்ரீ ஸ்வாமிகள் அளிக்கும் சிறு சிறு இன்னல்கள் மற்றும் பரிட்சைகளை சந்திக்கும் துணிவை இழந்தோமானால், அவர் அளிக்கப்போகும் மிகப்பெரிய பரிசைஇழந்துவிடுவோம்என்பதைஇந்தநிகழ்ச்சிநமக்குதெளிவாக்குகிறதல்லவா? ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒரு மகான் என்பதை உணர்ந்து கொண்டு அவரைத் தேடி பலர் வந்து பலனடைந்த நிகழ்ச்சிகள் பற்றி தொடர்ந்து வரும் அத்தியாயங்களில் விரிவாகப் பார்க்கலாம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 47

# ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதிதான் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம் என்பதையும் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியே மீண்டும் உருவம் எடுத்து வந்திருப்பதாக முன்பே சிந்தித்தோம். அதை மெய்ப்பிக்கும் விதமாக பல நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியின் இடம் கானகாபூர். பல தத்த பக்தர்கள் கானகாபூருக்குச் சென்று தத்தரை வணங்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். அப்படிச் செல்லும் பக்தர்கள் பலருக்கு, தத்தர் தான் அக்கல்கோட்டில் இருப்பதாக உணர்த்தி, அவர்களை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் இழுத்து வந்தார். அப்படி அங்கு வரும் பக்தர்கள் எவரேனும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம், **“நீங்கள் யார்?”** என்று கேட்டால், **“என்னுடைய ஊர் தத்த நகரம், ஆலமரம்”** என்று அவர் நல்ல மனோ நிலையில் இருக்கும் போது கூறுவார்.

ஒரு நாள் கானகாபூரில் இருந்து வந்திருந்த சில பக்தர்களிடம், **“உங்களுடைய கடவுளின் பெயர் என்ன?”** என்று கேட்டதற்கு அவர்கள் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி என்று கூறினர். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **“என்னுடைய பெயர் நரசிம்மபான்”** என்று கூறினார். பல சமயங்களில், **“நான் ராமனானேன். பின்னர் கிருஷ்ணனானேன்”** என்று கூறியிருக்கிறார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சோலாப்பூரில் சிந்தோபந்த் டோலை சந்தித்த பின்னர்தான் அக்கல்கோட் வந்து சேர்ந்ததாக முந்தைய அத்தியாயங்களில் விரிவாகப் பார்த்தோம். சிந்தோபந்த் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜின் பரம பக்தர் என்பதை நாம் நன்கு அறிவோம். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை சந்திப்பதற்கு ஏறக்குறைய நான்கு அல்லது ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. அச்சமயத்தில் சிந்தோபந்த் சோலாப்பூர் தாலுக்காவில் மாம்லத்தாராக இருந்த போது அவருடைய குமாஸ்தா சதாராவுக்கு புறப்பட்டுச் சென்றார். செல்லும் வழியில் அவர் பண்டரிபுரத்திற்குச் சென்று அங்கு தங்கியிருந்தார். அவர் அங்கு கோபால் புவா என்னும் மகானைச் சந்தித்தார். அந்த மகான் அவரிடம், **“நீ யார்? உன்னுடைய ஊர் எது?”** என்று கேள்வி




எழுப்பினார். அவர் தான் சோலாப்பூர் தாலுக்காவில் உள்ள சர்க்கார் அலுவலகத்தில் குமாஸ்தாவாக பணிபுரிவதாக அவரிடம் கூறினார். புவா அவரிடம், **"நான் உன் முதலாளிக்கு ஒரு கடிதம் தர வேண்டும்"** என்று கூறிவிட்டு அவரை ஒரு காகிதமும் பேனாவும் கொண்டு வருமாறு கூறினார். அதில் அடங்கியிருந்த முக்கியமான விஷயம் என்னவென்றால், **"சில நாட்களுக்குப் பின்னர் நீ ஒரு துறவி-யோகியான தத்தாத்ரேயரை சந்திப்பாய். அவருடைய தரிசனத்தைப் பெற்றுக் கொண்டு அவருடன் சந்தோஷமாக இருந்து உன் நாட்களை கழித்துக் கொள்"** என்று சிந்தோபந்த் டோலுக்கு எழுதி அனுப்பினார். இந்த கடிதம் கிடைத்து ஏறக்குறைய ஏழு அல்லது எட்டு வருடங்களுக்குப் பின்னர் டோல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை சந்தித்தார். அவர் ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம்தான் என்பதை டோல் உணர்ந்து கொண்டார்.

பக்தர்கள் பலர் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதிக்கு செய்துகொண்ட பிரார்த்தனைகளை அக்கல்கோட்டிற்கு வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் நிறைவேற்றிவிட்டுச் சென்றனர். அப்படிப்பட்ட நிகழ்ச்சிகளை விரிவாகக் காணலாம்.

### 1. பிராமணரின் மகனுடைய உபநயனம்:

பிராமணர் ஒருவர் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியிடம் தனக்கு மகன் பிறந்தால் அவனுடைய உபநயன வைபவத்தை கானகாபூர் வந்து நடத்துவதாக பிரார்த்தனை செய்து கொண்டார். தன் பிரார்த்தனையை நிறைவேற்றுவதற்காக அவர் தன் மனைவி மற்றும் குடும்பத்துடன் கானகாபூருக்கு பயணம் மேற்கொண்டார். அங்கு செல்லும் வழியில் அவர் அக்கல்கோட் வந்து சேர்ந்தார்.அப்போது அவர் கையிலிருந்த பணம் முழுவதும் தீர்ந்து விட்டது. அவரால் தன் பயணத்தைத் தொடர முடியவில்லை. அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை சந்தித்து, **"என்னால் கானகாபூர் வரை சென்று என் பிரார்த்தனையை நிறைவேற்ற முடியவில்லை. நீங்கள் ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம் என்பதை உணர்ந்து கொண்டேன். என்னுடைய பிரார்த்தனையை இங்கேயே நிறைவேற்ற அனுமதிக்க வேண்டும்"** என்று கேட்டுக் கொண்டார். மகராஜ் அதை ஒத்துக்கொள்ளும் விதமாக தன் தலையை அசைத்தார். அந்த பிராமணன் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருளால் உபநயனம் செய்யத் தேவையான பண உதவி அவருக்குக் கிடைத்தது. அவர் தன் பிரார்த்தனையை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் முன்னிலையில் நடத்தி ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டார்.




## 2. தாகூர்தாஸ் புவா

மும்பையைச் சேர்ந்த தாகூர்தாஸ் புவா என்கிற அடியவர் சிறு வயதிலிருந்தே ஸ்ரீ தத்தாத்ரேயரின் பரம பக்தர். அவர் கானகாபூர், நரசோபவாடி போன்ற இடங்களுக்கு எப்போதும் சென்று வருவார். அவர் ஸ்வாமியின் மீது கீர்த்தனைகள் பாடுவதில் மிகுந்த ஆர்வம் கொண்டவர். இருப்பினும் விதியின் வசத்தால் அவர் வெண்குஷ்டம் என்கிற தோல் நோயினால் மிகவும் சிரமப்பட்டார். அவருடைய முகத்தின் நிறம் மாறியதால் அவருடைய தோற்றமே மாறியது. இரண்டு வருடங்கள் அவர் பல வகையான மருத்துவ முறைகளை செய்து பார்த்தும் எந்தவித முன்னேற்றமும் ஏற்படவில்லை. அவருக்கு இது மிகுந்த வேதனையை அளித்தது, அவரால் சுதந்திரமாக எவருடனும் உரையாடக்கூட முடியவில்லை. அதனால் அவர் தன் மனைவியை அழைத்துக் கொண்டு மீதமுள்ள தன் வாழ்நாள் முழுவதையும் காசியில் கழித்துவிடலாம் என்று முடிவு செய்தார்.

காசிக்குச் செல்வதற்கு முன்னர் கானகாபூர் சென்று அங்கிருக்கும் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியின் பாதுகைகளை (இங்கு நரசிம்ம சரஸ்வதியின் பாதுகைகள் மட்டுமே உள்ளது. திருவுவச்சிலைகள் கிடையாது) தரிசனம் செய்யலாம் என்று எண்ணினார். அந்த பாதுகைகளில் பூசுவதற்காக உயர்ந்த வகை கஸ்தூரியை (அத்தர்) வாங்கியிருந்தார். தரிசனம் செய்த குதூகலத்தில் கஸ்தூரியை பாதுகைகளுக்கு சமர்ப்பணம் செய்வதற்கு மறந்துவிட்டார். அந்த கோவிலிலிருந்த பிராமணர்களுக்கு அன்னதானம் அளித்துவிட்டு, அற்புதமான கீர்த்தனைகளை பாடிய பின்னர், அடுத்த நாள் காசிக்கு புறப்படுவதற்கான ஏற்பாடுகள் மேற்கொண்டார். அவர் இரவில் தூங்கிக்கொண்டிருந்த போது, **“அக்கல்கோட்டிற்குச் செல். அங்கிருக்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் தரிசனத்தை பெற்றுக் கொண்டால் உன் நோயிலிருந்து விடுபடுவாய்”** என்கிற குரல் ஒன்று அவருக்குக் கேட்டது. காலை விழித்துக் கொண்டவுடன் அந்த கனவைப் பற்றிய நினைவு அவருக்கு வந்தது. அவர் தன் தினசரி அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு அக்கல்கோட்டிற்குப் பயணித்தார்.

அவர் மூன்றாவது நாள் அக்கல்கோட் சென்றடைந்தார். அங்கு சென்று ஸ்ரீ ஸ்வாமி மகராஜ் எங்கிருக்கிறார் என்று விசாரித்தபோது, வேறொரு ஊரிலிருந்து வந்திருக்கும் ஒரு தாசியின் வீட்டில் ஸ்ரீ ஸ்வாமிகள் இருப்பதை அறிந்து கொண்டார். அவர் எந்தவித தயக்கமும் இன்றி ஓடோடிச் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். அவர் புவாவைப்




பார்த்தவுடன், **"என்னுடைய கஸ்தூரி எங்கே?"** என்று கேட்டார். உடனே தாகூர்தாசுக்கு பாதுகைகளுக்கு பூசுவதற்காக வாங்கிய கஸ்தூரியைப் பற்றிய நினைவு வந்தது. அதை உடனடியாக எடுத்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சமர்ப்பணம் செய்தார். அதை ஸ்ரீ ஸ்வாமிகள் மகிழ்ச்சியோடு வாங்கிக்கொண்டு அங்கிருந்த குழந்தைகளுக்கெல்லாம் பகிர்ந்தளித்தார்.

தாகூர்தாஸ் புவா சில நாட்களுக்கு அக்கல்கோட்டில் தங்கியிருந்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்து வந்தார். அப்படி ஒருநாள் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் தரிசனத்துக்காக வந்த போது, ஸ்ரீ ஸ்வாமி துனியில் எரிந்து கொண்டிருந்த கரிக்கட்டையை எடுத்து அவர் மீது எறிந்தார். அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும், **"என்ன புண்ணியம்! உங்கள் நோய் இனி குணமாகிவிடும்"** என்று சந்தோஷமாகக் கூச்சலிட்டனர். புவா அந்த கரிக்கட்டையுடன் கானகாபூரின் விபூதியையும் சேர்த்து குழைத்து தன் தோலில் தடவி வந்தார்.

அவருடைய மனைவி ராதா பாய்க்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மீது அலாதியான பக்தி உண்டு. தாகூர்தாஸ்-ராதாபாய் தம்பதிக்கு ஏழு வயதில் ஒரு மகள் மட்டும் இருந்தாள். ஒரு நாள் ராதாபாய் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் தனக்கு மகன் பிறக்கவேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொண்டாள். உடனே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தான் தலையில் அணிந்திருந்த தொப்பியை எடுத்து அவளுடைய மடியில் எறிந்தார். அவள் மிகவும் மகிழ்ச்சியடைந்து அதை மஹாப்பிரசாதமாக ஏற்றுக் கொண்டாள். இந்நிகழ்ச்சி நடைபெற்று பன்னிரண்டு மாதங்களில் அவள் ஒரு அழகான ஆண் மகனைப் பெற்றெடுத்தாள். அக்குழந்தைக்கு குருநாத் என்று பெயரிட்டனர். குருநாத்தின் உபநயன விழாவும் அக்கல்கோட்டில் ஸ்ரீ ஸ்வாமிகளின் முன்னிலையில் அவருடைய ஆணைக்கிணங்க விமரிசையாக நடைபெற்றது.

ஒரு நாள் சக வருடம் *1792* இல் (கி.பி. *1870*) மாசி மாத சிவராத்திரியில் நடைபெற்ற கீர்த்தனையில் தாகூர்தாஸ் பாடிக்கொண்டிருந்த போது, அவருடைய தலையில் அணிந்திருந்த தங்க மற்றும் வெள்ளி ஜரிகை குல்லாவை எடுத்து ஸ்ரீ ஸ்வாமிகள் குருநாத்தின் தலையில் அணிவித்தார். இந்த நிகழ்ச்சி நடைபெற்ற பின்னர் தாகூர்தாஸ் புவா ஸ்ரீ ஸ்வாமிகளிடம் முழுமையாக சரணாகதி அடைந்தார். அவர் ஒவ்வொரு வருடமும் குருபிரதிபாடா அன்று அக்கல்கோட் சென்று நான்கு நாட்களுக்கு கீர்த்தனைகள் பாடுவார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதுகைகளை மும்பையில் தாகூர் துவார் என்கிற இடத்தில்




பிரதிஷ்டை செய்து பூஜித்து வந்தார். அவருடைய காலம் முடிந்த பின்னர் அவருடைய மகன் குருநாத் அப்பணிகளை பக்தியுடன் செய்தார்.

தாகூர்தாஸ் புவாவின் வெண்குஷ்ட நோய் முற்றிலுமாக குணமடைந்த பின்னர் அவர் அக்கல்கோட்டிற்கு சென்று பஜனைகள் செய்து விட்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சேவைகள் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். ஒருநாள் அவ்ருடைய மனதில், **“தான் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் குரு உபதேசம் பெற்றுக் கொள்ள வேண்டும்”** என்கிற எண்ணம் தோன்றியது. உடனே அந்தர் சக்தியான மஹராஜ், **“என்னை ஏன் தொந்தரவு செய்கிறாய்? நான் உனக்கு குருவாக இருக்க முடியாது. நான் எந்த குருவையும் சீடனையும் பார்த்ததில்லை”** என்று கோபமாகக் கூச்சலிட்டார். அடுத்த வருடம் தனக்குக் கண்டிப்பாக சாவு நேரிடும் என்பதை உணர்ந்த புவா, ஸ்ரீ ஸ்வாமியின் உபதேசம் தனக்குக் கிடைத்தாக வேண்டும் என்கிற உறுதியோடு ஸ்ரீ ஸ்வாமிகளின் முன்னிலையில் நின்று கொண்டிருந்தார். **“நீ இங்கிருந்து செலவில்லையென்றால் உன்னை செருப்பைக் கொண்டு அடிப்பேன்”** என்று ஸ்ரீ ஸ்வாமி மிகுதியாக கூச்சலிட்டார். பக்தவிஜயத்தில் கபீர்தாசுக்கும் ராமானந்துக்கும் நடைபெற்ற நிகழ்ச்சிகளைப் பற்றிய நினைவு அவருக்கு வந்தது. உடனே ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **“உன் கபீர் எந்த நரகத்திற்கு வேண்டுமானாலும் போகட்டும். எனக்கு எந்தவித கவலையும் இல்லை”** என்றார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜின் சர்வ வல்லமையை எண்ணி ஆச்சரியம் அடைந்த புவா, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் தத்தாத்ரேயரும் வேறல்ல என்பதை உணர்ந்து கொண்டு தன் வாழ்நாள் முழுவதும் அவருக்குச் சேவைகள் செய்தார்.

### 3. பிராமணரின் வயிற்றுவலியை குணப்படுத்துதல்

ஸ்ரீதர் என்கிற கர்நாடக பிராமணர் ஒருவர் மிகுதியான வயிற்று வலியால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். அவர் கானகாபூரில் தங்கி அங்கு சேவைகள் செய்து வந்தார். ஒரு நாள் அவருடைய கனவில் ஸ்ரீ தத்தர் ஒரு யதி ரூபத்தில் தோன்றி, **“ஸ்ரீபுரி இலையின் சாறைப் பிழிந்து சுக்கு மற்றும் கல் உப்புடன் கலந்து குடி. உன் வயிற்று வலி குணமாகும்”** என்று கூறினார். ஸ்ரீதர் காலையில் விழித்துக் கொண்டவுடன் தன் கனவைப் பற்றி நினைவூட்டிக் கொண்டார். அவருக்கு ஸ்ரீபுரி மரம் என்றால் என்னவென்று தெரியவில்லை. அங்கிருப்பவர்களிடம் விசாரித்த போதும் அவர்களுக்கும் தெரியவில்லை. அந்த பிராமணன் கவலையோடு அன்றிரவு கோவிலிலேயே உறங்கினார். அவருடைய கனவில் மீண்டும் வந்த தத்தாத்ரேயர், **“ஸ்ரீ பரமஹம்சர் ஒருவர்**

**அக்கல்கோட்டில் இருக்கிறார். அவருக்கு ஸ்ரீபுரி என்றால் என்னவென்று தெரியும்"** என்று கூறினார்.

அடுத்த நாள் காலையில் ஸ்ரீதர் அக்கல்கோட் நோக்கி பயணம் செய்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மாருதி கோவில் வளாகத்தில் உள்ள கிணற்றுக்கு அருகில் அமர்ந்திருந்தார். ஸ்ரீதரை பார்த்தவுடன், **"ஏய்! எலுமிச்சை மரம்தான் ஸ்ரீபுரி. ஸ்ரீபுரி சாறை எடுத்து சுக்கு மற்றும் கல் உப்புடன் கலந்து மூன்று நாட்களுக்கு குடித்தால் உன் வயிற்று வலி குணமாகும்"** என்று கூறினார். அந்த பிராமணன் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியபடியே அவர் எட்டு நாட்களுக்குத் தொடர்ந்து செய்தார். அவருடைய நோய் முற்றிலும் குணமாகி தன் ஊருக்குக் கிளம்பினார்.

### 4. கோவிந்தராவ் பந்துக்கு அருளுதல்

ஸ்ரீ சிந்தோபந்த் டோலுடைய மகன் கோவிந்தராவ் பந்த் ஸ்ரீ தத்தாத்ரேயரின் பரம பக்தர். அவருக்கு பேய் பிடித்திருந்ததால் மிகவும் துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார். அதனால் அவருடைய தந்தையின் ஆலோசனையின் பேரில் அக்கல்கோட்டில் தங்கியிருந்தார். அவர் ஜோஷிபுவாவின் வீட்டில் இருந்தபோது திடீரெனெ ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அங்கு வந்தார். காலை நேரம் என்பதால் ஜோஷிபுவா பூஜையில் இருந்தார். ஸ்ரீ கோவிந்தராவ் ஸ்ரீ ஸ்வாமிகளை ஒரு மர ஆசனம் கொடுத்து அமரச் செய்தார். அவர் கானகாபூரில் வாங்கியிருந்த மரப்பாதுகைகளை கொண்டு வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதத்தில் அணிவித்துவிட்டு பாத பூஜை செய்தார். **"ஸ்வாமி, நான் உங்கள் பாதங்களையே எப்போதும் நினைத்துக் கொண்டு இருக்க வேண்டும். அதை ஒரு நொடி கூட நான் மறவாமல் இருக்க அருள் புரிய வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகள் அதற்கு இசைவாக தலையசைத்தார். கோவிந்தராவ் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"சங்கமத்தில் இருந்தது நீங்கள் தானா?"** என்று கேட்டவுடன், **"ஆமாம், நான்தான்"** என்று கூறிவிட்டு எழுந்து சென்று விட்டார்.

ஒருநாள் கோவிந்தராவுக்கு ஒரு கனவு வந்தது. அதில் ஸ்ரீக்ஷேத்ர கானகாபூர் கோவிலில் உள்ள ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியின் பாதுகைகள் இருக்கும் இடத்தில் ஒரு மரப்பாதுகைகள் இருந்தன. அதற்கு அருகில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அமர்ந்து கொண்டு அந்த பாதுகைகளை அணிந்து கொண்டார். அங்கு கூடியிருந்த பக்தர்களிடம், **"கர்ப்பகிரகத்தில் இருப்பது யார்?"** என்று

கேட்டதற்கு **"அவர் அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்"** என்று கூறியவுடன் அவருடைய கனவு கலைந்தது. இந்த கனவுக்குப் பின்னர் அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்ரீ தத்தாத்ரேயர்தான் என்பது அவருக்கு உறுதியானது. அவர் தன் வாழ்நாள் முழுவதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அத்யந்த பக்தராக இருந்தார்.

**5.** அக்கல்கோட்டின் மஹாராஜாவான ஸ்ரீ மாலோஜிராவ் ராஜே போஸ்லே முதலில் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியின் பக்தராகத்தான் இருந்தார். அவர் கானகாபூரில் நடைபெறும் அனைத்து விழாக்களிலும் பங்கெடுத்துக் கொள்வார். குருப்ரதிபாடாவின் போது மூன்று நாட்களுக்கு அங்கு தங்கிவிட்டு, பிராமணர்களுக்கு போஜனம் அளித்த பின்புதான் அக்கல்கோட் திரும்புவார். அவருக்கு ஒருநாள், **"நான் உன்னுடைய ஊரிலேயே இருக்கும் போது நீ எதற்காக கானகாபூர் வரவேண்டும்?"** என்று கேட்பது போல ஒரு கனவு தோன்றியது. அன்றிலிருந்து மஹாராஜா அக்கல்கோட்டிலியே ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்து வந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதுகைகளை தன் பூஜை அறையில் வைத்து, ஸ்ரீ குரு நரசிம்ம சரஸ்வதியின் பாதுகைகளுக்கு அத்தர் பூசுவது போலவே ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதுகைகளுக்கும் அத்தர் பூசி வழிபடலானார். குருப்ரதிபாடாவை அக்கல்கோட்டிலேயே கொண்டாடத் துவங்கினார். விழா கொண்டாட்டத்திற்காக வருடத்திற்கு ரூபாய் 150/- ஐ தன் கஜானாவிலிருந்து அளித்தார்.

**6.** ஒரு பிராமணன் மிகுந்த வயிற்று வலியால் அவதிப்பட்டு வந்தார். அவர் நரசோபவாடி சென்று தன் வயிற்று வலி குணமானால் ஸ்ரீ குருவுக்கு ஒரு ரூபாய் 25 காசுகள் கொடுத்து பேடாக்கள் வாங்கி படைப்பதாக வேண்டிக் கொண்டார். ஸ்ரீ குருவின் கருணையால் அவருக்கு வயிற்று வலி குணமானது. ஆனால் அவர் தன் வேண்டுதலை முற்றிலுமாக மறந்து விட்டார். அவர் பத்து வருடங்களுக்குப் பின்னர் ஒரு பணி நிமித்தமாக அக்கல்கோட் வந்திருந்த போது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்திருந்தார். அவரைப் பார்த்தவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள், **"ஏ! மாதர்சோத், என்னுடைய பேடாக்கள் எங்கே?"** என்று கேட்டு அவற்றை பெற்றுக் கொண்டார்.

**7.** ஒரு பிராமணர் பங்கு சந்தையில் பெரும் லாபம் ஈட்டிக் கொண்டிருந்தார். ஆனால் அவருக்கு குழந்தை பாக்கியம் இல்லை. அவர் தன் குடும்பத்துடன் கானாகபூர் சென்று தனக்கு குழந்தை வரம் கிடைத்தால் ஆயிரம் பேருக்கு அன்னதானம் அளிப்பதாகப் பிரார்த்தனை செய்து

கொண்டார். ஸ்ரீ குருவின் கருணையினால் அவருக்கு மகன் பிறந்தான். ஆனால் பங்குச்சந்தை சரிவால் அவர் பெரும் நஷ்டத்தைச் சந்தித்தார். அதில் ஏற்பட்ட அதிர்ச்சியில் உயிரிழந்தார். அவருடைய மனைவிக்கு ஸ்ரீ குருவுக்கு செய்துகொண்ட பிரார்த்தனையை நிறைவேற்ற முடியவில்லையே என்ற வருத்தம் மிகுதியாக இருந்தது. சிலர் அவளிடம் கானகாபூருக்குச் சென்று ஸ்ரீ குருவுக்கு சேவைகள் செய்யுமாறு அறிவுரை கூறினர். அவளும் அவ்வாறே செய்து கொண்டிருந்தபோது, அக்கல்கோட்டிற்குச் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு உணவளித்தால் உன் பிரார்த்தனை நிறைவேறிவிடும் என்ற கனவு தோன்றியது. உடனே அவள் அக்கல்கோட் கிளம்பிச் சென்று ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னர் மிகுந்த தயக்கத்துடன் நின்றிருந்தாள். அவளிடம் ஸ்ரீ ஸ்வாமிகள், **"எனக்கு உணவு ஏற்பாடு செய்"** என்று கூறினார். அவள் மிகுந்த மகிழ்ச்சியோடு ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அற்புதமான உணவுகளை தயார் செய்து பரிமாறினாள். ஸ்ரீ ஸ்வாமிகள் வயிறு முட்ட ரசித்து உண்டுவிட்டு ஏப்பம் விட்டுக்கொண்டே, **"ஆயிரம் பேருக்கு உணவளித்த பலன் இப்போது கிடைத்துவிட்டது"** என்று கூறி ஆசீர்வதித்தார்.

8. அப்பா சாஹெப் சபனீஸ் என்கிறவர் புனேவைச் சேர்ந்தவர். அவரும் அவருடைய மனைவியும் துர்தேவதைகளின் தொந்தரவினால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தனர். அவர்கள் இருவரும் கானகாபூருக்குச் சென்று ஸ்ரீ குருவுக்கு சேவைகள் செய்தால் இந்த தொந்தரவிலிருந்து தப்பிக்கலாம் என்று எண்ணிக்கொண்டு அங்கு செல்வதற்காக புனேவிலிருந்து தங்கள் பயணத்தைத் துவங்கினர். வழியில் அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்துவிட்டு, தங்கள் பயணத்தைத் தொடர அனுமதி கேட்டனர். உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் தாமே அவர்களுடைய பிரச்னையை சரிசெய்வதாகக் கூறி, **"நீங்கள் கானகாபூர் செல்ல வேண்டாம்"** என்று கூறிவிட்டு உடனடியாக அவர்களுடைய பிரச்சனையை சரி செய்து அருள் புரிந்தார்.

9. கர்நாடக மாநிலத்திலுள்ள ஹவேரியில் பாளப்பா என்கிற அடியவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தர். அவர் அக்கல்கோட்டுக்கு வருவதற்கு முன் கானகாபூர் சென்று ஸ்ரீகுருவுக்கு சேவைகள் செய்வார். அப்படி ஒரு சமயம் கானகாபூர் சென்றிருந்த போது, **"அக்கல்கோட் சென்று ஸ்ரீகுருவின் தரிசனம் பெற்றுக்கொள்"** என்றொரு ஆக்ஞை அவருக்கு தோன்றியது. உடனே அவர் அக்கல்கோட் கிளம்பிச் சென்று தன் மீதமுள்ள வாழ்நாள் முழுவதையும் அங்கேயே கழித்தார்.

*10.* வயிற்று வலியால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த பிராமணன் ஒருவர் நரசோபவாடி சென்று ஸ்ரீகுருவை பிரார்த்தனை செய்து கொண்டு குரு சரித்திரத்திரத்தை பாராயணம் செய்து கொண்டிருந்தார். அவருக்கு ஒரு நாள், **"நான் அக்கல்கோட்டில் மீண்டும் அவதரித்துள்ளேன். அங்கு சென்றால் உன் வயிற்று வலி குணமாகும்"** என்று ஸ்ரீகுரு அவருக்குள் கூறுவது கேட்டது. அவருடைய உடல்நிலை மிகவும் மோசமாக இருந்ததால் அவர் குதிரையில் சவாரி செய்து தன் அக்கல்கோட் பயணத்தைத் துவங்கினார். அவர் சென்று கொண்டிருந்த போது தனக்கு வயிற்று வலி குணமடைந்தால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பேடாக்கள் வாங்கி சமர்ப்பணம் செய்ய வேண்டும் என்று எண்ணிக் கொண்டார். அவர் அக்கல்கோட் சென்றடைந்தவுடன் சோளப்பா வீட்டின் வழியாக குதிரையில் சென்று கொண்டிருந்தார். சோளப்பா வீட்டு வாயிலை கடந்த போது அந்த பிராமணன் சவாரி செய்த குதிரை அந்த இடத்தை விட்டு நகராமல் தகராறு செய்தது. எவ்வளவு முயற்சி செய்தும் அது நகர மறுத்தது. அச்சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் சோளப்பா வீட்டில் ஒரு கட்டிலில் படுத்தவாறு நடப்பவைகளை கவனித்துக் கொண்டிருந்தார். அவர் அந்த பிராமணரிடம், **"மாதர் சோத்! என்னுடைய பேடாக்களை மறந்துவிட்டாயா?"** என்று கேட்டார். உடனே அந்த பிராமணர் சென்று பேடாக்களை வாங்கி வந்தவுடன் அந்த குதிரை நகரத் தொடங்கியது. பின்னர் அந்த பிராமணர் தன் வயிற்று வலி குணமடைய ஸ்ரீ ஸ்வாமிகளிடம் பிரார்த்தனை செய்து கொண்டார். அவ்வாறு பிரார்த்தனை செய்து கொண்டிருந்த போதே தரையில் படுத்து உருண்டார். கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமி அந்த பிராமணரிடம், **"வா! இங்கே. எவ்வளவு நாட்களாக நீ வயிற்று வலியில் தவித்துக் கொண்டிருக்கிறாய்?"** என்று கேட்டதற்கு, **"என்னுடைய பதிமூன்றாவது வயதிலிருந்து... ஸ்வாமி, தயவுகூர்ந்து என் மீது கருணை காட்டுங்கள்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். உடனே ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அவரை தன்னருகில் வருமாறு அழைத்து அவருடைய வயிற்றில் ஒரு திருவுருவச் சிலையினால் தொட்டார். என்ன அற்புதம்! அந்த பிராமணரின் வயிற்று வலி முற்றிலுமாக குணமடைந்தது. அவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் பிராமணர்கள் அனைவருக்கும் போஜனம் அளித்துவிட்டு, சில நாட்கள் அக்கல்கோட்டில் தங்கியிருந்துவிட்டு தன் வீடு திரும்பினார்.

*11.* தொழு நோயாளி ஒருவன் தன்னுடைய நோய் குணமாக வேண்டி பிரார்த்தனைகள் செய்து கொண்டு கானகாபூரிலேயே தங்கியிருந்தான். அவனுக்கு

அக்கல்கோட் செல்லவேண்டும் என்கிற உள்ளுணர்வு தோன்றியது. அவன் அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு பல நாட்களுக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தான். அவனால் வலியைத் தாங்கிக் கொள்ள முடியாமல் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று, **"ஸ்வாமி, என்னால் இந்த வலியை தாங்கிக் கொள்ள முடியவில்லை. சாவு இந்த வலியை குணமாக்குமென்றால் அதை நடைபெறச் செய்யுங்கள்"**, என்று கெஞ்சினான். கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள், **"மலத்தை எடுத்து உன் உடம்பு முழுவதும் பூசிக் கொள்"** என்று கூறினார். என்ன வினோதமான பரிகாரம்! எதைப்பற்றியும் யோசிக்காமல் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அவர் கூறியபடியே செய்வதாகக் கூறிவிட்டு அவர் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தான். உடனே அவனுக்கு மற்றவர்களுடைய மலத்தை பூசிக்கொள்வதற்கு பதில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடையதையே பூசிக் கொள்ளலாமே என்கிற எண்ணம் தோன்றியது. அவருடைய மலத்தை எந்தவித தயக்கமும் இன்றி உடல் முழுவதும் பூசிக் கொண்டான். சில மணி நேரங்களுக்குப் பின்னர் அவனுடைய உடலை கழுவியவுடன் அவனுடைய புண்கள் மீதெல்லாம் தோல் மூடியிருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆணையை மறுவார்த்தை பேசாமல் நிறைவேற்றியவுடன் அவனுடைய உடல் தெய்வீகம் நிறைந்த பொன் மேனியானது. சில நாட்களுக்குப் பின்னர் அவன் தன்னுடைய வீட்டுக்குச் சென்று, தன் வாழ்நாள் முழுவதும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் புரிந்து கொண்டிருந்தான்.

*12.* வாயி என்கிற க்ஷேத்திரத்தைச் சேர்ந்த ஒரு பிராமணர் கானகாபூரில் சேவைகள் செய்து கொண்டிருந்தபோது அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழைக் கேள்விப்பட்டு அங்கு வந்தடைந்தார். ஒரு நாள் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகில் அமர்ந்து கொண்டு தன்னை ஒருவர் ஏமாற்றியதை பற்றிக் கூறினார். **"சில நாட்களுக்கு முன்பு ஒரு வாயி பிராமணர் தன் அனுஷ்டானங்களை நிறைவு செய்தவுடன் ஸ்ரீ தத்தரின் பெயரில் அன்னதானம் செய்வதாக பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். அவரிடம் பணமில்லாத காரணத்தால் என்னிடம் 25/- ரூபாய் கடனாகக் கேட்டார். தனக்கு ஓரிரு நாட்களில் பணம் வர வேண்டியிருப்பதாகவும், அப்போது தந்து விடுவதாகவும் கூறினார். நானும் என்னிடமிருந்த மொத்த பணத்தையும் அவரிடம் அளித்துவிட்டேன். அவர் அதை எடுத்துக் கொண்டு தலைமறைவாகிவிட்டார். ஸ்வாமி அந்த பணத்தை நான் உங்களுக்குத்தான் அளித்தேன். அவை உங்களுக்காக செலவு செய்யப்பட்டிருக்குமா?"** என்று கூறி முடித்தவுடன் அங்கு கூடியிருந்த கூட்டத்தில் யாரோ ஒருவரை ஸ்ரீ ஸ்வாமிகள் சுட்டிக் காட்டினார். என்ன ஆச்சரியம்! அது அந்த மோசக்காரப் பிராமணன்! அவரை கையும்களவுமாக பிடித்து விசாரித்தபோது தன் குற்றத்தை ஒத்துக்கொண்டார்.

ஆனால் அவரிடம் பணம் ஏதுமில்லாததால் அவரிடமிருந்த வேலைப்பாடுகள் செய்பட்ட தொப்பி, ஒரு புனிதநூல், ஸ்ரீ குரு சரித்திரம் மற்றும் நாசிக்கில் இருந்து கொண்டுவந்திருந்த புனித நீர் ஆகியவற்றை பெற்றுக் கொண்டு கணக்கை முடித்தனர். பின்னர் அந்த பிராமணர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து, **"எனக்கு உங்களுடைய ஆசீர்வாதம் சிறிதளவு இருந்தது. அவற்றை மீண்டும் பெற என்ன வழி என்று கூறவேண்டும்"** என்று கேட்டுக் கொண்டான். **"எனக்கு அதெல்லாம் ஒன்றும் தெரியாது. நீ வந்த வழியே போய்விடு"** என்று கூறியவுடன் அவன் சென்று விட்டான்.

அதேபோல் தெம்பே ஸ்வாமிகள் என்று அழைக்கப்படும் ஸ்ரீ வாசுதேவானந்த சரஸ்வதி ஸ்வாமிகளும் தன் பக்தர்கள் பலருக்கும் அக்கல்கோட்டில் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி மீண்டும் அவதரித்திருப்பதாகக் கூறி அவர்களை அங்கு தரிசனம் செய்து கொள்ளுமாறு அனுப்பி வைத்தார்.

இவ்வாறு பல அற்புதமான லீலைகள் மூலம் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியின் பக்தர்கள் பலரை அக்கல்கோட்டிற்கு இழுத்து வந்து தான் ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம் என்பதை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நிரூபித்தார். அதேபோல், கானகாபூர் மற்றும் நரசோபவாடி ஆகிய இடங்களில் செய்து கொண்ட பிரார்த்தனைகளை அக்கல்கோட்டில் நினைவூட்டி நிறைவேற்றச் செய்தார். ரூபங்கள் வேறாக இருப்பினும் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் வெவ்வேறல்ல என்பதை இந்நிகழ்ச்சிகள் நமக்கு எடுத்துரைக்கின்றன.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 48

# போருக்கு தயார் படுத்துதல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட் வந்தடைந்த பின்னர் சோளப்பா மகராஜின் வீட்டில் தங்குவதையே வழக்கமாக கொண்டிருந்தாலும் சில சமயங்களில் மற்றவர்களின் வீடுகளிலும் சில நாட்கள் தங்குவதுண்டு. அப்படி ஒரு சமயம் அக்கல்கோட்டில் வேலை செய்து கொண்டிருந்த சிந்தோபந்த்

டோலின் வீட்டில் தங்கியிருந்தார். அச்சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் வினோதமான ஒரு விளையாட்டு விளையாடினார்.

அவர் கிராமத்தின் எல்லைக்குச் சென்று அங்கிருக்கும் ஆமணக்கு மரத்தின் கிளையைக் கொண்டு வந்து அதை சிறு சிறு துண்டுகளாக உள்ளங்கை அளவுக்கு வெட்டுவார். அதில் வெறுமையாக உள்ள உட்பகுதிகளில் மண்ணைக் கொண்டு நிரப்புவார். இதே போல ஐந்து அல்லது ஆறு குச்சிகளை தயார் செய்து அவற்றை முக்கோணமாக அடுக்கி வைப்பார். இது போருக்கு தயார் நிலையில் இருக்கும் துப்பாக்கி ஏந்திய போர் வீரனைப் போன்ற தோற்றத்தில் இருக்கும். இவ்வாறு இதே பாணியில் பல வரிசைகள் அடிக்கி வைத்திருப்பார். இவை ஆயுதங்கள் அல்லது பீரங்கியைப் போல தோற்றமளிக்கும். கட்டிய மரத்துண்டுகளை மீண்டும் வரிசையாக அடுக்கி வைப்பார்.

இதே போன்று வினோதமான இந்த விளையாட்டை ஆறு மாதங்களுக்கு விளையாடிக் கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் என்ன செய்கிறார் என்பதை யாராலும் ஊகிக்க முடியவில்லை. யாராவது ஸ்ரீ ஸ்வாமியிடம், **“என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?”** என்று கேட்டால், **“போருக்குத் தயார் செய்து கொண்டிருக்கிறேன்”** என்று கூறுவார். அந்த பதிலை எவராலும் புரிந்து கொள்ள முடியவில்லை.

கி.பி. *1857-1858* இல் இந்தியாவில் வடக்கு பகுதியில் நானா சாஹேப் என்கிற சுதந்திரப் போராட்ட வீரர் ஆங்கிலேயர்களை எதிர்த்து ஒரு போராட்டம் நடத்தினார் (சிப்பாய் கலகம்). இந்த போராட்டம் பல நாட்களுக்கு நீடித்தது. இது இந்தியாவில் பல பாதிப்புகளை ஏற்படுத்தியது. இப்படிப்பட்ட நிகழ்ச்சி நடைபெறப் போகிறது என்பதை குறிப்பால் உணர்த்தவே ஸ்ரீ ஸ்வாமிகள் இந்த லீலையை நிகழ்த்திக் காட்டினார் என்று பக்தர்கள் பின்னாட்களில் புரிந்து கொண்டனர். ஸ்ரீ ஸ்வாமிகளின் சர்வ வல்லமை மற்றும் முற்றும் உணர்ந்த தன்மையை எண்ணி அனைவரும் ஆச்சரியம் அடைந்தனர்.

இதே போல இன்னொரு நிகழ்ச்சியும் நடைபெற்றது. லக்ஷ்மி என்ற பெயருடைய ஒரு பீரங்கி ஒன்று இருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகள் எப்போதும் அந்த பீரங்கிக்குள் (குண்டு வெடிக்கப்படும் இடம்) தன் தலையை செலுத்திக் கொண்டு விட்டு பின்னர் தன் தலையை வெளியே எடுப்பார். அவர் இதே போன்று பல நாட்களுக்குச் செய்து கொண்டிருந்தார். அதையும் எவராலும் புரிந்து கொள்ள முடியவில்லை.





பின்னர், முன்பு நடைபெற்ற போராட்டத்தில் கலந்து கொண்டவர்களைப் பற்றி ஆங்கிலேயர்கள் விசாரணை செய்தனர். அதில் பங்கு பெற்றவர்கள் தங்கள் தலையை பீரங்கிக்குள் வைக்க வேண்டும், அவர்களை சுட்டுக் கொன்று விடுவார்கள். இதைத்தான் ஸ்ரீ ஸ்வாமிகள் முன்பே செய்து காட்டினார் என்பதை அனைவரும் புரிந்து கொண்டு ஆச்சரியம் அடைந்தனர். இந்த லீலைகள் நடைபெற்ற பின்னர் எவரும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அவருடைய நடவடிக்கைகள் பற்றி விசாரிப்பதை நிறுத்திவிட்டனர்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 49

# விஷ்ணுபுவா பிரம்மச்சாரியின் அகந்தையை அழித்தல்

பம்பாயைச் சேர்ந்த விஷ்ணுபுவா பிரம்மச்சாரி ஹரிகதை சொல்வதிலும் ப்ரவசனங்கள் செய்வதிலும் வல்லவர் , மஹாஞானி. அவர் உருவ வழிபாட்டில் நம்பிக்கை இல்லாதவர். அக்கல்கோட் மஹாராஜாவான மாலோஜிராவ் மன்னருக்கு வேதாந்தங்கள் பற்றி விவாதங்கள் செய்வதென்றால் மிகவும் பிடிக்கும். அவர் ராம்பாவ் சிஞ்சினிக்கர், கோபால சாஸ்த்ரி ஹர்திகர் போன்றோரை நல்ல சம்பளம் கொடுத்து பணியில் அமர்த்தி அவர்களை தியானேஸ்வரி, அம்ருதானுபவம் போன்ற நூல்களை வாசிக்கச் செய்வார். எப்போதும் வேதாந்த விவாதங்களும் நடைபெறும். விஷ்ணுபுவா பிரம்மச்சாரியின் புகழைக் கேள்விப்பட்டு அவரை தன் அரசவைக்கு வரவழைத்து வேதாந்தங்கள் பற்றி விவாதிக்க வேண்டும் என்று மன்னர் விருப்பப்பட்டார்.

பெரும் முயற்சிக்குப் பின்னர் விஷ்ணுபுவா மூன்று பார்சிகளை தன்னுடன் அழைத்துக் கொண்டு அக்கல்கோட் மாளிகை வந்தடைந்து பல சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் முன்னிலையில் நீண்ட நேரம் சொற்பொழிவாற்றினார். இறுதியில் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"எப்படி பிரம்மத்துடன் ஐக்கியம் ஆவது சாத்தியம்?"** என்று கேள்வி எழுப்பினார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவருக்கு

எதுவும் பதிலளிக்கவில்லை. ஸ்ரீ ஸ்வாமிகள் ஏதும் அறியாதவர் என்றும் சில மாயாஜாலங்களால் புகழடைந்துவிட்டார் என்றும் புவா எண்ணிக்கொண்டார். தானே ஸ்ரீ ஸ்வாமிகளை விட மெத்த படித்தவன் என்கிற அகந்தையுடன் அந்த பார்சி நண்பர்களுடன் தன் வீடு வந்து சேர்ந்தார். அன்றிரவு உறங்கிக் கொண்டிருந்த போது ஆயிரம் தேள்கள் அவரை கொட்டுவது போன்ற கனவு கண்டார். உறக்கத்தில் **"இறந்துவிட்டேன்! இறந்துவிட்டேன்!"** என்று கூச்சலிட்டார். அப்போது அவருக்கருகில் உறங்கிக்கொண்டிருந்த பார்சி நண்பர்கள் அவரை எழுப்பி என்ன நடந்தது என்று விசாரித்தனர். தன் சுயநினைவுக்கு வந்த புவா தான் மகராஜை தவறாக எண்ணியதன் பலனாகத்தான் இவ்வாறு நடைபெற்றது என்பதை உணர்ந்து கொண்டார்.

அடுத்த நாள் காலையில் தன் பார்சி நண்பர்களுடன் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் வேதாந்த சொற்பொழிவு நிகழ்த்துவதற்காகச் சென்றார். அப்போதும், **"எப்படி பிரம்மத்துடன் ஐக்கியம் ஆவது சாத்தியம்? அது எந்த வழி அல்லது முயற்சியால் சாத்தியமாகும்?"** என்று கேள்வி எழுப்பினார். உடனே மகராஜ், **"ஏ முட்டாளே! நீ வேதாந்தத்தை பற்றி பேசுகிறாய் ஆனால் ஒரு தேள் உன் கனவில் கொட்டியதற்கே பயத்தில் அழுது கொண்டே கதறுகிறாய்! நீ வெறும் வார்த்தைக்குத்தான் ஞானி. பிரம்மத்துடன் ஐக்கியம் ஆவதென்ன அவ்வளவு சுலபமா? வேதாந்தத்தை பேசிப் பேசி நீ என்ன யோகி ஆகிவிட்டாயா? படித்த முட்டாளே! நீ ஆன்மிகப் பேச்சாளன் ஆகிவிட்டாய். கிளம்பு நீ வந்த வழியே செல்!"** என்று கூறினார். புவாவுக்கு மிகுந்த அவமானம் ஏற்பட்டுவிட்டது. அவர் தன் வீடு வந்து சேர்ந்ததும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஒரு மகாபுருஷர் என்பதை உணர்ந்து கொண்டார். பின்னர் அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை **"அவதாரி"** என்கிற பெயருடன் அழைத்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# பாபா சபனீசுக்கு மாணிக் பிரபுவுடன் சேர்ந்து தரிசனம் அளித்தல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட் வந்தடைவதற்கு முன்னால் ஹம்னாபாத் என்னும் இடத்திற்குச் சென்றார். அங்குதான் ஸ்ரீ மாணிக் பிரபு மஹராஜ் வாழ்ந்து வந்தார். ஸ்ரீ மாணிக் பிரபுவும் ஸ்ரீ தத்தாத்திரேய அவதாரிதான். அக்கல்கோட்டைச் சேர்ந்த ராஜமான்ய ராஜஸ்ரீ பாபா சபனீஸ் ஸ்ரீ மாணிக் பிரபுவின் பக்தர். பாபா சபனீஸ் தன் மனைவி இறந்த சோகத்தில் இருந்தமையால், அவர் எப்போதும் ஸ்ரீ பிரபுவின் தரிசனத்துக்குச் செல்வார். அவர் ஸ்ரீ பிரபுவை தரிசனம் செய்ய சென்றபோது ஸ்ரீ ஸ்வாமிகளுடன் இரண்டு மகான்கள் இருந்தனர்.

அன்று ஸ்ரீ மாணிக் பிரபு அவரை சைகை செய்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை வணங்குமாறு கூறியதை பாபா சபனீஸால் புரிந்து கொள்ள முடியவில்லை. உடனே பிரபு, **"இன்றுமுதல் ஸ்வாமி மஹாராஜ்தான் உன் குரு. அவருடைய தரிசனத்தை பெற்றுக் கொள்"** என்று தெளிவாகக் கூறினார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரையும் அவருடன் இருந்த இருவரையும் பாபா வணங்கினார். ஸ்வாமி மஹராஜ் அவருடைய மன ஓட்டங்கள் பலவற்றை கூறி அவரை மிகவும் கெட்ட வார்த்தையால் கடிந்து கொண்டார். **"நீ ஒரு கொலைகாரன்! அக்கல்கோட்டுக்கு செல். நானும் அங்கு வருவேன்"** என்றார். ஸ்ரீ ஸ்வாமிகள் தன் ஊரின் பெயரைக் கூறியதைக் கேட்டவுடன், அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. பாபா சபனீஸுடைய தாய் மிகவும் கவலைக்கிடமான நிலையில் சாகும் தருவாயில் இருந்தாள். அவரை இந்த நேரத்தில் தன்னை விட்டு செல்ல வேண்டாம் என்று அவள் கெஞ்சிய போதும், அவர் அதை பொருட்படுத்தாமல் இங்கு வந்திருந்தார். இதைக் கண்டித்துதான் ஸ்ரீ ஸ்வாமிகள் இவ்வாறு கடுமையாகப் பேசினார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஒரு அவதாரம் என்பதை பாபா சபனீஸ் முழுமையாக உணர்ந்து கொண்டார். பாபா அக்கல்கோட் வந்த சில நாட்களில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் அங்கு வந்தடைந்தார். ஆனால் அவருடன் இருந்த இரண்டு தெய்வீக புருஷர்கள் அப்போது அவருடன் இல்லை. ஸ்ரீ தத்தாத்ரேயர் பிரம்மா,விஷ்ணு மற்றும் சிவனின் ஐக்கிய அவதாரம் என்பதை நாம் நன்கறிவோம். ஆகவே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் அக்கல்கோட்டில் ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம் என்றே புகழடைந்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 51

# அரண்மையில் ஸ்ரீ ஸ்வாமி..

## 1. எலி

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் இஷ்டம்போல் சுற்றித் திரிவார். தான் இஷ்டப்படும் வீட்டுக்குள் சென்று உணவருந்துவார். அப்படி ஒருநாள் சுற்றிக்கொண்டே அரண்மனைக்குள் நுழைந்தார். மகாராஜா ஸ்ரீ ஸ்வாமிகளை அன்போடு அழைத்து உபசரித்தார். அவர்கள் இருவரும் அரண்மனையின் பூஜை அறைக்கு முன்னால் உள்ள ஊஞ்சலில் அமர்ந்து கொண்டு பேசிக் கொண்டிருந்தனர். அப்போது எலி ஒன்று பூஜை அறைக்குள் நுழைந்தது. அங்கு அப்பா சலாபா பூஜைக்கு தேவையான சந்தனத்தை அரைத்துக் கொண்டிருந்தார். எலி தினமும் பூஜை அறைக்குள் நுழைந்து விளக்கு திரியை தின்றுவிடும். இது அப்பா சலாபாவுக்கு மிகுந்த கோபத்தை ஏற்படுத்தும். எலியைக் கண்டவுடன் சந்தனக் கட்டையால் அடித்தார், அது உடனே இறந்து விட்டது. அதை வெளியே போடுவதற்காக அதன் வாலைப் பிடித்து தூக்கிக் கொண்டு சென்றார். ஸ்ரீ ஸ்வாமிகள் அந்த எலியை தன்னிடம் கொடுக்குமாறு கூறினார். மஹராஜ் அதை வாங்கி ஊஞ்சலில் கம்பிக்கு உள்ளும் வெளியேயும் போட்டெடுத்தார். உடனே அதற்கு உயிர் வந்தது. அதை தன் கையில் எடுத்துக் கொண்டு, **"போ!"** என்று கூறியவுடன் அவர் கையிலிருந்து துள்ளி குதித்து தன் வலைக்குள் சென்றது. இதைப் பார்த்துக் கொண்டிருந்த மன்னர், அனைத்து ஜீவராசிகள் மீதும் கருணை செலுத்தும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய சக்தியை எண்ணி மிகவும் ஆச்சரியம் அடைந்தார்.

## 2. தங்கப் பெட்டி

ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அரசவையில் நடந்து சென்று கொண்டிருந்த போது ஒரு அரச வேலையாளின் கையில் தங்கத்திலான கிராம்பு,ஏலக்காய் போன்ற மசாலாக்கள் வைக்கும் பெட்டி இருப்பதைக் கண்டார். மஹராஜ் அதைப் பிடுங்கினார். அருகே தரையில் ஒரு பெரிய கிணறு இருந்தது. மன்னரைப் பார்த்து, **"நான் இதை அந்த கிணற்றுக்குள் போட்டுவிடலாமா?"** என்று கேட்டார். மன்னர் தன் கைகளை கட்டிக்கொண்டு பவ்வியமாக நின்று கொண்டு, **"இந்த தங்கப் பெட்டி உங்களுடையது. நீங்கள்**




**என்ன வேண்டுமானாலும் செய்யலாம்"** என்று கூறினார். ஸ்ரீ ஸ்வாமிகள் அதை கிணற்றுக்குள் வீசி எறிந்தார். அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் மிகவும் வருத்தமடைந்தனர். ஆனால் இதைப் பற்றி மன்னர் துளியும் கவலைப் படவில்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஒவ்வொரு செயலுக்கும் ஏதாவது காரணம் இருக்கும் என்பதை மன்னர் நன்கு அறிந்திருந்தார்.

அன்றிரவு ஸ்ரீ ஸ்வாமிகள் அரண்மனையிலேயே தங்கியிருந்தார். அடுத்த நாள் காலையில் ராஜசபையில் விளையாடிக் கொண்டிருந்தார். அப்போது அங்கு வந்த மன்னரிடம், தனக்கு ஒரு வாளியும் கயிறும் வேண்டும் என்று கேட்டார். அவை கிணற்றுக்குள் இடப்பட்டது. வாளியை வெளியே எடுத்த போது அதில் தங்கப் பெட்டியும் சேர்ந்து வந்தது. அதைத் திறந்து பார்த்தபோது அதிலிருந்த ஏலக்காய்,கிராம்பு போன்ற மசாலாப் பொருட்கள் காய்ந்த நிலையிலேயே இருந்தன. அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் ஆச்சரியத்தில் மூழ்கி நின்றனர். இந்த நிகழ்ச்சியை ஏன் ஸ்ரீ ஸ்வாமிகள் நிகழ்த்தினார். அங்கிருந்தவர்கள் யவருக்கேனும் ஸ்ரீ ஸ்வாமிகளின் மீது சந்தேகம் இருந்திருக்குமோ?! அவருடைய செயல்களுக்கு நம்மால் அர்த்தம் கண்டுபிடிக்க முடியுமா என்ன?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**



## அத்தியாயம் 52

# அக்கல்கோட்டும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட்டில் சுமார் 22 முதல் 23 ஆண்டுகள் தங்கியிருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் அங்கு தங்கியிருந்த போது அக்கல்கோட் சொர்க்கபுரியாக மாறியது. அங்கு வாழ்ந்த மக்கள் மிகவும் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தனர். அக்கல்கோட் பெரிய நகரமாக இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அங்கு வந்த பின்னர்தான் அதன் புகழ் திக்கெட்டும் பரவியது. அங்கு வாணிபமும் பல மடங்கு பெருகியது. சாலைகள் முழுவதும் எப்போதும் ஓய்வில்லாமல் குதிரைகள் ஓடிக் கொண்டே இருந்தன. அருகில் இருக்கும் ரயில் நிலையங்களில் அக்கல்கோட் சவாரிகளுக்கு குறைவே இருக்காது.

அக்கல்கோட் மண்ணும், மாலோஜிராவ் ராஜேவும் மிகவும் பாக்கியம் செய்தவர்கள். மன்னருக்கு ஏற்பட்ட பல இக்கட்டான சூழ்நிலைகளில் இருந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவரை காப்பாற்றி இருக்கிறார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழ் காசி முதல் ராமேஸ்வரம் வரை பரவியிருந்தது. அவருடைய தரிசனத்தைப் பெற பல லட்சம் பக்தர்கள் அக்கல்கோட்டில் குவிந்தனர். இருப்பினும் அவரவர்களின் தகுதியைப் பொருத்துதான் ஆசீர்வதிக்கப்பட்டனர். ஆனால் அனைவரிடமும் ஸ்ரீ ஸ்வாமி ஏதாவது அற்புதங்களை நிகழ்த்திக் கொண்டுதான் இருந்தார். அவை அனைத்தும் குறித்து வைக்கப்பட்டிருந்தால் அவற்றை ஒரு புத்தகத்தினுள் அடக்க முடியாது என்பது திண்ணம். ஸ்ரீ ஸ்வாமிகள் தன் கையில் வைத்து விளையாடுவதற்காக பித்தளையால் செய்த வளையல்கள் வைத்திருப்பார். அதில் கடவுளின் திருவுருவப்படம் பொறிக்கப்பட்டிருக்கும். அவற்றை தன்னை தரிசிக்க வரும் பக்தர்களுக்கு கொடுப்பார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களுடைய இஷ்ட தெய்வத்தையே கொடுத்து அவர்கள் அனைவரையும் ஆச்சரியப்படுத்துவார்.

ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகில் மரம் அல்லது தந்தத்திலான பாத்திரங்கள் வைக்கப்பட்டு அதில் தானியங்களை நிரப்பியிருப்பர். அதை தன் கை

முழுவதும் எடுத்து அதிலேயே மீண்டும் போட்டு விளையாடிக் கொண்டிருப்பார். அதை வைத்துக் கொண்டு குழந்தை போல மற்ற விளையாட்டுகளை விளையாடுவார். ஒரு இடத்தில் பல மணி நேரங்களுக்கு உட்காரவே மாட்டார். ஒரு நாளில் நான்கு அல்லது ஐந்து இடங்களில் மாறி மாறி அமர்ந்து கொள்வார்.

ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக நான்கு வகையான பக்தர்கள் வருவார்கள். கஷ்டத்தில் இருப்பவர்கள், விஷயங்களை தெரிந்து கொள்ள ஆர்வமுள்ளவர்கள், தங்கள் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காக வருபவர்கள் மற்றும் ஞானிகள். பெரும்பாலானவர்கள் தங்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட துக்கங்களினால் கஷ்டத்தில் இருப்பவர்கள், தங்கள் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள வருபவர்கள் பேராசை பிடித்தவர்களாக இருப்பார்கள். மற்ற இரு வகையினரும் குறைவாகத்தான் வருவார்கள். அனைவரின் தேவைகளை உணர்ந்து ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களுக்கு அருள் புரிவார்.

ஸ்ரீ ஸ்வாமிகளின் உருவம் மிகவும் தேஜஸுடன் இருக்குமாதலால் அனைவரும் அவருக்கருகில் அமர்ந்து கொண்டு அவரையே பார்த்துக் கொண்டே இருக்க விரும்புவர். அவரை விட்டு அகல எவருக்கும் விருப்பம் இருக்காது. மஹராஜ் சந்தோஷமான மனநிலையில் இருந்தால் அனைவரையும் அவருக்கருகில் நின்று பிரார்த்தனை செய்து கொள்ள அனுமதிப்பார். அதே அவர் கோபமாக இருந்தால் அவர்களுடைய பிரார்த்தனைத் தட்டைப் பிடுங்கி தலைகீழாக கொட்டிவிடுவார். அவருடைய பக்தர்களுக்கு அவருடைய மனோநிலை நன்றாகப் புரியும், அதனால் அதற்கேற்றாற்போல் நடந்து கொள்வர். வழிபாடுகள் செய்யும் போது சில சமயம் ஒரு விரலை மட்டும் காட்டுவார். அப்படியென்றால் ஒரே ஒரு சரணம் மட்டும் பாடினால் போதும் என்று பொருள், சில சமயம் இரண்டு, நல்ல சந்தோஷமான மனோநிலையில் இருந்தால் முழுப் பாடலையும் பாட அனுமதிப்பார். மகராஜ் சந்தோஷமாக இருக்கும்போது தன் பக்தர்களிடம் அன்பாக நடந்து கொள்வார். அவர்கள் விருப்பியபடி சேவைகள் செய்ய அனுமதிப்பார். அதே அவர் கோபமாக இருந்தால் அவருக்கருகில் மன்னர் கூட வருவதற்கு அஞ்சுவார். ஆனால் அது ஒரு போலிக் கோபம் என்பதை அனைவரும் அறிவர்.

ஒவ்வொரு வியாழக்கிழமையும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சிறப்பாக அபிஷேகம் செய்வர். அவரை ஒரு மரப்பலகையில் அமர வைத்து அவர் உடல் முழுவதிலும் வாசனை திரவியங்களை பூசி மிதமான வெந்நீரில்

அபிஷேகம் செய்வர். பின்னர் அவருக்கு மாலைகள் அணிவித்து ஆரத்தி செய்வார்கள். அவருடைய நெற்றியில் குங்குமப்பூ மற்றும் அத்தரினால் திலகமிட்டு ருத்ராக்ஷம் மற்றும் ஸ்படிக மாலைகள் அணிவிப்பர். பின்னர் அவருடைய சிம்மாசனத்தில் அமரச்செய்வர். ஸ்ரீ ஸ்வாமிகள் எப்போதும் கடவுளின் நாமத்தை நாமஜபம் செய்து கொண்டே இருப்பார். அவரை தரிசனம் செய்ய வரும் பக்தர்களுக்கு பிரசாதமாக பேரிச்சம்பழம், கற்கண்டு மற்றும் இனிப்புகளை வழங்குவார். குழந்தைகளுக்கு கண்டிப்பாக இனிப்புகள் வழங்குவார். ஏழைகளுக்கு வயிறார உணவளிப்பார். தீபாவளி மற்றும் பண்டிகை நாட்களில் அனைவருக்கும் உணவும் பரிசுகளும் அளிப்பார். ஈத், மொஹரம் போன்ற பண்டிகை நாட்களில் பக்கீர் மற்றும் அவுலியாக்களுக்கு பரிசுகள் அளிப்பார். பார்ஸிகளும் கிறித்தவர்களும் கூட அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு யாராவது உடை அணிவித்து உணவு ஊட்டி விட வேண்டும். அவர் அவதூதர் என்பதால் தன் உணவு மற்றும் உடை பற்றி ஒருநாளும் கவலைப்பட்டதே இல்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஜாதி-மத வித்தியாசங்கள் பார்த்ததில்லை. தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்தவர்களின் மீது மிகுந்த பற்று மற்றும் அக்கறை கொண்டிருந்தார்.

ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு பல மொழிகள் தெரியும். அவர் ஹிந்தி, மராத்தி மற்றும் சமஸ்கிருதத்தில் வல்லவராக இருந்தார். அவரால் அனைவருடைய மனதையும் எளிதில் படிக்க முடியும். எதிரில் இருப்பவருடைய ஆழ்மன எண்ணங்களைக் கூட அறிந்து கொண்டு அதை வார்த்தைகளாலும் சைகைகளாலும் கூறிவிடுவார். அவர் பேசும் வார்த்தைகள் அனைத்தும் எவருக்கும் புரியாத வண்ணம் இருக்கும். அவருடைய அத்யந்த சீடர்களால் அல்லது பக்தர்களால் மட்டுமே அதைப் புரிந்து கொண்டு மற்றவர்களுக்குக் கூற முடியும். இருப்பினும் அவருடைய கடைக்கண் பார்வையே ஒரு பக்தனுடைய அனைத்து தேவைகளையும் பூர்த்தி செய்து விடும் என்பதில் எந்தவித ஐயமுமில்லை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 53

# ஸ்ரீ ஸ்வாமிகளின் கோபம்

### ஒரு நாத்திகரின் கதை

ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒரு ஆலமரத்தினடியில் அமர்ந்திருந்தார். அவருடைய மனோநிலை கொஞ்சம் வித்தியாசமாக இருந்தது. அதனால் அவர் யாருக்கும் தரிசனம் அளிக்கவில்லை. அப்போது அவருக்கருகில் ஒரு நாத்திகவாதி அமர்ந்து கொண்டிருந்தார். அவர் இன்னொருவரிடம், **"இவர் ஒரு துறவி என்கிறாய், அவருக்கு கோபம் வரலாமா?"** என்று கேட்டார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவரிடம் எதுவுமே பேசவில்லை. பதினைந்து நாட்களுக்குப் பிறகு அதே ஆலமரத்தினடியில் ஒருநாள் ஸ்ரீ மாதே புவாவின் கீர்த்தனை நிகழ்ச்சி நடைபெற்றது. அதைப் பார்க்க ஐநூறுக்கும் மேற்பட்டவர்கள் அங்கு குவிந்தனர். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் அந்த நாத்திகரிடம், **"எனக்கு மட்டும் நிஜமாகவே கோபம் வந்தால் இங்குள்ள அனைவரையும் சமைத்து சாப்பிட்டு விடுவேன்"** என்று கூறினார். இந்த வரியை பலமுறைகள் கூறிக்கொண்டே இருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் ஒரு வரியை கூறினால் அதை மீண்டும் மீண்டும் கூறிக்கொண்டே இருப்பார். அவர் உண்மையில் தன் பக்தர்கள் மீது மிகவும் அன்பு கொண்டவர், தன் பக்தர்களை பாதுகாப்பதில் மிகுந்த நாட்டம் உடையவர். சில சமயங்களில் அவர் மிகுந்த கோபம் கொண்டவர் போலத் தோன்றினாலும் அது உண்மையான கோபம் கிடையாது. அவருக்கு ஏழை-பணக்காரர் என்கிற வித்தியாசம் கிடையாது. சொல்லப்போனால் அவர் ஏழைகள் மீதுதான் அதிகமான வாஞ்சை கொண்டிருந்தார்.

### அக்கல்கோட் மன்னர்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட்டின் மன்னரான மாலோஜிராவ் ராஜேவுக்கு பல அற்புதங்களை நிகழ்த்திக் காட்டி அவரை தன் அடியவராக ஆக்கிக் கொண்டார். ராஜாவுக்கு ஸ்வாமி மேல் இருந்த பக்தி நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே இருந்தது. அவர் தவறாமல் ஒவ்வொரு வியாழக் கிழமையும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக வந்துவிடுவார். நாட்டுக்கே மன்னராக இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமி அவரிடமும் தன் கோபத்தை வெளிக்காட்டாமல் இருந்ததில்லை.

அவர் தரிசனத்துக்காக வரும்போது ஸ்ரீ ஸ்வாமிகளின் மனோநிலை எப்படி இருக்கிறது என்பதை தெரிந்து கொண்டு, தன் படாடோபங்களை

தவிர்த்து விட்டு, செருப்பு கூட அணியாமல் ஸ்ரீ ஸ்வாமிகளின் அத்யந்த அடியவராக அவரை தரிசனம் செய்வார். இப்படிப்பட்ட சரணாகதியையே ஸ்ரீ ஸ்வாமிகள் விரும்புவார். அவரை தரிசனம் செய்வதற்காக அனைத்து மதத்தைச் சேர்ந்தவர்களும் வருவார்கள். ஆங்கிலேயர்கள் கூட வருவார்கள். அவரவர்களுடைய விருப்பங்களை ஸ்ரீ ஸ்வாமிகளே உணர்ந்து கொண்டு நிறைவேற்றி வைப்பார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு நாய்கள் என்றால் மிகவும் பிடிக்கும். ஆனால் பூனைகளை நாஸ்திகன் என்று கடிந்து கொள்வார். அவருக்கு பசுக்கள் என்றால் மிகவும் பிடிக்கும். ஒரு மரத்திலுள்ள இலையையோ கிளையையோ பறித்தால் அவருக்கு கோபம் அதிகமாக ஏற்படும். அதை விளக்கும் ஒரு நிகழ்ச்சி அடுத்து விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

**கண்பத்ராவ் ஜோஷியின் வீட்டில் நடைபெற்ற நிகழ்ச்சி**

ஒரு முறை கண்பத்ராவ் ஜோஷி என்கிற அடியவரின் வீட்டின் தாழ்வாரத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அமர்ந்திருந்தார். அப்போது கண்பத்துடைய வேலைக்காரன் ஒருவன் தன் முதலாளி கூறியபடி ஒரு எலுமிச்சை மரத்தின் கிளை ஒன்றை வெட்டுவதற்காகச் சென்றான். அதைப்பார்த்தவுடன் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு மிகுந்த கோபம் ஏற்பட்டு, **"யார் நம் பல்லக்கின் தண்டை வெட்டுவது, அவனுடைய கைகளையும் கால்களையும் வெட்ட வேண்டும்"** என்று கோபமாக கூச்சலிட்டார். அதைக் கேட்டவுடன் ஜோஷியின் வேலைக்காரன் மரத்தை விட்டு இறங்கிவிட்டான். இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமிகளுடைய கோபம் தணியாமல் அவர் தொடர்ந்து வசைபாடிக் கொண்டே இருந்தார். ஜோஷி தன் முகத்தை சோகமாக வைத்துக் கொண்டு ஒரு பக்கம் போய் அமர்ந்து கொண்டார். சிறிது நேரத்திற்குப் பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகள் தாழ்வாரத்திலிருந்து எழுந்து சென்று வீட்டின் பின்புறத்திலுள்ள சாணக் குவியல் மீது அமர்ந்து கொண்டார். அவர் அங்கேயே பல மணி நேரங்களுக்கு அமர்ந்து கொண்டிருந்தார்.

ஜோஷி ஸ்ரீ ஸ்வாமிகள் எங்கு சென்றார் என்று தேடி அலைந்து பின்னர் அவர் சாணக் குவியலின் மேல் அமர்ந்திருப்பதைக் கண்டார். அப்போது பூச்சி ஒன்று ஸ்ரீ ஸ்வாமிகளின் காதுக்குள் செல்வதை ஜோஷி கண்டார். ஸ்ரீ ஸ்வாமிகளின் காதிலிருந்து ரத்தம் வடிந்தது. அப்போது ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் மிகவும் விளையாட்டுத்தனமான மனோநிலையில் இருந்தமையால் அவருக்கருகில் எவரையும் அனுமதிக்கவில்லை. ஜோஷி தைரியத்தை





வரவழைத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகில் சென்று, "**ஸ்வாமி, நீங்கள் என்னை அடித்து உதைத்தாலும் நான் பயப்படப் போவதில்லை. உங்களுடைய காதில் உள்ள பூச்சியை எடுக்கும் வரை நான் உங்களை விடப்போவதில்லை**" என்று கூறிக்கொண்டே அவருடைய காதிலிருந்து பூச்சியை வெளியே எடுத்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவரை கோபித்துக் கொள்ளவே இல்லை. ஜோஷி ஸ்ரீ ஸ்வாமிகளுடைய காதை நன்றாக சுத்தம் செய்துவிட்டு பார்த்த போது அங்கே ரத்தக் கசிவு ஏற்பட்டதற்கான சுவடே இல்லை. அப்படியென்றால் ரத்தம் எங்கிருந்து வந்திருக்கும்? இது அனைவருக்கும் மிகவும் ஆச்சரியமாக இருந்தது. பரப்ரம்மாவை ஒரு பூச்சி ஏதாவது செய்துவிட முடியுமோ?

மஹராஜ் அனைத்து விஷயங்களையும் தன் செயல்கள் மூலமே அனைவருக்கும் விளக்கினார். அவருடைய சேவகர்களுக்குள் சண்டை ஏற்பட்டால், ஸ்ரீ ஸ்வாமி அவர்களை அழைத்து அவர்களுடைய கைகளில் எறும்பை பிடித்துக் கொடுப்பார். நீங்கள் எறும்பு போல மாறி சர்க்கரையை உண்ணுங்கள் என்று கூறுவார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய செயல்கள் அனைத்தும் நமக்கு வினோதமாகவும், ஒன்றும் புரிந்து கொள்ளமுடியாமலும் இருந்தாலும் அவை ஆயிரம் அர்த்தங்கள் உடையவை. நாம் அவற்றை புரிந்து கொள்வதற்கான தகுதிகளை வளர்த்துக் கொள்ளும்போது மட்டுமே அவற்றின் உண்மையான விளக்கங்களை புரிந்து கொள்ள முடியும்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 54

# மாலோஜிராவுக்கு என்ன குழந்தை?

மாலோஜிராவ் ராஜே தனக்கு மகன் பிறக்க வேண்டும் என்று தீவிரமாக விரும்பினார். ஸ்ரீ ஸ்வாமிகளின் அருளினால் மகாராணி கர்ப்பம் தரித்தாள். சில மாதங்களுக்குப் பிறகு அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் பிறக்கபோவது ஆணா இல்லை பெண்ணா என்று கேட்டனர். பதிலேதும் கூறாமல் சேவகனை ஒரு வளையலைக் கொண்டுவருமாறு கூறினார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகள்

கூறியது போன்றே நடந்தது. மகாராணி இரண்டாவது முறையாக கர்ப்பம் தரித்தாள். அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அதே கேள்வியைக் கேட்டனர். இம்முறையும் ஸ்ரீ ஸ்வாமிகள் பதிலேதும் கூறாமல் எழுந்து சென்று சமையலறையில் அமர்ந்து கொண்டார். அனைவருக்கும் புரிந்து விட்டது. ராஜாவுக்கு மகள் பிறந்தாள். மூன்றாவது முறை கர்ப்பம் தரித்த போது ஸ்ரீ ஸ்வாமிகள் தன் தொடையைத் தட்டி தன் இரு கைகளையும் ஒன்றாக இணைத்து துப்பாக்கி சுடுவது போல வைத்துக் கொண்டு, **"ம்ம், தாக்கு"** என்று கூறினார். பிறக்கப்போவது மகன்தான் என்று அனைவரும் புரிந்து கொண்டனர். ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியது போலவே அடுத்த ராஜா பிறந்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 55

# பீமா ராவுக்கு அருள் புரிதல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பீமா ராவ் என்கிற சேவகன் ஒருவர் இருந்தார். அவருடைய தலையில் பெரிய கட்டி ஒன்று இருக்கும். அதனால் அவர் பார்ப்பதற்கு மிகவும் விசித்திரமாகத் தோற்றமளிப்பார். அவரும் அவருடைய மகனும் தோட்டத்திற்குச் சென்று கூடை முழுவதும் பூக்கள் பறித்து கொண்டு வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். ஸ்ரீ ஸ்வாமிகளுடைய மற்ற சேவகர்கள் அவரை இரட்டைத் தலையன் என்று கேலி செய்வர்.

ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தோட்டத்தில் மிகவும் சந்தோஷமான மனோநிலையில் அமர்ந்து கொண்டிருந்தார். அப்போது பீமா ராவ் பூக்கள் நிரம்பிய கூடையுடன் வருவதைப் பார்த்த மற்ற சேவகர்கள் அவரை **"இரட்டைத் தலையன்"** என்று கூறி சிரித்தனர். ஸ்ரீ ஸ்வாமிகளும் அவர்களுடன் சேர்ந்து கொண்டு, **"இரட்டை மண்டை உடையவனே!"** என்று கூறி வயிறு குலுங்கக் குலுங்கச் சிரித்தார். பீமா ராவுக்கு மிகுந்த மன வருத்தம் ஏற்பட்டது. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளைப் பார்த்து, **"ஸ்வாமி, மற்றவர்கள் சிரிக்கட்டும். கருணாமூர்த்தியான நீங்களே உங்கள் பக்தனைப் பார்த்து சிரிக்கலாமா? தயவுசெய்து என் தலையில்**

**இருக்கும் இந்த அசிங்கமான கட்டியை நீக்கி அருள் புரியுங்கள். நீங்கள் அப்படிச் செய்தால் இவர்கள் என்னைப் பார்த்து சிரிப்பார்களா?"** என்று கேட்டார். கருணையின் மறுவடிவமான ஸ்ரீ ஸ்வாமிகள் அப்போது அவருக்கு எந்தவித பதிலையும் அளிக்கவில்லை.

அன்றிரவு பீமாராவ் தூங்கிக் கொண்டிருந்த போது அவருடைய கனவில் ஸ்ரீ ஸ்வாமிகள் தோன்றி அவருடைய தலையை அன்போடு தடவிக் கொடுத்தார். பீமாராவ் காலையில் விழித்துக் கொண்டபோது அவருடைய தலையிலிருந்த கட்டி வெடித்திருந்தது. அந்த தோல் பகுதி தொங்கியவாறு இருந்தது. பீமாராவின் ஆச்சரியத்திற்கும் சந்தோஷத்திற்கும் எல்லையே இல்லை. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசிக்க ஓடினார். அங்கு சென்று தனக்குத் தோன்றிய கனவு பற்றி அனைவரிடமும் மகிழ்ச்சியோடு கூறினார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்து விட்டு, தன் தலையிலிருந்து தொங்கிக் கொண்டிருக்கும் தோலை வெட்டி விடலாமா அல்லது வேறென்ன செய்ய வேண்டும்? என்று கேட்டார். அதற்கு ஸ்வாமிகள் விபூதியை குழைத்து அங்கு பூசினால் சரியாகிவிடும் என்று கூறினார். அவர் கூறியபடியே பீமாராவ் செய்தவுடன் அவருடைய தோல் காய்ந்து சரியானது. அவருடைய உடல்நிலை முற்றிலும் குணமைடைந்த பின்னர் அவர் தன் மகனுடன் தன் சொந்த ஊரான மொஹலாய்க்கு அருகில் இருக்கும் சித்தாப்பூர் என்கிற இடத்திற்குச் சென்று ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை வணங்கிக் கொண்டே தன் மீதமுள்ள நாட்களை கழித்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 56

# சோளப்பாவின் மகன் கிருஷ்ணப்பா

அக்கல்கோட்டில் சோளப்பாவை விட புண்ணியம் செய்தவர்கள் எவரும் இல்லை. அக்கல்கோட்டின் புதவார்பேட்டைச் சேர்ந்தவர் சோளப்பா. மண்ணூர்கிராம் என்கிற இடத்தை சேர்ந்தவர்களான ராமச்சந்திர நாயக் - சேஷுபாய் தம்பதிக்கு சோளப்பா மற்றும் ஆபாஜி அப்பா என்ற இரு மகன்கள்.

சோளப்பவுக்கு கிருஷ்ணப்பா மற்றும் அப்பா என்ற இரு மகன்கள் இருந்தனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கிருஷ்ணப்பாவை அன்பாக '**நீல்கண்ட்**' என்று அழைப்பார். சோளப்பாவை 'ஜெயின்' என்று அழைப்பார். ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சோளப்பாவின் குடும்பத்தின் மீது எப்போதும் சிறப்பான கனிவு உண்டு. சோளப்பாவின் மகன்கள் இருவரும் ஸ்ரீ ஸ்வாமிகளின் அத்யந்த பக்தர்களாக இருந்தனர். சோளப்பாவின் மகன் கிருஷ்ணப்பாவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் நிகழ்த்திய சில லீலைகளை இங்கு விரிவாகக் காணலாம்.

**கிருஷ்ணப்பாவுக்கு உயிர்ப்பிச்சை**

சோளப்பாவின் மூத்த மகனான கிருஷ்ணப்பா சிறு வயதில் ஒரு கடுமையான நோயினால் பீடிக்கப்பட்டிருந்தார். அப்படி ஒரு சமயம் நோயின் தாக்கம் அதிகரித்து அவர் மயக்கமடைந்தார். அனைவரும் அவர் இறந்து விட்டதாக அழுது புலம்பினர். அப்போது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அங்கு வந்தார். அவர் அவர்கள் அனைவரிடமும், **"எதற்காக அழுகிறீர்கள்? இவனுக்கு திருமணம் நடைபெற வேண்டியுள்ளது!"** என்று கூறிவிட்டு கடிந்து கொண்டார். அவர் மிகுந்த வாஞ்சையுடன், **"நீல்கண்ட்,நீல்கண்ட்"** என்று அழைத்தவுடன் கிருஷ்ணப்பா மெதுவாகத் தன் கண்களைத் திறந்தார். குடும்ப உறுப்பினர்களின் சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வாஞ்சையான அழைப்பே ஒரு உயிரை மீட்டெடுக்க வல்லது என்பதை இந்த நிகழ்ச்சி தெள்ளத்தெளிவாக நமக்கு உணர்த்துகிறதல்லவா?

**சோளப்பாவின் மகனை பார்வே செய்த கேலி**

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சோளப்பாவின் வீட்டில் தங்கியிருந்தாலும் அவர் எவருடைய கட்டுப்பாட்டிலும் இருக்க மாட்டார். புதிதாக அன்று வந்த பக்தனிடமும், பல காலங்களாக அவருக்கு பக்தனாக இருப்பவரிடமும் எந்தவித வித்தியாசமும் காட்ட மாட்டார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருளால் சோளப்பா நல்ல வசதியுடன் வாழ்ந்து வந்தார். சோளப்பாவின் மகன் கிருஷ்ணப்பாவுக்கு ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்வதென்றால் மிகவும் பிடிக்கும். ஒரு முறை கிருஷ்ணப்பா மடத்துக்காக ஒதுக்கப்பட்ட வருடாந்தர தொகையை பெற்றுக் கொள்வதற்காக ராய்பகதூர் பார்வே என்கிற அதிகாரியிடம் சென்றார். அவரிடமிருந்து தொகையை பெற்றுக் கொண்டு ரசீதில் தட்டுத்தடுமாறி கையெழுத்திட்டார். அதைப் பார்த்து பார்வே

கேலியாக, **"ஆஹா, எவ்வளவு புத்திசாலியான பிள்ளை!"** என்று கூறிவிட்டு சிரித்தார். இவை அனைத்தையும் ஸ்ரீ ஸ்வாமிகள் கவனித்துக் கொண்டிருந்தார். இது மகராஜை மிகவும் கோபப்படுத்தியது. **"ஏ, (கெட்ட வார்த்தை) என்ன சொன்னாய்? நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? வெறும் எண்ணெயை விற்று உன் வயிற்றை நிரப்பிக் கொண்டிருக்கிறாய். அவனை தவறாகப் பேசாதே. அவனுடைய 'அதிர்ஷ்டம் வேறுவிதமானது"** என்று கடுமையாகக் கண்டித்தார்.

இது முற்றிலும் உண்மை. ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவை செய்வதைவிட பாக்கியம் உண்டோ? பணத்தாசையால் சில சமயம் சோளப்பா ஸ்ரீ ஸ்வாமி மகராஜுக்கு சேவை செய்வதை மறந்து விடுவார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவரிடம், **"என்னிடமிருந்தே சாப்பிட்டுக் கொண்டு, எனக்கு எதிராக செயல்படுகிறாய்"** என்று கூறுவார். இந்த நிகழ்ச்சியின் மூலம் ஸ்ரீ ஸ்வாமிகள் தன் பக்தர்களை கிண்டலாகப் பேசுவதைக் கூட அவர் விரும்புவதில்லை என்பது நமக்கு தெளிவாகிறது. ஒரு தாய் எப்படி தன் கைக்குழந்தையை பாதுகாப்பாளோ அதே போன்று அவர் தன் பக்தர்களை காத்து ரட்சிப்பார் என்பதை தெளிவாக்குகிறது அல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 57

# ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வினோதமான மனோநிலை

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் எப்போதும் சித்த நிலையிலேயே இருப்பார். பார்ப்பதற்கு சாதாரணமான துறவி போலத் தோற்றமளித்தாலும் அவருடைய மனோநிலை பால உன்மத்த பிசாசு என்ற ஸ்ரீ தத்தாத்ரேயருக்கு உரித்தான மனோநிலையில்தான் இருப்பார். அதை விளக்கும் விதமாக பின்வரும் நிகழ்ச்சிகள் அமைந்துள்ளன.

1. ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கடைத்தெருவில் அமர்ந்திருந்தார். அது கடுமையான வெயில் நேரம். அப்போது அங்கிருந்து கிளம்பலாம்

என்றெண்ணிய மஹராஜ் சோளப்பாவை அழைத்து, **"செருப்பு கொண்டுவா!"** என்றார். உடனே அவருடைய சேவகர்கள், **"ஸ்வாமி, இப்போது வெயில் மிகவும் கடுமையாக இருக்கிறது. சிறிது நேரம் கழித்து செல்லலாம்"** என்று கூறினர். உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் மிகவும் கடுமையான சொற்களால் அவர்களை வசை பாடிவிட்டு அந்த இடத்தை விட்டு கிளம்பினார். வேறுவழியின்றி சேவகர்களும் அவருடன் சென்றனர்.

*2.* சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளின் நெருங்கிய அடியவர் என்பது நாம் அறிந்ததுதான். ஆனால் ஒரு போதும் ஸ்ரீ ஸ்வாமிகள் சோளப்பாவின் கீழ் பணிந்தோ அவருக்கு சாதகமாகவோ நடந்து கொண்டதில்லை. தனக்கு தோன்றியபடிதான் அவர் நடந்து கொள்வார். சோளப்பாவின் கடைசி நிமிடங்களின் போது, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவருக்குத் தரிசனம் அளிக்காமல் ஒரு மைலுக்கு அப்பால் இருந்தார். அதனால் மிகுந்த சிரமங்களுக்கு பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகளை பலமுறை கெஞ்சி வேண்டிக்கொண்ட பின்னரே அவருடைய பாதங்களின் புனித நீர் கூட சோளப்பாவுக்கு கிடைத்தது. இந்த வினோதமான மனநிலையை எவராலும் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

*3.* ஸ்ரீ ஸ்வாமிகள் மிகவும் சந்தோஷமாக முட்களின் மீது படுத்துக் கொண்டு உறங்குவார். சொல்லப்போனால் அவர் உறங்குவதே இல்லை. அதற்குச் சான்றாக ஒரு நிகழ்ச்சியை காணலாம்.

ஒரு மாலை வேளையில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கண்பத்ராவ் ஜோஷியின் வீட்டுக்கு வந்தார். அப்போது அவருடன் சோளப்பாவும் கோவிந்தராவ் டோலும் இருந்தனர். அப்போது இரவு வரத் தொடங்கியதால் சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு படுக்கையை தயார் செய்தார். சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளை பார்த்துக் கொள்ளுமாறு கோவிந்தராவிடம் கூறிவிட்டு தன்னுடைய வீட்டுக்கு புறப்பட்டார். மஹராஜ் உடனே சத்தமாக குறட்டை விடத் துவங்கினார். இதை கவனித்த கோவிந்தராவ் ஸ்ரீ ஸ்வாமிகள் இவ்வளவு பெரிய யோகியாக இருந்தாலும் சாதாரண மனிதர் போல குறட்டை விடுகிறாரே என்று தன் மனதில் நினைத்துக் கொண்டார். அவருக்கு உடனே பகவத் கீதையில் உள்ள ஒரு ஸ்லோகம் நினைவுக்கு வந்தது.

**யா நிஷா ஸர்வபூதானாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ**
**யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிசா பச்யதோ முனே (2:69)**

(அனைத்து ஜீவன்களும் ஒய்வெடுக்கும் இரவு வேளைகளில் தனது ஐம்புலன்களையும் அடக்கத் தெரிந்த யோகியானவன் விழித்திருக்கிறான்.

அதேபோல பிற ஜீவன்கள் துய்த்து அனுபவிக்கும் பகல் வேளை, அந்த ஞானியைப் பொறுத்தவரை இரவுப் பொழுதாகும்)

ஆழ்ந்த உறக்கத்திலிருந்த ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் தூக்கத்தில் இருமிக் கொண்டே, **"என்ன விஷயம் பொற்கொல்லரே! இல்லை, இல்லை"** என்று கூறிவிட்டு மீண்டும் குறட்டை விடத் துவங்கினார். ஸ்ரீ ஸ்வாமிகள் கோவிந்தராவை **"பொற்கொல்லர்"** என்று அழைப்பார். ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளை கேட்டவுடன் கோவிந்தராவின் மனதிலிருந்த சந்தேகங்கள் உடனடியாக மறைந்தன.

4. புராணிக், பாபா சபனீஸுடைய மைத்துனர். ஒரு முறை ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் மெத்தையில் படுத்து உறங்கிக் கொண்டிருந்த போது அவர் ஸ்ரீ ஸ்வாமிகளை பார்த்து, **"ஒரு சந்நியாசிக்கு மெத்தை தேவைப்படுமா என்ன?"** என்று அவமதிக்கும் தொனியில் கேட்டார். அப்போது அவருக்கு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் எந்த பதிலையும் அளிக்கவில்லை. ஒரு மாதத்திற்குப் பிறகு அவர் கடாப் என்னும் கிராமத்துக்குச் சென்றார். அப்போது புராணிக்கும் அவருடன் இருந்தார். அவர் மாலை வேளையில் கடாபுக்கு அருகில் இருந்த ஒரு கிராமத்தின் ஒரு மலையின் மீது ஏறத் துவங்கினார். புராணிக் ஏறவேண்டாம் என்று மீண்டும் மீண்டும் கூறிக் கொண்டே இருந்தார். சரி சரி என்று கூறிக் கொண்டே ஸ்ரீ ஸ்வாமிகள் மலையின் உச்சி வரை சென்று விட்டார். அது குளிர் காலம். இரவு நேரம் தொடங்கியதும் குளிரத் தொடங்கியது. அங்கு உண்ண உணவோ பாதுகாப்பான உடையோ ஏதுமில்லை. புராணிக்குக்கு பயம் தொற்றிக் கொண்டது. மஹராஜ் ஒரு கருப்பு கல்லின் மீது படுத்துக் கொண்டு ஓய்வெடுக்கத் தொடங்கினார். புராணிக் குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளோ வெறும் கௌபீனத்தை மட்டும் அணிந்து கொண்டிருந்தார். புராணிக் மஹராஜிடம், **"ஸ்வாமி, குளிர் தாங்க முடியவில்லை. நான் என்ன செய்வது?"** என்று கேட்டதற்கு, **"மென்மையான மெத்தை நன்றாக இருக்கிறதா?"** என்று கேட்டவுடன் தான் முன்பு கூறியது அவருக்கு நினைவுக்கு வந்தது. புராணிக் தான் அவ்வாறு பேசியதை எண்ணி மிகவும் வருத்தமடைந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பஞ்சு மெத்தையும் கல்லும் ஒன்றுதான் என்பதை உணர்ந்து கொண்டார். அங்கு இரவு முழுவதும் தங்கிவிட்டு மறுநாள் காலை அக்கல்கோட் வந்தடைந்தனர். அனைவரிடமும் நடந்ததைப் பற்றி புராணிக் கூறினார். பின்னர் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளுடைய பரம பக்தர் ஆனார்.

நாளுக்கு நாள் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய புகழ் பரவிக் கொண்டிருந்தது. ஒரு மன்னருக்கு செய்யப்படும் அனைத்து உபசாரங்களும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கும்

செய்யத் துவங்கினார்கள். உண்மையிலேயே அவர் சக்கரவர்த்தி போல இருந்தார். பல்லக்கு, குதிரைகள், பசுக்கள் ஆகியவை இருந்தன. ஸ்ரீ ஸ்வாமிகள் எங்கு சென்றாலும் மேளதாளத்துடன் செல்லத் தொடங்கினார். அவர் செல்லும் இடம் ஒரு சுடுகாடாக இருந்தாலும் வயல்வெளியாக இருந்தாலும், வெற்று நிலமாக இருந்தாலும் மேளதாளம் தொடர்ந்து கொண்டே இருந்தது.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பக்தர்களை கையாளும் விதம் மிகவும் விசித்திரமாகவும் வினோதமாகவும் இருந்தாலும் அதில் பொதிந்துள்ள ஆழ்ந்த அர்த்தங்களை புரிந்து கொண்டவர்கள் சிலர் மட்டுமே. ஸ்ரீ ஸ்வாமி தன் பக்தர்களுக்கு தங்கள் மனதை கட்டுப்படுத்த வேண்டும் என்பதை தன் லீலைகள் மூலம் புரியவைத்தார்.அப்படிச் செய்தால் அவர்கள் விருப்பங்கள் அற்றுப் போவார்கள். இந்த நிலையை எய்தும் போது இந்த பிரபஞ்சத்தின் தெய்வீக திட்டங்களை அவர்களால் புரிந்து கொள்ள முடியும் என்று தன் லீலைகள் மூலம் புரிய வைத்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 58

# அக்கல்கோட் வரும் பக்தர்கள்

அக்கல்கோட்டின் அரசரும் அரசியும் ஸ்ரீ ஸ்வாமி மஹாராஜின் மீது மிகுந்த பக்தி கொண்டிருந்தனர். அவர் அரண்மனையில் எட்டு முதல் பதினைந்து நாட்களுக்கு தங்குவார். அப்போது சேவைகள் செய்வதற்காக விஞ்சுர்கர் ஒருவர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு வேலையாளாக நியமிக்கப்பட்டிருந்தார். அவரை ஸ்ரீ ஸ்வாமிகள் வெளிநாட்டுக்காரரர் (*firangi*) என்று அழைப்பார். ஸ்ரீ ஸ்வாமிகள் அரண்மனையில் தங்கியிருக்கும் போது அவரை தரிசனம் செய்ய வரும் பக்தர்களில் பெண்கள் மட்டுமே அவரை அரண்மனைக்குள் சென்று தரிசிக்கலாம். அவரை தரிசிக்க மக்கள் அரண்மனை வாசலில் கூடியிருப்பர். மாலை வேளைகளில் மகராஜ் அரண்மனை உப்பரிகையில் இருந்து பக்தர்களுக்கு காட்சி கொடுப்பார். சிலசமயம் அந்த கூட்டத்தில் இருப்பவர்கள் சிலரை குறிப்பிட்டு அழைத்து அவர்களுடன் மகிழ்ச்சியாக உறையாடிவிட்டு அவர்களுக்கு பிரசாதம் கொடுத்து அனுப்புவார்.

நாட்கள் செல்லச் செல்ல ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக வருவோரின் எண்ணிக்கை அதிகரித்தது. அப்போதெல்லாம் சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளை விடியற்காலையிலேயே குளிக்கச் செய்து, கஸ்தூரி மற்றும் குங்கமப்பூவை கலந்து நெற்றியில் பூசி விடுவார். பின்னர் பூஜைகள் மற்றும் ஆரத்தி செய்வார். மஹராஜ் சோளப்பா அல்லது சுந்தராபாயியிடமிருந்து மூன்று ஆசமனம் பெற்றுக் கொள்வார். காலையிலிருந்து இரவு வரை குறைந்தது 100 பேராவது ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்கு வருவார்கள். ஸ்ரீ ஸ்வாமிகள் குழந்தை போல விளையாடிக் கொண்டே பக்தர்களின் மனதை படித்துக் கூறிவிடுவார். இடையில் சிறிது நேரம் ஒய்வெடுத்துக் கொள்வார். மதியம் அவருக்கு வேண்டுமென்று தோன்றினால் சிறிது உணவருந்துவார். சில சமயம் எட்டு நாட்கள் வரை கூட உணவும் நீரும் இல்லாமல் இருப்பார். காலை, மதியம் மற்றும் மாலை ஆகிய மூன்று வேளைகளும் ஆரத்தி எடுக்கப்படும். அப்போதெல்லாம் ஸ்ரீ தத்தாத்ரேயரின் பாடல்கள் பாடப்படும்.

பக்தர்கள் கூட்டம் அதிகமாக இருக்குமாதலால் அவருக்கு ஓய்வு என்பதே இருக்காது. அவர் வார்த்தைகள் மூலமாகவும் செய்கைகள் மூலமாகவும் பக்தர்களின் மனதை கூறிவிடுவார். தீய எண்ணம் கொண்டவர்களை உடனடியாக அடையாளம் கண்டு கொண்டு கடிந்த சொற்களால் வசை பாடுவார். நல்லுள்ளம் கொண்டவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளின் முன்னிலையில் பக்தி பரவசம் அடைந்தனர். குறுக்கு புத்திக்காரர்களின் நிலை தர்ம சங்கடமாக ஆனது.

அடுத்த அத்தியாயத்தில் ஒரு போலி ஆசாமியை ஸ்ரீ ஸ்வாமிகள் அடையாளம் கண்டு உணர்த்திய லீலையைப் பற்றி காணலாம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 59

# கபீர் பந்த்தைச் சேர்ந்த பக்தர்

ஒரு சமயம் அக்கல்கோட்டிற்கு கபீர் பந்தைச் (பந்த் என்றால் சம்பிரதாயம்) சேர்ந்த ஒருவர் வந்தார். தினமும் காலை வேளைகளில் அவர் பஜனை பாடல்களை பாடிக்கொண்டே அக்கல்கோட் வீதிகளில் பிக்ஷை

எடுத்துக் கொண்டிருப்பார். அப்போது கையில் தம்புராவை வைத்துக் கொண்டு தலையில் முண்டாசு கட்டிக்கொண்டு கழுத்தில் பலவகையான மாலைகளை அணிந்து கொண்டிருப்பார். காலையிலேயே குளித்து முடித்து நெற்றியில் விபூதி, குங்குமம் மற்றும் சந்தனம் ஆகியவற்றை பூசிக் கொண்டு கிளம்பிவிடுவார். பார்ப்பதற்கு ஒரு துறவி போல காட்சியளிப்பார்.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்ரீ கண்பத்ராவ் ஜோஷியின் வீட்டு திண்ணையில் அமர்ந்து கொண்டிருந்தார். அப்போது அந்த பக்தர் ஒரு பஜனைப் பாடலை பாடிக் கொண்டே வந்தார். அப்போது அவரை பார்த்து பெண்களின் யோனியை குறிப்பது போல தன் ஒரு கையின் விரல்களை காட்டி, மறுகையின் விரலை நுழைப்பது போல் செய்கை செய்து அவர் பாடிய பாடலை பாடிக் காட்டிவிட்டு குலுங்க குலுங்கச் சிரித்தார். அங்கிருந்த மக்கள் அனைவரும் அந்த துறவி ஒரு போலி ஆசாமி என்று புரிந்து கொண்டனர். ஜோஷியும் அங்கிருந்த மக்களனைவரும் அந்த துறவியின் வீட்டுக்குச் சென்றனர். அங்கு அழகான பெண் ஒருத்தி அந்த துறவிக்குச் சேவை செய்து கொண்டிருந்தாள். விசாரித்தபோது மாற்றான் மனைவியை இவர் கவர்ந்திழுத்திருக்கிறார் என்று தெரியவந்தது. உண்மை வெளிப்பட்டதும் அந்த போலித்துறவி அக்கல்கோட்டை விட்டு தலைமறைவானார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் எப்போதும் **“முகத்தை பார்த்து முடிவு செய்யாதே”** என்று கூறுவார். எளிதான வழியில் பணம் வேண்டும் என்று கேட்பவர்களிடம், **“பணம் என்ன உன் அப்பனுடையதா?”** என்று கேட்பார். தன் பக்தர்களுடைய மனதிலுள்ள விருப்பங்கள் நிறைவேற வேண்டும் என்று அவர்கள் வற்புறுத்தினால், **“அரைகுறை மனதுடையவனே எப்போதும் ஏக்கத்துடன் இருப்பான். எவனொருவன் பொறுமையுடன் இருக்கிறானோ அவன் நிதானமாகவும் கம்பீரமாகவும் இருப்பான். பொறுமையில்லாமல் இருந்தால் எப்போதும் வீழ்ச்சியையே சந்திப்பார்கள்”** என்று கூறுவார். மிகுந்த நம்பிக்கையுடன் ஞானம் வேண்டும் என்று வருபவர்களுக்கு கர்மப்பாதையை போதிப்பார். அவரவர்களுடைய பக்தி சிரத்தை ஸ்திதி மற்றும் தேவைகளை கவனத்தில் கொண்டு அவர்களுக்கு போதனைகள் செய்வார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**





# அத்தியாயம் 60

# ஸ்ரீ சமர்த்த நாம ஜபம்

வயதான பிராமணர் ஒருவர் மண்ணால் ஆன சிவலிங்கத்தை வைத்து பல நாட்களாக பூஜை செய்து கொண்டிருந்தார். அவர் ஒருநாள் பூஜை செய்து கொண்டிருக்கும் போது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவரைப் பார்த்து, **"இன்னும் எத்தனை நாட்களுக்கு இந்த மண்ணை வழிபட்டுக் கொண்டிருக்க போகிறாய்?"** என்று கேட்டுவிட்டு அவருக்கு சில பாதைகளை வழிகாட்டினார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் சிலரை கணபதியையோ சிவனையோ வழிபடுமாறு அறிவுரைகள் அளிப்பார். இருப்பினும் அனைவரிடமும், **"கற்சிலைகளை வழிபடுவதை விட குருவை வணங்குவதே சிறந்தது"** என்று கூறுவார்.

ஒரு சமயம் ஸ்ரீ ஸ்வாமிகளின் பரம பக்தரான பாளப்பா மஹராஜ் விடியற்காலையில் தன் ஜெபமாலையை கையில் வைத்துக் கொண்டு கணபதியை நாமஜபம் செய்து கொண்டிருந்தார். அப்போது ஸ்ரீ ஸ்வாமி மகராஜ் கட்டிலின் மேல் அமர்ந்து கொண்டிருந்தார், அவருடைய சேவகன் ஷிவுபாய் தரையில் அமர்ந்திருந்தார். ஷிவுபாய் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"பாளப்பா இப்போது என்ன செய்துகொண்டிருக்கிறார்?"** என்று கேட்டார். அதற்கு, **"அவர் சாக்கு நெய்து கொண்டிருக்கிறார்"** என்று ஸ்ரீ ஸ்வாமிகள் பதிலளித்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் கூறுவதைக் கேட்ட பாளப்பா சாக்குத் துணியின் உபயோகம் குறைவு அதனால் கணபதியின் நாமத்தை ஜெபிப்பதைக் காட்டிலும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய நாமத்தை ஜெபிக்கலாம் என்று முடிவு செய்து கொண்டார்.

அடுத்த நாள் காலையிலும் இதே நிகழ்ச்சி தொடர்ந்தது. ஷிவுபாய் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"இன்றைக்கு பாளப்பா என்ன செய்கிறார்?"** என்று கேட்டதற்கு, **"அவர் போர்வை நெய்து கொண்டிருக்கிறார்"** என்று கூறினார். சாக்குத் துணியை விட போர்வை சிறந்தது என்பதை பாளப்பா புரிந்து கொண்டு தினமும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நாமத்தையே ஜெபிக்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டார்.

நம்மில் எத்தனை நபர்கள் போர்வைகள் நெய்கிறார்கள்? ஞானத்தை பெறுவது என்பது அவ்வளவு எளிதானது அல்ல. ஞானத்தைப் பெற பல நடைமுறைகளை தொடர்ந்து பின்பற்றி செயல்படுத்த வேண்டும். ஆனால்





சம்சாரம் என்னும் காலனிடம் சிக்கிக் கொண்ட ஒரு மனிதன் தன் வயிற்றுப்பசி மற்றும் உடல் பசியை தீர்த்துக் கொள்வதிலேயே தன் காலத்தைக் கழிக்கிறான். அவனுக்கு ஞானம் மற்றும் பக்தியை பற்றி யோசிக்கக்கூட நேரம் கிடைப்பதில்லை.

நாமஜபம் செய்வது, பஜனை பாடுவது, பூஜைகள் செய்வது போன்றவற்றில் மட்டும் நேரத்தை வீணாக்காமல், எவன் ஒருவன் ஸ்ரீ ஸ்வாமிகளை எப்போதும் நினைத்துக்கொண்டு தன் கடமைகளை சரிவர செய்கிறானோ அவனுக்கு தன் அருள் அபரிமிதமாக இருக்கும் என்று கூறுவார். எவர் ஒருவர் தன் வாழ்க்கையை நடத்த முழுமையாக உழைகிறானோ அவனை அவர் மிகவும் விரும்புவார். இதுவே அவருடைய பிரதானமான கோட்பாடு என்றும் கூறலாம்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், **"கிட்டத்தட்ட அனைத்து துறவிகளும் வயிற்றுக்கும், அதற்கு கீழும் தான் கவனத்திலிருக்கிறார்கள்"** என்று பலமுறை கூறியிருக்கிறார். துறவு உடைகளை அணிந்து கொண்டு, கஞ்சா புகைத்துக் கொண்டு சாராயத்தைக் குடித்துக் கொண்டிருக்கும் சாதுக்களை அறவே வெறுத்தார்.

ஏழை எளிய மக்களை முன்னேற்றுவதற்காகவே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அவதாரம் வருகை புரிந்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை வணங்குவதே தற்காலத்திற்கு உகந்த வழி. கலியுகத்தின் மாற்றங்களுக்கு ஏறாற்போல் அவருடைய கோட்பாடுகளும் எளிய முறையில் இருப்பதால், அவரிடம் பலர் கவர்ந்திழுக்கப்படுகின்றனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பக்தர்களான நாமும் அவர் கூறியது போலவே, தினமும் அவருடைய நாமத்தை நினைவில் கொண்டு, அவர் கூறிய மார்க்கத்தில் வாழ்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 61

# குருவே அனைத்து கடவுளுக்கும் சமம்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பக்தர்கள் வேறு புனிதத் ஸ்தலங்களுக்குச் செல்வதை விரும்பமாட்டார். அதாவது, ஒருவனுக்கு குரு கிடைத்துவிட்டால் அவன் வேறு இடங்களுக்குச் செல்ல வேண்டிய அவசியமில்லை என்பதுதான் அதன் பொருள். அதேபோல தன் பக்தர்கள் எவரேனும் புனித நூல்களைக்

கொண்டுவந்தால், அவற்றை தன் கைகளால் தொட்டு புனிதமாக்கித் தருவார். ஆனால் அவர்கள் வேறு தெய்வங்களை வணங்குவதற்கு அனுமதித்ததில்லை. அப்படிப்பட்ட நிகழ்ச்சிகளை இந்த அத்தியாயத்தில் பார்க்கலாம்.

## 1. பைதனைச் சேர்ந்த விதாபாய்

பைதனிலிருந்து விதாபாய் என்கிற பெண் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்தாள். அது ஆஷாட மாதம் என்பதால் ஏகாதசியில் பண்டரிபுரம் சென்று விட்டலனை தரிசிக்க வேண்டும் என்று அவள் ஆவல் கொண்டாள். பாயி தன் எண்ணத்தை கண்பத்ராவ் மற்றும் பாளப்பாவிடம் தெரிவித்தாள். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அப்போது அரண்மனையில் தங்கியிருந்தார். அங்கு அவர் பல நாட்களுக்குத் தங்குவார், மேலும் எப்போது வருவார் என்று யாருக்கும் தெரியாது. அதனால் கண்பத்ராவும் பாளப்பாவும் விதாபாயியுடன் சேர்ந்து பண்டரிபுரம் செல்லலாம் என்று முடிவு செய்தனர். பாயியும் அதற்கு சம்மதித்தாள். அரண்மனைக்குள் ஆண்கள் நுழைய அனுமதி இல்லாததால் பாயி சென்று ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை சந்தித்தவுடன், **"ஏன் உன் விதோபாவை காண பண்டரிபுரம் செல்லவில்லை?"** என்று கேட்டவுடன் அவமானமானத்தில் தலை குனிந்தாள். அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் பலமாக சிரித்தனர். **"கடவுள் என் கண் முன்னே பேசிக்கொண்டும், நடந்துகொண்டும் ஸ்ரீ ஸ்வாமிகளின் ரூபத்தில் இருக்கும் போது, அவருடைய சேவகர்களை அழைத்துக் கொண்டு பண்டரிபுரம் போக வேண்டும் என்று எண்ணினேனே"** என்று மனதில் நினைத்துக் கொண்டாள். உடனே அவள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"நீங்கள்தான் உண்மையில் பண்டரிநாதன். நான் ஏன் பண்டரிபுரம் செல்ல வேண்டும்?"** என்று கேட்டாள். இவ்வாறு கூறிவிட்டு தன் ஜாகைக்கு வந்து நடந்தவைகளை பாளப்பா மற்றும் கண்பத்ராவிடம் கூறினாள். உடனே அவர்கள் தங்கள் பயணத்தை ரத்து செய்தனர். பின்னர் சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அரண்மனையிலிருந்து வெளியே வந்து அனைவருக்கும் தரிசனம் அளித்தார்.

## 2. பரசுராம்

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தரான பரசுராம் காசிக்கு செல்ல வேண்டும் என்று விரும்பினார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அனுமதி பெறுவதற்காக சென்றார். **"துறவிகளின் பாதத்தூளிதான் பாகிரதி"** என்று அவர் கூறினார். இதைக் கேட்டவுடன் அவர் தன் காசி பயணத்தை ரத்து செய்தார்.

## 3. சோளப்பா மஹராஜ்

தங்கச்சுரங்கமே சோளப்பாவின் வீட்டில் இருந்தும் சோளப்பா தன் புனித யாத்திரையை தவறவிட்டதே இல்லை. சோளப்பவின் குலதெய்வம் துல்ஜாபூர் பவானி. ஒருமுறை அவர் துல்ஜாபூர் செல்லும் போது பாளப்பாவையும் தன்னுடன் வருமாறு அழைத்தார். பாளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளுடைய அனுமதி இல்லாமல் எங்கும் செல்லமாட்டார். அவர் சோளப்பாவிடம், **"ஸ்ரீ ஸ்வாமிகள் அனுமதி அளித்தால் கண்டிப்பாக வருகிறேன்"** என்று கூறினார். சோளப்பா பாளப்பாவின் கையை பிடித்து இழுத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகளின் முன்னால் அழைத்துச் சென்றார். மகராஜ் அவர்களிடம், **"மலை மீதேறி குப்பையை கிளறுங்கள்"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் பாளப்பா துல்ஜாபூர் செல்வதில் எந்தவித பயனும் இல்லை என்று புரிந்து கொண்டார். இருப்பினும் சோளப்பா சென்றார்.

## 4. பாளப்பாவின் குலதெய்வம்

ஒருமுறை பாளப்பா ஷாகம்பரி மஹாத்மியம் என்கிற புனித நூலை புனிதப்படுத்திக் கொள்வதற்காக ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அளித்தார். அதை வாங்கிக்கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள் லிம்பியா என்கிற வாசிம்கார் புவாவிடம் அளித்துவிட்டார். (இதே போன்று ஸ்ரீ சாய்நாதரும் செய்ததை இங்கு நினைவு கொள்வோம்.) ஸ்ரீ ஸ்வாமிகளின் மீது கொண்டிருந்த அதீத பக்தியின் காரணத்தினால், அவரின் நடவடிக்கைகள் மீது பாளப்பா மிகுந்த நம்பிக்கை கொண்டு எந்தவித கேள்வியையும் எழுப்பவில்லை. ஸ்ரீ ஸ்வாமி மஹாராஜையே அவர் குலதெய்வமாக வணங்கிக் கொண்டிருந்தார்.

## 5. தத்த பக்தரின் குலதெய்வம்

தத்த பக்தர் ஒருவருக்கு தன் குலதெய்வத்தை தரிசனம் செய்யும் விருப்பம் ஏற்பட்டது. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அனுமதி பெறுவதற்காக சென்ற போது அவர், **"உன் அம்மன் எங்கே! அவளைக் கொண்டுவா"** என்று கூறி அனுப்பினார். அவர் தன் வீட்டுக்குச் சென்று வெள்ளி முலாம் பூசப்பட்ட அம்மன் சிலையை தன் பூஜை அறையில் இருந்து கொண்டு வந்து ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் கொடுத்தார். அவர் அந்த சிலையை தன் பாதுகைகளில் தேய்த்தார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அவ்வாறு ஐந்து அல்லது ஆறு முறைகள் செய்துவிட்டு,




**"பார்த்தாயா?"** என்று கேட்டார். அனைத்து தெய்வங்களும் தன் பாதுகை களில்தான் இருக்கிறது என்பதை உணர்த்துவதற்காகவே ஸ்ரீ ஸ்வாமி இவ்வாறு நடந்து கொள்கிறார் என்பதை அந்த பக்தர் புரிந்து கொண்டார். உடனே அவர் தன் பயணத்தை ரத்து செய்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சரணங்களிலியே பணிந்து வாழ்ந்தார்.

குருவிடம் அனைத்து தெய்வங்களும் ஐக்கியமாகியிருக்கும். இப்படி இருக்க மற்ற தெய்வங்களை சென்று தரிசிப்பதில் எந்தவித பயனும் இல்லை என்பதை புரிந்து கொண்டால், அந்த பக்தர் குருவின் பாதங்களில் சரணடைந்தவனாகிறான். ஒரு ஆன்மிக சாதகன் தன் கர்மப்பாதை, உபாசனை மற்றும் ஞானம் ஆகியவற்றை முறையாக செயல்படுத்த வேண்டும். அப்படி தொடர்ந்து செய்வானெனின் அவனுடைய உலக வாழ்க்கை மற்றும் ஆன்மிக வாழ்க்கைக்கு தேவையானவற்றை குரு அருளிவிடுகிறார். இதை உணர்ந்து செயல்படுபவனே உண்மையான அடியவன். குருவருளே திருவருள்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 62

# இஷ்ட தெய்வமாக காட்சியளித்தல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பக்தர்களுக்கு அவர்களுடைய இஷ்ட தெய்வங்களை நெடுந்தொலைவில் சென்று தரிசனம் செய்ய வேண்டும் என்கிற விருப்பங்கள் எழும். அச்சமயங்களில் அவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று அங்கு செல்வதற்கு அனுமதி பெற செல்லும்போது பல அற்புதமான நிகழ்வுகள் நடைபெற்றன. அதேபோல பல பக்தர்கள் தங்கள் இஷ்ட தெய்வங்களை சென்று தரிசனம் செய்யும் போது அங்கு அந்த தெய்வங்களுக்குப் பதிலாக ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்த நிகழ்ச்சிகளும் நடந்தன. இதேபோல சாய் சத்சரித்திரத்திலும், ஸ்ரீ குரு சரித்திரத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளதை இங்கு நினைவு கொள்வோம். இந்த அத்தியாயத்தில் அவ்வாறு நடைபெற்ற நிகழ்ச்சிகளை விரிவாகக் காணலாம்.

## 1. மஹாருத்ர தேஷ்பாண்டேவுக்கு விட்டல் தரிசனம்

அம்பேஜோகைக்கு அருகில் உள்ள கேஜ்-கிராம் என்னும் ஊரில் மஹாருத்ர தேஷ்பாண்டே வசித்து வந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தர். அவர் ஒரு முறை தன் குடும்பத்துடன் பண்டரிபுரம் சென்றார். அங்கு விட்டலனை தரிசனம் செய்தபோது கர்ப்பகிரகத்தில் செங்கலின் மீது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நின்று கொண்டிருப்பதைக் கண்டார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் விட்டலும் வேறு அல்ல என்பதை அவருக்கு உணர்த்துவதற்காக இந்த நிகழ்ச்சி நடைபெற்றது. அவர் மகிழ்ச்சியுடன் தன் கிராமத்திற்குச் சென்றடைந்தார்.

பின்னர் அவர் அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆசீர்வாதத்தை பெற்றுக் கொண்டு தன் சொந்த கிராமத்திற்கு சென்ற போது அவருக்கு ஒரு புதையல் கிடைத்தது. அதற்கு நன்றி தெரிவிப்பதற்காக அவர் மீண்டும் அக்கல்கோட் சென்றார். அப்போது அவருக்கு உடல்நிலை சரியில்லாமல் போனது. அவருக்கு நோய் அதிகமானதால் அக்கல்கோட்டில் பாலகிருஷ்ண கிராமஜோஷியின் வீட்டில் தங்கியிருந்தார். மஹாருத்ரரின் மூத்தமகனான ரகு, ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு அவருக்கு 10,000 வெள்ளி நாணயங்களை சமர்ப்பணம் செய்துவிட்டு தன் தந்தையை காப்பாற்றுமாறு வேண்டிக்கொண்டார். அதை பார்த்தவுடன் ஸ்ரீ ஸ்வாமி ஒரு உள் அர்த்தத்துடன் பலமாகச் சிரித்தார். அனைத்தையும் கொடுப்பவருக்கு ஒருவர் எதை கொடுக்க முடியும்? கடவுளுக்கு தூய பக்தியை விட வேறு என்ன வேண்டும்? அதுவும் ஒரு சந்நியாசிக்கு என்ன வேண்டும்? ஸ்ரீ ஸ்வாமிகள் தனக்கு பணம் தேவையில்லை என்று கூறினார்.

ஹரிச்சந்திரா என்கிற பக்தர் ஒருவர் ஒரு பாதுகையை ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அளித்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் பூடகமான மொழியில் அதை கேஜ்-கிராமில் அவருடைய வீட்டில் வைத்து வழிபடுமாறு கூறினார். அந்த பாதுகைகளுக்கு தேஷ்பாண்டே குடும்பம் வழிபாடுகள் செய்தனர். ஒவ்வொரு வருடமும் தத்த ஜெயந்தியின் போது தாராளமாக செலவு செய்தனர். அதுமட்டுமல்லாமல் எல்லா வருடமும் சோடச உபசாரங்கள் செய்து விமரிசையாக பூஜைகள் செய்தனர். சில வருடங்களுக்குப் பிறகு தேஷ்பாண்டே சந்நியாசம் பெற்றுக் கொண்டார். அவருடைய சமாதி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சமாதிக்கு அருகிலேயே அமைந்துள்ளது.





## 2. பல்வந்தராவ் பேந்தேவுக்கு விட்டல் தரிசனம்

மும்பையைச் சேர்ந்த பல்வந்தராவ் ஒரு தனியார் அலுவலகத்தில் வேலை செய்து கொண்டிருந்தார். அவர் ஒரு கடுமையான நோயினால் துன்பங்களை அனுபவித்துக் கொண்டிருந்தார். எவ்வளவு வைத்தியங்கள் செய்தும் பலனில்லாமல், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக தன் தாயுடன் அக்கல்கோட் வந்தடைந்தார். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் காஸ்-பாக் என்னும் இடத்தில் இருந்தார்(காஸ்-பாக் அக்கல்கோட்டின் மத்தியில் இருக்கும் ஒரு அரசவம்சத்துக்கு சொந்தமான தோட்டம்). பல்வந்தராவ் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஒரு தேங்காயை சமர்ப்பணம் செய்துவிட்டு அவர் பாதங்களில் தஞ்சம் அடைந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் ஒரு தேங்காயை அவருக்கு பிரசாதமாக அளித்தார். பல்வந்தராவ் மிகுந்த மகிழ்ச்சியுடன் சென்றார்.

அடுத்த நாள் காலையில் தன் தாயுடன் மீண்டும் தரிசனம் செய்வதற்காக காஸ்-பாக் சென்ற போது ஸ்ரீ ஸ்வாமிகள் ஒரு மாமரத்தினடியில் அமர்ந்திருந்தார். பல்வந்தராவ்வுடைய அன்னைக்கு ஸ்ரீ விட்டலனை தரிசிக்க ஆவல் மிகுதியாக இருந்தது. அவள் தன் மனதில் பண்டரிபுரம் செல்ல வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்தாள். உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் இருவருக்கும் பண்டரிநாதனாக காட்சி அளித்தார். நடப்பது கனவா நனவா என்பது புரியாமல் அவர்கள் இருவரும் திகைத்து நின்றனர். தன் மனஓட்டங்களை ஸ்ரீ ஸ்வாமிகள் எப்படி உணர்ந்து கொண்டார் என்ற வியப்பு அடங்காமல் பல்வந்தராவின் அன்னை ஆனந்தக்கண்ணீர் வடித்தாள்.

சில நாட்களுக்குப் பிறகு அவர்கள் இருவரும் கானகாபூர் சென்று ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியை தரிசனம் செய்தனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருளால் பல்வந்தராவுடைய நோய் முற்றிலும் குணமடைந்து மும்பை சென்றடைந்தனர்.

## 3. பிராஜிராவ் பட்டனுக்கு விட்டல் தரிசனம்

சோலாப்பூரை சேர்ந்த பிராஜிராவ் பட்டன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்தடைந்தார். அச்சமயம் ஸ்ரீ ஸ்வாமிகள் பட்வர்த்தனிலுள்ள கணேஷ மந்திரில் இருந்தார். அங்கு சென்று ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்து விட்டு அவர் பாதங்களில் நமஸ்கரித்தார். உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் பண்டரிநாதனாக அவருக்குக் காட்சியளித்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவருக்கு ஒரு மாலை அணிவித்தார். இந்த நிகழ்ச்சி நடைபெற்ற

பின்னர் பிராஜிராவ்வின் குடும்பம் செழிப்பான நிலையை அடைந்தது. ஸ்ரீ ஸ்வாமிகளின் தரிசனத்தால்தான் தன் குடும்பம் செல்வச் செழிப்புடன் திகழ்கிறது என்கிற ஆழ்ந்த நம்பிக்கை பிராஜிராவுக்கு உண்டானது. அதனால் ஸ்ரீ ஸ்வாமிகள் அளித்த மாலையை எப்போதும் அவருடன் வைத்திருந்தார்.

### 4. கார்த்திகேய ஸ்வாமியின் தரிசனம்

பரோடாவைச் சேர்ந்த ரேம் சாஸ்திரி டோங்க்ரே கார்த்திகேய ஸ்வாமியின் பரம பக்தர். அவர் தன் நண்பர்களுடன் சேர்ந்து கார்த்திகேயனை தரிசனம் செய்வதற்காகக் கிளம்பினார். வழியில் அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தனர். ராம் சாஸ்திரி தன் பயணத்தைத் தொடர்வதற்காக ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அனுமதி கேட்டார். அவரை இங்கேயே தங்குமாறு ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிவிட்டார். ராம் சாஸ்திரி என்ன செய்வதென்று தெரியாமல் பாபா சபனீஸிடம் கேட்டதற்கு, ஸ்ரீ ஸ்வாமிகள் ஆணையை மீறக்கூடாது என்று கூறிவிட்டார். அதனால் ராம் சாஸ்திரி அக்கல்கோட்டிலேயே தங்கியிருந்தார். கார்த்திகை மாதம் பௌர்ணமியன்று ஸ்ரீ ஸ்வாமிகள் கார்திகேயனாக ராம் சாஸ்திரிக்கு காட்சியளித்தார். தன் விருப்பம் அக்கல்கோட்டிலேயே நிறைவேறியதை எண்ணி ராம் சாஸ்திரி ஆனந்தம் அடைந்தார். இது நடைபெற்ற பின்னர் அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தராக மாறினார். அவர் இரண்டு வருடங்கள் அக்கல்கோட்டில் தங்கிவிட்டு பரோடாவுக்குச் சென்று பக்திமானாக வாழ்ந்தார்.

### 5. மல்லிகார்ஜுன தரிசனம்

வட்டி வசூல் செய்பவர் ஒருவரும் அவருடைய நண்பரும் அக்கல்கோட்டில் உள்ள மல்லிகார்ஜுனரை தரிசனம் செய்வதற்காக வந்திருந்தனர். அந்த கோவிலில் அவர்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரைக் கண்டனர். உடனே அவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்தனர். ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களிடம், **“நான் சங்கரன் இல்லை. கற்பகிரத்திற்குச் சென்று அங்கு கல்லால் செய்யப்பட்டுள்ள சிவலிங்கத்தை தரிசனம் செய்யுங்கள்”** என்று கூறினார். அதனால் அவர்கள் இருவரும் உள்ளே சென்று சிவலிங்கத்தைப் பார்த்தபோது அங்கு சிவலிங்கத்திற்கு பதிலாக ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரைக் கண்டனர். இருவரும் குழம்பி நின்றனர். இறுதியில், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் சிவலிங்கமும் வேறல்ல என்பதை புரிந்து கொண்டனர்.

## 6. ஸ்ரீ சித்தேஸ்வரராக காட்சியளித்தல்

இந்த நிகழ்ச்சி சோலாப்பூரில் நடைபெற்றது. செல்வந்தர்களான சன்ன பசப்பாவும் குரு சித்தப்பாவும் (த்த-*dhdha*) சோலாப்பூரில் உள்ள மக்களனைவரும் கோவிலில் உள்ள சித்தேஸ்வரரை தரிசிக்காமல் சந்நியாசியான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதை விமர்சனம் செய்தனர். தோபாடே பாக் என்னும் இடத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இருந்ததால், அந்த இடம் விழாக்கோலம் பூண்டிருந்தது. அந்த திருவிழாவை ரசிக்கலாம் என்கிற எண்ணத்தில் இருவரும் அங்கு சென்றனர்.

அவர்கள் இருவரும் ஸ்ரீ ஸ்வாமிகளின் முன் நின்றபோது அவர்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பதிலாக பார்வதி தேவி சமேத ஸ்ரீ சித்தேஸ்வரரைக் கண்டனர். அவர்களுடைய கண்களையே அவர்களால் நம்ப முடியவில்லை. தங்கள் தவறை உணர்ந்து ஸ்ரீ ஸ்வாமிகளிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டனர். தங்களுக்கு சந்நியாச பதவி கிடைக்க அருளுமாறு பிரார்த்தனை செய்து கொண்டனர்.

ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களிடம், **“எப்போது நீங்கள் செய்த தவறை உண்மையாக உணர்ந்து கொண்டீர்களோ அப்போதே அந்த பாவத்திலிருந்து விடுபட்டு விட்டீர்கள். மற்றவர்களை விமர்சனம் செய்வது போன்ற தீய பழக்கங்களிலிருந்து விடுபட்டால் மட்டுமே மனதை கட்டுப்படுத்த முடியும். எவனொருவன் இந்த உலக வாழ்க்கை மற்றும் பந்தங்களில் வெறுப்பை உணர்கிறானோ அவனுக்கு வைராக்கியம் துளிர்விடும். அது மோக்ஷ பாதைக்கு வழிவகுக்கும்”** என்று அறிவுரை கூறினார்.

சனபசப்பா ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஒரு சிவலிங்கமும் பாதுகையும் அளித்தார். பின்னாட்களில் அவை ஸ்ரீ ஸ்வாமிகளின் சமாதி கோவிலில் வைக்கப்பட்டது. ஸ்ரீ ஸ்வாமிகள் அவரிடம் விரைவில் அவருக்கு மகன் பிறப்பான் என்றும் அக்குழந்தைக்கு மல்லிகார்ஜுன் என்று பெயரிடுமாறும் கூறி ஆசி வழங்கினார். சில மாதங்களுக்குப் பிறகு சன்ன பசப்பா தன் மகனுடன் அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமிகளிடம் ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு 1000 வெள்ளி நாணயங்களையும் ஒரு பெரிய வெந்நீர் பாத்திரத்தையும் காணிக்கையாக அளித்தார். இவை அனைத்தும் மக்களின் நலனுக்காக செலவிடப்பட்டன.

### 7. துறவிக்கு ஸ்ரீ கிருஷ்ணராக தரிசனம் அளித்தல்

துறவி ஒருவர் துவாரகை சென்று சதுர்புஜ ஸ்ரீ கிருஷ்ணரை தரிசிக்க வேண்டும் என்று ஆவலாக இருந்தார். ஆனால் அவர் ஒரு நோயினால் பாதிக்கப்பட்டிருந்தார். யாரோ ஒருவர் அவரிடம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்யுமாறு கூறினார்கள். அவர் கானகாபூருக்கு சென்றுவிட்டு பின்னர் அக்கல்கோட் சென்றடைந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் அந்த துறவி வந்திருக்கும் காரணத்தை உணர்ந்து கொண்டு அவருடைய விருப்பமான ஸ்ரீ கிருஷ்ணருடைய தரிசனத்தை பற்றி வினவினார். அந்தத் துறவி மிகவும் ஆச்சரியம் அடைந்தார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகள் அவரிடம் வேப்பிலையை சில நாட்களுக்கு சாப்பிடுமாறு பரிந்துரைத்தார். அவர் முழு நம்பிக்கையுடன் வேப்பிலையை உண்டு வந்தார். அதன் விளைவாக அவர் நோயிலிருந்து குணமானார்.

அவர் தினமும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அப்படி ஒருநாள் பாண்டுரங் சோனார் என்கிற பக்தர் ஒருவர் முத்தால் ஆன குண்டலத்தையும் ஸ்படிக மாலையையும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சமர்ப்பணம் செய்தார். அன்றைய தினம் ஸ்ரீ ஸ்வாமிகள் அந்த துறவியின் விருப்பத்தை நிறைவேற்றினார். அவர் சதுர்பூஜ துவாரகை கிருஷ்ணராக காட்சியளித்தார். அந்தத் துறவி அடைந்த ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் புகழை வாயாரப் பாடினார். உடனே சிறிது நேரத்தில் முற்றும் துறந்த சந்நியாசியாகி அவருக்கு காட்சியளித்தார். அப்போது அவர் காதில் அணிந்திருந்த முத்தால் ஆன குண்டலம் சாதாரண கல்லினால் ஆன குண்டலமாக மாறியிருந்தன.

### 8. சந்நியாசியாக தரிசனம்

நாசிக்கில் வசிக்கும் பாபா கோலப்பா நான்கு வேதங்களையும் நன்கு கற்றுணர்ந்த ஒரு ஜோசியர். அவர் ஒருமுறை கோதாவரி நதிக்கரையில் தன் அனுஷ்டானங்களை செய்து கொண்டிருந்தபோது ஒரு சந்நியாசியைக் கண்டார். அவரிடம் ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டு அவரிடம், "நீங்கள் யார்? எங்கிருந்து வந்திருக்கிறீர்கள்? நீங்கள் எப்போது இங்கு வந்தீர்கள்?" என்று கேட்டதற்கு, **"நான் அக்கல்கோட்டிலிருந்து வந்திருக்கிறேன். உன் கர்ம பலன்களை அளிப்பதற்காக நான் இப்போது இங்கு வந்துள்ளேன்"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் கோலப்பாவுக்கு அஷ்ட பா(*bha*)வமும் அவருள் எழும்பி சமாதி நிலைக்குச் சென்றுவிட்டார். சிறிது நேரத்திற்குப் பிறகு அவர் சுயநினைவுக்கு வந்தவுடன் ஸ்ரீ ஸ்வாமி கோலப்பாவின் தலையை தொட்டு ஆசீர்வதித்துவிட்டு,





**“நீ சந்நியாசம் பெற்றுக்கொண்டு பிரம்மத்தை அறிந்துகொண்டு பேரானந்தத்தை உணர்வாய்”** என்று கூறிவிட்டு அவருடைய சந்தேகங்களை தீர்த்து வைத்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை கோலப்பா தன் குடிலுக்கு வந்து ஆசீர்வதிக்குமாறு அழைத்த மறுகணமே அவர் அந்த இடத்தை விட்டு மறைந்து போனார். பாபா கோலப்பா இதைக் கண்டு ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனார்.

சில வருடங்களுக்குப் பிறகு பாபா கோலப்பா சந்நியாசம் பெற்றுக் கொண்டு ஆத்ம சாக்ஷாத்காரத்தை உணர்ந்து கொண்டார். அவர் அக்கல்கோட்டுக்கு சென்று ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்தார். அன்று ஸ்ரீ ஸ்வாமி காஸ்-பாகில் ஒரு கட்டிலின் மேல் படுத்துக் கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமியைக் தரிசனம் செய்தவுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்தான் தன்னை அன்று ஆசீர்வதித்தது என்பதை அறிந்து கொண்டார். உடனே சமாதி நிலைக்கு சென்றுவிட்டார். அவருக்கு தான் இருப்பது பூமியிலா அல்லது சொர்க்கத்திலா அல்லது வைகுந்தத்திலா என்பதுகூட அறியாத நிலையில் இருந்தார். மஹராஜ் அவரிடம், **“நீ நாசிக்கிலிருந்து எப்போது வந்தாய்?”** என்று கேட்டவுடன் அவர் தன் சுயநினைவை மீண்டும் பெற்றார். ஆனால் அவரால் பதிலேதும் கூற முடியவில்லை. இந்த நிகழ்ச்சியை பாபா கோலப்பாவே வாமன்ராவ் வைத்யாவிடம் விளக்கியிருக்கிறார். பாபா கோலப்பாவுடைய சமாதி கோவில் நாசிக், பஞ்சவடியில் அமைந்திருக்கிறது.

## 9. நாத்திகர்களுக்கு தரிசனம்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நாத்திகர்களுக்கு அருளுவதில்லை. எவரொருவருக்கு சந்தேகம் உள்ளதோ அவர்களை ஸ்ரீ ஸ்வாமிகள் வெறுத்தார். புனே மற்றும் மும்பையிலிருந்து சில நாத்திகர்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்ய வந்திருந்தனர். அவர்களின் உள்மன எண்ணத்தை நன்குணர்ந்த ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களுக்கு பாடம் புகட்ட எண்ணினார். அவர்கள் எதிரில் தன் இடுப்பில் கைவைத்துக் கொண்டு அவர் நின்றிருந்த போதிலும் அவர்களால் அவரை காண முடியவில்லை. அவர்களுக்கு அவர் காட்சியளிக்க விரும்பவில்லை. வந்திருந்தவர்கள் அனைவரும் தங்கள் செயலுக்காக வருந்தி மன்னிப்பு கேட்டுவிட்டு அவர்கள் அனைவரும் ஆத்திகர்களாக மாறினர். ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தரிசனம் அளிக்குமாறு கெஞ்சினர். கருணாமூர்த்தியான ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களின் வேண்டுதலுக்கு செவிமடுத்தார். புன்னகை ததும்பும் அழகு முகத்துடன் அவர்களுக்கு தரிசனம் அளித்தார். அவர்கள் அனைவரும் தங்கள் வாழ்நாள் முழுவதும் ஆத்திகர்களாக வாழ்வதாக சத்தியம் செய்து விட்டு விடைபெற்றுச் சென்றனர்.

10. மேலும் இரண்டு நிகழ்ச்சிகளான மங்கள்வேடாவில் ஜனா பாய்க்கு விட்டலனாக காட்சியளித்ததையும் , மோஹோலில் ஒரு பக்தருக்கு அவருடைய குலதெய்வமாக காட்சியளித்ததையும் இங்கு நினைவு கொள்வோம்.

ஒவ்வொரு கோவிலாக சென்று பல தெய்வங்களை வணங்கி அவர்களின் அருளை பெற்று வாழ்வதை விட, அனைத்து தெய்வங்களின் ஐக்கியமாகவே 'நான்' இருக்கிறேன் என்பதை நமக்கு நன்கு உணர்த்துவதற்காகவே இந்த நிகழ்ச்சிகள் நடைபெற்றன. எப்படி விநாயகர் தாய் தந்தையை சுற்றி உலகத்தை சுற்றிய பலனைப் பெற்றாரோ அதேபோல ஒருவர் குருவின் பாதங்களை சரணடைந்த பின்னர் அவர்கள் வேறு எந்த தெய்வத்திடமும் செல்ல வேண்டிய அவசியமில்லை என்பதை உணர்ந்து கொண்டோமல்லவா?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 63

# குழந்தை பாக்கியம்

குழந்தை பாக்கியம் இல்லாமல் தவித்த பல தம்பதிகளுக்கு குருவருளால் குழந்தைகள் பிறந்தது என்பதை அனைத்து குருக்களின் சரித்திரங்களிலும் கேள்விப்பட்டிருக்கிறோம். அதேபோல ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருளால் பலர் குழந்தை பாக்கியம் பெற்றனர். மங்கள்வேடாவில் ஸ்ரீ ஸ்வாமிகளின் அருளால் 50 வயதுக்கு மேல் ஆன ஒரு பெண்மணி குழந்தை பாக்கியம் பெற்ற நிகழ்ச்சியை நாம் இங்கு நினைவு கொள்வோம்.

**1. ராமசந்திரய்யாவின் கதை**

அக்கல்கோட்டில் பிக்ஷை எடுத்து தன் ஜீவனத்தை நடத்தும் பிராமணரான ராமச்சந்திரய்யாவுக்கு நான்கு மகள்கள் இருந்தனர். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அவருடைய வீட்டுக்கு எப்போதாவது செல்வார். ராமச்சந்திரய்யாவின் மனைவி காயத்ரி பாய் தனக்கு ஒரு மகன் பிறக்க வேண்டும் என்று எப்போதும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வேண்டிக் கொள்வாள். மஹராஜ் அவளிடம் எப்போதும் "உனக்கு சீக்கிரமே மகன் பிறப்பான்" என்று கூறிக்கொண்டே இருப்பார். இப்படியே இரண்டு வருடங்கள் கழிந்தன. அவளுக்கு மகன் பிறந்த பாடில்லை.





இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமிகள் "உனக்கு கண்டிப்பாக மகன் பிறப்பான்" என்று கூறிக்கொண்டே இருந்தார். இப்படியே ஆறு வருடங்கள் கழிந்தன. அவள் மிகுந்த நம்பிக்கை இழந்தவளாய் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று, "ஸ்வாமி, ஆறு வருடங்கள் கழிந்துவிட்டன. எனக்கு மகன் பிறப்பான் என்ற நம்பிக்கையை இழந்து விட்டேன். ஏன் தேவையில்லாமல் நம்பிக்கையை ஏற்படுத்துகிறீர்கள்? எனக்கு இந்த பிறவியில் பாக்கியம் இல்லையென்றால் அப்படியே கூறிவிடுங்கள். நீங்கள் ஆசீர்வதித்தது போல எனக்கு இந்த பிறவியில் மகன் பிறப்பானா இல்லையா என்பதை தெளிவாக கூறி விடுங்கள்" என்று விரக்தியுடன் கேட்டாள். இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் தான் கூறியபடியே மீண்டும் கூறிக்கொண்டிருந்தார். இரண்டு வருடங்களுக்குப் பிறகு அவளுக்கு மகன் பிறந்தான். காயத்ரி பாய்க்கு அப்போது 45 வயதாகிவிட்டது.

## 2. ராமகிருஷ்ண சர்தேசாய்

மும்பையைச் சேர்ந்த ராமகிருஷ்ணராவ் சர்தேசாய் ரயில்வேயில் குமாஸ்தாவாக வேலை செய்து கொண்டிருந்தார். அவருடைய சொந்த ஊர் சங்கமேஸ்வர். ஸ்வாமி சுத மகராஜ் மும்பையில் ஏற்படுத்திய மடத்தில் கிருஷ்ணாராவ் சேவைகள் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அவருடைய மனைவி பிறந்ததிலிருந்தே காசநோயினால் பாதிக்கப்பட்டிருந்தாள். அதனால் பார்ப்பதற்கு ஒரு எலும்புக்கூடு போல தோற்றமளிப்பாள். சுத மஹராஜ் மூலம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மகிமைகளை கேள்விப்பட்டு அவரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் சென்றார். ஸ்ரீ ஸ்வாமிகளின் லீலைகளை கண்ணுற்ற பின் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் பரம பக்தராக மாறினார். சில நாட்களுக்குப் பின் மும்பைக்கு திரும்பியவர் தன் மனைவியை அழைத்துக்கொண்டு அக்கல்கோட் பயணம் மேற்கொண்டார். கணவனும் மனைவியும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மீது தூய்மையான பக்தியுடன் சேவைகள் புரிந்தனர். சுந்தராபாயிடம் இருவரும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தங்கள் வேண்டுதலை எடுத்துக் கூறுமாறு கேட்டனர். அவள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று, "இந்த பெண்ணுக்கு தயவு காட்டுங்கள் ஸ்வாமி" என்று கேட்டுக் கொண்டாள். உடனே ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், "இந்தப் பெண் இலந்தை மரத்திற்கு சேவைகள் செய்தால் நெருப்பை போல மகன் பிறப்பான்" என்று கூறினார்.

அவள் ஸ்ரீ ஸ்வாமிகளின் கட்டளையை பற்றி தன் கணவரிடம், **"எவரும் இலந்தை மரத்தை சுற்ற மாட்டார்கள். நான் அப்படி செய்தால் மக்கள் என்னை**

**கேலி செய்ய மாட்டார்களா?"** என்று கேட்டாள். அதற்கு அவர், **"ஸ்ரீ ஸ்வாமிகளின் கட்டளையை எவராலும் புரிந்து கொள்ள முடியாது. நீ அனைத்து பெண்களும் சுற்றும் அரச மரத்தையே சுற்று. அது போதும்"** என்று கூறினார். அவள் ஒரு வருடத்திற்கு அரச மரத்தைச் சுற்றினாள், ஆனால் எந்த பலனும் இல்லை. ராமகிருஷ்ண ராவ் ஸ்ரீ ஸ்வாமிகளின் கட்டளை ஒருபோதும் பொய்க்காது என்பதை தீவிரமாக நம்பினார். அவர் ஸ்வாமி சுத மஹராஜுடைய மடத்துக்குச் சென்றிருந்த போது நடந்தவைகளை பற்றி பிரமானந்தரிடம் தெரிவித்தார். அவர் அதற்கு, **"உங்களுக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய கட்டளையின் உண்மையான பொருள் விளங்கவில்லை. அவர் இலந்தைமரம் என்று கூறியது ஸ்ரீ ஸ்வாமி சுத மஹாராஜை. உங்கள் மனைவி இந்த மடத்தில் சேவைகள் செய்தால் அவளுடைய விருப்பம் நிறைவேறும்"** என்று கூறினார்.

பின்னர் இருவரும் மடத்துக்கு வந்து சேவைகள் புரிவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். சில நாட்களில் அவள் கர்ப்பம் தரித்தாள். ஐந்து மாதத்திற்குப் பிறகு அவர்களுடைய குல வழக்கத்தின் படி பிரசவத்திற்காக தன் தாய் வீட்டிற்குச் சென்றுவிட்டாள். தன் மனைவி மிகவும் பலவீனமானவள் என்பதை எண்ணி ராமகிருஷ்ண ராவ் கவலையோடு இருந்தார். இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமிகளின் வாக்கு பொய்த்ததில்லை என்ற நம்பிக்கையுடன் ஒரு புது உயிரின் வரவுக்காகக் காத்திருந்தார். ஒன்பது மாதங்கள் கழிந்தன. ஓர் இரவில் அவருக்குத் தோன்றிய கனவில், ஸ்வாமி மஹராஜ் அவரிடம் வந்து, **"நான் சோனா வாடேக்கு குளிக்கச் செல்கிறேன்"** என்று கூறினார். அவருடைய மனைவியின் வீடு சோனா வாடேயில்தான் இருக்கிறது. இது ஒரு கெட்ட சகுனம் என்று ராமகிருஷ்ண ராவ் எண்ணிக் கொண்டிருந்தார். மகனை பார்க்கும் சந்தோஷத்தை விட தன் மனைவியை பார்ப்பாரா இல்லையா என்கிற பதட்டம் அவருக்கு மிகுதியாக இருந்தது. நான்கு நாட்களுக்குப் பிறகு அவருக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் அவருக்கு கனவு தோன்றிய மறுநாள் காலையில் தன் மனைவி ஒரு ஆண் மகனைப் பெற்றெடுத்தாள் என்கிற செய்தி அவருக்குக் கிடைத்தது. முப்பத்தி ஐந்து வயதில் நெருப்பைப் போன்ற ஒரு மகனை அவருடைய மனைவி பெற்றெடுத்தாள். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் குளிக்கச் செல்வதாகக் கூறியதன் உண்மையான அர்த்தம் அந்த பெண்ணுடைய பிரசவத்திற்கு என்பதை ராமகிருஷ்ணா புரிந்து கொண்டார். காச நோயாளியால் தீயை போன்ற ஒரு மகனை பெற்றெடுக்க முடியுமா? ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருள் இருந்தால் எதுவும் சாத்தியமே!




### 3. தாழ்ந்த ஜாதி பெண்ணுக்கு மகன்

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் தாழ்த்தப்பட்டவர்கள் வசிக்கும் குடியிருப்பு பகுதியில் அமர்ந்திருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஜாதி இனம் மதம் போன்ற வேறுபாடுகள் கிடையாது. அவர் அனைவரையும் சமமாக மதிக்கும் எண்ணம் கொண்டவர். அப்போது மேல்ஜாதியைச் சேர்ந்த பெண் ஒருத்தி ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக அங்கு வந்தாள். அவள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் தனக்கு மகன் பிறக்கவேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொண்டாள். அங்கு அவர்களுக்கருகில் ஒரு பெரிய எலும்புத்துண்டு இருந்தது. ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அதை எடுத்து, **"உன் மகனை எடுத்துக் கொள்!"** என்று அந்த எலும்புத் துண்டை அப்பெண்ணின் மடியில் தூக்கி எறிய முற்பட்டார். அந்த பெண்ணோ அசுத்தம் என்று எண்ணியவாறு அந்த எலும்புத் துண்டை ஏற்க மறுத்து நகர்ந்து விட்டாள். அப்போது அங்கு அமர்ந்திருந்த தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த பெண் ஒருத்தி தனக்கு மகன் பிறக்க வேண்டும் என்று ஸ்ரீ ஸ்வாமிகளிடம் மடிப்பிச்சை கேட்டாள். உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் அந்த எலும்புத் துண்டை அவளுடைய மடியில் இட்டார். ஒரு வருடத்திற்குப் பிறகு அவளுக்கு ஒரு மகன் பிறந்தான். தற்செயலாக அந்த பெண் ஸ்ரீ ஸ்வாமிகளிடமிருந்து வரம் பெற்றுக் கொண்டாள் என்று தோன்றலாம். ஆனால் உண்மையில் அவர் வரம் அளித்ததே அந்த தாழ்ந்த ஜாதிப் பெண்ணுக்குத்தான் என்பதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். ஒரு லீலையை நிகழ்த்தி, அது ஏன் நடைபெறுகிறது என்பதே புரியாமல், ஆனால் அந்நிகழ்ச்சியால் எவரோ ஒருவர் நன்மை பெற வைப்பது ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு வாடிக்கை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 64

# சமத்துவம்

ஸ்ரீ ஸ்வாமி மஹராஜின் தர்பாரில் தீண்டாமை என்பதே கிடையாது. அவர் அனைவரையும் சமமாக மதித்தார். அவர் பக்தர்களின் உள்மன எண்ணத்தை வைத்துதான் அனைவருக்கும் அருள்புரிந்தார். அவர் தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்த

மக்கள் அளிக்கும் உணவை உண்டுவிட்டு, அனைவருக்கும் பிரசாதமாக அளிப்பார். பெண்கள் தங்கள் மாதவிடாய் நாட்களில் இருந்தால் அவர்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை விட்டு தூரமாக நிற்பார்கள். ஸ்ரீ ஸ்வாமிகளோ அவர்களை வாஞ்சையுடன் அருகில் அழைத்து, அவர்களை தொட்டு ஆசீர்வதிப்பார். இருப்பினும் சில பெண்கள் அருகில் வர தயக்கப்பட்டால், அவர்கள் மீது தலையணை அல்லது அவருக்கு அருகில் இருக்கும் ஏதாவது பொருளை எடுத்து அவர்கள் மீது போட்டு ஆசீர்வதிப்பார். ஸ்ரீ ஸ்வாமியின் ஸ்பரிசம் மஹாபாவிகளையே உத்தமர்களாக மாற்றிவிடும்போது, மாதவிடாய் நாட்களில் இருக்கும் பெண்கள் என்ன பாவம் செய்தார்கள்?

தான் மேல் ஜாதியைச் சேர்த்தவன் என்கிற அஹம்பாவத்துடன் இருப்பவர்களை தன்னிடமிருந்து தூரமாக நிறுத்துவதற்காகவே, தன்னுடைய நெருக்கமான சேவகர்களை தாழ்ந்த ஜாதியில் ஸ்ரீ ஸ்வாமி வைத்துக் கொள்வார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் கிருபையினால் தூய்மை அல்லாதவற்றைக் கூட தூய்மையானவையாக மாற்றிவிடுவார்.

ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் சிவப்பு நிற செந்தூரம் பூசப்பட்ட கல்லை பார்க்கும் போதெல்லாம் அதில் மலஜலம் கழித்து விடுவார். இந்த செயலின் மூலம் செந்தூரம் பூசியிருந்தால் அவை அனைத்தும் தெய்வங்கள் அல்ல, சாதாரண கல்தான் என்பதை மக்களுக்கு உணர்த்த எண்ணினார். அதற்கு எடுத்துக்காட்டாக பின்வரும் நிகழ்ச்சி விளக்கப்பட்டுள்ளது.

அக்கல்கோட்டில் காஸ்-பாக் என்னும் இடத்தில் கனா தேவி என்னும் தெய்வத்தின் சிலை இருக்கும். ஊரில் உள்ள அனைத்து பெண்களும் குழந்தைகளும் இந்த தேவியின் மீது பயத்தில் இருந்தனர். உச்சி வேளையிலோ அல்லது மாலை வேளையிலோ காஸ்-பாக் செல்லும் பெண்கள் மற்றும் குழந்தைகளை இந்தப் பெண் தெய்வம் மிகவும் தொந்தரவு செய்யும், அவர்களை பிடித்துக் கொள்ளும். அவளுக்கு தேங்காயோ அல்லது கோழியையோ படைக்காவிட்டால், அவர்களை அந்த இடத்தை விட்டு செல்ல அனுமதிக்காது. ஹனுமான் இராமாயணத்தில் அஹி-மஹி நகரத்தில் எப்படி ஒரு பெண் தெய்வத்திடம் நடந்துகொண்டாரோ அதே போல ஸ்ரீ ஸ்வாமி மஹராஜும் கனா தேவியிடம் நடந்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகள் கனா தேவியை தன் கழிவறையாக உபோயோகப்படுத்தத் தொடங்கியதில் இருந்து காஸ்-பாக் மக்கள் கனா தேவியை வழிபடுவதை நிறுத்தி விட்டனர்.

இந்த நிகழ்ச்சி தற்கால வாழ்க்கை முறைக்குப் பொருந்தும் வகையில் அற்புதமாக அமைந்துள்ளது. மேலும், இது போன்ற லீலைகளை வேறு எந்த குருவின் சரித்திரத்திலும் கேள்விப்பட்டதில்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் புரியும் ஒவ்வொரு லீலையிலும் ஒரு ஆழமான மற்றும் அழுத்தமான அர்த்தம் இருக்கிறது என்பதை இது போன்ற விசித்திரமான லீலைகள் மூலம் நமக்கு தெளிவாக விளக்குகிறாரல்லவா?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 65

# கலியுகத்தின் தெய்வம்

பாலகிருஷ்ணபுவா தால்வாக்கர் என்கிற ராமதாசி ஒருவர் அக்கல்கோட் வந்திருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் தரிசனத்துக்காகச் சென்ற போது அவரிடம், **"ராமநாமத்தை கூறும் போது கவனமாக இரு. தண்ணீரை சர்க்கரையில் கலந்து விடாதே"** என்று கூறினார்.

**"கலௌ ஸ்ரீபாத ஸ்ரீவல்லபம்"** என்கிற கூற்றின்படி கலியுகத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மற்றும் ஸ்ரீபாத ஸ்ரீவல்லபரின் புகழ் பரவும் என்று உணர்ந்து கொள்ள முடிகிறது. ராமர் மற்றும் கிருஷ்ணர் முந்தைய யுகங்களின் அவதாரங்கள். இப்போதைய கால சூழ்நிலைக்கு ஸ்ரீபாத ஸ்ரீவல்லபரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருமே கலியுகத்தின் அவதாரங்கள்.

மக்கள் ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர் மற்றும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருளை பெற்றால் இந்த கலியின் பிரபாவத்திலிருந்து விடுபடலாம் என்பதை ஸ்ரீ ஸ்வாமிகள் நமக்கு குறிப்பால் உணர்த்துகிறார். இனி வரும் காலங்களில் இந்த உலகம் முழுவதும் ஸ்ரீ தத்தாத்ரேயரின் புகழ் பரவும் என்பதை நம்மால் ஊகிக்க முடிகிறது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 66

# ஸ்ரீ ஸ்வாமிகள் சோளப்பாவின் வீட்டில் நிகழ்த்திய லீலைகள்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட்டில் 22 முதல் 23 ஆண்டுகள் வாழ்ந்தது, சோளப்பாவின் வீட்டில் பல நாட்கள் தங்கியிருந்தது ஆகிய செய்திகளை நாம் அறிவோம். இந்த அத்தியாயத்தில் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் சோளப்பாவின் வீட்டில் வசிக்கும் அவருடைய சொந்தபந்தங்களிடம் பல லீலைகளை நிகழ்த்தியிருக்கிறார். அவற்றில் சிலவற்றை நாம் விரிவாக காணலாம்.

1. ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் வெளியே சென்றிருந்த சமயத்தில் சோளப்பாவின் வீட்டினுள் ஒரு ஆந்தை புகுந்துவிட்டது. இதைக் கெட்ட சகுனமாக எண்ணிக்கொண்டு சோளப்பா தன் குடும்பத்துடன் காஸ்-பாகுக்கு சென்று விட்டார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அக்கல்கோட் வந்தடைந்ததும் நடைபெற்ற அனைத்தையும் அறிந்து கொண்டார். அனைத்தையும் அறிந்தவர் என்றாலும், இது போன்று சாதாரணமாக நடந்து கொள்வதில் அவருக்கு சந்தோஷம் அதிகம். ஸ்ரீ ஸ்வாமி சோளப்பாவை காஸ்-பாகில் சென்று சந்தித்து, **"ஆந்தை நுழைந்ததற்காக வீட்டை விட்டு யாராவது செல்வார்களா?"** என்று கடுமையாக கோபித்துக் கொண்டார். அவர் எப்போதும் மூடநம்பிக்கைகளை எதிர்த்தார். அப்படி எவரேனும் மூடநம்பிக்கைகளுடன் நடந்து கொண்டால் அவர்களை கடுமையாக கண்டித்து அந்த பழக்கங்களை விடுமாறு அறிவுறுத்துவார்.

2. சோளப்பாவின் வீட்டில் அவருடைய குழந்தைகள் உறங்கும் அதே படுக்கையில்தான் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் உறங்குவார். அக்கல்கோட் வந்தடைந்த புதிதில், அதாவது சுமார் இரண்டு மாத காலத்திற்கு சோளப்பாவுக்கு பல்வேறு வகையான இன்னல்களை ஸ்ரீ ஸ்வாமிகள் ஏற்படுத்தியிருக்கிறார். அவருடைய வீட்டில் தான் இஷ்டப்படும் இடங்களில் மலம் கழிப்பது, நெருப்பை தண்ணீர் ஊற்றி அணைப்பது, குளிக்காமல் உணவை தொடுவது போன்ற பல்வேறு இன்னல்கள் ஏற்படுத்திக் கொண்டிருந்தாலும் சோளப்பாவின் பக்தி குறையவே இல்லை. ஒரு பண்டிகை தினத்தில் சோளப்பாவின் மனைவி

பூரன் போளிகளை (இனிப்பு பண்டம்) செய்து வைத்திருந்தார். அப்போது வாசலில் ஒரு துறவி **'அல்லாக்'** என்று அழைத்தவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் போளி நிரம்பிய பாத்திரத்தை தன் கையில் தூக்கிக்கொண்டு அவற்றை முழுவதுமாக அவருக்கு அளிப்பதற்காகக் கொண்டு சென்றார். இதைக் கண்ட சோளப்பாவின் மனைவி அவர் பின் ஓடிச் சென்று அந்த பாத்திரத்தை அவரிடமிருந்து வாங்கிவிட்டு, அந்த துறவிக்கு ஒரு போளியை அளித்துவிட்டு மற்ற போளிகளை பத்திரப்படுத்தினாள். ஸ்ரீ கிருஷ்ணர் எப்படியெல்லாம் யசோதைக்கு இன்னல்களை ஏற்படுத்தினாரோ அதே போன்று ஸ்ரீ ஸ்வாமிகளும் சோளப்பாவின் வீட்டிலுள்ள பெண்களை தன் தாயாக பாவித்து நடந்து கொண்டதை நம்மால் உணர முடிகிறதல்லவா?

*3.* ஒரு நாள் சோளப்பா அக்கல்கோட்டை விட்டு வேறொரு ஊருக்குச் சென்றிருந்தார். அன்று காலை ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் சோளப்பாவின் மனைவி மற்றும் குழந்தைகளை வீட்டை விட்டு விரட்டிவிட்டு, அவர்களை உள்ளே செல்ல அனுமதிக்காமல் வாசலிலேயே ஒரு பெரிய குச்சியை வைத்துக் கொண்டு அமர்ந்திருந்தார். மதியம் ஆனது.அனைவருக்கும் பசி வயிற்றை கிள்ளியது. அச்சமயத்தில் சோளப்பா வீடு வந்து சேர்ந்து அவர்களுடைய பரிதாபகரமான நிலையைக் கண்டார். ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று ஒரு குழந்தையிடம் கெஞ்சுவது போன்று கெஞ்சினார். பின்னர் மனம் இறங்கி வந்து அவர்களை உள்ளே செல்ல அனுமதித்தார்.

*4.* சோளப்பாவின் மனைவி கர்ப்பமாக இருந்தாள், 9 மாதங்கள். அவளுக்கு இடுப்பு வலி எடுக்க ஆரம்பித்தவுடன் ஒரு அறையினுள் சென்று ஒரு கட்டிலில் படுத்துக் கொண்டாள். ஸ்ரீ ஸ்வாமிகள் அறையின் கதவை மூட வேண்டாம் என்று கூறினார். அவர் உள்ளே சென்று அந்த அறையின் மூளையில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த மண் பானைகளை அந்த அறை முழுவதும் பரப்பி வைத்துக் கொண்டிருந்தார். எப்போது வேண்டுமானாலும் பிரசவம் நடக்கலாம் என்று அனைவரும் ஆர்வமாக காத்திருந்தனர். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை தடுக்கவோ ஏதாவது கேட்கவோ அங்கிருந்த எந்த பெண்ணுக்கும் துணிவு இல்லை. அதே சமயத்தில் சோளப்பாவின் மனைவி ஒரு பெண் குழந்தையை பெற்றெடுத்தாள். உடனே ஸ்ரீ ஸ்வாமி மஹராஜும் அந்த அறையின் கதவை மூடிக் கொண்டு வெளியே சென்றுவிட்டார். இந்த லீலையை அவர் ஏன் நிகழ்த்தினார்? அதன் அர்த்தம் என்ன? அவருடைய செயல்களுக்கு நம்மால் விளக்கம் அளிக்க முடியுமோ?

5. ஒருநாள் சோளப்பாவுடைய மனைவியின் கையில் தேள் கொட்டிவிட்டது. அவளால் வலியை தாங்கிக்கொள்ளவே முடியவில்லை. அப்போது ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் வீட்டினுள்தான் இருந்தார். அவளுடைய அழுகையை பார்த்து தன் பாதுகைகளை அவளிடம் தூக்கி எறிந்து விட்டு அவளுடைய கைகளை அதனுள் வைத்துக் கொள்ளுமாறு கூறினார். அவள் அவ்வாறு செய்தவுடன் வலி குறையத் தொடங்கியது. சிறிது நேரத்திற்குப் பிறகு தனக்கு குணமாகிவிட்டது என்று எண்ணிக்கொண்டு தன் கைகளை பாதுகைகளிலிருந்து எடுத்தவுடன் மீண்டும் அவளுக்கு வலி எடுக்கத் தொடங்கியது. உடனே அவள் தன் கைகளை பாதுகைக்குள் வைத்துக் கொண்டாள். அவ்வாறு வைத்துக் கொண்டு உறங்கியும் விட்டாள். இந்த நிகழ்ச்சியின் மூலம் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதுகைகளின் மகிமையை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை இந்த பிறவியில் நேரில் காணும் பாக்கியத்தை நாம் பெறவில்லையே என்கிற ஏக்கம் அனைத்து பக்தர்களுக்கும் ஏற்படும் என்பதை அறிந்ததாலோ என்னவோ ஸ்ரீ ஸ்வாமிகள் தன் பாதுகைகளை தன் பக்தர்கள் பலரிடம் அளித்திருக்கிறார். அவை பல இடங்களில் ஸ்தாபிக்கப்பட்டு வழிபாடுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. நம்மால் அவற்றை தரிசனம் செய்யவும் ஸ்பரிசிக்கவும் முடியும் என்பதை எண்ணிப்பார்க்கும் போது, அவர் கருணையின் மறுவடிவம் என்பதைத் தவிர வேறு ஏதாவது கூற முடியுமா என்ன?

6. ஒருநாள் சோளப்பாவின் மைத்துனி அவருடைய வீட்டில் தங்கியிருந்தாள். அவள் தன் மூக்குத்தியை (நத்து) படுக்கையில் கழற்றி வைத்துவிட்டு உறங்கிவிட்டாள். சோளப்பாவின் சகோதரன்/சகோதரியின் மகன் விடியற்காலையில் பூக்கள் பறிப்பதற்காக எழுந்து கொள்ளும்போது அதை பார்த்துவிட்டு எவருக்கும் தெரியாமல் எடுத்துக் கொண்டு சென்று விட்டான். அந்த பெண் விழித்துக் கொண்டவுடன் தன் மூக்குத்தியை காணாமல் அலறினாள். அவள் மிகவும் ஏழ்மையான குடும்பத்தைச் சேர்ந்தவள், அவளுடைய கணவன் மிகவும் கடினமான சூழ்நிலையில் 100 ரூபாய் சேமித்து வாங்கிக் கொடுத்தது என்பதால் பயத்தில் அழுதுகொண்டே வீடு முழுவதும் தேடிக்கொண்டிருந்தாள். அக்கல்கோட் மக்களுக்கு எல்லாமுமாக ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இருந்தார். அவரே போலீஸ் அதிகாரி, வைத்தியர், ஜோசியர், இப்படி அனைத்துவிதமான இன்னல்களுக்கும் ஸ்ரீ ஸ்வாமிகளையே அணுகுவர். அந்தப் பெண்ணும் அழுதுகொண்டே ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து தன் மூக்குத்தி

திருட்டுபோனதை பற்றி கூறினாள். **"அழாதே! அமைதியாக இரு. உன் மூக்குத்தி கண்டிப்பாக கிடைக்கும்"** என்று கூறினார். அப்பெண் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகிலேயே அமர்ந்திருந்தாள். ஒருமணி நேரம் ஓடியது. அவள் மஹராஜிடம் மீண்டும் கேட்டதற்கு, **"ஏய்! காத்திரு, உன் மூக்குத்தி கண்டிப்பாகக் கிடைக்கும். பயப்படாதே"** என்று கூறினார். அந்த திருட்டு சிறுவன் பூக்களை பூஜை அறையில் வைத்துவிட்டு வந்து சேர்ந்தான். அவனை பார்த்தவுடன் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **"ஏய்! இவள் அழுதுகொண்டிருக்கிறாள். இவள் மூக்குத்தியை கொடுத்துவிடு"** என்று கூறியதற்கு அவன் அதை எடுக்கவே இல்லை என்று சத்தியம் செய்தான். மஹராஜ் அவனை கடும் சொற்களால் வசை பாடினார். "(கெட்டவார்த்தை), அவளுடைய படுக்கையிலிருந்து எடுத்த மூக்குத்தியை எடுத்துக் கொடு" என்று கோபத்தில் அலறியதைக் கண்டு பயந்து அவன் மூக்குத்தியை எடுத்து கொடுத்துவிட்டான்.

இது போன்ற பல்வேறு லீலைகளை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சோளப்பாவின் வீட்டில் நிகழ்த்தி தான் ஒரு சாதாரண மனிதன் அல்ல என்பதை அவர்களுக்கு நிருபித்திருக்கிறார். ஸ்ரீ ஸ்வாமிகள் இவை மட்டுமல்லாமல் பல நிகழ்ச்சிகளை அவருடைய வீட்டில் நிகழ்த்தியிருந்தாலும் நமக்கு கிடைத்த தகவல்களை மட்டுமே இங்கு பதிவிட முடிந்தது வருத்ததிற்குரிய விஷயம்தான். தான் ஒரு அவதாரம் என்பது மட்டுமல்லாமல் தன்னை சரணடைந்த பக்தர்களுக்காக அவர் எதுவேண்டுமானாலும் செய்வார் என்பதை நிருபிக்கவே இது போன்ற பல லீலைகளை அவர் நிகழ்த்தியிருக்கிறார் என்று தோன்ற வைக்கிறது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## *அத்தியாயம் 67*

# குருவியும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும்

சோளப்பா மிகவும் எளிமையானவர், பெரிய பக்திமான் என்றெல்லாம் கூறமுடியாது. ஸ்ரீ ஸ்வாமிகளின் அற்புதங்கள் பலவற்றை நேரில் கண்டறிந்திருந்தமையால் அவருக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் மீது அசைக்கமுடியாத பக்தியும் நம்பிக்கையும் இருந்தது. ஆனால் காலப்போக்கில் அவர் மாயையில்

சிக்கிக்கொண்டார். சோளப்பா தன் வீட்டிலுள்ள பாத்திரங்களை கூட அடகு வைத்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு உணவளித்து வந்தார். அச்சமயங்களிலெல்லாம் ஸ்ரீ ஸ்வாமிகள் அவர் வீட்டிலேயேதான் உணவு உட்கொண்டார். சில நாட்களுக்குப் பிறகு அக்கல்கோட் அரசர் ஸ்ரீ ஸ்வாமிகளின் பக்தராக ஆன பிறகு, அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் உணவுக்குத் தேவையான பொருட்செலவை சோளப்பாவுக்கு அனுப்பினார். அப்போதிலிருந்து ஸ்ரீ ஸ்வாமிகள் சோளப்பவின் வீட்டில் உணவருந்துவதை குறைத்துக் கொண்டு மற்ற வீடுகளுக்குச் செல்வதை வழக்கமாக்கிக் கொண்டார்.

தொடக்கத்தில் இரண்டு மாதங்களுக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் சோளப்பாவுக்கு பல இன்னல்களை ஏற்படுத்தியதை நாம் முந்தைய அத்தியாயத்தில் விரிவாக சிந்தித்ததை நினைவில் கொள்வோம். ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமிகள் பக்கத்து கிராமமான பிசாப்பூருக்கு சென்றிருந்த போது சோளப்பாவும் அவருடன் இருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் கோபமாக சோளப்பாவிடம், **"நான் ஒரு துறவி. என்னை பின்தொடராதே. உன் குடும்பத்தை முதலில் கவனி"** என்று கூச்சலிட்டார். இவ்வாறு கூறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் வேகமாக நடக்கத் துவங்கினார். ஆனால் சோளப்பா அவரை பின்தொடர்ந்தவாறு, **"நான் என் குடும்பத்தைத் துறந்து உங்களுடனேயே வந்துவிடுகிறேன்"** என்று கூறினார். சோளப்பாவின் பக்தியை கண்டு மனமுறுகிய ஸ்ரீ ஸ்வாமிகள் அவரிடம் தான் அணிந்து கொண்டிருந்த பாதுகைகளை வீசி எறிந்துவிட்டு அவற்றை வழிபடுமாறு கூறினார். பின்னாட்களில் சோளப்பா வழிபட்ட பாதுகைகளை வழிபடும் பக்தர்கள் அவர்களுடைய நோய்களிலிருந்தும், பேய் பிசாசு போன்ற தீய சக்திகளிடமிருந்து விடுபட்டனர். இந்தச் செய்தி காட்டுத்தீ போல பரவி இந்த பாதுகைகளை வணங்க இன்றும் பலர் வந்த வண்ணம் இருக்கின்றனர்.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஊருக்கு வெளியே இருக்கும் ஒரு கோவிலைச் சென்றடைந்தார். அங்கிருந்த எலுமிச்சை மரத்தின் கீழ் அமர்ந்திருந்தார். அச்சமயத்தில் சோளப்பாவும் அவருடன்தான் இருந்தார். அப்போது மணி 7, மரத்தின் மேலிருந்த குருவி கீச் கீச் என கீச்சிடும் ஓசை கேட்டது. ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அந்த குருவியைப் பார்த்து, **"நான் சென்றுவிட்டு வரும் வரை இங்கேயே இருக்க வேண்டும். எங்கும் செல்லக்கூடாது"** என்று கூறிவிட்டு பக்கத்து கிராமமான வாடிக்கு சென்றுவிட்டார். மதியம் 12 மணிக்கு வாடியிலிருந்து திரும்பினார். அப்போதும் அந்த பறவை அங்கேயே இருந்தது. அப்போது ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அந்த குருவியிடம், **"உனக்கு இப்போது பசியாக இருக்கும். நீ பறந்து போகலாம்"** என்று கூறியபின் பறந்து சென்றது.




இதைக் கண்டவுடன் சோளப்பா ஆச்சரியத்தில் மூழ்கினார். ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அனைத்து உயிரினங்களும் ஒன்றுதான் என்பதையும் அவர் செலுத்தும் கருணை அனைவரிடமும் சமம் என்பதை இந்த நிகழ்ச்சி நமக்கு தெள்ளத் தெளிவாக்குகிறது. ஒரு சிறு உயிரினத்தின் பசியை கூட அவரால் உணர்ந்துகொள்ள முடியும்போது, நம்முடைய கவலைகளையும் கஷ்டங்களையும் தீர்த்து வைக்கமாட்டாரா என்ன? அந்த குருவி எப்படி அவருடைய வார்த்தையை மீறாமல் அங்கேயே இருந்ததோ நாமும் அதேபோல அவருடைய வார்த்தையை மீறாமல் நடந்து கொள்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 68

# அப்பா சாஹெப் மானே

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட்டில் தங்கியிருந்தபோது அவரைச் சுற்றி மூன்று பேர் படைகளாக சூழ்ந்திருப்பர். முதலாவது சோளப்பா, இரண்டாவது மஹாராணி மற்றும் சுந்தராபாயி, அடுத்து தாழ்த்தப்பட்ட மக்கள். ஸ்ரீ அப்பா சாஹெப் மானே அக்கல்கோட் மஹாராஜா உட்பட அனைவராலும் மதிக்கப்படும் நல்ல நிலையில் இருந்தார். அவருடைய மகள் ஜமானாபாய் மிகவும் அழகு நிரம்பியவள். அவள் திருமண வயதிற்கு வந்திருந்தபோதும் தகுந்த வரன் அமையவில்லை என்கிற காரணத்தால் அவர் வருத்தத்தோடு இருந்தார். ஒருநாள் ஸ்ரீ மானே ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று, **"ஸ்வாமி, என் மகளுக்கு தகுந்த மணமகன் கிடைக்க நீங்கள் அருள் புரிய வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **"ஏன் கவலைப்படுகிறாய்? அவளுக்கு காண்டியா(ஒரு பறவை) நியமிக்கப்பட்டிருக்கிறது"** என்றார். ஸ்ரீ மானேவுக்கு எதுவும் புரியவில்லை இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தையை நம்பி சென்றார். சில நாட்களுக்குப் பிறகு ஜமானாபாய் ஸ்ரீமந்த் காண்டேராவ் கைக்வாடுக்கு திருமணம் செய்து வைக்கப்பட்டாள். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைக்கான அர்த்தம் அனைவருக்கும் புரிந்தது. ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளை நம்மால் சரியாக புரிந்துகொள்ள முடியாவிட்டாலும் அவற்றை அப்படியே பின்பற்றினால் போதுமானது. அவரே நமக்கான சரியான வழிகளை அருளுவார் என்பது திண்ணம்.

ஒருமுறை அப்பாசாஹேப் அக்கல்கோட்டில் உள்ள பட்டவர்த்தன் கணேஷ் கோவிலில் தங்கியிருந்தபோது அவர் டைபாய்ட் ஜுரத்தினால் பாதிக்கப்பட்டார். அவர் தினமும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை தரிசனம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். ஆனால் நோயின் தாக்கம் அதிகமாக இருந்த காரணத்தால் அவரால் இருந்த இடத்தை விட்டு நகர முடியவில்லை. இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதங்களை எப்போதும் நினைவில் கொண்டிருந்தார். பக்தர்களின் மனஓட்டங்களுக்கு உடனடியாக பதிலளிக்கும் கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள், ஒருநாள் கணேஷ் கோவில் வழியாக வந்தார். அச்சமயத்தில் மானே மிகவும் அபாயகரமான நிலையில் சுயநினைவை இழந்திருந்தார். மஹராஜ் அவருடைய கரங்களினால் மூன்று முறை ஸ்ரீ மானேவின் உடலை தொட்டுவிட்டு, சில நிமிடங்களுக்கு அந்த இடத்திலேயே அமர்ந்திருந்து விட்டு சென்றுவிட்டார். அடுத்த நாளில் இருந்து மானேவின் உடல் சீரடையத் தொடங்கியது. இந்த நிகழ்ச்சியின் மூலம் நம்மால் ஸ்ரீ ஸ்வாமி இருக்கும் இடத்திற்குச் செல்ல முடியவில்லையே என்று ஏங்கிக்கொண்டிருக்கும் ஒரு பக்தனை, அவரே நேரில் வந்து சந்தித்து அவருடைய நோயையும் சரிசெய்ததன் மூலம் அவர் தான் பக்தவத்சலன் என்பதை நமக்கு தெள்ளத் தெளிவாக்குகிறார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 69

# பண்டோபா புராணிக் (புராண கதைகள் சொல்பவர்)

அக்கல்கோட்டில் புராண கதைகள் கூறுபவரான பண்டோபா புராணிக் என்று ஒருவர் இருந்தார். மாலோஜி ராஜேவின் தந்தையான ஷஹாஜிராஜே அவருக்கு எழுத்து மூலமாக, **"சத்ரபதி சாஹேப் சர்க்கார் தனக்கு ஆட்சியுரிமை அளித்தால் உனக்கு 1000 ரூபாய் மதிப்புள்ள நிலத்தை பரிசாக அளிக்கிறேன்"** என்று எழுதிக் கொடுத்திருந்தார். ஷஹாஜிராஜேவுக்கு ஆட்சியுரிமை கிடைத்தபோதும் புராணிக்குக்கு நிலத்தை அளிக்கவில்லை. தினமும் புராணக்





கதைகள் கூறுவதற்காக அரண்மனைக்கு செல்லும் போதெல்லாம் அரசரிடம் இதைப்பற்றி முறையிட்டுக் கொண்டிருப்பார். ஆனால் எந்த பிரயோஜனமும் இல்லை. பண்டோபா தினமும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை தரிசனம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அவருக்கு ஸ்ரீ ஸ்வாமிகளின் மீது அதீத பக்தி இருந்தது. மஹராஜ் அவரை லத்தியா(குண்டன்) என்று அழைப்பார்.

எப்போதும் புராணிக்புவாவின் மனதில் நிலத்தை பற்றிய எண்ணம்தான் ஓடிக்கொண்டிருக்கும். ஒருநாள் அவர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் தனக்கு நிலத்தை அரசர் அளிக்காததை பற்றி கூறியபோது, **"நான் உனக்கு சிவலிங்கம் அளிக்கவில்லையா என்ன?"** என்று கேட்டார். துரதிர்ஷ்டவசமாக அரசர் துர்மரணம் அடைந்தவுடன் புராணிக் தன் நம்பிக்கையை இழந்தார். இறந்த சடங்குக்கு பத்து விதமான தானங்கள் செய்ய வேண்டும். அதில் ஒன்று பூமி தானம். சிந்தோபந்த் டோல் புதிய அரசரான மாலோஜி ராஜேவிடம் பூமி தானத்தை பண்டோபா புராணிக்குக்கு அளித்துவிட்டு பத்திரத்தை பெற்றுக் கொள்ளலாம் என்று அறிவுரை வழங்கினார். அரசர் அதற்கு சம்மதித்து நானூற்றி ஐம்பது ரூபாய் பெறுமானமுள்ள நிலத்தை அவருக்கு அளித்துவிட்டு பத்திரத்தை பெற்றுக்கொண்டார்.

அரசர் அளித்த நிலத்தில் ஸ்ரீ ராமேஸ்வர் என்கிற பெயரில் ஒரு சிவலிங்கம் இருந்தது. அந்த கோவிலின் இருபக்கத்திலும் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்க அழகான இயற்கை சூழலில் அமைந்திருந்தது. மேலும் அந்த கோவிலைச் சுற்றி மாமரங்கள் நிறைந்திருப்பதைப் பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருந்தது. **"நான் உனக்கு சிவலிங்கத்தை அளித்துவிட்டேன்"** என்று ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் கூறிய வார்த்தைகள் உண்மையானதை எண்ணி புராணிக் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வார்த்தைகள் பொய்க்காது என்பதை வலியுறுத்துவதாக இந்த நிகழ்ச்சி அமைந்திருக்கிறது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 70

# ஸ்ரீ வாமன் புவா படோத்கர்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட் வந்தடைந்து மூன்று வருடங்களுக்குப் பிறகு ஸ்ரீ வாமன்புவா பிரம்மச்சாரி படோத்கர் ஸ்ரீ ஸ்வாமிகளின் தரிசனத்திற்காக வந்தார். அவர் தன் சிறு வயதிலிருந்தே ஸ்ரீ தத்தாத்ரேயரின் பக்தராக இருந்தார். அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்த பின்னர் அங்கு வருடத்திற்கு இரண்டு அல்லது மூன்று முறை வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அவர் துறவிகள், யோகிகள், பிரம்மச்சாரிகள் மற்றும் பல புண்ணிய ஆத்மாக்களைச் சந்தித்து வேதாந்தத்தைப் பற்றி பலமுறை விவாதங்கள் செய்திருந்த போதும் அவருக்கு எவரிடமும் திருப்தி ஏற்படவில்லை.

ஒருமுறை புனேயில் உள்ள நானா நாட்டுவின் வீட்டில் இவர் கோபால்ராவ் தாதா நாட்டு, வெங்கடேஷ் தெலங் மற்றும் ஒரு புராணிக்குடன் துறவிகளின் கதைகளை பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். அப்போது ஒளிபொருந்திய பிராமணர் ஒருவர் அங்கு வந்து **"ஒரு சத்குருவின் ஆசீர்வாதம் இல்லையென்றால் அனைத்துமே வீண்தான்"** என்று கூறினார். உடனே வாமன்புவா, **"எவர் ஒருவர் என்னுடைய மனதை ஸ்திரப்படுத்துகிறாரோ அவரை நான் சத்குரு தத்தாத்ரேயராக ஏற்றுக்கொள்ளத் தயார். அப்படி ஒருவரை இன்று வரை என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை"** என்று கூறினார். அதற்கு அந்த பிராமணர், **"அக்கல்கோட் செல். ஸ்ரீ சமர்த்தர் உனக்கு சத்குருவின் தரிசனத்தை அளிப்பார். கண்டிப்பாக உனக்கு திருப்திகரமாக இருக்கும். உடனே கிளம்பு"** என்று கூறிவிட்டு அவர் மறைந்துவிட்டார். அவரை எங்கு தேடியும் கிடைக்கவேயில்லை. அனைவரும் **"அவர் சொன்னது உண்மையா என்று சென்று பார்த்துவிடலாம்"** என்றவாறு அக்கல்கோட் நோக்கிப் புறப்பட்டனர். அவர்கள் மார்கழி மாதம் பிரதமையன்று கிளம்பி சோலாப்பூரில் மோஹனிபுவாவை தரிசனம் செய்துவிட்டு அக்கல்கோட் நோக்கிச் சென்றனர்.

அக்கல்கோட் சென்றடைந்தவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் அங்கு இல்லை. அவர் எப்போதும் அலைந்து கொண்டே இருக்கும் பழக்கம் உடையவர் என்பதால்,அவர் அன்று வேறொரு கிராமத்திற்குச் சென்றிருந்தார். அடுத்தநாள்





அவர் இன்னும் இரண்டு கிராமங்களுக்குச் சென்றுவிட்டு அவர்களுக்கு பயோ நதிக்கு அருகில் தரிசனம் அளித்தார். அவர் அவர்களிடம், **"என்ன அந்த பிராமணனை கிண்டல் செய்கிறீர்கள்?"** என்று கேட்டவுடன் வாமன்புவாவுக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் தான் சத்குரு என்பதை இந்த குறிப்பால் உணர்த்துகிறார் என்பதை புரிந்துகொண்டார். அவர் நதியில் குளித்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு, **"ஸ்வாமி, என்னை ஆசீர்வாதம் செய்யுங்கள்"** என்று பிரார்த்தனை செய்துகொண்டவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் அவரிடம் அவதூத கீதையை தூக்கி எறிந்தார். **"எங்களுக்குச் சேவை செய். பிரம்மத்தின் மீது நம்பிக்கை ஏற்படும். உன்னுடைய மூட்டைகள் அனைத்தையும் என்னிடம் கொடுத்துவிடு"** என்று கூறினார். அவர் தன் கோவணத்தை மட்டும் அணிந்து கொண்டு மற்ற அனைத்து பொருட்களையும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன் சமர்ப்பணம் செய்துவிட்டார். பிறகு ஸ்ரீ ஸ்வாமிகள் அனைத்தையும் அவரிடமே அளித்துவிட்டார்.

பின்னர் வாமன்புவா கானகாபூர் சென்று ஸ்ரீ குரு சரித்திர பாராயணம் செய்தார். ஒருநாள் இரவில் அவருடைய கனவில் தத்தாத்ரேயர் தோன்றி ஒரு புத்தகத்தை அளித்துவிட்டு, **"அக்கல்கோட்டில் இருப்பது நான்தான். இனி உன் நேரத்தை இங்கு வீணடிக்காதே. பிராமணரைப் பற்றியும் நல்ல நேரத்தைப் பற்றியும் சிந்தனை செய்"** என்று கூறினார். அவர் சமாராதனை செய்துவிட்டு அக்கல்கோட் வந்து, ஸ்ரீ ஸ்வாமிகளை சந்தித்து அவரிடம், **"பிராமணர் யார்? நல்ல நேரம் என்ன?"** என்று கேட்டார். கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள், **"பக்ரிதி-புருஷா, பசுவுக்கு சேவைகள் செய்"** என்று பதிலளித்தார். அவர் புனேவில் உள்ள தன் தாய்க்கு சேவைகள் செய்துகொண்டு, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை வழிபட்டு வந்தார். அவர் வேதாந்த கிரந்தங்களை படித்துக் கொண்டு சந்தோஷமாக வாழ்ந்தார்.

### வாமன்புவாவின் நோயை குணப்படுத்துதல்

வாமன்புவா சில நோய்களினால் பாதிக்கப்பட்டிருந்தார். சக வருடம் *1798* (கி.பி.*1876*) முதல் அவருடைய நோய் கடுமையானது. அவர் இருமல், வயிற்றுப்போக்கு, கீல்வாதம், உடல் முழுவதும் சூட்டினால் உண்டாகும் எரிச்சல், கண் எரிச்சல், மூலம் போன்ற பல்வேறு நோய்களின் தொந்தரவினால் துன்பங்கள் அனுபவித்துக் கொண்டிருந்தார். அப்போது அவர் பரோடாவில் சூர்சாகர் நதிக்கரையில் வசித்து வந்தார். குடும்பத்தில் உள்ளவர்கள் அனைவரும்

இவர் படும் துன்பங்களைப் பார்த்து உணவுகூட உட்கொள்ள முடியாமல் தவித்துக் கொண்டிருந்தனர். அனைத்து வைத்தியர்களும் அவருடைய உயிருக்கு உத்தரவாதம் அளிக்கவில்லை. ஆனாலும் அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மீது கொண்டிருந்த பக்தியையும் நம்பிக்கையையும் இழக்கவில்லை. இவருடைய நிலைமையை அக்கல்கோட்டில் தெரிவித்தபோது, எல்லாம் சரியாகிவிடும் என்ற பதில் பிரசாதமாக கிடைத்தது. எந்த மருந்தைக் கொண்டு சோதனை செய்தாலும் நோயின் தாக்கம் அதிகரித்ததே ஒழிய குறைந்தபாடில்லை.

வாமன்புவா மிகவும் சமநிலையாக சிந்திக்கக் கூடியவர் என்பதால் இப்படிப்பட்ட மோசமான நிலைமையில் கூட தன் நம்பிக்கையை துளிகூட இழக்காமல், **“இது போன்றவைகளை எதிர்கொண்டால் மட்டுமே நம்முடைய கர்மாக்களை குறைக்க முடியும்”** என்று நம்பினார். நோயின் தாக்கம் உடலளவில் இருந்தாலும், அவருடைய மனம் எந்தவித பாதிப்பும் ஏற்படாமலே இருந்தது. இப்படிப்பட்ட மோசமான சூழ்நிலையில் உயிர் வாழ்வதைவிட தன் உயிரை மாய்த்துக் கொள்வதே மேல் என்று எண்ணியவாறு சூர்சாகர் நதிக்குள் இறங்கி பிராணாயாமம் செய்யலாம் என்ற முடிவுடன் வீட்டில் உள்ளவர்கள் அனைவரும் உறங்கிக் கொண்டிருக்கும் போது நதிக்கரைக்குச் சென்றார். அப்போது கருணையின் மறுவடிவமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அங்கு தோன்றி, அவரை பின்னோக்கி இழுத்துவிட்டு, அவரை இருமுறை கன்னத்தில் அறைந்தார். அவர் மிகுந்த அன்பும் அக்கறையும் நிறைந்த தொனியுடன், **“ஏ புத்திசாலி முட்டாளே! உனக்கு வாழ்க்கை இன்னும் இருக்கும் போது எப்படி அதை முடித்துக் கொள்ளும் எண்ணம் ஏற்பட்டது? இயற்கையான மரணத்தை வேண்டாம் என்று எண்ணிக்கொண்டு ஜலசமாதியை ஏன் தேர்ந்தெடுத்தாய்?”** என்று கூறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜே அவருடைய வீட்டுக்கு அழைத்து வந்தார். வாமன்புவாவின் மார்பை தன் திருக்கரங்களால் தடவிகொடுத்துக் கொண்டே, **“பொறுமையோடு இரு. நீ குணமடைவாய். இது போன்ற செயல்களை இனி செய்யாதே! அப்படி செய்தால் என்னுடைய பாதுகையில் கிடைக்கும் அடிஉதையை நீ தாங்கிக்கொள்ள நேரிடும்”** என்று கூறிவிட்டு கருணைக்கடலான, ராஜாதி ராஜனான, பக்தர்களின் கற்பகவிருக்ஷமான, யோகீஸ்வரரான, மூவுலங்கங்களிலும் திகழும் சந்தோஷமான ,பரப்பிரம்ம ஸ்வரூபமான, ஸ்ரீ சத்குருவான ,அனைத்தையும் அறிந்த ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அந்த இடத்தை விட்டு மறைந்து போனார்.




வாமன்புவாவின் அன்னையும், சகோதரரும் பூர்வஜன்ம புண்ணியங்களினால் இந்த அற்புதமான காட்சியை தொலைவிலிருந்து காணும் பாக்கியத்தை பெற்றனர். அச்சமயத்தில் புவா அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. பக்தனின் நலனுக்காக ஸ்ரீ ஸ்வாமிகள் எதுவேண்டுமானாலும் செய்வார் என்பதற்கு இதை விட வேறு ஏதாவது எடுத்துக்காட்டு வேண்டுமா என்ன? ஒருமாதத்திற்கும் மேல் தூக்கம் இல்லாமல் தவித்துக்கொண்டிருந்தவர் அன்றுதான் நிம்மதியாக உறங்கினார்.

அடுத்தநாள் காலையில் விழித்தெழுந்தபோது அவருடைய அநேக நோய்கள் குணமாகியிருந்தன. பத்துமணியளவில் அக்கல்கோட்டிலிருந்து பிரசாதம் வந்து சேர்ந்தது. சொர்ணப் புதையல் கிடைத்தால் அடையும் சந்தோஷத்தை காட்டிலும் அதிக சந்தோஷத்தை ஸ்ரீ ஸ்வாமியின் பிரசாதம் அவருக்கு அளித்தது. அனைத்து நோய்களும் சீராகி இருந்தபோதிலும் கீல்வாதம் இன்னும் குணமடையவில்லை. ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளான, **“குருக்ஷேத்திரத்திற்கு வந்தபிறகு அனைத்தும் சரியாகிவிடும்”** என்று கூறியதை நிறைவேற்றுவதற்காக ரயில் மூலம் அக்கல்கோட் வந்தடைந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் அப்போது அங்கு இல்லை. உடல் நிலையின் காரணத்தினால் ஸ்ரீ ஸ்வாமிகள் இருக்கும் இடத்திற்குச் செல்ல புவாவுக்கு சக்தியில்லை. அப்போது அந்த இடங்களிலெல்லாம் வறட்சி தலைவிரித்தாடிக் கொண்டிருந்தது. இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமிகளின் கருணையினால் ஸ்வாமி சமர்த்த சமாராதனை நடந்து கொண்டிருந்தது. தத்த ஜெயந்தியன்று மதியம் மூன்று மணியளவில் ஸ்ரீ ஸ்வாமிகள் அக்கல்கோட் வந்தடைந்தார். அவர் மடத்திலிருந்த ஒரு கட்டிலின் மீது அமர்ந்து கொண்டார். ஆயிரக்கணக்கான பக்தர்கள் அவரை சூழ்ந்திருந்த போதிலும், ஒரு சிப்பந்தியின் உதவியுடன் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகில் சென்று புவா தன் கைகளை கூப்பியவாறு நின்றுகொண்டிருந்தார். மஹராஜ் அவரிடம், **“ஒருவன் குட்டையில் விழுந்து உயிரைவிட எண்ணினானே அது நீ தானா? உன்னுடைய சூர்சாகர் இப்போது வறண்டுவிட்டதா?”** என்று கூறிக்கொண்டே வயிறு குலுங்க சிரித்தார். இப்படிப்பட்ட கருணை நிறைந்த வார்த்தைகளை கேட்டால் யாருக்குத்தான் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தை பற்றிக்கொண்டு கதறி அழ வேண்டும் என்று தோன்றாது?

அப்போது அக்கல்கோட்டில் பஞ்சம் தலைவிரித்தாடிக் கொண்டிருந்தது. இருப்பினும் பக்தர்கள் கூட்டத்திற்குக் குறைவே இல்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கஜானாவில் பண இருப்பு குறைவாக இருந்ததால், தத்த ஜெயந்தியன்று தயாரிக்கப்படும் உணவு மிகவும் எளிமையாக இருக்கட்டும் என்று ஊர்மக்கள்

முடிவு செய்தனர். அப்போது அங்கு வந்த மஹராஜ், **"உங்கள் தந்தைக்கு எளிமையான உணவுகளை செய்தால் போதுமானது. ஆனால் நெய் மற்றும் வெல்லம் உணவில் அதிக அளவில் இருக்கட்டும்"** என்று கூறியதைக் கேட்டு அனைவரும் ஆச்சரியத்தில் மூழ்கினர். இது போன்று தான் அனைத்தையும் அறிந்தவர் என்பதை ஸ்ரீ ஸ்வாமிகள் பலமுறை உணர்த்தியிருந்தாலும், அவ்வாறு ஒவ்வொரு முறை நிகழும் போதும் பக்தர்களின் ஆச்சரியம் குறைவதே இல்லை. இதுவும் கூட அற்புதமல்லவா? அடுத்தநாள் காலையில் வட்டிக்காரர் ஒருவர் வந்து **"உங்களுக்கு வேண்டுமளவுக்கு எடுத்துக்கொள்ளுங்கள்"** என்று பூரண் போளியை அளித்தார். பஞ்சத்தின் காரணத்தால் பலர் வந்து திருப்திகரமாக போளியை எடுத்துக் கொண்டனர். அடித்தட்டு மனிதனுக்கு கூட திருப்திகரமாக உணவு கிடைத்தது. வாமன் புவாவின் கீல்வாதமும் எட்டு நாட்களில் குணமடைந்தது. அவர் தன் சொந்த ஊருக்குத் திரும்பினார்.

**வாமன்புவாவின் யோகக்கலை**

வாமன்புவா பிராணாயாமத்தை தினசரி பயிற்சியாக செய்து கொண்டிருந்தார். ஒருமுறை அக்கல்கோட் செல்வதற்காக கடாப்காவ் ரயில்நிலையத்தில் வந்திறங்கிய போது அவருடைய மூச்சுக்காற்றை கவனித்தார். அது சூரியநாடியில் இருந்ததால், பூமியின் தன்மையை வெளிப்படுத்திக் கொண்டிருந்தது. ஒரு சத்குருவை தரிசனம் செய்யும்போது மூச்சுக்காற்று சந்திர நாடியில் நீரின் தன்மையுடன் இருக்க வேண்டும் என்பது அவருடைய நம்பிக்கை. அவர் மூச்சுக்காற்றை அவ்வாறு மாற்ற எவ்வளவோ முயற்சி செய்தும் அப்படி மாறவில்லை. இது ஏன் இப்படி நடக்கிறது என்கிற குழப்பத்துடன் ஒரு குதிரைவண்டியில் ஏறி அக்கல்கோட் சென்றடைந்து அங்குள்ள ராமச்சந்திர கோவிலுக்குச் சென்று மீண்டும் தன் மூச்சுக்காற்றை ஆராய்ந்தார். அதில் எந்தவித மாற்றமும் இல்லாததை அறிந்துகொண்டு, எவருக்கும் தெரியாமல் தனது வலது நாசியில் சிறிய பஞ்சை சுருட்டி அடைத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்தார். அப்போது அவரை சுற்றிலும் பலர் இருந்தனர். புவா தன் கைகளை கூப்பிக்கொண்டு நின்றுகொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் வலது நாசியை அழுத்திக்கொண்டு, **"என்ன செய்வது? சத்குருவை தரிசனம் செய்யும் போது சந்திர நாடி இருக்க வேண்டாமோ? முதலில் உன் நாசியிலிருந்து பஞ்சை வெளியே எடு. வாயுவை தடுத்தால் என்னவாகும்! மூக்கு வழியாக அது வெளியேற முடியவில்லை என்றால் அது வேறு ஏதாவது வழியில், வாய்**





**மூலமாகவோ ஆசனவாய் மூலமாகவோ வெளியேறப் போகிறது! தவறான வழிகளை பின்பற்றாதே! சௌகரியம் போல இரு! அதுதான் சந்தோஷம்**" என்றார்.

ஸ்ரீ ஸ்வாமிகளின் அருளுரையை கேட்டவுடன் புவா தனது நாசியிலிருந்து பஞ்சை எடுத்து எறிந்துவிட்டு, "**என்னால் சத்குருவுடைய அனுபவங்களை பெற இயலாதோ என்கிற சந்தேகத்தில் இவ்வாறு பஞ்சை நாசியினுள் உருட்டி வைத்துக் கொண்டேன். சத்குருவின் அருள் அதை வெளியே தூக்கி எறியும்படி உணர்த்திவிட்டது. இப்போது என்னுடைய சந்தேகங்கள் அனைத்தும் தீர்ந்த்து விட்டன**" என்றார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் அவரிடம், "**ஏய்! ஆத்மாவில் சூரியனோ சந்திரனோ இல்லை. உதிப்பது மறைவது போன்றவை கிடையாது**" என்றார்.

ஆன்மிகம் என்பது, நாம் வாழும் வாழ்க்கையை அந்த நொடியில் முழுமையாக தங்களுடைய தோளில் சுமந்து கொள்ள வேண்டும் என்பதே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஆணை. ஒரு பக்தன் தான் மேற்கொள்ளும் ஆன்மிகப் பாதையில் தன்னை முழுமையாக தாழ்த்திக் கொண்டு (அஹங்காரம் இல்லாமல்) சரியான பாதையில் பயணிக்கும் போது அவனுக்குச் சரியான வழிகாட்டுதல் கிடைக்கும் என்பதே இந்த நிகழ்ச்சியின் மூலம் ஸ்ரீ ஸ்வாமிகள் நமக்கு உணர்த்துகிறார்.

**யோக சாஸ்திரத்தில் சந்தேகங்களை தீர்த்து வைத்தல்**

ஒருநாள் சக வருடம் *1794* (கி.பி.*1872*) இல் வாமன்புவா அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தார். புவா நமஸ்கரித்துவிட்டு தன் கைகளை கூப்பிக்கொண்டு ஸ்ரீ ஸ்வாமியின் முன் நின்றுகொண்டிருந்தார். திடீரென மஹராஜ் கடுமையான தொனியில், "**வலுவிழந்த மண்பானை ஒன்று இன்றைக்கு வலுபெறப்போகிறது. ஏ! மாதர்சோத், இவ்வளவு நாட்களாக ஏன் வரவில்லை? முதலில் இங்கிருந்து கிளம்பு!**" என்று உரக்கமாக கூறினார். நரசிம்மரின் உக்ரஹத்தோடு இவ்வாறு கூறியவுடன் வாமன்புவா பயத்தில் நடுங்கிக்கொண்டு, "**நான் 600 மைல்கள் கடந்து உங்களை தரிசனம் செய்வதற்காக வந்துள்ளேன். நான் தண்ணீர் அருந்துவதற்குக் கூட ஒரு நொடி ஓய்வு எடுக்கவில்லை. எனக்கு தரிசனம் பெறும் பாக்கியம் இல்லையா? நான் அப்படியென்ன தவறு செய்துவிட்டேன்! என்னை மஹராஜ் திருப்பி அனுப்பிவிட்டாரே!**" என்று மனதில் எண்ணியவாறு குருவின் வாக்கை மீறக்கூடாது என்பதால் அழுதுகொண்டே சென்றார். எங்கு செல்வது என்பது தெரியாமல் கால் போன போக்கில் சென்று கொண்டிருந்தார்.

சத்குரு கருணைக் கடலாயிற்றே, வாமான்புவாவின் மீது இரக்கம் கொண்டு மார்தாண்டராவ்வையும் இன்னொருவரையும் அனுப்பி, **"உடனடியாக வாமன்புவாவை அழைத்துவா!"** என்று கூறியனுப்பினார். இருவரும் உரத்த குரலில் அழைத்தவாறு ஓடோடி வந்து, **"ஏ! புவா, ஸ்வாமி உன்னை மீண்டும் வருமாறு அழைக்கிறார். சீக்கிரம் வாரும்"** என்று கூறியவுடன் புவாவின் மனது நிம்மதி அடைந்தது. புவா மீண்டும் ஸ்வாமியின் முன்னால் பவ்வியமாக கைகளை கூப்பிக்கொண்டு நின்றிருந்தார். **"நான் உன் மனதை சோதனை செய்தேன். நீ இப்போது உறுதியானவனாகிவிட்டாய். இந்தமுறை யோக வித்யாவைப் பற்றி சில கேள்விகள் கேட்கவேண்டும் என்று தானே வந்தாய்? ஆனால் கேட்காமலேயே செல்கிறாயே!"** என்று ஸ்ரீ ஸ்வாமிகள் வினவினார். இதைக் கேட்டவுடன் புவா அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. உடனே மஹராஜ் சோளப்பாவை பார்த்து, **"என்ன பார்த்துக்கொண்டிருக்கிறாய்? என்னுடைய உணவுத்தட்டை அவனிடம் கொடு"** என்றார். புவா சந்தோஷமாக உணவை உண்டார்.

அடுத்தநாள் காலையில் ஸ்ரீ ஸ்வாமிகள் யோகத்தை பற்றிய கேள்விகளுக்கு விரிவான பதில்களை அளித்தார். ஒருவர் மிகப்பெரிய அதிர்ஷ்டம் செய்திருந்தால் மட்டுமே ஸ்ரீ ஸ்வாமிகளைப் போன்று ஒரு சத்குரு கிடைக்கப்பெற்று, எடுத்துக்காட்டுடன் சந்தேகத்தை தீர்த்துக்கொள்ள முடியும். சிலசமயம் மஹராஜ் பின்வருமாறு கூறுவார்: **"கடல் நிறைந்திருக்கிறது. எவ்வளவு வேண்டுமோ எடுத்துக்கொள். விவசாய நிலத்தை உழுதபின் சாப்பிடு"** என்பார். இதன் பொருள் என்னவென்றால் **"உடல் என்னும் விவசாய நிலத்தை உழுத பின்னர்தான் விதை விதைக்க வேண்டும். அப்போதுதான் அந்த அளவிற்கு பலனளிக்கும்"** என்பதாகும்.

வாமன்புவா என்னும் பரம பக்தருக்கு அருள் புரிந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் விரிவாக நாம் அறிந்து கொண்டோம். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒவ்வொருவருடைய தேவைகளுக்கேற்ப, அவர் தன் தன்மைகளை மாற்றிக்கொண்டு அருள் புரிவதை அறிந்து கொள்ளும் போது, நம் மனதில் அவர் மீது ஏற்படும் பக்தி அதிகரிக்கத்தான் செய்கிறது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

 

## அத்தியாயம் 71

# சரஸ்வதி என்னும் பக்தை

அக்கல்கோட்டில் பொற்கொல்லர் ஜாதியைச் சேர்ந்த பெண் ஒருத்தி இருந்தாள். அவளுடைய பெயர் சரஸ்வதி. அவள் ஸ்ரீ ஸ்வாமியின் அருளை முழுமையாக பெற்றிருந்தாள். அவள் சிலசமயம் குலுங்கிக் குலுங்கி அழுது கொண்டே ஜனாபாயின் அபங்கங்களை பாடுவாள். பைத்தியம் போல தெருக்களில் அலைந்து கொண்டிருப்பாள். அவள் கந்தல் துணி மூட்டைகளையும் மண் பானையையும் எப்போதும் வைத்துக் கொண்டிருப்பாள். அவளால் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் பேசுவதை புரிந்து கொள்ள முடியும் (ஸ்ரீ ஸ்வாமிகள் பேசுவதை அவருடைய நெருங்கிய பக்தர்களால் மட்டுமே புரிந்துகொள்ள முடியும்). சில சமயம் ஸ்ரீ ஸ்வாமிகள் வெகு நேரத்திற்குக் கோபம் தணியாமல் இருந்தால், பக்தர்கள் மான்யபாவையும் சரஸ்வதியையும் அழைத்து வந்து பஜன்கள் பாடிக்கொண்டே ஆட வைப்பார்கள். இந்த நிகழ்ச்சியைப் பார்த்தால் மஹராஜ் குலுங்கிக் குலுங்கி சிரிப்பார். அப்போது அவருடைய வயிறும் அவர் அமர்ந்திருக்கும் கட்டிலும் சேர்த்து குலுங்கும். இது போல ஒன்று அல்லது இரண்டு மணி நேரங்களுக்குத் தொடரும்.

ஒருமுறை நரசோபவாடியில் இருந்து வந்திருந்த பக்தர் ஒருவர் ஸ்ரீ ஸ்வாமிகளை பார்த்து, **"ஸ்வாமி, தயவுகூர்ந்து எங்களிடம் நீங்கள் யார் என்று கூறுங்கள்"** என்று கேட்டார். **"மூலம் ஆண், மரம் ஆலமரம், தத்த நகரம்"** என்று கூறினார். இதைக்கேட்ட பெண் பொற்கொல்லரான சரஸ்வதி, **"ஆலமரத்தின் நிழலில் வாசம் செய்யும் மூலம், இங்கு தத்தாத்ரேயராக அவதரித்துள்ளார்"** என்று கூறினாள். அவள் எப்போதும் பிக்ஷை எடுத்துதான் உண்பாள். அச்சமயங்களி லெல்லாம் பத்து அல்லது பன்னிரண்டு நாய்கள் அவளைச் சூழ்ந்திருக்கும். அவை அனைத்திற்கும் அவள் உணவளிப்பாள். குழந்தைகள் அனைவரும் அவளை கிண்டல் செய்வார்கள். சிலர் அவள் மீது மண்ணை வாரி இறைப்பார்கள். அவள் தனக்கு பின்னால் குச்சிகளை சொருகிக்கொண்டு விளையாடுவாள். இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சரஸ்வதியின் மீது அதீத அன்பு இருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு எவரிடமாவது வெறுப்பு என்பது உண்டா என்ன? தீயவர்களைக் கூட நல்வழிப்படுத்துவது தானே அவருடைய சுபாவம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 72

# கார்வேயின் சந்தேகம்

புனேயில் இருந்து கார்வே என்றொருவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்திருந்தார். அவர் அங்கு இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு தங்கியிருந்து விட்டு, ஸ்ரீ ஸ்வாமிகளிடம் "மஹராஜ், உங்களுடைய ஜாதி என்ன?" என்று கேட்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **"நான் ஒரு யஜுர்வேதி பிராமணன். பெயர்: நரசிம்மபான். காஸ்யப கோத்திரம், மீன ராசி. இன்னொரு முறை இதைப்பற்றிக் கேட்டாயானால் என்னுடைய பாதுகைகளைக் கொண்டு அடிப்பேன். ஆமாம்! உன்னுடைய அதிபுத்திசாலி மகள் எவனோ ஒருவனோடு புனேயில் சுற்றிக்கொண்டிருந்தாளே! அப்படியென்றால் அவளுடைய ஜாதி என்ன?"** என்று கேட்டார். இதைக் கேட்டவுடன் கார்வே கூனிக்குறுகி அழுதுகொண்டே தன்னை மன்னிக்குமாறு ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்துவிட்டு, "நீங்கள் பரப்பிரம்மத்தின் அவதாரம் என்பதில் துளியும் சந்தேகமும் இல்லை. என்ன செய்வது? அவமானப்படுவதை விட சாவதே மேல்" என்றார். கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள், "ஏன் அழுகிறாய்? ஹோலிப் பண்டிகையை சென்று சந்தோஷமாக கொண்டாடு" என்று கூறி அவரை புனேவுக்கு அனுப்பி வைத்தார். பின்னர் ஹோலிப் பண்டிகையின் போது அவருடைய மகள் இறந்துவிட்டாள். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் கூறியபடியே அனைத்தும் நடந்தேறியது. விதியை யாரால்தான் மாற்ற முடியும்? அனுபவிக்க வேண்டியதை அனுபவித்துதானே ஆகவேண்டும்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**





## அத்தியாயம் 73

# ரங்கபஞ்சமி

ரங்கபஞ்சமி நெருங்கிக்கொண்டிருந்தது. அதை பற்றி விவாதிப்பதற்காக அரசர் அரசவையைக் கூட்டியிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அப்போது சிந்தோபந்த் டோலின் வீட்டில் இருந்த காரணத்தினால் அவரால் சரியான நேரத்திற்கு அரசவை கூட்டத்திற்குச் செல்ல முடியவில்லை. அதனால் அரசர் அவரை கையோடு அழைத்து வருமாறு ஆள் அனுப்பியிருந்தார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமிகளின் கட்டளையோ வேறுவிதமாக இருந்தது. அவர் டோலை வீட்டை விட்டு எங்கும் செல்லக்கூடாது என்று கூறினார். டோல் அரசரின் அதிருப்திக்கு ஆளாகிவிடுவோமோ என்று பயந்து கொண்டிருந்தார். இரண்டாவது முறையாக மீண்டும் அழைப்பு வந்தபோதும் ஸ்ரீ ஸ்வாமிகள் அனுமதி அளிக்கவில்லை. டோல் என்ன செய்வது என்பது புரியாமல் தடுமாறிக் கொண்டிருந்தார். மூன்றாவது முறையாக அழைப்பு வந்தவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள், **"வெளியே அமர்ந்துகொண்டு, சீக்கிரம் வர வேண்டும் என்று கட்டளை இடுகிறாயா"** என்று கோபமாக கூறிக்கொண்டே சிந்தோபந்தைப் பார்த்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் பரம பக்தர் என்பதால் அன்று ஏதோ விபரீதமாக நடைபெறப்போகிறது, அதனால்தான் செல்ல அனுமதிக்கவில்லை என்று எண்ணிக்கொண்டார். மன்னரின் அதிருப்திக்கு ஆளானாலும் பரவாயில்லை அன்று அரசவைக்குச் செல்ல வேண்டாம் என்று முடிவு செய்து கொண்டார்.

ஸ்ரீ கோபால் ஜோஷி ஹிரால்கர் அப்போது வந்திருந்த காவலாளியிடம், **"அரசர் எங்கு அமர்ந்திருக்கிறார்?"** என்று கேட்டார். அதற்கு அவன், **"மன்னர் அரண்மனைக்கு வெளியில் உள்ள பெரிய திண்ணையில் அமர்ந்திருக்கிறார்"** என்று கூறினான். இதனால்தான் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **"வெளியே அமர்ந்துகொண்டு கட்டளையிடுகிறாய்"** என்று கூறினார் என்பதை புரிந்து கொண்டார்.

அரசவையில் கண்பத்ராவ் கண்டாகலேவுடைய கத்தி முனை கண்பத்ராவ் பஸ்தேவின் தலைப்பாகையின் மீது பட்டு விட்டதால் அவருடைய தலைப்பாகை கீழே விழுந்துவிட்டது. அது அவருக்கு அவமானத்தை ஏற்படுத்திவிட்டது




என்று எண்ணிக்கொண்டு கண்பத்ராவ் கண்டாகலேவுடன் சண்டைக்குச் சென்றார். இருவரும் தங்கள் கத்தியை எடுத்துக்கொண்டு அங்கேயே சண்டையிட்டுக் கொண்டனர். மற்றவர்கள் அவர்களை சமாதானம் செய்வதற்குள் ஒருவழி ஆகிவிட்டது. இதனால் அரசவை கூட்டம் மிகவும் கைகலப்புடன் முடிந்தது. அனாவசியமாக கைகலப்பில் ஈடுபட்டதால் அரசர் பஸ்தேவை அக்கல்கோட்டை விட்டுச் செல்லுமாறு ஆணை பிறப்பித்தார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் தன் பக்தர்களுக்கு ஒன்றை தடுத்தால் கூட அதில் ஆயிரம் காரணம் இருக்கும் என்பதற்கு இந்த நிகழ்ச்சி ஒரு எடுத்துக்காட்டு. ஆகவே, நமக்கு எது கிடைத்தாலும் அல்லது கிடைக்காவிட்டாலும் அதை ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆணை என்று ஏற்றுக்கொள்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**



## அத்தியாயம் 74

# சோலாப்பூரைச் சேர்ந்த நாராயண் பட்

எவர் ஒருவர் தன்னைப் பற்றி அவதூறாக பேசுகிறார்களோ, அவர்களை தன்னுடைய பரமபக்தராக மாற்றிக்கொள்வதில் ஸ்ரீ ஸ்வாமிகள் கைதேர்ந்தவர். அவர்களை கிண்டலாக அவமானப்படுத்தி தன்வசம் இழுத்துக் கொள்வார். அதற்கு எடுத்துக்காட்டாக இந்த நிகழ்ச்சியை காணலாம். சோலாப்பூரில் வசித்து வந்த நாராயண் பட் அவ்வப்போது அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வார். ஆனால் அவருக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் மீது துளியும் பக்தி கிடையாது. அவர் மற்றவர்களிடம், **"பார், இவர் ஒரு சாமியார், ஆனால் எங்கு வேண்டுமானாலும் சாப்பிடுகிறார். சடங்குகளை மதிப்பதில்லை, சுத்தம்-அசுத்தத்திற்கு வேறுபாடுகள் இல்லை. இவர் எப்படி துறவியாக இருக்க முடியும்?"** என்று கூறுவார்.

ஒருநாள் அவர் சோலாப்பூர் செல்வதற்கு முன்னர் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வது போல அவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காகச் சென்றார். தரிசனம் செய்துவிட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். அவரிடம் ஸ்ரீ ஸ்வாமிகள், **"போய் அழு!"** என்றார். ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியதைப் பற்றி எதுவுமே யோசிக்காமல் அந்த பிராமணர் சோலாப்பூர் சென்றடைந்தார். அவர் வீட்டுக்கு வந்தவுடன் அவர் வீட்டில் 3000 முதல் 4000 ரூபாய் வரை களவு போயிருந்தது தெரிந்தது. எவ்வளவு விசாரித்த போதும் சரியான துப்பு கிடைக்கவில்லை. உடனே அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வார்த்தைகளை நினைத்துக் கொண்டார். பரப்பிரம்மமே தனக்கருகில் இருந்தபோதிலும் அவரையும், அவருடைய வார்த்தைகளையும் உண்மை என்று உணர்ந்து கொள்ள முடியாத முட்டாளாக இருந்து விட்டோமே என்று தன்னை நொந்து கொண்டார். பிறகு அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை சந்தேகப்படும் எண்ணத்தை மாற்றிக்கொண்டு பரம பக்தராக மாறினார்.

இது ஒரு சிறிய லீலையாகத் தெரிந்தாலும் அதில் அடங்கியிருக்கும் அறிவுரை மிகவும் நுட்பமானது. சந்தேகத்துடன் இருக்கும் ஒருவரை தன்வசம் இழுத்துக் கொள்ளும்போதுதான், குருவின் உண்மையான சக்தி அனைவருக்கும்

வெளிப்படும். ஸ்ரீ ஸ்வாமியால் முடியாது என்பதே கிடையாது! அப்படியிருக்க, அவர் நினைத்தால் அந்த நொடியே அந்த பக்தனிடம் தன் பராக்கிரமங்களை வெளிப்படுத்தி தன் பக்தனாக மாற்றிக் கொண்டிருக்கலாம். ஆனால் அப்படி செய்யாமல் அவருக்கு ஒரு இக்கட்டான நிலையைக் கொடுத்து, அதை முன்கூட்டியே அவருக்கு உணர்த்தவும் செய்து பின்னர் தன்வசம் இழுத்துக் கொள்ளும்போது, பக்தன் மாயாஜாலங்கள் என்னும் மாயையை நம்பாமல், குருவின் உண்மையான சக்திகளை உணர்ந்து கொள்வான். ஆகவே குருவின் ஒவ்வொரு செயலுக்கும் ஏதோ ஒரு காரணம் உண்டு என்கிற நம்பிக்கையுடன் அவரிடம் முழுமையாக சரணடைவோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## *அத்தியாயம் 75*

# பஞ்சதசியின் அர்த்தத்தை விளக்குதல்

அக்கல்கோட்டில் உள்ள ரேம் ஜோஷிபுவாவின் வீட்டில் பஞ்சதசி என்றொரு புனித நூல் இருந்தது. அந்த புத்தகத்தை பண்டிதர்களான கண்பத்ராவ் ஜோஷி, கோபால் ஜோஷி, ஜெயதீர்த் புராணிக் போன்றோர் எப்போதும் பாராயணம் செய்வர். ஒருநாள் அப்படி பாராயணம் செய்து கொண்டிருந்தபோது, அங்கிருந்த எவருக்கும் அதன் வியாக்கியானத்தை சரியாக அளிக்க முடியவில்லை. அதனால் அவர்கள் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் சென்று சரியான தெளிவை பெறலாம் என்று எண்ணினர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்துவிட்டு அவருக்கு அருகில் அமர்ந்தவுடன், எந்த ஸ்லோகத்தின் விளக்கத்தை அவர்கள் தெரிந்து கொள்வதற்காக வந்தனரோ அதை ஸ்ரீ ஸ்வாமிகள் அடிமாறாமல் கூறினார். பின்னர் அதன் வியாக்கியானத்தை அவர்களுக்கு தெளிவாக எடுத்தியம்பினார். ஸ்ரீ ஸ்வாமிகளின் அபார சக்தியை எண்ணி அனைவரும் பூரித்தனர். ஒருவர் எளியவர் என்றால் அதற்கு தகுந்த மாதிரியும், ஒருவர் பண்டிதர் என்றால் அதற்கு தகுந்த மாதிரியும் நடந்துகொள்வதில் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு இணை அவர் மட்டுமே!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**







## அத்தியாயம் 76

# மரப்பலகையில் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதுகை

ஒருமுறை சிந்தோபந்த் டோல் தினமும் விஷ்ணு பஞ்சாயதன பூஜை செய்து ஒரு கோடி துளசி இலைகளை சமர்ப்பணம் செய்வதாக பிரார்த்தனை செய்து கொண்டார். அதற்காக தினமும் அவர் வீட்டில் அந்த பூஜையை தவறாமல் செய்து வந்தார். அச்சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அவருடைய வீட்டுக்கு வந்தால் அவருடைய பாதங்களில் துளசியை சமர்ப்பணம் செய்து விடுவார். ஒருநாள் சிந்தோபந்த் டோல் சஹஸ்ரநாமம் சொல்லிவிட்டு தூப தீப ஆராதனை செய்து, நைவேத்தியங்களை முறையாக ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு படைத்துவிட்டு, **"ஸ்வாமி, என்னுடைய வழிபாட்டிற்காக தினமும் உங்களுடைய பாதுகைகள் வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். அதற்கு மஹராஜ், **"சரி, உன் விருப்பம் போல் நடக்கும்"** என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டார். சிறிது நேரத்திற்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் எந்த மரப்பலகையில் அமர்ந்திருந்தாரோ அதன் மீது மஞ்சள் நிறத்தில் பாதங்கள் தோன்றியிருந்தன. அது பார்ப்பதற்கு ஒரு மணலில் பதிந்த மனிதனின் பாதங்களைப் போலவே இருந்தது. இதைப் பார்த்தவுடன் டோல் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். ஸ்ரீ ஸ்வாமி தனது பிரார்த்தனையை நிறைவேற்றி விட்டதால், தினமும் பக்தியுடன் வழிபட வேண்டும் என்று முடிவு செய்தார். அந்த பாதங்களின் தடத்தை எந்த வஸ்துவைக் கொண்டும் அழிக்க முடியவில்லை. இப்போதும் அந்த மரப்பலகை அக்கல்கோட்டில் உள்ள ஜோஷி மடத்தில் இருக்கிறது. தினமும் நூற்றுக்கணக்கான பக்தர்கள் இந்த பாதுகைகளை தரிசனம் செய்து வருகின்றனர்.

### ஜோஷி மடம் உருவான கதை

ஜோஷியுடைய வீட்டின் வடக்கு பகுதியில் ஒரு வெற்று நிலம் இருந்தது. அந்த இடத்தில் ஒரு அத்தி மரமும் அதற்கருகில் ஒரு கிணறும் இருந்தது. சில சமயம் ஸ்ரீ ஸ்வாமிகள் இந்த மரத்தின் கீழ் வந்து அமர்ந்து கொள்வார். ஒருமுறை ஸ்வாமி பக்தர்களான கோபால் பட் மற்றும் மிராஜ்கர் ஆகிய இருவருக்கும் பாதுகைகள் பொறிக்கப்பட்டிருக்கும் மரப்பலகையை இந்த

மரத்தின் கீழ் ஸ்தாபித்து, ஒரு மடத்தை இங்கு நிறுவ வேண்டும் என்று விரும்பினர். இதைச் செய்ய நம்மிடம் நிதி வசதி இல்லையே என்று இருவரும் குழம்பிக்கொண்டிருந்த போது ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அவர்களிடம், **"மாளிகையை கட்டி பாதுகைகளை பிரதிஷ்டை செய்யுங்கள்"** என்றார். உடனே அவர்கள், **"பணத்திற்கு என்ன செய்வது?"** என்று கேட்டனர். **"போய் பிக்ஷை எடுங்கள். உங்களுக்கு தேவையான பணம் கிடைக்கும்"** என்றார்.

குருவின் வாக்கை மீறாமல் அவர் கூறியபடியே அக்கம்பக்கத்து கிராமங்களிலிருந்து 4000 முதல் 5000 ரூபாய் வரை கோபால் பட் வசூல் செய்தார். ஆயிரம் ரூபாய் அக்கல்கோட்டிலேயே வசூல் செய்தார். பஞ்சாயத்து அதிகாரிகளின் உதவியுடன் மடம் கட்டப்பட்டது. சாஸ்வத்கர் சாஸ்திரி போன்ற பண்டிதர்களைக் கொண்டு பாதுகைகளுக்கு செய்ய வேண்டிய பூஜைகளை செய்தார். இந்த வழிபாடுகள் தொடங்கிய நாளன்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரே அங்கு வந்து, **"ஸ்ரீமன் மஹாகணபதியே நம: நிர்விக்னமஸ்து"** என்று கூறி தொடங்கி வைத்தார். பூஜை சடங்குகள் முடியும் வரை அவர் அங்கேயே இருந்தார். விஷ்ணு பஞ்சாதயனம் செய்யப்பட்டது. பந்தல் வேலைகளுக்கு பலநாள் ஆனது. சிறந்த பக்தரான ஸ்ரீ விநாயக் வாசுதேவ் அக்கல்கோட்டுக்கு வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அவர் 8000 ரூபாய் செலவு செய்து பந்தல் ஏற்பாடு செய்தார். ஜோஷி மடம் சிறப்பாக உருவாகியிருந்தது.

தொடக்கத்தில் இந்த மடத்தை எப்படி உருவாக்குவது என்கிற குழப்பம் அனைவருக்கும் இருந்தபோது, ஸ்ரீ ஸ்வாமிகள் அளித்த ஊக்கம் மற்றும் அருளாசியால் அனைத்து வேலைகளும் எந்தவித தடையுமில்லாமல் நடைபெற்று முடிந்தது. இன்றும் நாம் அக்கல்கோட் செல்லும்போது ஜோஷி மடத்தை தரிசனம் செய்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய அருளாசியைப் பெற்றுக் கொள்ளலாம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**





## அத்தியாயம் 77

# ஒன்று, இரண்டு, மூன்று...

அது மொஹரம் பண்டிகைச் சமயம். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் காஜா பிர் தர்காவில் அமர்ந்திருந்தார். அப்போது அவரைச் சுற்றி பல பக்தர்கள் அமர்ந்திருந்தனர். ஸ்ரீ ஸ்வாமிகள் குழந்தை போல பல லீலைகள் செய்து கொண்டிருந்தார். அரண்மனையிலிருந்து வந்த ஒரு இஸ்லாமியத் துறவி ஒரு தட்டை எடுத்துக் கொண்டு பிக்ஷை எடுத்துக் கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை கண்டவுடன் அவரை வணங்குவதற்காக அவருக்கருகில் வந்தார். அக்கல்கோட்டில் வசிப்பவர்கள் அனைவரிடமும் ஒரு பழக்கம் இருந்தது. அவர்கள் முஸ்லிம்களாக இருந்தாலும், தாழ்த்தப்பட்டவர்களாக இருந்தாலும், எவ்வளவு வசதியானவர்களாக இருந்தாலும், தாங்கள் செல்லும் வழியில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை கண்டுவிட்டால் அவரை தரிசனம் செய்யாமல் செல்ல மாட்டார்கள். அக்கல்கோட் வாசிகள் உண்மையிலேயே பாக்கியசாலிகள்!

அந்த இஸ்லாமியப் பணியாள் தான் கொண்டுவந்த பிக்ஷை பாத்திரத்தின் மேல் துணியால் மூடினான். ஸ்ரீ ஸ்வாமிகள் அதை எடுத்து திறந்து பார்த்தபோது அதில் சில சில்லரைக் காசுகள் இருந்தன. அதை எடுத்து ஸ்ரீ ஸ்வாமிகள் ஒன்று,இரண்டு, மூன்று... என எண்ணத் தொடங்கினார். அதை எண்ணிவிட்டு மீண்டும் அந்த பாத்திரத்தினுள்ளேயே போட்டார். அவ்வாறு பலமுறை செய்து கொண்டே இருந்தார். இதேபோல் சிறிது நேரத்திற்கு தொடர்ந்தது. எண்ணிக்கையின் அளவு அதிகரித்துக் கொண்டே வந்து, 16, 17, 18... எனச் சென்றது. இதை பார்த்தவர்கள் அனைவரும் ஆச்சரியம் அடைந்தனர். அந்த இஸ்லாமியப் பணியாள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **“மஹராஜ், காசுகள் வருகின்றன”** என்றான். மீண்டும் அவற்றைப் பார்த்த போது அவை ஐந்து அல்லது ஆறாக குறைந்து விட்டது.

இந்த லீலையின் அர்த்தம் என்ன? அனைத்துமே மாயை என்பதை இவ்வாறு விவரிக்கிறாரோ? இதன் அர்த்தம் என்னவாக இருந்தாலும் அவரவர்களுடைய நிலையை பொருத்து மாறுபடுமல்லவா! அவருடைய லீலைகளின் உண்மையான அர்த்தத்தை யாரால்தான் சரியாக விளக்க முடியும்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 78

# ஸ்ரீ ஸ்வாமியின் கட்டளையை மீறக்கூடாது

### கணேஷ் ஹரி சோஹானி

கணேஷ் ஹரி சோஹானியுடைய இரண்டாவது மனைவி இறந்தவுடன் அவர் மூன்றாவது முறையாக திருமணம் செய்து கொள்ள விரும்பினார். அவர் ஸ்ரீ ஸ்வாமியின் பக்தராதலால் அவரிடம் அனுமதி பெற்ற பிறகு திருமணம் செய்து கொள்ளலாம் என்று எண்ணினார். அந்த நோக்கத்துடன் அக்கல்கோட் வந்தடைந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்துவிட்டு அவரிடம், **"ஸ்வாமி, நான் திருமணம் செய்து கொள்ளலாமா, வேண்டாமா?"** என்று கேட்டார். மஹராஜ் அதற்கு, **"வேண்டாம்!"** என்று பதிலளித்தார். அவர் காலியான புகைக்குழாயை தன் சேவகனிடமிருந்து பெற்றுக்கொண்டு அதில் நெருப்பு பற்ற வைத்து புகைக்கத் துவங்கினார். திருமணத்தின் மூலம் சந்தோஷம் கிடைக்காது என்பதை உணர்த்துவதற்காக இவ்வாறு நடந்து கொண்டார்.

சோஹானி பின்னர் பரோடாவுக்கு சென்றுவிட்டார். காம இச்சை நிறைந்தவன் துறவியின் வார்த்தைகளுக்குக் கட்டுப்படுவானா? அவர் ஒரு அழகான பெண்ணை மணந்து கொண்டார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளை மீறி நடந்து கொண்டதற்கானப் பலனை அனுபவித்தார். திருமணம் முடிந்து எட்டாவது நாள் அவருடைய மனைவி படிக்கட்டிலிருந்து இறங்கும் போது கால் தவறி விழுந்ததால் அவளுடைய இடுப்பில் பலமாகக் காயம் ஏற்பட்டது. அது வாழ்நாள் முழுவதும் குணப்படுத்த முடியாத காயமாக இருந்தது. அவளுக்கு பல வைத்திய முறைகளை கையாண்டும் எதுவும் நிவாரணம் அளிக்கவில்லை. அவள் ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு செல்ல வேண்டுமென்றால், ஒருவர் அவளை சுமந்துதான் செல்லவேண்டும். சோஹானி எப்போதும் ஸ்ரீ ஸ்வாமிகள் காலியான புகைக்குழாயை அவர் புகைத்ததை நினைவூட்டிக்கொண்டே இருப்பார். இப்போது என்ன செய்வது! நடந்தவற்றை மற்றவா முடியும்? இந்த நிகழ்ச்சி நாம் ஒவ்வொரு நொடியும் ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளை மீறாமல் நடந்துகொள்ள வேண்டும் என்பதை உணர்த்தும் விதமாக இருக்கிறதல்லவா!

**ஸ்ரீபாத பட்டின் தங்கக்காப்பு (bracelet)**

ஸ்ரீ ஸ்வாமி சாமர்த்தர் அப்போது மோடியின் வீட்டில் இருந்தார். ஸ்வாமி பக்தரான ஸ்ரீபாத பட்டும் ஸ்வாமியின் வேலையாளான புஜங்கும் மொஹரம் பண்டிகையின் தாபூத்தை கண்டுகளிக்க ஆவல் கொண்டு அங்கு செல்வதற்காக ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அனுமதி கேட்டனர். மஹராஜ், **"போக வேண்டாம்"** என்று கூறினார். அவர்கள் அந்த விழாவை கண்டுகளிக்க மிகவும் ஆர்வமாக இருந்தமையால் மீண்டும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அனுமதி கேட்டனர். மீண்டும் ஸ்வாமிகள், **"மாதர்சோத், போகவேண்டாம்"** என்று அழுத்தந்திருத்தமாக கூறிவிட்டார். ஆனால் விதியின் விளையாட்டோ வேறுவிதமாக இருந்தது. அவர்கள் வேறு சிலரை ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுக்கு அருகில் அமரச் செய்துவிட்டு யாருக்கும் தெரியாமல் அந்த இடத்தை வீட்டுச் சென்றனர். ஸ்ரீபாத பட் தன் கையில் 3 அல்லது 4 தோலாக்கள்(1 தோலா= 11.6g) கனமுள்ள ஒரு கைகாப்பை அணிந்திருந்தார். அதை கூட்டத்தில் யாராவது எடுத்துவிடுவார்களோ என்கிற பயத்தில் அதை புத்திசாலி வேலைக்காரனான புஜங்காவிடம் கொடுத்து பாதுகாப்பாக வைத்துக் கொள்ளும்படி கூறினார். புஜங்கா தான் ஏழை என்பதால் இந்த காப்பை அணிந்துகொள்ள முடியாது என்று கூறினார். ஆனால் ஸ்ரீபாத பட்டோ அவனை கட்டாயப்படுத்தி அணிந்து கொள்ளுமாறு கூறினார். இருவரும் கூட்டத்தில் நுழைந்து தாபூத் நிகழ்ச்சியைக் கண்டு களித்தனர். புஜங்கா சில இனிப்புகள் மற்றும் காய்ந்த பேரீச்சம்பழங்களை வாங்கி வந்து தாபூத்தின் மேல் தூக்கி எறிந்தான். அப்போது கையில் போட்டிருந்த காப்பும் சேர்ந்து சென்றுவிட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் வெள்ளத்தில் அதை கண்டுபிடிக்க முடியுமா? இரண்டு மணி நேரங்கள் தொடர்ந்து தேடியும் கிடைக்கவில்லை.

வருத்தத்துடன் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் வந்து சேர்ந்தனர். ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளை மீறி சென்றதால்தான் இவ்வாறு நடைபெற்றது என்பதை அவர்கள் புரிந்து கொண்டனர். தங்கள் முகத்தை மறைத்துக்கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகள் முன்னால் சென்று அழுதனர். **"நான் எவ்வளவு கூறியும் நீங்கள் ஏன் சென்றீர்கள்?"** என்று கேட்டுவிட்டு அவர்களை கடும் சொற்களால் கோபித்துக் கொண்டார். இருவரும் தங்களை மன்னிக்குமாறு பிரார்த்தனை செய்துகொண்டனர். தான் இவ்வளவு அதிகமான பெருமானம் உள்ள தங்கத்தை எப்படி ஸ்ரீபாத பட்டுக்கு திருப்பி அளிப்பது என்று புஜங்கா தன் வேதனையை ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வெளிப்படுத்தினான். மஹராஜுக்கு புஜங்காவின் மீது தனி பிரியம் உண்டு. ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்கு ஜெய-விஜயன் போல இவன் ஸ்ரீ

ஸ்வாமிகளுக்கு வாயிற்காவலனாக இருப்பான். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் புஜங்காவின் மீது பரிதாபப்பட்டு, **“அழாதே! கைகாப்பு தானாகவே வந்து சேரும். அமைதியாக இரு!”** என்று கூறியவுடன் அவருக்கு நம்பிக்கை துளிர்விட்டது.

சில மணி நேரத்திற்கு பிறகு, ஒரு காவல் அதிகாரி இருவருடன் அங்கு வந்தார். முன்பே ஸ்ரீபாத பட்டும் புஜங்காவும் காவல் நிலையத்தில் புகார் அளித்திருந்தனர். அங்கு வந்த இருவரில் ஒருவன் அந்த கைகாப்பை எடுத்திருக்கிறான், இன்னொருவன் அதைப் பார்த்திருக்கிறான். இருவருக்குள்ளும் அதை பிரித்துக் கொள்வதில் மிகுந்த கைகலப்பு ஏற்பட்டதால் அந்த விஷயம் காவல் அதிகாரிக்கு தெரிய நேர்ந்தது. உடனே அவர் மஹராஜிடம் அழைத்து வந்திருக்கிறார். இப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய வார்த்தை உண்மையானதை நினைத்து புஜங்கா மிகுந்த மகிழ்ச்சி அடைந்தான். ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளை மீறி நடந்துகொண்ட போதிலும், தன் தவறை உணர்ந்து முழுமையாக அடைக்கலம் அடையும்போது அவர் அந்த தவறுகளால் ஏற்படும் துன்பங்கள் அனைத்தையும் சரி செய்துவிடுவார் என்பது இந்த நிகழ்ச்சியின் மூலம் தெளிவாகிறது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 79

# சோலாப்பூரைச் சேர்ந்த நானா சோஹோனி

சோலாப்பூரைச் சேர்ந்த நானா சோஹோனி பல நாட்களாக தனக்கு அக்கல்கோட் அரசு பணி கிடைக்க வேண்டும் என்ற விருப்பத்தில் இருந்தார். அவர் மிகவும் சாமர்த்தியமானவர். எப்படியோ மாலோஜிராவ் ராஜாவை திருப்திப்படுத்தி அக்கல்கோட் மாநிலத்துக்கு வழக்கறிஞராக இவரை நியமிக்கும் படி ஒரு கடிதம் எழுதி பெற்றுக் கொண்டுவிட்டார். மேலும் அரசர் இவரை நியமிக்கும்படி தனிப்பட்ட முறையில் அதிகாரியிடம் கூறியும் இருந்தார். அதனால் பட்டியலில் இவருடைய பெயர் இடம்பெற்றிருந்தது.

அவர் மிகவும் மகிழ்ச்சியுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் அதை காட்டிவிட்டு ஆசீர்வாதம் பெற்றுக்கொள்ள வந்திருந்தார். அந்த கடிதத்தை ஸ்ரீ ஸ்வாமிகளின் கைகளில் கொடுத்தார். அனைத்தையும் அறிந்த ஸ்ரீ ஸ்வாமிகள் அந்த கடிதத்தை வாங்கி இன்னொருவரிடம் கொடுத்தார். இது சோஹோனிக்கு மிகுந்த வருத்தத்தை ஏற்படுத்தியது.

இருப்பினும் தனக்கு அரசரிடமிருந்தே கடிதம் கிடைத்துவிட்டது என்கிற இறுமாப்பில் இருந்தார். என்ன பயன்? மஹராஜிடமிருந்து அனுமதி கிடைக்கவில்லையே! அவர் அந்த கடிதத்தை உயரதிகாரியிடம் கொண்டு சென்று தன்னை அந்த பணியில் நியமிக்குமாறு பணிந்தார். அதற்கு அந்த அதிகாரி, **"எனக்கு வழக்கறிஞர் தேவையில்லை. அரசர் கடிதம் மூலம் என்னோடு தொடர்பு கொண்டால் போதுமானது. நீங்கள் செல்லலாம்"** என்று கூறிவிட்டார். இதைக் கேட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகள் உண்மையானதை உணர்ந்து கொண்டார். **"எண்ணெயைத் தடவி மண்ணில் புரண்டாலும் ஒட்டுற மண்தான் ஒட்டும்"** என்பதை இந்த நிகழ்ச்சி உணர்த்துகிறதல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 80

# வயிற்று வலி பிராமணன்

வைஷ்ணவ பிராமணன் ஒருவர் கடுமையான வயிற்றுவலியில் தவித்துக் கொண்டிருந்தார். அவர் பல நாட்களாக ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகில் சேவைகள் செய்வதற்காக நூற்றிஐம்பதிலிருந்து இருநூறு பேராவது இருப்பர். ஆனால் என்னதான் அவ்வளவு சேவைகள் இருக்கிறது! அவரை மூன்று வேளைகளும் தரிசனம் செய்துகொண்டே அவருக்கருகில் அமர்ந்து கொண்டு தீர்த்த பிரசாதம் வாங்கி அருந்தலாம். அவர்களில் சிலரால் மட்டுமே உண்மையிலேயே சேவைகள்

செய்யமுடியும். அதாவது, சிலர் மட்டுமே பூஜை இடத்தை சுத்தம் செய்வது, மஹராஜின் மெத்தையை சுத்தம் செய்வது, சமைப்பது, பூக்கள் கொண்டுவருவது, மஹராஜ் எங்கேயாவது வெளியே சென்றால் அவருக்குத் தேவையான சாமான்களை கொண்டு செல்வது போன்ற சேவைகளை செய்வர்.

அந்த வயிற்றுவலி பிராமணர் வேப்ப மரத்தின் கீழ் அமர்ந்தபடி ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தன் நோயை குணப்படுத்தும்படி பிரார்த்தனை செய்து கொண்டார். அவரிடம் ஸ்ரீ ஸ்வாமிகள், **“நான் என்ன உன் அப்பனுக்கு கடன் பட்டிருக்கிறேனா? ஏன் ஒரு சந்நியாசிக்கு முன்னால் வந்து உயிரை எடுக்கிறாய்?”** என்று கூறிவிட்டு அமைதியாக இருந்தார். அதற்கு அந்த பிராமணர், **“எங்களை காப்பாற்ற யார் இருக்கிறார்கள்? தயவு செய்து எங்களுக்கு அருள் புரியுங்கள்”** என்று கேட்டுக்கொண்டார். அவருடைய கெஞ்சல்கள் ஸ்ரீ ஸ்வாமிகளை உருக்கதா என்ன! கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள், **“யானையுடைய சாணத்துடன் உனக்கு மேல் இருக்கும் வேப்பமரத்தின் இலையையும் அரைத்து உண்டால் உன் வயிற்று வலி சரியாகும்”** என்று கூறி அருளினார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியபடியே அந்த பிராமணனும் செய்தார். அடுத்த நாளும் ஸ்ரீ ஸ்வாமிகள் அந்த இடத்தில்தான் தங்கியிருந்தார். மீண்டும் அந்த பிராமணன் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று, **“ஸ்வாமி, வேப்பிலை மிகவும் கசப்பாக இருக்கிறது”** என்று கூறினார். கற்பகவிருட்சமான ஸ்ரீ ஸ்வாமிகள் தன் பக்தனிடம் மிகுந்த கோபத்துடன் ஒரு கிளையை காட்டி, **“ஏ! இந்த கிளையில் உள்ள இலைகளை சாப்பிடு. இவை இனிப்பாக இருக்கும்”** என்று கூறினார். என்ன ஒரு அற்புதம்! அந்த மரத்தின் இரண்டு கிளைகளில் உள்ள இலைகள் கசப்பாகவும், ஒரே ஒரு கிளையில் உள்ள இலை மட்டும் இனிப்பாக இருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய வைத்திய முறையை பின்பற்றியதும் அந்த பிராமணரின் வயிற்றுவலி முற்றிலுமாக குணமானது. பின்னர் அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தரானார் என்பதைக் கூறத்தான் வேண்டுமா?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**





அத்தியாயம் 81

# பஞ்சாபி நோயாளி

அது சக வருடம் 1786 (கி.பி.1864). நல்ல உயரமான திடகாத்திரமான பஞ்சாபி ஒருவர் தொழுநோயினால் பாதிக்கப்பட்டிருந்தார். அவர் அக்கல்கோட்டுக்கு வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்து வணங்கிவிட்டு அவரிடம், **"நீங்கள் பல அற்புதங்கள் நிகழ்த்துவீர்கள் என்பதை கேள்விப்பட்டு உங்களை தரிசனம் செய்வதற்காக வந்தேன்"** என்று ஆணவமாகக் கூறினார். இதைக் கேட்டு கோபம் அடைந்த ஸ்ரீ ஸ்வாமிகள், **"நீ என்ன நாடகத்தில் அற்புதங்களை பார்த்ததில்லையா? அற்புதங்கள் எல்லாம் பிட்டத்தில் இருக்கட்டும்"** என்று கூச்சலிட்டார். மேலும், **"இனிப்பை தின்றுவிட்டு, வேசியுடன் சல்லாபம் செய்பவன் தானே நீ! உனக்கு இவ்வளவு ஆணவம்! உனக்கு வேசியின் பிறப்புறுப்பு இரவும் பகலும் தேவையாக இருக்கிறது, ஆனாலும் அற்புதங்களை பார்க்க வேண்டுமா?"** என்று கூறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகள் தன் கோவணத்தை அவிழ்த்து அவர் முன்னால் நிர்வாணமாக நின்றார்.

அங்கு கூடியிருந்த அனைவரின் முன்னிலையிலும் ஸ்ரீ ஸ்வாமிகள் உண்மைகளை கூறியதைக் கேட்டு அந்த பஞ்சாபி அவமானத்தில் கூனிக்குறுகி நின்றிருந்தார். அவர் குற்ற உணர்வுடன் பல மணி நேரத்திற்கு அந்த இடத்தை விட்டு நகராமல் அங்கேயே நின்று கொண்டிருந்தார். தன்னுடைய தவறுகளை உணர்ந்து கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து தன்னை மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டார். அவர் அங்கேயே தங்கி ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்தார். இரண்டு மாதங்களுக்குப் பிறகு நோயில் இருந்து விடுபட்டு ஸ்ரீ ஸ்வாமிகளின் அனுமதியுடன் தன் சொந்த ஊருக்குச் சென்றார். எவ்வளவு பெரிய தவறுகள் செய்திருந்தாலும் அதை உணர்ந்து கொண்டு மன்னிப்பு கேட்கும்போது, அதை மன்னித்தருள்வது தானே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் உண்மையான குணம்! அந்த பஞ்சாபியை அவமானப்படுத்த வேண்டும் என்பதோ, தான் அனைத்தையும் அறிந்தவர் என்பதை வெளிப்படுத்தவோ ஸ்ரீ ஸ்வாமி இவ்வாறு நடந்து கொள்ளவில்லை. அனைவரும் நல்லொழுக்கத்துடன் வாழ்ந்து நற்கதியை அடைய வேண்டும் என்பதுதான் அவருடைய விருப்பம். ஒருவருக்கு அருட்கடாக்ஷம் இல்லையென்றால் இது போன்ற கடுமையான வார்த்தைகள் கூட ஸ்ரீ ஸ்வாமிகளிடமிருந்து கிடைக்காதல்லவா! பாக்கியம்

செய்தவர்களை மட்டுமே ஸ்ரீ ஸ்வாமி இவ்வாறு வசைபாடி நல்வழிப்படுத்தி தன்வசம் இழுத்துக் கொள்வார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 82

# புதையல்

### கோவிந்த சாஸ்திரி

அக்கல்கோட்டில் கோவிந்த சாஸ்திரி என்கிற பக்தர் ஒருவர் இருந்தார். அவர் ஒரு சந்நியாசி. இருப்பினும் அவர் தன்னுடைய குடும்பத்தைப் பற்றிய கவலையால் மிகவும் குழம்பியிருந்தார். தன்னுடைய குடும்பத்தை சரியாக நிலைநிறுத்திவிட்டால் நிம்மதியாக ஸ்ரீ ஸ்வாமிகளுடன் நேரம் செலவழிக்கலாம் என்று எண்ணிக் கொண்டிருப்பார். மனக்குழப்பங்களினால் பிக்ஷை எடுக்கக்கூட தெம்பில்லாதவராக இருந்தார். என்ன செய்வது? வேறு வழியேதுமில்லையே! ஸ்ரீ ஸ்வாமி மஹாராஜ்தான் அனைவருடைய கவலைகளையும் தீர்த்து வைக்கிறாரே! அவரை கேட்டால் என்ன! இல்லையேல் என் விதியைத்தான் நொந்துகொள்ள வேண்டும் என்று தன் மனதில் நினைத்துக் கொண்டே ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்ய அமர்ந்தார். அவருடைய முகத்தைப் பார்த்து ஸ்ரீ ஸ்வாமி, **"உன்னுடைய வீட்டின் பின்புறத்தில் ஒரு துபாரி மரம்(செம்பருத்தி போல ஒரு பூவகை மரம்) இருக்கிறது. கடவுளை நினைத்துக் கொண்டு அதன் கீழ் தோண்டி அங்கு இருப்பதை எடுத்துக் கொள்"** என்றார். இதைக் கேட்டவுடன் சாஸ்திரி புவாவின் சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. வீட்டுக்குச் சென்று அந்த மரத்தின் கீழ் தோண்டினார். அங்கு ஒரு புதையல் இருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகளின் அனுக்கிரகத்தை எண்ணி மிகவும் சந்தோஷம் அடைந்தார். பின்னர் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் முழுமையாக சரணடைந்து அவருக்குச் சேவைகள் செய்து வந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளின் சமாதிக்குப் பின்னர் அவர் காசிக்குச் சென்று விட்டார்.

இந்த நிகழ்ச்சி மிகவும் எளிமையானதாக தோன்றினாலும், அதில் பொதிந்திருக்கும் மிக அற்புதமான உட்கருத்தை அறிந்துகொண்டோமானால்,

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒரு கற்பகவிருட்சம் என்பது நமக்கு விளங்குகிறது அல்லவா!

**பசப்பா தேளி (எண்ணெய் வியாபாரி)**

கொங்கன் என்கிற ஊரிலிருந்து வாரிசில்லாத பிராமண தம்பதி அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தனர். அப்போது வறுமையினால் வாடிக் கொண்டிருந்த தேளி என்கிற எண்ணெய் வியாபாரி தன் மூன்று மகன்களுடன் தரிசனத்துக்காக வந்திருந்தார். எவ்வளவு உழைத்தும் அவருக்கு போதவில்லை. ஸ்ரீ ஸ்வாமிகளின் புகழைக் கேட்டு தரிசனத்திற்காக வந்திருந்தார். தரிசனம் செய்துவிட்டு சில நாட்கள் அங்கேயே தங்கியிருந்தார். ஒருநாள் கொங்கனில் இருந்து வந்திருந்த பிராமணர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சாமரம் வீசிக்கொண்டிருக்க, அவரது மனைவி ராதாபாய் அவருக்கருகில் நின்று கொண்டிருந்தாள். மஹராஜ் அந்த பெண்ணின் முகத்தைப் பார்த்து, **"லிம்பே (இது அவளுடைய பூர்வ ஜென்ம பெயராக இருக்கலாம்) இங்கு வா! இந்த தேளி உன் பூர்வ ஜென்மக் கணவர். இவர்கள் மூவரும் உன் வயிற்றில் பிறந்தவர்கள். இவர்களை உன்னருகில் அழைத்துக்கொள்"** என்றார். இந்த வினோதமான வார்த்தைகளைக் கேட்ட ராதாபாய்க்கு மிகவும் தர்ம சங்கடமாகிவிட்டது. அதனால் அவள் தன் தலையை குனிந்தவாறு கூனிக்குறுகி நின்றிருந்தாள். அந்தப் பெண்ணை விட அவளுடைய மகன்கள் வயதில் மூத்தவர்களாக இருந்தாலும், அவர்கள் மூவரும் அவளை அன்போடு, **"அம்மா,அம்மா..."** என்று அழைத்தனர். இதைக்கண்டதும் தேளியின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடின. பின்னர் அந்தப் பெண்ணும் தன் குழந்தைகளை மிகுந்த அன்போடு அவர்களை அருகில் அழைத்து, வாஞ்சையோடு அவர்களின் முகத்தை தழுவிக்கொண்டாள்.

இக்காட்சியை கண்ட அனைவரும் திக்குமுக்காடிப் போனார்கள். இப்படிப்பட்ட காட்சிகளை இவர்கள் எவருமே கண்டதுமில்லை, கேள்விப்பட்டதுமில்லை. கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள் அந்த பெண்ணைப் பார்த்து, **"லிம்பே! நீ இந்த தேளியுடன் செல். அவருடைய வீட்டின் மேற்கு பகுதியில் வண்ணம் பூசப்பட்ட ஒரு தூண் இருக்கிறது. அதற்குக் கீழ் ஒரு ஒரு பானையில் செல்வத்தை நிரப்பி நீ புதைத்து வைத்திருக்கிறாய். எந்தவித பேராசையும் இல்லாமல் அதை எடுத்து தேளியிடம்**

**கொடுத்து விடு. அப்படிச்செய்தால் அவருடைய வறுமையும் ஒழிந்து விடும், உனக்கும் மகன் பிறப்பான்**" என்று கூறினார்.

ஸ்ரீ ஸ்வாமிகளின் கட்டளையை நிறைவேற்றுவதற்காக அக்கல் கோட்டிலிருந்து 48 மைல் தொலைவில் இருக்கும் தேளியின் வீட்டுக்கு அவர்கள் சென்றனர். அந்த குறிப்பிட்ட தூணின் கீழ் தோண்டியவுடன் ஒரு புதையல் கிடைத்தது. அதில் பொன்னும்,ரத்தினங்களும், காசுகளும் இருந்தன. அவர்களிடம் அனைத்து செல்வங்களையும் ஒப்படைத்துவிட்டு பிராமண தம்பதி அக்கல்கோட் வந்தடைந்தனர். அங்கு சில நாட்கள் தங்கியிருந்துவிட்டு தங்கள் சொந்த ஊருக்கு சென்றனர். அதே வருடத்தில் அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான். இந்த நிகழ்ச்சியைப் பற்றி அறிந்துகொண்ட பக்தர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிகளின் சர்வ வல்லமையை எண்ணி ஆச்சரியம் அடைந்தனர்.

இந்த அற்புதமான லீலையில் மூலம் அந்த பெண்மணிக்கும் தேளிக்கும் இடையே இருக்கும் பூர்வ ஜென்மத்து கர்ம பந்தத்தை நினைவூட்டி, அவர்கள் இருவரின் பிரார்த்தனைகளையும் நிறைவேற்றி வைத்தார். அவர்கள் இருவரையும் ஒரே நேரத்தில் அக்கல்கோட் வரவழைத்து இப்படிப்பட்ட அற்புதங்களை நிகழ்த்திக் காட்டும் வல்லமை ஸ்ரீ ஸ்வாமிகளைத் தவிர வேறு எவரால் முடியும்?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

### *அத்தியாயம் 83*

## புனேவிலிருந்து வந்த பக்தர்

அது சக வருடம் *1789* (கி.பி. *1867*). ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட்டில் ஸ்ரீ விஷ்ணு புவா ஓந்த்கர் வீட்டு தாழ்வாரத்தில் அமர்ந்திருந்தார். அவர் தான் ஸ்ரீ நரசிம்மரின் அவதாரம் என்பதை நிரூபிக்கும் விதமாக கடும் கோபத்திலிருந்தார். அவர் கோபத்தில் இருக்கும் போது அவரிடம் நெருங்குவதற்கு எவருக்கும் துணிவிருக்காது. அவருடைய கோபத்தின் தீவிரத்தைப் பார்த்தால் அனைவரும் வலுவிழந்தது போல் ஆகிவிடுவர், பிறகு அவருக்கருகில் செல்ல எவருக்கேனும் பலம் இருக்குமா என்ன? அந்த

கோபமான உருவம் அவ்வளவு வினோதமாக ஆக்ரோஷம் நிறைந்ததாக இருக்கும்.

அந்த வருடத்திலேயே ஒருநாள் புனேவிலிருந்து ஒரு தம்பதியும், அந்தப் பெண்ணின் சகோதரனும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்தனர். அந்த தம்பதிக்கு குழந்தையில்லை. அந்தப் பெண் ஸ்ரீ ஸ்வாமிகளை வணங்கிவிட்டு ஒரு பாத்திரம் முழுவதும் பதினான்கு வகையான இனிப்புகளைத் தயார் செய்து எடுத்து வந்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சமர்ப்பணம் செய்தாள். மஹராஜ் மிகுந்த கோபத்துடன், **"நன்றி கெட்டவளே, இந்த பாத்திரத்தை ஏழு வருடங்களாக நீ உறவில் இருந்த உன் சகோதரனிடம் கொடு. இதை ஏன் என்னிடம் அளிக்கிறாய்? என்னுடைய ஆண்குறி ஒன்றும் எழும்பாது"** என்று ஆவேசமாகக் கூறினார். இப்படிப்பட்ட கடுமையான சொற்களைக் கேட்டவுடன் சகோதரனும் சகோதரியும் பயத்தில் நடுங்கிக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு ஏதாவது நடந்துவிடுமோ என்கிற பயத்தில் அந்த இடத்தைவிட்டு ஓடி விட்டனர். அனைத்திற்கும் சாட்சியாக விளங்கும் ஸ்ரீ ஸ்வாமிகளின் இந்த லீலையைக் கண்ட அனைவரும் பிரமிப்படைந்தனர். பின்னர் அப்பெண்ணின் கணவரை ஆசீர்வதித்து தேற்றி அனுப்பி வைத்தார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு, சோகா மேளா பஜனை குழு ஒன்று வந்து ஸ்ரீ ஸ்வாமிகளுடைய நரசிம்ம ரூபத்தைப் பார்த்துவிட்டு ஸ்ரீ நரசிம்மர் பிரகலாதனுக்கு அருள் பொழிந்ததை விவரிக்கும் பாடல்களைப் பாடினர். அனைவரும் அந்த கருணை ததும்பும் பஜனை பாடலை ரசித்துக் கொண்டிருந்தனர். ஸ்ரீ ஸ்வாமிகள் கோபத்தில் இருந்த போதிலும், அவருடைய மனது இளகி அன்பை வெளிப்படுத்தும் விதமாக உரக்கமாக சிரித்தார். இரண்யகசிபுவை வதம் செய்யும் கட்டம் வந்த போதிலும் அவருடைய கோபம் தணியவில்லை. ஸ்ரீ ஸ்வாமிகளின் கடும் கோபத்தைத் தாங்கிக்கொள்ள முடியாமல் அவருடைய சேவகர்களே அந்த இடத்தை விட்டு ஓடிவிட்டனர். ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு இரவும் பகலும் சேவைகள் செய்து கொண்டிருந்த ரமாவுக்கும் அவருக்கருகில் செல்ல துணிவில்லை.

அப்போது ஐந்து வயது குழந்தையான பிரகலாத் எந்தவித பயமுமின்றி ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தை இறுக்கமாகப் பற்றிக் கொண்டான். உடனே தாயுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகளின் கோபம் நீரில் தணியும் நெருப்பு போல அடங்கி சாந்தமானார். அவர் மிகுந்த கருணையோடு ப்ரஹல்லாத்தை ஆசீர்வதித்தார். தாழ்த்தப்பட்ட ஒரு பக்தரை ஆசீர்வதித்து பிரசாதம்

அளித்துவிட்டு, **"உன் மகன் மிகப்பெரிய ஞானியாவான். உன் வாழ்நாள் முழுவதும் உணவுக்கும் உடைக்கும் பஞ்சம் இருக்காது"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் அந்த பக்தர் மகிழ்ச்சியடைந்து, **"மஹராஜ், நான் இவ்விஷயத்தை உங்களிடம் தெரிவிக்கத்தான் வந்தேன். உண்மையில் நீங்கள் பரப்பிரம்மா. நான் உங்கள் பணிவான சேவகன். என்னுடைய எண்பதாவது வயதில் இப்போதுதான் உங்களுடைய பாதத்தை வணங்கும் பாக்கியம் எனக்கு கிடைத்திருக்கிறது. எனக்கு ஞானேஸ்வரி நன்றாகத் தெரியும், இருப்பினும் அதில் பொதிந்துள்ள அர்த்தங்கள் சிலவற்றை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை"** என்று கூறினார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **"உன் மகனே தன் அனுபவங்களைக் கொண்டு உனக்கு விளக்கம் அளிப்பான்.போ!"** என்று கூறி அனுப்பினார். ஸ்ரீ ஸ்வாமிகளின் அமுதம் ததும்பும் வார்த்தைகளைக் கேட்டு மிகுந்த மகிழ்ச்சியுடன் அந்த வயதானவர் விடைபெற்றுச் சென்றார். சர்வ வியாபியான ஸ்ரீ ஸ்வாமிகளின் லீலைகளுக்கு ஈடு இணை உண்டோ?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 84

# மும்பையைச் சேர்ந்த ஸ்ரீராம் பிரபு

மும்பையைச் சேர்ந்த ஸ்ரீராம் பிரபு ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்ய வந்திருந்தார். அவருடன் இனிப்பு நிறைந்த தட்டு மற்றும் பூஜைக்கு தேவையான பொருட்களுடன் ஒரு பிராமணரை அழைத்து வந்திருந்தார். அவர்கள் தரிசனம் செய்தபின்னர், அந்த பிராமணரிடம் இனிப்புத் தட்டை கீழே வைக்குமாறு ஸ்ரீராம் பிரபு கூறினார். அப்போது ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **"மாதர்சோத், 5000 ரூபாயை வைத்துவிட்டு அதை எடுத்துக்கொள். அதை பத்திரமாக வைத்துக்கொள்"** என்று கூறினார். இதே வரியை அவர் மூன்று முறைகள் மீண்டும் மீண்டும் கூறினார். இதைக்கேட்ட அந்த அந்த பிராமணர், **"நான் சமையல் செய்து என் வயிற்றை நிரப்பிக் கொள்கிறேன். என்னிடம் 5000/- ரூபாய் ஏது?"** என்று வினவினான்.

ஸ்ரீ ஸ்வாமி அமர்ந்திருந்த இடத்திற்கு பின்னால் ஒரு மதிற்சுவர் இருந்தது. திடீரென அனைவர் முன்னிலையிலும் ஒரு வயதான பக்கிரி கருப்பு நாயுடன் மதில் சுவருக்கு அருகில் அமர்ந்திருப்பதை அங்கிருந்தவர்கள் அனைவரும் கண்டனர். இனிப்பு நிறைந்த தட்டை அந்த பிரமணரிடம் கொடுத்த ஸ்ரீ ஸ்வாமிகள், **"அவருக்கு இதை ஊட்டி விடு"** என்று கூறினார். அந்த பிராமணரும் அவ்வாறே செய்தார். நாயுடன் இருந்த பக்கிரி ஐந்து கவளத்தை தவிர மீதமிருந்த அனைத்தையும் உண்டுவிட்டார். ஸ்ரீராம் பிரபு ஸ்ரீ ஸ்வாமிகளை தன் மனநிறைவுடன் தரிசனம் செய்துவிட்டு தன் வீட்டுக்குச் சென்றுவிட்டார். அந்த பக்கிரி உண்டுவிட்டு மீதமிருந்த உணவை தான் உண்ணலாமா வேண்டாமா என்கிற சந்தேகம் அவருக்கு ஏற்பட்டது. இதை நிவர்த்தி செய்து கொள்வதற்காக அவர் பலரிடம் வீடுவீடாக சென்று ஆலோசனை செய்தார். அவர்கள் அனைவரும் இதை ஸ்ரீ ஸ்வாமிகளிடமே கேட்டு தெரிந்து கொள்ளுமாறு கூறிவிட்டனர். அந்த பிரபு மீண்டும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக வந்தபோது,ஸ்ரீ ஸ்வாமிகள் எப்போதும்போல அவரை பார்த்தவுடன், **"உனக்கு வேண்டுமென்றால் அதை சாப்பிடு. இல்லையேல் திருப்பி கொடுத்துவிடு. இதை ஏன் வீடுவீடாக சென்று கேட்கிறாய்?"** என்று கேட்டார். இதைக் கேட்டவுடன் பிரபு ஸ்ரீ ஸ்வாமிகளை வணங்கிவிட்டு அவருடைய வீட்டுக்கு வந்து அந்த இனிப்புகள் முழுவதையும் ஒரு துளிகூட மீதம் வைக்காமல் உண்டு முடித்தார்.

அடுத்த நாள் காலையில் மீண்டும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு மும்பை சென்றடைந்தார். பிரபுவுடன் வந்த பிராமணர் அவருடைய அத்தையின் வீட்டில் சமையல் வேலை செய்துகொண்டிருக்கிறார். அந்த பிராமணரின் முதலாளி மிகுந்த செல்வந்தர். பிராமணரின் நம்பகத்தன்மையை பாராட்டும் விதமாக அவருக்கு ரூபாய் 5000/- வெகுமதியாக அளித்தார்கள். அவருக்கு இவ்வளவு பெரிய தொகையான ரூபாய் 5000/- கிடைக்கும் என்பதை அவர் கனவில் கூட எண்ணிப் பார்த்ததில்லை. ஸ்ரீராம் பிரபுவும் மிகவும் வளமான வாழ்க்கை வாழ்ந்தார். இவை அனைத்தும் ஸ்ரீ ஸ்வாமிகளின் அருள் ததும்பும் ஆசீர்வாதங்களினால் மட்டுமே நடைபெற்றது என்பது பரம சத்தியம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# அத்தியாயம் 85

# நாடகக்காரி ராதாபாய்

மிகவும் அழகாகவும் திறமையாகவும் பாடக்கூடிய ராதாபாய் என்னும் நாடகக்காரி(வேசி) ஒருத்தி அக்கல்கோட்டில் சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்திருந்தாள். அவள் தன்னுடைய அழகில் மயங்காதவர் எவரும் இல்லை என்கிற கர்வத்தில் இருந்தாள். அவள் அனைவரையும் வசீகரிக்கும் உடையை அணிந்துகொண்டு, ஸ்ரீ ஸ்வாமிகளுடைய ஆசீர்வாதத்தை பெறுவதற்காக அவரின் பாதத்தில் பணிந்தபோது அவருடைய தகதகக்கும் மேனியை கண்டவுடன் **"இந்த துறவிக்கு பெண்களின் தொடர்பு இருக்குமா இல்லையா"** என்ற சந்தேகம் அவளுக்கு ஏற்பட்டது. உடனே அவள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தன் மார்பகங்களைக் காட்டி, **"நான் உங்களுக்கு இரண்டு விலைமதிப்பற்ற பரிசுகளை கொண்டு வந்திருக்கிறேன்"** என்று கூறினாள்.

அவள் மனதில் தீய எண்ணம் துளிர் விடும் போதே ஸ்ரீ ஸ்வாமிகள் அவளுடைய முகத்தைப் பார்த்து, **"ஆணுடைய உருவத்துக்கும் பெண்ணுடைய உருவத்துக்கும் வித்தியாசம் என்ன? உனக்கு ஆண் உருவம் வேண்டுமா?"** என்று கேட்டார். ஸ்ரீ ஸ்வாமிகளின் சர்வ வல்லமையை எண்ணி ஆச்சரியம் அடைந்த அப்பெண், **"மகராஜ், மார்பகங்கள் போன்ற அங்கங்கள் பெண்களுக்கு உண்டு. ஆனால் ஆண்களுக்கு அது இல்லை"** என்று கூறினாள். இதைக் கேட்டவுடன், **"உன் மார்பகங்களை ஒரு பிராமணனுக்கு கொடுத்துவிடு. இங்கே என்ன பார்க்கிறாய்?"** என்று கடுமையான சொற்களைக் கூறியவுடன் அவள் ஸ்வாமிகளின் பாதத்தில் நமஸ்கரித்துவிட்டு தன் சொந்த ஊருக்குச் சென்று விட்டாள்.

சில நாட்களுக்குப் பிறகு ஒரு அற்புதம் நடந்தது. எந்தவித நோயும் ஏற்படாமல் ராதாவின் மார்பகங்கள் சுருங்கின. நாளாவட்டத்தில் அது ஆண்களுடைய மார்பபைப் போல ஆனது. எப்படி ஒரு சிற்பி மண்சிலையை கலைத்து வேறொரு வடிவம் உருவாக்குவானோ அதே போல ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் மனித உடலை உருமாற்றிவிட்டார். முன்பு அவளைப் பார்த்தவர்கள் அனைவரும் அவளுடைய உடலில் ஏற்பட்ட மாறுதல்களை கண்டு திகைத்தனர். ஸ்ரீ ஸ்வாமிகள் இதுபோன்ற உடலில் மாற்றத்தை ஏற்படுத்திய பின் அவள்





ஆண்களுடன் கொண்டிருந்த உடலுறவை முற்றிலுமுமாக நிறுத்திக்கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சரணாகதி அடைந்தாள்.

அழகு என்பது நிரந்தரமற்றது என்பதை அவள் புரிந்து கொண்டாள். அவளுடைய உடல் மீது அவள் கொண்டிருந்த அகம்பாவம் முற்றிலுமாக நீங்கியிருந்தது. பின்னர் ராதா யோகினியாகி, தன் மீதமுள்ள வாழ்நாட்களை காசி மற்றும் பிருந்தாவனத்தில் கழித்தாள். அவள் செய்திருந்த பாவங்கள் அனைத்தும் கங்கையில் கரைக்கப்பட்டு, அவள் மிகவும் தூய்மையானவளாக மாறினாள். ஸ்ரீ ஸ்வாமி அனைவரின் மீதும் கருணை கொண்டவர். அவர் பாவங்கள் மற்றும் துன்பத்தில் இருப்பவர்களை தன்னிடம் இழுத்துக் கொண்டு, அவர்களை நல்வழிப்படுத்துவதிலேயே முனைப்பாக இருப்பார் என்பதற்கு இந்த நிகழ்ச்சி மிகச்சிறந்த எடுத்துக்காட்டு.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 86

# துறவிக்கு தத்த தரிசனம்

சக வருடம் *1791* இல் (கி.பி. *1869*), மார்கழி மாதத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் அவருடைய சேவகர்களும் அக்கல்கோட்டுக்கு அருகில் இருக்கும் சில கிராமங்களில் உலாவிக் கொண்டிருந்தனர். அப்போது அவர் முன் ஒரு துறவி ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக வந்தார். அவர் ஸ்ரீ தத்தாத்ரேயரின் தரிசனத்தை பெறுவதற்காகக் கடுமையான பயிற்சிகளையும் அனுஷ்டானங்களையும் மேற்கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளின் அற்புதமான மேனியைக் கண்டவுடன் அவர் மௌனமாகி நின்றுவிட்டார். அவருடைய தவத்தின் பலனை அவருக்கு அளிக்க விருப்பட்ட ஸ்ரீ ஸ்வாமிகள், தானே தன் ஆசனத்தை விட்டு எழுந்து நின்று தரிசனம் அளித்தார். அந்த பக்தருக்கு மூன்று தலைகளும், ஆறு கரங்களும் கூடிய ஸ்ரீ தத்தாத்ரேயராக காட்சியளித்தார். அந்த துறவி மிகவும் மகிழ்ச்சி அடைந்து, **“நாங்கள் அறியாமையில் மூழ்கியிருக்கும்**

**போது, உங்களுடைய உண்மையான உருவத்தை யாரால்தான் அறிந்துகொள்ள முடியும்? ஸ்வாமி, நீங்கள்தான் பரப்பிரம்மா, தத்தாத்ரேயர். உங்களுடைய தரிசனத்தின் அருளினால் என் கர்மா நிறைவேறிவிட்டது"** என்று கூறி வணங்கினார். அவர் அங்கு சில நாட்களுக்கு தங்கியிருந்துவிட்டு தன் சொந்த ஊருக்குச் சென்றடைந்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 87

# சையத் என்கிற முஸல்மான்

அது சக வருடம் 1776 (கி.பி. 1854), அன்று புரட்டாசி மாதம் தேய்பிறை, சஷ்டி வியாழக்கிழமை. அன்றைய நாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தேஷ்முக் வீட்டு தாழ்வாரத்தில் அமர்ந்திருந்தார். மதியம் 3 மணியளவில் மொஹலாயிலிருந்து சையத் என்கிற முஸல்மான் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக வந்தார். அச்சமயத்தில் வாமன்புவா கீர்த்தனைகள் பாடுவதற்காக வீணையை மீட்ட தயாராகிக் கொண்டிருந்தார். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகில் அவருடைய சேவகர்கள் சிலர் இருந்தனர். கதவுக்கருகில் இருந்த சேவகர்களிடம் சையத், **"ஏ! அக்கல்கோட் ஸ்வாமி எங்கிருக்கிறார்?"** என்று கேட்டார். அதை தன் காதில் வாங்கிக்கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள், **"ஸ்வாமி ஆண்குறி மேல்தான் அமர்ந்திருக்கிறார். ஸ்வாமி அக்கல்கோட்டில்தான் இருக்கிறார். உனக்கு தேவையானது இங்கு இருக்கிறது"** என்றார். இதைக் கேட்டவுடன் அவர் இருந்த இடத்திலேயே உறைந்து பேச்சற்று நின்றிருந்தார். அவர் சமாதி நிலைக்கு சென்றுவிட்டார். சில நிமிடங்களுக்குப் பிறகு அவர் தன் கண்களை திறந்துவிட்டு, தன் மனதில் எழும்பும் அபரிமிதமான அன்பைக் கட்டுப்படுத்த முடியாமல், அவருடைய தொண்டை அடைத்துக்கொண்டு கண்ணீராக வெளிவந்தன.

அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் பணிந்துவிட்டு, **"பர்வர்திகரே (பெர்சிய மொழியில் ரட்சகன்), ஏழைகளின் பங்காளனே, நீங்கள்தான் கடவுள். இதில்**





**எந்த தவறும் இல்லை. நான் உங்களுடைய தரிசனத்தை என் மனதில் கண்டேன். கடவுளே! இந்த லீலையை நான் எவ்வாறு வர்ணிப்பது? என்னுடைய மதம் எனக்கு தெரியும். நான் பலமுறை குர்ஆன் படித்திருக்கிறேன். அதில் கூறப்பட்டுள்ள நான்குவிதமான மஜிலிகளை பலமுறை செய்து பார்த்திருக்கிறேன். இருப்பினும் எனக்கு எந்தவிதாமான மாறுதல்களும் ஏற்படவில்லை. எனக்கும் வயதாகிவிட்டது. ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை தரிசனம் செய்த பின்னர் என்னுடைய ஆழ்மனதில் சாஹேபின் தரிசனத்தை பெற்றவுடன், அவர் கடலலைகளின் ஓசையை கொடுத்தருளினார். என்னுடைய வாழ்க்கையின் லட்சியத்தை அடைந்துவிட்டேன். நான் உங்களுடைய சேவகன். எனக்கு கட்டளையிடுங்கள்"** என்று கூறிவிட்டு அவர் கொண்டு வந்திருந்த பதார்த்தங்களை ஸ்ரீ ஸ்வாமிகளுக்குப் படைத்தார். அங்கு சில நாட்களுக்குத் திருப்திகரமாக தங்கியிருந்துவிட்டு ஹைதராபாத் சென்றடைந்தார்.

இந்த லீலையில் ஸ்ரீ ஸ்வாமிகள், ஆண்குறி மேல் என்று குறிப்பிட்டது மூலாதாரத்தை, தான் அக்கல்கோட்டில் இருப்பதாக கூறியது என்னவென்றால், **"அக்கல்"** என்றால் ஞானம் என்று பொருள் படும். ஸ்ரீ ஸ்வாமி தன்னை ஞானம் என்று குறிப்பிடுகிறார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 88

# தாதா சாஹேப் வின்சுர்கர்

ஸ்ரீ மாதவ்ராவ் தாதாசாஹெப் வின்சுர்கர் அக்கல்கோட் மாநிலத்தின் ஆட்சியாளர் பொறுப்பில் இருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தர். சில சமயங்களில் ஸ்ரீ ஸ்வாமிகள் அவருடைய வீட்டுக்குச் செல்வார். அச்சமயங்களில் தாதாசாஹெப் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அபிஷேகம் செய்து ஷோடச உபசாரங்கள் செய்து, அவருக்கு உணவை ஊட்டி விடுவார். அதற்குப் பின்னர் தாதாசாஹெப் உணவருந்துவார். இரவு நேரங்களில் அவர் பஜனைகள் செய்வார். மகராஜ் சில சமயம் அந்த பஜனைகளில் கலந்து கொள்வார்.

தாதாசாஹேபுக்கு தொடைப் பகுதியில் சிறிய அளவில் வெண்குஷ்டம் நோய் தாக்கியிருந்தது. அந்த நோய் மற்ற இடங்களுக்கெல்லாம் பரவிவிடுமோ என்று அவர் பயந்து கொண்டிருந்தார். ஒருநாள் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் தரிசனத்துக்காக வந்திருந்தபோது ஸ்வாமி அன்று மிகுந்த சந்தோஷமான மனோநிலையில் இருந்தார். அவர் தன்னுடைய தொடைப் பகுதியில் இருக்கும் நோய் குணமாக பிரார்த்தனை செய்து கொண்டார். மகராஜ் அவரிடம், **"இதன் பெயர் என்ன?"** என்று கேட்டதற்கு, **"அனைவரும் வெண்குஷ்டம் என்று கூறுவார்கள்"** என்றார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அவரிடம், **"உன் விரலில் இருப்பது என்ன?"** என்று கேட்டதற்கு அவர் மோதிரம் என்று கூறியவுடன், **"அது என்ன கல்?"** என்று கேட்டார். அது ஒரு வெள்ளைக்கல் மோதிரம். மஹராஜ் உடனே **"அதைத் தூக்கி எறிந்து விடு"** என்றார். முன்னூறு ரூபாய் மதிப்புள்ள மோதிரத்தை எப்படி தூக்கி எறிவது என்கிற யோசனையில் அதை கழற்றி ஸ்ரீ ஸ்வாமிகளின் விரலிலேயே அவர் அணிவித்தார். ஸ்ரீ ஸ்வாமி அந்த மோதிரத்தை சோளப்பாவிடம் அளித்தார். அந்த மோதிரத்தை விற்று அந்த பணம் கோவிலுக்காகவும் மஹராஜின் தேவைகளுக்காகவும் செலவழிக்கப்பட்டது. பின்னர் சில நாட்களுக்குப் பிறகு தாதாசாஹேபுடைய வெண்குஷ்டம் முற்றிலுமாக மறைந்து போனது.

ஒருநாள் வின்சுர்கர் தன்னுடைய அலுவலக வேலையை செய்து கொண்டிருந்த போது, ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அங்கு வந்தார். அவரைக் கண்டவுடன் தன் நாற்காலியை விட்டு எழுந்து ஸ்ரீ ஸ்வாமிகளை அங்கு அமருமாறு பணிந்தார். சில நேரங்களுக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் அவருடன் உரையாடிவிட்டு, **"இப்போதே உன் மேசை, நாற்காலி மற்றும் உன் பொருட்கள் அனைத்தையும் ஒட்டகத்தின் மேல் ஏற்றிக்கொண்டு கிளம்பு"** என்றார். வின்சுர்கருக்கு ஏதும் புரியவில்லை, **"மஹராஜ் எங்கே கிளம்பச் சொல்கிறீர்கள்"** என்று கேட்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **"ஆயிரக்கணக்கான லட்சக்கணக்கான மக்கள் வணக்கம் தெரிவிக்கும் இடத்திற்குச் செல்"** என்று கூறிவிட்டு சென்றுவிட்டார். சில நாட்களுக்குப் பிறகு தாதாசாஹேபுக்கும் மாலோஜிராவ் ராஜேவுக்கும் இடையே சண்டை மூண்டது. இந்த விஷயத்தை கேள்விப்பட்ட அன்னாசாஹெப் வின்சுர்கர் தாதாசாஹேப்பை வின்சுர்கர் மாநிலத்தின் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுமாறு அழைப்பு விடுத்தார். அதைத்தான் ஸ்ரீ ஸ்வாமி அவருக்கு முன்பே உணர்த்தினார்.




கர்மாவின் பலன்களை அனைவரும் அனுபவித்துத்தான் தீரவேண்டும். ஆனால் அனைத்தையும் முன்கூட்டியே தன் பக்தர்களுக்கு அறிவுறுத்தும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பக்தர்களுக்கு கவலை ஏதாவது இருக்குமா என்ன? வாழ்க்கை என்னும் கடலை எளிதாகக் கடக்க ஸ்ரீ ஸ்வாமிகளின் துணையை அனைவரும் நாடுவோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 89

# கோவிந்தராவ் டோல்

இந்த லீலை "**ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதிதான் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்**" என்கிற அத்தியாயத்தில் சுருக்கமாக விவரிக்கப்பட்டிருந்தாலும், இந்த அத்தியாயத்தில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

சிந்தோபந்த் டோலுடைய மகனான கோவிந்தராவ் பந்த் டோல் வயிற்று வலியால் மிகவும் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். அவர் நல்துர்கா என்னும் இடத்தில் வேலை செய்துகொண்டிருந்தார். வயிற்றுவலி மிகவும் அதிகமான காரணத்தால் வேலைக்கு விடுப்பு எடுத்துக்கொண்டு அக்கல்கோட்டில் உள்ள தன் வீட்டுக்கு வந்தார். அவர் கானகாபூர் சென்று அங்கிருக்கும் தத்தாத்ரேயருக்கு சேவைகள் செய்யலாம் என்று முடிவு செய்தார். சிந்தோபந்த் தன் மகனிடம், "**தத்தாத்ரேயரின் அவதாரமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இங்கேயே இருக்குபோது நீ ஏன் கானகாபூர் செல்ல வேண்டும். ஸ்ரீ ஸ்வாமி உன் பிரச்சனைகளை சரி செய்வார்**" என்று கூறி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக ஒருவருடன் அனுப்பி வைத்தார். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் அப்பாசாஹெப் மானேவின் வீட்டில் இருந்தார். கோவிந்தராவ் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு அவருடைய பாத தீர்த்த பிரசாத்தை பெற்றுக்கொண்டார். கோவிந்தராவுடன் வந்திருந்தவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், "**இவர் கானகாபூர் செல்ல ஆவலாக இருக்கிறார். தயவுசெய்து அவருக்கு அனுமதி அளிக்க வேண்டும்**" என்று கேட்டுக்கொண்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, "**போக வேண்டாம். இங்கேயே**

**இரு"** என்று கூறினார். கோவிந்தராவுக்கு ஸ்ரீ ஸ்வாமிகளின் மீது முழுமையான பக்தி கிடையாது. அதனால் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளை மீறி கானகாபூர் சென்றார். இரண்டரை ஆண்டு காலம் அவர் அங்கேயே தங்கியிருந்து சேவைகள் செய்து கொண்டிருந்தார். அப்போது ஒரு நாள் அவருக்கு **"அக்கல்கோட்டுக்குச் செல்"** என்றொரு கனவு தோன்றியது. இருப்பினும் அதை பொருட்படுத்தாமல் கானகாபூரிலேயே தங்கியிருந்தார். அவருடைய உடல்நிலை நாளுக்கு நாள் மோசம் அடைந்துகொண்டே போனது. காய்ச்சலால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார்.

இங்கு அக்கல்கோட்டில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அரண்மனையில் இருந்தார். அப்போது சிந்தோபந்த் டோல் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக சென்றார். அரண்மனை வளாகத்தில் சிறுவர்கள் பள்ளிக்கூடம் ஒன்று உண்டு, அங்குதான் ஸ்ரீ ஸ்வாமிகள் அமர்ந்திருந்தார். டோல் தரிசனம் பெற்றுக்கொண்டு எழுந்து செல்ல முற்பட்டார். அச்சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி அங்கிருந்த ஒரு சிறுவனின் கரும்பலகையை வாங்கி டோலிடம் கொடுத்தார். அதில், **"கோவிந்தராவ் இங்கு வந்தால் நலமாகி விடுவான்"** என்று எழுதப்பட்டிருந்தது. அந்த கரும்பலகையில் இரண்டு குதிரை படங்கள் ஒட்டப்பட்டிருந்தன. அந்த கரும்பலகையை ஸ்ரீ ஸ்வாமிகள் பெற்றுக்கொண்டு, **"கண்கள் வெளியே வந்துவிட்டன"** என்று கூறினார். ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளை புரிந்து கொண்டு கோவிந்தராவை அக்கல்கோட்டுக்கு அழைத்து வருவதற்காக டோல் குதிரையை அனுப்பி வைத்தார்.

அக்கல்கோட் வந்தடைந்த பின்னர் கோவிந்தராவ் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகிலேயே ஒன்பது முதல் பத்து ஆண்டுகள் வரை தங்கியிருந்தார். இருப்பினும் அவருடைய நோயின் தாக்கம் சிறிது சிறிதாகத்தான் குறைந்து கொண்டிருந்தது. அமாவாசை பௌர்ணமி போன்ற நாட்களில் அதிகமான வேதனையை அவர் அனுபவிப்பார். அப்படி ஒரு நாள் அவர் எதையுமே உட்கொள்ள முடியாத நிலையில் மிகுதியான வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்த சமயத்தில், ஸ்ரீ ஸ்வாமி கோவிந்தராவின் வீட்டுக்கு வந்தார். ஸ்ரீ ஸ்வாமி **"பொற்கொல்லன் எப்படி இருக்கிறான்"** என்று கேட்டவுடன் அவர் பேய் பிடித்தது போல ஏதேதோ சம்பந்தமில்லாமல் பேசத்தொடங்கினார். கோவிந்தராவ் ஆடிக் கொண்டே ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகில் சென்று **"ஒரு சந்நியாசி ஏன் ஒரே இடத்தில் மட்டும் தங்கியிருக்க வேண்டும்? ஒரு சந்நியாசி கோவிலில் தங்கி இருக்க வேண்டுமா அல்லது மடத்திலா?"** என்று




கூறிக்கொண்டே முரட்டுத்தனமாக நடந்துகொண்டே ஸ்ரீ ஸ்வாமிகளை தன் காலால் தாக்க முற்பட்டார், ஆனால் அவருடைய சேவகர்கள் தடுத்துவிட்டனர். பிசாசின் பிடியில் சிக்கிக் கொண்டிருந்த கோவிந்தராவை பார்த்து எதுவும் பேசாமல் ஸ்ரீ ஸ்வாமிகள் வீட்டை விட்டு வெளியே சென்று அங்கிருந்த அத்தி மரத்தின் கீழ் அமர்ந்து கொண்டார். பிசாசும் அவரை துரத்திக் கொண்டு வெளியே வந்தது. ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுக்கு அருகில் சென்று அமர்ந்துகொண்டு, **"சந்நியாசி ஏன் ஒரு ஊரில் தங்கவேண்டும்?"** என்று கேட்டது. கூடியிருந்த மக்கள் மிகுந்த பயத்தில் நடுங்கிக் கொண்டே ஸ்ரீ ஸ்வாமி இதை எப்படியாவது கட்டுக்குள் கொண்டு வர வேண்டும் என்று எண்ணினர். உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் உரக்கமாக "இவனை இரும்புச் சங்கிலியால் கட்டிபோடுங்கள்" என்று கூறினார். இதே வரியை ஸ்ரீ ஸ்வாமி மூன்று முறை மீண்டும் மீண்டும் கூறினார். கோவிந்தராவ் வலி தாங்கமுடியாமல், **"மஹராஜ், நான் செத்துக் கொண்டிருக்கிறேன். என்னை தயவு செய்து விடுவியுங்கள்"** என்று கெஞ்சினார். **"மஹராஜ் நான் உங்களிடம் மரியாதை இல்லாமல் நடந்து கொண்டு விட்டேன். என்னை மன்னித்து அருளுங்கள். தயவு செய்து கோவிந்தராவை என்னுடைய பணத்தை திருப்பி அளிக்குமாறு கூறுங்கள். நான் போய் விடுகிறேன்"** என்று கூறியது.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த கணபதிராவ் டோல் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"நீங்கள் கூறும் பணத்தை நான் தரத் தயாராக இருக்கிறேன். தயவுசெய்து கோவிந்தராவை குணப்படுத்துங்கள்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **"ஒரு பைசா கூட கொடுக்காதே! நான் என் பாதுகைகளால் (செருப்பால்) அடித்தே விரட்டி அனுப்புகிறேன்"** என்று கூறியவுடன் டோல் அமைதியாக இருந்தார். அப்போது ஒரு முஸ்லிம் வேலையாள் ஒருவன் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை தரிசனம் செய்வதற்காக வந்தான். அவன் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"இந்த பிசாசை விடுவிக்கக் கூடாதா! இது மிகுந்த துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறது"** என்று கூறினான். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **"நீதான் பெரிய தாடியுடன் வந்திருக்கிறாயே! நீயே அதன் சங்கிலியை காலில் இருந்து கழற்றிவிடு"** என்று கூறியவுடன் அவன் மௌனமானான். பின்னர் ரமாபாய் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக வந்தாள். ஸ்ரீ ஸ்வாமி மகராஜ் அவளை கோவிந்தராவுடைய சங்கிலியை கழற்றிவிடுமாறு கூறினார். அவளுடைய கை பட்டவுடன் அவருடைய கால்களும் கைகளும் விடுவிக்கப்பட்டன. இந்த அற்புதத்தை நேரில் கண்ட அனைவரும் ஆச்சரியத்தில் மூழ்கினர். பிறகு இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு கோவிந்தராவ் வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்தார். பின்னர் உடல்நலம் தேறி ஆரோக்கியம்

அடைந்தார். இருப்பினும் அந்த பிசாசின் தாக்கம் சிறிதளவு அவருக்கு இருந்தது. **“உன்னுடைய ஐம்பத்தி ஐந்து வயதுக்கு பிறகு அந்த பிசாசு உன்னைவிட்டு முழுமையாக நீங்கிவிடும்”** என்று ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் கூறினார்.

கோவிந்தராவ் டோலுக்கு ஐம்பத்தி ஐந்து வயது ஆனபோது ஒரு நாள் விடியற்காலையில் அவருடைய கனவில் ஸ்ரீ ஸ்வாமி தோன்றி, ஒரு பெரிய கட்டியை எடுத்து வெளியே போட்டுவிட்டு, **“இனி நீ நலமடைவாய்”** என்று கூறி மறைந்தார். கோவிந்தராவ் கண்விழித்து பார்த்த போது அவருடைய வயிறு தட்டையாக இருந்ததை கண்டு மிகுந்த சந்தோஷமும் ஆச்சரியமும் அடைந்தார். மருத்துவர்கள் முன்பு அவரிடம் இந்த நோய் மிகவும் ஆபத்தானது என்றும் அதை அறுவை சிகிச்சை செய்துதான் குணப்படுத்த முடியும் என்று கூறியிருந்தனர். ஆனால் வைத்தியநாதனாக ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இருக்கும் போது மருத்துவர்களின் வைத்திய முறைகளுக்கான தேவை இருக்குமா என்ன?

இந்த லீலையில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் மீது பற்றில்லாத ஒரு பக்தனைக் கூட காப்பாற்றி அருளியதன் மூலம், அவருடைய பக்தர்களை அவரே தேர்ந்தெடுக்கிறார் என்பதை நாம் உறுதியாக உணர்ந்து கொள்ள முடிகிறதல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 90

# புனேவைச் சேர்ந்த கல்புவா

இது புனேவில் வாழ்ந்து வந்த ஒரு கல்புவாவின் கதை. இவர் ஒரு பிராமணருடைய மகனின் கால்களில் கல்லை போட்டுவிட்டார். இதன் காரணமாக அவர் மீது வழக்கு போடப்பட்டது. ஆனால் இவருக்கு மனநிலை சரியில்லை என்று தீர்ப்பு அளிக்கப்பட்டு மனநல மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார். அவர் அங்கு எப்போதும், **“நேரம் வந்துவிட்டது. அது ரத்தத்தை குடிக்கிறது. நேரத்தை பத்திரமாக வைத்திருங்கள். நேரம் வந்துவிட்டது”** என்று மீண்டும் மீண்டும் நாமஜபம் போல கூறிக்கொண்டே இருந்தார்.

ஒருநாள் ஸ்ரீ சதாசிவ கவண்டியும் வாமன்புவாவும் உலாவிக் கொண்டிருந்த போது அந்த மருத்துவமனையை அடைந்தனர். வாமன்புவா அவரிடம், **"நீங்கள் பார்ப்பதற்கு துறவி போல தெரிகிறீர்களே! பிறகு ஏன் பிசாசு போல நடந்து கொள்கிறீர்கள்? உங்களுடைய குரு யார்?"** என்று கேட்டார். அதற்கு, "உங்களிடம் ஒரு பிராமணர் அனுப்பிவைக்கப்பட்டார், ஆனால் நீங்கள் அவரை கேலி செய்தீர்கள். அவர்தான் என்னுடைய குரு. பொதுஜன தொந்தரவுகளை தவிர்க்கவே நான் இந்த முறையில் நடந்து கொள்கிறேன்" என்று கூறினார். பின்னர் சதாசிவராவ் தலைமை மருத்துவரிடம் அனுமதி பெற்றுக் கொண்டு அவரை புனேவில் உள்ள சுக்ரவார் பீடத்துக்கு அழைத்து வந்து சேவைகள் புரிந்து கொண்டிருந்தார். காலப்போக்கில் கல்புவா மிகவும் பிரசித்தி அடைந்தார். ஸ்ரீ வாமன்புவா இவரை தரிசனம் பெற செல்வதுண்டு.

கல்புவாவின் மீது வழக்கு பதிவு செய்திருந்த பிராமணர் ஒருமுறை அக்கல்கோட்டுக்குச் சென்று ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்தார். அவரிடம் ஸ்ரீ ஸ்வாமிகள், **"ஏ! என் மீது வழக்கு போட்டதில் உனக்கு என்ன கிடைத்தது?"** என்று கோபமாகக் கேட்டார். அதைக் கேட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் கூறுவது யாரைப் பற்றி என்பதை புரிந்து கொண்டு அவரிடம் தன்னை மன்னிக்குமாறு பிரார்த்தனை செய்து கொண்டார். அனைத்து மகான்களும் ஒன்றுதானே!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 91

# கோவிந்த் பாண்டுரங் க்ஷேமி

சோலாப்பூரில் கோவிந்த் பாண்டுரங் க்ஷேமி என்கிற ஒருவர் இருந்தார். அவர் அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்துவிட்டு அமர்ந்துகொண்டார். அதே சமயத்தில் சோலாப்பூரிலிருந்து ஒரு மருத்துவர் அங்கு வந்து ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்தார். அப்போது ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அந்த மருத்துவரிடம், **"இந்த க்ஷேமியின் முகத்தைப் பார்"** என்றார்.

க்ஷேமியின் உடல்நலத்தில் எந்தவித பாதிப்பும் அப்போது இல்லை. மருத்துவர் நன்றாக பரிசோதனை செய்துவிட்டு அவர் உடலில் எந்தவித கோளாறும் இல்லை என்று கூறினார். பின்னர் சில நாட்களுக்குப் பிறகு க்ஷேமி கடுமையான ஒரு நோயால் பாதிக்கப்பட்டார்.

முற்றும் உணர்ந்த ஸ்ரீ ஸ்வாமி தன் பக்தர்களுக்கு ஏற்படப் போகும் துன்பங்களை முன்பே உணர்த்தி அவர்களை அதற்கான தயாரான மனநிலைக்கு கொண்டு வந்துவிடுவார். கர்ம வினையின் காரணமாக துன்பங்கள் என்பது வந்துதான் தீரும். அதை அனுபவித்துத்தான் தீரவேண்டும், ஆனால் ஒருவருக்கு குருவின் கடாக்ஷம் இருக்குமாயின் அந்த துன்பத்தின் வேதனை குறைக்கப்படும். அதேபோல் க்ஷேமியும் தன் கடைசி காலம் வரை இந்த நோயினால் அவதியுற்றார். இதன் காரணமாக அவரால் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்ய முடியவில்லையே என்கிற வருத்தம் அவருக்கு மிகுதியாக இருந்தது. இருப்பினும் கர்மாக்களை அனுபவித்து முடித்துவிட்டால் இன்னொரு பிறவி தேவையில்லையே! இதை க்ஷேமி உணர்ந்திருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதிலேயே திருப்தி அடைந்து கொண்டார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

*அத்தியாயம் 92*

# தூய்மையான பக்தி

ஒருநாள் விடியற்காலையில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கண்பத்ராவ் ஜோஷியின் வீட்டுக்கு வந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளை கண்டவுடன் வீட்டிலிருந்தவர்கள் அனைவரும் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தனர். ஜோஷிபுவா ஸ்ரீ ஸ்வாமிகளை அமரவைத்து அபிஷேகம், ஆராதனை செய்து சோடச உபசாரங்கள் செய்தார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகள் அணிந்து கொள்ள மஞ்சள் நிற பட்டு வேட்டியைக் கொடுத்தார். நைவேத்தியங்கள் படைத்து பூஜைகள் செய்தார். அப்போது அவருடைய மனதில் ஒரு எண்ணம் தோன்றியது.

எப்படியும் ஸ்ரீ ஸ்வாமி உணவருந்தியபிறகு இந்த மஞ்சள் நிற பட்டாடையை யாரிடமாவது கொடுத்துவிடுவாரே! என்று அவர் சந்தேகப்பட்டுக் கொண்டிருக்கும்போதே ஸ்ரீ ஸ்வாமிகள் தன் ஆசனத்திலிருந்து எழுந்துகொண்டு, **"உன் பட்டு வேட்டியை நீயே வைத்துக்கொள்"** என்று கூறிவிட்டு ஆடைகள் எதுவுமே அணியாமல் சென்றுவிட்டார். ஜோஷிபுவா மீண்டும் மீண்டும் ஸ்ரீ ஸ்வாமிகளை மன்றாடி கேட்டுக்கொண்ட போதிலும், **"நீ வேட்டியைப் பற்றி சந்தேகப்பட்டாய்"** என்று கூறியவாறே தெருவில் இறங்கி நடந்து சென்றுவிட்டார். அப்போது வைத்யா என்கிற பக்தர் தன் வீட்டுக்கு வந்து உணவருந்துமாறு அழைத்தவுடன் அவருடன் ஸ்ரீ ஸ்வாமி சென்றார்.

இந்த லீலை மிகவும் எளிமையானதாகத் தெரிந்தாலும் அதில் பொதிந்திருக்கும் உள்-அர்த்தம் மிகவும் நுட்பமானது. பக்தி என்பது தூய்மையான அன்பில் மட்டுமே இருக்கிறது, அது நாம் அளிக்கும் பொருட்களில் இல்லை. இதை புரிந்து கொண்டால் நம் வாழ்க்கை வளமாக இருக்கும் என்பதை நமக்கு உணர்த்துவதற்காக ஸ்ரீ ஸ்வாமிகள் இவ்விதமாக பொய்க் கோபத்தை வெளிப்படுத்துகிறார் என்றே தோன்ற வைக்கிறது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

*அத்தியாயம் 93*

# ஜெகன்நாத் ராவுடைய நோயை குணப்படுத்துதல்

மும்பைவாசியான ஜெகன்நாத் ராவ் என்கிறவருக்கு கால்களில் புண்கள் ஏற்பட்டு மிகவும் துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார். அவர் பலவகையான மருத்துவ முறைகளை கையாண்டும் அவை எந்தவித பலனும் அளிக்கவில்லை. அதனால் மருத்துவர்கள் முட்டிக்கு கீழேயுள்ள கால்களின் பகுதியை நீக்கிவிடலாம் என்று முடிவு செய்தனர். இதை ஜெகன்நாத்தினால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. உடல் நலிந்து மிகவும் வலுவிழந்து

காணப்பட்டார். அவருடைய நண்பர் ஒருவர் அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தால் இந்த நோயிலிருந்து விடுபடலாம் என்று தக்க சமயத்தில் அறிவுரை வழங்கினார். இதைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தவராய் தன் மனைவி, நண்பர் மற்றும் ஒரு சமையல்காரனுடன் கிளம்பி அக்கல்கோட்டில் உள்ள கண்பத்ராவ் உடைய வீட்டில் தங்கினார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அப்போது சோளப்பாவின் வீட்டில் தங்கியிருந்தார். ஜெகன்நாத் ராவ் பழங்கள் மற்றும் தேங்காய் ஆகியவற்றுடன் சென்று ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்தார். ஸ்ரீ ஸ்வாமிகளின் அதியற்புதமான உருவத்தைக் கண்டவுடன், இவர் தன் நோயை கண்டிப்பாகக் குணப்படுத்தி விடுவார் என்கிற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"மஹராஜ், என்னுடைய காலில் உள்ள நோயை சரியாக்குங்கள் இல்லையேல் என் உயிரை எடுத்து விடுங்கள்"** என்று மன்றாடி பிரார்த்தனை செய்து கொண்டார். அவர் இவ்வாறு கூறியவுடன் அவர் கண்களில் இருந்து கண்ணீர் உருண்டோடின, அவருடைய உடல் முழுவதும் கொட்டிய வியர்வையால், அவர் அணிந்திருந்த ஆடை முழுவதும் நனைந்தது. அவர் கால்களில் காயத்திற்கு போட்டிருந்த கட்டும் அவிழ்ந்து விழுந்தது. அந்த புண்கள் கூட ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்ய விருப்பப்பட்டு அவை தானாகவே தன்னை விடுவித்துக் கொண்டனவோ! அந்த புண்களைப் பார்த்தவுடன் சுற்றியிருந்தவர்கள் அனைவருக்கும் மிகவும் வருத்தமாக இருந்தது.

புண்கள் முழுவதுமாக திறந்து கொண்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **"மாதர்சோத், வலி இருக்கிறதா?"** என்று கேட்டார். உடனே ஒரு வேலையாளை புண்களுக்கு போடப்பட்டிருந்த கட்டுகளை எடுத்து அப்புறப்படுத்துமாறு கூறினார். அவற்றை பார்த்து, **"இந்த பெஹன்சோத்தை (கெட்ட வார்த்தை) தூக்கி ஏறி"** என்று கூறினார். அந்த புண்களுக்கு புது கட்டு போடப்பட்டது. அவர் மெதுவாக நடந்து பின்புறம் நோக்கிச் சென்றார். அவருடைய மனைவி ஸ்ரீ ஸ்வாமிகளுடைய பாதத்தில் தன் தலையை வைத்துக் கொண்டு தன் மாங்கல்யத்தை காப்பாற்றுமாறு கதறினாள். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் தலையை அசைத்துக் கொண்டே ஒரு சில வார்த்தைகளை கூறினார், அதை எவராலும் புரிந்து கொள்ள முடியவில்லை.

பின்னர் ஜெகன்நாத் ராவ் நடந்தவைகள் அனைத்தையும் ஜோஷிபுவாவிடம் தெரிவித்தார். நோய் கண்டிப்பாக குணமடைந்துவிடும் என்று நம்பிக்கையுடன் கூறினார். ஜெகன்நாத் தினமும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அப்படி ஒருமுறை செல்லும்




போது, **"இந்த மருந்துகளிலிருந்து எப்போது நான் விடுதலை பெறப்போகிறேனோ! யாருக்கும் தெரியாது"** என்று வெறுப்புடன் கூறினார். அதைக்கேட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி, **"புது மருந்துகள் தயாராகிக் கொண்டிருக்கின்றன"** என்று கூறினார். ஜெகன்நாத் ராவ் ஸ்வாமியின் பாத தீர்த்தத்தை மட்டுமே மருந்தாக எடுத்துக் கொண்டார். புண்களை ஈக்கள் மொய்க்காமல் இருக்க ஒரு களிம்பை தடவி கட்டு போட்டுக் கொள்வார். அவர் தன் வேலையாளின் துணையுடன் கழிப்பறைக்குச் சென்று வரும் வழியில் ஸ்ரீ ஸ்வாமி மொஹலாய்க்கு சென்றுள்ளதாக கேள்விப்பட்டார். உடனே தன் வேலையாளின் தோள் மீது தாங்கியவாறு 15 மைல்களுக்கு அப்பால் உள்ள நரகுண்டா என்கிற இடத்திற்குச் சென்றார். அப்போது ஸ்ரீ ஸ்வாமி ஒரு தர்காவில் அமர்ந்திருந்தார். ஜெகன்நாத் ராவ் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதங்களை வணங்கிவிட்டு, **"நான் இப்போது என்ன செய்வது? இந்த வலியில் இருந்து என்னை காப்பாற்றுங்கள்"** என்று கதறினார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **"முதலாளி இன்னும் வரவில்லை"** என்று பதிலளித்தார். இதைக் கேட்ட ஜெகநாத், **"கடவுளே! எனக்கு என்னையே யார் என்று தெரியாது, பிறகு முதலாளி யார் என்பது தெரியுமா?"** என்று கூறிவிட்டு தன் பையிலிருந்து வெள்ளிப் பாதுகையை எடுத்து ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் அணிவித்துவிட்டு, அதை மீண்டும் தன் பையில் போட்டுக் கொண்டார். **"இந்த பாதுகைகளின் தீர்த்தத்தைத் தவிர எனக்கு வேறு எந்தவித மருந்தும் தேவையில்லை. இந்த பாதுகைகள் என்னை காப்பாற்றட்டும் அல்லது சாவை அளிக்கட்டும்"** என்றார். ஸ்ரீ ஸ்வாமிகள் தன் கருணை மிகுந்த கரங்களை அவருடைய தலையில் வைத்து ஆசீர்வதித்தார். பின்னர் ஜென்கநாத் ராவ் அக்கல்கோட் வந்தடைந்தார். ஸ்ரீ ஸ்வாமி அக்கல்கோட் வந்தடைந்து விட்டதாக ஒரு கனவு கண்டார், விழித்திக்கொண்டவுடன் அது உண்மைதான் என்று தெரிந்து கொண்டார்.

அவருடைய நோய் மெதுமெதுவாக குறையத் தொடங்கியது. அவர் சில நாட்கள் அக்கல்கோட்டில் தங்கியிருந்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்த பிறகு மும்பை செல்ல ஸ்வாமிகளிடம் அனுமதி கேட்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் அனுமதி அளித்தார். பின்னர் சில நாட்களுக்குப் பிறகு அவருடைய கால்கள் குணமடைந்து அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தரானார். ஒருநாள் அவர் தன் கால்களை மருத்துவரான தன் சகோதரர் தாஜியிடம் காண்பித்தார். அதைக் கண்டு அவர் மிகுந்த ஆச்சரியம் அடைந்தார்.

வாழ்க்கையே முடிந்துவிட்டது என்று எண்ணிய ஒரு பக்தரின் வாழ்க்கையை முழுவதுமாக மாற்றிய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய ஒவ்வொரு லீலையையும் வெறும் வார்த்தைகளால் வர்ணித்துவிட முடியுமா என்ன?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 94

# குருடன் கண் பார்வை பெறுதல்

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தேஷ்முக்கின் வீட்டில் அமர்ந்து கொண்டிருந்தார். அவருடன் பாபா சபனீஸ், ராமதாசிபுவா, பாபா யாதவ், கோபால் பட் மற்றும் சுந்தராபாயி ஆகியோருடன் பலர் இருந்தனர். அச்சமயத்தில் ஒரு பிராமணப் பெண் தன் மகனுடன் சுந்தராபாய்க்கு அருகில் அமர்ந்திருந்தாள். ஷிவுபாய் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம், **"இந்த சிறுவனுடைய கண்பார்வை பூணூல் அணிவிக்கப்பட்ட பின் பறிபோய்விட்டது. அவனுக்கு மீண்டும் கண்பார்வை கிடைக்க அருள் புரியவேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டாள். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **"என்னை சோதிப்பதற்காக ஐந்து பிசாசுகள் வருகின்றன. அந்த சோதனையின்போது இந்த சிறுவன் கண் திறப்பான்"** என்று கூறினார். அவர் கூறி முடித்த சில நொடிகளில் தலையில் ஒரு துணியைக் கட்டிக் கொண்டவாறு ஐந்து வைஷ்ணவர்கள் அங்கு வந்தனர். அவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளைப் பற்றி முன்பே கேள்விப்பட்டிருந்தனர். அவர் சந்நியாசியாக இருப்பினும் அனைவருடைய வீட்டிலும் உணவருந்துவது எந்த தர்மத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது என்ற எண்ணம் கொண்டிருந்தனர். ஸ்ரீ ஸ்வாமிகளை போலியானவர் என்று அம்பலப்படுத்த வேண்டும் என்கிற எண்ணத்துடன் அவர்கள் வந்திருந்தனர்.

அவர்கள் ஐவரும் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் நமஸ்கரிக்க வேண்டும் என்கிற எண்ணம் கூட இல்லாமல் அமர்ந்து கொண்டு, கன்னடம் மற்றும் சமஸ்கிருதத்தில் தங்களுக்குள் உரையாடிக் கொண்டிருந்தனர். அச்சமயத்தில் ஒரு ஆச்சாரியர் ஏழு வைஷ்ணவர்களுடன் அங்கு வந்து சாஷ்டாங்கமாக ஸ்ரீ

ஸ்வாமிகளை வணங்கினர். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அந்த குருட்டு சிறுவனை தன்னருகில் வருமாறு அழைத்து, **"இந்த துஷ்டர்களின் மனதில் இருக்கும் கேள்விகளுக்கு நீ பதில் கூறு"** என்று கூறினார். அதற்கு அந்த சிறுவன், **"எனக்கு அவர்கள் பேசும் ஒரு வார்த்தை கூட புரியவில்லை. நான் எப்படி பதிலளிப்பது?"** என்று கேட்டான். உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் தன் கழுத்திலிருந்த மாலையை எடுத்து அந்த சிறுவனின் கழுத்தில் போட்டு விட்டார். அவனுடைய கண்களை சாமந்திப் பூவினால் தொட்டார். ஸ்ரீ ஸ்வாமிகளுடைய தெய்வீகக் கரங்கள் அவன் மீது பட்டவுடன் அவனுடைய கண்கள் திறந்து கொண்டன. அவன் முழு வேகத்துடன் வேதங்களில் இருந்து சில ஸ்லோகங்களைக் கூறிவிட்டு, பகவத்கீதை மற்றும் பாகவதம் ஆகியவற்றிலிருந்து ஸ்லோகங்களைக் கூறி மேற்கோள் காட்டி அந்த வைஷ்ணவர்களுடைய மனதிலுள்ள சந்தேகங்களுக்கு பதிலளித்தான்.

சிறுவனுடைய வியாக்கியானங்களைக் கேட்டவுடன் வைஷ்ணவர்களுடைய கர்வம் குறைந்து ஸ்ரீ ஸ்வாமிகளுடைய சக்திகளை உணர்ந்து கொண்டு அனைவரும் சரணடைந்தனர். அவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"நாங்கள் முட்டாள்தனமாக உங்களை சந்தேகப்பட்டு விட்டோம். தயவு கூர்ந்து எங்களுக்கு மன்னிப்பு அளிக்க வேண்டும். மனம் திருந்தி மன்னிப்புக் கேட்பவர்களை மன்னிக்க வேண்டும் என்று வேதங்களில் கூட கூறப்பட்டுள்ளதே!"** என்று கெஞ்சினார்கள். இதைக் கேட்டவுடன், **"நான் யார் வீட்டில் வேண்டுமானாலும் உணவருந்துவேன். நீங்கள் என்னையா சோதனை செய்ய வந்துள்ளீர்கள்! உன் தாய் ஒரு முஸ்லிமிடம் உறவு கொண்டிருந்தாள். நீ இமாம் பாஷாவுக்கு பிறந்தவன். நீ அதை சோதித்துக் கொள்ளவில்லை!"** என்றார். இதைக் கேட்டவுடன் அந்த வைஷ்ணவருக்கு பெருத்த அவமானமாகிவிட்டது. அவர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம், **"ஸ்வாமி, இந்த தவறுக்கு ஏதாவது பரிகாரம் இருக்கிறதா? தயவுசெய்து கூறுங்கள். நான் உங்கள் அடிமை. தயைகூர்ந்து என்னை மன்னிக்க வேண்டும். நேற்று பண்டரிநாதனுடைய வீட்டு விருந்தில் உங்களைப் பற்றி ஒருவர் கூறினார். அப்போது நாங்கள் அகம்பாவத்தில் உங்களைப் பற்றி அவதூறாகப் பேசினோம். உங்களை சோதிக்க எண்ணி இங்கு வந்தோம். என்னைவிட ஒரு மஹாபாவி யாருமே இருக்க முடியாது! இதை நான் அனுபவத்தில் உணர்ந்து கொண்டேன். நற் கர்மாக்களின் காரணமாக உங்களுடைய தரிசனத்தைப் பெற்று இன்று மன்னிப்பு கேட்கிறேன். நீங்கள் என்ன சொன்னாலும் அதற்கு கீழ் பணிகிறேன்"** என்று கூறினார்.

கருணையின் வடிவமான ஸ்ரீ ஸ்வாமிகள், **"உன் மதத்தின் சம்பிரதாயத்தின்படி நடந்து கொள். கங்கையில் நீராடியபின்னர் உன் தீய கர்மாக்கள் அனைத்திலிருந்தும் விடுபடுவாய்"** என்று ஆசீர்வதித்தார். மனமகிழ்ந்த வைஷ்ணவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதத்தில் தன் தலையை பதித்து, **"ஸ்ரீ குரு தேவ தத்த.."** என்று உரக்கமாகக் கூறிவிட்டு தன் சொந்த ஊருக்குப் பயணம் மேற்கொண்டார். பின்னர் ஒவ்வொரு வருடமும் அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதை வழக்கமாக்கிக் கொண்டார்.

ஆஹா! என்ன ஒரு அற்புதமான லீலை, குருடனுக்குக் கண் பார்வையும் கிடைத்தது, அவதூறாக அகம்பாவத்துடன் பேசியவர்களும் ஸ்ரீ ஸ்வாமியுடைய பரம பக்தர்களாக மாறினார்கள்! ஒரே நேரத்தில் பல அற்புதங்களை நிகழ்த்த ஸ்ரீ ஸ்வாமிகளைத் தவிர வேறு எவரால் முடியும்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 95

# ராமகிருஷ்ண புவா மடே

ஒருமுறை ராமகிருஷ்ண புவா மடே அக்கல்கோட் வந்திருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்துவிட்டு கீர்த்தனைகள் பாடினார். அந்த கீர்த்தனைகளில் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய சுதந்திரமான பழக்கவழக்கங்களை குறைகூறி, வேதங்களில் இருந்து மேற்கோள் காட்டி பாடல்களைப் பாடினார். மேலும் அவர், **"சங்கராச்சாரியார்தான் உண்மையான அவதாரம் என்றும், அவர் வர்ணாஸ்ரம தர்மத்தின் படி வாழ்ந்து மக்களை ஒற்றுமைப்படுத்துகிறார்"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள், **"நீ நாள் முழுவதும் எங்கு இருக்கிறாய்? உன் பணப்பெட்டியை நிரப்புவதற்காக ஒரு கடை வைத்து நடத்திக் கொண்டு உன் இஷ்டம் போல நடந்து கொள்கிறாயே! அது என்ன ஆன்மிகமா?"** என்று கேட்டார். புவா சிறிது வருத்தம் அடைந்தார்.

தன் கீர்த்தனைகளை முடித்துக் கொண்டு அவர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகில் அமர்ந்தபோது அவருக்கருகில் ஆன்மிகத்தில் மிகவும் அதீத ஞானம் பெற்ற ஒரு துறவி அமர்ந்து கொண்டிருந்தார். அவர் ஸ்லோகத்தை கூறி புவாவின் மனதில் ஏற்பட்ட சந்தேகங்களுக்கு விளக்கம் அளிக்கும் வகையில், **“நீங்கள் சதாராவில் மிகப்பெரிய ஞானி என்பதில் எந்தவித சந்தேகமும் இல்லை. நீங்கள் புனேவில் உள்ள சோமேஸ்வரர் கோவிலில் புராணக்கதைகள் கூறுகிறீர்கள். நான் உங்கள் குரு ஸ்ரீ உங்காவ்யோகவாத்கர் புவாவை பார்த்திருக்கிறேன். அவர் அகம்பாவம் துளி கூட இல்லாத ஒரு துறவி. நீங்களும் மிகவும் நல்லவர்தான், ஆனால் பிரம்மமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்ரீ தத்தாத்ரேயராக அவதரித்துள்ளார். நான்கு வேதங்களையும், ஆறு விதமான சாஸ்திரங்களையும், கடுமையான தவத்தை மேற்கொண்டாலும் இவருடைய சிறப்பை நம்மால் கனவில் கூட அறிந்துகொள்ள முடியாது. அப்படி இருக்கும்போது தினசரி வாழ்க்கையில் எப்படி சாத்தியம்? இப்படிப்பட்ட புராண புருஷரைப் பற்றி அகம்பாவத்துடன் அவர் முன்னிலையில் பேசுவது மகாபாவம். இதுபோன்ற பேச்சுக்கள் உங்களுக்கு பிரம்ம அனுபவத்துக்கு வழிவகுக்காது”** என்று அறிவுரை கூறினார்.

இந்த வார்த்தைகளை கேட்டவுடன் மடே புவா மனம் திருந்தினார். அவர் மீண்டும் மீண்டும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் மன்னிப்பு கேட்டுக்கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகளும் அவரை மன்னித்தருளினார். நாளாக நாளாக ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மீதான பக்தி அவருக்கு அதிகரித்துக் கொண்டே வந்தது. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளுடன் எட்டு முதல் பதினைந்து நாட்கள் வரை தங்கியிருந்து சேவைகள் செய்துவிட்டு கீர்த்தனைகள் பாடுவதை வழக்கமாக்கிக் கொண்டார்.

ஒருமுறை புவா அக்கல்கோட்டில் பாகவத சப்தாகம் நிகழ்த்தினார். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் தொடர்ந்து தினமும் அந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டு புராணத்தைக் கேட்டுக்கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி தொடர்ந்து ஒரு புராணத்தை கேட்டது இந்த நிகழ்ச்சியில் மட்டும்தான். மகராஜிடம், **“ஒரு பண்டிதர் வந்திருக்கிறார்”** என்று கூறினால், **“பண்டிதனாக இருந்தால் என்ன! அவன் உன் பொறுமையை துண்டுதுண்டாக வெட்டி வைத்துவிடுவான்”** என்று கூறுவார்.

ஒருமுறை காஸ்-பாகில் மடே புவாவின் கீர்த்தனை நிகழ்ச்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. அங்கு நூற்றுக்கணக்கான மக்கள் கூடியிருந்தனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒரு உயரமான மேடையில் அலங்கரிக்கப்பட்ட நாற்காலியில்

அமர்ந்திருந்தார். ஒரு கீர்த்தனையில் **“எவருடைய பாதம் நம்மை சம்சார சாகரத்தின் அக்கரைக்கு எடுத்து செல்லும்?”** என்று அவர் பாடினார். சரியாக அச்சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் வலது காலை கீழே இறக்கி விட்டுக் கொண்டார். அதைக் கண்டவுடன் பக்தி பரவசம் அடைந்த புவா தன் இடத்திலிருந்து குதித்தோடி ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தை பிடித்துக் கொண்டு **“இதுவே அந்த பாதங்கள்”** என்று கண்ணீர் விட்டுக் கதறினார். உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் தன் இடது காலையும் இறக்கியவுடன், பாளப்பா அதை இறுக்கமாக பற்றிக்கொண்டார். அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் ஆனந்தக் கண்ணீர் சிந்தி மகிழ்ச்சியில் திளைத்தனர். அனைவரையும் நல்வழிப்படுத்தி, தன் பாதகமலங்களில் சரணடைய வைத்து ரட்சிக்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருளைப் பெற்றால் ஆனந்தக் கண்ணீர் தானே வரும்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**



## அத்தியாயம் 96

# அஹமதுநகரைச் சேர்ந்த பிராமணர்

அஹமதுநகரைச் சேர்ந்த பிராமணர் தன் மனைவியுடன் அக்கல்கோட் வந்து சமர்த்தரை தரிசனம் செய்தார். அவர் மிகுந்த அன்போடு, **"நான் ஒரு ஏழை. நீங்கள் என்னுடைய சிறிய அன்பளிப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும்"** என்று கேட்டுக்கொண்டார். தூய அன்பிற்கு அடிமையான ஸ்ரீ ஸ்வாமிகள், **"எனக்கு பஜ்ஜி, கட்போலி,கீர், ஆம்தி ஆகிய பதார்த்தங்களை சமைத்துக் கொடு. பிறகு என் வயிறு நிறைந்துவிடும்"** என்று குழந்தைபோல ஆர்வத்துடன் கூறினார். அந்த பிராமணர் மிகவும் சந்தோஷம் அடைந்து அவற்றை தயாரிக்கும் முறைகளை கண்பத்ராவிடம் கேட்டுக்கொண்டு அடுத்த நாள் அவருடைய மனைவி அனைத்து உணவுகளையும் சிரத்தையோடு ருசியாக சமைத்தாள். அவர் முந்தைய நாளே பல பக்தர்களையும் ஊர்ப் பெரியவர்களையும் விருந்துக்கு அழைப்பு விடுத்திருந்தார். காலையில் ஸ்ரீ ஸ்வாமிகளை அழைத்தார். அனைவரும் விருந்துக்கு வந்துவிட்டனர், ஸ்ரீ ஸ்வாமிகள் மட்டும் இன்னும் வரவில்லை. பதட்டம் அடைந்த பிராமணர், உடனே சென்று ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை அழைக்க ஓடினார். அப்போது அவர் குதிரைக் கொட்டகையில் உள்ள ஒரு மேட்டில் அமர்ந்திருந்தார். மிகுந்த பக்தியுடன் அந்த பிராமணர் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் நமஸ்கரித்துவிட்டு உணவுக்கு வருமாறு அழைப்பு விடுத்தார். தத்த திகம்பரர் சிரித்துக்கொண்டே, **"அனைவருடைய வயிறும் நிரம்பிவிட்டால், என்னுடைய வயிறும் நிரம்பிவிடும். பிராமணர்களுக்கு முதலில் உணவளி. மண்ணை வைத்துக்கொண்டு விளையாடாதே!"** என்று கூறி அனுப்பினார். ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளுக்கு அடிபணிந்து வந்திருந்த அனைவருக்கும் திருப்திகரமாக உணவளித்துவிட்டு, தாம்பூலம் கொடுத்து வழியனுப்பி வைத்தார்.

பின்னர் மீதமிருந்த உணவை மூன்று பங்காகப் பிரித்து, தனக்கு, தன் மனைவிக்கு மற்றும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு என மூன்று தட்டுகளில் பரிமாறி வைத்தார். அச்சமயத்தில் வெளியூரில் இருந்து இரண்டு பிராமணர்கள் வந்து உணவு கேட்டனர். அந்த பிராமணர் அவர்களுக்கு ஸ்நானம் செய்துவைத்து




மரியாதையுடன் வணங்கிவிட்டு தங்களுக்கு வைத்திருந்த இரண்டு பாகங்களை அளித்தார். வந்திருந்தவர்கள் மிகவும் மகிழ்ச்சி அடைந்து மேலும் உணவு அளிக்குமாறு கேட்டனர். பிராமண தம்பதி செய்வதறியாது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்காக எடுத்து வைத்திருந்த கீர் மற்றும் மற்ற பதார்த்தங்களை அவர்களுக்கு திருப்திகரமாக பரிமாறினார்கள். உணவு துளிகூட மீதம் இல்லை! மதிய உணவுக்குப் பிறகு அனைவரும் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காகச் சென்றனர். பிராமண தம்பதி ஸ்ரீ ஸ்வாமிக்கு அருகில் அமர்ந்தனர். ஸ்ரீ ஸ்வாமி திருப்தியாக உண்டது போல கைகளால் தன் வயிற்றை சுற்றி சுற்றி தடவிக் கொடுத்துக் கொண்டார். **"பஜ்ஜி நன்றாக இருந்தது. கீர் சுவையாக இருந்தது, ஏலக்காய் கொஞ்சம் அதிகம். இனிப்பு வகைகளான பூரண் போளியும் பஜ்ஜியும் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. ஆனால் கட்பொலிதான் கொஞ்சம் காரமாக இருந்தது, ஆனால் அதுவும் சுவையாகவே இருந்தது. ஆம்தி பிரமாதம்"** என்று கூறியவுடன் அனைவரும் ஆச்சரியம் அடைந்தனர். **"விருந்துக்கு செல்லாமலே அவருடைய வயிறு நிறைந்துவிட்டதே!"** என்று கூறிக்கொண்டனர்.

அப்போது கண்ணாடி,கோட்-சூட் மற்றும் பூட்ஸ் அணிந்த டிப்டாப் ஆசாமிகள் இருவர் அனைவரையும் பார்த்து, **"ஸ்ரீ ஸ்வாமி சொல்வது உண்மையா?"** என்று கேட்டனர். அனைவரும் உணவின் சுவை ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய அதேபோல்தான் இருந்தது என்று உறுதிபடுத்தினர். உடனே ஸ்ரீ ஸ்வாமிகள், **"நீங்கள் இருவரும் இன்னொருவரின் மனைவியோடு உறவு கொண்டிருக்கிறீர்கள்! இந்த செயல்களால் நீங்கள் நரகத்திற்குப் போக வேண்டுமா? மாதர்சோத்!"** என்று கடுமையாக கண்டித்தவுடன் இருவரும் அவமானத்தில் வெளியே சென்றனர். அவர்கள் இருவருடைய மனைவிகளும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் இனி இவ்வாறு அவர்கள் நடந்துகொள்ள மாட்டார்கள் என்று கூறி மன்னிப்பு கேட்டுக் கொண்டார்கள்.

சமாராதனை செய்த அந்த பிராமணரிடம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், **"உன்னுடைய சமாராதனை திருப்திகரமாக நடந்து முடிந்தது. வீட்டுக்குச் செல். அங்கு மூலையில் இருக்கும் சரஸ்வதியின் சிலைக்கு அருகில் இலையில் அனைத்து பதார்த்தங்களும் இருக்கிறது. அவற்றை இங்கு கொண்டு வா"** என்று கூறினார். அந்த பிராமணரின் மனைவி **"வீட்டில் உணவு துளிகூட இல்லை" என்று கூறினாள். அதற்கு குருதேவர், "என்ன பேசுகிறாய்? உன் வீடு நிரம்பியிருக்கிறது"** என்று கூறினார். வீட்டுக்குச் சென்று பார்த்தபோது, இலை முழுவதும் உணவு நிரம்பியிருந்தது. மகிழ்ச்சியுடன் அவற்றை கொண்டுவந்து தங்கள் மனம் திருப்தி

அடையும் வகையில் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு பரிமாறினார்கள். சந்தோஷ மிகுதியில் அவர்கள் மீண்டும் மீண்டும் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் நமஸ்கரித்துக் கொண்டே இருந்தனர்.

பிறகு அந்த பிராமணர், **"ஸ்வாமி, நீங்கள் என்னை மண்ணோடு விளையாட வேண்டாம் என்று கூறினீர்கள் அல்லவா! நான் அந்த கட்டளையை பின்பற்றுகிறேன். தினமும் நான் பார்த்திவ பூஜை (தினமும் புது மண்ணால் விக்கிரகம் செய்து செய்யும் பூஜை) செய்கிறேன், அதை தொடர்ந்து செய்யலாமா அல்லது நிறுத்திவிடலாமா?"** என்று கேட்டார். **"மண்ணுடைய குணத்தை புரிந்துகொண்டு கர்மாவை செய். அதற்கு எந்தவித பிரதிபலனும் எதிர்பார்க்காதே! பிறகு நீ கடவுளை அடையலாம். ஒவ்வொரு கர்மாவையும் முழுமையாக புரிந்து கொண்டு செய்"** என்று அருளுரை வழங்கினார். அவர் மிகவும் மகிழ்ச்சி அடைந்து, அடுத்த நாளும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு நைவேத்தியம் படைத்துவிட்டு அதை பிரசாதமாக எடுத்துக் கொண்டார். அங்கு சில நாட்களுக்கு தங்கியிருந்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அனுமதி பெற்றுக்கொண்டு அவர்கள் தங்கள் சொந்த ஊருக்குச் சென்றனர்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 97

# மாதுளம்பழக் கதை மற்றும் சுந்தராபாய்க்கு தண்டனை

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் விநாயகர் கோவிலிலுள்ள கட்டிலில் அமர்ந்திருந்தபோது மும்பையிலிருந்து சிலர் தரிசனம் செய்வதற்காக வந்திருந்தனர். அவர்களில் வணிகர் ஒருவர் இருந்தார். அவரிடம் ஸ்ரீ ஸ்வாமிகள் மிகுந்த கோபத்துடன், **"என்னுடைய மாதுளம்பழத்தைக் கொடு"** என்று கேட்டவுடன் அவர் ஆச்சரியத்தில் உறைந்து நின்றார். பின்னர் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"மஹராஜ், நான் ஒரு விஷயம் நடைபெற்றால் உங்களுக்கு மாதுளம்பழம் அளிப்பதாக பிரார்த்தனை செய்துகொண்டேன். நான் விரும்பிய**

**படியே நடந்தது. என் வேண்டுதலை நிறைவேற்ற இரண்டு மாதுளம்பழங்களை கொண்டு வந்தேன். அதை கொடுக்க மறந்து என் பையிலேயே வைத்துவிட்டேன். தயவுசெய்து என்னை மன்னித்துவிடுங்கள்"** என்று கூறிவிட்டு உடனடியாக அவர் தங்கியிருந்த இடத்திற்கு ஒருவரை அனுப்பி மாதுளம்பழங்களை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு படைத்தார். (இதேபோல் தத்த அவதாரியான ஸ்ரீ சாய்நாதரும் நடந்து கொண்டதை நினைவு கொள்வோம்).

அவற்றை சுந்தராபாய் எடுத்து தனக்கு வைத்துக் கொண்டாள். அதில் ஒன்றை அப்போதே உதிர்த்து தன் பேரனுக்கு கொடுத்துவிட்டு, கீழே மண்ணில் விழுந்த சில பகுதிகளை எடுத்து ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் அளித்தாள். இந்த கீழ்த்தரமான நடவடிக்கையைப் பார்த்தவுடன் வாமன்புவாவும் ராமதாசிபுவாவும் மிகுந்த கோபம் அடைந்தனர். சுந்தராபாய் இதுபோன்ற மரியாதைக்குறைவாக நடந்துகொள்ளும் சமயங்களிலெல்லாம் ராமாதாசிபுவா அவளை அடிப்பதற்காக ஓடுவார். வாமன்புவாவும் அவரைத் தொடர்ந்து பைத்தியம் போல கோபத்துடன் ஓடுவார். அன்று இந்த நிகழ்ச்சி நடைபெற்ற போது ஸ்ரீ ஸ்வாமிகள் தன் கைகளை உயர்த்தி, **"வேண்டாம், பொறுமையோடு இருங்கள். வயல்வெளிகளில் சோளக்கொல்லை பொம்மைகள் பறவைகளுக்கு பயம் உண்டாக்குவதற்காக வைக்கப்படுகின்றன. அதில் இருக்கும் இந்த மண்பானையை செருப்பை கொண்டு விரட்டி அடிப்போம்"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் அவர்கள் இருவரும் அமைதியானார்கள்.

ஆறு மாதங்களுக்கு சுந்தராபாயுடைய ஆட்டம் தொடர்ந்தது. அப்போதெல்லாம் சுந்தராபாய் அல்லது சோளப்பாவின் அனுமதி இல்லாமல் எவருமே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் கூட செய்ய முடியாது. பின்னர் ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமிகள் தன்னுடைய பாதுகைகளால் அடித்து அவளை விரட்டி அனுப்பினார். அதற்குப் பிறகு அவள் தூரத்தில் அமர்ந்துகொண்டுதான் இருக்க வேண்டியதாயிற்று.

சுந்தராபாய் சோலாப்பூரைச் சேர்ந்த ஒரு விதவைப் பெண்மணி. அவள் மிகுதியான கால்வீக்கம் மற்றும் வலியினால் பாதிக்கப்பட்டிருந்தபோது ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்திருந்தாள். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருளால் நோய் குணமடைந்தது, ஆனால் அவளுக்கு ஸ்ரீ ஸ்வாமிகளின் சேவைகளில் மனம் லயித்ததால் அக்கல்கோட்டை விட்டுச் செல்ல மனமில்லை. அப்போது சோளப்பா மட்டுமே ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தமையால் அவருக்கு வேலைப்பளு அதிகமாக

இருந்தது. சுந்தராபாயுடைய உதவி அவருக்குத் தேவைப்பட்டது. இவ்வகையில்தான் சுந்தராபாய் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பிரதான சேவகியாக ஆனாள். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமிகள் சோளப்பாவிடம், **"இவள் சூழ்ச்சி செய்து உன் இடத்திற்கு வந்துவிடுவாள். அதனால் அனைத்து விஷயங்களையும் அவளிடம் கொடுத்துவிடாதே"** என்று எச்சரிக்கை செய்தார்.

நாளடைவில் சுந்தராபாய் ஸ்ரீ ஸ்வாமி தொடர்புடைய அனைத்து வேலைகளிலும் தன் ஆதிக்கத்தை செலுத்தினாள். அவளுடைய விருப்பம் இல்லாமல் எதுவுமே நடக்காது என்கிற நிலை உருவானது. அவளுடைய முந்தைய பிறவிகளில் செய்த நல்வினைகளின் காரணத்தினால் மஹராஜ் சுந்தராபாயி கூறுவதை அப்படியே கேட்டு நடக்கத் தொடங்கினார். அவள் **'உறங்குங்கள்'** என்று கூறினால் ஸ்ரீ ஸ்வாமி உடனே உறங்கிவிடுவார். அதேபோல உறக்கத்திலிருந்து விழித்துக் கொள்ளச் சொன்னாலும் பதிலேதும் கூறாமல் அப்படியே செய்வார். சாப்பிடச் சொன்னாலும், சாப்பிட வேண்டாம் என்று கூறினாலும் அப்படியே செய்வார். பக்தர்கள் அவளையே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தராக பாவிக்கத் தொடங்கினர். இதன் காரணமாக அவளுக்கு பலவிதமான அன்பளிப்புகள் கிடைத்தன. அதுமட்டுமல்லாமல் ஸ்ரீ ஸ்வாமிகளும் தனக்கு கிடைக்கும் அன்பளிப்புகளை அவளிடம் கொடுத்துக் கொண்டிருந்தார். சுந்தராபாயின் அகங்காரம் அதிகரித்தது. ஒருமுறை ஒரு பக்தர் சுந்தராபாயிக்கு எதுவும் கொடுக்காமல் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு மட்டும் இரண்டு பேடாக்களை கொடுத்துவிட்டார். அதனால் மிகவும் கோபமடைந்து ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய கழுத்தை பிடித்துக்கொண்டு, **"சாப்பிடாதீர்கள்"** என்று அவள் உரக்கமாகக் கூறினாள். என்ன ஒரு ஆதிக்கம்! இந்த உலகத்தையே ஆளும் சக்தியிடமே தன் அகங்காரத்தை காட்டிக்கொண்டிருந்தாள். அவளோ தன் பூர்வ ஜென்ம கர்மாக்களின் நற்பலன்களை அனுபவித்துக் கொண்டிருந்தாள்!

ஸ்ரீ ஸ்வாமிகள் சோளப்பாவை மறைமுகமாக அறிவுறுத்தும் வகையில், **"சோளப்பா! இந்த விதவை மிகவும் கொடுமைக்காரி ஆகிவிட்டாள்"** என்று கூறினார். சுந்தராபாய் மஹாராணியிடம் சோளப்பாவைப் பற்றி அவதூறாகக் கூறி சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்வதில் இருந்து விலக்கப்பட்டார். சுந்தராபாய் மட்டுமே ஸ்ரீ ஸ்வாமிகளை முழுவதுமாக கவனித்து வந்தாள். ஸ்ரீ ஸ்வாமிகள் எவ்வளவு முறை சோளப்பாவை அறிவுறுத்திய போதிலும் அவர் இவ்விஷயத்தை தன் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை.அதன் பலனை அவர் அனுபவித்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சுந்தராபாயின் குணங்கள் பற்றி நன்றாகத் தெரிந்திருந்தும் அவளை தனக்கு சேவைகள் செய்வதற்கு அனுமதித்தார், இருப்பினும் அவளுக்கு முக்கியத்துவம் அளிக்கவில்லை.இதுதான் ஸ்ரீ ஸ்வாமிகளுடைய கருணையான குணம். அல்லது அவளை தன் பக்தர்கள் கூட்டத்தில் இருந்து காப்பாற்றிக்கொள்ள ஒரு சோளக்கொல்லை பொம்மையாக உபயோகப்படுத்திக் கொண்டாரோ என்னவோ?

சுந்தராபாய் யாருடைய உதவியும் இல்லாமல் அனைத்து சேவைகளையும் செய்துகொண்டிருந்தாள். சில சமயங்களில் அவளுக்கு ஒரு உதவியாளரின் தேவை இருந்தது. அப்போது பாளப்பாவுக்கு சில வேலைகள் அளிக்கப்பட்டன. மிகுந்த சந்தோஷத்துடன் தனக்கு கிடைத்த அற்புதமான பாக்கியத்தை பாளப்பா எந்தவித குறையும் இல்லாமல் செய்து கொண்டிருந்தார். குங்குமப்பூ கலவை, கற்பூரம், காளைகளுக்கு தீவனம், நைவேத்தியத்திற்குத் தேவையான சர்க்கரை போன்ற சிறு சிறு விஷயங்களுக்கெல்லாம் பக்தர்களிடம் அவள் பணம் வசூலித்தாள். அவளுக்கு லஞ்சம் கொடுக்காமல் எவராலும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்யமுடியாது என்கிற நிலை உருவானது. அவள் எப்போதும் விதவைகள் அணிந்துகொள்ளும் கந்தல் துணியைத்தான் அணிந்து கொண்டிருப்பாள், ஆனால் அனைவரிடமும் சேலை வேண்டும் என்று கேட்டுக்கொண்டிருப்பாள். அவள் ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் செய்கிறாள் என்கிற இரக்கத்தில் அனைவரும் அவள் கேட்டவைகளை கொடுத்தனர். சந்தர்ப்பம் கிடைக்கும் இடங்களிலெல்லாம் பணம் வசூலிப்பாள். அவ்வாறு செய்தே பெரிய தொகையை சேர்த்து வைத்திருந்தாள். சில சமயம் பாயியின் நடவடிக்கைகளால் ஸ்ரீ ஸ்வாமி மகராஜ் பல தொல்லைகளை அனுபவித்துக் கொண்டிருந்தார்.

ஒருமுறை தத்தஜெயந்தி சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஜோஷிபுவா மடத்தில் இருந்தார். பக்தர்களின் கூட்டம் மிகவும் அதிகமாக இருந்தமையால் மஹராஜை விடியற்காலை 4 மணிக்கே குளிக்க வைத்து சாப்பாடு கொடுக்கப்பட்டது. அந்த காலை நேரத்திலேயே ஒரு பக்தர் வந்து ஒரு தட்டு முழுவதும்இனிப்புகளைக்கொடுத்துவிட்டு ஸ்ரீஸ்வாமிகளை பெற்றுக்கொள்ளுமாறு வேண்டிக்கொண்டார். அந்த இனிப்புத் தட்டு வந்த சமயத்தில்தான் ஸ்ரீ ஸ்வாமி சாப்பிட்டு முடித்து தன் வாயை கழுவிக் கொண்டிருந்தார். அந்த பக்தர் மிகவும் பதட்டமாக இருந்தமையால் சுந்தராபாயியிடம் இரண்டு ரூபாய் கொடுத்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு இனிப்பை அளிக்குமாறு கூறினார். **"ஸ்ரீ ஸ்வாமி இப்போதுதான்**

**சாப்பிட்டு முடித்திருக்கிறார். மதியம் கண்டிப்பாக அளிக்கிறேன்"** என்று கூறிவிட்டு அந்த தட்டை தன்னிடம் வைத்துக் கொண்டாள். அன்று ஆயிரக்கணக்கான பக்தர்கள் தரிசனத்துக்காக வந்து குவிந்தனர். இரவு பத்து மணி வரை கூட்டம் குறையவேயில்லை, அதனால் ஸ்ரீ ஸ்வாமி நாள் முழுவதும் சாப்பிடவே இல்லை. கூட்டம் குறைந்த பின்னர் சுந்தராபாயி பாளப்பாவிடம், **"உணவுத் தட்டு தயாராக இருக்கிறது. புதிதாக சமைக்க வேண்டாம்"** என்று கூறினாள். சுயநலமான குணத்தினால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு கெட்டுப்போன உணவை ஊட்டிவிட்டாள். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் எந்த வார்த்தையையும் கூறாமல் அந்த உணவை உண்டார். **"நீ என்ன இப்போது நவாப் ஆகிவிட்டாயா?"** என்று மீண்டும் மீண்டும் மூன்று முறை கேட்டுக்கொண்டே இருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளின் நிலையைக் கண்டு பாளப்பா மிகவும் வருத்தமடைந்தார். அவர் கண்களில் கண்ணீர் மல்க ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களை எடுத்து தன் வயிற்றின் மீது வைத்துக் கொண்டார். அவர் அழுதுகொண்டே பாயி அளித்த கெட்டுப்போன உணவை உண்ண வைத்தற்காக தன்னை மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டார்.

சுந்தராபாயுடைய பேராசை தீப்பிழம்பு போல நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே இருந்தது. ஸ்ரீ ஸ்வாமியுடைய பரம பக்தர் எவரேனும் நைவேத்தியம் கொண்டு வந்தால் அதை மறுக்காமல் ஸ்ரீ ஸ்வாமி ஏற்றுக் கொள்வார். ஆனால் சுந்தராபாயி தன்னுடைய பேராசையினால் தீய எண்ணம் கொண்டவர்கள் கொண்டு வரும் நைவேத்தியத்தைக் கூட ஸ்ரீ ஸ்வாமிக்கு ஊட்டிவிடுவாள். ஸ்ரீ ஸ்வாமி அனைத்தையும் கடந்தவர் என்பதால் அதை உண்டுவிடுவார், ஆனால் அவருடைய மனிதத்தன்மை சில நேரம் வெளிவரும்போது மிகுந்த கோபத்துடன், **"தீயவர்கள் கொண்டு வரும் உணவை கொடுக்காதே!"** என்று கூறுவார். ஒருமுறை அவள் ஒரு பக்தர் 25/- ரூபாயை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னால் ஒரு தட்டில் சமர்ப்பணம் செய்தார். அதை சோளப்பாவிடம் கொடுக்குமாறு ஸ்ரீ ஸ்வாமி கூறினார். அதை அவள் கொடுக்க மறுத்தவுடன் , மிகுந்த கோபமடைந்து தன் பாதுகைகளை அவள் மீது தூக்கி எறிந்தார். கோபத்தில் பாயி பணத்தை தூக்கி எறிந்தாள். பாயி எப்போதும் சேவகர்களை பார்த்து, **"எந்த வேலையும் செய்யாமல் தின்று தின்று கொழுத்திருக்கின்றனர்"** என்று கூறுவாள். **"ஏ! விதவையே, அவர்கள் என்ன உன் அப்பனுடைய சேவகர்களா?"** என்று ஸ்ரீ ஸ்வாமி கோபத்துடன் கூறுவார்.

அவள் இவ்வாறு பலவகையான தவறுகள் செய்துகொண்டிருந்த போதும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சுந்தராபாய் மீது மிகுந்த அன்பும் அக்கறையும் இருந்தது.

அவள் செய்யும் வேலைகளில் மிகுந்த கவனத்துடன் எந்தவித குறையும் ஏற்பட்டுவிடக்கூடாது என்பதில் முனைப்பாக இருப்பாள். சில நாட்களுக்குப் பிறகு அதில் சில குறைகள் உண்டான போதும், அவை பெரிய குறைகள் என்று கூற முடியாது. ஒருமுறை புஜங்கா என்கிற வியாபாரியுடன் அவளுக்கு ஏற்பட்ட கைகலப்பில் அவள் வருத்தமடைந்து தற்கொலை செய்துகொள்வதற்காக சென்றபோது, ஸ்ரீ ஸ்வாமிகள் அவளை காப்பற்றி அருளினார். இவ்வளவு அருட்கடாக்ஷத்தை அவள் பெற்றிருந்த போதிலும் அவளுடைய பேராசையினால் அனைத்தையும் இழந்தாள். அவள் மீது சில குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டு போலீசாரால் விசாரிக்கப்பட்டபோது அனைத்து குற்றங்களும் நிரூபணமானது. அவள் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்வது தடுக்கப்பட்டது மட்டுமல்லாமல், அவளுடைய சொத்துக்களும் பறிமுதல் செய்யப்பட்டன.

பணம், பேராசை ஆகியவை ஒருவரின் கண்ணை மறைத்து விடும் என்பதற்கு சுந்தராபாய் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. கற்பகவிருட்சம் போல் ஸ்ரீ ஸ்வாமிகள் அவளுக்கு அருகிலேயே இருந்தபோதிலும் அவரிடமிருந்து மோக்ஷத்தை கேட்காமல், பணத்தின் மீது மோகம் கொண்டு அனைத்தையும் அவள் இழந்துவிட்டாள். இவளை நாம் எடுத்துக்காட்டாக எடுத்துக்கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகளின் தெய்வீக கருணையிடம் இந்த உலகத்துக்குத் தேவையான வஸ்துக்களை கேட்பதை தவிர்த்துவிட்டு அவருடன் ஒன்றாகக் கலக்கும் பாக்கியத்தை அருள வேண்டும் என்று பிரார்த்தனை செய்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

*அத்தியாயம் 98*

# வயிற்றுவலிப் பெண்

ஒருமுறை பிரமணப் பெண் ஒருத்தி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்திருந்தாள். அப்போது ஸ்ரீ ஸ்வாமி அக்கல்கோட்டில் புதிதாக கட்டப்பட்டிருந்த கிணற்றுச் சுவற்றில் சாய்ந்தவாறு அமர்ந்து கொண்டிருந்தார். அவள் ஸ்ரீ ஸ்வாமியை வணங்கிவிட்டு, **"மகராஜ்,**

**நான் வயிற்றுவலியால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறேன். தயவுசெய்து என்னை ஏதாவது வழியில் குணப்படுத்துங்கள்**" என்று பிரார்த்தனை செய்து கொண்டாள். "**நீ எப்போது கங்கா-பாகீரதி (விதவை ஆகும் போது) ஆகிறாயோ அப்போது உன் வயிற்றுவலி குணமாகும்**" என்று கூறினார். சில நாட்களுக்குப் பிறகு க்ஷேத்ராடனத்துக்கு சென்றிருந்த அவளுடைய கணவர் இறந்துவிட்டதாக ஒரு கடிதம் வந்தது. பின்னர் அவளுடைய வயிற்று வலியும் குணமானது.

இது என்ன ஒரு விசித்திரமான லீலை? கணவனுடைய இறப்புக்கும் மனைவியுடைய நோய் குணமடைவதற்கும் ஏதாவது தொடர்பு இருக்குமா என்ன? இதன் விளக்கத்தை நம்முடைய சாதாரண மனித அறிவினால் புரிந்து கொள்ள முடியாது. அதில் பொதிந்திருக்கும் உள்-அர்த்தங்களை புரிந்து கொள்ளும் அளவிற்கு நாம் தகுதி பெறவில்லை என்றே தோன்ற வைக்கிறது! ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சரித்திரத்தில் அவர் எடுத்துக் கூறியிருக்கும் அனைத்து அறிவுரைகளுமே மிகவும் எளிமையான, நம் தினசரி வாழ்க்கையில் நடைபெறும் சாதாரண நிகழ்ச்சி போல தோன்றினாலும், அவற்றை ஆழ்ந்து கவனிக்கும் போது, அதன் விளக்கம் வேறு மாதிரியாகப் புலப்படும். அவற்றை புரிந்து கொள்ளும் ஞானத்தை நமக்கு வழங்குமாறு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் பிரார்த்தனை செய்து கொள்வோமாக!!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 99

# வேதாந்தப் பெண்

சில பெண்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்திருந்தனர். ஒரு பெண் இன்னொரு பெண்ணிடம், "**அந்த பஞ்சபாத்திரத்தில் இருக்கும் வஸ்துவை எடு**" என்று கூறினாள். உடனே ஸ்ரீ ஸ்வாமி அவர்களுக்கு அறிவுரை வழங்கும் தொனியில், "**அந்த பஞ்சபாத்திரத்தில் இருக்கும் வஸ்துவை நீதான் கொண்டு வந்தாயா? அப்படியென்றால் அதன்**

**சரியான விளக்கத்தை அளித்துவிட்டு நீ எடுத்துக் கொள்ளலாம்**" என்று கூறினார். அந்த பெண் குபீரென்று சிரித்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் நமஸ்கரித்தாள். **"போய் வடவிருக்ஷத்தை(ஆலமரம்) சுற்று, அதன் அர்த்தம் உனக்கு புரியும்"** என்று கூறினார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியபடியே அவள் வடவிருக்ஷத்தை சுற்றிவிட்டு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் உணர்ச்சி பொங்கும் வகையில் விவரிக்க தொடங்கினாள். **"பஞ்சபூதங்களை உள்ளடக்கிய உடலே பஞ்சபாத்திரம். அதில் இருக்கும் வஸ்து என்பது ஆத்மா. வடவிருக்ஷத்தை சுற்றுவது என்பது சத்சங்கத்தினால் ஏற்படும் அக மாற்றங்களின் அனுபவங்கள். நான் உங்களுடைய பாதங்களில் நமஸ்கரித்தவுடன் என் துயரங்கள் அனைத்தும் மறைந்து போயின. ஸ்வாமி, என்னால் சரியாக சமைக்கக் கூட முடியாதபோது எப்படி பக்தியைப் பற்றியும், ஞானத்தைப் பற்றியும், தியாகத்தைப் பற்றியும் புரிந்துகொள்ள முடியும்?"** என்று கேள்வி எழுப்பினாள்.

**"தங்கள் வாழ்நாள் முழுவதும் ஹட யோகம், ராஜயோகம் போன்ற யோக முறைகளைப் பயிற்சி செய்பவர்களே அந்த வஸ்துவைப் பற்றி புரிந்துகொள்ள சிரமப்படுகின்றனர். நாள் முழுவதும் நெருப்பில் நின்று சமைத்துக் கொண்டிருக்கும் என்னை போன்ற ஒருத்தி ப்ரம்மஞானத்தை அனுபவிப்பதற்கு சாத்தியமே இல்லை. என்னுடைய சிறு அறிவைக் கொண்டு, சம்சார வாழ்க்கையின் அர்த்தமற்ற நிலையையும், ஞானிகளின் தொடர்பினால் கிடைக்கும் பேரானந்த நிலையையும் புரிந்து கொண்டேன். இதை என் அனுபவத்தில்தான் கூறுகிறேன்"** என்றாள். அவள் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் புரிந்துவிட்டு தன் சொந்த ஊருக்குச் சென்றாள்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் போன்ற ஒரு யோகியின் ஸ்பரிசம் கிடைத்தால், சாதாரண குடும்பப்பெண் கூட ஞானியாகலாம் என்பதை இந்த நிகழ்ச்சி நமக்கு உணர்த்துகிறது அல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 100

# வயதான பெண்மணிக்கு குழந்தை பாக்கியம்

மடே என்கிற குடும்பப் பெயருடன் கூடியப் பெண் ஒருத்தி தன் கணவருடன் அக்கல்கோட் வந்தாள். அச்சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் காஸ்-பாக் பகுதியில் தன் பக்தர்கள் புடைசூழ அமர்ந்திருந்தார். இந்த வயதான தம்பதி தங்களுக்கு வாரிசு இல்லையே என்கிற கவலையில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்ய வந்திருந்தனர். சில நாட்களுக்குப் பிறகு அவள் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் பிரார்த்தனை செய்து கொண்டபோது அவர், **"ஏ! உன் குழந்தையை எடுத்துக் கொள்"** என்று கூறிக்கொண்டே ஒரு தேங்காயை அவள் மடிமீது தூக்கி எறிந்தார். அங்கு சுற்றியிருந்தவர்களில் சிலர் அந்த பெண்மணியிடம், **"உங்களுடைய வயது என்ன?"** என்று கேட்டதற்கு அவள், **"அறுபது"** என்று கூறினாள்.

என்ன வயதாக இருந்தால் என்ன? ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய ஆசீர்வாதங்கள் இருக்கிறதே! அவர் கூறியபடியே ஒரு வருடத்திற்குள் அவளுக்கு குழந்தை பாக்கியம் கிடைத்தது. ஆம், அவளுக்கு ஒரு மகன் பிறந்தான். அவளுடைய சொந்த ஊர் தளேகாவ், அவள் மிகுந்த பக்தி நிறைந்தவள். அவளிடம் எவரேனும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜைப் பற்றி ஏதாவது கூறினாலே ஆனந்தப்பெருக்கில் அவள் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடும்.

திருமணமானவர்களுக்கு குழந்தையின்மை என்பது அக்காலம் தொட்டு இப்போது வரை பெரிய சங்கடத்தை ஏற்படுத்திக் கொண்டுதான் இருக்கிறது. இந்நாட்களில் மருத்துவர்களை அனைவரும் நாடுகின்றனர். அப்போது நடமாடிக் கொண்டிருந்த வைத்தியநாதனான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை நாடியவுடன், எந்த வயதிலும் அவர்களுக்கு குழந்தை வரத்தை அளித்து அவர்களுடைய துன்பத்தை நீக்கி அருளினார். இன்றும் உண்மையான நம்பிக்கை மற்றும் பக்தியுடன் வழிபடும் அனைத்து அடியவர்களுக்கும் அந்த பாக்கியத்தை அருளிக் கொண்டுதான் இருக்கிறார் என்பதில் எந்தவித ஐயமும் இல்லை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# அத்தியாயம் 101

# அப்பா பாட்டீலின் கதை

கேசி என்கிற நகரம் அக்கல்கோட்டிலிருந்து சுமார் 15 மைல்கள் தொலைவில் இருக்கிறது. அந்த ஊரைச் சேர்ந்த அப்பா பாட்டீல் என்கிற அடியவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பரம பக்தர். ஸ்ரீ ஸ்வாமி கேசி நகரத்துக்கு அடிக்கடி செல்வார். அவ்வாறு ஒருமுறை சென்றிருந்த போது ஒரு மாருதி கோவிலில் தங்கியிருந்தார். இதைக் கேள்விப்பட்டு மிகவும் மகிழ்ச்சி அடைந்த அப்பா பாட்டீல் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சுவையான உணவு வகைகளை தயார் செய்துகொண்டு அவரை தரிசிக்கச் சென்றார். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகளுடைய வருகையை அறிந்து கொண்டு நல்துர்காவின் ஆட்சியாளரும் தரிசனம் செய்வதற்காக வந்தார். அவருடன் ஒரு காவல் அதிகாரியும் வந்திருந்தார். துணை ஆட்சியர் ஸ்ரீ ஸ்வாமி மகராஜிடம், **"எங்களுடைய நகரத்துக்கும் ஸ்வாமிகள் வரவேண்டும்"** என்று கோரிக்கை விடுத்தார். **"ஒரு சிறிய குதிரையை கொண்டு வந்தால் நான் அங்கு வருகிறேன்"** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறினார். **"உன் அஹங்காரம் குறைந்தால் நான் உன்னுடன் வருகிறேன்"** என்பதுதான் ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய வார்த்தைகளின் உள்-அர்த்தம். இதை அந்த ஆட்சியாளரால் புரிந்துகொள்ள முடியுமோ!

அந்த ஆட்சியாளர் ஒரு புதிய குதிரை வாங்கலாம் என்கிற எண்ணத்தில் காவல் அதிகாரியை நகரத்தினுள் சென்று வாங்கி வரச் சொன்னார். அந்த அதிகாரி அப்பா பாட்டீலுடைய பெண் குதிரையை 300/- ரூபாய் கொடுத்து வாங்கினார். அதை சேணத்தினால் கட்டி இழுக்க முயன்றபோது, அது அவருடன் வர மறுத்தது. அச்சமயத்தில் பாட்டீல் அவர் குடும்பத்துடன் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காகச் சென்றிருந்தார். வீட்டில் ஒரு வயதான பெண்மணி மட்டுமே இருந்தாள். அந்தப் பெண் பாட்டீல் வீட்டில் இல்லாததால் அவர் வந்தவுடன் அவருடைய அனுமதியுடன் குதிரையை கொண்டு செல்லுங்கள் என்று கேட்டுக்கொண்டாள். ஒரு காவல் அதிகாரி வயதான பெண்மணியின் வேண்டுகோளை ஏற்றுக்கொள்வானா? அவன் அக்குதிரையை வலுக்கட்டாயமாக இழுத்துக் கொண்டிருந்தான். வயதான பெண்மணி நடந்து கொண்டிருக்கும் விஷயங்களைப் பற்றி கோவிலுக்குச் சென்று பாட்டீலிடம் தெரிவித்தாள். அப்பா கோவிலிருந்து வந்து அந்த

காவல் அதிகாரியிடம், **"நான் இந்த நகரத்தின் பாட்டீல்(தலைவர்). நான் உங்களுக்கு என்னுடைய நான்கு குதிரைகளை வேண்டுமானாலும் கொடுக்கிறேன். இந்த குதிரையை விட்டுவிடுங்கள்"** என்று கூறினார். சிறிய வாக்குவாதத்திற்குப் பிறகு பாட்டீல் தன் பெண் குதிரையை அவரிடமிருந்து பெற்றுக் கொண்டார். பிறகு காவல் அதிகாரி ஒரு வளர்ந்த குதிரையை கொண்டு சென்று ஸ்ரீ ஸ்வாமி மகராஜை தன்னுடன் வருமாறு அழைத்தவுடன் அவர், "நான் வரமாட்டேன். நீ வேண்டுமானால் உட்காந்து கொள்" என்று கூறிவிட்டார்.

துணை ஆட்சியாளரும் காவல் அதிகாரியும் ஏமாற்றம் அடைந்தனர். காவல் அதிகாரி பாட்டீல் தன்னிடம் மிகவும் கோபமாக நடந்துகொண்டார் என்று ஆட்சியாளரிடம் கூறினார். கோபம் அடைந்த துணை ஆட்சியாளர், அப்பா பாட்டீலை சந்தித்து, **"நீ மிகவும் முரட்டுத்தனமாக நடந்து கொண்டாய். அதற்கான தண்டனையை நீ அனுபவித்தாக வேண்டும்"** என்று கூறினார். பாட்டீல் அவரை சமாதானப்படுத்த எவ்வளவோ முயற்சி செய்தும் எதுவும் முடியவில்லை. துணை ஆட்சியாளர், **"எட்டு நாட்களுக்குள் உன் கைகளில் கைவிலங்கை மாட்டவில்லை என்றால் நான் துணை ஆட்சியாளராக இருக்கமாட்டேன்"** என்று சவால் செய்துவிட்டு சென்றார். பாட்டில் அழுதுகொண்டே ஸ்ரீ ஸ்வாமி மகராஜிடம் சென்று, **"துறவிகளையும் ஞானிகளையும் தரிசனம் செய்தால் பக்தரின் வாழ்க்கையிலுள்ள கஷ்டங்கள் தீரும் என்றுதான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் இன்று எனக்கு மிகவும் மோசமான அனுபவங்கள் கிடைத்தன. ஸ்வாமி, உங்களால் மட்டும்தான் என்னைக் காப்பாற்ற முடியும்"** என்று அவர் பாதங்களில் விழுந்து கதறினார். பக்தவத்சலனான ஸ்ரீ ஸ்வாமிகள் மிகுந்த அன்பு நிறைந்தவராய் மாறி, **"நான் அந்த மாதர்சோத்தை பல லட்சம் முறை அடித்து உதைப்பதுதான் சரி. இந்த கதியில் (பதவி) இருந்து அவனை வெளியே துறத்தி விடுகிறேன்"** என்று கோபமாக கூறினார். அவருடைய கோபத்தின் வெளிப்பாடு அவர் அமர்ந்திருந்த கட்டிலில் வெளிப்பட்டது, அது பயத்தில் நடுங்கிக்கொண்டிருந்தது. பிறகு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அக்கல்கோட்டுக்கு சென்றுவிட்டார். சில நாட்களுக்குப் பிறகு எவன் பாட்டீலிக்கு கைவிலங்கு மாட்டுவதாக சவால் விடுத்தானோ அவனுக்கு கைவிலங்கு மாட்டப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டான், அவனுடைய பதவியும் பறிபோனது.

எவரொருவருக்கு குருவின் துணை இருக்கிறதோ அவர்களை கடவுளால் கூட ஒன்றும் செய்துவிட முடியாது. குருவின் அருட்கடாக்ஷம் இருக்கும்

போது எந்தவிதமான துன்பங்களும் நம்மிடம் வர அஞ்சும் தானே! குருவிடம் முழுமையாக சரணடைந்து நன்மை பெறுவோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 102

# தாஜிப போஸ்லே

ஸ்ரீ ராஜா சாஹேபின் மந்திரியான தாஜிப போஸ்லே மிகவும் கண்டிப்பானவர், இரக்கமற்றவர். அவருடைய தவறான நடத்தையினால் அக்கல்கோட் அரசவையில் இருந்து ஆங்கில அரசாங்கம் அவரை பணிநீக்கம் செய்துவிட்டது. ஆனால் அரசருக்கு அவர் மீதிருந்த அதீத அன்பினால் 50,000/- ரூபாய் அபராதம் செலுத்தி விட்டு, ஆங்கில அரசாங்கத்திடம் அவருக்கு உத்தரவாதம் அளித்திருந்தார். தாஜிப போஸ்லேவுக்கு மேலாளர் பணி அளிக்கப்பட்டது.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நரசிங்க ராவ் போஸ்லேவின் வீட்டில் அமர்ந்திருந்தபோது திடீரென கடுங்கோபம் அடைந்து, அவருடைய முகம் தங்கம் போலானது. நடப்பது எதுவும் புரியாமல் பக்தர்கள் அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருந்தனர். அனைவரும் ஒரு மறைவான இடத்தில் ஒளிந்துகொண்டு நடக்கப்போகும் அற்புதங்களைப் பார்க்க ஆவலாக இருந்தனர். ஸ்ரீ விஸ்வராவ் மானே சற்று துணிவு மிகுந்த பக்தர், இருப்பினும், அவராலேயே ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னால் நிற்க முடியவில்லை. "**ஒரு புலிக்கு முன்னால் கூட நின்று விடலாம், ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் கோபமாக இருக்கும்போது எவருக்கும் அவர் முன் நிற்கும் துணிச்சல் கிடையாது**" என்று கூறுவார். மகராஜ் மிகுந்த கோபத்துடன், "**ஏ மாத்ராகமனி (கெட்ட வார்த்தை), ஏன் கேலி செய்கிறாய்? இந்த கழுதை தன் தாயுடன் உறவு கொண்டவன். இவன் ஒரு ஹராம்கொர் (தந்திரக்காரன்), திருடன். சாலே, யார் இந்த தாஜாவை இங்கு அழைத்து வந்தது? போலீஸ் அவனை கண்டுபிடித்து கைது செய்வார்கள்**" என்று கோபமாகக் கூச்சலிட்டார். அவ்வாறு கூறிவிட்டு சில நிமிடங்களுக்கு





அமைதியாக இருந்தார். எவரையும் அவருக்கு அருகில் வருவதற்கு அனுமதிக்க வில்லை. இவை அனைத்தையும் யாரோ ஒருவர் அரசரிடம் தெரிவித்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் இவ்வாறு கூறுகிறாரே என்று அரசர் விழிப்புடன் இருக்க வேண்டாமா? செல்வம் அவர் கண்ணை மறைத்தது. அரசர் தாஜிபா ஒரு விலைமதிக்க முடியாதவன் என்று எண்ணிக் கொண்டிருந்தார்.

தாஜிபா அக்கல்கோட் வந்த பிறகு ஆட்சியில் பல குளறுபடிகள் ஏற்பட்டன. சிறுசிறு குற்றங்களுக்கெல்லாம் கடுமையான தண்டனை விதிக்கப்பட்டன. அவருக்கு சாதகமாக சில மந்திரிகள் இருந்துகொண்டு மக்களை சித்திரவதை செய்தனர். பூ திருடியதற்குக்கூட தூக்கு தண்டனை வழங்கப்பட்டது. அரசரின் தூரத்து உறவினரான பாபுசாஹேப் நிம்பல்கர், பகேஹலி என்னும் இடத்திற்கு சிற்றரசராக இருந்து வந்தார். அவர் ஒருவரின் மீது செருப்பை தூக்கி எறிந்ததற்காகக் குற்றம் சாட்டப்பட்டார். எண்பது வயது ஆன இவருக்கு ஒரு வருட சிறை தண்டனையும் 1000/- ரூபாய் அபராதமும் வழங்கப்பட்டது. இதே போல பலருக்குக் கடுமையான தண்டனைகள் அளிக்கப்பட்டு துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தனர்.

சிந்தோபந்த் டோல் சரியாக கணக்குகள் பார்க்கவில்லை என்று தாஜிபா வருவாய்த்துறை அதிகாரியிடம் புகார் அளித்தான். அரசாங்கம் நஷ்டத்தில் செல்வதாகக் கூறி அப்பாவி மக்கள் மீது அதிகமான வரி சுமத்தப்பட்டது. இதுபோல பல குழப்பங்கள் உண்டான காரணத்தினால், அக்கல்கோட் அரசாங்கம் கவிழ்க்கப்படும் என்ற பேச்சு நிலவியது. அச்சமயத்தில் காடே என்கிற நகரத்தில் இருந்து ஒரு பண்டிதர் அரசருக்கு புத்திமதி சொல்வதற்காக வந்திருந்தார். அவர் ஏன் இங்கு வந்திருக்கிறார் என்று அரசர் கேட்டதற்கு, **“ஒரு அரசனுக்கு நல்ல புத்திமதி கூற வேண்டியது அண்டைய அரசாங்கத்தின் கடமை”** என்று கூறினார். அவர் அரசியல் நெறிமுறைகளை எடுத்துக் கூறிவிட்டு புராணத்திலிருந்து ஒரு கதையைக் கூறினார். **“நூற்றுக்கணக்கான மக்களை ஏற்றிக்கொண்டு ஒரு கப்பல் சென்று கொண்டிருந்தது. அந்த கப்பல் மூழ்கும் நிலை உருவானது. அப்போது ஒரு மீன் வந்து ஒரு குறிப்பிட்ட மனிதரை அந்த கப்பலைவிட்டு வெளியேற்றினால் கப்பல் பாதுகாப்பாக தரையிறங்கும் என்று கூறியது. அவ்வாறு செய்தவுடன் கப்பலில் இருந்த அனைவரும் பாதுகாப்பாக கரையை அடைந்தனர். அதேபோல் இந்த நாட்டில் தேவையில்லாதவர்களை வெளியேற்றி மக்களைக் காப்பாற்றுங்கள்”** என்று கூறிவிட்டுச் சென்றார். அகம்பாவத்தால் அரசன் அவர் கூறியதை ஏற்றுக்கொள்ளவில்லை. அந்த பண்டிதர் சென்றவுடன் அரசரும் தாஜிபாவும் **“இவன் யார் நமக்கு புத்திமதி சொல்வதற்கு? நமக்குத் தெரியாத நெறிகளா!”** என்று அவரை கேலி செய்தனர்.

ஒருநாள் மாலை நேரத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒரு வீட்டின் வெளிப்புறத்தில் அமர்ந்திருந்தார். அப்போது அந்த வீட்டைக் கடந்து சில மந்திரிகள் (தாஜிபாவின் சகாக்கள்) குதிரையில் சென்று கொண்டிருந்தனர். அவர்களைப் பார்த்தவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் தன் பணியாளை அழைத்துக்கொண்டு சென்று, **"ஏ! மாத்ராகமனி, ஒரு அடி மேலே எடுத்து வைத்தாய் என்றால் உன் தலையை நொறுக்கி சுக்குநூறாக்கி விடுவேன். திருடர்களே, ஏமாற்றக்காரர்களே! என் குழந்தைகளை எரித்து விட்டீர்களே! நீங்கள்தான் நெருப்பு வைத்தீர்கள்"** என்று குற்றம் சாட்டினார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய கோபமான முகத்தைப் பார்த்தவுடன் அவர்கள் பயந்து கொண்டு தங்கள் குதிரையை திருப்பிக்கொண்டு சென்றனர். மஹராஜ், **"பணிநீக்கம்..."** என்று உரக்கமாக கூறினார்.

சில நாட்களிலேயே அரசாங்கம் கையகப்படுத்தப்பட்டு தாஜிப போஸ்லே சிறையில் அடைக்கப்பட்டான். அரசர் மீதும் ஒரு வழக்கு போடப்பட்டது. ஸ்ரீ ஸ்வாமிகள் எவ்வளவு முறை எச்சரித்தும் அரசன் அகம்பாவத்தால் அவற்றை தன் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை.

அகம்பாவம், பணம் போன்றவை ஒருவருடைய கண்ணை மறைக்கும் போது, நல்லவர்கள் மற்றும் ஞானிகளுடைய அறிவுரை கொஞ்சம் கூட அவர்களுடைய மனதில் ஏறாது. அத்தகைய நடவடிக்கைகளின் பலன்களைக் கண்டிப்பாக அனுபவித்துத்தான் ஆகவேண்டும். தக்க நேரத்தில் நமக்கு எவரேனும் நமக்கு அறிவுரை வழங்கினால் அவற்றை அலட்சியம் செய்யாமல் யோசித்து செயல்படுவோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 103

# கண் நோயும் பூனைப் பாலும்

புனேவைச் சேர்ந்த கங்காபாரதி உமாபாய் சாஹேபுடைய மருமகளான சீமதாயிக்கு திருமணம் நடந்துமுடிந்த சில நாட்களில் கடுமையான கண் நோயினால் பாதிக்கப்பட்டிருந்தாள். அவளுக்கு இரவு பகல் வித்தியாசம் தெரியாத அளவுக்கு நோயின் தீவிரம் அதிகமாக இருந்தது. அவளுக்கு ரூபாய் 1200/- வரை செலவு செய்து பலவகையான வைத்திய முறைகளை செய்து பார்த்தும் எதுவும்

பலனளிக்கவில்லை. அவளுக்குக் கண் பார்வை மீண்டும் கிடைப்பது கடினம் என்று வைத்தியர்கள் கைவிரித்துவிட்டனர். கடைசி பட்சமாக அவர்களுடைய நண்பர் ஒருவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தால் அவருடைய ஆசீர்வாதத்தினால் ஏதாவது பலன் கிடைக்கலாம் என்று நம்பிக்கை அளித்தார். வைத்தியர்களுக்கெல்லாம் வைத்தியரான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை உமாபாய் மற்றும் சீமதாயி ஒரு குமாஸ்தாவுடன் சென்று தரிசனம் செய்தனர். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் கிணற்றடியில் அமர்ந்திருந்தார். அனைவரும் நமஸ்கரித்தபின், குமாஸ்தா ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"ஸ்வாமி, இந்தப் பெண்ணுக்கு கண்பார்வை போய்விட்டது. தயவுசெய்து மீண்டும் கிடைக்க அருள் புரிய வேண்டும்"** என்று கேட்டுக் கொண்டார். உடனே மஹராஜ், **"உனக்கு என்ன வேண்டும்?"** என்று அப்பெண்ணிடம் கேட்டார்.

சீமாதாயி வயதில் சிறியவளாக இருந்தபோதிலும் எந்தவித பயமும் இல்லாமல், **"என் கண்களைத் தவிர எனக்கு வேறென்ன வேண்டும்"** என்று தைரியமாகக் கூறினாள். இதைக் கேட்டவுடன் மஹராஜ் அன்புபொங்கும் புன்னகையோடு, **"மியாவ்,மியாவ்... என்று கத்தும் பூனையின் பாலை ஏழு நாட்களுக்குக் குடி. உன் கண் பார்வை கிடைத்துவிடும்"** என்று கூறி அருளினார். அனைவரும் புனேவுக்கு வந்து ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியபடியே செய்தனர். ஏழாவது நாள் அவள் தன் பார்வையை மீண்டும் பெற்றாள். நோய் முற்றிலும் குணமானது.

வைத்தியர்கள் அனைவரும் இந்த அற்புதத்தைக் கண்டு ஆச்சரியம் அடைந்தனர். பூனைப் பாலுக்கும் கண் பார்வைக்கும் ஏதாவது தொடர்பு இருக்குமா! இது போன்ற வினோதமான வைத்திய முறைகளை நாம் முன்பு எங்காவது கேள்விப்பட்டிருக்கிறோமா? ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய கருணை இருந்தால் அனைத்தும் சாத்தியமே!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 104

# மைசூரைச் சேர்ந்த நரசப்பா

மைசூரிலிருந்து அறுபது வயது மதிக்கத்தக்க நரசப்பா என்கிற அடியவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்ய அக்கல்கோட் வந்திருந்தார். அவருக்கு மராத்தியோ அல்லது ஹிந்தியோ பேசத் தெரியாது, ஓரிரு வார்த்தைகள்

மட்டுமே பேசுவார். தன் விருப்பங்களை எப்படி ஸ்ரீ ஸ்வாமிகளிடம் விவரிப்பது என்று தவித்துக் கொண்டு, தினமும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகிலேயே அமர்ந்து கொண்டிருப்பார். ஸ்ரீ ஸ்வாமிகள் தன் பக்தர்களின் மனதைப் படித்துவிடுவார் என்பதை அவர் அறிந்திருக்கவில்லை.

ஒருநாள் புராண கதை நிகழ்ச்சி ஒன்று ஸ்ரீ ஸ்வாமிகளின் முன்னிலையில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அப்போது ஒரு அற்புதம் நடைபெற்றது. அப்போது நரசப்பா கதாகாலட்சேபம் செய்பவருக்கு அருகில் அமர்ந்திருந்தார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் நரசப்பாவை கண்ஜாடை காட்டி தனக்கு அருகில் வருமாறு அழைத்தார். மிகவும் மகிழ்ச்சியடைந்த நரசப்பா, ஸ்ரீ ஸ்வாமிகளை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துவிட்டு தன் கைகளைக் கூப்பியவாறு நின்றுகொண்டிருந்தார். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் அவருக்கு அருகில் அமர்ந்திருந்த ஒரு குமாஸ்தாவிடமிருந்து அவர் கணக்கு புத்தகத்தை வாங்கி நரசப்பாவிடம் கொடுத்தார். அதில் கன்னட மொழியில், **"பகவத்கீதை பாராயணம் செய்தால் நீ நினைப்பது நிறைவேறும்"** என்று எழுதப்பட்டிருந்தது. அவருடைய மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. வரும் வழியில் வேத வித்தகரான தத்தாத்திரேய புவாவிடம் நடந்தவைகளை மிகவும் சந்தோஷமாக அவர் விவரித்தார்.

இந்த நிகழ்ச்சி நடைபெற்ற சமயத்தில் தத்தாத்திரேய புவா ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடன்தான் இருந்தார். அவர் உடனே வந்து குமாஸ்தாவிடமிருந்த புத்தகத்தை வாங்கிப் பார்த்தார். அதை எவ்வளவு முறை சோதனை செய்து பார்த்தபோதும் கன்னட மொழியில் எதுவும் எழுதப்பட்டிருக்கவில்லை. ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் எப்படி தன் பக்தர்களின் எண்ணங்களை உணர்ந்துகொண்டு, அவர்களுக்குக்கான மார்க்கத்தை போதிக்கிறார் என்கிற அற்புதத்தை நினைத்து தத்தாத்திரேய புவா மிகவும் பூரிப்படைந்தார். தன் வீட்டுக்கு வந்து நரசப்பாவுக்கு கீதையை விவரிக்கத் தொடங்கினார்.

ஒருநாள் இரவு நேரத்தில் கதாகாலட்சேபம் செய்பவரும், ஒரு வேதாந்த சந்நியாசியும் வேதாந்தத்தை பற்றி சம்பாஷணை செய்து கொண்டிருந்தனர். அவர்களுக்கு அருகில் உறங்கிக் கொண்டிருந்த நரசப்பா உடல் முழுவதும் வியர்வையோடு நடுங்கிக்கொண்டே விழித்துக் கொண்டார். கண்ணீர் அவர் கண்களிலிருந்து வழிந்தோடியது. **"ஸ்ரீ ஸ்வாமி மகாராஜ்தான் சிறந்த கடவுள்"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் அந்த சந்நியாசி, **"மஹராஜ்தான் மிகச்சிறந்த கடவுள் என்று எதை வைத்து முடிவு செய்தாய்?"** என்று கேட்டார். **"ஸ்வாமி என்னை வைகுண்டத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கு தங்கத்திலான**

**கோவில் இருந்தது. வைர வைடூரியங்கள் பதிக்கப்பட்ட ஒரு சிம்மாசனம் இருந்தது. நான் ஸ்ரீ ராமர், சீதாதேவி, லக்ஷ்மணர், பரதர், ஷத்ருகுணர் மற்றும் ஹனுமனை தரிசனம் செய்தேன். அவர்கள் அனைவரையும் தரிசனம் செய்தவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் என்னை மீண்டும் இங்கு அழைத்து வந்துவிட்டார். ஆஹா! வைகுண்டத்தையும் ஸ்ரீ ராமரையும் நான் எப்படி வர்ணிப்பது? அந்த ஒளி என் கண்களை குருடாக்கி விடும் போலல்லவா இருந்தது!"** என்று கூறிவிட்டு சிறிது நேரத்திற்கு பைத்தியம் போல சிரித்துக் கொண்டும் அழுது கொண்டும் இருந்தார். பின்னர் சாதாரண நிலையை அடைந்து, ஒரு மணி நேரத்திற்கு மௌனமாகவே இருந்தார். அன்றிலிருந்து நரசப்பா ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய தீவிரமான பக்தராக ஆனார்.

சில நாட்களுக்குப் பிறகு நரசப்பாவுக்கு கைகளில் வலி ஏற்பட்டு துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார். ஏழு நாட்களுக்குப் பிறகு அவர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் சென்று, **"ஸ்வாமி, ஏழு நாட்களாக நான் கை வலியால் தவித்துக் கொண்டிருக்கிறேன். ஏதாவது வைத்தியம் கூறுங்களேன்"** என்று வேண்டிக்கொண்டார். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் ஹுக்கா புகைத்துக் கொண்டிருந்தார். **"வா, உன் கை வலியை குணமாக்குகிறேன்"** என்று கூறிவிட்டு தனக்கருகில் வருமாறு அழைத்தார். அவருடைய வாயிலிருந்து புகையை நரசப்பாவின் கைகளின் மீது ஊதினார். ஆஹா! என்ன ஒரு அற்புதமான சக்தி! நரசப்பாவின் கைவலி அந்த க்ஷணமே மறைந்து போனது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 105

# ஊமைக்குப் பேச்சாற்றல்

ஊமை பிராமணர் ஒருவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பன்னிரண்டு வருடங்களாக சேவைகள் செய்து வந்தார். அவருடைய சேவைகளில் மனமகிழ்ந்து ஸ்ரீ ஸ்வாமிகள் அவரை ஒருநாள் தனக்கருகில் அழைத்து தான் மென்று கொண்டிருந்த தாம்பூலத்தை உமிழ்ந்து அந்த பிராமணரிடம்

கொடுத்து, **"இதை சாப்பிட்டுவிட்டு உன் வேலைகளைச் செய்"** என்று கூறினார். அந்த தாம்பூலத்தை சாப்பிட்டவுடன் அவருக்கு பேச்சாற்றல் வந்துவிட்டது.

இந்த சேவகர் எவ்வளவு பக்தி நிறைந்தவர்! சர்வ வல்லமை நிறைந்த ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரால் முடியாதது எதுவுமே இல்லை என்பதை இவர் நன்கு அறிந்திருந்தாலும், தனக்கு அருகிலேயே ஸ்ரீ ஸ்வாமி இருந்த போதிலும், அவரிடம் தன் ஊனத்தை குணப்படுத்துமாறு பிரார்த்தனை செய்து கொள்ளவே இல்லை! இருப்பினும் எப்படி ஒரு தாய் தன் குழந்தையின் தேவைகளை உணர்ந்து கொள்வாளோ, தாயுமானவரான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் ஒரு பக்தனின் தேவையை அறிந்து அவரே அனைத்தையும் அளித்துவிடுகிறார். அப்படியிருக்க, நாம் பிரார்த்தனைகள் செய்ய வேண்டியது அவசியம் தானா? ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதகமலங்களில் சரணடைவதைத் தவிர வேறு எந்தவித சிந்தனையும் தேவையில்லை என்பதை அல்லவா இந்த நிகழ்ச்சி நமக்கு உணர்த்துகிறது!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 106

# சௌபாக்யவதி

ஒருமுறை சங்கராந்தி பண்டிகையின் போது ஒரு பெண் தில்குல் (எள்ளு உருண்டை) இனிப்பை எடுத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்திருந்தாள். அவள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், "ஸ்வாமி, இந்த கடைசி தில்குல்லை எடுத்துக்கொண்டு உங்கள் பாதங்களில் எனக்கு அடைக்கலம் அளிக்க வேண்டும். நான் எப்போதும் சௌபாக்யவதியாக இருக்க ஆசீர்வதியுங்கள்" என்று பிரார்த்தனை செய்து கொண்டாள். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **"நீ விதவையானால் ரொட்டி செய்ய பயன்படுவாய்"** என்று கூறினார். ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய வார்த்தைகளின் உள்-அர்த்தத்தை அவள் புரிந்து கொண்டாள். பிறகு சில நாட்களுக்கு பின்னர் அவளுடைய கணவன் இறந்துவிட்டான்.

நாம் பிரார்த்தனை செய்துகொண்ட அனைத்தையும் ஸ்ரீ குரு நிறைவேற்றுவார் என்கிற எண்ணத்தில் நாம் இருந்துவிடக் கூடாது என்பதை உணர்த்துவதற்காகவே இந்த நிகழ்ச்சியை ஸ்ரீ ஸ்வாமி நிகழ்த்தியிருக்கிறாரோ? முன்கூட்டியே தன் பக்தனை எச்சரிக்கை செய்து அவர்களுடைய மனதைத் தயார் நிலையில் வைப்பது தான் ஸ்ரீ ஸ்வாமிகளுடைய உண்மையான குணம்.

மாயை எனும் சுழலில் இருந்து விடுபட்டு, தன்னை நோக்கி பக்தனை இழுப்பது தானே ஒரு குருவுடைய உண்மையான நோக்கம். அப்படியிருக்க பந்தபாசம் என்னும் மாய வலையில் சிக்கித் தவிக்காமல் தன்னிடம் வந்து சேரவேண்டுமென்றால் அதற்கான போதனைகளைத் தானே அவர் செய்யவேண்டும்! இந்த நிகழ்ச்சி அதற்கான ஒரு எடுத்துக்காட்டு.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 107

# அப்பாசாஹேப் போஸ்லே

சவந்த்வாடி என்கிற தேசத்தின் அரசரான ஸ்ரீ அப்பாசாஹெப் போஸ்லே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய புகழைக் கேள்விப்பட்டு அவரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் கிளம்பினார். அவருடன் அவருடைய மனைவியும் தரிசனத்துக்கு வர விருப்பப்பட்டாள். அரசி ஒரு வினோதமான நோயினால் தவித்துக் கொண்டிருந்தாள். அதன் காரணமாக அவளுடைய கால்களில் 8 முதல் 10 ஓட்டைகள் இருந்தன. வைத்திய முறைகள் அனைத்தும் எந்தவித பலனும் அளிக்கவில்லை. கடைசி பட்சமாக ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்யலாம் என்ற முடிவுடன் 10 முதல் 15 வேலையாட்களை அழைத்துக்கொண்டு அக்கல்கோட் வந்தடைந்தனர். அங்கு வந்து விசாரித்ததில் ஸ்ரீ ஸ்வாமிகள் அருகில் இருக்கும் ஒரு மலைமீது இருக்கிறார் என்ற தகவல் கிடைத்தது. அங்கு குதிரைகளும் பல்லக்கும் செல்ல முடியாது, அதனால் அவர்கள் இருவரும் உணவேதும் உண்ணாமல் மலைமேல் நடந்தே சென்றனர். சரியாக

மதியம் 12 மணிக்கு இருவரும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னால் தங்கள் கைகள் கூப்பியவாறு நின்றுகொண்டிருந்தனர். மஹாராஜ் அவர்களிடம், **"வெறும் தரிசனத்துக்காகவா இவ்வளவு தொலைவு கடந்து வந்தீர்கள்!"** என்று கேட்டார். போஸ்லே தான் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அளிப்பதற்காக கொண்டுவந்திருந்த வேஷ்டி-அங்கவஸ்திரம், மெத்தை, தலையணை, போர்வை, கௌபீனம் போன்றவற்றை சமர்ப்பணம் செய்தார். அவற்றை பார்த்தவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள், **"எதற்காக வேஷ்டி-அங்கவஸ்திரம் கொண்டு வந்தாய்? உன் மெத்தை உனக்கு, எனக்கு என் தோல் இருக்கிறது"** என்றார்.

ஸ்ரீ ஸ்வாமிகளின் ஒளிபொருந்திய மேனி போஸ்லேவின் கண்களை ஏறக்குறைய குருடாக்கிவிட்டது. அவர் தன் மனைவியின் கால்கள் குணமாக பிரார்த்தனை செய்து கொண்டார். அவர் உடனே அரசியிடம், **"என் அருகில் வா, உன் கால்களில் எவ்வளவு ஓட்டைகள் இருக்கின்றன என்று பார்க்கலாம்! இவை அனைத்தும் தீய கர்மாக்களின் பலன்கள்"** என்று கூறிவிட்டு, **"ம்ம், பல வைத்தியங்கள் முயற்சி செய்து பார்த்திருக்கிறாய்! இந்த மரத்தின் பழத்தை சாப்பிடு. யானையின் தந்தத்தை எடுத்து அரைத்து உன் புண்கள் மீது பூசினால் குணமாகும்"** என்று அருளாசி வழங்கினார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய மரம் ஒருவகையான காட்டுமல்லி. பின்னர் அவருக்கு அருகில் இருந்த கூடையிலிருந்த ஐந்து மாம்பழங்கள், ஒரு தேங்காய், ஐந்து புளியம்கோட்டைகள் மற்றும் ஐந்து பேரீச்சம்பழங்களை பிரசாதமாக அளித்துவிட்டு, கள்ளிச் செடிகள் இருக்கும் இடத்துக்குச் சென்று அமர்ந்துகொண்டார். போஸ்லேவும் அவருடைய சேவகர்களும் புதர்களை விலக்கிக்கொண்டு, ஸ்ரீ ஸ்வாமிகளைப் பின்தொடர்ந்து அவர் அமர்ந்திருந்த இடத்திற்குச் சென்றனர். உடனே மஹாராஜ், **"ஏன் பசியால் உயிரை விட நினைக்கிறாய்? முதலில் சாப்பிடு"** என்று பாசத்தோடு உத்தரவிட்டார். அங்கிருந்த பக்தர்கள் **"ஸ்வாமியின் உத்தரவை மீறக்கூடாது. உடனே சென்று சாப்பிடுங்கள்"** என்று கூறினர். பின்னர் அவர் மாளிகைக்குச் சென்று அங்கு உணவருந்தினார். அடுத்தநாள் ஸ்ரீ ஸ்வாமிகள் அக்கல்கோட் வந்தடைந்தார். போஸ்லே அங்கு சில நாட்களுக்கு தங்கியிருந்துவிட்டு தன் சொந்த தேசத்துக்குச் சென்றார். அரசியும் ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய வைத்தியத்தைக் கடைப்பிடித்து வந்தார். பின்னாட்களில் போஸ்லே நான்கு அல்லது ஐந்து முறைகள் அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்திருக்கிறார். அப்படி ஒருமுறை வந்தபோது நடைபெற்ற நிகழ்ச்சியை தொடர்ந்து பார்க்கலாம்.





## ஸ்ரீ போஸ்லேவுக்கு பரிக்ஷை

ஒருமுறை போஸ்லே அக்கல்கோட் வந்திருந்த போது, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் காஸ்-பாகில் அமர்ந்திருந்தார். அப்போது அவரைச் சுற்றி பக்தர்கள் திரளாக இருந்தனர். அவர் அங்கிருந்து எழுந்து சென்று ஒரு கிணற்றுக்கு அருகில் வந்து, அதிலிருந்து தண்ணீர் கொண்டுவருமாறு ஆணையிட்டார். ஒரு பானையில் தண்ணீர் நிரப்பப்பட்டு கொண்டுவரப்பட்டது. மஹராஜ் அன்று எதுவுமே சாப்பிடவில்லை. சோளப்பா மிகுந்த கரிசனத்துடன் ஸ்ரீ ஸ்வாமிகளை ஏதாவது உண்ணுமாறு பணிந்தார். கோபம் அடைந்த ஸ்ரீ ஸ்வாமிகள் தண்ணீர் பானையை தூக்கி எறிந்துவிட்டு தான் முன்பு அமர்ந்திருந்த இடத்திற்கே மீண்டும் சென்று அமர்ந்துகொண்டார்.

சோளப்பாவும் அப்பாசாஹெப் போஸ்லேவும் ஸ்ரீ ஸ்வாமிகளுடன்தான் இருந்தனர். ஸ்ரீ ஸ்வாமிகள் உணவு உண்டால் மட்டுமே தான் உண்ணப் போவதாக போஸ்லே முடிவு செய்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஒரு பெரிய போர்வையை எடுத்து போர்த்திக்கொண்டு நன்றாக உறங்கிவிட்டார். மாலை ஐந்து மணிக்கு விழித்துக் கொண்டு அப்பாசாஹேபைப் பார்த்து, **"பசியால் உன் உயிரை விடப்போகிறாயா? இங்கிருந்து ஓடிப் போ!"** என்று கடிந்து கொண்டார். உடனே போஸ்லே, **"ஸ்வாமி, நீங்கள் நைவேத்தியத்தை ஏற்றுக் கொள்ளாத வரை நானும் எதுவும் உண்ண மாட்டேன். இது உறுதி"** என்று கூறினார். தாயுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள் தன் பக்தன் துன்பப்படுவதை தவிர்ப்பதற்காக சோளப்பாவை ஏதாவது உணவு தயார் செய்யும்படி ஆணையிட்டார். திரை மூடப்பட்டு நைவேத்தியம் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு படைக்கப்பட்டது. உச்சிஷ்ட உணவை அப்பாசாஹெப் போஸ்லே திருப்திகரமாக சாப்பிட்ட பின் தன் அரண்மனைக்குச் சென்றார்.

இந்த முறை அவர் அக்கல்கோட்டில் பதினைந்து நாட்களுக்கு தங்கியிருந்தார். தினமும் ஸ்ரீ ஸ்வாமிகளின் அனைத்து சேவைகளையும் அருகில் இருந்து கொண்டு கண்டுகளித்து மிகுந்த திருப்தியுடன் ஊர் திரும்பினார். அனைத்தையும் துறந்துவிட்டு தன் வாழ்நாள் முழுவதும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகிலேயே இருக்க அவருக்கு ஆவல் மிகுதியாக இருந்தது.

ஒருநாள் அவருடைய மனைவி ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதங்களுக்கு சேவைகள் செய்து கொண்டிருக்கும் போது, **"ஏ! நீ எனக்கு என்ன பரிசு கொண்டுவந்திருக்கிறாய்?"** என்று கோபத்துடன் அவளை பளார் என கன்னத்தில் அறைந்தார். பாக்கியம்

    

செய்த அந்த அரசி, **"மஹாராஜ், உங்களுக்கு என்ன வேண்டுமானாலும் கொண்டு வருகிறேன்"** என்று கூறினாள். ஸ்ரீ ஸ்வாமி அவளிடம் எதுவும் பேசாமல், ஒரு தட்டு பருப்பை அவள் மடியில் கொட்டி நிரப்பினார். ஆஹா! என்னே பாக்கியம் செய்தவர்கள் இந்த போஸ்லே தம்பதி! அனைவருக்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கருணை கிடைக்குமாறு பிரார்த்தித்துக் கொள்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

### அத்தியாயம் 108

# பொற்கொல்லர் பாண்டு

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நிரந்தரமாக அக்கல்கோட்டில் மட்டுமே தங்கியிருக்காமல் அக்கம்பக்கத்தில் இருக்கும் ஊர்களுக்கும் சென்று தன் பக்தர்களுடன் தங்குவார். அக்கல்கோட்டிலிருந்து ஆறு மைல்கள் தொலைவில் மைந்தர்கி என்கிற கிராமம் ஒன்று இருக்கிறது. அங்கு தங்க நகைகள் செய்து தன் ஜீவனத்தை நடத்தும் பாண்டு என்கிற பொற்கொல்லர் ஒருவர் இருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமியின் பரம பக்தர். அவர் மிகுந்த கடன் தொல்லையினால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். தினமும் கடன் கொடுத்தவர்கள் அவரை நிம்மதியுடன் வாழ விடாமல் தொந்தரவு செய்து கொண்டிருந்தனர். அப்போது ஒரு பணக்கார ஆசாமி சில தங்க நகைகளை செய்து கொடுக்கும் படி இவரிடம் கூறியிருந்தார். பாண்டு வெள்ளி நகைகள் செய்து அதில் தங்கமுலாம் பூசி அந்த நபரிடம் கொடுத்துவிட்டார். ஸ்ரீ ஸ்வாமியின் பரம பக்தராக இருந்த போதிலும் இதுபோன்ற கீழ்த்தரமான நடவடிக்கைகளில் ஈடுபட்டார். தன் கடனை எப்படியாவது அடைத்துவிட வேண்டும் என்கிற முனைப்பில் தர்மத்தை மீறிவிட்டார்.

சில நாட்களுக்குப் பிறகு பாண்டு செய்த பித்தலாட்டம் அந்த பணக்காரருக்குத் தெரிந்து விட்டது. அவர் தாத்யாசாஹேப் மாம்லத்தாரிடம் புகார் அளித்தார். வழக்கு விசாரணைக்கு வந்தது, பாண்டுவின் குற்றம்

நிரூபிக்கப்பட்டது. அப்போது அந்த இடங்களிலெல்லாம் மிகுந்த வறட்சி, பஞ்சம் தலைவிரித்தாடிக் கொண்டிருந்தது. அதனால் பாண்டுவுக்கு சிறை தண்டனை கொடுக்காமல் சவுக்கடி கொடுக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டிருந்தது.

தன் தண்டனையை தெரிந்து கொண்டவுடன் பாண்டு தன் தவறுகளை எண்ணி மிகுந்த வருத்தம் அடைந்தார். மனம் திருந்தி ஸ்ரீ ஸ்வாமிகளிடம் மனதார பிரார்த்தனை செய்து கொண்டார். இதுபோன்ற கீழ்த்தரமான நடவடிக்கைகளில் இனி ஈடுபட மாட்டேன் என்று தன் மனதில் சத்தியம் செய்து கொண்டார். தன்னை காப்பற்றுமாறு தன் மனதுக்குள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் பிரார்த்தனை செய்து கொண்டார். இந்த அலறல் ஸ்ரீ ஸ்வாமிகளின் செவிகளை எட்டிவிடாதா என்ன! கற்பகவிருட்சமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மனது இளகியது. எப்படி திரௌபதியின் அலறல் ஸ்ரீ கிருஷ்ணரின் செவிகளுக்கு எட்டியதோ அதே போல் பாண்டுவின் அலறல் ஸ்ரீ ஸ்வாமிகளின் செவிகளை எட்டியது. பாண்டுவுக்கு அன்றைய தினம் தண்டனை நிறைவேற்றுவதற்கான ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. அச்சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி அக்கல்கோட்டில் இருந்தார்.

அப்போது ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அபிஷேகம் செய்வதற்கான அனைத்து ஏற்பாடுகளும் நடைபெற்றுக் கொண்டிருந்தன. வெந்நீர் ஊற்றுவதற்காக ஒரு சேவகர் அருகில் வந்தபோது ஸ்ரீ ஸ்வாமிகள், **"ஸ்நானம் இப்போது வேண்டாம். உடனடியாக கிளம்ப வேண்டும்"** என்று கூறினார். சேவகர்களுக்கு எங்கு செல்ல வேண்டும் எப்படி செல்ல வேண்டும் என்பது எதுவுமே தெரியாது. ஸ்ரீ ஸ்வாமிகள் கிழக்கு நோக்கி செல்ல வேண்டும் என்றால் முதலில் அவர் வடக்கு பக்கம் சென்று பிறகு மேற்கு பக்கம் சென்றுவிட்டு பின்னர் கிழக்கு நோக்கி செல்வார். அதனால் கடைசி நிமிடம் வரை சேவகர்கள் தாங்கள் எங்கு செல்கிறோம் என்று தெரியாமலேயே ஒரு பொம்மலாட்ட பொம்மை போல ஸ்ரீ ஸ்வாமிகளுடன் இருப்பார்கள்.

அன்றைய தினம் ஸ்ரீ ஸ்வாமிகள் போரி நதிக்கு சென்று நீராடிவிட்டு மைந்தர்கிக்குச் சென்றார். மூன்று திசைகளிலும் சென்றுவிட்டு இறுதியாக மைந்தர்கி சென்றடைந்தார். வேறு எந்த இடத்திற்கும் செல்லாமல் மாம்லத்தார் அலுவலகத்திற்குச் சென்றார். மகராஜுடைய வருகையை பார்த்து மகிழ்ச்சி

அடைந்த மாம்லத்தார், தன் நாற்காலியை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அளித்துவிட்டு அவர் தன் கைகளை கூப்பியவாறு நின்று கொண்டிருந்தார். அப்போது கைதியான பொற்கொல்லரும் அருகில்தான் நின்றுகொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி பாண்டுவை அழைத்து தனக்கருகில் அமர்த்திக்கொண்டார். ஒரு கைதியின் மீது ஸ்ரீ ஸ்வாமிகள் இவ்வளவு கரிசனம் காட்டுகிறாரே என்று மாம்லத்தாருக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகளை உபச்சாரம் செய்வதில் மாம்லத்தார் பரபரப்பாக இருந்தார். அந்த வேலைகளில் பாண்டுவையும் ஈடுபடுமாறு ஆணையிட்டார். இதற்காகவே காத்திருந்த பாண்டுவும் ஸ்ரீ ஸ்வாமிகளை கவனிப்பதில் முனைப்பாக ஈடுபட்டார்.

மறுநாள் வரை பாண்டு ஸ்ரீ ஸ்வாமிகளுடனேயே இருந்து சேவைகள் செய்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் பாண்டுவின் மீது பொழியும் அன்பைப் பார்த்து அவருடைய தண்டனையை மாம்லத்தார் நீக்கி ஆணை பிறப்பித்தார். தனக்கு ஏற்பட்ட சங்கடமான சூழ்நிலையையும் அதிலிருந்து ஸ்ரீ ஸ்வாமி காப்பற்றியதையும் பற்றி பாண்டு அனைவரிடமும் கூறி மகிழ்ச்சி அடைந்தார். ஏன் ஸ்ரீ ஸ்வாமி குளிக்காமல் கூட அக்கல்கோட்டிலிருந்து கிளம்பினார் என்கிற விஷயம் அனைவருக்கும் அப்போதுதான் புரிந்தது. அனைவரும் பக்தவத்சலான ஸ்ரீ ஸ்வாமிகளை வாயார புகழ்ந்தனர்.

இவ்வளவு கீழ்த்தரமான குற்றம் செய்தவரும் தண்டனையிலிருந்து தப்பிவிடலாமா? செய்த குற்றங்களுக்கான பலன்களை அனுபவிக்க வேண்டாமா? ஒவ்வொரு குற்றத்திற்கும் கண்டிப்பாக தண்டனை உண்டு. ஆனால் எவரொருவர் தான் செய்த குற்றத்திற்காக வெட்கி தலைகுனிந்து மனதார மன்னிப்பு கேட்கிறாரோ அவர் சிறிய மனக்கஷ்டத்துடன் தப்பித்து விடுகிறார். தான் மீண்டும் இதுபோன்ற தவறுகளை செய்யவே மாட்டேன் என்று ஒருவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் சரணடையும் போது, ஒரு தாய் தன் குழந்தையை மன்னித்து காப்பது போல தன் பக்தர்களை ஓடோடி வந்து அவர் காப்பற்றி விடுகிறார். இதுதான் அவருடைய உண்மையான குணம் என்பதை இந்த நிகழ்ச்சி நமக்கு உணர்த்துகிறதல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**





அத்தியாயம் 109

# இஸ்லாமிய பக்தர்

மைந்தர்கியில் ஒரு இஸ்லாமிய காவல் அதிகாரி சிறைக்காப்பாளராக சர்க்காருக்கு பணி புரிந்து வந்தார். ஒருநாள் கைதிகள் அனைவரும் மாலை நேரத்தில் மீண்டும் சிறைக்குள் அடைக்கப்பட வேண்டும். அப்போது சிறையை விட்டு தப்பிக்கும் எண்ணத்தோடு ஒரு கைதி மட்டும் ஒரு குழிக்குள் பதுங்கிக்கொண்டான். இரவு நேரத்தில் கைதிகளின் எண்ணிக்கையில் ஒருவன் குறைவதை அவர் கவனித்தார். அவருக்குக் கவலை தொற்றிக்கொண்டது. பணியில் இருந்து ஓய்வு பெற்று ஓய்வூதியம் பெற வேண்டிய இந்த தருணத்தில் அவப்பெயருடன் செல்ல நேரிடுமே என்று எண்ணி கவலைப்பட்டார். அவர் ஒரு இஸ்லாமியராக இருப்பினும், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பரம பக்தர். ஸ்ரீ ஸ்வாமிகளை நினைவில் கொண்டு, **"ஸ்வாமி, இந்த கைதி கிடைத்துவிட்டால் நான் என் பணியில் இருந்து ஓய்வெடுத்துக் கொண்டு என் வாழ்நாள் முழுவதும் உங்களுக்கு சேவை செய்து கொண்டு கிடப்பேன்"** என்று மனதார பிரார்த்தனை செய்து கொண்டார்.

இரவு முழுவதும் அந்த கைதியைத் தேடி அனைவரும் களைப்படைந்தனர். அனைத்து முயற்சிகளும் வீணாகிவிட்டனவே என்று காவல் அதிகாரி மனக்கவலையில் இருந்தார். பொழுது விடிந்தது. அப்போது ஒரு குதிரை ஓட்டி ஒரு கைதி குழிக்குள் பதுங்கிக் கொண்டிருப்பதாக வந்து கூறினான். காவல் அதிகாரி மிகவும் மகிழ்ச்சி அடைந்து அவனை மேல் அதிகாரியிடம் ஒப்படைத்தார். அந்த கைதியிடம் இரவு நேரத்தில் தப்பித்து ஓடாமல் ஏன் குழிக்குள்ளேயே இருந்தான் என்று விசாரித்தபோது ஒரு ஆச்சரியமான அற்புதத்தை விவரித்தான். **"ஐயா, நான் இரவு முழுவதும் அந்த குழியில் இருந்து தப்பித்து செல்வதற்காக வெளியே வர முயலும் போதெல்லாம் ஒரு வயதான சந்நியாசி என்னை அடித்தார். அவர் விடியும் வரை அங்கேயே இருந்தார். வேறு வழி தெரியாமல் நான் அங்கேயே மாட்டிக்கொண்டேன். விடிந்ததும் இந்த குதிரை ஓட்டி என்னை கண்டுபிடித்துவிட்டார்"** என்று கூறினார்.

ஆஹா! தன் பக்தருக்காக இரவு முழுவதும் ஸ்ரீ ஸ்வாமி காவல்காரன் ஆக இருந்திருக்கிறார். இதைக் கேட்டதும் காவல் அதிகாரி அடைந்த




ஆச்சரியத்திற்கு எல்லையே இல்லை. இவை அனைத்தும் ஸ்ரீ ஸ்வாமிகளின் லீலைதான் என்பதை உணர்ந்து கொண்ட இஸ்லாமிய காவல் அதிகாரி தன் வேலையை உதறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகளின் சேவைக்காக அக்கல்கோட் சென்றடைந்தார். அனைத்தையும் விடுத்து வருமானத்திற்குக் கூட வேறு வழி யோசிக்காமல் ஸ்ரீ ஸ்வாமிகளுடனேயே இருந்து வந்தார். மதியம் 12 மணியானால் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் இவருக்கு இரண்டு ரொட்டிகளை அளிக்குமாறு சோளப்பாவிடம் ஆணையிடுவார். இதே போல எட்டு நாட்கள் தொடர்ந்து நடைபெற்றது. இது என்ன தொந்தரவு என்று எண்ணிய சோளப்பா அவர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுக்கு அருகில் அமர்வதை தடுத்தார்.

ஒரு நாள் அவர் தூரத்தில் அமர்ந்திருந்தபோது, ஸ்ரீ ஸ்வாமிகள் அவரை தனக்கருகில் வருமாறு அழைத்து தன் தோல் பாதுகைகளை அவரிடம் தூக்கி எறிந்துவிட்டு **"உன் ஊருக்குச் செல்"** என்று ஆணையிட்டார். அவற்றை மகிழ்ச்சியுடன் எடுத்துக்கொண்டு மைந்தர்கிக்குச் சென்றார். அவர் தன் வீட்டில் பாதுகைகளை வைத்து பூஜை செய்யத் துவங்கினார். இந்து துறவியின் பாதுகைகளை பூஜை செய்வதை அவருடைய மனைவியும் குழந்தைகளும் எதிர்த்தனர். அதனால் அவர் வீட்டுக்கு வெளியே இடிந்த நிலையில் இருந்த ஒரு வீட்டில் பாதுகைகளை வைத்து பூஜை செய்து கொண்டிருந்தார். ஆச்சரியமிக்க வண்ணம், ஸ்ரீ ஸ்வாமியின் அருளால் அவருக்கு உணவு தினமும் கிடைத்துக் கொண்டிருந்தது.

நாளடைவில், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பக்தர் என்று இந்த காவல் அதிகாரி புகழடைந்தார். பலர் தங்கள் நோய் குணமடைய பிரார்த்தனை செய்து கொண்டு பாதுகைகளை தரிசனம் செய்ய வந்தால், அந்த பாதுகைகளுக்குக் கீழ் இருக்கும் மண்ணை எடுத்து பிரசாதமாக அளிப்பார். அனைவருடைய நோய்களும் குணமடைந்தது, இவருடைய யோகசக்தி அதிகரித்தது. பிராமணர்கள் கூட வந்து இவரை வணங்கிவிட்டு செல்வார்கள். இந்த காவல் அதிகாரி அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்யும் போதெல்லாம் ஸ்ரீ ஸ்வாமி இவரை **'பீர் சாஹெப்'** என்று அழைப்பார். பிறகு இவருக்கு பணம் கிடைக்கத் துவங்கியது. பணத்தைக் கண்டவுடன் குடும்பத்தினர் இவரை ஏற்றுக்கொண்டனர், இவர் மனைவி இவருக்கு சேவைகள் செய்துகொண்டிருந்தாள்.

சில காலங்களுக்குப் பிறகு இந்த இஸ்லாமியர் ஒரு கோவில் கட்டி பாதுகை வழிபாட்டை முறைப்படுத்தினார். பூஜாரி நியமித்து முறையாக

பூஜைகள் செய்து வந்தார். நாளடைவில் இந்த இஸ்லாமியர் மிகுந்த புகழ்மிக்க அவ்லியாவாக வாழ்ந்து தன் இன்னுயிரை ஸ்ரீ ஸ்வாமியின் பக்தராக நீத்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 110

# ராவ்ஜி பாட்டீல்

சோலாப்பூருக்கும் அக்கல்கோட்டுக்கும் நடுவே ராம்பூர் என்கிற கிராமம் இருக்கிறது. அங்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பரம பக்தரான ராவ்ஜி பாட்டீலும் அவருடைய உறவினரான விதாபாய்யும் வாழ்ந்து வந்தனர். ஸ்ரீ ஸ்வாமி ராம்பூருக்கு செல்வது வழக்கம். அப்படி ஒரு சமயம் அங்கு சென்றிருந்தபோது பதினாறு நாட்கள் தங்கியிருந்தார். அவருடன் சோளப்பா, கண்பத்ராவ், ராம்பாவ் தாஷிவலே போன்றோரும் சென்றிருந்தனர். ராவ்ஜி ஒரு முறை 40 பிராமணர்களுக்கு அன்னதானம் அளிப்பதாக பிரார்த்தனை செய்துகொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி இங்கு தங்கியிருக்கும் இந்த சமயத்தில் அந்த பிரார்த்தனையை நிறைவேற்றிவிடலாம் என்று முடிவு செய்துகொண்டார். விதாபாய் 40 பேருக்கு தேவையான உணவை சமைத்திருந்தாள். ஸ்ரீ ஸ்வாமிகள் ராம்பூரில் தங்கியிருப்பதைக் கேள்விப்பட்டு ஆயிரக்கணக்கானோர் அவரை தரிசனம் செய்வதற்காக அங்கு குவிந்தனர்.

விதாபாய் உணவை சமைத்து முடித்தபின், ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சோடச உபச்சாரங்களுடன் அபிஷேகம் செய்து வைத்து உணவை ஒரு தட்டில் பரிமாறி வைத்தாள். அனைத்து நாடகங்களுக்கும் தலைவரான ஸ்ரீ ஸ்வாமிகள் உணவை உண்ண வரவில்லை. நேரம் கடந்து கொண்டே போனது, மக்கள் கூட்டம் ஓய்ந்தபாடில்லை. ஸ்ரீ ஸ்வாமி வழக்கம்போல வந்தவர்கள் அனைவருக்கும் உணவு அளிக்குமாறு ராவ்ஜிக்கு உத்தரவிட்டார். ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளுக்கு மறுவார்த்தை ஏதும் பேசமுடியாமல் அவர் ஒத்துக்கொண்டார். ஆனால் கவலை அவர் மனதை தொற்றிக்கொண்டது. **“ஸ்வாமி, நாற்பது நபர்களுக்கு தேவையான உணவு மட்டுமே தயாரிக்கப்பட்டுள்ளது”** என்று அவர் பவ்வியமாக ஸ்ரீ ஸ்வாமிகளிடம் கூறினார்.

ஸ்ரீ ஸ்வாமி சப்பாத்தி, சாதம் மற்றும் மற்ற உணவுப் பொருட்கள் வைக்கப்பட்டிருந்த பாத்திரங்களை தன்னிடம் கொண்டுவரும்படி ஆணையிட்டார். அவற்றில் அம்மன், கண்டோபா மற்றும் சாளக்கிராம சிலைகளை புதைத்து வைத்தார். இருவரையும் அன்னபூர்ணா தேவியை பிரார்த்தனை செய்து கொள்ளுமாறு கூறினார். சாப்பாட்டுக் கூடைகளை விதாபாயின் தலையில் வைத்துக் கொண்டு துளசிச் செடியை மூன்று முறை சுற்றிவிட்டு வரும்படி கூறினார். உணவுப் பாத்திரங்களை தன்னிடம் வைத்துக்கொண்டு, உணவை எடுத்து பரிமாறும்படி கூறினார். உணவை எடுத்துக் கொண்டவுடன் உணவிருக்கும் பாத்திரத்தை மீண்டும் பார்க்கக்கூடாது என்று உணவு பரிமாறுபவர்களிடம் கூறினார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியபடியே ராவ்ஜி பாட்டீல், மஹாதேவ் பட் ஆகியோர் பரிமாறத் தொடங்கினர். முதல் பந்தியில் 400 பேர் உணவருந்தினர். உணவு அள்ள அள்ள குறையாமல் இருந்ததைக் கண்டு அனைவரும் ஆச்சரியம் அடைந்தனர். ஸ்ரீ ஸ்வாமிகளை அனைவரும் போற்றி புகழ்ந்தனர். அதை ஏதும் காதில் வாங்கிக்கொள்ளலாமல், **"முதலில் அனைவருக்கும் உணவு பரிமாறுங்கள்!"** என்று கட்டளையிட்டார். வந்தவர்கள் அனைவரும் வயிறார உண்டுவிட்டுச் சென்றனர். இதே போல இரவு வரை தொடர்ந்து கொண்டிருந்தது. ராவ்ஜி பாட்டீல் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து, **"ஸ்வாமி, தாங்கள் இன்னும் உணவருந்தவில்லையே!"** என்று கவலையுடன் கேட்டார். அதற்கு மஹராஜ், "இன்னும் என் தந்தையும், தாத்தாவும் வரவில்லை. அவர்கள் வந்தவுடன் சாப்பிடுகிறேன்" என்று கூறினார். ஸ்ரீ ஸ்வாமிகளுடைய சங்கேத பாஷை யாருக்குத்தான் புரியும்? சிறிது நேரத்திற்குப் பிறகு சோலாப்பூரைச் சேர்ந்த சர்க்கார் ஊழியர்கள் சிலர் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு உணவு உண்டனர்.

அன்று இரவு மணி பதினொன்றை எட்டியது. கருணையின் வடிவமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், அப்போதுதான் உணவு எடுத்துக் கொண்டார். இவ்வளவு நபர்கள் உண்ட பிறகும் உணவு மீதமிருந்தது. அடுத்த நாள் சேவகர்கள் அவற்றை பிரசாதமாக உண்டனர். நாற்பது பேருக்கு சமைக்கப்பட்ட உணவு 4000 பேருக்கு அளிக்கப்பட்டது. ராவ்ஜி பாட்டீல் மற்றும் விதாபாய் 4000 பேருக்கு உணவளித்த புண்ணியத்தை பெற்றுக் கொண்டனர். நாம் ஒன்று கேட்டால் அவற்றை பலமடங்காக அளிப்பதில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய அருளுக்கு ஈடு இணை உண்டோ?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 111

# விஞ்ஞானமும் பொய்த்துவிடும்

அந்த காலகட்டத்தில்தான் புகைப்படம் எடுக்கும் கலை புதிதாக நடைமுறைக்கு வந்திருந்தது. ஆங்கிலேயர்கள் இந்த கலையை மக்களிடையே பிரபலமாக்குவதற்காகவும் தங்கள் ஆவணத்திற்காகவும் மிகவும் உன்னதமான வர்கள் மற்றும் அரச வம்சாவளிகளை புகைப்படம் எடுத்துக் கொண்டிருந்தனர். அற்புதங்கள் பல நிகழ்த்தி மக்களிடையே மஹாபுருஷர் என்று புகழுடன் விளங்கிய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய புகைப்படத்தை கண்டிப்பாக படம் பிடித்துவிட வேண்டும் என்கிற முனைப்பில் அவர்கள் இருந்தனர். அதனால் வெளிநாட்டிலிருந்து ஒரு திறமையான புகைப்படக் கலைஞரை வரவழைத்திருந்தனர்.

அந்த புகைப்படக் கலைஞர் அக்கல்கோட் வந்தவுடன் தன் விருப்பத்தை ஸ்ரீ ஸ்வாமியின் சேவகர்களிடம் தெரிவித்தார். அவர்கள் ஸ்ரீ ஸ்வாமியின் முறையான அனுமதி இல்லாமல் புகைப்படம் எடுக்க முடியாது என்று கூறிவிட்டனர். ஆனால் அந்த புகைப்படக் கலைஞரோ மிகுந்த அகம்பாவத்துடன் தன் திறமையின் மீது அபார நம்பிக்கையுடன் எவருக்கும் தெரியாமல், ஏன் ஸ்ரீ ஸ்வாமிகளும் கவனிக்காத நேரத்தில் புகைப்படம் எடுத்துவிடலாம் என்று எண்ணினார். காமெராவுக்கு பெரியவர் சிறியவர் என்கிற வித்தியாசம் தெரியுமா என்ன? விஞ்ஞானம் பொய்த்து விடுமா? என்கிற துணிச்சலுடன் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஏதும் தெரியவில்லை என்கிற எண்ணத்தோடு புகைப்படம் எடுத்தார். பின்னர் அதை பெரிதாக்கிக் கொண்டுவந்து ஸ்ரீ ஸ்வாமிகளிடம் பெருமையோடு காட்டினார்.

ஸ்ரீ ஸ்வாமி அதை தன் சேவகர்களிடம் காண்பிக்குமாறு கூறினார். ஒருவர் அதைப் பார்த்துவிட்டு ஸ்ரீ ராமர் என்று கூறினார், இன்னொருவர் இதில் இருப்பது விஷ்ணு என்றார், மூன்றாவது நபர் இதில் இருப்பது பவானி என்றார், நான்காமவர் இது கண்டோபா என்றார். அதில் அனைவரும் தங்களுடைய குலதெய்வத்தைக் கண்டனர்.

உங்களால் உங்களுடைய குருவை கூட சரியாக அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லையே என்று அந்த புகைப்படக் கலைஞர் அனைவரையும் கேலி செய்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடமே அந்த

புகைப்படத்தை கொடுத்து பார்க்கச் சொன்னார். ஸ்ரீ ஸ்வாமி அதை வாங்கிப் பார்த்தவுடன் **"நான் பார்ப்பதற்கு இப்படியா இருக்கிறேன்?"** என்று கூறிக்கொண்டே பலமாக சிரிக்கத் தொடங்கினார். என்ன ஒரு அற்புதம்! அந்த புகைப்படத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பதிலாக ஒரு குரங்கின் படம் இருந்தது. இதைப் பார்த்தவுடன் புகைப்படக்கலைஞர் வெட்கித் தலைகுனிந்தார். பரமாத்மாவின் சக்திக்கு முன்னால் விஞ்ஞானம் பொய்த்துவிடும் என்பதை அவர் புரிந்துகொண்டார்.

அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு தன்னை மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டார். அவர் புகைப்படம் எடுப்பதற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் அனுமதி அளிக்கவேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொண்டார். உடனே தயாமூர்த்தியான ஸ்ரீ ஸ்வாமிகள் புன்னைகையுடன் அவருக்கு அனுமதி அளித்தார். அந்த புகைப்படம் மிகவும் அம்சமான, அற்புதமான புகைப்படமாக உருவாகியிருந்தது. இந்த புகைப்படத்தின் மூலம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழ் மேலும் பரவி பல புகைப்படக் கலைஞர்கள் அக்கல்கோட் நோக்கிப் படையெடுத்தனர். அவர்கள் எடுக்கும் படம் நல்ல முறையில் பதிவாகியிருந்தால் அவர்களின் புகழும் பன்மடங்காகப் பெருகத் தொடங்கியது. ஒருமுறை அப்படி புகைப்படம் எடுப்பதற்காக வந்திருந்த பாட்கே என்கிற புகைப்படக் கலைஞரின் அனுபவங்களைத் தொடர்ந்து விரிவாக பார்க்கலாம்.

### புகைப்படம் எடுக்க நேரமாகிவிட்டது

புகைப்படம் எடுக்கும் எண்ணத்துடன் பாட்கே என்கிற ஒரு புகைப்படக்கலைஞர் அக்கல்கோட் வந்திருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் புகைப்படம் எடுக்க அனுமதி அளிக்குமாறு பிரார்த்தனை செய்து கொண்டார், ஸ்ரீ ஸ்வாமிகளும் புன்னகைத்தவாறு சம்மதித்து, அவரை 5 மணிக்கு வந்து எடுத்துக் கொள்ளுமாறு கூறினார். பாட்கே ஐந்து மணிக்கு முன்னதாகவே வந்து சரியான தருணத்திற்காகக் காத்திருந்தார். கடிகார முள் ஆறு மணியை எட்டியது. ஸ்ரீ ஸ்வாமி பாட்கேவை அழைத்து ஹுக்கா தயார்செய்து அளிக்குமாறு கூறினார். இவருக்கோ பதைபதைப்பாக இருந்தது. இறுதியில் 7 மணிக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் புகைப்படம் எடுத்துக்கொள்ள அனுமதி அளித்தார். அப்போது இருள் சூழ்ந்துவிட்டது. பாட்கே மிகுந்த சோகத்துடன், **"ஸ்வாமி, இருளில் புகைப்படம் எடுக்க முடியாது"** என்று கூறினார். (அப்போது பிளாஷ் வசதி காமிராக்களில் இல்லை).

மகராஜ் பலமாக சிரித்துவிட்டு பாட்கேவை காமிராவின் தட்டுகளை *develop* செய்யுமாறு கூறினார். புகைப்படமே எடுக்காத போது அதை ஏன் *develop* செய்யவேண்டும் என்பது அவருக்கு புரியவில்லை. இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமி மஹாராஜுடைய வார்த்தைகளை மீறக்கூடாது என்கிற எண்ணத்தில் தட்டுகளை *develop* செய்தார். ஆஹா! என்ன ஒரு அற்புதம்! ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஹுக்கா புகைப்பது போல ஒரு புகைப்படம் அதில் பதிவாகியிருந்தது. பாட்கே பேச்சற்று போனார்.

அக்கல்கோட் வந்த பல புகைப்படக் கலைஞர்களுக்கு பலவிதமான அற்புதங்கள் நிகழ்ந்திருக்கின்றன. இதேப் போல ஒரு நிகழ்ச்சியை சீரடி சாய்பாபாவும் நிகழ்த்தியிருப்பதை இங்கு நினைவு கொள்வோம்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 112

# பகவத் அப்பா என்னும் தச்சர்

அக்கல்கோட்டைச் சேர்ந்த பகவத் அப்பா என்னும் தச்சர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பரம பக்தர். சில சமயங்களில் ஸ்ரீ ஸ்வாமி இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு அவர் வீட்டில் தங்குவார். இந்த தச்சர் தன்னுடைய விவசாய நிலத்தில் ஒரு பெரிய கிணற்றை வெட்டியிருந்தார். ஸ்ரீ ஸ்வாமியின் அருளால் கிணறு முழுமையாக நீரினால் நிரம்பியிருந்தது. தச்சருக்கு ஸ்ரீ ஸ்வாமிகளை ஒரு முறையேனும் தன் விவசாய நிலத்திற்கு அழைத்து விருந்தளித்து அவருடைய உச்சிஷ்ட பிரசாதத்தை உண்ண வேண்டும் என்கிற விருப்பம் மிகுதியாக இருந்தது.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி மோடியின் வீட்டு தாழ்வாரத்தின் சுவற்றில் சாய்ந்தபடி அமர்ந்திருந்தார். தச்சர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று, **“ஸ்வாமி, விவசாய நிலத்திற்கு தாங்கள் வரவேண்டும்”** என்று அழைத்தவுடன் “சிறிது நேரம் காத்திரு” என்று கூறினார். இதேபோல நான்கு அல்லது ஐந்து முறைகள் அவர் அழைத்த போதும் அதே பதிலைத்தான் அளித்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு காசி பாண்டா மஹேஸ் வட்கர் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக

வந்தார். தச்சர் அவரிடம் ஸ்ரீ ஸ்வாமிகளை தன் நிலத்திற்கு அழைத்து வருமாறு கூறினார். மஹேஸ் வட்கர் வேண்டிக்கொண்டவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் வர சம்மதித்தார். தச்சர் சமையலுக்குத் தேவையான அனைத்து பொருட்களையும் ஏற்பாடு செய்திருந்தார். மஹேஸ் வட்கர் மற்றும் சபனீஸும் சமைக்கத் தொடங்கினர். ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சோடச உபசாரங்கள் செய்து உணவு பரிமாறப்பட்டது.

மஹேஸ் வட்கரும் சபனீஸும் சாப்பிடத் தயாரானபோது பக்கத்து நகரத்திலிருந்து சில பக்தர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக வந்திருந்தனர். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் வந்திருந்தவர்கள் அனைவருக்கும் உணவு அளிக்குமாறு ஆணையிட்டார். மூன்று பேருக்கான உணவு மட்டுமே தயாரிக்கப்பட்டிருந்தமையால் மஹேஸ் வட்கருக்கு கவலை தொற்றிக்கொண்டது. உடனே மகராஜ், **"உனக்கு இடப்பட்ட ஆணைக்குக் கீழ்பணிந்து வந்திருப்பவர்களுக்கு உணவு பரிமாறு"** என்று கூறினார்.

இறுதியில் 50 பேருக்கும் மேற்பட்டவர்கள் உணவு உட்கொண்டனர். மாலை நேரத்தில் ஹர்தா பார்டிக்கு (மஹாராஷ்டிர வயல்களில் சோளக்குருத்தை எடுத்து நெருப்பில் சுட்டு உண்டு மகிழ்வர். அதை ஹர்தா பார்டி என்று அழைப்பர்) ஏற்பாடு செய்வதற்கு நெருப்பை பற்ற வைத்தனர். அதைக்கண்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் நெருப்புக்கு அருகில் வந்தார். அங்கிருந்த தண்ணீர் நிரம்பிய பானையிலிருந்து தண்ணீரை தன் வாயில் நிரப்பிக்கொண்டு நெருப்பின் மீது துப்பினார். அது அணைவதற்கு பதில் கொழுந்துவிட்டு எரிந்தது. இதே போல அந்த பானை முழுவதும் உள்ள நீர் தீரும்வரை செய்து கொண்டிருந்தார். அவர் ஒவ்வொருமுறை இவ்வாறு செய்யும்போதும் **"இந்திராய நம:, வருணாய நம:...."** என்று கூறிக்கொண்டிருந்தார். இந்த வினோதமான செயலை அனைவரும் ஆச்சரியமாக கண்டு களித்தனர்.

கீதையில்,

**ப்ரஹ்மார்பணம் ப்ரஹ்ம ஹவிர்ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணா ஹுதம் |**
**ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம் ப்ரஹ்மகர்மஸமாதினா**
**- அத்தியாயம் 4, 24 வது ஸ்லோகம்**

(பொருள்: அர்ப்பணம் செய்தல் பிரம்மம். அர்ப்பணம் செய்யப்படும் பொருட்கள் பிரம்மம். பிரம்மமாகிய அக்னியில் பிரம்மத்தால் கொடுக்கப்ப




டுகிறது. பிரம்மத்திடம் தன் மனதை முழுவதும் லயிக்க வைத்து, தன் காரியங்கள் அனைத்தையும் செய்பவன், பிரம்மத்தை அடைகிறான்)

என்கிற கூற்றின்படி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அன்று நிகழ்த்திய லீலை இருப்பதாக அனைவரும் கூறினார்கள்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 113

# சோலாப்பூரைச் சேர்ந்த தையல்காரர்

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட்டிலிருந்து 12 மைல்கள் தூரத்திலிருக்கும் பாஸல் என்கிற கிராமத்திற்குச் சென்றிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி அந்த ஊரிலிருந்த திறந்தவெளியான இடத்தில் சென்று அமர்ந்துகொண்டார். பிறகு காஷிநாத், கண்பத்ராவ் போன்றோர் ஸ்ரீ ஸ்வாமிகளின் தரிசனத்துக்காக அமர்ந்துகொண்டனர். அப்போது ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **"கிராமத்திற்குள் சென்று பொற்கொல்லரை வரச்சொல்"** என்று ஆணையிட்டார். காஷிநாத் இந்த தகவலை சென்று தெரிவித்துவிட்டு, பவானி அம்மன் கோவிலுக்குச் சென்று தரிசனம் செய்தார்.

சிறிது நேரத்திற்குப் பின்னர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக ஒரு சோலாப்பூரைச் சேர்ந்த ஒரு தையல்காரரும் அவருடைய மனைவியும் வந்தமர்ந்தனர். மஹராஜ் அவர்களிடம், **"என்னை உணவுக்கு அழைக்க மாட்டாயா?"** என்று கேட்டார். ஸ்ரீ ஸ்வாமிகளை அவரே நைவேத்யத்திற்கு அழைக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்த போது ஸ்ரீ ஸ்வாமிகளே இவ்வாறு கேட்டது அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. அவர் பாவன்ராவ் தேஷ்பாண்டே மற்றும் பாஸல்காவுடைய குல்கர்னி ஆகியோரிடம் இந்த விஷயத்தைத் தெரிவித்தார். 50 நபர்கள் விருந்துக்கு வரலாம் என்கிற கணிப்பில் உணவு தயாரிக்க ஏற்பாடுகள் செய்தார். விருந்து நடைபெற்ற நாளன்று அமாவாசை என்பதால் சோலாப்பூரில் பக்தர்கள் கூட்டம் மிகுதியாக இருந்தது.

மகராஜ் அனைவருக்கும் உணவு ஏற்பாடு செய்யுமாறு கூறினார். கண்பத்ராவ் ஜோஷி தரிசனம் செய்துவிட்டு கிளம்ப முற்பட்ட போது ஸ்ரீ ஸ்வாமிகள் அவரை பார்த்து, **“ஏ! தடியா வீட்டுக்கு போ!”** என்று கூறினார். உணவு தயார் செய்யப்பட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அபிஷேகம் செய்வித்து சோடச உபசாரங்கள் செய்த பின்னர் தட்டில் உணவு பரிமாறப்பட்டது. வந்திருந்த அனைவருக்கும் உணவளிக்குமாறு ஸ்ரீ ஸ்வாமிகள் ஆணையிட்டார். அனைவரும் வரிசையாக நின்று கொண்டு காத்திருந்தனர். 50 நபர்களுக்கு தயாரிக்கப்பட்ட உணவு 500 நபர்களுக்கு அளிக்கப்பட்டது. அனைவருக்கும் உணவு அளிக்கப்பட்ட பின்னர் தையல்காரரும் அவருடைய குழந்தைகளும் திருப்தியாக உண்டனர்.

தையல்காரர் பிசாசின் தொந்தரவினால் தவித்துக் கொண்டிருந்தார். அப்போது அனைவரும் அங்கு அமர்ந்து கொண்டிருந்த போது பிசாசு தையல்காரரின் உடலில் தோன்றியது. அது தன் ஆட்டத்தைத் தொடங்கியது, ஓவென கதறி அழுதது. மஹராஜை பார்த்து, **“சந்நியாசி ஏன் லீலைகள் புரிய வேண்டும்?”** என்று கேட்டுக்கொண்டே ஆடியது. இந்த தொந்தரவு நீண்ட நேரத்திற்கு நடைபெற்றுக் கொண்டிருந்தது. இறுதியில் எதுவும் முடியாமல் அந்த தையல்காரர் மயங்கிவிழுந்தார். உடனே மஹராஜ், **“மாதர்சோத், இவனை இழுத்துக் கட்டுங்கள்”** என்று கூறினார். பின்னர் அவன் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் மண்டியிட்டு மன்னிப்பு கேட்டுக்கொண்டு, **“எனக்கு பெற்றோர்கள் இல்லை. தயவுசெய்து என்னை மன்னித்து வழிகாட்டி அருளுங்கள் ஸ்வாமி”** என்று கதறினான். கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமி அவனை மன்னித்து சரியான வழியை காட்டி அருளினார். அந்த தையல்காரர் பூரண குணமடைந்து தன் சொந்த கிராமத்திற்குச் சென்றார். பின்னாட்களில் அவர் அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

குருவின் நிழலில் வாழும் பக்தர்களின் வாழ்க்கையில், ஒரு நிகழ்ச்சி ஏன் நடைபெறுகிறது என்பதை தொடக்கத்தில் புரிந்து கொள்ள முடியாவிட்டாலும், இறுதியில் குரு தன் அற்புதமான லீலைகள் மூலம் அதை விளக்கிவிடுவார். ஆகவே குருவின் பாதங்களை சரணடைந்த ஒருவர் இந்நிகழ்ச்சி ஏன் நடைபெறுகிறது என்கிற குழப்பம் இல்லாமல் வாழ வேண்டும் என்பதை உணர்த்துவதற்காக இந்த நிகழ்ச்சி நடைபெற்றதோ?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 114

# ஜயாஜிராவ் ஷிண்டே

ஸ்ரீ ஜயாஜிராவ் மஹாராஜ் ஷிண்டே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட்டிற்கு வந்திருந்தார். அச்சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் அரண்மனையில் தங்கியிருந்தார். ஜயாஜி ஷிண்டே தான் அரசன் என்பதையும், தன் செல்வச்செழிப்பை எண்ணி துளியும் கர்வம் கொள்ளாமல் பல துறவிகளை தரிசனம் செய்து கொண்டிருந்தார். அவருக்கு பஜனைகள் செய்வதில் நாட்டம் இருந்தமையால் பல இடங்களில் பஜனைகள் செய்வது மற்றும் பஜனைகள் ஏற்பாடு செய்வதிலும் ஆர்வத்துடன் ஈடுபடுவார். மேலும் தினமும் பஜனை செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். பிரசித்தி பெற்ற பஜனைக்காரரான கோவிந்தபுவா நாஷிக்கார் ஸ்வாமி ஜயாஜிராவுடன் இருந்தார்.

ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்ய முடியாமல் பக்தர்கள் பலர் தவித்துக் கொண்டிருந்தனர் (ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அரண்மனையில் தங்கியிருக்கும் சமயங்களில் பக்தர்களுக்கு தரிசனம் அளிக்கமாட்டார் என்பதை முந்தைய அத்தியாயங்களில் குறிப்பிடப்பட்டுள்ளதை இங்கு நாம் நினைவு கொள்வோம்). அவரை எப்படியாவது அரண்மனையிலிருந்து வெளியே கொண்டுவருவதற்கான வழிகளைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தனர். ஆனால் அனைத்து முயற்சிகளும் வீணாகி போனது. நான்கு நாட்களுக்குப் பிறகு ஜயாஜிராவ்வின் தூய பக்திக்கு ஸ்ரீ ஸ்வாமிகளின் மனது இளகியது. மஹராஜ் விடியற்காலையிலேயே விழித்தெழுந்து அரண்மனையை விட்டு வெளியே வந்து ஒரு ஆலமரத்தின் கீழ் அமர்ந்து கொண்டார்.

இந்த விஷயத்தை அறிந்து கொண்ட ஷிண்டே தான் மன்னர் என்கிற ஆடம்பரம் எதுவும் இல்லாமல் ஒரு சிலரை மட்டும் தன்னுடன் அழைத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு ஒரு தேங்காயை அவர் முன் சமர்ப்பணம் செய்தார். அப்போது ஜயாஜி ஷிண்டேவின் மனதில் எழும்பிய அனைத்து சந்தேகங்களையும் நிவர்த்தி செய்தது மட்டுமல்லாமல் சில அடையாளங்களையும் காட்டி விளக்கினார். மிகுந்த திருப்தியடைந்த ஜயாஜிராவ், **“நான் இதுவரை பல ஞானிகளை சந்தித்திருக்கிறேன். ஆனால் எவரும் இப்படிப்பட்ட தெளிவான விளக்கத்தை கொடுக்கவில்லை”** என்று திருப்தியுடன் கூறினார். இங்கு வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்தது அவருக்கு மிகுந்த

மனநிறைவை ஏற்படுத்தியது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய கருணை, சர்வ வியாபிதம் மற்றும் திகம்பரத்துவத்தை கண்டு மிகவும் திருப்தி அடைந்தவராய், **"இந்த தரிசனத்தால் நான் மிகவும் தூய்மை அடைந்துவிட்டேன். என் பூர்வ ஜென்ம புண்ணியத்தால் மட்டுமே என்னால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்ய முடிந்தது. என் கண்கள் இப்போது நிறைந்துவிட்டன"** என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினார்.

அந்த சமயத்தில் ஷிண்டேவின் சேவகர்கள் சிலரும், கோவிந்தபுவாவும் அங்கு வந்தனர். கோவிந்தபுவா சில கீர்த்தனைகளை பாடினார். மஹராஜ் அவரிடம், **"மரதண்டம் எங்கே?"** என்று கேட்டார். அதற்கு கோவிந்தபுவா, **"ஒரு பரமஹம்சர் மனம், வாக்கு மற்றும் தன் உடலை விட மேன்மை அடைந்தால் தன் மரதண்டத்தை விட்டுவிடுவார். அவருக்கு எதிர்பார்ப்பு என்பது முற்றிலுமாக நீங்கிவிடும். தினசரி வாழ்க்கையும் ஆன்மிக வாழ்க்கையும் வெவ்வேறு என்று தோன்றாது, அதாவது இரண்டு பிளவுகளாக தெரியாது. இருப்பினும் நான் உங்களை எங்களிடமிருந்து உணவு பெற்றுக்கொள்ளுமாறு பணிவுடன் வேண்டிக் கொள்கிறேன்"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் வயிறு குலுங்க சிறிது நேரத்திற்கு சிரித்துக் கொண்டே இருந்தார். உடனே கோபத்துடன் சில வார்த்தைகளை கூறியபின், **"உன்னுள் இருக்கும் சந்நியாசிக்கு வீடு போன்ற உடைமைகள் இருக்கிறதா? அப்படி இல்லையென்றால் அவன் எங்கு சென்று பிகைஷ எடுக்க வேண்டும்? ம்ம்.. சரி வா"** என்று கூறினார்.

இந்த விவாதத்தை கேட்டுக் கொண்டிருந்த அனைவரும் மிகுந்த ஆச்சரியம் அடைந்தனர். அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிகளை நமஸ்கரித்துவிட்டு அவரை வீட்டுக்கு அழைத்துச் சென்றனர். அடுத்த நாளும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக ஷிண்டே, கோவிந்தபுவா மற்றும் சிலர் வந்தனர். அந்த சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் ஒந்க்கரின் வீட்டு தாழ்வாரத்தில் அமர்ந்து கொண்டிருந்தார். அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிகளை வணங்கினார்கள். அப்போது அங்கிருந்த பக்தர்கள் கூட்டத்தில் முஸ்லிம் பக்தரான தாதுமியாவும் இருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவரை அருகில் அழைத்து, **"சப்பாத்தியும் கடலைமாவும் கொண்டுவா"** என்று கூறினார். தாதுமியாவும் ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியபடியே கொண்டு வந்தார். லீலைகள் புரிவதில் வல்லவரான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கோவிந்தபுவாவிடம், **"வேற்றுமை ஏதும் இல்லாத பரமஹம்சரே வாரும்! இந்த பிகைஷயை ஏற்றுக் கொள்ளுங்கள்"** என்று கேலியுடன் கூறினார். இதைகேட்டவுடன் கோவிந்தபுவா அதிர்ச்சியில் உறைந்து, தன் தவறுகளை உணர்ந்து கொண்டு, **"மஹராஜ், 'எவரொருவரின் சொல்லும் செயலும் ஒன்றாக இருக்கிறதோ அவர்களை தலைவணங்க வேண்டும்' என்கிற வார்த்தைகள் உங்களுக்கு மட்டும்தான் பொருந்தும். நீங்கள் பரபிரம்மா**





**என்பதில் எந்தவித சந்தேகமும் கிடையாது. என்னைப் போன்றவர்கள் வெறுமனே அறிவுரை மட்டும் வழங்கிவிட்டு அதை செயல்படுத்துவதில் கவனம் செலுத்துவதில்லை. துக்காராம் மஹராஜ், 'நான் அனைவருக்கும் அறிவுரை வழங்குகிறேன் ஆனால் என்னுடைய ஒரு குறையைக்கூட நான் இன்னும் மாற்றிக்கொள்ளவில்லை' என்று கூறுவார். நாம் பேசும் வார்த்தைகள் மட்டுமே அனைவரையும் கவர்ந்திழுத்து விடாது. இதே சொல்லும் செயலும் ஒன்றாக இருப்பவர்களுடைய வார்த்தைகளை மூவுலகங்களிலும் ஏற்றுக்கொள்ளப்படும். ஸ்வாமி, உங்களுக்கு ஈடுஇணை இந்த உலகில் எவரும் இல்லை"** என்று கூறி முடித்தார்.

பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகள், **"நாம் அனைவரும் ஒன்றுதான்"** என்று கூறினார். பிறகு கோவிந்த ஸ்வாமியும் ஷிண்டேவும் சில சேவைகளை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு செய்தனர். சில நாட்கள் அக்கல்கோட்டில் தங்கியிருந்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை புகழ்ந்து கொண்டே தங்கள் சொந்த ஊருக்குச் சென்றனர்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 115

# சோலாப்பூரைச் சேர்ந்த பாபுராவ்

சோலாப்பூரைச் சேர்ந்த பாபுராவ் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பரம பக்தர். பக்தர்கள் எவரேனும் அக்கல்கோட்டிலிருந்தோ அல்லது கானகாபூரி லிருந்தோ சோலாப்பூர் வந்தால் அவர்களை அன்புடன் வரவேற்று சேவைகள் செய்வார். பாபுராவ் ஒரு முறை இருவருடன் அக்கல்கோட்டுக்கு பயணித்துக் கொண்டிருந்தார். அவர்கள் இருவரும் பாபுராவுடன் வயதில் மூத்தவர்கள். அவர்களில் ஒருவருக்கு திருமணம் நடக்கவில்லை, இன்னொருவர் வறுமையின் பிடியில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்தார். வழிப் பயணத்தின் போது அவர்களில் ஒருவர், **"ஸ்ரீ ஸ்வாமி ஒரு அவதாரம் என்று கூறுகின்றனர். என்னிடம் பணம் மிகுதியாக இருக்கிறது ஆனால் என்ன காரணத்தினாலோ நாற்பது வயதாகியும் இன்னும் திருமணம் நடைபெறவில்லை"** என்றார். மற்றவர், **"நான்**

**நன்கு படித்தவன் இருப்பினும் எனக்கு எந்த வேலையும் கிடைக்கவில்லை. நம் இருவருடைய தேவையும் பூர்த்தி அடைந்தால் மட்டுமே ஸ்ரீ ஸ்வாமிகளை ஒரு அவதாரம் என்று ஒத்துக் கொள்ள முடியும்”** என்று பேசிக்கொண்டனர்.

உடனே பாபுராவ், **“வெறும் வார்த்தைகளால் என்ன பயன் இருக்கிறது! நீங்கள் ஏதாவது பிரார்த்தனை நிறைவேற்றுவதாக உறுதியளியுங்கள்”** என்று கூறினார். அதற்கு அவர்கள் **“அப்படி எங்கள் தேவைகள் பூர்த்தி அடைந்தால் நாங்கள் ஒவ்வொரு வருடமும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்கு அக்கல்கோட்டுக்கு வருவதாக உறுதி அளிக்கிறோம்”** என்று கூறினர்.

அக்கல்கோட் சென்றடைந்து ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்தவுடன் அவர் மிகுந்த கோபத்துடன், **“ஒரு வேசியை அழைத்துக்கொண்டு ஒரு இடத்தில் போய் அமர்ந்துகொள். சந்நியாசியின் ஆண்மையை சோதிக்கிறாயா?”** என்று கேட்டார். இதைக் கேட்டவுடன் அவர்கள் இருவரும் பயத்தில் நடுங்கிக் கொண்டிருந்தனர். அவர்கள் இருவரும் தன்னைத்தானே தங்கள் கண்ணத்தில் அறைந்து கொண்டனர், தோப்புக்கரணம் போட்டனர், தங்களை மன்னிக்குமாறு ஸ்ரீ ஸ்வாமிகளை கெஞ்சினர். கருணைக்கடலான ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களை மன்னித்துவிட்டு, பிரசாதம் அளித்த பின்னர் விடைகொடுத்து அனுப்பி வைத்தார். மூவரும் அங்கு மூன்று நாட்கள் தங்கியிருந்துவிட்டு தங்கள் சொந்த கிராமத்திற்குச் சென்றனர். இரண்டு மாதத்திற்குள் ஒருவருடைய திருமணமும், மற்றொருவருக்கு வேலையும் கிடைத்து, அவர்களுடைய பிரார்த்தனை நிறைவேறின. அவர்கள் பிரார்த்தனையை நிறைவேற்றும் வண்ணம், ஒவ்வொரு வருடமும் அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தனர்.

ஏதும் அறியாதவர்களை ஒரு சில வார்த்தைகளோ அல்லது சில காரியங்களோ செய்ய வைத்து, அவர்களுக்கு அருள் மழை பொழிந்து, அவர்களை தன் பக்தர்களாக தன் வசம் இழுத்துக்கொண்டு, அவரே அவர்களுக்கு அரணாக இருந்து வழிநடத்துகிறார் என்பது இந்த நிகழ்ச்சி நமக்கு தெளிவு படுத்துகிறது அல்லவா?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 116

# வாமன்புவாவும் தாம்பூல பிரசாதமும்

சக வருடம் 1794 இல் (கி.பி.1872) நாசிக்கில் சிம்ஹஸ்தா என்று அழைக்கப்படும் 12 வருடங்களுக்கு ஒரு முறை நடைபெறும் கும்பமேளா நடைபெற்றது. அந்த வருடத்தில் வாமன்புவா நாசிக், திரியம்பகேஸ்வரர் ஆகிய இடங்களுக்குச் சென்றுவிட்டு சப்தசிருங்கி தேவியை தரிசனம் செய்வதற்காகச் சென்றிருந்தார். தேவியை முறைப்படி வணங்கிவிட்டு அங்கிருந்த போபேவிடம் (அர்ச்சகரிடம்) தேவியின் வாயில் இருக்கும் தாம்பூல பிரசாதத்தை அளிக்குமாறு கேட்டுக்கொண்டார். போபே மிகுந்த கிண்டலுடன், **"ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் உண்மையிலேயே பரப்ரம்மவாக இருந்தால், உங்களுக்கு அவர் மீது உண்மையான பக்தி இருந்தால் அவரே தேவியின் வாயில் இருக்கும் தாம்பூல பிரசாதத்தை உங்களுக்கு அளிப்பார்"** என்று கூறினார். இந்த உரையாடலை ஆன்மிகத்தில் மிகுந்த உயர்ந்த நிலையில் இருந்த பிரம்மச்சாரி புவா கேட்டுக் கொண்டிருந்தார். அவர் ஜகதாம்பாவை மிகுந்த சிரத்தையுடன் பிரார்த்தனை செய்து கொண்டார். அச்சமயத்தில் ஜகதாம்பாவின் வாயிலிருந்த தாம்பூலம் அவருடைய உடலின் மீது விழுந்தது. அந்த தாம்பூலத்தை எடுத்து வாமன்புவாவும், பிரம்மச்சாரிபுவாவும் பகிர்ந்து கொண்டு உண்டனர். இந்த அற்புதத்தைக் கண்ட போபே அதிர்ச்சியில் வாயடைத்து தலைகுனிந்தார்.

அடுத்த நாள் இருவரும் சதாரா சென்று தேவ் மாம்லத்தாரை தரிசனம் செய்துவிட்டு நாசிக் சென்றனர். அங்கிருந்த கங்கையில் (நாசிக்கில் இருக்கும் கோதாவரி கங்கைக்கு ஈடானது) நீராடிவிட்டு அந்த புண்ணிய தீர்த்தத்தை எடுத்துக்கொண்டு பண்டரிபுரம் சென்றனர். பண்டரிபுரத்தில் இருக்கும் பாண்டுரங்கனுக்கு இந்த கங்கை நீரினால் அபிஷேகம் செய்தனர். அப்போது இவர்களுடன் இருந்த ஏக்நாத்பந்த் பாட்வே மற்றும் தாதாஜி மனோகர் ஆகிய இருவரும் பாண்டுரங்கனுக்கு பதிலாக அங்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இருக்கும் காட்சியைக் கண்டு தரிசித்தனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் பாண்டுரங்கனும் வேறல்ல என்பதை அவர்கள் உணர்ந்து கொண்டு பேரானந்தம் அடைந்தனர்.

பின்னர் அவர்கள் பண்டரிபுரத்திலிருந்து அக்கல்கோட்டுக்கு நடந்தே சென்றடைந்தனர். அன்றைய தினம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பக்தர்களுடன்





மோடியின் வீட்டில் இருந்தார். அவருக்கு முன்னால் ஒரு தேங்காயை வைத்துவிட்டு சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தனர். ஸ்ரீ ஸ்வாமி அவர்களிடம், **"சப்தசிருங்கியிடம் சென்று ஏன் அப்படி கூச்சலிட்டீர்கள்? அதனால் நானே தாம்பூலத்தை கொடுக்க வேண்டியதாயிற்று!, பாண்டுரங்கனிடமிருந்து கங்கை ஜலத்தையும் பெற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று!"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் தன் பக்தர்கள் மீது கொண்டிருக்கும் அதீத அன்பை எண்ணி இருவரின் கண்களிலிருந்து கண்ணீர் உருண்டோடின. அன்பை பொழிந்துகொண்டிருந்த அதே நொடியில் கோபமாக மாறி, **"அந்த மாம்லத்தாரிடம் செல்ல வேண்டிய அவசியம் என்ன?"** என்று கேட்டார். உடனே இருவரும் தங்களை மன்னிக்குமாறு ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்தனர்.

தத்தரை வணங்கினால் அனைத்து தெய்வங்களையும் வணங்குவதற்கு சமமாகிவிடும் என்பதை நிரூபிக்கும் வண்ணம், தத்த ஸ்வரூபமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பக்தர்கள் வேறெங்கும் அலைந்து திரிந்து மற்ற தெய்வங்களை வணங்குவதற்கு பதிலாக தன்னை மட்டும் நினைத்துக் கொண்டால் போதுமானது என்பதை நமக்கு இந்த நிகழ்ச்சியின் மூலம் சுட்டிக்காட்டுகிறார். மேலும் அவருடைய பக்தர்களை அவர் நிழல் போல தொடர்ந்து கொண்டு கவனித்துக் பாதுகாக்கிறார் என்பதை அல்லவா இந்த நிகழ்ச்சி நமக்கு புரிய வைக்கிறது!

### கங்கா அபிஷேகம்

சக வருடம் *1795* (கி.பி.*1873*) , சித்திரை மாதம் தேய்பிறையில் ஒருநாள் விடியற்காலையில் ஸ்ரீ வாமன்புவா ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு கங்கை நீரினால் அபிஷேகம் செய்வதற்காகச் சென்றார். அப்போதுதான் ஸ்ரீ ஸ்வாமிகள் அபிஷேகத்திற்காக தயார் நிலையில் இருந்தார். சோளப்பாவும் சுந்தரா பாயும் வாமன் புவா கங்கை நீரை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அபிஷேகம் செய்வதற்கு அனுமதி அளிக்கவில்லை. உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் கோபத்துடன், **"இந்த மார்வாடிக்கும் விதவைக்கும் நீ ஏன் பயப்படுகிறாய்? கங்கை நீரை அபிஷேகம் செய்"** என்று கூறினார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவ்வாறு கூறிய அடுத்த நொடியே எந்த தாமதமும் இல்லாமல், ஒரு வாளி முழுவதும் கங்கை நீரை ஸ்ரீ ஸ்வாமிகள் மீது அபிஷேகம் செய்தார். பின்னர் ஒரு பட்டு காவித் துணியை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அணிவித்துவிட்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார். பின்னர் தன் வீட்டிற்குச் சென்றார். மாலை நேரத்தில் கீர்த்தனை செய்வதற்காக




வாமன் புவா நின்றுகொண்டிருந்த போது, **“வீணாக ஏன் கீர்த்தனை செய்கிறாய்? நைவேத்தியம் எங்கே?”** என்று கேட்டார். அடுத்தநாள் வாமன் புவா அளித்த நைவேத்தியத்தை ஏற்றுக்கொண்டார்.

வாமன் புவா மட்டுமல்ல அக்கல்கோட் வந்த பலரிடமும் ஸ்ரீ ஸ்வாமி ஒரு குழந்தைபோல தனக்கு நைவேத்தியம் வேண்டும் என்று கேட்டு வாங்கி ரசித்து சாப்பிட்டுவிட்டு அவர்களுக்கு புண்ணியத்தை வாரி வழங்கியிருக்கிறார். அனைத்து உயிர்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பிடித்தமான உணவுகளை நாம் நைவேத்தியமாக படைக்கும்போது அவற்றை அவர் உண்டு நம்மையும் ஆசீர்வதிக்க மாட்டாரா என்ன!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 117

# கான்பாட்டியாவின் கதை

கான்பாட்டியா என்கிற பக்தர் ஒருவர் இருந்தார். அவர் பல்வந்த் ராவ் என்கிறவர் உறங்கிக்கொண்டிருக்கும் போது அவருடைய மண்டையை கல்லினால் தாக்கிவிட்டார். இதனால் பெரும் பரபரப்பு ஏற்பட்டது. அப்போது ஸ்ரீ ஸ்வாமியின் பக்தர்கள் மோடியின் வீட்டில் உறங்கிக் கொண்டிருந்தனர். கூச்சல் மிகுதியாக இருந்தமையால் அனைவரும் சம்பவம் நடைபெற்ற இடத்திற்கு ஓடிச் சென்றனர். சுந்தராபாய் பயத்தில் ஸ்ரீ ஸ்வாமிகளின் கட்டிலுக்குக் கீழே சென்று படுத்துகொண்டாள். ஸ்ரீ ஸ்வாமி அவளுடைய பின் பகுதியில் தன் காலால் உதைத்தார். ஒருவன் காவலதிகாரியை அழைக்க நகரத்திற்கு விரைந்தான். காவலதிகாரி சம்பவம் நடந்த இடத்திற்கு வந்து குற்றவாளியிடம் பேசி புரியவைக்க முயற்சி செய்தார். ஆனால் அருகில் சென்று அவரை பிடித்து இழுத்துவர எவருக்கும் துணிவு இல்லை. சிறிது நேரத்திற்குப் பிறகு சேவகர்களும் காவல் அதிகாரியும் சேர்ந்து சில தந்திரங்கள் செய்து அவரை பிடித்து கைது செய்தனர்.

இந்த சம்பவம் நடைபெறுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னர் கான்பாட்டியா விஸ்வநாதபுவாவை இதே போல தாக்கியிருந்தார். அவர் ஒரு மனநோயாளியாக இருந்தாலும் ஸ்ரீ ஸ்வாமியின் பரம பக்தராக இருந்தார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் நடந்து செல்லும்போது, ஸ்ரீ ஸ்வாமிகளை பார்த்துக்கொண்டே, பின்புறமாக அவருடன் நடந்து வருவார். கான்பாட்டியா எப்போதும் நான்கு அல்லது ஐந்து நபர்கள் கூட சுமக்க முடியாத சில சாமான்கள் மற்றும் ஒரு கட்டில் ஆகியவற்றை சுமந்து கொண்டே திரிந்து கொண்டிருப்பார். சில நாட்களுக்கு ஸ்ரீ ஸ்வாமிகளின் மலத்தை உண்டு கொண்டிருந்தார். இருப்பினும் கர்மாவின் பிடியிலிருந்து எவராலும் எளிதாக தப்பிவிட முடியுமா?

**இரண்டாவது சம்பவம்**

கான்பாட்டியா நாத் சம்பிரதாயத்தை கடைப்பிடித்து வந்தார். அவரைக் கண்டாலே அனைவருக்கும் பயம். எவரேனும் கான்பாட்டியாவின் வார்த்தைகளுக்கு மறுவார்த்தை பேசினால் அவர்களை நன்றாக அடித்து உதைத்து விடுவார். குறிப்பாக ஸ்ரீபாத பட், சோளப்பா, விஸ்வநாத் புவா மற்றும் சுந்தராபாயி ஆகியோரைக் கண்டாலே அவர் எச்சரிக்கை உணர்வோடு நடந்து கொள்வார். அவர்களுடன் சண்டையிட்டதற்காக முன்பு அவர் தண்டனை பெற்றிருந்தார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமியின் அருள் அவருக்கு அபரிமிதமாக இருந்தது. மாம்லத்தார் கான்பாட்டியாவை சிறையிலிருந்து விடுவித்துவிட வேண்டும் என்று விரும்பினார் ஆனால் மற்ற சேவகர்களோ அவரை விடுவித்தால் அவர் எவரையேனும் கொன்றுவிடுவார் என்று பயந்தனர்.

ஸ்ரீ ஸ்வாமியின் தரிசனம் அவருக்குக் கிடைக்கவில்லையென்றால் நான்கு நாட்களுக்குக் கூட உணவருந்தாமல் இருப்பார். பிறகு நான்கு நாட்களுக்கான சாப்பாட்டையும் ஒன்றாக சேர்த்து சாப்பிட்டு விடுவார். சிறைச்சாலையில் புகைபிடிக்க அனுமதி இல்லை என்கிற காரணத்தினால் அவருக்கு புகைபிடிப்பதற்கான வழியில்லை. ஆனால் இரவு நேங்களில் அவர் புகை பிடிப்பார். தூரத்திலிருந்து பார்த்தால் காவலதிகாரியின் கண்ணுக்குத் தெரிந்த புகைக்குழாயும் புகையிலையும், அருகில் வந்து பார்க்கும்போது புலப்படாது. இந்த விஷயத்தை அவர் மேலதிகாரியிடம் விவரித்தார்.

கான்பாட்டியாவிற்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தினமும் தரிசிப்பதற்கான அனுமதி கிடைத்தது. சில நாட்களுக்குப் பிறகு அவர் தரிசனத்தின் போது கலாட்டா செய்யத் தொடங்கினார். அதனால் தினமும் தரிசனம் செய்வதற்கு மறுப்பு அளிக்கப்பட்டது.




ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் லெண்டுரிபுவாவின் தோட்டத்தின் வாயிலில் அமர்ந்திருந்தார். அங்கு மனிதர்களின் மார்பு உயரத்திற்கு உயரமான ஒரு சமாதி இருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகள் அதன் மீதேறி அமர்ந்துகொண்டார். அங்கிருந்த சிவலிங்கத்தை ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் வணங்கினார். அதே நேரத்தில் கான்பாட்டியாவும் அந்த வழியாக ஒரு காவலதிகாரியால் அழைத்து வரப்பட்டார். அந்த தோட்டத்தின் உள்ளிருந்து 'ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் கி ஜெய்' என்கிற கோஷம் கான்பாட்டியாவின் காதுகளில் விழுந்தது. அவர் தன் சுயநினைவை இழந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்யவேண்டும் என்று அந்த காவலதிகாரியிடம் விண்ணப்பித்தார். அதற்கு காவலதிகாரி சம்மதிக்காததால் அவரைக் காலால் இடுப்பில் உதைத்துவிட்டு அந்த அதிகாரியுடைய கத்தியை உறையிலிருந்து எடுத்துக்கொண்டு மஹராஜை நோக்கி ஓடினார்.

காவல் அதிகாரி ஊருக்குள் சென்று கத்தியுடன் மஹராஜை தரிசனம் செய்வதற்காக கான்பாட்டியா சென்றுள்ளார் என்று அனைவரிடமும் தெரிவித்தார். மாம்லத்தார், காவல் ஆய்வாளர் மற்றும் ஆயுதங்கள் ஏந்திய குதிரையோட்டி ஆகிய அனைவரும் மஹராஜை நோக்கிச் சென்றனர். கான்பாட்டியா கத்தியுடன் தன் கைகளை கூப்பியவாறு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்து கொண்டிருந்தார். அங்கு கூடியிருந்த ஐம்பதுக்கும் மேற்பட்ட பக்தர்கள் சிதறி ஓடிவிட்டனர். மூன்று நபர்கள் மட்டுமே அங்கு இருந்தனர். அவர் கையிலிருந்த கத்தியைப் பார்த்து ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **"இங்கு என்ன இருக்கிறது? கிணற்றடியில் ஒரு காளையும் மாட்டுவண்டியும் இருக்கிறது"** என்று கூறினார். அதன் உண்மையான அர்த்தம் என்னவென்று எவருக்கும் புரியவில்லை.

மஹராஜுடைய ஆணைக்கிணங்க கான்பாட்டியா சில அடிகள் நடந்து சென்றுவிட்டு பின்னோக்கிப் பார்த்தார். அங்கு வயதான பிராமணர் ஒருவர் உட்கார்ந்து இருப்பதை பார்த்தார். பின்பக்கத்திலிருந்து பார்க்கும் போது அவருடைய கருமையான,குள்ளமான சரீரம் சோளப்பாவை ஒத்ததாக இருந்தது. கான்பாட்டியவுக்கு சோளப்பவின் மீது மிகுந்த கோபம் இருந்தது. அதனால் அந்த பிராமணரின் கழுத்தில் கத்தியால் வெட்டினார். மேலும் ஏழு அல்லது எட்டு முறை மீண்டும் மீண்டும் அவரை வெட்டிக் கொண்டே இருந்தார். அவர் வெட்டிய வேகத்தில் கத்தியே வளைந்து, அதன் கைப்பிடியும் கழன்று விழுந்து விட்டது. அந்த பிராமணர் மெதுவாக எழுந்து கிணற்றுக்கு அருகே

சென்றார். அதிகமான ரத்தப் போக்கினால் அவருக்கு மயக்கம் ஏற்பட்டு கீழே விழுந்துவிட்டார். அனைவரும் அவரை மருத்துவமனையில் கொண்டு சேர்த்தனர்.

காவல் துறையினர் உட்பட 400 பேர் கான்பாட்டியாவை சுற்றி நின்று கொண்டிருந்தனர். ஆனால் அவருக்கு அருகில் செல்ல எவருக்கும் துணிவில்லை. அவர் அனைவரின் மீதும் மண்ணை வாரி இறைத்துக் கொண்டிருந்தார். அப்போது வலிமை வாய்ந்த ஆட்டிடையன் ஒருவன் அங்கு வந்தான். அந்த ஆட்டிடையனின் உதவியுடன் கான்பாட்டியாவைப் பிடித்து கைது செய்தனர். எட்டு நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமிகளின் அருளினால் அந்த பிராமணர் குணமானார். புஜங்கா நடந்தவை அனைத்தையும் மாம்லத்தார் மற்றும் நீதிபதியிடம் விவரித்தார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அதற்கு, **"போசடிக்கே (கெட்ட வார்த்தை), பார் இவன் தன் புகழை பாடிக் கொண்டிருக்கிறான்"** என்று கூறினார்.

கான்பாட்டியா தன் கர்ம வினைகளினால் பைத்தியக்காரனைப் போல அனைவருக்கும் தெரிந்தாலும், அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மீது கொண்டிருந்த பக்தி அபரிமிதமானது. அனைவரும் அவரை தூற்றினாலும் ஸ்ரீ ஸ்வாமி கான்பாட்டியாவின் மீது அதீத பாசத்துடன் இருந்தது ஓர் அற்புதமான குரு-சிஷ்ய பந்தமல்லவா!

காண்பாடியாவைப் போலவே கோவிந்த் என்றொரு மனநிலை சரியில்லாத பக்தர் ஒருவர் அக்கல்கோட்டில் வாழ்ந்து வந்தார். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி கட்டிலில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தார். அதை கவனித்த கோவிந்த் ஸ்ரீ ஸ்வாமியின் பாதத்தில் கயிறால் கட்டிவிட்டு,மறுமுனையை அவருடைய கழுத்தில் கட்டிவிட்டு, ஸ்ரீ ஸ்வாமியை இரக்கமில்லாமல் இழுத்துச் சென்றார். இதைக் கண்டவுடன் சுந்தராபாயி மிகுந்த கூச்சலுடன் அவரை கயிற்றிலிருந்து விடுவித்தாள். அனைவரும் கோவிந்தை அடித்து உதைக்க துவங்கியதும், **"அவனை அடிக்க வேண்டாம். விட்டுவிடுங்கள்"** என்று ஸ்ரீ ஸ்வாமி கருணையுடன் கூறிவிட்டார். ஆனால் சில நாட்களுக்குப் பிறகு கோவிந்த் ஒரு கிணற்றினுள் தவறி விழுந்து தன் உயிரை விட்டான். அனைத்தையும் அறிந்திருந்த ஸ்ரீ ஸ்வாமியின் கருணைக்கு எல்லையுண்டோ!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**




## அத்தியாயம் 118

# ஏழைப் பெண் கொண்டு வந்த நைவேத்தியம்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பக்தையான ஒரு ஏழை பிரமணப் பெண் ஸ்ரீ ஸ்வாமிகளுக்காக நைவேத்தியம் செய்து கொண்டு வந்திருந்தாள். அவள் பரம ஏழையாக இருந்தமையால் அவளை ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுக்கு அருகில் செல்லக் கூட எவரும் அனுமதிக்கவில்லை. அவள் தூரத்தில் அமர்ந்துகொண்டு, **"என் நைவேத்தியத்தை ஸ்ரீ ஸ்வாமி வாய் நிறைய உண்பாரா?"** என்று எண்ணியவாறு வருத்தப்பட்டுக் கொண்டிருந்தாள். அவள் தன் மனதிற்குள் பிரார்த்தனை செய்துகொண்டிருந்த அதே சமயத்தில், **"அந்த பிராமணப் பெண்ணின் நைவேத்தியத்தை தடுப்பது யார்?"** என்று ஸ்ரீ ஸ்வாமிகள் பலமாக கூச்சலிட்டார். **"ஏய்! உள்ளே வா!"** என்று தன் கையால் சைகை செய்து அவளை அழைத்தார். அந்தப் பெண் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஸ்ரீ ஸ்வாமிகளை நோக்கி ஓடினாள்.

சர்வ வியாபியான ஸ்ரீ ஸ்வாமிகள் அவளை ஆசீர்வதித்துவிட்டு, **"உன் மகன் மிகவும் குறும்புக்காரன்"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் அவள் ஆனந்தக்கண்ணீர் வடித்தாள். அங்கிருந்தவர்கள் எவருக்கும் எதுவுமே புரியவில்லை. அந்த பெண்ணிடம் விசாரித்தபோது, **"நான் எவ்வளவோ துறவிகளை சந்தித்திருக்கிறேன், ஆனால் எவருமே ஸ்ரீ ஸ்வாமிகளைப் போல் நடந்து கொண்டதில்லை. ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆசீர்வாதத்தினால் நான் முழு மனநிறைவு பெற்றேன். நாற்பத்தி ஐந்து வயதாகியும் குழந்தை இல்லாத என்னை ஸ்ரீ ஸ்வாமிகள் இவ்வாறு ஆசீர்வதித்துள்ளார்"** என்று கூறினாள்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய முழு ஆசீர்வாதத்தினால் அவளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அவள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை நினைக்கும் போதெல்லாம் ஆனந்தக்கண்ணீர் வடிப்பாள்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்மர்த்ருகாமி, பக்தர்களின் மீது அதீத கருணை, அன்பு நிறைந்தவர். அவர் அந்த பெண்ணுடைய ஆசையை நிறைவேற்றியது மட்டுமல்லாமல், அவள் எந்தவித பிரார்த்தனையும் செய்யாமலேயே

அவளுடைய தேவையை நிறைவேற்றி வைப்பதில் அவருக்கு நிகர் வேறெவரும் கிடையாது என்பதை இந்த நிகழ்ச்சி நமக்கு அழுத்தமாக வலியுறுத்தும் வண்ணம் அமைந்துள்ளது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 119

# விநாயக் வாசுதேவ ராவ்

மும்பையைச் சேர்ந்த விநாயக் வாசுதேவ ராவ் படித்த நல்ல உயர்ந்த பதவியில் இருக்கும் ஒரு சர்க்கார் அதிகாரி. அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தர். ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக அவர் முதன்முறையாக அக்கல்கோட் செல்ல திட்டமிட்டபோது அவருடைய நண்பர்கள் மற்றும் குடும்பத்தினரும் அவருடன் வர விரும்புவதாக கூறினர். சுமார் 200 நபர்களுடன் அவர் கடப்காவ் ரயில் நிலையத்தில் வந்திறங்கினார். அவர்கள் வரப்போகும் செய்தி முன்பே அரண்மனைக்கு தெரிவிக்கப்பட்டுவிட்டதால், அவர்களை வரவேற்க யானைகள், குதிரைகள் மற்றும் சில அதிகாரிகள் கடப்காவ் ரயில் நிலையத்தில் காத்திருந்தனர். அப்போது ஸ்ரீ ஸ்வாமி மகராஜ், **"எனக்கும் ஒரு குதிரை கொடு, நானும் செல்கிறேன்"** என்று கூறினார். உடனே மஹாராஜா ஒரு பல்லக்கை அனுப்பிவைத்தார். ஸ்ரீ ஸ்வாமி பல்லக்கில் ஏறிக்கொண்டு கடப்காவ் கிளம்பினார். பாதி தூரம் இருக்கும் நிலையில், ஸ்ரீ ஸ்வாமிகளே தன்னை எதிர்கொண்டு அழைக்க வருவதை அறிந்து கொண்ட விநாயக்ராவும் அவர் குடும்பத்தினரும் வண்டியை விட்டு இறங்கி, நடந்தே சென்று ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்தனர். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதத்தில் நமஸ்கரித்துவிட்டு தன் கண்ணீரால் பாதங்களுக்கு அபிஷேகம் செய்தார். உடனே மகராஜ், **"வா போகலாம், வண்டி கிளம்பட்டும்"** என்று கூறியவுடன் ரயில் கிளம்பியது. ரயிலில் இருந்த மற்றவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளை அக்கல்கோட்டில் தரிசனம் செய்தனர்.

விநாயக் காகா நான்கு நாட்கள் அக்கல்கோட்டில் தங்கியிருந்துவிட்டு பின்னர் கிளம்புவதற்காக ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அனுமதி கேட்டு சென்ற போது,

**“சீக்கிரம், விரைவாக கிளம்பு”** என்று பதைபதைப்புடன் கூறினார். அங்கிருந்தவர்கள் எவருக்கும் அதன் பொருள் விளங்கவில்லை. ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆணைப்படி விநாயக்ராவ் விரைவாக கடப்காவ் ரயில் நிலையத்தைச் சென்றடைந்தார். அவருடன் வந்திருந்தவர்களில் சிலர் அவருக்கு முன்னராகவே ரயில் நிலையத்திற்குச் சென்றிருந்தனர். சில குழந்தைகள் யானையின் அம்பாரியில் அமர்ந்து சவாரி செய்து வந்திருந்தனர்.

ரயில் வசதி என்பது அப்போதுதான் புதிதாக உபயோகத்தில் வந்திருந்தது. ரயிலின் விசில் சத்தத்தைக் கேட்டவுடன் யானைக்கு பயம் ஏற்பட்டு, தன் தும்பிக்கையை உயர்த்திக் கொண்டு காட்டுக்குள் ஓடத்தொடங்கியது. விநாயக்ராவுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. மிகுந்த கவலையுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை பிரார்த்தனை செய்து கொண்டார். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய ‘விரைவாக செல்’ என்பதன் அர்த்தத்தை புரிந்து கொண்டார்.

யானையை எவராலும் கட்டுப்படுத்த முடியவில்லை. ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அடைக்கலம் அடைவதைத் தவிர வேறுவழியில்லை என்பதை விநாயக் காகா உணர்ந்து கொண்டு அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை மனதார பிரார்த்தனை செய்து கொண்டார். உடனே மதம்பிடித்த யானை ஆட்டுக்குட்டியைப் போல சாந்தமாக நின்றது. பின்னர் பாகன் அதை ரயில் நிலையத்திற்கு அழைத்து வந்தான். ஸ்ரீ ஸ்வாமிகளின் அபாரமான சக்தியை எண்ணி விநாயக் காகா புளங்காகிதம் அடைந்தார். **“ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி...”** என்று கூறிக்கொண்டே அனைவரும் ரயில் பெட்டிக்குள் ஏறினார்கள்.

## விநாயக் ராவ் இரண்டாவது முறையாக அக்கல்கோட் வருதல்

ஒரு நாள் காலை ஒன்பது மணிக்கு இரண்டாவது முறையாக விநாயக் காகா அக்கல்கோட் வந்தடைந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தார். அவருக்கு ராவ்சாஹேப் தவளே சாமரம் வீசிக் கொண்டிருந்தார், அருகில் ஷஹாஜி மஹராஜ் அமர்ந்து கொண்டிருந்தார். “ஷங்கர், உன் வேலை என்னவென்று உனக்கு தெரியாதா?” என்று ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஆணையிட்டார். இதைக் கேட்டவுடன் அரசர் சாமரத்தை வாங்கி வீசத் தொடங்கினார். அன்று சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு பீதாம்பரம் அணிவித்து மிகவும் விலையுயர்ந்த தலைப்பாகையும் தொப்பியும் அணிவித்திருந்தார். திடீரென ஸ்ரீ ஸ்வாமிகள் அந்த விலையுயர்ந்த ஆடைகள் அனைத்தையும் அவிழ்த்து எறிந்தார். அப்போது அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. “பண்டரிபுர விதோபா

துன்பத்தில் இருக்கிறார்" என்று பலமுறைகள் கூறிக்கொண்டே இருந்தார். அன்று நாள் முழுவதும் ஸ்ரீ ஸ்வாமி சோகமாகவே இருந்தார். அனைத்து பக்தர்களும் ஏதோ விபரீதம் நடக்கப்போகிறது என்பதை உணர்ந்து கொண்டனர், ஆனால் என்ன விபரீதம் என்பது அவர்களுக்குத் தெரியவில்லை. அதனால் அனைவரும் வருத்தத்தில் இருந்தனர்.

விநாயக் காகாவுக்கு விடுமுறை இல்லாத காரணத்தால் அன்றிரவே மும்பைக்குக் கிளம்ப வேண்டியதாயிற்று. ஸ்ரீ ஸ்வாமிகளின் அனுமதியைப் பெற்றுக் கொண்டு கிளம்பினார். இரவில் ரயில் பார்ஸி ரயில் நிலையத்தை அடைந்தபோது விநாயக் காகாவுக்கு, பண்டரிபுரத்தில் இருக்கும் பண்டரி நாதனின் மீது ஒரு இஸ்லாமியர் கல்லை தூக்கி எறிந்ததால் ஸ்வாமியின் கால் உடைந்து விட்டது என்கிற தகவலைக் கேள்விப்பட்டார். உடனே அவருக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் முந்தைய நாள் ஏன் அப்படி நடந்துகொண்டார் என்பதன் அர்த்தம் புரிந்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் லீலைகளை எண்ணி அவர் மிகவும் ஆச்சரியம் அடைந்தார். அங்கிருந்தவர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிகளை வாயார புகழ்ந்து கொண்டே மும்பை சென்றடைந்தனர்.

மூவுலகங்களிலும் நடைபெறும் அனைத்து நாடகங்களும் அக்கல்கோட்டில் அரங்கேறிக் கொண்டிருந்தன. ஆனால் அவற்றை புரிந்துகொள்ள எவராலும் முடியவில்லை என்றாலும் சில சமயம் சிலர் சில அனுபவங்களை பெற்றனர். பின்னாட்களில் விநாயக் காகா மும்பையில் மஹாலக்ஷ்மி மலையில் ஒரு மடத்தை நிறுவி ஒரு பிராமணரை பூஜாரியாக நியமித்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 120

# பரோடாவைச் சேர்ந்த ஜானகி பாய்

பரோடாவிலிருந்து ஜானகிபாய் என்கிற பிராமணப் பெண் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்திருந்தாள். அவள் மிகுந்த ஆச்சாரத்தைக் கடைபிடிப்பவள். அவள் எங்கும் அசுத்தம் நிறைந்திருக்கும் என்கிற எண்ணம் உடையவள் என்பதால், தன் பாதத்தை பூமியில் வைப்பதற்குக்

கூட தயங்குவாள். அவள் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு நைவேத்தியம் செய்து கொண்டு வந்தாள், ஆனால் வரும் வழியில் ஒரு தேள் அவளை கொட்டிவிட்டது. இருப்பினும் அவள் எந்தவித தடையும் இல்லாமல் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தன் நைவேத்தியத்தை சமர்ப்பித்தாள்.

அவள் எப்படியோ சிரமப்பட்டு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுக்கு அருகில் சென்று பிரார்த்தனை செய்து கொண்டாள். உடனே மஹராஜ் அவளிடம், **“நாங்கள் ஆச்சாரமாக உணவு உண்பதில்லை. உன்னைப்போல் நடிப்பவர்களிடம் இதை நீ கொடுக்கலாம்”** என்று சுட்டிக் காட்டியவுடன் அவள் தன் நடத்தையை எண்ணி வருந்தினாள். அவள் தன்னை மன்னிக்குமாறு கெஞ்சியவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் அவள் அளித்த நைவேத்தியத்தை சுவைத்துக் கொண்டே, **“நீ வெள்ளையான பிறகு உன் மனதில் பக்தி அதிகரிக்கும்”** என்று கூறினார்.

இந்த நிகழ்ச்சி நடைபெற்ற சில நாட்களுக்குப் பிறகு அவள் வெண்குஷ்டத்தால் பாதிக்கப்பட்டாள். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வார்த்தைகளை எந்த சக்தியால் மாற்ற முடியும்? பிரமாண்டங்களின் தலைவரான ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய அனைத்தும் பலித்தன. அவள் வெண்குஷ்டம் தாக்கிய பின்னர் தன் தீய கர்மாக்களை எண்ணி மிகுந்த வருத்தமடைந்து, எப்போதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நினைவிலேயே வாழ்ந்தாள்.

இந்த நிகழ்ச்சி மிகவும் எளிமையாக தெரிந்தாலும், நாம் தினசரி வாழ்க்கையில் கடைபிடிக்கும் ஒழுக்கம் மற்றும் கட்டுப்பாடு ஆகியவை மற்றவர்களுக்கு தொந்தரவு அளிக்காத வண்ணம், நம்மை சுற்றி உள்ளவர்களையும் அனுசரித்து இருக்க வேண்டும் என்பதை உணர்த்துவது போலத் தோன்ற வைக்கிறதல்லவா?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 121

# வாமன்புவாவின் கானகாபூர் பயணம்

அது சக வருடம் *1796* (கி.பி.*1874*) பத்ரபாட மாதம், வாமன்புவா புண்ணிய க்ஷேத்திரங்களான கிர்னார், துவாரகை, சுதாமபுரி போன்ற இடங்களுக்குச் சென்று விட்டு பரோடாவுக்கு வந்தடைந்தார். பின்னர் ஸ்ரீ

ஸ்வாமி மஹராஜை தரிசனம் செய்து தான் ஒவ்வொரு புண்ணிய க்ஷேத்திரங்களிலும் பெற்றுக்கொண்ட பிரசாதத்தை அவரிடம் சமர்ப்பிக்கலாம் என்கிற எண்ணத்தோடு அக்கல்கோட் சென்றடைந்தார். அவர் கோபி சந்தனம் போன்ற பல பிரசாதங்களை அளித்த போது ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அவரிடம், **"பதக்கம் போல இருக்கும் பத்தாசா (ஒரு இனிப்பு பதார்த்தம்) எங்கே?"** என்று கேட்டார். இதைக் கேட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமியின் சர்வ வல்லமையை எண்ணி மிகுந்த சந்தோஷம் அடைந்தார். அவர் அந்த இனிப்பை பரோடாவில் ஒரு தகர டப்பாவில் போட்டு வைத்து விட்டு மறந்து விட்டார். வாமன்புவா தன்னை மன்னிக்குமாறு ஸ்ரீ ஸ்வாமிகளிடம் கேட்டுக்கொண்டார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமி, **"அவற்றை நாய்களுக்கு போட்டு விடு"** என்று கூறியதன் அர்த்தத்தை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை.

வாமன்புவா ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தான் என்ன செய்வது என்று கேட்டதற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் தன் சேவகர்களை நோக்கி தன் கைகளை நீட்டினார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களுக்கு அன்னதானம் அளிக்குமாறு உத்தரவிடுகிறார் என்பதை புரிந்து கொண்டார். சுமார் 250 பேருக்கு அன்னதானம் ஏற்பாடு செய்யப்பட்டது. பாதிக்கும் மேற்பட்டோர் உணவு உண்ட பின்னர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுக்கு அனைத்து பதார்த்தங்களும் பரிமாறப்பட்ட உணவுத் தட்டு அளிக்கப்பட்டது. அச்சமயத்தில் சுந்தராபாயி ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஏதோ உணவு பரிமாறிக் கொண்டிருந்தாள். ஸ்ரீ ஸ்வாமிகள் வாமன்புவாவிடம், **"தசரா சமயத்தில் சப்பாத்தி கொடு"** என்று கூறியவுடன், தனக்கு தசரா வரை ஊருக்குச் செல்ல அனுமதி இல்லை என்பதை அவர் புரிந்து கொண்டார்.

ஒருநாள் புவா சுந்தராபாயியிடம் வந்து, **"நான் கானகாபூர் சென்று திரும்புகிறேன்"** என்று கூறினார். அதற்கு பாயி, **"நீங்கள்தான் ஏற்கனவே பலமுறை சென்றிருக்கிறீர்களே, இப்போது அங்கென்ன வேலை இருக்கிறது?"** என்று கேட்டாள். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், **"நீ தண்ணீரிலும் மண்ணிலும் மூழ்கிவிடுவாய்"** என்று கூறினார். ஸ்ரீ ஸ்வாமிகளின் கட்டளையை சரியாகப் புரிந்து கொள்ள முடியாமல் அடுத்த நாள் காலை கானகாபூருக்கு புறப்பட்டார். குருவின் வார்த்தைகளை மீறும்படி கர்மா எப்படி வேலை செய்யும் என்பதற்கு இந்த நிகழ்ச்சி ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

பத்ரபாடா மாதத்தில் அந்த பகுதிகளில் நல்ல மழை இருக்கும். அவர் ரயிலில் பயணம் செய்து உடூர் வரை சென்றுவிட்டு ஆறு மைல்கள் நடந்தே சென்றார். அப்போது அவர் இரண்டு அல்லது மூன்று பயங்கரமான சேறு




சகதிகளை கடந்து சென்றார். அப்படி சென்று கொண்டிருந்தபோது ஒரு ஆழமான ஓடை போன்ற சேற்றில் சிக்கிக் கொண்டு மூழ்கிக் கொண்டே இருந்தார். அவருடைய உடல் முழுமையாக சேற்றில் சிக்கி, அவருடைய கழுத்து வரை மண்ணுக்குள் புதைந்து விட்டார். அவர் வெளியே வர எவ்வளவோ முயற்சி செய்தும் முடியாமல் இன்னும் மூழ்கிக் கொண்டே இருந்தார். அவருக்கு பின்னால் ஒரு முசல்மான் குதிரை வண்டியில் வந்தார். அவரும் புதைமண்ணில் சிக்கிக்கொண்டார். அவர் புவாவை பார்த்து, **"இங்கு புதைமணல் இருக்கிறது என்று என்னிடம் ஏன் கூறவில்லை?"** என்று கேட்டார். அவருக்கு பதில் அளிக்கக்கூட தெம்பில்லாமல் புவா தவித்துக் கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் எவ்வளவோ சுட்டிக்காட்டியும் அறிவில்லாமல் வந்து இப்படி சிக்கிக் கொண்டோமே என்று வாமன்புவா நொந்து கொண்டார். இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை விட்டால் வேறு கதி இல்லை என்பதை உணர்ந்து கொண்டு, அவரை மனதார பிரார்த்தனை செய்து கொண்டார்.

அப்போது அவருடைய உடலை யாரோ பிடித்து வெளியே இழுப்பது போல ஒரு உணர்வு அவருக்கு ஏற்பட்டது. இரண்டு மணி நேரங்களுக்குப் பிறகு அவர் சுயநினைவுக்கு வந்து கண்விழித்து பார்த்தபோது அவர் வெளியே கிடந்தார். குதிரை வண்டிக்காரனும் மெதுவாக தன் வண்டியை வெளியே கொண்டு வந்து கொண்டிருந்தான். அவர் தன் உடலை சுத்தம் செய்து கொண்டு கானகாபூர் நோக்கி பயணித்தார். இரண்டு நாட்களுக்கு உடல் வலியால் துன்பத்தை அனுபவித்தார். உடல் தேறியபின் ஸ்ரீ குரு சரித்திரம் சப்தாஹமாக பாராயணம் செய்துவிட்டு பிராமணர்களுக்கு போஜனம் அளித்த பின்னர் பீம-அமரஜ சங்கமத்தில் நீராடச் சென்றார். அப்போது அவருடைய கால்கள் வழுக்கி நீருக்குள் மூழ்கி விட்டார். அவருக்கு நீச்சல் தெரியாததால் தண்ணீருக்குள் தத்தளித்துக் கொண்டு மிகுதியான நீரை குடித்து விட்டார். அப்போது அங்கு இருந்த சிலர் அவரை பத்திரமாக காப்பற்றி கரையில் விட்டனர். அவர் தன் சுயநினைவுக்கு வருவதற்கு இரண்டு மணி நேரங்கள் ஆனது. அன்று ஒரு நாள் மட்டும் அங்கு தங்கியிருந்து விட்டு, அடுத்த நாள் அக்கல்கோட் வந்தடைந்தார்.

அன்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தேஷ்முக்கின் வீட்டில் அமர்ந்திருந்தார். வாமன்புவா ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துவிட்டு

, அவருக்கருகில் நின்றுகொண்டிருந்தார். மஹராஜ் அவரிடம், **"மண்ணிலும் தண்ணீரிலும் மூழ்கிய பின்னரும் உயிரோடு வந்துவிட்டாயா?"** என்று கேட்டார். புவா மிகுந்த ஆச்சரியத்துடன், "உங்கள் ஆசீர்வாதத்தில் ஸ்வாமி" என்று பவ்வியமாக கூறினார். புவா அன்றிலிருந்து ஸ்ரீ ஸ்வாமிகளுடைய அனுமதி இல்லாமல் எந்த க்ஷேத்திரத்திற்கும் செல்வதில்லை என்கிற முடிவெடுத்துக் கொண்டார். விஜயதசமி அன்று சுவையான நைவேத்தியம் தயார் செய்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு படைத்தார். மாலை நேரத்தில் ஆடம்பரமான நிகழ்ச்சி ஏற்பாடாகியிருந்தது. ஸ்ரீ ஸ்வாமி அந்நிகழ்ச்சியில் அரசருடன் பங்கேற்றுவிட்டு அனைவருடனும் வன்னி மரத்தை தரிசனம் செய்வதற்காக சென்றார். பின்னர் அரண்மனைக்குள் சென்றுவிட்டார். நான்கு நாட்களுக்குப் பிறகு அவர் வந்தவுடன் வாமன்புவா அவரிடமிருந்து அனுமதி பெற்றுக் கொண்டு பரோடாவுக்கு கிளம்பினார்.

குருவின் வாக்கை மீறக் கூடாது என்கிற அற்புதமான உட்கருத்தை இந்த நிகழ்ச்சி விளக்கினாலும், குருவின் அனுமதி இருந்தால் அனைத்தும் நன்மையில் முடியும் என்கிற கருத்தையும் நமக்கு உணர்த்திக்கிறதல்லவா! கர்மாவின் காரணமாக சில நேரங்களில் நாம் குருவின் கட்டளையை மீற நேரிட்டாலும், அவரை சரியான தருணத்தில் நாம் நினைவு படுத்திக் கொள்ளும் போது, அவர் நம்மை துன்பங்களிலிருந்து காத்தருளுவார் என்னும் நம்பிக்கையை நமக்கு இந்த நிகழ்ச்சி உருவாக்குகிறது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 122

# லக்யாவின் கதை

இந்த அனுபவம் பாண்டுரங்க கேசர் என்பவர் இறப்பதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னர் அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடன் இருந்தபோது நடைபெற்றது. அவர் சதாராவைச் சேர்த்தவர், அவ்வப்போது அக்கல்கோட்

வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வார். ஒருசமயம் பம்பாயில் இருந்து சில யாத்ரீகர்கள் குழந்தைகளுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்திருந்தனர். அவர்களில் லக்கியா என்கிற சிறுவன் ஒருவன் இருந்தான். பிரம்மசாரி புவா அவனை கடைவீதிக்குச் சென்று வெல்லம் வாங்கி வரும்படி கூறினார். அதைக் கொண்டு வரும் போது அவன் வெல்லத்தை எடுத்து உண்ணத் தொடங்கினான்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரோ இங்கிருந்துகொண்டு, **"ஏ! லக்கியா, போஸடி, எனக்கு கொடுக்காமல் வெல்லத்தை தனியாக சாப்பிடுகிறாயா?"** என்று அவர் குழந்தையாகவே மாறி அழத் தொடங்கினார். உடனே சிலர் கடைவீதிக்குச் சென்று லக்கியாவை பார்த்தபோது அவன் வெல்லத்தை சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜின் எங்கும் நிறைந்த தன்மையை எண்ணி யாத்ரீகர்கள் அனைவரும் ஆச்சரியம் அடைந்தனர். இது போல சில சமயம் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் குழந்தைத்தனமாக நடந்து கொண்டு வேடிக்கை காட்டுவார்.

இந்த லீலை குழந்தைத்தனமாக தெரிந்தாலும், நமக்கு எவ்வளவு வயதாகி இருந்தாலும் நம் குழந்தைத்தனத்தை விடாதவரையில் சிறு சிறு சந்தோஷத்தை அனுபவித்து வாழலாம் என்பதை உணர்த்துவது போலத் தோன்றுகிறதல்லவா? இந்த உலகத்தில் நாம் வாழும் ஒவ்வொரு நொடியையும் அனுபவித்து நிம்மதியாக வாழ வேண்டும் என்பதே ஸ்ரீ ஸ்வாமியுடைய விருப்பம். அகம்பாவம் இல்லாமல் நேர்மையுடன் வாழ வேண்டும் என்பதையே அவர் தன் பக்தர்களிடம் போதனை செய்தார். அவர் குடும்பஸ்தர்களை தன் கடமை மீறாமல், நிம்மதியடன் வாழ்வதற்கான அறிவுரைகள் வழங்கினார். ஒருசிலரை மட்டுமே சந்நியாசம் மேற்கொள்ளுமாறு அறிவுறுத்தினார். அவர் ஒரு சில நேரம் குழந்தை போலவும், ஒரு சில நேரம் கோபத்துடனும், ஒரு சில நேரம் சாந்தமாகவும் நடந்து கொண்டார். ஆனால் பக்தர்களின் மீது கொண்டிருந்த அன்பு மட்டும் குறையவே இல்லை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 123

# பம்பாயில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்

பம்பாயைச் சேர்ந்த தாமோதர்ஜி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் பம்பாய் வந்து அங்கிருக்கும் அனைவருக்கும் தரிசனம் அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். இதைக் கேட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி, **"பம்பாய் நகரத்தில் பார்ப்பதற்கு ஏதாவது புதிதாக இருக்கிறதா? நான்தான் பம்பாயில் 25 வருடங்கள் தங்கியிருந்தேனே!"** என்று கூறினார். அதற்கு தாமோதர்ஜி, **"மஹாராஜ், நீங்கள் எங்கு தங்கியிருந்தீர்கள்?"** என்று கேட்டார். **"நான் வல்கேஷ்வர் கோவிலின் கூண்டுக்கு பின்னால் இருந்தேன்"** என்று ஸ்ரீ ஸ்வாமிகள் கூறினார். இதைக் கேட்டவுடன் அனைவரும் திருப்தி அடைந்தனர்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தான் சர்வ வல்லமை நிறைந்தவர் என்பதை தன் லீலைகள் மூலம் தன் பக்தர்களுக்கு நிரூபித்திருந்தாலும், பக்தர்கள் மீண்டும் மீண்டும் அவரிடம் அதை கேட்பதை நிறுத்தவே இல்லை. ஸ்ரீ ஸ்வாமிகள் உண்மையான துறவி தானா, அவர் ஒரு அவதாரமா என்பதை உறுதிப்படுத்திக் கொள்வதிலேயே தங்கள் கவனத்தைச் செலவிட்டனர். இப்படிப்பட்ட ஆர்வம் நிறைந்தவர்கள் பலர் ஸ்ரீ ஸ்வாமிகளை தினமும் தரிசனம் செய்து கொண்டிருந்தாலும், மோக்ஷத்தை அளிக்கும்படி பிரார்த்தனை செய்துகொண்டு வருவோரும் உண்டு. ஆனால் அப்படிப்பட்டவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவுதான். கடைத்தெருவில் வெங்காயம் கிடைக்கும் அளவிற்கு தங்கம் அதிகம் கிடைப்பதில்லையே! இதுதான் நிதர்சனம். அனைவரிடம் ஸ்ரீ ஸ்வாமி தன் லீலைகளை வெளிப்படுத்துவதில் எந்தவித குறைபாடும் இருக்காது.

பெண்கள், குழந்தைகள், துறவிகள், ஞானிகள், யோகிகள், வேதாந்திகள் போன்ற பலதரப்பட்டவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்ய அவருடைய தர்பாருக்கு வருவார்கள். அவரவர்களுடைய தகுதி மற்றும் விருப்பத்திற்கு ஏற்றவாறு அவர்களுக்கு பதில் கிடைக்கும். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு அருகில் இருக்கும் போது ஒவ்வொரு நொடியும் அற்புதங்கள் நிகழ்ந்து கொண்டேதான் இருக்கும்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 124

# இஸ்லாமியரின் கல்லறையில்

ஒரு சித்திரை மாதம் மதிய வேளையில் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் தன் பாதுகையை அணிந்து கொண்டு வேகமாக நடக்கத் தொடங்கினார். அப்போது அவரை 50 முதல் 100 சேவகர்கள் தொடர்ந்து சென்றனர். அங்கு இஸ்லாமியர்களின் கல்லறைகள் இருந்தன. ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அந்த இடத்திற்குச் சென்றார். அங்கிருந்த மக்களிடம் ஒரு பெரிய கல்லை வாங்கி ஒரு கிணற்றுக்குள் போட்டார். அருகில் ஒரு கல்லறை இருந்தது. ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அந்த கல்லறையின் மேல் ஒரு சிறு குழந்தை போல சிறுநீர் கழித்தார். அருகிலேயே மலம் கழிப்பதற்கு ஆயத்தமானார்.

அங்கிருந்த இஸ்லாமியர்கள் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய நடவடிக்கை களைக் கண்டு அதிர்ச்சி அடைந்தனர். ஸ்ரீ ஸ்வாமி தங்களை அவமதிப்பதாக எண்ணிக்கொண்டு, அவர்களில் மதவெறி அதிகம் உடையவர்களை அழைத்து வருவதற்காகச் சென்றனர். இதைப் பார்த்து ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய சேவகர்கள், **“மஹராஜ், இஸ்லாமியர்கள் உங்களை அடிக்க வருகிறார்கள்”** என்று கூறினார்கள். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் இரண்டு பெரிய நாய்களை வளர்த்து வந்தார். ஒன்றின் பெயர் பொக்கட் மற்றொன்றின் பெயர் மோட்டியா. மஹராஜ் அந்த நாயை அழுத்திவிட்டு, **“பொக்கட்டை அழுத்துங்கள்”** என்று தன் சேவகர்களுக்கு உத்தரவிட்டார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியபடியே ஒரு சேவகர் செய்தார். ஸ்ரீ ஸ்வாமிகளை அடிப்பதற்காக வந்தவர்களின் வீடுகளில் ஒரு வினோதமான சத்தம் கேட்டது. அவர்கள் வீட்டிலிருந்த சிறு குழந்தைகளின் வயிறு வலிக்கத் தொடங்கியது. அவர்கள் அனைவரும் நாயைப் போல ஊளையிட்டனர். உடனே அவர்களுடைய மனைவிகள் தங்கள் கணவன்மார்களிடம் வந்து, **“முதலில் வீட்டுக்கு வாருங்கள். வீட்டில் நிலைமை சரியில்லை”** என்று அழைத்தனர். அனைவருக்கும் மிகுந்த குழப்பம் ஏற்பட்டு செய்வதறியாது குழம்பி நின்றனர்.

வயதான இஸ்லாமியர் ஒருவர், **“இவை அனைத்திற்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்தான் காரணம். அவரிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டால் அனைத்து கஷ்டங்களும் தீர்ந்துவிடும்”** என்று அறிவுரை வழங்கினார். உடனே அங்கிருந்தவர்கள்

அனைவரும் தோப்புக்கரணம் போட்டுவிட்டு, மண்டி யிட்டவாறு, **“தயவுசெய்து எங்களை இந்த துன்பத்திலிருந்து காப்பாற்றுங்கள்”** என்று பிரார்த்தனை செய்து கொண்டனர். ஸ்ரீ தத்தாத்ரேயரின் ஸ்வரூபமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மிகவும் கனிவானவராகி தன் சேவகர்களை அந்த நாயின் மீது அழுத்திக் கொண்டிருப்பதை விடுவிக்கச் சொன்னார். இஸ்லாமியர்களின் வீட்டில் இருப்பவர்கள் அனைவரும் சாதாரண நிலைக்கு திரும்பி வந்து விட்டதாக செய்தி வந்தது. அனைவரும் ஆச்சரியத்துடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை **“அவ்லியா”** என்று அழைத்தனர்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய ஒவ்வொரு லீலையும் மிகவும் விசித்திரமாகவும் புரிந்துகொள்ள முடியாதபடியும் இருக்கும். அதற்கான விளக்கத்தை ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக அளித்தாலும், அதற்கான உண்மையான விளக்கத்தை சர்வ வல்லமை பொருந்திய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரால் மட்டுமே அளிக்க முடியும். ஆனால் அதை புரிந்துகொள்ளும் தகுதி நமக்கு இல்லை என்பதுதான் உண்மை! இப்படிப்பட்ட வித்தியாசமான லீலைகளைப் படித்து அனுபவிக்கும் பாக்கியத்தை அருளிய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாத கமலங்களை என்றென்றும் நாம் பற்றியிருப்போமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 125

# நானாபுவா தந்துல்வாட்கர்

சதாராவைச் சேர்ந்த நானா புவா தந்துல்வாட்கர் பண்டரிநாதனுக்கு வார்க்கரி பஜனைகள் செய்வார். மிகுந்த பக்திமானான அவர், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அற்புதங்களைக் கேள்விப்பட்டு அவரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் சென்றிருந்தார். அப்போது ஸ்ரீ ஸ்வாமி சோளப்பாவின் வீட்டில் இருந்தார். புவா மிகுந்த பணிவுடன் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று அவரை வணங்கிவிட்டு அவருக்கருகில் அமர்ந்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகளுடைய தேஜஸுடன் கூடிய ஆஜானுபாகுவான உருவத்தைக் கண்டவுடன், ஆனந்தத்தில் அவர் கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தோடியது. மனநிறைவுடன் அவர்

தான் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றார். புவாவுக்கு ஸ்ரீ ஸ்வாமியின் முன்னிலையில் கீர்த்தனைகள் பாட வேண்டும் என்கிற விருப்பம் மிகுதியாக இருந்தபோதிலும், ஸ்ரீ ஸ்வாமிகள் அமர்ந்து கொண்டு அவர் பாடுவதை கேட்பாரா என்கிற தயக்கம் இருந்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் புவா தங்கியிருந்த கண்பத்ராவ் ஜோஷியின் வீட்டுக்கே சென்றுவிட்டார்.

ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் தன் கீர்த்தனைகளை கண்டிப்பாக கேட்பார் என்கிற நம்பிக்கையுடன் வீணை, மிருதங்கம் போன்ற வாத்தியங்களை மகிழ்ச்சியுடன் கொண்டுவந்து கீர்த்தனைகள் செய்யத் தொடங்கினார். அவர் விவரிக்க முடியாத சந்தோஷத்துடன் மிகுந்த பக்தி ரசத்துடன் பாடிக்கொண்டிருந்தார். அங்கிருந்தவர்கள் அனைவரும் பக்தி மழையில் நனைந்தனர். பஜனை உச்சகட்டத்தை அடைந்தபோது, புவாவின் கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்தது. அவர் மூச்சு பேச்சற்று தரையில் மயக்கமாகி விழுந்தார். பின்னர் ஒரு மணிநேரத்திற்குப் பிறகு தன் சுயநினைவுக்கு வந்தார். பிறகு பஜனைகளை பாடி முடித்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதகமலங்களில் நமஸ்கரித்துவிட்டு அமர்ந்து கொண்டார்.

அப்போது கண்பத்ராவ் ஜோஷி புவாவிடம், **"நீங்கள் ஏன் அப்படி மூச்சு பேச்சற்று போனீர்கள் என்று எங்களுக்கு விவரிக்க முடியுமா?"** என்று கேட்டார். அதற்கு புவா, **"நான் பாதி கீர்த்தனை பாடிக் கொண்டிருந்த போது, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய உருவம் மறைந்து அங்கு நான் கருநீல வண்ணத்துடன், பீதாம்பரம் அணிந்துகொண்டு, இடுப்பில் கை வைத்துக் கொண்டவாறு, தலையில் கிரீடத்துடன், காதுகளில் குண்டலம் அணிந்து கொண்டிருந்த ஸ்ரீ பாண்டுரங்கனைப் பார்த்தேன். அந்த தெய்வீக ஒளியைக் கண்டவுடன் நான் சமாதி நிலையை அடைந்து விட்டேன். பின்னர் நான் சுயநினைவுக்கு வந்தவுடன் மீதிக் கீர்த்தனையை பாடி முடித்தேன். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சாக்ஷாத் தத்தாத்ரேயர் என்பதில் துளியும் சந்தேகம் இல்லை. அவர் பக்தர்களின் நலன் கருதி இந்த உடலுடன் நம்மை காத்து ரட்சிக்கிறார்"** என்று கூறி முடித்தார்.

நானாபுவா சில நாட்களுக்கு அக்கல்கோட்டில் தங்கியிருந்துவிட்டு, ஸ்ரீ ஸ்வாமிகளின் அனுமதியைப் பெற்றுக்கொண்டு தன் சொந்த ஊருக்கு சென்றடைந்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 126

# நாகு அண்ணா குல்கர்னியின் பார்வைத்திறன்

நாகு அண்ணா குல்கர்னி மொஹலாய்க்கு அருகில் இருக்கும் மோர்காவ்வைச் சேர்ந்தவர். அவருக்கு நாற்பது வயது இருக்கும்போது தன் பார்வையை இழந்துவிட்டார். அவர் பல வைத்திய முறைகளை கையாண்டும் எந்தவித பலனும் அளிக்காமல், பணவிரயம் மட்டுமே ஏற்பட்டது. துல்ஜாபூர் சென்று அங்கு அனுஷ்டானங்கள் அனுசரித்தால் ஏதாவது பலன் கிடைக்கும் என்கிற நம்பிக்கையில் அங்கு சென்றார். இதுபோன்ற சேவைகள் செய்தால் கண்டிப்பாக ஏதாவது தெய்வீக உந்துதல் கிடைக்கும் என்று நம்பினார். ஒரு உதவியாளர் மற்றும் தன் 12 வயது மகளுடன் துல்ஜாபூர் வந்து அங்கிருக்கும் பிரதான அர்ச்சகரிடம் **"நான் என்ன செய்ய வேண்டும்?"** என்று கேட்டார். பிரதான அர்ச்சகரின் ஆலோசனைப்படி தினமும் தேவியின் கர்ப்பகிரகத்தை சுற்றுவது என்று முடிவானது. அவருடைய மகளின் உதவியுடன், அவள் கைகளை பிடித்துக்கொண்டு மதியம் 2 மணி வரை கர்ப்பகிரகத்தை சுற்றிக் கொண்டிருப்பார். அதற்கு பிறகுதான் உணவு உட்கொள்வார்.

இதேபோன்று சுமார் ஆறு மாத காலங்கள் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது. தனக்கு எந்தவித தெய்வீகக் கனவும் தோன்றவில்லையே என்று குல்கர்னி வருத்தத்துடன் இருந்தார். சில நாட்களுக்குப் பிறகு நடுத்தர வயது நிரம்பிய ஒரு பெண் வெள்ளை நிற சேலை, தங்க ஜரிகை ரவிக்கை அணிந்துகொண்டு கழுத்தில் மணியால் ஆன அடிக்கைகள் மற்றும் நெற்றியில் பெரிய குங்குமத்துடன் அவர் கனவில் தோன்றி, **"இங்கே தங்க வேண்டாம். அக்கல்கோட் செல்"** என்று கூறிவிட்டு சென்றுவிட்டாள். நாகு அண்ணா அவளிடம் தன் சந்தேகத்தைக் கேட்பதற்குள் அவர் நன்றாக விழித்துக்கொண்டார். தன் கனவைப் பற்றி பிரதான அர்ச்சகரிடம் தெரிவித்தபோது அவர், **"உங்களுக்கு அக்கல்கோட் செல்ல உத்தரவாகியுள்ளது"** என்று கூறினார். தனக்கு உத்தரவாகி இருந்தாலும் அம்மனிடம் இருந்து தெளிவான பதில் கிடைக்காததால், அவர் அங்கு சென்று என்ன செய்ய வேண்டும் என்பது புரியாமல், துல்ஜாபூரிலேயே இருந்தார்.

ஆறு மாதகால பிரதக்ஷணம் முடிவதற்கு இன்னும் சில நாட்கள் பாக்கியிருந்தன. அதை முடித்துவிட்டு யோசித்துக் கொள்ளலாம் என்று





எண்ணிக் கொண்டார். ஆறுமாத காலம் முடிவடைந்த பிறகு அவருக்கு மீண்டும் ஒரு கனவு தோன்றியது! முன்பு கனவில் வந்த அதே பெண் தெய்வீக அம்சங்களுடன் மீண்டும் தோன்றினாள். அவள் தன் கைகளில் ஒரு பித்தளை பானைக்குள் சாதம், ஒரு இனிப்பு, ரவிக்கைத்துணி மற்றும் குங்குமம் ஆகியவற்றுடன் காட்சி அளித்துவிட்டு, **“எந்தவித சந்தேகமும் இல்லாமல் அக்கல்கோட் செல்”** என்று கூறினாள். பிறகு அந்த பித்தளை பானையை அவரிடம் கொடுத்துவிட்டு மறைந்துவிட்டாள்.

இந்த கனவை பிரதான அர்ச்சகரிடம் விவரித்தவுடன் அவர், **“அக்கல்கோட் செல்லும்படி உங்களுக்கு தெளிவாக உத்தரவாகியுள்ளது. இனி நீங்கள் இங்கு தங்கியிருக்கக் கூடாது”** என்று கூறினார். பின்னர் நாகு அண்ணா பிராமணர்களுக்கும், சுவாசினிகளுக்கும் போஜனத்திற்கு ஏற்பாடு செய்தார். நைவேத்தியத்தை ஜெகதாம்பாவுக்கு படைத்துவிட்டு தன் அனுஷ்டானங்களை முழுமையாக நிவர்த்தி செய்துவிட்டு அக்கல்கோட்டுக்கு பயணம் செய்தார்.

அன்று அவர் அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்யும் சமயத்தில், ஸ்ரீ ஸ்வாமிகள் போர்வையை தலை முதல் பாதம் வரை முழுமையாக போர்த்திக்கொண்டு கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தார். போர்வைக்குள்ளிருந்து, **“இந்த தொல்லைகள் எனக்கு ஏன் அனுப்பப்படுகிறது? நான் நிம்மதியாக அமர்ந்து கொண்டிருந்தாலும் இதுபோன்ற தொல்லைகள் வந்து விடுகின்றன”** என்று கூறினார். நாகு அண்ணா தன் கதையை முழுமையாக ஸ்ரீ ஸ்வாமிகளிடம் விளக்கினார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் போர்வையை விலக்கிவிட்டு, **“நீ எதற்காக இங்கு வந்தாய்? பண்டரிபுரத்திற்குச் செல்”** என்று கூறிவிட்டு போர்வையை இழுத்து போர்த்திக் கொண்டார்.

சோளப்பா உட்பட அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும், **“ஏ பார்வையற்றவரே! எந்தவித சந்தேகமும் இல்லாமல் பண்டரிபுரத்திற்குச் செல்லுங்கள். இது போல மகராஜ் எவருக்கும் தெளிவாகக் கூறியதில்லை. நீங்கள் மிகவும் அதிர்ஷ்டசாலி. உங்களுக்கு உடனே பதில் கிடைத்துவிட்டது”** என்று கூறினார்கள். ஆனால் நாகு அண்ணாவுக்கோ மிகவும் வருத்தமாக இருந்தது. **“கஷ்டங்கள் ஏற்படும் போது மனிதன் தெய்வீகத்தை அணுக வேண்டும் என்று கூறுவார்கள். அதனால் நான் துல்ஜாபவானியிடம் சென்றேன். ஆறுமாத காலம் அவளுக்கு சேவை செய்த பிறகு அவள் என்னை இங்கு அனுப்பி வைத்தாள். ஆனால் ஸ்ரீ ஸ்வாமிகளோ என்னை பண்டரிபுரத்திற்கு போகச் சொல்கிறார். இதற்கு அந்த தேவி என் கண்கள் குணமாகாது என்றே**

**கூறியிருக்கலாம்"** என்று நொந்து கொண்டார். அவர் இவ்வாறு புலம்பிக் கொண்டிருந்த போது ஸ்ரீ ஸ்வாமி மஹறராஜ், **"ஏ பன்சோட், பண்டரிபுரத்துக்கு கிளம்பு. நீ என்ன என்னை கைது செய்ய ஆணை கொண்டு வந்திருக்கிறாயா? ஒரு வார்த்தை பேசாமல் பண்டரிபுரத்துக்கு கிளம்பு"** என்று கூறிவிட்டு தன் முகத்தை மூடிக்கொண்டு உறங்கிவிட்டார்.

நாகு அண்ணா மிகுந்த வருத்தத்துடன் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு நைவேத்தியம் படைத்து விட்டு, இரண்டு பிராமணர்களுக்கு போஜனம் அளித்துவிட்டு பண்டரிபுரத்திற்கு புறப்பட்டார். அங்கு ஒரு பிராமண மடத்தில் சென்று தங்கினார். தினமும் பண்டரிநாதனை தரிசனம் செய்து கொண்டிருந்தார். ஆனால் அதற்கு மேல் என்ன செய்வதென்று தெரியவில்லை. இதேபோன்று மூன்று அல்லது நான்கு நாட்களுக்குத் தொடர்ந்தது. பின்னர் ஒரு நாள் இருவர் அவரிடம் வந்து, **"உத்தவ மடத்துக்கு அருகில் ஒரு கண் மருத்துவர் வந்திருக்கிறார். நீங்கள் அவரிடம் செல்லுங்கள்"** என்று கூறினார்கள். நாகு அண்ணாவும் அந்த வைத்தியரிடம் சென்றார். அந்த வைத்தியர், **"ஐம்பது ரூபாய் கொடுத்தால் மட்டுமே உங்கள் கண்களை குணப்படுத்துவேன்"** என்று கூறினார். இவரும் அவருக்கு ஐம்பது ரூபாய் கொடுத்தார். உடனே அந்த மருத்துவர் 5 அடி நீளமுள்ள ஒரு தடியை அவரின் கையில் பிடித்துக் கொள்ளுமாறு கொடுத்துவிட்டு, அமைதியாக அமரும்படி கூறினார். பின்னர் ஒரு உபகரணத்தை கொண்டு அவர் கண்களை மூடியிருப்பதை நீக்கிவிட்டு, அவர் கண்களுக்கு கட்டு போட்டுவிட்டார். அதை மூன்று நாட்களுக்குப் பிறகு பிரிக்க வேண்டும் என்று கூறினார்.

மூன்று நாட்களுக்குப் பிறகு கட்டை பிரித்தவுடன், அவரால் பார்க்க முடிந்தது. மிகுந்த சந்தோஷம் அடைந்து அந்த வைத்தியரைப் பற்றி விசாரிக்கலாம் என்று மடத்திற்குச் சென்றார். அங்கிருந்தவர்கள் அனைவரும் அப்படி ஒரு மருத்துவர் இருப்பதே அவர்களுக்குத் தெரியாது என்று கூறினார்கள். இந்த அற்புதத்தை எண்ணி நாகு அண்ணா மிகுந்த ஆச்சரியம் அடைந்தார். அவருக்கு பார்வை நன்றாக தெரிந்தாலும், வலி மிகுதியாக இருந்தது. அவர் மற்ற வைத்தியர்களிடம் தன் வேதனையை எடுத்துக்கூறியும் எந்தவித நிவாரணமும் இல்லை, அவர்களுடைய வைத்தியம் வலியை குறைக்காமல் இன்னும் அதிகப்படுத்தியது. அவருக்கு வைத்யநாதனான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை விட்டால் வேறு கதியில்லை. அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு, "ஸ்வாமி, இந்த வலியை அனுபவிப்பதற்கு

நான் குருடனாகவே இருந்திருக்கலாம். இந்த வேதனையை போக்க ஏதாவது உபாயம் அளியுங்கள்" என்று கெஞ்சினார். வாழும் தெய்வமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், "குதிரையின் சிறுநீரை உன் கண்களில் விட்டுக்கொள்" என்று கூறி அனுப்பினார்.

குருநாதர் கூறியபடியே அவர் இரண்டு-மூன்று நாட்களுக்குத் தொடர்ந்து செய்தவுடன் அவருடைய வலி மாயமானது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய அற்புதத்தை அனைவரும் வாயாரப் புகழ்ந்தனர். நாகு அண்ணா அங்கு சில நாட்கள் தங்கியிருந்துவிட்டு சேவைகள் செய்த பின்னர், ஸ்ரீ ஸ்வாமியின் அனுமதியோடு தன் சொந்த ஊருக்குப் புறப்பட்டார். பொறுமையுடன், எந்தவித சந்தேகமும் இல்லாமல் இருந்த நாகு அண்ணாவுக்கு அனைத்தும் நன்மையில் முடிந்தது. பொறுமையுடன் சந்தேகத் தன்மை இல்லாமல் நாமும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதங்களில் சரணடைவோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 127

# நான் கிளம்ப அனுமதி அளியுங்கள்....

**ராவ்சாஹேப் தவளே**

ராவ் சாஹேப் தவளே முன்பு கிபேவில் திவானாக இருந்தார். அவர் தன் வேலையை உதறித் தள்ளிவிட்டு அனைத்தையும் துறந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தார். அவருடைய தாய் காசி க்ஷேத்திரத்திரத்தில் தங்கியிருந்தார். அவருடைய தாய் நோய்வாய்ப் பட்டிருப்பதாக அவருக்கு தந்தி வந்தது. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று காசி செல்ல அனுமதி கேட்டபோது, **"உட்கார், எங்கே செல்கிறாய்?"** என்று கூறிவிட்டார். இரண்டாவது முறையாகக் கடிதம் வந்தபோதும் தவளேவுக்கு அதே பதில்தான் கிடைத்தது. மூன்றாவது முறையாக கடிதம் வந்தபோது ஸ்ரீ ஸ்வாமி, **"இப்போது நீ போகலாம்"** என்று கூறினார். தவளே காசி சென்ற போது அவருடைய தாய் காலமாகியிருந்தாள். அவர் ஈமச்சடங்குகளை முடித்துவிட்டு அக்கல்கோட் வந்தடைந்தார்.

தரிசனத்துக்காக வந்தவரிடம் ஸ்ரீ ஸ்வாமிகள், **"நீ முன்பே சென்றிருந்தால் பசு மண்ணுக்குள் சிக்கியது போல் ஆகியிருக்கும்"** என்று கூறினார். அதாவது, 'அவர் முன்பே சென்றிருந்தால், அவருடைய ஆன்மிகப் பாதையில் இரண்டு அல்லது மூன்று வருடங்கள் முன்னேற்றம் தடைப்பட்டிருக்கும்' என்பதுதான் அதன் பொருள்.

ஒரு சாதகன் காசியில் தங்குவதைக் காட்டிலும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு அருகில் தங்குவதுதான் நன்மை பயக்கும். பகவத்கீதையின் 12வது அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டுள்ள விஷயத்தை ஸ்ரீ ஸ்வாமிகள் இந்த நிகழ்ச்சியின் மூலம் நமக்கு விளக்கியுள்ளார். தவளே பல வருடங்களுக்கு ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவை செய்த பின்னர் உண்மை மற்றும் உண்மையில்லாததை உணர்ந்து கொண்டார். பின்னர் சந்நியாசம் பெற்றுக்கொண்டார்.

### பாபாஜி சடோபா

பாபாஜி சடோபா என்கிற மேலதிகாரி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசிப்பதற்காக அக்கல்கோட் வந்திருந்தார். அவர் நான்கு நாட்கள் அங்கு தங்கியிருந்துவிட்டு கிளம்புவதற்காக ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அனுமதி கேட்டார். அதற்கு மஹராஜ், **"எங்கே செல்கிறாய். உட்கார்"** என்று கூறிவிட்டார். பின்னர் சிறிது நேரத்திற்குப் பிறகு கேட்டதற்கும் அவருக்கு அனுமதி கிடைக்கவில்லை. அப்போது ஸ்ரீ ஸ்வாமி அவரிடம், **"நதிக்கு அந்தப் பக்கம்"** என்று கூறினார். இந்த வரிகளுக்கான விளக்கம் அங்கிருந்தவர்கள் எவருக்கும் புரியவில்லை.

அவருக்கு விடுப்பு கிடைக்காததால் உடனே செல்ல வேண்டிய நிர்பந்தத்தில் இருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளை தூரத்திலிருந்தே தரிசனம் செய்துவிட்டு கடப்காவ் ரயில் நிலையத்திற்குச் சென்று விட்டார். மழையின் காரணமாக கிருஷ்ணா நதியின் மீது கட்டப்பட்டிருந்த பாலம் அடித்துச் செல்லப்பட்டதால் ரயில் நிறுத்தப்பட்டிருக்கிறது என்கிற தகவல் அவருக்கு அங்கு சென்ற பின்னர்தான் தெரிந்தது. பாலம் சரி செய்யப்பட்ட பின்னரே அவரால் கிளம்ப முடிந்தது.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அப்போது கூறிய வார்த்தைகளுக்கான பொருளை பாபாஜி புரிந்துகொண்டார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அவ்வப்போது அக்கல்கோட் வருவார்.

இந்த இரு நிகழ்ச்சிகள் மட்டுமல்ல, பல சமயங்களில் பல்வேறு பக்தர்களின் ஆபத்துகளை தவிர்க்கும் நோக்கத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவர்களை அக்கல்கோட்டை விட்டுச் செல்வதற்கு அனுமதி அளித்ததில்லை. இவை ஸ்ரீ ஸ்வாமி அனைத்தையும் அறிந்தவர் என்பதை நமக்கு




எடுத்துரைத்தாலும், ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளுக்கு மறுவார்த்தை பேசாமல் கட்டுப்பட்டவர்கள் மிகுந்த நன்மை அடைந்தார்கள், மற்றவர்கள் துன்பத்தில் சிக்கி தவித்தார்கள் என்பதை உணர்த்துகிறது. இதே போன்ற நிகழ்ச்சிகள் சாய் சத்சரித்திரத்தில் இருப்பதையும் இங்கு நினைவு கொண்டு, ஸ்ரீ சமர்த்த சாயியின் பாத கமலங்களில் நமஸ்கரிப்போமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 128

# வெளிநாட்டு பக்தர்கள்

### ஐரோப்பாவைச் சேர்ந்த ரயில்வே அதிகாரி

ஒரு ஐரோப்பிய ரயில்வே அதிகாரி சோலாப்பூரிலிருந்து ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய புகழைக் கேள்விப்பட்டு ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் நமஸ்கரித்துவிட்டு தன் கைகளைக் கூப்பியவாறு, மனதில் ஏதோ எண்ணிக்கொண்டு நின்று கொண்டிருந்தார். அந்த ஐரோப்பியரின் எண்ண ஓட்டத்தை புரிந்துகொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள் அவரிடம், **"உனக்கு மகன் தானே வேண்டும்? ஒரு வருடத்திற்குள் பிறப்பான்"** என்று கூறினார். தனது மனதை அறிந்து கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகள் அருளாசி வழங்கியதை எண்ணி அந்த ஐரோப்பியர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். மீண்டும் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு சோலாப்பூர் சென்றடைந்தார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியதற்கிணங்க அவருக்கு ஒரு வருடத்திற்குள் ஒரு மகன் பிறந்தான். மிகுந்த மகிழ்ச்சியுடன் அவர் தன் மகன் மற்றும் மனைவியுடன் அக்கல்கோட் வந்து இரண்டு நாட்கள் தங்கியிருந்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்தார். தனக்கு நடந்த அற்புதத்தைப் பற்றி அவர் அனைவரிடமும் கூறி ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தார். பிறகு பல ஐரோப்பியர்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வரத் தொடங்கினர்.

**இஸ்ரேலைச் சேர்ந்த மருத்துவர்**

இஸ்ரேலைச் சேர்ந்த ஒரு மருத்துவர் ஒருவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்திருந்தார். அவர் தரிசனம் செய்துவிட்டு நின்றுகொண்டிருந்தார். அவரிடம் ஸ்ரீ ஸ்வாமிகள், **"எத்தனை பேருடைய கண்களை பழுதாக்கி இருக்கிறாய்?"** என்று கேட்டார். ஸ்ரீ ஸ்வாமிகளுடைய சர்வ வல்லமையை எண்ணி அவர் ஆச்சரியம் அடைந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமியிடம், "ஸ்வாமி, நான் ஒரு கண் மருத்துவர். அது உங்களுக்கு எப்படி தெரியும்? நீங்கள் ஒரு அவதாரம் என்பதில் எனக்கு எந்தவித சந்தேகமும் இல்லை" என்று கூறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய பாதத்தில் நமஸ்கரித்துவிட்டு சென்றுவிட்டார். அவர் எப்போதும் ஸ்ரீ ஸ்வாமிகளுடைய தரிசனத்துக்காக தன் குடும்பத்துடன் வருவதை வழக்கமாக கொண்டிருந்தார்.

ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை தரிசனம் செய்வதற்காக ஹிந்து, முஸ்லீம், ஐரோப்பியர்கள் மற்றும் பார்சிகள் போன்ற அனைத்து மதத்தவர்களும் வருவார்கள். அனைவரையும் ஸ்ரீ ஸ்வாமிகள் சமமாக பாவித்து அவர்களுக்கு அருள் மழை பொழிவார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 129

# திருட்டுப்போன பணம்

ஹரிஸ்சந்திர கோபால்ஜியின் 2000 ரூபாயை ஒரு பிராமணர் திருடிவிட்டு தலைமறைவாகி விட்டார். இவர் பரோடாவில் வசித்து வந்தார். அவர் எவ்வளவோ விசாரணை செய்தும் அனைத்து முயற்சிகளும் வீணாகி போனது. சில நாட்களுக்குப் பிறகு அவர் அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு திருட்டை பற்றி விவரித்தார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் **"உன் பணத்தை திருடியவன் மொஹலாயில் உள்ள ஒரு குறிப்பிட்ட இடத்தில் கைது செய்யப்பட்டிருக்கிறான்"** என்று கூறினார். அதைப் பற்றி ஸ்ரீ ஸ்வாமிகள் கூறிய இடத்தில் விசாரித்த போது அந்த திருடன் பிடிபட்டது தெரியவந்தது. திருடுபோன அனைத்தும் அவருக்கு கிடைத்துவிட்டது. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு

நன்றி தெரிவித்துவிட்டு தன் வாழ்நாள் முழுவதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தராக வாழ்ந்தார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சர்வ வல்லமையைப் பற்றி பல அத்தியாயங்களில் விளக்கப்பட்டிருந்தாலும், இந்த அத்தியாயத்தில் அவர் மேலும் ஒரு நிகழ்ச்சியை எடுத்துக் கூறி நாம் அவருடைய நிழலில் இருக்கும்போது, நமக்கு எந்தவித சிறு தீங்கும் நேராமல் அவர் நம்மை ரட்சிப்பார் என்கிற நம்பிக்கை ஏற்படுகிறதல்லவா! ஆகவே, எப்போதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய நாமத்தை நினைவூட்டிக்கொண்டு நிம்மதியுடன் வாழ்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 130

# சேஷசார்ய அக்னிஹோத்ரி

அக்கல்கோட்டில் சேஷசார்ய அக்னிஹோத்ரி என்கிற பக்தி வாய்ந்த பிராமணர் ஒருவர் இருந்தார். அவர் பிக்ஷை எடுத்து தன் குடும்பத்தை நடத்தி வந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மீது அதீத பக்தி கொண்டிருந்தமையால் அவரை தரிசனம் செய்ய வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அவர் தரிசனத்துக்காக வரும்போதெல்லாம் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் தன் பாதங்களை அவரிடம் நீட்டி சேவைகள் செய்ய அனுமதிப்பார். அக்னிஹோத்ரி அளிக்கும் மூக்குப்பொடியை வாங்கி ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் உள்ளிழுத்துக் கொள்வார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கோபமாக இருக்கும்போது அனைவரும் அவருக்கருகில் செல்வதற்கு பயப்பட்டாலும், அக்னிஹோத்ரி எந்தவித தயக்கமும் இன்றி செல்வார்.

ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசிக்க வரும் பக்தர்கள் அவருக்கு தட்டு நிறைய இனிப்புகளை வழங்குவார்கள். அவற்றை ஸ்ரீ ஸ்வாமி குழந்தைகள், யாத்ரீகர்கள், நாய்கள் மற்றும் காளைகளுக்கு அளித்துவிடுவார். அவர் ஒரு பேடாவைக்கூட அக்னிஹோத்ரியிடம் அளித்ததில்லை. **"தனக்கு மட்டும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் பிரசாதம் அளித்ததில்லையே!"** என்கிற எண்ணம் அவருக்கு எப்போதும்

ஏற்படும். ஒருநாள் தட்டு முழுவதும் இருக்கும் இனிப்புகளைப் பார்த்து, **"மஹராஜ் எனக்கு பிரசாதம் கொடுங்கள்"** என்று கேட்டார். மஹராஜ் எதுவும் பேசவும் இல்லை, பிரசாதமும் அளிக்கவில்லை. அக்னிஹோத்ரி புவாவுக்கு மிகுந்த வருத்தமாக இருந்தது.

அடுத்த நாளில் இருந்து ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அக்னிஹோத்ரிக்கு தரிசனம் அளிப்பதை நிறுத்திவிட்டார். அவர் தரிசனத்துக்கு வரும் போதெல்லாம் தன் முகத்தை மூடிக்கொண்டு தூங்கிவிடுவார். இதேபோல பல நாட்களுக்குத் தொடர்ந்தது. அக்னிஹோத்ரி மணிக்கணக்காக ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகிலேயே அமர்ந்திருந்த போதிலும் போர்வைக்குள்ளிருந்து தகாத வார்த்தைகளால் வசவுகளை மட்டும் பெற்றுக் கொள்வார். **"மகராஜுக்கு என் மீது அன்பு இருந்தது! ஆனால் அது திடீரென ஏன் மறைந்து போனது? என்ன காரணமாக இருக்கும்? நான் அப்படியென்ன தவறு செய்துவிட்டேன்"** என்று அவர் தன் மனதை குழப்பிக் கொண்டார். அவருக்கு தெளிவான பதிலேதும் கிடைக்கவில்லை.

ஒருநாள் அக்னிஹோத்ரி காஸ்-பாகுக்கு வறட்டி தயார் செய்வதற்காக சென்றார். அன்று மஹராஜ் காஸ்-பாகில்தான் இருந்தார். புவா அவரை தரிசனம் செய்வதற்காக சென்ற போது எப்போதும் போல உறங்கிவிட்டார். வேறுவழி இல்லாமல் வறட்டி தயாரிக்கச் சாணத்தை சேகரிக்க சென்றார். மீண்டும் மீண்டும் ஸ்ரீ ஸ்வாமி தன்னிடம் நடந்து கொள்ளும் முறை பற்றிய எண்ணங்களே அவருடைய மனதில் எழும்பிக் கொண்டிருந்தன. **"பேடாவைக் கேட்டதைத் தவிர நான் வேறு எந்த தவறையும் செய்யவில்லையே! கண்டிப்பாக அதுதான் காரணமாக இருக்கும். மோக்ஷத்தைக் கேட்பதற்கு பதிலாக அற்பமான பேடாவை கேட்டிருக்கிறேன். நான் எவ்வளவு கீழ்த்தரமானவன்?"** என்று எண்ணிக்கொண்டு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் அந்த இடத்திலேயே தன்னை மன்னிக்குமாறு பிரார்த்தனை செய்து கொண்டார். **"மஹராஜ், நான் ஒரு மகாபாவி. என்னை தயவுசெய்து வெறுத்து ஒதுக்காதீர்கள். கருணைக்கடலே, என்னை மன்னித்து ஏற்றுக் கொள்ளுங்கள். நான் உங்களிடம் இனி இனிப்பு கேட்கவே மாட்டேன். நான் இந்த சாணத்தை சாப்பிடுகிறேன்"** என்று கூறியவாறே அழுதுகொண்டு சாணத்தை தன் வாயில் போட்டுக் கொண்டார்.

புவா தன் வேலைகளை முடித்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய தரிசனத்துக்காக செல்லும் போது, **"ஸ்வாமி, இவை அனைத்தும் என்னுடைய தவறுதான். தயவுசெய்து எனக்கு தரிசனம் கொடுங்கள்"** என்று தியானித்துக்

கொண்டே சென்றார். அவர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை சந்தித்தவுடன் ஸ்ரீ ஸ்வாமி வயிறுகுலுங்க சிரித்துக் கொண்டே, **"ஏ! புவா, பர்பியை வயிறுமுட்ட தின்றாயா? சரி கொஞ்சம் பொடி கொடு"** என்று கேட்டுவிட்டு இன்னும் பலமாகச் சிரித்தார்.

அனைத்தையும் அறிந்த ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளை கேட்டு புவா ஆனந்தக் கண்ணீர் வடித்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துவிட்டு, **"மஹராஜ், நீங்கள் உங்கள் பாதுகைகளா லேயே என்னை அடித்து விட்டீர்கள்"** என்று கூறினார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய அருளினால் அக்னிஹோத்ரி புவா துறவறம் பூண்டு தன் வாழ்நாள் முழுவதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பரம பக்தராக இருந்து தன் வாழ்நாளை கழித்தார்.

இந்த நிகழ்ச்சியில் குரு தன் பக்தனை வெறுத்து ஒதுக்கி விட்டார் என்பது போல நமக்குத் தோன்றினாலும், பக்தன் தன் பகுத்தறியும் தன்மை மூலம் தன்னிடம் அப்படி என்ன குறை இருக்கிறது என்பதை உணர்ந்து கொள்ளும் ஞானம் கிடைத்து தன்னை மாற்றிக் கொண்டவுடன், குருவின் பரிபூரண அன்பை மீண்டும் பெற்றுக்கொண்டு உயர்ந்த நிலையை அடைந்தார் என்பது நமக்கு உறுதியாக உணர்த்தப்படுகிறதல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 131

# நரசப்பா என்கிற தச்சர்

நரசப்பா என்கிற தச்சரின் வீட்டிலிருந்த எருமையின் கன்றுகள் இறந்தே பிறந்தன, மேலும் அது பால் கொடுப்பதே இல்லை. ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அந்த தச்சனுடைய வீட்டில் இருந்தபோது அந்த எருமை கன்று ஈன்றது. அக்கன்று வெள்ளை நிறக் கண்களுடன்,உயிருக்கு போராடிக் கொண்டிருந்தது. நரசப்பா ஸ்ரீ ஸ்வாமிகளிடம் ஓடிச் சென்று கண்ணீர் மல்க அந்த எருமையின் துயரமான கதையை விளக்கினார். இரக்க குணமுடைய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அன்புடன் எருமைக்கன்றின் உடலை தன் காலால் தடவிக்

கொடுத்தார். கன்றின் உயிர் காப்பாற்றப்பட்டது. பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகளுடைய அருளினால் அந்த எருமை இரண்டு அல்லது மூன்று ஆரோக்கியமான கன்றுகள் ஈன்று பாலும் அளிக்கத் தொடங்கியது.

**நரசப்பா தோட்டத்து சோளம்**

ஒருமுறை நரசப்பா தன் விவசாய நிலத்திற்குச் சென்று கொண்டிருந்த போது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒரு கடையில் அமர்ந்திருந்தார். தச்சன் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து, **"மென்மையான காதுகளைப் போன்ற இளம் சோளக்கதிர் என் வயலில் விளைந்திருக்கிறது. என்னுடன் வந்து பெற்றுக்கொள்ளுங்கள்"** என்று கேட்டுக்கொண்டார். **"ஏ! மாதர்சோத், நீ எப்போது காதுகளை விதைத்தாய்? விளைநிலம் எங்கே இருக்கிறது?"** என்று ஸ்ரீ ஸ்வாமி கேட்டார். அதற்கு அந்த தச்சர், **"ஸ்வாமி, உண்மையில் நான் தவறு செய்துவிட்டேன். விளைநிலம் என்னுடையது அல்ல. மென்மையான காதுகளைப் போன்ற சோளக்கதிர் என்னுடைய வயலில் விளைந்திருக்கிறது. நீங்கள் வந்து அதை சுவைக்க வேண்டும்"** என்று கேட்டுக் கொண்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி தன் சேவகர்களுடன் ஹர்தாவை (மஹாராஷ்டிர வயல்களில் சோளக்குருத்தை எடுத்து நெருப்பில் சுட்டு உண்டு மகிழ்வர். அதை ஹர்தா பார்டி என்று அழைப்பர்) சுவைக்க வயலுக்குச் சென்றார். தச்சர் ஹர்தாவுடன் சுவைக்க கரும்பும் கொண்டுவந்திருந்தார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கரும்பை சுவைத்துவிட்டு அதன் தண்டுகளை மண்ணில் புதைத்து வைத்தார். தன்னை கரும்பு விதைக்குமாறு ஸ்ரீ ஸ்வாமி குறிப்பால் உணர்த்துகிறார் என்று தச்சர் எண்ணிக்கொண்டார். அந்த வருடம் தன் வயலில் கரும்பை நட்டார். விளைச்சல் அமோகமாக இருந்தது. 20 மடங்கு லாபம் கிடைத்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய ஆசீர்வாதம் கிடைத்தால் ஏதாவது தட்டுப்பாடு ஏற்படுமா என்ன?

ஸ்ரீ ஸ்வாமி எப்போதெல்லாம் நரசப்பாவின் வீட்டுக்குச் செல்கிறாரோ அப்போதெல்லாம் நரசப்பா ஸ்ரீ ஸ்வாமிகள் உடனடியாக சென்று விடப்போகிறார் என்கிற பதட்டத்தில் வாசற்படிக்கு அருகிலேயே தூங்கிக் கொண்டிருப்பார். அவரை தன் வீட்டிலேயே பல நாட்களுக்குத் தங்க வைத்துக் கொள்ள வேண்டும் என்கிற எண்ணம் அவருக்கு அதிகமாக இருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகளும் ஒருமுறை அவர் வீட்டில் எட்டு நாட்கள் தங்கியிருந்தார். அப்படி ஒருநாள் அவர் வீட்டில் தங்கியிருந்த தினத்தில் அவர் வயலில்




அறுவடை நாள். நல்ல விளைச்சலாகி இருந்தது. மஹராஜ் வீட்டில் இருக்கும் போது வயலுக்குச் செல்ல முடியாதே! பொக்கிஷமே அவருடன் இருப்பதை உணராமல், தான் அறுவடைக்குச் செல்லாவிட்டால் தனக்கு ஒரு மிகப்பெரிய இழப்பு ஏற்படப் போகிறது என்று எண்ணிக் கொண்டார். ஆனால் தச்சருடைய எண்ணத்தை புரிந்து கொள்ளாதவாரா ஸ்ரீ ஸ்வாமி!

மஹராஜ் அதிகாலை நான்கு மணிக்கு கதவைத் திறந்து கொண்டு கிளம்பிவிட்டார். தச்சர் எவ்வளவோ தடுத்தும் எந்தவித பயனும் இல்லை. **"இன்று உனக்கு அறுவடை நாள். தேவையில்லாமல் நீ செல்லத் தடை ஏற்படுகிறது. அதனால் நான் செல்கிறேன்"** என்று கூறிக்கொண்டே ஸ்ரீ ஸ்வாமி சென்று விட்டார். தன் மனஓட்டத்தை எண்ணி நரசப்பா தன்னைத் தானே தன் கன்னத்தில் அறைந்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து தன்னை மன்னிக்குமாறு கெஞ்சினார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய மனம் துளியும் இளகவில்லை.

ஒருவன் எவ்வளவு பெரிய பக்தனாக இருப்பினும், மிகப்பெரிய செல்வமே அவனுடன் இருக்கும் போது மற்றவை அனைத்தும் தூசு என்பதை உணரும் தகுதியை இழந்துவிட்டால், அவருடைய பக்திக்கு எந்தவித பலனும் கிடைக்காது. ஸ்ரீ குருவை விட மேலானது ஒன்றும் இல்லை என்கிற நிலை ஒருவருக்கு வரும்போது, அவரிடம் அனைத்தும் வந்து சேர்ந்துவிடும் என்பதை இந்த நிகழ்ச்சி நமக்கு எவ்வளவு தெளிவாக எடுத்துரைக்கிறது!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

### அத்தியாயம் 132

# பாபாசாஹேப் ஜாதவும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும்..

சர்க்கார் அதிகாரியான பாபாசாஹேப் ஜாதவுக்கு குழந்தைகள் இல்லை. அவர் தன் மனைவி இறந்த பிறகு இரண்டாவது திருமணம் செய்து கொள்ள ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் அனுமதி கேட்டபோது அதற்கு ஸ்ரீ ஸ்வாமி அனுமதி

அளிக்கவில்லை. அவர் தன் சொத்துக்களை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சமர்ப்பணம் செய்து விட்டு வெறும் கௌபீனத்துடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் தஞ்சம் புகுந்தார். ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சர்கார்வாடாவுக்கு அருகில் இருக்கும் லாகடாகானாவில் (எரிபொருள் சேமிக்கும் இடம்) இருந்தார். அப்போது மணி மதியம் 12 இருக்கும். அவர் பாபாசாஹேபிடம், **"கும்பார் (குயவர்), உன் பெயரில் ஒரு சீட்டு வந்திருக்கிறது"** என்று கூறினார். மஹராஜ் அவரை கும்பார் என்றுதான் அழைப்பார்.

அவருக்கு ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளைக் கேட்டவுடன் மிகவும் அச்சமாக இருந்தது. அப்போது அவர் மிகுந்த ஆக்ரோஷமான ஒரு மனிதனைப் பார்த்தார். உடனே பாபாசாஹேப் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதங்களை இறுக்கமாகப் பற்றிக் கொண்டு, **"மஹராஜ், உங்களுக்கு என் மனது திருப்தி அளிக்கும் அளவுக்கு சேவைகள் செய்ய வேண்டும் என்பது மட்டும்தான் விருப்பம். என்னை இப்போது அனுப்பி விடாதீர்கள்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவர் மீது இரக்கம் கொண்டு அந்தச் சீட்டை திருப்பி அனுப்பி வைத்தார். அப்போது அங்கு அவர்களுக்கு முன்னால் ஒரு பெரிய காளை நின்று கொண்டிருந்தது. **"அந்த காளையிடம் செல்"** என்று கூறினார். உடனே அந்த காளை செத்து விழுந்தது. பாபாசாஹேபின் உயிர் காப்பாற்றப்பட்டது.

**ராவன்னாவின் விஷமுறிவு**

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பாகேஹள்ளியில் தங்கியிருந்தார். அப்போது மதியம் 12 மணியளவில் சுட்டெரிக்கும் வெயில் நேரத்தில் அங்கிருந்து கிளம்ப தயாரானார். அப்போது அவருடன் பலர் இருந்தனர். மஹராஜ் அவர்களிடம், **"பார்ப்பதற்கு வேடிக்கையும், உண்ண விருந்தும் வேண்டுமென்றால் வரலாம்"** என்று கூறினார். அங்கிருந்தவர்கள் எவரும் உணவருந்தவில்லை. வெயிலோ சுட்டெரித்தது. ஒவ்வொருவராக சூடு தாங்கமுடியாமல் பயணத்தின் பாதியிலேயே நின்றுவிட்டனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய 5-6 சேவகர்கள் மட்டுமே அவருடன் இருந்தனர். அவர்களுள் பாபாசாஹேப் ஜாதவும் அடக்கம்.

ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் மதியம் மூன்று மணியளவில் இடாகிகாவ் என்கிற கிராமத்தை அடைந்து, அங்கிருந்த ஹனுமான் மந்திரில் தங்கினார். கிராமத்துவாசிகள் அவருக்கு ஹுக்கா அளித்தனர், அதை மறுத்துவிட்டார்.

நான்கு மணியளவில் ராவன்னா என்கிற கடைக்காரர் தன் நிலத்தை உழுது கொண்டிருக்கும்போது பாம்பினால் தீண்டப்பட்டார். அவர் அங்கும் இங்கும் சுழன்று கொண்டிருந்தார். அவருடைய சொந்தக்காரர்கள் அவரை ஒரு போர்வையில் சுற்றி, ஹனுமான் கோவிலுக்குக் கொண்டுவந்து அங்கு அமரச் செய்தனர். அவர் உடல் முழுவதும் விஷம் ஏறி அவருடைய உயிர் பிரிந்துவிட்டது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய சேவகர்கள் வேடிக்கை நிகழ்ச்சிக்காக காத்திருந்தனர். அப்போது பாபாசாஹேப் ஜாதவ் வலி குறைய வேண்டும் என்கிற எண்ணத்தில் ஸ்ரீ ஸ்வாமிகளுடைய பாதுகைகளை கொண்டுவந்து அவருடைய தலையின் மேல் வைத்தார். ஒரு குரு தன் பரம சீடனுடைய எண்ணத்தை கண்டிப்பாக பூர்த்தி செய்தாக வேண்டும்.

உறங்கிக்கொண்டிருந்த ஸ்ரீ ஸ்வாமி திடீரென விழித்துக் கொண்டு ராவன்னாவின் தலையில் வைக்கப்பட்டிருந்த பாதுகைகளைப் பார்த்து கோபத்துடன், **"ஏ முட்டாள் கழுதையே, உன் தாயிடம் செல்! செத்தவனுடைய தலையில் ஏன் என்னுடைய பாதுகைகளை வைத்திருக்கிறாய்?"** என்று வசை பாடினார். பாபாசாஹேபிடம் காண்பித்த கோபத்தைப் பார்த்து அங்கிருந்த அனைத்து பக்தர்களும் தெறித்து ஓடினர். ஸ்ரீ ஸ்வாமி கோபத்துடன் தன் தலையில் அணிந்திருந்த குல்லா, போட்டிருந்த கஃப்னி ஆகியவற்றை கழற்றி எறிந்தார். பின்னர் தன் கௌபீனத்தையும் கழிற்றிவிட்டு திகம்பரராக காட்சியளித்தார்.

பாபாசாஹேப் பயத்தில் ஒரு மூலையில் ஒடுங்கிக் கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் பாபாசாஹேபை தன்னருகில் வருமாறு அழைத்தார். பயத்தினால் அவரால் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியவில்லை. **"ஏ போசடிக்கே, **** (கெட்ட வார்த்தைகள்)வா இங்கே"** என்று அழைத்தவுடன் பயந்துகொண்டே அவருக்கருகில் பாபாசாஹேப் சென்றார். ஸ்ரீ ஸ்வாமி பாபாசாஹேபுடைய தலைப்பாகையை கழற்றச் சொன்னார். பின்னர் அவருடைய சட்டை மற்றும் வேட்டியை கழற்றுமாறு கூறினார். தன்னையும் திகம்பரராக ஆக்கிவிடுவாரோ என்று பயந்து கொண்டிருந்தார். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை. மஹராஜ் பாபாசாஹேபை ராவன்னாவின் காதுக்கருகில் சென்று **"ராவன்னா"** என்று அழைக்குமாறு கூறினார். இரண்டு முறை அவ்வாறு செய்தபின்னும் எந்தவித முன்னேற்றமும் இல்லை. உரக்க

அழைக்குமாறு ஸ்ரீ ஸ்வாமி கட்டளையிட்டவுடன் பாபாசாஹேப் இரண்டு காதுகளிலும், **"ராவன்னா, ராவன்னா!!"** என்று தன்னால் முடிந்தவரை உரக்கமாக அழைத்தார். ராவன்னாவுக்கு சுயநினைவு திரும்பி, அங்கு கூடியிருந்தவர்களை கண்திறந்துப் பார்த்தார். அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு ஜய ஜய... கோஷம் எழுப்பினர்.

ராவன்னா முழுமையாக சுயநினைவுக்கு வந்தபின் தனக்கு மிகுதியாக பசிக்கிறது, ஏதாவது சாப்பிட கொடுக்குமாறு கேட்டான். அவனுடைய சொந்தபந்தங்கள் என்ன உணவு கொடுக்கலாம் என்று கேட்டனர். மஹராஜ் போட்வே கீர் (மராட்டிய இனிப்புவகை-பாயசம்) செய்து கொடுக்கும்படி கூறினார். உடனே அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டு, ராவன்னாவுக்கு அளித்துவிட்டு, ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுக்கும் தட்டு முழுவதும் கீர் கொடுக்கப்பட்டது. வைத்திய முறைப்படி பாம்புக்கடிக்கு பால் கொடுக்கக் கூடாது. ஆனால் விஷமே ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னால் வேலை செய்யாதபோது பால் எம்மாத்திரம்? ராவன்னா பாயசத்தை அருந்தியவுடன் சுறுசுறுப்பான தன் பழைய நிலையை அடைந்தான்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்காக கொண்டுவரப்பட்ட உணவுத்தட்டு நிலவுக்கும் ஹனுமனுக்கும் நைவேத்தியம் செய்யப்பட்டது. பின்னர் அது பாபாசாஹேபிடம் கொடுக்கப்பட்டது, அவர் தன் மனதும் வயிறும் நிரம்பும் அளவுக்கு உண்டார். அன்று ஸ்ரீ ஸ்வாமி தன் உண்ணாநோன்பை முடித்துக் கொண்டார். அடுத்த நாள் ராம்பூர் நோக்கி தன் பயணத்தை தொடர்ந்தார்.

கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமி, தன் பரம பக்தன் தன் மீது கொண்டுள்ள நம்பிக்கையை பூர்த்தி செய்வதற்காக இறந்தவனை பிழைக்க வைத்தார். ஸ்ரீ ஸ்வாமி தன் பக்தர்களின் மீது கொண்டுள்ள அதீத அன்பை வெறும் வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. அதை உணர மட்டுமே முடியும்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 133

# ஒரு பெண்ணின் மகனுக்கு உயிர்ப்பிச்சை

த்ரேதா யுகத்தில் ஸ்ரீ ராமரும், துவாபர யுகத்தில் ஸ்ரீ கிருஷ்ணரும் எப்படி பல்வேறு விதமான லீலைகள் புரிந்தனரோ, அதே போல் கலியுகத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் லீலைகள் புரிந்தார். ஸ்ரீ ராமரும் ஸ்ரீ கிருஷ்ணரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் ஒன்றுதான் என்பதை இந்த நிகழ்ச்சிகள் நமக்கு பறைசாற்றுகின்றன.

ஒரு கிராமத்து பெண்மணியின் சிறு குழந்தை மிகுந்த நோய்வாய்பட்டிருந்தது. பலவகையான வைத்திய முறைகளை கையாண்டும் எந்தவித முன்னேற்றமும் ஏற்படவில்லை. அவள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தை என்பதினால் அவளுக்கு ஸ்ரீ ஸ்வாமியை அடைக்கலம் அடைவதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. உடனே அவள் அக்கல்கோட்டுக்கு வந்தாள். ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் அக்குழந்தையை வைக்கலாம் என்கிற எண்ணத்தில் குழந்தையின் முகத்தை மூடியிருக்கும் துணியை விலக்கியபோது, அந்த குழந்தை இறந்திருந்ததைக் கண்டு அவள் அதிர்ச்சி அடைந்தாள்.

அவள் தன் மார்பிலும் தலையிலும் அடித்துக் கொண்டு, **"மஹராஜ், நான் எவ்வளவோ முயற்சி செய்தும் முடியாமல் உங்களின் நிழலைத் தேடி வந்தேன். ஆனால் என் விதி சரியில்லையே! மஹாபுஷர்களின் முன்னிலையில் தீமையான கர்மவினையும் ஒன்றும் செய்யமுடியாது என்றுதானே கேள்விப்பட்டிருக்கிறேன்! அனைவரும் கூறுவது பொய்த்துவிட்டதே! தரிசனத்துக்காக நுழையும்போது கோவிலே இடிந்துவிழுவது போல, புலியிடம் இருந்து தப்பித்த பசு கசாப்பு கடைக்காரனிடம் மாட்டிக்கொள்வது போல என் நிலைமை ஆகிவிட்டதே! ஸ்வாமி, உங்களால் முடியாதது ஒன்றுமே இல்லை. நீங்கள் நினைத்தால் என் கஷ்டத்தை ஒரு நொடியில் மாற்றிவிடலாம். தயவுசெய்து என்னை காப்பாற்றுங்கள்"** என்று கதறினாள்.

அப்பெண்ணின் கூக்குரல் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜின் மனதை இரக்கம் கொள்ளச் செய்தது. அவர் உடனே, **"உன் மகனை என்னிடம் கொண்டு வா!"** என்று கூறினார். அக்குழந்தையை தலைகீழாக பிடித்துக் கொண்டு சுழற்றத்




தொடங்கினார். அப்போது அவருக்கருகில் ஒரு குதிரை நின்று கொண்டிருந்தது. அந்த குழந்தையை குதிரையின் வாய்க்கு அருகில் கொண்டு சென்று, **“ஏ குதிரையே, இந்த பெண்ணின் மகனை சாப்பிடு”** என்று கூறிவிட்டு அக்குழந்தையை சமைப்பதற்காக தோண்டப்பட்டிருந்த அடுப்புக்கு அருகில் தூக்கி எறிந்தார். ஆஹா! அந்த குழந்தை உயிர் பெற்று அழத் தொடங்கியது! அந்த பெண் ஓடோடிச் சென்று தன் குழந்தையை மார்போடு அணைத்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தாள். அவள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை பலவாறு புகழ்ந்தாள். அங்கு சில நாட்கள் தங்கியிருந்துவிட்டு பின்னர் ஸ்ரீ ஸ்வாமியின் அனுமதியுடன் தன் சொந்த கிராமத்திற்குச் சென்றாள்.

ஒரு கூட்டத்தில் சந்தேகம் மற்றும் முற்போக்கு சிந்தனை உடையவர்கள் சிலர் இருக்கத்தான் செய்வார்கள். அப்படிப்பட்டவர்கள் இல்லையென்றால் மகான்களின் மகத்துவம் அனைவருக்கும் புரிவதில்லை. அப்படிப்பட்ட சிலர் இந்த நிகழ்ச்சியை நேரில் கண்ட பிறகு, **“ஸ்ரீ ஸ்வாமி அந்த குழந்தையை தூக்கி எறியும் போதே அது உயிருடன்தான் இருந்தது. அதனால் அது உடனே அழத்தொடங்கியது”** என்று விமர்சனம் செய்தனர். ஆனால் சொக்கத் தங்கத்தை இதுபோன்ற அசுத்தங்கள் மாசுபடுத்திவிட முடியுமா?

நாம் இந்த லீலையை உற்றுக் கவனித்துப் பார்த்தால், குழந்தையை தலைகீழாக தூக்கி சுழற்றுவது நவீன மருத்துவத்தில் இது ஒரு வைத்திய முறை. அப்படிச் செய்யும் போது சில மாற்றங்கள் நிகழ்ந்து செயலற்று இருக்கும் சில உறுப்புகள் செயல்படத் தொடங்கும். ஆனால் இம்முறையை கைதேர்ந்த மருத்துவர்களால் மட்டுமே செயல்படுத்த முடியும்! அனைத்து மருத்துவ முறைகளிலும் கைதேர்ந்த ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சாத்தியமற்றது என்பது ஏதாவது உண்டோ! அவரிடம் முழு நம்பிக்கையுடன் சரணடைபவர்களை அவர் கைவிட்டதே இல்லை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 134

# ராஜேராய் மடம்

நிஜாம் சர்காருடைய பதிவாளரான ஸ்ரீ ஷங்கர்ராவ் சாஹேப், பிசாசு தொந்தரவினாலும் காசநோயினாலும் மற்ற சில நோய்களாலும் துன்பத்தை அனுபத்துக் கொண்டிருந்தார். அவருக்கு எந்தவித வைத்திய முறைகளும் பலனளிக்காததால் நாளுக்கு நாள் நலிவடைந்து கொண்டே இருந்தார். வேறுவழி தெரியாமல் கானகாபூர் சென்று அனைத்து அனுஷ்டானங்களையும் கடைப்பிடித்து, பிராமணர்களுக்கு தானங்கள் வழங்கினார். ஆனால் அவை எந்தவித முன்னேற்றத்தையும் அளிக்கவில்லை.

ஒருநாள் அவருக்கு அக்கல்கோட்டுக்கு செல்லுமாறு கனவில் உணர்த்தப்பட்டது. ஆனால் அவருக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மீது நம்பிக்கை இல்லாததால் அங்கு செல்வதைத் தவிர்த்தார். பின்னர் வேறுவழி தெரியாததால் அக்கல்கோட் செல்ல முடிவு செய்தார். ராவ் சாஹேப் அக்கல்கோட் சென்றடைந்த போது ஸ்ரீ ஸ்வாமிகள் தேஷ்முக்கின் வீட்டில் இருந்தார். தரிசனத்தை முடித்துக்கொண்டு அமர்ந்தபோது, தன் கதையை சுந்தராபாயியிடம் விவரித்தார். **"தயவுசெய்து ஸ்ரீ ஸ்வாமிகளிடம் என் நோயை குணப்படுத்தும்படி கூறுங்கள்"** என்று அவர் கூறியதற்கு சுந்தராபாயி, **"உங்களுக்கு குணமடைந்தால் எனக்கு என்ன தருவீர்கள்"** என்று கேட்டாள். அதற்கு அவர், **"நீங்கள் என்ன கேட்டாலும் தருகிறேன்"** என்று கூறினார். உண்மையில் ஷங்கர்ராவ் ஒரு கோடீஸ்வரர். அவருடைய நோயின் காரணத்தினால் அவர் பொலிவிழந்து காணப்பட்டார். சுந்தராபாயி அவரை ஏழை என்று நினைத்துக் கொண்டு, **"இரண்டாயிரம் ரூபாய் கொடுங்கள்"** என்று கேட்டாள். ஆனால் அவரோ, **"எனக்கு குணமடைந்தால் நான் பத்தாயிரம் ரூபாய் தருகிறேன்"** என்று கூறியது சுந்தரா பாயிக்கு மிகுந்த ஆச்சரியத்தையும் சந்தோஷத்தையும் அளித்தது. உடனே அவள் ஸ்ரீ ஸ்வாமி மஹாராஜிடம் சென்று ஷங்கர்ராவுடைய நோயை குணப்படுத்துமாறு பிரார்த்தனை செய்து கொண்டாள். அவர் பதிலேதும் கூறாமல் ஷேக் நூர் சாஹேபின் தர்காவுக்குச் சென்றுவிட்டார்.

அங்கு இஸ்லாமியர்களின் கல்லறை இருந்தது. அவற்றில் புதிதாக கட்டப்பட்டிருந்த கல்லறை ஒன்றின் மீது ஸ்ரீ ஸ்வாமி படுத்துக் கொண்டு





உறங்கிவிட்டார். சிறிது நேரத்திற்குப் பிறகு விழித்துக் கொண்டு ஷங்கர்ராவ்வைப் பார்த்து, சந்நியாசிகளுக்கு உணவளிக்குமாறும், ஷேக் நூருடைய சமாதிக்கு கபினி அணிவிக்குமாறும் கூறினார். ஷங்கர்ராவ் அக்கல்கோட்டிலியே எட்டு முதல் பத்து நாட்கள் வரை தங்கியிருந்தார். ஒருநாள் மஹராஜ் அவரிடம், வேப்பஞ்சாறை ஒன்பது முழு மிளகுகளுடன் கலந்து மருந்தாக குடிக்கும்படி பரிந்துரைத்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கூறியபடியே அவர் செய்ததும் சில நாட்களிலேயே அவருக்கு அற்புதமான மாற்றங்கள் நிகழ்ந்தது.

சில நாட்களுக்குப் பிறகு அவர் ஹைதராபாத் சென்றுவிட்டு மீண்டும் அக்கல்கோட்டுக்கு வந்து, சுந்தராபாயிக்கும் சோளப்பாவுக்கும் 10,000 ரூபாய் அளிப்பதற்கான அனுமதியை ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் கேட்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **“இந்த விதவைக்கும், மார்வாடிக்கும் எதுவும் கொடுக்க வேண்டாம். நீ ஒரு ஆஸ்ரமம் கட்டு”** என்று கூறினார். **“அதை எங்கு கட்டவேண்டும்”** என்று கேட்டதற்கு **“ஊருக்கு வெளியே இருக்கும் ராமர் கோவிலுக்கு அருகில்”** என்று கூறினார். நானாசாஹேப் பார்வேயும் மற்றவர்களும் ஊருக்கு உள்ளேயே கட்ட அனுமதிக்குமாறு விண்ணப்பித்தனர். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜோ, **“நான் கூறிய இடத்தில்தான் ஆஸ்ரமம் கட்டவேண்டும்”** என்று திட்டவட்டமாக கூறிவிட்டார். அனைவராலும் எதுவும் மறுவார்த்தை பேச முடியவில்லை. (இப்போது அம்மடம் ராஜே ராய் மட் என்கிற பெயருடன் அக்கல்கோட்டில் அமைந்துள்ளது. இதுதான் ஸ்ரீ ஸ்வாமிக்காக அக்கல்கோட்டில் அமைக்கப்பட்ட முதல் மடம்)

அவர் 30,000 ரூபாய் செலவு செய்து ஆஸ்ரமத்தை கட்டி முடித்தார். பின்னர் பாதுகை பிரதிஷ்டை மற்றும் மற்ற அலங்காரங்களுக்கும் தாராளமாக செலவு செய்தார். ஆயிரம் பிராமணர்களுக்கு அன்னதானம் அளித்து அனைவருக்கும் ஒரு ரூபாய் தக்ஷிணை அளித்தார். ஒரு பூஜாரியை நியமித்துவிட்டு ஹைதராபாத்துக்கு மனநிறைவுடன் சென்றார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மீது நம்பிக்கை இல்லாத ஒருவரை ஸ்ரீ ஸ்வாமிகளே அக்கல்கோட்டுக்கு வரவழைத்து, அவருடைய நோயையும் குணப்படுத்தி, அவரை ஆஸ்ரமம் கட்டவைத்து, பல வகையான தானங்கள் செய்யவைத்து புண்ணிய ஆத்மாவாக அனுப்பி வைத்திருக்கிறார். ஸ்ரீ ஸ்வாமியின் கருணைக்கு இதைவிட வேறு என்ன சான்று வேண்டும்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 135

# ஸ்ரீ ஸ்வாமி பக்தர்- பாளப்பா

பாளப்பா ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பரம பக்தர். அக்கல்கோட்டில் 'ஸ்ரீ குரு மந்திர்' என்று அழைக்கப்படும் பாளப்பா மந்திர் மிகவும் பிரசித்தி பெற்ற மடம். பாளப்பா கர்நாடகத்தில் உள்ள ஹவேரி கிராமத்தைச் சேர்ந்தவர். அவர் எப்படி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பக்தரானார் என்பதை இந்த அத்தியாயத்தில் விரிவாகப் பார்க்கலாம்.

பாளப்பா ஒருநாள் குருவைத் தேடி முர்கோட்டுக்குச் சென்றார். அந்த இடத்தில் சிதம்பர் தீக்ஷித் என்கிற மஹாபுருஷர் ஒருவர் வாழ்ந்து வந்தார். சிதம்பர் தீக்ஷித்துடைய தந்தையான மன்னார் தீக்ஷித் ராமேஸ்வரத்துக்கு யாத்திரையாகச் சென்றிருந்தார். வரும் வழியில் மிகவும் விழிப்புடன் இருக்கும் சிவனுடைய க்ஷேத்திரமான சிதம்பரேஸ்வரர்(கர்நாடகா) என்கிற இடத்திற்குச் சென்றார். அந்த இடத்தில் அவர் 12 வருடங்களுக்கு தவம் புரிந்தார். சங்கரர் அவருக்குக் காட்சி அளித்துவிட்டு அவரிடம், "நானே உனக்கு மகனாகப் பிறப்பேன்" என்று வரமளித்தார். மேலும் அவரிடம், **"குழந்தை பிறக்கும் போது ஒரு காதில் வில்வ இலையும், இன்னொரு காதில் துளசி இலையும் இருக்கும். அக்குழந்தையை அவதாரமாக ஏற்றுக் கொள்ள வேண்டும்"** என்று கூறினார். பின்னர் அவர் வீட்டிற்குச் சென்றார். அவருடைய மனைவி கருவுற்று ஒரு மகன் பிறந்தான். அவருக்குத் தோன்றிய காட்சி போலவே குழந்தையின் காதுகளில் வில்வம், துளசியுடன் பிறந்தது. அதனால் அக்குழந்தைக்கு சிதம்பர் என்று பெயரிட்டனர்.

ஸ்ரீ சிதம்பர் பல அற்புதங்களை நிகழ்த்திக் காட்டியிருக்கிறார். ஒரு யக்ஞத்தில் நெய்க்கு தட்டுப்பாடு ஏற்பட்டது. அப்போது கங்கையிலிருந்து கொண்டுவரப்பட்ட தண்ணீர் நெய்யாக மாறியது. பின்னர் சிறிது நேரத்திற்குப் பிறகு நெய் கொண்டு வரப்பட்டது. எவ்வளவு பானைகள் கங்கையிலிருந்து தண்ணீர் கொண்டு வரப்பட்டதோ அதே அளவு நெய் கங்கைக்குள் விடப்பட்டபோது அது தண்ணீராக மாறியிருந்தது.

ஒருமுறை பாஜிராவ் பேஷ்வா சிதம்பர் ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காக வந்திருந்தார். மஹாராஜா வருவதை முன்கூட்டியே அறிந்து

கொண்ட பிராமணர்கள், அவர்களுடைய சம்பளம் பறிமுதல் செய்யப்பட்டிருப்பதால் அதை மஹாராஜாவிடம் தெரிவிக்குமாறு சிதம்பர் ஸ்வாமியிடம் கோரிக்கை விடுத்தனர். அதற்கு சிதம்பர் ஸ்வாமி சம்மதித்தார். சிதம்பர் ஸ்வாமி தன்னிடம் பேசப்போகிறார் என்கிற தகவல் மகாராஜாவுக்கு தெரிந்துவிட்டது. இதைத் தடுப்பதற்காக பாஜிராவ், ஸ்வாமிகளுக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில், **"நான் உங்களுடைய தரிசனத்துக்காக வருகிறேன். எவரைப் பற்றியும் என்னிடம் பரிந்துரைக்காதீர்கள்"** என்று எழுதியிருந்தார். அதற்கு பதில் கடிதத்தில் சிதம்பர் ஸ்வாமி, **"பிராமண சர்க்கார் சிறிது காலத்திற்கு தொடர இருந்தது. ஆனால் கடவுளின் விருப்பத்திற்கு முன்னால் வேறு வழி கிடையாது. உங்கள் அறிவின் தீர்ப்பு அவ்வாறாக உள்ளது. அறிவு எப்போதும் கர்மாவை பின்பற்றிச் செல்லும்"** என்று எழுதி தூதுவனிடம் கொடுத்தனுப்பினார். பாஜிராவ் இந்த பதில் கடிதத்தைப் பார்த்தார். வருங்காலத்தில் நடக்கப்போகும் நிகழ்ச்சிகளைப் பற்றி அறியாமல், சிதம்பர் ஸ்வாமியை தரிசிக்காமலேயே தன் இடத்திற்குச் சென்று விட்டார். ஆறு மாத காலத்திற்குள் பேஷ்வா ராஜ்ஜியத்தின் ஆட்சி கலைந்து, ஆங்கிலேய ஆட்சி தொடங்கியது.

அப்படிப்பட்ட தீர்க்கதரிசியான சிதம்பர் தீக்ஷித் வாழ்ந்த இடத்தைப் பார்க்க வேண்டும் என்று பாளப்பா விரும்பினார். அங்கு இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு தங்கியிருந்துவிட்டு கானகாபூர் சென்றார். அங்கு சென்று மூன்று மாதகாலம் தங்கியிருந்து குருதரிசனம் கிடைக்க பிரார்த்தனை செய்துகொண்டிருந்தார். அப்போது ஒரு நாள் **"அக்கல்கோட்டுக்குச் செல்"** என்று கனவில் உத்தரவானது. உடனே அவர் அக்கல்கோட் கிளம்பி வந்தார். அன்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் காஸ்-பாகில் இருந்தார். தரிசனத்துக்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமி கல்கண்டை (சக்கரை துகள்கள்) அவருக்கு முன்னால் போட்டார். தான் கனவில் கண்ட சந்நியாசி இவர்தான் என்று உறுதி செய்து கொண்டார். மிகுந்த மகிழ்ச்சியுடன் முரளிதர் கோவிலில் தங்கிக்கொண்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தார்.

சுந்தராபாயி பாளப்பாவுக்கு தங்குவதற்கு இடம் அளித்தாள், அவளுடைய உதவியுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தார். இதைக்கண்டு சோளப்பாவுக்கு பொறாமை ஏற்பட்டது. அதனால் பாளப்பா இங்கு தங்கியிருக்கக் கூடாது என்கிற எண்ணத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் சென்று, **"ஸ்வாமி, பாளப்பா அவர் குடும்பத்தை விட்டு இங்கு வந்து பல நாட்கள் ஆகிவிட்டன. அவருடைய குலதெய்வத்தையும் குடும்பத்தினரையும்**

**பார்க்க மிகுந்த ஆவலாக இருக்கிறார்"** என்று கூறினார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி மஹாராஜ், **"அவருடைய மனைவியும் குழந்தைகளும் இங்குதான் இருக்கிறார்கள்"** என்று கூறினார். ஸ்ரீபாத பட் தன் பங்குக்கு சீட்டு குலுக்கிப் பார்த்து முடிவு செய்யலாம் என்கிற யோசனையை செயல்படுத்தினார். அனைத்து செயல்களுக்கும் அதிபதியான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வார்த்தைகள் பொய்க்குமா? **"போக வேண்டாம்"** என்கிற சீட்டு தேர்ந்தெடுக்கப்பட்டவுடன், இருவரும் மௌனமானார்கள்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பாளப்பாவுக்கு என்றைக்குமே பிரசாதம் கொடுத்ததில்லை. தனக்கு மட்டும் ஸ்ரீ ஸ்வாமி பிரசாதம் அளிக்கவில்லையே என்று பாளப்பா ஏங்கிக் கொண்டிருந்தார். ஒருநாள் பேரிச்சம்பழத்தை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சமர்ப்பணம் செய்துவிட்டு, அதில் ஒன்றை தனக்கு அளிக்குமாறு வேண்டிக்கொண்டார். சோளப்பா அதிலிருந்து இரண்டை எடுத்து பாளப்பாவிடம் கொடுத்தார். இருப்பினும், பாளப்பா மிகுந்த மகிழ்ச்சியுடன் அதை ஏற்றுக்கொண்டார். இதைக் கண்டு ஸ்ரீ ஸ்வாமி சோளப்பாவிடம், **"ஏ! சோளைய்யா அவனுக்கு எதுவும் கொடுக்கக் கூடாது. அதை அவனிடமிருந்து பெற்றுக்கொள்"** என்று கூறினார். சோளப்பா ஓடிச்சென்று அவரிடமிருந்து பெற்றுக்கொண்டவுடன் பாளப்பா மிகுந்த வருத்தமடைந்தார். எவரொருவர் அக்கல்கோட்டை விட்டு கிளம்புகிறார்களோ அவர்களுக்கு மட்டும்தான் ஸ்ரீ ஸ்வாமி பிரசாதம் கொடுத்து அனுப்பி வைப்பார். அவர் அனுப்ப விரும்பாதவர்களுக்கு பிரசாதம் கொடுக்க மாட்டார். அவர் பாளப்பாவை தன்னுடனேயே எப்போதும் தங்க வைத்துக் கொள்ள வேண்டும் என்கிற எண்ணத்தில் இவ்வாறு நடந்து கொண்டார் என்பது பாளப்பாவுக்கு பின்னாட்களில்தான் புரிந்தது.

### பாளப்பாவின் நோயை குணமாக்குதல்

ஒருமுறை பாளப்பாவின் நாபியில் இருந்து ரத்தம் கசியத் தொடங்கியது. அந்த நோயின் தாக்கம் அதிகமாக இருந்ததால் அவரால் படுக்கையை விட்டு எழவே முடியவில்லை. ஒருநாள் இரத்தக் கசிவு அதிகமாக ஏற்பட்டு பொட்டலம் போன்ற ஒன்று நாபியிலிருந்து வெளியேறியது. அதைத் திறந்து பார்த்தபோது அதில் கருமையான வஸ்து ஒன்று இருந்தது. அதை அவர் ஐந்து அல்லது ஆறு நபர்களிடம் காண்பித்து என்னவென்று விசாரித்தபோது அவர்களால் எதுவும் ஊகிக்க முடியவில்லை. பிறகு வியாபாரி ஒருவன் உணவில் விஷம் கலந்து கொடுத்தது பாளப்பாவுக்கு நினைவுக்கு வந்தது. அதை ஸ்ரீ ஸ்வாமிகள் நினைவுபடுத்தி குணமாக்கியது அனைவருக்கும்

ஆச்சரியத்தை அளித்தது. பின்னர் பாளப்பாவின் ஆரோக்கியம் சீரடைந்தது. இதேபோல பல அனுபவங்கள் பாளப்பாவுக்கு ஏற்பட்ட பின்னர், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மீது அவர் கொண்டிருந்த பக்தியின் அளவு அதிகரித்தது.

சோளப்பா ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பிரதான சேவைகளை செய்து கொண்டிருந்த நாட்களில் அவர் எப்போதும் சந்தனக்கட்டையை தன் இடுப்பில் வைத்துக் கொண்டிருப்பார். ஸ்ரீ ஸ்வாமிகளை குளிக்க வைத்த பின் சந்தனத்தை அரைத்து அவருக்கு பூசி விடுவார். பின்னாட்களில் ஸ்ரீ ஸ்வாமிகளை குளிக்க வைக்க வேண்டும் என்றால் அவர் வெந்நீர், அத்தர் மற்றும் குங்குமப்பூ கலவை மற்றும் ஒரு பானை பாயசம் ஆகியவற்றை தயார் நிலையில் வைத்திருப்பார். மஹராஜ் எப்போதும் ஒரே இடத்தில் இருக்க மாட்டார். அவர் காடுமேடுகள், மசூதி, தாழ்ந்த ஜாதியினர் தங்கியிருக்கும் பகுதிகள், அல்லது பக்தர்களுடைய வீடுகள் மற்றும் விளைநிலங்கள் ஆகிய பல்வேறு இடங்களில் இருப்பார். அவர் விரும்பிய இடங்களிலெல்லாம் மலஜலம் கழிப்பார். விசித்திரமான இடங்களில் குளிப்பார்.

வெயில் நாட்களான சித்திரை மற்றும் வைகாசி மாதங்களின் போது சந்தனமும் குங்குமப்பூவுடன் கலந்து அரைத்து பூசப்படும்.அந்நாட்களில் மதிய வேளைகளில் எலுமிச்சைச் சாறு அல்லது வேறு ஏதாவது பானங்கள் குடிப்பார், ஆனால் ஒரு குவளைக்கு மேல் குடிக்கமாட்டார். கண்பத்ராவ் சமையல் செய்வார். நரசப்பா வெந்நீர் தயாரிப்பார். சுந்தராபாயி உணவு ஊட்டிவிடுவாள். ஸ்ரீபாத பட் வழிபாடுகள் செய்வார். பாளப்பா எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டு, அனைத்தும் சரியாக நடைபெறுகிறதா என்று மேற்பார்வை பார்ப்பார். இவ்வகையில் அனைவருக்கும் சேவைகள் பகிர்ந்து அளிக்கப்பட்டி ருந்தது.

ஸ்ரீ ஸ்வாமிகளை குளிக்க வைப்பதற்காக கிணற்றிலிருந்து தண்ணீர் இழுக்கவேண்டிய வேலையை பாளப்பா செய்து கொண்டிருந்தார். அது அவருக்கு மிகுந்த அவமானமாக இருந்தது. ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி பாளப்பாவிடம், **"குருவுக்கு அருகில் எதுவுமே அவமானமில்லை"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் பாளப்பா எந்தவித மனக்கிலேசங்களும் இல்லாமல் அனைத்து சேவைகளையும் முழுமனதுடன் செய்யத் தொடங்கினார்.

இவ்வாறு பல்வேறு நிகழ்ச்சிகள் மூலம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பாளப்பா என்கிற பக்தனை தன்னிடம் ஈர்த்துக் கொண்டார். அவரிடம் தன் பாதுகைகளை அளித்து ஒரு மடத்தை ஸ்தாபிக்குமாறு கூறினார். அக்கல்கோட்டில் ஸ்ரீ குரு மந்திர் அல்லது பாளப்பா மந்திர் என்றால் மிகவும் பிரசித்தம். ஸ்ரீ ஸ்வாமிகள்

தெரிவு செய்தவர்கள் மட்டுமே அவருடைய பக்தராகக் கூட ஆக முடியும் என்பதை நமக்கு இந்த நிகழ்ச்சி உணர்த்துகிறதல்லவா?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 136

# வெறிபிடித்த காளையை அடக்குதல்

ஒருநாள் ஒரு விவசாயின் காளை மாடு ஒன்று வெறிபிடித்து கிணற்றுக்கு அருகில் நின்று கொண்டு அங்கிருந்து வர மறுத்துக் கொண்டிருந்தது. மாலை வரை எவ்வளவோ முயற்சி செய்தும் அது அந்த இடத்தை விட்டு நகராமல் அருகில் வருபவர்களை தாக்கிக் கொண்டிருந்தது. அந்த விவசாயி என்ன செய்வதென்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீ ஸ்வாமி அன்று காஸ்-பாகில் இருந்தார். விவசாயி ஸ்ரீ ஸ்வாமிக்கு அருகில் சென்றவுடன், **"என்ன! உன் காளைமாடு உன்னைத் தொட அனுமதிக்கவில்லையா?"** என்று கேட்டார். **"ஸ்வாமி, யார் அருகில் சென்றாலும் அவர்களை தாக்குகிறது. என்ன செய்வதென்றே தெரியவில்லை"** என்று அவர் கூறினார். உடனே ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் எழுந்து சென்று காளையின் காதைப் பிடித்து ஒரு ஆட்டை இழுத்து வருவது போல இழுத்து வந்து அந்த விவசாயியிடம் ஒப்படைத்தார். ஸ்ரீ ஸ்வாமியின் ஸ்பரிசம் அந்த காளையின் மீது பட்டவுடன் அது சாதுவாக மாறியது. அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் இந்த நிகழ்ச்சியை மிகுந்த ஆச்சரியத்துடன் பார்த்தனர்.

ஸ்ரீ ஸ்வாமி தன் சேவகர்களை எப்போதும் மிகுந்த அன்புடன் நடத்துவார். எவரேனும் ஏதாவது தன் வேலைகளில் தவறு செய்துவிட்டால் அவர்களிடம், **"ஏ! வா வந்து வணங்கு"** என்று கூறுவார். அவர்கள் தங்கள் தவறுக்காக மிகவும் வருந்துவார்கள். சேவகர்கள் சீட்டு விளையாடினால் ஸ்ரீ ஸ்வாமி அவற்றை தூக்கி வீசி எறிந்துவிட்டு, **"ஏ! வாழ்க்கையே போய்க்கொண்டிருக்கிறது!"** என்று கடிந்து கொள்வார். எவரேனும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அர்த்தமற்ற கதைகளை கூறினால், **"அதனால் உனக்கு என்ன பயன்!"** என்று கேட்பார். சேவகர்கள் எவரேனும் உயரமான இடத்தில்

அமர்ந்திருந்தால் அவர்களை கீழே அமருமாறு கூறுவார். எவருக்கேனும் ஏதாவது தெரிய வேண்டும் என்று எண்ணத்தோடு இருந்தால் அவர்களிடம், **"கற்றுக்கொண்டு செல்"** என்று கூறுவார். ஒருமுறை பாளப்பா ஒரு பக்தருடன் பேசிக்கொண்டிருந்தார். அதை கவனித்த ஸ்ரீ ஸ்வாமி, **"என்ன மாதர்சோத்! நீ அவனுடைய நிலைக்கு செல்ல வேண்டுமா?"** என்று கேட்டார். உடனே பாளப்பா தன் காதுகளை பிடித்துக் கொண்டு மன்னிப்புக் கேட்டார்.

ஒருமுறை இரு பெண்கள் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது ஒருத்தி, **"உனக்கு காசி விஸ்வேஸ்வரரை தரிசிக்க விருப்பம் இருக்கிறதா?"** என்று கேட்டாள். அதற்கு இன்னொருத்தி, **"காசிக்கு ஏன் செல்ல வேண்டும்? ஸ்ரீ ஸ்வாமி மஹராஜே காசி விஸ்வேஸ்வரர் தானே!"** என்று பதிலளித்தாள். இந்த உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் உரக்கமாக சிரித்துவிட்டு அந்த பெண்களிடம், **"உங்களுக்கு இவ்வளவு ஞானம் இருந்தால் நீங்கள் ரொட்டி மட்டும் தயாரித்துக் கொண்டிருக்க மாட்டீர்கள்"** என்று கூறினார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பக்தர்களுக்காகவே பிறவி எடுத்து வந்து, எப்போதும் பக்தர்களின் நலனுக்காகவே அனைத்து லீலைகளையும் நிகழ்த்திக் காட்டி நம் அனைவரையும் வழி நடத்திக் கொண்டிருக்கிறார். அதனால் அவரை கற்பகவிருட்சம், கருணைக்கடல் என்று கூறுவது மிகவும் பொருத்தமானது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 137

# ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் சேவகர்களுக்கு கூறும் அறிவுரைகள்

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்ரீராமர் கோவிலில் அமர்ந்திருந்தார். திடீரென இருட்டிக்கொண்டு மழை பொழியத் தொடங்கியது. உடனே மஹராஜ், **"பல்லக்கு கொண்டுவாருங்கள்"** என்று கூறினார். **"மஹராஜ், மழை பொழிகிறது. அனைவரும் நனைந்து விடுவார்கள்"** என்று சேவகர்கள்

அனைவரும் பதைபதைத்தனர். எதையும் பொருட்படுத்தாத ஸ்ரீ ஸ்வாமி மிகுதியான மழையில் பல்லக்கில் ஏறிக்கொண்டார். அனைவரும் சொட்டச் சொட்ட நனைந்தவாறு பல்லக்கை சுமந்து கொண்டு வந்தனர். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் வானத்தைப் பார்த்து, **"இந்திரன் மேகங்களுக்கும் மின்னலுக்கு நடுவே நடந்து செல்கிறான்"** என்று குழந்தை போல சிரித்துக் கொண்டே கூறினார். இதுதான் யோகிகளுக்கு உரித்தான பால உன்மத்த பிசாசு நிலை. அவர்களுக்கு தன் உணவு, உடை மற்றும் சுற்றுப்புறம் ஆகியவற்றில் எந்தவித கவனமோ நாட்டமோ இருக்காது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அன்று தன் நடவடிக்கைகளில் ஸ்ரீ தத்தாத்ரேயரின் பிரதான குணத்தை வெளிப்படுத்தி, தான் ஸ்ரீ தத்தாத்ரேயர்தான் என்பதை அனைவருக்கும் உணர்த்தினார்.

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி காஸ்-பாகில் அமர்ந்திருந்தபோது அவரைச் சுற்றி பலர் இருந்தனர். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அனைவரையும் பார்த்து, **"வாருங்கள், நான் உங்களுக்கு ஒரு சிறந்த மனிதரைக் காட்டுகிறேன்"** என்று கூறினார். அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிகளைத் தொடர்ந்து சென்றனர். அப்போது ஒரு புற்றுக்கு அருகே நின்றார். ஒரு பெரிய பாம்பு, உடல் முழுவதும் முடியுடன் அப்புற்றிலிருந்து வெளியே வந்தது. மஹராஜ் அதனருகே சென்று, **"இவர் ஒரு மிகச்சிறந்த மனிதர்"** என்று கூறினார். அனைவரும் அந்த நாகத்திற்கு நமஸ்காரம் செய்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகளோடு அந்த இடத்தை விட்டு கிளம்பினார்கள்.

சில சமயம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சில வரிகளை கூறிக்கொண்டிருப்பார். அவை,

**"குக்கிராமத்து குடியிருப்பு மற்றும் தீயவர்களுக்கு சேவை"**
**"தீய நட்பு அறிவை குறைக்கும்"**

போன்ற அறிவுரைகளை எப்போதும் கூறிக்கொண்டே இருப்பார்.

அதுமட்டுமல்லாமல் இன்னும் சில அறிவுரைகளை சூசகமாகவும் கூறுவார். அதை புரிந்து கொள்ளும் ஞானம் இருப்பவர்களால் மட்டுமே புரிந்து கொண்டு அதற்கேற்றாற்போல் தன்னை மாற்றிக்கொண்டு நடைமுறைப்படுத்த முடியும். அவ்வாறான அறிவுரைகளில் சில கெட்ட வார்த்தைகள் இருந்தாலும், புரிய வேண்டியவர்களுக்கு அதன் உண்மையான அர்த்தம் புரிந்துவிடும். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பேசுவது அந்த சமயத்தில் அனைவருக்கும் புரியாமல் இருந்தாலும், பின்னாட்களில் நடைபெறும்

நிகழ்ச்சிகள் அவ்வார்த்தைகளுக்கான உண்மையான அர்த்தத்தை அனைவருக்கும் புரிய வைத்தன.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 138

# பாண்டுரங்க பாபுஜி ஜாதவ்ராவ்

புனேயைச் சேர்ந்த பாண்டுரங்க பாபுஜி ஜாதவின் துரதிர்ஷ்டத்தினால் அவருடைய நான்கு மகன்களும் ஒன்றன்பின் ஒன்றாக இரண்டு மாதங்களில் இறந்து விட்டனர். அவர் தாள முடியாத துயரத்தில் இருந்தார். அவருடைய மனைவி மிகுந்த பக்தி நிறைந்தவள். அவள் ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய சரித்திரத்தை கேட்டுவிட்டு அவருடைய பரம பக்தையாக மாறிவிட்டாள். அவள் எப்போதும் ஸ்ரீ ஸ்வாமிகளின் புகைப்படத்தை வைத்துக் கொண்டு, அவருடைய நாமத்தையே எப்போதும் ஜபித்துக் கொண்டு, அவர் நினைவிலேயே தவத்தில் இருந்தாள். எவரேனும் அவளுடைய தவத்தை கலைத்தால் அவர்களை கடுமையாகக் கோபித்துக் கொள்வாள்.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி அவளுடைய கனவில் தோன்றி, **"நான் உனக்கு மகன் அளித்தால் நீ எனக்கு என்ன தருவாய்?"** என்று கேட்டார். அதற்கு அந்த பெண், **"ஸ்வாமி, அவனை உங்கள் பாதத்தில் போட்டுவிட்டு பிரமச்சாரி ஆக்குவேன். அக்கல்கோட் வந்து 200 நபர்களுக்கு அன்னதானம் அளிப்பேன்"** என்று கூறினாள். அந்தப் பெண் சில நாட்களில் கருவுற்றாள். அவள் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. ஏழு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் அந்த பெண்ணுக்கு மாதவிடாய் ஏற்பட்டது. அவளுக்கு பயம் அதிகரித்தது. அவள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"ஸ்வாமி, என்னை ஏமாற்றி விடாதீர்கள். என்னை காப்பற்றுங்கள். என் பெற்றோர் மற்றும் உறவினர்கள் அனைவருமே நீங்கள்தான். உங்களை விட்டால் எனக்கு வேறு கதியில்லை"** என்று பிரார்த்தனை செய்து கொண்டாள். அன்று இரவு முழுவதும், **"கொஞ்சம்கூட பயம் வேண்டாம்"** என்ற வார்த்தைகள் அவள் காதுகளில் ஒலித்துக் கொண்டே இருந்தது.

ஒன்பது மாதங்களுக்குப் பிறகு சித்திரை மாதத்தில், ஒரு அழகான ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். சில நாட்களுக்குப் பிறகு அவளுக்குத் தோன்றிய கனவில் ஸ்ரீ ஸ்வாமி வாழைமர தோரண அலங்காரத்திற்கு நடுவே அமர்ந்திருந்தார். இருவர் அவருக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தனர். அப்போது அவர் இந்தப் பெண்ணைப் பார்த்து, **"மகன்தான் பிறந்துவிட்டானே! எப்போது உன் பிரார்த்தனையை நிறைவேற்றப் போகிறாய்"** என்று கேட்டார். சில நாட்களில் அவர்கள் தங்கள் பிரார்த்தனையை நிறைவேற்றினார்கள். தங்கள் வாழ்நாள் முழுவதும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்துகொண்டு அவருடைய பரம பக்தர்களாக மனமகிழ்ச்சியோடு இருந்தார்கள்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 139

# சோளப்பாவுக்கு அளிக்கப்பட்ட ரூபாய் 125/-

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட்டுக்கு வந்த நாளில் இருந்து சோளப்பா அவருக்கு அனைத்து சேவைகளையும் செய்து கொண்டிருந்தார். ஒருவரின் ஆன்மாவை பந்தத்தில் கட்டிப்போட பிரம்மா பெண் ஆசையையும், பணத்தாசையையும் உருவாக்கினான். நாளடைவில் சோளப்பா பணத்தாசை பிடித்தவராகவும், தான் செய்யும் சேவைகளில் அலட்சியம் செய்யவும் தொடங்கினார். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி தனக்கு அருகில் இருந்த ஒரு துணியை எடுத்துக் கொண்டு **"அல்லாஹ்"** என்று கூறிக்கொண்டே முடிச்சுகளை போட்டுக் கொண்டிருந்தார். அப்போது வந்த பல பக்தர்கள் ஒன்று, இரண்டு, ஐந்து என ரூபாய்களை தக்ஷிணையாக ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு கொடுத்துக் கொண்டே இருந்தனர். மொத்தம் 125/- ரூபாய் சேர்ந்தவுடன் ஸ்ரீ ஸ்வாமி சோளப்பாவிடம், **"சோளைய்யா, உன் கடன் தீர்ந்தது விட்டது"** என்று கூறினார். சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்யத் தொடங்கிய நாளில் இருந்து அன்று வரை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அளிக்கப்பட்ட தக்ஷிணை மற்றும் பொருட்களாக 65,000 ரூபாய் சம்பாத்திருந்தார். அந்த 65000 ரூபாயில் 125 ரூபாய் மட்டும் குறைவாக

இருந்தது. அதை ஶ்ரீ ஸ்வாமிகள் அன்று கொடுத்து முடித்தார். அது என்ன கணக்கு என்பது ஶ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மட்டுமே அறிந்த ரகசியம்!

சில நாட்களுக்குப் பிறகு சர்காரிடமிருந்து ஒரு ஆணை பிறப்பிக்கப்பட்டது. அதில், **"கணக்கு வழக்குகள் மற்றும் நிர்வாகத்தை கவனிக்க குமாஸ்தாவும், இரண்டு நீதிபதிகளும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்"** என்று ஆணையிடப்பட்டிருந்தது. அன்றிலிருந்து சோளப்பாவும் சுந்தராபாயியும் மற்ற சேவகர்கள் போல ஆனார்கள்.

இறைவன் அனைவருக்கும் சமமானவன். அவனுடைய விருப்பத்தின் பேரில்தான் அனைத்து நிகழ்ச்சிகளும் நடைபெறுகின்றன. நாம் அனைவரும் அவருடைய கையில் ஒரு விளையாட்டு பொம்மை என்பதை உணராமல் அகங்காரத்தில் கட்டுண்டு இருக்கின்றோம். அகங்காரத்தை ஒதுக்கி வைத்துவிட்டு முழு சரணாகதியுடன் ஶ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்தால் இந்த கர்மப் பிடியிலிருந்து விடுபட்டு மோக்ஷம் என்னும் விடுதலையைப் பெறலாம். ஶ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதகமலங்களில் சரணடைந்து நாம் மோக்ஷ கதியை அருள அவரிடம் பிரார்த்தனை செய்வோமாக!

**ஜய ஜய ஶ்ரீ ஸ்வாமி சமர்த்!!**



## அத்தியாயம் 140

# சந்தேகங்களை தீர்த்து வைத்தல்

### சீதாராம்பந்த் நேனே

கரோடியைச் சேர்ந்த சீதாராம்பந்த் ஸ்ரீராமசந்திர மூர்த்தியை தரிசனம் செய்யும் எண்ணத்துடன் கடுமையான தவத்தில் இருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய புகழைக் கேள்விப்பட்டு அக்கல்கோட் வந்தடைந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்தவுடனேயே **"நான் இன்று ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியை தரிசனம் செய்துவிட்டேன்"** என்கிற திருப்தி அவருக்கு ஏற்பட்டது. தினமும் பிக்ஷை எடுத்துக் கொண்டு, அங்கு சில நாட்கள் தங்கியிருந்து ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் செய்யலாம் என்று முடிவு செய்து கொண்டார். பிக்ஷையாக எடுத்த உணவை சாப்பிட்ட பிறகு ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னால் அமர்ந்தவாறு நீண்ட நேரத்திற்கு ஜெபமாலையை வைத்துக் கொண்டு ஜெபம் செய்து கொண்டிருப்பார். எவருடனும் பேசுவதை அவர் விரும்பமாட்டார்.

சில நாட்களுக்குப் பிறகு ஒரு மதிய நேரத்தில் தியானத்தின் போது, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவருக்கு ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியாக தரிசனம் அளித்துவிட்டு அவருக்கு திருப்தி அளிக்கும் வகையில் அனைத்து சந்தேகங்களையும் தீர்த்து வைத்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு அவர் தியானம் கலைந்தவுடன், ஸ்ரீ ஸ்வாமிகள் அளித்த அனைத்து அறிவுரைகளும் அவருக்கு தெளிவாக நினைவில் இருந்தது. அவர் மிகுந்த மனநிறைவுடன் அங்கு சில நாட்கள் தங்கியிருந்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்த பின்னர் தன் சொந்த ஊருக்குச் சென்றார்.

### ஸ்ரீ காசிக்கார் ஸ்வாமி

காசியைச் சேர்ந்த ஒரு பண்டிதர் மிகச் சிறந்த ஞானி. அவர் தன்னலமற்றவராகவும் கூர்மையான அறிவுடனும் விளங்கினார். அவருக்கு ஐந்து அல்லது ஆறு மொழிகளில் மிகுந்த புலமை இருந்தது. அவர் வாமன்புவாவைப் போலவே குள்ளமான உருவத்துடன் பயில்வான் போல ஆரோக்கியமான உடலமைப்பைக் கொண்டிருந்தார். அவர் ஜெகன்நாத்

க்ஷேத்திரத்தில் சந்நியாசம் பெற்றுக் கொண்டார். அவருடைய அறிவு மிகுதியால், யோகத்தில் அவருக்கு பல சந்தேகங்கள் இருந்தன. அவற்றை நிவர்த்தி செய்து கொள்வதற்காக பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு அலைந்து கொண்டிருந்தார். ஆனால் எவராலும் அவருடைய சந்தேகங்களை நிவர்த்தி செய்ய முடியவில்லை. அவர் ராமேஸ்வரத்துக்கு யாத்திரை சென்ற போது அவர் மலபாரில் தங்கியிருந்தார். ஒருநாள் இரவு நேரத்தில், **"அக்கல்கோட் செல்"** என்கிற உத்தரவு வந்தது. அந்த இடத்தைப் பற்றி விசாரித்துக் கொண்டு உடனே நடைபயணமாக அக்கல்கோட் பயணித்தார்.

சக வருடம் *1799* ல் (கி.பி.*1877*) தை மாதத்தில் அவர் அக்கல்கோட் வந்தடைந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தார். அப்போது அவர் மனதில் அன்பு பெருக்கெடுத்து, அவர் கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தோடியது. சில நிமிடங்கள் வார்த்தைகளற்று, ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துகொண்டே இருந்தார். பின்னர் அவர் பாதங்களில் நமஸ்கரித்துவிட்டு அமைதியாக அமர்ந்து கொண்டார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளுடன் ஒரு மாத காலம் தங்கியிருந்தார். அவரிடம் ஒரு கமண்டலம், *2* கௌபீனங்கள் மற்றும் ஒரு கஷாயம் மட்டுமே இருந்தன.

மைந்தர்க்கி என்கிற இடத்தில் நாத் துறவிகளுடைய ஆசிரமம் ஒன்றில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தங்கியிருந்தார். அப்போது அவருக்கு சேவைகள் செய்ய *10* முதல் *20* சேவகர்கள் இருந்தனர். இந்த காசிகார் ஸ்வாமி குளித்துவிட்டு தன் தினசரி சடங்குகளை செய்து முடித்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக அவர் முன்னால் வந்து நின்றார். அப்போது அவருக்கு என்ன நேர்ந்ததோ தெரியவில்லை, அவர் *5* முதல் *10* முறை நமஸ்கரித்துவிட்டு எழுந்து நின்றார். அவர் கண்களிலிருந்து கண்ணீர் பிரவாகம் எடுத்தது. அவர் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளை பார்த்துக்கொண்டே விசும்பிக் கொண்டிருந்தார். என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பது அவர்கள் இருவர் மட்டுமே அறிந்திருந்தனர். இருவரும் ஒரு வார்த்தை கூட பேசவில்லை! காசிகார் ஸ்வாமி சில நிமிடங்களுக்கு அமைதியாக அமர்ந்திருந்தார். அடுத்தநாள் அவர் தத்தாத்ரேய புவா புராணிக்கிடம் தன்னுடைய சந்தேகங்கள் அனைத்தும் திருப்தி அளிக்கும் வகையில் நிவர்த்தி செய்யப்பட்டுவிட்டன என்று கூறினார். இது புராணிக் புவாவுக்கு மிகுந்த ஆச்சரியத்தை அளித்தது. அவர் சில நாட்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடன் தங்கியிருந்துவிட்டு விடைபெற்றுச் சென்றார்.

காசிக்கார் ஸ்வாமி இதுநாள் வரையில் தன் தவத்தில் அடைந்த உன்னத நிலையை அன்று ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னிலையில் உணர்ந்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகளே அவரை தன்னிடம் அழைத்துக்கொண்டு அவருக்கு யோகப்பாதையில் முன்னேற்றத்தை அருளியிருக்கிறார் என்பது நமக்கு தெளிவாகிறது. இந்த கருணை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரைத் தவிர வேறு எவருக்கேனும் உண்டோ! அவரவர்களுடைய பக்தி மற்றும் தேவைகளுக்கு ஏற்றாற்போல் ஸ்ரீ ஸ்வாமி அவர்களை வழிநடத்தி கொண்டு செல்கிறார் என்பதை இந்த நிகழ்ச்சி தெள்ளத்தெளிவாக எடுத்துரைக்கிறது அல்லவா?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 141

# பரோடா மன்னரின் ஆசை

ஒருநாள் பரோடாவின் மன்னரான மல்ஹர்ராவ் கைக்வாட் தன் அரசவையில் பின்வருமாறு அறிவித்தார். **“எவர் ஒருவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை பரோடாவுக்கு அழைத்து வரத் தயாராக இருக்கிறாரோ அவருக்கு மிகுதியான வெகுமதிகள் அளிக்கப்படும். அந்த முயற்சிக்குத் தேவையான அனைத்து செலவுகளையும் செய்ய தயாராக இருக்கிறேன்”** என்று அறிவித்தார்.

இந்த சவாலை தாத்யா சாஹெப் என்கிற அமைச்சர் ஏற்றுக்கொண்டு செயலில் இறங்கினார். அரசன் மிகவும் மகிழ்ச்சி அடைந்து அவருடைய பயணத்துக்குத் தேவையான பணத்தை விட மிகுதியாக பணம் அளித்து அக்கல்கோட்டுக்கு அனுப்பி வைத்தார். அக்கல்கோட் வந்தடைந்ததும் தாத்யா சாஹேப் பணத்தை வாரி இறைத்தார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய சேவகர்களுக்கு உணவு, உடை, வெகுமதி என அள்ளிக் கொடுத்து அவர்களை ஸ்ரீ ஸ்வாமிகளை தன்னோடு பரோடா வருவதற்கு சம்மதிக்க வைக்குமாறு கூறியனுப்பினார். அதுமட்டுமல்லாமல் ஸ்ரீ ஸ்வாமிகளை பரோடாவுக்கு வருமாறு அழைத்தபோது, **“ஆயிரம் பிராமணர்களுக்கு அன்னதானம் கொடு. பிராமணர்களுக்கு தக்ஷிணை கொடு. ஏழைகளுக்கு துணிகள் தானமாகக் கொடு”** என்று பலவாறு கூறி

அனுப்பிவிடுவார். இவ்வாறு தாத்யா சாஹேப் எப்படியாவது ஸ்ரீ ஸ்வாமிகளை சம்மதிக்க வைத்து விடலாம் என்கிற எண்ணத்தில் நான்கு மாதங்கள் பணத்தை வாரி இறைத்துக் கொண்டிருந்தார், இருப்பினும் எந்தவித பலனும் இல்லை.

கடைசி முயற்சியாக தாத்யா சோளப்பாவிடம் சென்று, **"நீ எப்படியாவது ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை சம்மதிக்க வைத்து பரோடாவுக்கு அழைத்துவந்தால், நான் மன்னரிடம் பேசி உனக்கு 10,000 ரூபாய் மதிப்புள்ள ஜாகிர்(அரசாங்கத்திற்கு நிலத்திற்காகவோ அல்லது வேறு எதற்காவது மக்கள் செலுத்தும் வரிப்பணம்) வாங்கித் தருகிறேன்"** என்று கூறி ஆசை காட்டினார். அதில் மயங்கிய சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று, **"ஸ்வாமி, நீங்கள் பரோடா வர சம்மதித்தால் எனக்கு 10,000 ரூபாய் ஜாகிர் கிடைக்கும்"** என்று கூறினார். இதைக் கேட்டு வயிறு குலுங்க சிரித்த ஸ்ரீ ஸ்வாமி, **"ஓஹோ! ஆனால் அந்த மன்னனுக்கு பக்தி இல்லையே!"** என்று கூறியவுடன் சோளப்பா தன் நம்பிக்கையை இழந்தார்.

பின்னர் தாத்யா தன் கடைசி முயற்சியாக ஒரு திட்டம் தீட்டினார். எப்படியாவது நயவஞ்சகமாக ஸ்ரீ ஸ்வாமிகளை பல்லக்கில் உட்கார வைத்து கடப்காவுக்கு அழைத்து வந்துவிட்டால், அங்கிருக்கும் ரயிலில் ஸ்ரீ ஸ்வாமிகளை ஏற்றி பரோடாவுக்கு அழைத்து சென்று விடலாம் என்பதே அந்த திட்டம். அனைவரும் இந்த யோசனைக்கு ஒத்துழைத்தனர். ஒருநாள் காலை 10 மணிக்கு சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று, **"ஸ்வாமி, வெளியில் சென்று கொஞ்சம் சுத்தமான காத்து வாங்கி வரலாம்"** என்று அழைத்ததற்கு ஸ்ரீ ஸ்வாமிகள், **"இப்போது வேண்டாம்"** என்று கூறிவிட்டார். சுந்தராபாயி வந்து, **"அரண்மனைக்கு சென்று வரலாம்"** என்று அழைத்தாள். அதற்கு, **"நாளை கண்டிப்பாக செல்லலாம்"** என்று பதிலளித்தார். பாளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"காஸ்-பாக் செல்லலாம்"** என்று அழைத்ததற்கு, **"குளிர் வந்ததும் போகலாம்"** என்று கூறிவிட்டார். இதே போல நான்கு அல்லது ஐந்து நாட்கள் சென்றன. யார் வெளியே செல்ல அழைத்தாலும் அவர்களுக்கு ஏதாவது பதில் கூறி மஹராஜ் அவர்கள் வாயை அடைத்து விடுவார். அனைவரும் களைத்து விட்டனர்.

தாத்யா சாஹேப் 10-20 நபர்களுக்கு வேஷ்டி, துண்டு மற்றும் பணம் கொடுத்து அவர்களை தன் கையில் போட்டு வைத்திருந்தார். ஒரு நாள் திடீரென ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் பல்லக்கில் ஏறி அமர்ந்து கொண்டார். அவர்கள் அனைவரும் மிகுந்த சந்தோஷத்துடன் பல்லக்கை கடப்காவ் நோக்கி தூக்கிச் சென்றனர். அவர்களின் திட்டம் பற்றி ஸ்ரீ தத்தரின் அவதாரமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்குத் தெரியாதா என்ன? ஆனால் எதுவும் தெரியாதது போல் அமைதியாக இருந்தார். அவர்கள் திட்டமிட்டதன் படி 2 மைல்களுக்கு





அப்பால் இருக்கும் அம்மச்சிவாடியை சென்றடைந்தனர். அப்போது மேனா தூக்கிகள் பல்லக்கு மிகவும் லேசாக இருப்பதாகக் கூறினார்கள். ஸ்ரீ ஸ்வாமிகள் உள்ளே இருக்கிறாரா என்பதைப் சோதிக்க பல்லக்கை இறக்கி வைத்தனர். அவர்களுக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை அங்கு காணவில்லை! ஸ்ரீ ஸ்வாமியின் உண்மையான பக்தர்கள் மிகவும் வருத்தம் அடைந்தனர். அனைவரும் அவரைத் தேடிக் கொண்டு அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருந்தனர். ஆனால் எந்தவித பயனும் இல்லை!

இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு ஒரு தபால்காரர் ஜெயூர் என்னும் ஊர் வழியாக அக்கல்கோட் வந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் சேவகர்களைப் பார்த்து, **“நீங்கள் அனைவரும் இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? ஸ்வாமிகள் ஜெயூர் செல்லும் வழியில் ஒரு கல்லின் மேல் அமர்ந்திருக்கிறார். நான் அவரிடம் ‘அக்கல்கோட் வருகிறீர்களா?’ என்று கேட்டதற்கு ‘முடியாது’ என்று கூறிவிட்டார். உடனே நான் உங்களைப் பார்த்து இந்த விஷயத்தை கூறலாம் என்று ஓடோடி வந்தேன்”** என்று தெரிவித்தார். இதைக் கேட்டவுடன் அனைவரும் விரைவாக ஸ்ரீ ஸ்வாமிகள் அமர்ந்திருக்கும் இடத்தை நோக்கி ஓடினர். அவர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை நமஸ்கரித்துவிட்டு, **“ஸ்வாமி, நாங்கள் பணத்தாசையால் புத்தி தடுமாறி விட்டோம். உங்கள் சக்தி என்ன என்பது புரியாமல் நடந்து கொண்டோம். தயவுசெய்து எங்களை மன்னித்து விடுங்கள்”** என்று கதறினார்கள். ஒருவர் இன்னொருவரின் காதுகளை பிடித்துக்கொண்டு தோப்புக்கரணம் போட்டனர். சிலர் ஒருவரை ஒருவர் மாறி மாறி கன்னத்தில் அறைந்து கொண்டனர். இவற்றைப் பார்த்து ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் வயிறு குலுங்கச் சிரித்தார். சண்டையிட்டுக் கொண்ட சிறு குழந்தைகள் போல ஒன்று சேர்ந்து கொண்டு அக்கல்கோட் வந்தடைந்தனர். தாத்யா சாஹேப் பல்லாயிரம் ரூபாய் செலவழித்தும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை அக்கல்கோட்டை விட்டு நகர்த்த முடியவில்லை.

இருப்பினும் மல்ஹர்ராவ் தன் முயற்சியை கைவிடவில்லை. அவர் யஷ்வந்த்ராவ் என்னும் மராட்டியத் தலைவர் ஒருவரை மிகுதியான செல்வத்தை கொடுத்து அக்கல்கோட் அனுப்பி வைத்தார். அவரும் தாத்யா சாஹேபின் வழியையே பின்பற்றினார். மஹராஜால் இந்த தொந்தரவை தாங்கிக் கொள்ள முடியவில்லை. ஒருநாள் யஷ்வந்த் ராவ் தன் கைகளை கூப்பிக்கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகளை பரோடாவுக்கு வருமாறு அழைத்தார். மிகுந்த கோபமடைந்த ஸ்ரீ ஸ்வாமி அவரிடம், **“யார் அங்கே? இவனைச் சங்கிலியால் கட்டி போடுங்கள்”** என்று மூன்று முறை மீண்டும் மீண்டும் கூறிக் கொண்டே இருந்தார். இவ்வாறு ஸ்ரீ ஸ்வாமி கூறி இரண்டு அல்லது மூன்று நாட்களுக்குப் பிறகு யஷ்வந்த்

ராவுக்கு ஒரு கடிதம் வந்தது. உடனே அவர் பரோடாவுக்கு விரைந்தார். விஷம் வைத்ததாக மல்ஹர் ராவ், யஷ்வந்த் ராவ் மற்றும் அவர்களுடைய சில கூட்டாளிகள் கைது செய்யப்பட்டு மதராஸ் சிறையில் அடைக்கப்பட்டனர். ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தை பலித்துவிட்டது!

நெருப்புடன் விளையாடினால் என்னவாகும் என்பதை இந்த நிகழ்ச்சி தெளிவுபடுத்தி விட்டது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஆணைகளை பின்பற்றாவிட்டால் அனைவரும் மிகுந்த கஷ்டத்தில் சிக்கித் தவிக்க நேரிடும். அதே அவர் கூறுவதை எந்தவித மறு யோசனையும் செய்யாமல் ஏற்றுக் கொண்டு பின்பற்றினால் அவர்களுடைய வாழ்க்கை அற்புதமான ஒன்றாக மாறிவிடும் என்பதில் எந்தவித ஐயமும் இல்லை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 142

# சுந்தராபாயியின் ஆட்சி

ஏற்கனவே சுந்தராபாயியின் குணங்களைப் பற்றி முந்தைய ஒரு அத்தியாயத்தில் விரிவாக விளக்கப்பட்டிருந்தாலும், இந்த அத்தியாயத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பாதுகாப்புக் கரத்தை எப்படி அவளிடமிருந்து விலக்கிக் கொண்டார் என்பதை விரிவாகப் பார்க்கலாம். ஒருவரின் நற்கருமங்கள் மீதம் இருக்கும்வரை மட்டுமே அவர்கள் அளவுக்கதிகமான தீமை செய்தாலும் சற்குருவின் காக்கும் கரங்கள் அவர்களை தொடர்ந்து பாதுகாத்துக் கொண்டிருக்கும். நற்கருமங்கள் முடிந்தவுடன் அவர்களுக்கு ஏற்படும் பாதிப்பின் அளவு தாங்க முடியாதபடி இருக்கும் என்பதை பக்தர்கள் உணர்ந்து செயல்படுவதற்காகவே, இந்த அத்தியாயத்தில் சுந்தராபாயிக்கு ஏற்பட்ட அனுபவங்கள் பற்றி விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

சுந்தராபாயிக்கும் புஜங்கா என்பவருக்கும் ஏற்பட்ட கைகலப்பால் மிகுந்த துன்பத்தை அனுபவித்த சுந்தராபாயி தன் உயிரை மாய்த்துக் கொள்ள ஒரு கிணற்றை நோக்கி ஓடினாள். அவள் கிணற்றுக்கு அருகில் அமர்ந்து

கொண்டு ஒவென கதறி அழுது கொண்டிருந்தாள். அப்போது ஸ்ரீ ஸ்வாமி தன் சேவகர்களை அனுப்பி அவளை அழைத்து வருமாறு கூறியனுப்பினார். அனைவரிடமும் தான் மீண்டும் வர விரும்பவில்லை என்று கூறி அனுப்பிவிட்டாள். கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகளே அந்த கிணற்றடிக்குச் சென்று அவளுடைய கையைப் பிடித்து இழுத்து வந்தார். அவள் அழுதுகொண்டே ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"ஸ்வாமி, நீங்களே கூறுங்கள்! ஒரு பிராமணப் பெண்ணைப் பார்த்து இப்படிப்பட்ட கீழ்த்தரமான வார்த்தைகளைக் கூறுவது ஒரு வியாபாரிக்கு அழகா? உங்களுடைய தர்பாரில் நியாயத்திற்கு இடமே இல்லை"** என்றாள். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் சிரித்துக்கொண்டே, **"ஓஹோ! அப்படியா! அப்படி என்ன அவன் கீழ்த்தரமான வார்த்தைகளை உபயோகித்து விட்டான்?"** என்று கேட்டவுடன் சுந்தராபாயியின் கோபம் மேலும் அதிகரித்தது.

மழை அனைத்து இடங்களிலும் பாரபட்சம் இல்லாமல் பொழிகிறது. ஆனால் அவை மேடான இடங்களில் தங்காமல் பள்ளமான இடங்களில் மட்டுமே தங்கும். அதேபோல ஒருவர் நாம் கூறும் அறிவுரைகளை ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவத்தில் இருந்தால் மட்டுமே அவை அவருக்கு நல்ல பலனை அளிக்கும், இல்லையேல் வீண்தான்.

சுந்தராபாயி சில நாட்கள் உபவாசங்கள் மேற்கொள்வாள். அப்படிபட்ட நாட்களில் நாள் முழுவதும் எதுவுமே உண்ணாமல் இருப்பாள். அந்நாட்களில் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுக்கு நைவேத்தியமாக கிடைக்கும் இனிப்புகளை எடுத்து வைத்துக்கொண்டு இரவு நேரத்தில் அவற்றை உண்டு விடுவாள். இப்படி செய்தால் வைராக்கியம் ஏற்படுமா என்ன? இதைத்தான் பலர் இன்று பக்தி என்கிற பேரில் பலரை ஏமாற்றிக் கொண்டு தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள். கடவுள் இதுபோன்ற பகட்டான பக்திக்கு சந்தோஷம் அடைவதில்லை. அவர் உண்மையான அன்பு மற்றும் பக்திக்குத்தான் அடி பணிகிறார்.

சுந்தராபாயின் பூர்வ ஜென்ம நற்கருமங்களின் பலனால் அவள் செய்யும் அனைத்து பகட்டான விஷயங்களையும் ஸ்ரீ ஸ்வாமி பொறுத்துக் கொண்டிருந்தார். அவர் பொறுமைக்கு ஒரு முடிவு வரத் தொடங்கியது!

சுந்தராபாயி பாளப்பாவைப் பற்றி எப்போதும் ஏதாவது குறை கூறிக்கொண்டே இருப்பாள். அப்படி ஒருநாள் அவர் ஜெபம் செய்வது

பற்றியும், அவர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்யும் போது தனக்கு அவர் தொல்லைகள் அளிப்பதாக அவள் மஹாராணியிடம் புகார் கூறினாள். உடனே மஹாராணி பாளப்பாவிடம் வந்து ஸ்ரீ ஸ்வாமிகளின் தரிசனத்துக்கு அவர் வரக்கூடாது என்று ஆணையிட்டாள். மிகுந்த வேதனை அடைந்த பாளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து, **"ஸ்வாமி, உங்களுக்கு சேவைகள் செய்வதற்காக என் மனைவி மற்றும் குழந்தைகளைப் பிரிந்து இங்கு வந்து தங்கியிருக்கிறேன். உங்களை தரிசிக்கக் கூட அனுமதியில்லை என்றால் நான் என்ன செய்வது? என் விதியை நொந்து கொள்கிறேன்"** என்று தூரமாக நின்று கொண்டு அழுதவாறே கூறினார். **"நான் உன்னை கண்டிப்பாக கவனித்துக் கொள்வேன்"** என்று மீண்டும் மீண்டும் மூன்று முறை ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் கூறினார்.

இந்த நிகழ்ச்சி நடைபெற்று சில நாட்களிலேயே சுந்தராபாயியின் கால்களில் அடிபட்டு, அவளுடைய வேலைகளை செய்வதற்கே மற்றவர்களின் உதவியை நாட வேண்டியிருந்தது. அதனால் பாளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தார். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி பாளப்பாவிடம், **"உன்னிடம் என்னவெல்லாம் இருக்கிறதோ அவை அனைத்தையும் கொடுத்துவிட்டுச் செல்"** என்று கூறினார். பாளப்பாவிடம் 25/- ரூபாய் மதிப்புள்ள ஒரு காதணி, ஒரு போர்வை, வேஷ்டி, ஒரு பஞ்சபாத்திரம் ஆகியவைகள் இருந்தன. அவற்றை மூட்டை கட்டி ஸ்ரீ ஸ்வாமிகளின் முன்னால் வைத்து விட்டு நமஸ்கரித்தார். உடனே சுந்தராபாயி அவற்றை எடுத்துக் கொண்டு, **"மஹராஜ், பாளப்பாவுக்கு போர்வையை மட்டுமாவது கொடுத்து விடுங்கள்!"** என்று கூறினாள். **"அவனுக்கு எதற்கு உன்னுடைய போர்வை! அவனுக்கு சால்வைகளே கிடைக்கும்"** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறினார்.

ஒரு நாள் மதிய நேரத்தில் சுந்தராபாயி பேரீச்சம்பழங்களை அரைத்துக் கொண்டிருந்தாள். அதைப் பார்த்து ஸ்ரீ ஸ்வாமி, **"பேரீச்சம்பழங்களை அரைக்காதே! பின்னாட்களில் அவற்றை நீ லிம்பியாவிடம்தான்(ஒரு சேவகரின் பெயர்) கேட்க நேரிடும்"** என்று கூறினார். ஒருநாள் பாவடேகர் புராணிக் வேலைப்பாடுகள் செய்த போர்வை ஒன்றை வாங்கி வந்து அதை சுந்தராபாயியிடம் கொடுத்து, ஸ்ரீ ஸ்வாமிகளின் மீது போர்த்தி விடுமாறு கூறினார். அதை ஸ்ரீ ஸ்வாமிகளின் உடலின் மீது போட்டுவிட்டு மீண்டும் அதை எடுத்து தன் மீது சுந்தராபாயி போட்டுக் கொண்டாள். மீண்டும் எடுத்து ஸ்ரீ ஸ்வாமிகள் மீது போட்டாள். **"உனக்கு இதற்கு மேல் போர்வை எல்லாம் கிடைக்காது. இப்போதே போர்த்திக் கொள்"** என்று ஸ்ரீ ஸ்வாமி




கூறினார். இந்த குறிப்புகள் மூலம் சுந்தராபாயியின் ஆட்டம் விரைவில் அடங்கப் போகிறது என்று ஸ்ரீ ஸ்வாமிகள் உணர்த்தினார். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி அரண்மனையில் இருந்தபோது மஹாராணியிடம், **"நான் இதுநாள்வரை சுந்தராபாயியை பாதுகாத்து விட்டேன். இனி அவளை நீங்கள்தான் பாதுகாக்க வேண்டும்"** என்று கூறினார். அதன் உண்மையான அர்த்தம் புரியாமல் மஹாராணி சம்மதித்தாள். இதேபோல் ஒவ்வொரு முறையும் இனிப்புகளோ பழங்களோ கிடைக்கும்போது ஸ்ரீ ஸ்வாமிகள் சுந்தராபாயியிடம், **"இப்போதே சாப்பிட்டுக் கொள். பின்னர் உனக்கு கிடைக்காது"** என்று கூறிக்கொண்டிருந்தார். அவர் கூறும் வார்த்தைகளுக்கு உண்மையான அர்த்தம் புரிந்துவிட்டால் அனைவரும் ஏதும் அனுபவிக்க வேண்டியதில்லையே!

சுந்தராபாயி செய்யும் தொல்லைகள் பற்றி சேவகர்கள் பலர் மாம்லத்தார் மற்றும் மேலாளர்களிடம் புகார் அளித்தனர். அவளுக்கு மஹாராணியின் ஆதரவு இருந்தமையால் அவர்களால் ஏதும் செய்ய முடியவில்லை. பின்னர் ஆட்சியாளரிடம் புகார் அளிக்கப்பட்ட பின், அவளை அங்கிருந்து அப்புறப்படுத்துமாறு ஆணை பிறப்பிக்கப்பட்டது. நானாசாஹேப் பார்வே என்கிற அதிகாரிக்கு அந்த பணி நியமிக்கப்பட்டிருந்தது. சுந்தராபாயி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அன்பை அதீதமாக பெற்றிருந்தமையால், அந்த ஆணையை செயல்படுத்த அவருக்கு தயக்கமாக இருந்தது. ஒருநாள் தயக்கத்துடன் அவர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை தரிசனம் செய்வதற்காக சென்றபோது அவர், **"என்ன? உனக்கு இடப்பட்ட ஆணையை இப்படித்தான் செயல்படுத்துவாயா?"** என்று கேட்டவுடன் அவர் நிம்மதி பெருமூச்சு விட்டார்.

அடுத்தநாளே ஒரு காவலதிகாரியை அனுப்பி சுந்தராபாயியை ஸ்ரீ ஸ்வாமி மஹாராஜிடமிருந்து பிரித்து விடுமாறு கூறினார். அந்த காவலதிகாரி ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு சுந்தராபாயியிடம் சென்று, **"இப்போதுவரை நாங்கள் உங்களை தாயைப் போல பாவித்து மரியாதை செலுத்தி வந்தோம். சர்க்காரின் ஆணைப்படி இனி நீங்கள் மற்றவர்களை போல் ஸ்ரீ ஸ்வாமிகளை தூரத்திலிருந்து தரிசனம் செய்துவிட்டு சென்றுவிட வேண்டும். இனி அவருடன் நீங்கள் தங்கியிருக்கக் கூடாது"** என்று கூறினார். காவலதிகாரி கேலி செய்கிறார் என்று எண்ணிக்கொண்டு சுந்தராபாயி பலமாக சிரித்தாள். பின்னர்தான் அது உண்மை என்று தெரிந்து கொண்டபின் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் தன்னை விட்டுவிடச் சொல்லுமாறு பணிந்தாள். ஆனால் ஸ்ரீ ஸ்வாமிகளோ காவலதிகாரியைப் பார்த்து, **"என்ன பார்த்துக் கொண்டிருக்கிறாய்?**




**அவளை வெளியே அனுப்பு!"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் மனமுடைந்த சுந்தராபாயி, **"நான் என் தலையை கல்லில் முட்டிக்கொண்டு இறந்து விடுகிறேன்"** என்று மிரட்டிக் கொண்டே அழுது புலம்பினாள். உடனே ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதங்களைப் பற்றிக்கொண்டு, **"மஹராஜ், என்னை சிறு பிள்ளை போல வளர்த்தீர்களே! எனக்கு இப்படி நடக்கும்போது நீங்கள் எதுவுமே கூறமாட்டீர்களா?"** என்று கெஞ்சினாள். எதையுமே கண்டுகொள்ளாத ஸ்ரீ ஸ்வாமிகள் காவலதிகாரியைப் பார்த்து, **"இன்னும் என்ன பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்?"** என்று கூறியவுடன் அவளை பலமாக வெளியே இழுத்தனர். **"நீங்கள் தலையை முட்டிக்கொண்டு தற்கொலைக்கு முயற்சி செய்தால், உங்களை கைது செய்ய நேரிடும்"** என்று காவலதிகாரி அவளை எச்சரித்தார்.

சுந்தராபாயியின் வீட்டிலிருந்த புடவைகள், தானியங்கள், எண்ணெய், போர்வைகள், செருப்புகள், பானைகள் போன்ற பொருட்கள் அனைத்தையும் காவலர்கள் கைப்பற்றினர். இனிப்புகள் அனைத்தையும் தூளாக்கி தூக்கியெறிந்தனர். அவளுடைய வீட்டை பூட்டி கையகப் படுத்தினார்கள். பின்னர் அங்கிருந்த பொருட்கள் அனைத்தையும் ஏலத்தில் விட்டு, கிடைத்த பணம் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் கொடுக்கப்பட்டது. சுந்தராபாயிக்கு கற்பனை செய்துகூட பார்க்க முடியாத துன்பங்கள் நேர்ந்தன.

ஒரே நொடியில் ஒரு அரசன் ஆண்டியானான் என்று கேள்விப்பட்டிருப்போம், ஆனால் அதை அனைவரும் அன்று நேரில் கண்டனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் எவ்வளவுதான் அவள் கெஞ்சிய போதிலும் அவருடைய கருணையை அவளால் பெற முடியவில்லை. அவளுடைய நற்கருமங்கள் முடியும் நாள் வரை ஸ்ரீ ஸ்வாமிகள் பொறுமையோடு காத்திருந்து, பின்னர் அவளை தன் நிழலிலிருந்து விரட்டி அனுப்பிவிட்டார். அதனால் அனைவரும் இந்த நிகழ்ச்சியை எப்போதும் மனதில் நினைவு படுத்திக் கொண்டே இருக்கவேண்டும். குருவுக்கு எவ்வளவுதான் சேவைகள் செய்தாலும் அகம்பாவத்தோடு செயல்பட்டால், அவற்றினால் கிடைக்கும் புண்ணியங்கள் அனைத்தும் ஒரே நொடியில் பறிக்கப்பட்டுவிடும் என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும் என்பதை இந்த நிகழ்ச்சி நமக்கு தெளிவாக உணர்த்துகிறதல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**





## அத்தியாயம் 143

# பக்தர்களுக்கு வழிகாட்டுதல்

**பாளப்பாவின் அனுஷ்டானம்**

பாளப்பா ஹனுமன் கோவிலில் அமர்ந்து கொண்டு எப்போதும் ஜபம் செய்துகொண்டிருப்பார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை காலை, மதியம், மாலை என மூன்று வேலைகளும் வந்து தரிசனம் செய்வார். ஒருமுறை சுந்தராபாயி ஸ்ரீ ஸ்வாமிகளிடம் பாளப்பா உங்களுக்கு சேவைகள் செய்யாமல் தூரத்தில் இருக்கும் ஹனுமான் கோவிலிலேயே அமர்ந்து கொண்டு ஜெபம் செய்து கொண்டிருக்கிறார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **"என்னுடைய பக்தர்கள் ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்தாலும், அவர் எனக்கு அருகில்தான் இருக்கிறார்"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் அங்கிருந்த சேவகர்கள் அனைவரும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தனர். ஒருவர் எவ்வளவு தொலைவில் இருந்தாலும் அவர்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் குடைக்குக் கீழ் தான் இருக்கிறார்கள் என்கிற நம்பிக்கை அனைவருக்கும் ஏற்பட்டது.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி பாளப்பாவிடம், **"ஜபங்கள் செய்துகொண்டிரு. அவற்றை கணக்கு வைத்துக்கொள்"** என்று கூறினார். இவ்வாறு ஸ்ரீ ஸ்வாமி பாளப்பாவிடம் கூறி சில நாட்களுக்குப் பிறகு சுந்தராபாயி ஸ்ரீ ஸ்வாமிகளிடமிருந்து அனுப்பப்பட்டாள். அப்போது பாளப்பா ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பிரதான சேவகர்களுள் ஒருவராக திகழ்ந்தார். அன்று ஸ்ரீ ஸ்வாமி பாளப்பாவிடம், **"கணக்கைச் சொல்"** என்று கூறினார். அப்போது பாளப்பாவுக்கு அதன் அர்த்தம் புரியவில்லை. பின்னர் யோசனை செய்தபின் ஸ்ரீ ஸ்வாமிகள் முன்பு கூறியது நினைவுக்கு வந்தது. உடனே ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று கணக்கைக் கூறினார்.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக கல்யாண் அப்பா வணி என்கிற அடியவர் வந்திருந்தார். அவரிடம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், **"பாளப்பா ஒரு அனுஷ்டானம் மேற்கொண்டு வருகிறார். அதை நல்ல முறையில் முடித்துக்கொடு"** என்று கூறினார். கல்யாண் அப்பா பாளப்பாவிடம் அனுஷ்டானங்களின் விவரங்களைக் கேட்டு தெரிந்து கொண்டார். பாளப்பா விவரித்தபின் பிராமணர்களுக்கு உணவளிக்குமாறு கூறினார். இந்த முறையில்





ஸ்ரீ ஸ்வாமிகளின் அருளால் பாளப்பா பல நாட்களாக மேற்கொண்ட அனுஷ்டானம் நல்ல முறையில் முடிவடைந்தது.

**கனோஜ் பிராமணர்**

மும்பையைச் சேர்ந்த கோவிந்தராவ் ஒரு கனோஜ் பிராமணருடன் தீர்த்த யாத்திரையாக பல இடங்களுக்குச் சென்றுவிட்டு, கானகாபூர் வந்தடைந்தார். அவர் உபவாசம் மேற்கொள்ளும் பழக்கம் உடையவர். ஒருமுறை அவருடைய தியானத்தில், **"நான் அக்கல்கோட்டில் உண்மையான ரூபத்தில் இருக்கிறேன், நீ அங்கு வந்தால் உன் விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறும்"** என்று உணர்த்தப் பட்டது. அடுத்தநாளே அவர் அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தார். அவருடன் வந்திருந்த பிராமணர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு நைவேத்தியம் படைத்த பின்னரே இருவரும் உணவு உட்கொண்டனர். இதே நடைமுறை ஐந்து மாதங்களுக்குத் தொடர்ந்தது.

ஒருநாள் அவ்வாறு நைவேத்தியம் கொண்டு வந்தபோது ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களிடம், **"ஊருக்கு வெளியே இருக்கும் மசூதியில் இருக்கும் பக்கிரி மற்றும் நாய்க்கு இந்த உணவைக் கொடு. அவர்கள் உண்ணட்டும்"** என்று கூறினார். உடனே அந்த பிராமணர் தான் அணிந்து கொண்டிருந்த பட்டாடையுடன் மசூதியை நோக்கி ஓடினார். அங்கு ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியபடியே பக்கிரியும் நாயும் தென்பட்டனர். அந்த பிராமணரைப் பார்த்தவுடன், **"உங்களை ஸ்ரீ ஸ்வாமி தானே அனுப்பி வைத்தார்! அதை இங்கே கொடுங்கள்"** என்றார் பக்கிரி. அவர்கள் திருப்திகரமாக உண்டுவிட்டு ஒரு வடையையும், கொஞ்சம் பாயாசத்தையும் மீதமாக வைத்தனர். அந்த பிரசாதத்தை எடுத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்தவுடன், அவற்றை உட்கொள்ளுமாறு கூறினார். பிராமணர் எந்தவித தயக்கமும் இன்று சாப்பிட்டார். ஆனால் கோவிந்தராவுக்கு இஸ்லாமிய பக்கிரி உண்ட உச்சிஷ்டத்தை உண்ண தயக்கமாக இருந்தது. அதனால் அவர் உண்ணாமல் இருந்தார். பிராமணர் ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளுக்கு அடிபணிந்தமையால் மிகவும் மகிழ்ச்சி அடைந்து அவரிடம், **"நீ மும்பைக்கு செல். உனக்கு 10,000 ரூபாய் கிடைக்கும்"** என்று கூறினார். கோவிந்தராவின் மீது மிகுந்த கோபத்துடன், "உன் பக்தி இன்னும் பக்குவம் அடைய வேண்டும். நீ இன்னும் நிறைய சேவைகள் செய்ய வேண்டும்" என்று கூறிவிட்டு தனது பாதுகைகளை அவர்களிடம் கொடுத்து அனுப்பி வைத்தார்.





மும்பை வந்தடைந்த பின், கனோஜ் பிராமணர் ஸ்ரீ ஸ்வாமிகள் அவருக்கு அளித்த ஆசீர்வாதத்தைப் பற்றி யோசனை செய்து கொண்டிருந்தார். **"எனக்கோ எந்த வியாபாரமும் கிடையாது! அப்புறம் எப்படி எனக்கு 10,000 ரூபாய் கிடைக்கும்!"** என்று நினைத்துக் கொண்டார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகள் பொய்த்து விடுமா? அதனால் வீதிகளில் எப்போதும் அங்கும் இங்கும் திரிந்து கொண்டே இருந்தார். கீழே கிடைக்கும் காகிதங்கள் அனைத்தையும் எடுத்து பணமாக இருக்குமோ என்று தேடிக் கொண்டே இருந்தார். மும்பை எவ்வளவு பெரிய நகரம்! பணக்காரர்கள் பலர் இருக்கின்றனரே! மஹராஜின் வார்த்தைகள் மட்டும் உண்மையாகிவிட்டால் தனக்கு ஒரு கட்டு பணம் கிடைக்கும் என்று எண்ணிக் கொண்டார். அவர் இதே போல 15 நாட்கள் வீதிகளில் திரிந்து கொண்டிருந்தார்.

அன்று பணக்கார குஜராத்தி ஒருவர் இறந்திருந்தார். அவருடைய மனைவி தானமாக பலருக்கு பணம் அளித்துக்கொண்டிருந்தாள். அவள் ரகசியமாக 10,000 ரூபாயை எடுத்து வைத்துக் கொண்டு வீட்டின் வாசலில் அமர்ந்திருந்தாள். அவள் முதலில் காணும் பிராமணனுக்கு அந்த பணத்தைக் கொடுப்பது என்கிற தீர்மானத்தோடு காத்திருந்தாள். அந்த சமயத்தில்தான் இந்த பிராமணர் காகிதங்களை வீதிகளில் தேடிக்கொண்டு வந்து கொண்டிருந்தார். அவள் உடனே சென்று அந்த பணக்கட்டை அவரிடம் கொடுத்தார். இந்த பணத்தைப் பார்த்ததும் பிராமணர் திக்குமுக்காடிப் போனார். பணத்தை எடுத்துக் கொண்டு தன் சொந்த ஊரான உத்திரப்பிரதேசத்திற்குச் சென்றார். ஸ்ரீ ஸ்வாமிகளின் வாக்குபலித்ததை எண்ணி அவர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்து, எப்போதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நினைவிலேயே வாழ்ந்தார்.

மனதை உருக்கும் அற்புதமான லீலை! ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்தூல சரீரத்தில் வாழ்ந்தபோது மட்டுமல்லாமல் இப்போதும் அவருடைய பக்தர்களை வழிநடத்திக் கொண்டுதான் இருக்கிறார். இதை பலரும் உணர்ந்து அனுபவித்துக் கொண்டு தானே இருக்கின்றோம்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 144

# ஹரிபாவ்வும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும்

கோவிந்தராவ் மும்பை வந்து சேர்ந்தவுடன் தான் தீர்த்த யாத்திரை சென்று வந்ததற்காக பிராமணர்களுக்கு போஜனம் அளித்தார். வந்திருந்த பிராமணர்களில் லக்ஷ்மன் விநாயக் பண்டிட்டும் ஒருவர். அவர் அக்கல்கோட்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் அனைத்தையும் அறிந்து கொண்டு மிகுந்த ஆச்சரியம் அடைந்தார். அவர் சில நாட்களுக்கு முன்னர் வைக்கோல் வியாபாரம் செய்து வந்தார். அதில் பெருத்த நஷ்டம் ஏற்பட்டு கடனில் மூழ்கியிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நிகழ்த்திய அற்புதங்களை கேள்விப்பட்டு, தன்னுடைய பிரச்சனைகள் எட்டு நாட்களுக்குள் சரியாகிவிட்டால் தான் அக்கல்கோட்டுக்கு வருவதாகவும், தன் வாழ்நாள் முழுவதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சேவகராக வாழ்வதாவும் உறுதி எடுத்துக் கொண்டார். அதற்கு கோவிந்தராவ், **"உன் பக்திக்கு தகுந்தாற்போல் காரியசித்தி ஆகும்"** என்று கூறினார். ஏழு நாட்கள் ஆகியும் எந்தவித முன்னேற்றமும் இல்லாததால், **"என்னுடைய துரதிர்ஷ்டத்திற்கு ஸ்ரீ ஸ்வாமிதான் என்ன செய்ய முடியும்?"** என்று நொந்துகொண்டார்.

எட்டாவது நாள் காலையில் ஹரிபாவ் என்கிற நகராட்சி அதிகாரியும், கஜானன் ஸ்ரீதர் கத்ரி என்கிறவரும் பண்டிட்டை சந்தித்தனர். ஹரிபாவ் பண்டிட்டுடைய நெருங்கிய நண்பர். அவர்கள் பண்டிட்டிடம், **"நாங்கள் இருவரும் சேர்ந்து செய்த வியாபாரம் பெருத்த நஷ்டத்தை ஏற்படுத்தி விட்டது. அதனால் நாங்கள் கடனாளி ஆகிவிடுவோம் போலிருக்கிறது. நீங்கள் எங்களுக்கு ஜவாப்தாரியாக கையெழுத்து போட்டால் நாங்கள் இருவரும் அந்த கடனிலிருந்து மீண்டு வந்துவிடுவோம். நாங்கள் உங்களுடைய கடனையும் அடைத்துவிடுகிறாம்"** என்று வாக்குறுதி அளித்தனர்.

ஹரிபாவ் பண்டிட்டின் நெருங்கிய நண்பர் என்கிற காரணத்தினால் பண்டிட் கையெழுத்திட்டார். அவர் புகையிலை சரக்கு இருந்த ஒரு கடைக்குச் சென்று, முதலாளி போல நடித்து பத்திரங்களில் கையெழுத்திட்டார். உடனே ஹரிபாவும் கத்ரியும் கடனிலிருந்து விடுவிக்கப்பட்டனர். அந்தக் கடையை கிரிதாரி லால் என்கிறவர் நடத்தி வந்தார். அவரிடம் மூன்று நாட்களில் பணத்திற்கு ஏற்பாடு செய்வதாகவும், அனைத்து கடனையும் அடைத்து விடுவதாகவும் கூறிவிட்டு வந்துவிட்டார்.




மாலை சரியாக நான்கு மணிக்கு ஐஸ்வர்ய மார்வாடி, பண்டிட்டின் வீட்டிற்கு அவரைச் சந்திக்க வந்தார். தன் கடனை கேட்பதற்காகத்தான் மார்வாடி வந்திருக்கிறார் என்கிற பயத்தில் பண்டிட் ஒளிந்துகொண்டு வீட்டில் இல்லாதது போல் கூறிவிடச் சொன்னார். இரண்டு அல்லது மூன்று முறை மார்வாடி வந்து தேடிப்பார்த்தும் அவர் இல்லாததால் அவர் நகராட்சி அலுவலகத்திற்குச் சென்று ஹரிபாவ் மற்றும் கத்ரியை சந்தித்தார். அவர் அவர்களிடம் புகையிலை வியாபாரத்தில் 2000/- ரூபாய் லாபம் கிடைத்திருப்பதாகவும், அதை தெரிவிக்க பண்டிட்டின் வீட்டுக்குச் சென்ற போது அவர் இல்லாததால் இங்கு வந்து இவர்களிடம் தெரிவிப்பதாகக் கூறினார். உடனே மூவரும் பண்டிட்டின் வீட்டுக்குச் சென்று, **“சரக்கு பல நாட்களாக விற்காமல் இருந்தது. அதனால் நஷ்டம் ஏற்பட்டிருந்தது. திடீரென வந்த ஒரு தந்தியில் சரக்கு விற்கப்பட்டதாக தகவல் கிடைத்தது. அதில் ஒன்றரை மடங்கு லாபம் கிடைத்திருப்பதால், நீங்கள் உடனடியாகக் கடைக்கு வந்து லாபப் பணத்தை பெற்றுக் கொள்ளுங்கள்”** என்று கூறினார். மூவரும் கடைக்குச் சென்று 1900/- ரூபாயை பெற்றுக் கொண்டனர் (100 ரூபாய் தரகு தள்ளுபடி செய்துகொண்டனர்).

பண்டிட் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. தன் பிரார்த்தனையைப் பற்றி ஹரிபாவ் மற்றும் கத்ரியிடம் பாண்டிட் தெரிவித்தார். அவர்களும் அக்கல்கோட் வருவதாகக் கூறினர். அந்த பணத்தை அக்கல்கோட் செல்லும் வரை தொடுவதில்லை என்று உறுதி எடுத்துக் கொண்டனர். முன்னூறு ரூபாயை எடுத்துக் கொண்டு அக்கல்கோட் பயணத்தைத் தொடங்கினர்.

மூவரும் அக்கல்கோட்டை அடைந்து சோளப்பாவின் இல்லத்தை கண்டுபிடித்து அங்கு ஊஞ்சலாடிக் கொண்டிருந்த ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தனர். ஸ்ரீ ஸ்வாமி அவர்களைப் பார்த்து, **“வியாபாரம் நஷ்டமானது! என் பாதத்தில் சரணடைந்தீர்கள்... லாபம் கிடைத்தது!”** என்று கூறியதைக் கேட்டதும் அவர்கள் மூவரின் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்தது. பின்னர் அவர்கள் விடைபெற்றுக் கொண்டு தாங்கள் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றனர்.

அன்றிரவு அவர்களுடைய துணிமணிகள் களவு போயின. எவ்வளவு தேடியும் கிடைக்காமல் மறுநாள் காலையில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் முறையிட்டனர். **“இருமல் சுக்குப்பொடி சாப்பிடாமலே குணமாகி விட்டதா?”** என்றார். அதாவது, **“பிரச்சனை வருவதற்கு முன்பே தவிர்க்கப்பட்டு விட்டதா?”**




என்பதுதான் அதன் அர்த்தம். ஸ்ரீ ஸ்வாமி கஜானன் கத்ரியை தலையில் ஒரு வேட்டியை கட்டிக் கொள்ளுமாறும், பண்டிட்டை ஒரு கைக்குட்டையை அவர் கையில் கட்டிக் கொள்ளுமாறும் கூறினார். ஹரிபாவை தன்னருகில் இழுத்துக் கொண்டு, **"அனைத்தையும் துறந்து என்னுடைய மகனாக இரு"** என்று கூறினார். அவர்கள் லாபப் பணத்தில் 300/- ரூபாய் கொண்டுவந்திருந்தனர். ஹரிபாவிடம், **"அந்த பணத்திலிருந்து வெள்ளை, வெள்ளை கொண்டுவா"** என்று கூறினார். **"மஹராஜ் வெள்ளை என்றால் என்ன?"** என்று கேட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி தன் கால்களை நீட்டிக் காட்டினார். அது வெள்ளிப் பாதுகைக்கான குறிப்பு என்பதை ஹரிபாவ் உணர்ந்து கொண்டார். அவர்கள் மும்பையிலிருந்து வாங்கிவந்த பழங்களை ஸ்ரீ ஸ்வாமிக்குப் படைத்தனர். அதிலிருந்த வாழைப்பழத்தை ஸ்ரீ ஸ்வாமிக்கு ஊட்டிவிடும் எண்ணத்தில் பண்டிட் ஒன்றை எடுத்து உரித்தார். உடனே மஹராஜ் கோபத்துடன், **"உனக்கு தானே இருமல் இருக்கிறது. கிணற்றடிக்குச் சென்று நீயே அதை சாப்பிடு"** என்று கூறினார். அவருக்கு ஆசீர்வாதம் கிடைத்துவிட்டது என்று அனைவரும் கூறினர்.

இந்த நிகழ்ச்சி ஏகாதசி அன்று நடைபெற்றது. அடுத்த நாளான துவாதசி அன்று இம்மூவரும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கும் பிராமணர்களுக்கும் விருந்தளிக்கலாம் என்று முடிவு செய்தனர். மஹராஜுக்கு மிகவும் பிடித்தமான பேசன் லட்டு (கடலைமாவு லட்டு), அரிசி பாயசம், வெங்காய பஜ்ஜி ஆகியவை தயாரிக்கப்பட்டன. அன்று ஸ்ரீ ஸ்வாமி அரண்மனையில் இருந்தமையால் அவர்கள் உணவை எடுத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றனர். அரண்மனைக்குள் செல்ல எவருக்கும் அனுமதி கிடையாது, ஆனால் இவர்களிடம் ஒரு சிபாரிசுக் கடிதம் இருந்தமையால் அவர்கள் உள்ளே சென்று ஸ்ரீ ஸ்வாமிக்கு உணவு பரிமாறினார்கள்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சாதத்தை எடுத்து ஹரிபாவிடம் கொடுத்தார். கஜானனுக்கு லட்டு கிடைத்தது. பண்டிட்டுக்கு வெங்காய பஜ்ஜி கிடைத்தது. பண்டிட் சில வருடங்களாக வெங்காயம் சாப்பிடுவதைத் தவிர்த்து வந்தார். அவர் அதை சாப்பிடுவதற்கு தயங்கியவாறு மற்றவர்களுக்கு பகிர்ந்தளிக்கும் எண்ணத்தில் இருந்தார். அதை கவனித்த ஸ்ரீ ஸ்வாமி அவரை தன்னருகில் அழைத்து, **"இது யார்?"** என்று சுவற்றில் தொங்கவிடப்பட்டிருக்கும் ஒரு படத்தைக் காட்டி கேட்டார். **"அது மாருதி"** என்று பண்டிட் பதிலளித்தார். அடுத்த படத்தைக் காட்டியவுடன், **"இது ஸ்ரீ ராமர்"** என்றார். அடுத்து இன்னொரு படத்தை காட்டி, **"இது யார்?"** என்று கேட்டதற்கு, **"இது ஷங்கரர்"**

என்றார். **“நீங்கள்தான் இந்த மூவரும்”** என்றார் ஸ்ரீ ஸ்வாமி. **“ஹரிபாவ் மாருதியைப் போல ஒரு பிரம்மச்சாரி, கஜானன் சங்கரரைப் போல அனைத்து சுபங்களையும் செய்பவர், நீ ஸ்ரீ ராமர். அதை உணர்த்தவே நான் உங்களுக்கு தெய்வீக முடிச்சை கட்டிவிட்டேன்”** என்று கூறினார்.

பிறகு ஹரிபாவைப் பார்த்து,

**“குரூர் ப்ரம்மா குரூர் விஷ்ணு:**
**குரூர் தேவோ மஹேஸ்வர:**
**குருரேவ பரப்பிரம்ம: தஸ்மை ஸ்ரீ குரவே நம:”** என்று கூறினார்.

**பொருள்:** குருவே பிரம்மா, குருவே விஷ்ணு, குருவே மகேஸ்வரன். குருவே பரப்ரம்மா. ஆகவே ஸ்ரீ குருவை வணங்குவோமாக!

கஜானனைப் பார்த்து,

**“ஆகாஷத்பதிதம் தோயம் யதா கச்சதி சாகரம்**
**சர்வதேவ நமஸ்கார: கேசவம் ப்ரீதி கச்சதி”** என்று கூறினார்.

**பொருள்:** ஆகாயத்திலிருந்து வரும் மழை நீரானது எப்படி கடலில் சங்கமிக்கிறதோ, அதேபோல எந்த கடவுளை வணங்கினாலும் அது ஸ்ரீ விஷ்ணுவிடம்தான் வந்து சேரும்.

பண்டிட்டை பார்த்து,

**“இதமேவ சிவ II**
**இதமேவ சிவ II**
**இதமேவ சிவ II**
**இதமேவ சிவ II”** என்று கூறினார்.

**பொருள்:** இதுதான் சிவம், சிவம், சிவம்.

என்று கூறி மூவரையும் ஆசீர்வதித்தார். பண்டிட்டை பார்த்து, **“வெங்காயத்தில் அப்படி என்ன இருக்கிறது. அது புனிதமானதுதான். சாப்பிடலாம்!”** என்று கூறினார். மூவரும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் விடைபெற்றுக் கொண்டு மும்பை சென்றனர்.

இந்த நிகழ்ச்சிகளுக்குப் பின்னர் ஹரிபாவ் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நினைவிலேயே இருந்தார். தொடர்ந்து வரும் அத்தியாயங்களில் ஹரிபாவ்வைப் பற்றி விரிவாகப் பார்க்கலாம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 145

# ஸ்ரீ ஸ்வாமி சுத மஹராஜ் ஆகுதல்

பண்டிட், கத்ரி மற்றும் ஹரிபாவ் மும்பை வந்து சேர்ந்தனர். மூவரும் தங்கள் லாபப் பணத்தை பகிர்ந்து கொண்டனர். பண்டிட் தன் கடன்களை அடைத்துவிட்டு நிம்மதி அடைந்தார். ஹரிபாவுக்கு மட்டும் ஸ்ரீ ஸ்வாமிகளின் நினைவு எப்போதும் இருந்து கொண்டே இருந்தது. அவருக்கு இந்த உலக வாழ்க்கையின் மீது பற்றற்று போனது. அவருக்கு மீண்டும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசிக்க வேண்டும் போல தோன்றிக்கொண்டே இருந்தது. அவர் தன்னிடம் இருந்த பணத்தில் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு வேலைப்பாடுகளுடன் கூடிய ஒரு வெள்ளிப் பாதுகைகளை செய்துகொண்டு 15 நாட்கள் விடுப்பில் அக்கல்கோட் சென்றார்.

அக்கல்கோட் சென்றடைந்தவுடன் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு அவர் கொண்டுவந்திருந்த வெள்ளிப் பாதுகைகளை கொடுத்தார். மிகுந்த மகிழ்ச்சியுடன் ஸ்ரீ ஸ்வாமி அதைப் பெற்றுக் கொண்டு உடனே அணிந்துகொண்டார். அடுத்து பதினான்கு நாட்கள் அந்த பாதுகைகளை அணிந்து கொண்டே இருந்தார். பக்தர்கள் பலர் அந்தப் பாதுகைகளை பெற்றுக் கொள்ள ஆவலாக இருந்த போதிலும் ஸ்ரீ ஸ்வாமி அவர்களிடம், **“இது என் ஆத்மா, நான் அதை எவரிடமும் கொடுக்க மாட்டேன்”** என்று கூறினார். பதினான்காவது நாள் ஹரிபாவ் தரிசனத்துக்காக சென்றபோது, ஸ்ரீ ஸ்வாமி ஹரிபாவை தன்னருகில் இழுத்துக் கொண்டு, **“நீ என் மகன். உன் தொழிலை மூட்டை கட்டிவிடு, வேலையை ராஜினாமா செய்துவிட்டு, கடற்கரையோரம் ஒரு குடிலைக்கட்டி, கொடியை பரப்பு...”** என்று கூறினார்.

பாதுகைகளை ஹரிபாவுக்கு அளிப்பதற்கு முன்னர் அவற்றை தன் கைகள், கால்கள், முகம் மற்றும் அனைத்து அங்கங்களிலும் தொட்டுவிட்டு

கொடுத்தார். அதை பெற்றுக் கொள்ளும் போது ஹரிபாவை மூன்று முறை தோப்புக்கரணம் போட்டு விட்டு, கைகளை பவ்வியமாக மடக்கிக் கொண்டு வாங்கி கொள்ளுமாறு கூறினார். **"நீ ஒரு மாளிகையை (மடம்) எழுப்புவதற்காக நான் என் ஆத்மலிங்கத்தை உன்னிடம் அளிக்கிறேன். இன்றிலிருந்து நீ என் மகன்"** என்று கூறினார். மீண்டும் ஒருமுறை ஹரிபாவை அந்த பாதுகைகளால் தன் வயிற்றை சுழற்றி தொடுமாறு கூறிவிட்டு, அவற்றை அவருடைய தலையில் வைத்துக் கொண்டு கிளம்ப உத்தரவிட்டார். ஹரிபாவ் அடைந்த ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை.

இந்த நிகழ்ச்சி அவர் அக்கல்கோட்டில் தங்கியிருந்த போது நடைபெற்றது. அன்றிரவு ஹரிபாவ் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடமிருந்து அனுகிரகத்தை பெற்றார். ஒருநாள் இரவு நேரத்தில் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஊருக்கு வெளியே இருக்கும் ஒரு ஆலமரத்தின் கீழ் அமர்ந்திருந்தார். ஹரிபாவும் மற்ற சீடர்களும் மரத்தின் கீழே படுத்துக் கொண்டிருந்தனர். நள்ளிரவில் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஒரு குச்சியை கையில் எடுத்துக் கொண்டு எழுந்து நின்று அந்த மரத்தைப் பார்த்து, **"ஏ! (கெட்ட வார்த்தை) நீ இங்கிருந்து போய்விடு. என் குழந்தைகள் அனைவரும் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள்"** என்று மூன்று முறை கூறிவிட்டு குச்சியை உயர்த்திக் காட்டினார். இந்த வார்த்தைகளை மரம் கேட்டுக் கொண்டிருப்பது போல சலசலவென நடுங்கியது. மரத்தின் மையப்பகுதி தகதகவென மின்னியது. நெருப்புப் பந்து ஒன்று மரத்திலிருந்து வெளியேறியது. இந்த காட்சியை ஹரிபாவும் மற்றவர்களும் படுத்துக் கொண்டே பார்த்தனர்.

சிறிது நேரத்திற்குப் பிறகு ஹரிபாவ் எழுந்து ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சென்று அவருடைய கால்களை பிடித்து விட்டார். இருவரும் ரகசியமாக பலமணி நேரத்திற்குப் பேசிக் கொண்டிருந்தனர். உரையாடல் முடிந்தவுடன் ஸ்ரீ ஸ்வாமி ஒரு குச்சி, ஒரு கப்னி ஆகியவற்றை தன் தலையணைக்கு கீழிருந்து எடுத்து ஹரிபாவிடம் தூக்கி எறிந்துவிட்டு, **"உலக வாழ்க்கையை துறந்து விடு"** என்று கூறினார். இதுதான் குரு உபதேசமோ!

அடுத்தநாள் காலையில் ஹரிபாவ் ஸ்ரீ ஸ்வாமிகள் அளித்த ஆடைகளை அணிந்து கொண்டு, ஸ்ரீ ஸ்வாமி அளித்த பாதுகைகளுடன் மும்பை சென்றடைந்தார். அவர் மும்பையில் காமத்திபுரா என்கிற இடத்தில் வசித்து வந்தார். வீட்டுக்கு வந்தவுடன் தன் செல்வங்கள் அனைத்தையும் தானமாக வழங்கினார். ஆறு எதிரிகளான காமம், குரோதம், லோபம், மதம், மோகம், மற்றும் மாட்சரியம் ஆகியவற்றை உடனடியாக துறப்பது என்பது சாதாரணமான

விஷயம் அல்ல. ஹரிபாவ் நல்ல வசதியான மனிதர். அவரிடம் இருந்த ஆடை-ஆபரணங்கள், பசுவளம் ஆகியவற்றை முறைப்படி பிராமணர்களுக்கு தானமாக வழங்கிவிட்டு துறவறத்தை ஏற்றுக் கொண்டார். ஹரிபாவின் மனைவி தாராபாய்க்கு நடைபெறும் நிகழ்ச்சிகள் எதிலும் உடன்பாடு இல்லை. அவளுடைய நகைகள் மற்றும் திருமாங்கல்யத்தைக் கூட விட்டு வைக்காமல் அனைத்தையும் விற்று கிடைத்த பணத்தையும் தானமாக அளித்து விட்டார்.

துறவற சம்பிரதாயம் நடந்துகொண்டிருந்தபோது தாராபாய் அழுது அழுது வீங்கிய கண்களுடன், துறவறம் வேண்டாம் என்று கதறிக் கொண்டிருந்தாள். ஆனால் ஹரிபாவ் எந்தவித சலனமும் இல்லாமல் உணர்ச்சியற்றவர் போல் இருந்தார். ஹரிபாவ் காவி உடையை அணிந்து கொண்டார், அவர் மனைவிக்கு வெள்ளை ஆடைகள் கொடுக்கப்பட்டன. அவர் ஜாலராவையும், தம்புராவையும் கையில் எடுத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பஜனைகள் செய்யத் தொடங்கினார். அவர் அன்றிலிருந்து ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் என்று அழைக்கப்பட்டார் (சுத என்றால் மகன் என்று அர்த்தம்).

ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் எப்போதும் சித்த நிலையிலேயே இருந்தார். தாராபாய் இவற்றை பார்த்து மிகவும் வருத்தமடைந்தாள். அவள் துக்காராமின் மனைவியைப் போலவே நடந்து கொண்டாள். ஆனால் அதைப்பற்றி எதுவுமே கவலை கொள்ளாமல் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹாராஜ் சிரித்துக் கொண்டிருப்பார். அவர் தாராவுக்காக்கவே ஒரு அபங்கத்தை இயற்றிப் பாடினார். அதன் பொருளானது: **"தாரகே! நீ செய்யவேண்டிய ஒரே ஒரு செயல் என்னவென்றால், உன் கையில் தம்புராவை எடுத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களில் உன் கவனத்தை வைத்துக் கொண்டு அவரைப் பற்றி பாட வேண்டும். ஸ்ரீ ஸ்வாமிகளுடைய பெயரைச் சொல்லும் தண்டோராவை எடுத்துக் கொண்டு ஊர் ஊராக செல்ல வேண்டும்!"** என்று பாடி அவளுக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மீது பக்தியை ஏற்படுத்திக் கொள்ளுமாறு கூறினார்.

ஸ்வாமி சுதமஹாராஜ் முதலில் காமத்திபுரா என்கிற இடத்தில் ஒரு மடத்தை நிறுவினார். அங்கு அனைத்து ஜாதியினரும் வந்து பாதுகைகளை வழிபடத் துவங்கினர். அங்கு வந்து தரிசனம் செய்த பலரின் பிரச்சனைகளை அவர் தீர்த்து வைத்ததோடல்லாமல், அக்கல்கோட்டில் அப்போது நடந்து கொண்டிருப்பவைகளை தெளிவாகக் கூறினார். இருப்பினும் சிலர் அவரை போலியானவர் என்று கூறிய போதிலும் அவர் எதைப்பற்றியும் கவலை கொள்ளாமல் சிரித்துக் கொண்டே அபங்கங்களைப் பாடிக் கொண்டிருப்பார்.

கொங்கணி பிராமணரான நானா சோஹானி ஒரு நாத்திகர். அவர் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜை கிண்டல் செய்தார். சில நாட்களில் தான் செய்தது தவறு என்பதை உணர்ந்து கொண்டு அக்கல்கோட் சென்று வந்தபின் தன் வேலையை ராஜினாமா செய்துவிட்டு, வெறும் கௌபீனத்தை மட்டும் அணிந்து கொண்டு பிக்ஷை எடுத்து வாழ்ந்தார். அவருடைய மனைவியும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பரம பக்தையானாள். சிறிது காலங்களுக்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமி சுதமஹாராஜ் அவருக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதுகைகளை வழங்கினார். ரத்னகிரி மாவட்டத்தில் உள்ள ஒரு கிராமத்தில் ஒரு மடத்தை அவர் நிறுவி இன்றும் அவருடைய சந்ததியினர் அந்த பாதுகைகளை பூஜை செய்து வருகின்றனர்.

நர்ஸோஜி என்கிற பார்சி, மங்கலான பார்வையால் துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார். அவர் ஸ்வாமியின் ஆரத்தியை தரிசனம் செய்ய மும்பையில் உள்ள கோவிலுக்கு வருவார். அவருடைய பக்தியைக் கண்டு மிகுந்த சந்தோஷம் அடைந்த ஸ்ரீ ஸ்வாமி சுதமஹாராஜ், அவருடைய பார்வைக் கோளாறை குணமாக்கினார். இதனை அறிந்துகொண்ட பல பார்சிகள் அவருக்கு பக்தர்காளாக ஆனார்கள். அவர்கள் அனைவருடைய விருப்பங்களும் நிறைவேறின.

ஸ்ரீ ஸ்வாமி சுதமஹாராஜ் சந்நியாசத்தை ஏற்றுக் கொண்ட போது அவருக்கு வெறும் 25 வயதுதான் ஆகியிருந்தது. அவருடைய உறவுக்காரர்கள் அனைவரும் அவர் தன் வாழ்க்கையை வீணடித்துக் கொள்கிறார் என்று கருதினார்கள். ஹரிபாவுடைய அன்னை காக்குபாய் அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தாள். அவளை ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் தன் அன்னையைப் போல் பாவித்து, அனசூயா என்று அழைப்பார். ஹரிபாவ் துறவறம் மேற்கொண்ட போது அவள் கொங்கனில் இருந்தாள். அவள் இந்த விஷயத்தை கேள்விப்பட்டு தன் மகனை மீண்டும் சம்சார பந்தத்திற்குள் வருமாறு வற்புறுத்தினாள். ஆனால், எந்தவித மாற்றமும் ஏற்படவில்லை! தொடக்கத்தில் அவள் ஹரிபாவுக்கு யாரோ சூனியம் வைத்திருக்கிறார்கள் என்று நம்பிக் கொண்டு சடானாவில் வசித்து வந்த தேவ் மாமலத்தாரிடம் ஆலோசனை செய்தாள். “ஹரிபாவ் ஒரு உன்னதமான ஆத்மாவின் கட்டுப்பாட்டில் உள்ளார்” என்று அவர் கூறிவிட்டார். அதனால் மனமுடைந்த காக்குபாய் மும்பை வந்தடைந்தாள்.

அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்பவர்களை கடற்கரையோரம் இருக்கும் மடத்துக்கு சென்று தரிசனம் செய்யுமாறு ஸ்ரீ

ஸ்வாமிகள் அனுப்பி வைத்தார். அப்படிப்பட்ட தந்தை-மகன் பாசம் இருவருக்கும் இடையே இருந்தது. ஸ்ரீ ஸ்வாமி சுதமஹாராஜப் போல ஒரு பரம பக்தர் எவருமே இல்லை என்று கூட கூறலாம். அவர் தொடங்கி வைத்த ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய ஜெயந்தி கொண்டாட்டம் மற்றும் அவரைப் பற்றிய அற்புதமான தகவல்களை தொடர்ந்து அடுத்த அத்தியாயங்களில் விரிவாகப் பார்க்கலாம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 146

# ஜெயந்தி விழா மற்றும் ஸ்வாமி சுதமஹராஜ் கொண்டிருந்த பக்தி

சீமா பாய் பேல்வாடி என்கிற பக்தையின் முயற்சியால் கந்தேவாடி என்கிற இடத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய மடம் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹாராஜால் ஸ்தாபிக்கப்பட்டது. சில நாட்களிலேயே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழ் கொடிகட்டி பறந்தது. அனைத்து இனத்தவர்களின் விருப்பங்களையும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஆத்மலிங்கம் நிறைவேற்றி கொடுத்தது. அதனால் பக்தர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் அறிவுறுத்தியதன் பேரில் அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தனர்.

சக வருடம் *1792* இல் (கி.பி.*1870*), ஸ்வாமி சுதமஹாராஜ் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பிறந்தநாள் விழாவை கந்தேவாடி மடத்தில் விமரிசையாக கொண்டாட விரும்பினார். அடுத்த வருடமான சக வருடம் *1793* இல் (கி.பி. *1871*), ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பிறந்தநாள் விழாவுக்கான ஏற்பாடுகளை ஸ்வாமி சுதமஹராஜ் அக்கல்கோட்டில் துவங்கினார். இதை அனைத்து பக்தர்களும் கிண்டல் செய்தனர். ஷிவுபாயும் புஜங்காவும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து, **"இந்த ஸ்வாமி சுதமஹாராஜ் என்ன செய்து கொண்டிருக்கிறார்?"** என்று கேட்டதற்கு, **"இது எங்களுடைய திருமணக் கொண்டாட்டம்"** என்று ஸ்ரீ ஸ்வாமி பதிலளித்தார்.

கேலிப் பேச்சுக்கள் எதைப்பற்றியும் கவலைப்படாத ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் ஏழை எளியவர்களுக்கு அரிசி, பருப்பு போன்றவற்றை

விநியோகித்தார். மேலும் அவர் அனைவருடைய வீடுகளுக்கும் சென்று, "இன்று என் தந்தையுடைய பிறந்தநாள் வைபவம், அதனால் அனைவரும் விரதம் அனுஷ்டிக்க வேண்டும். மேலும் ஸ்ரீ ஸ்வாமி உங்களுக்கு அனுப்பி வைக்கும் உணவை உண்டு, பஜனைகள் செய்து கொண்டாட வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். ஸ்ரீ ஸ்வாமி சுதமஹாராஜைப் போல அன்பும் பக்தியும் கொண்ட பக்தர் எவருமே கிடையாது என்று கூறலாம். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரைத் தவிர வேறு எந்தவித யோசனையும் இல்லாமல் வாழ்ந்தார். அதே போல ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் ஸ்வாமி சுதமஹராஜுடைய நினைவிலேயே இருந்தார் என்பதற்கு பின்வரும் நிகழ்ச்சி மிகச்சிறந்த சான்று.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஊருக்கு வெளியே இருக்கும் புளியமரத்தின் கீழ் அமர்ந்திருந்தார். இரவு ஒன்பது மணிக்கு மும்பையில் இருந்து துவாரக்நாத் அப்பாஜி என்கிற வழக்கறிஞர் தன் குடும்பத்துடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்தார்.அப்போது ஸ்ரீ ஸ்வாமி தன் படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தார். அப்பாஜி ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அருகில் கற்பூரத்தை ஏற்றி வைத்தார். உடனே ஸ்ரீ ஸ்வாமி எழுந்து உட்காந்து கொண்டு, **"நீ உனக்கு மகன் வேண்டும் என்று கேட்க வந்துள்ளாய், ஆனால் என் ஹனுமனோ இருளில் அமர்ந்திருக்கிறான்!"** (முன்பு ஸ்ரீ ஸ்வாமி ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜை ஹனுமான் என்று கூறியதை நினைவு கொள்க). அதாவது அந்த வழக்கறிஞர் மகன் பிறக்க வேண்டும் என்ற பிரார்த்தனையுடன் வந்திருந்தார், ஆனால் ஸ்ரீ ஸ்வாமி தன் மகன் இருளில் அமர்ந்திருப்பதாக கூறினார். எதுவும் புரியாமல் பார்த்துக் கொண்டிருந்த வழக்கறிஞரை முரளிதர் கோவிலுக்கு போகச் சொன்னார். உடனே புஜங்கா சென்று முரளிதர கோவிலில் பார்த்தபோது, ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் இருளில் அமர்ந்திருந்தார். ஸ்வாமி சுதமஹராஜுக்கு முன்னால் விளக்கேற்றினால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பார் என்று புஜங்கா அவரிடம் கூறினார்.

அவர் கூறியபடியே வழக்கறிஞர் செய்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்தபோது, அந்த இரவு நேரத்தில் கொண்டைக்கடலை வாங்கி வருமாறு கூறினார். எப்படியோ கஷ்டப்பட்டு தேடி அதை வாங்கி வந்தார். அதை வைத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமி விளையாடிவிட்டு அதை பிரசாதமாக அவரிடம் கொடுத்தார். சில நாட்களுக்குப் பிறகு அவருக்கு ஒரு மகன் பிறந்தான். என்ன ஒரு அற்புதமான நிகழ்வு, ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் எத்தனை பல்லாயிரம் ஆண்டுகளாக குரு-பக்தர் தொடர்பில் இருக்கிறார்களோ!




இதை நிரூபிக்கும் விதமாக, **“விஜய் சிங் என்னும் பக்தனுடன் கோலி விளையாடுவதற்காக ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் செலிகேடா என்னும் ஊரில் தன்னை வெளிப்படுத்திக் கொண்டார்”** என்று ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் தன் பக்தர்களிடம் கூறினார். ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி, விஜய்சிங்தான் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜாக பிறந்துள்ளதாக கூறியிருக்கிறார். இதிலிருந்து அவர்கள் இருவருக்குமான தந்தை-மகன் உறவு புலப்படுகிறது.

ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜும் பல அற்புதங்களை நிகழ்த்திக் காட்டி, அவருடைய பக்தர்களாக ஆனவர்கள் அனைவரையும் அக்கல்கோட் அனுப்பி வைத்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மகிமைகளை எடுத்துக் கூறி அக்கல்கோட்டுக்கு பல பக்தர்களை அனுப்பி வைத்ததில் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜுக்கு பெரும் பங்கு இருக்கிறது. அதேபோல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் அவரை தரிசிக்க வரும் பக்தர்களிடம் கடற்கரைக்கு அருகில் இருக்கும் மடத்திற்குச் செல்லுமாறு பரிந்துரைத்தார்.

ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மீது கொண்டிருந்த அளவுகடந்த பக்தி பல சந்தர்ப்பங்களில் வெளிப்பட்டது. அப்படிப்பட்ட இரு சம்பவங்களை விரிவாக பார்க்கலாம்.

ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜை அக்கல்கோட் வாசிகளும், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பக்தர்கள் பலரும் இழிவு படுத்தினாலும், எதைப்பற்றியும் அவர் கவலைப்படாமல் ஸ்ரீ ஸ்வாமியின் அபங்கங்களை பக்தியுடன் பாடிக்கொண்டிருப்பார். ஒருமுறை அவர் ஆயிரக்கணக்கான பக்தர்கள் முன்னிலையில் முரளிதர் கோவிலில் பஜனை செய்து கொண்டிருந்தார். தர்ம சத்திரத்தின் சுவர் எப்போது வேண்டுமானாலும் இடிந்து விழலாம் என்கிற நிலையில் இருந்தது. பஜனை மூன்று மணிநேரம் தொடர்ந்தது. கூட்டம் கலைந்த பின்னர், மிகப்பெரிய சத்தத்துடன் சுவர் இடிந்து விழுந்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பஜனையை ஸ்வாமி சுதமஹராஜ் பாடிக்கொண்டிருப்பது தடைபட்டு விடக்கூடாது என்கிற எண்ணத்தில் ஸ்ரீ ஸ்வாமி இந்த அற்புதத்தை நிகழ்த்தினாரோ என்று அனைவரும் நினைத்தனர். அந்த அளவு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்வாமி சுதமஹராஜிடம் அன்பு கொண்டிருந்தார் என்பதற்கு இந்த நிகழ்ச்சி ஒரு சான்று.

அடுத்த நிகழ்ச்சியாக, ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் அக்கல்கோட்டில் தங்கியிருந்த போது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அரண்மனையில் தங்கியிருந்ததால்




அவரால் ஸ்ரீ ஸ்வாமியை மூன்று நாட்கள் ஆகியும் தரிசனம் செய்ய முடியவில்லை. அந்த மூன்று நாட்களும் அவர் அன்னம்-தண்ணீர் இல்லாமல் விரதம் மேற்கொண்டிருந்தார். நான்காவது நாள் அரண்மனையின் வாசலில் நின்று கொண்டு பக்தி பரவசத்துடன், **"என் தாய் உன்னுள்தான் இருக்கிறாள், அதனால்தான் நான் உன் வாயிலில் நின்று கொண்டிருக்கிறேன்..."** என்ற அபங்கத்தைப் பாடினார். அதைக் கேட்ட அரசி, ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜுடைய குரு-பக்தியை மதிக்கும் பொருட்டு அவரை உடனடியாக அரண்மனைக்குள் அழைத்து வருமாறு தன் வேலையாட்களுக்கு ஆணையிட்டாள். அவர் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்துவிட்டு, ஆனந்தப் பரவசத்தில் ஒரு மணி நேரத்திற்கும் மேல் அபங்கங்கள் பாடிக் கொண்டிருந்தார். அதைக் கேட்டுக் கொண்டிருந்த அனைவரும் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தனர். இந்த நிகழ்ச்சி நடைபெற்ற பின்னர், ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அரண்மனையில் தங்கியிருக்கும் சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜை எப்போது வேண்டுமானாலும் உள்ளே அனுமதிக்கலாம் என்று மஹாராணி ஒரு ஆணை பிறப்பித்தாள். வேறு எவருக்குமே கிடைக்காத இந்த சலுகை ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜுக்கு மட்டுமே கிடைத்தது என்றால் அவருடைய பக்தியின் ஆழம் எவ்வளவு அதிகம் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

இதுபோல பல நிகழ்ச்சிகளின் மூலம் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜின் தூய்மையான பிரேம பக்தியைப் பற்றி விவரித்துக் கொண்டே இருக்கலாம். அதேபோல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜை மட்டும்தான் தன் மகன் என்று கூறினார். இவரைத் தவிர வேறு எவரையும் இந்த உறவு முறையுடன் அவர் கொண்டாடவில்லை, அதாவது சுதமஹராஜும் தானும் வெவ்வேறு அல்ல என்பது போலவே பல சமயங்களில் ஸ்ரீ ஸ்வாமிகள் நடந்துகொண்டார். அவரை தன் வாரிசு, தனக்குப் பிறகு தன் கோட்பாடுகளை பரப்ப வேண்டியவர் என்கிற அளவுக்கு அன்பு கொண்டிருந்தார். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவ்வாறு நிகழவில்லை. அதைப்பற்றி விரிவாக அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# அத்தியாயம் 147

# நான் என் அவதாரத்தை முடித்துக் கொள்ளப் போகிறேன்...

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜை சந்துலால் என்று செல்லமாக அழைப்பார். ஸ்வாமி சுதமஹராஜை அக்கல்கோட்டில் பலர் வெறுத்ததாக முந்தைய அத்தியாயம் ஒன்றில் கூறப்பட்டிருந்ததை நிரூபிக்கும் வகையில் ஒரு நிகழ்ச்சி அக்கல்கோட்டில் நடைபெற்றது.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் காஸ்-பாக்கில் அமர்ந்திருந்தார். அன்று ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ், ஸ்ரீ ஸ்வாமிக்கு முன்னால் மரப் பாதுகைகளை அணிந்து கொண்டு பஜனைகள் செய்து கொண்டிருந்தார். அதை கவனித்த சேவகர்கள் ஸ்ரீ ஸ்வாமியை அவமானப்படுத்தும் நோக்கில் அவர் இவ்வாறு நடந்து கொள்கிறார் என்று கூறினார்கள். அவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் கூறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜை அந்த இடத்தை விட்டு அப்புறப் படுத்தினார்கள். இந்த நிகழ்ச்சி ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜுக்கு மாறாத காயமாக இருந்தது.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜிடம், **"நான் என் அவதாரத்தை முடித்துக் கொள்ளப் போகிறேன். நீ என் வாரிசாக இருந்து என் கொடியை நாட்ட வேண்டும். நான் வடநாட்டுக்குச் செல்லப் போகிறேன்"** என்று கூறினார். ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜினால் இதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இல்லாத இந்த உலகத்தில் தன்னால் வாழ முடியாது என்பது அவருக்குத் தெள்ளத் தெளிவாக புரிந்தது. ஒரு ஸ்ரவண மாதத்தில் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜுடைய உடல்நிலை சரியில்லாமல் போனது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவரை அக்கல்கோட் வருமாறு தகவல் அனுப்பினார். அவர் ஷிவுபாயை அனுப்பி வைத்தது சுதமஹராஜை கையோடு அக்கல்கோட் அழைத்துவரும்படி கூறியனுப்பினார். ஆனால் அவர் வருவதற்கு மறுத்துவிட்டார். பின்னர் ஸ்ரீபாத பட்டும், கிருஷ்ணப்பாவும் மும்பை வந்து ஸ்வாமி சுதமஹராஜை அக்கல்கோட்டுக்கு அழைத்தனர். அப்போதும் அவர் செல்ல மறுத்துவிட்டார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமி தேவ்ஜி மாலியிடம், **"அவனை கட்டி இங்கு கொண்டுவா"** என்று கூறியதும் நடைபெறவில்லை. **"நான்**

**பீரங்கியை தயார் நிலையில் வைத்திருக்கிறேன்! நீ பேசாமல் இங்கு வந்துவிடு, இல்லையேல் உன் குடிசையை வெடிக்கச் செய்து விடுவேன்"** என்று கூறினார். 'ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜுக்கு சாவு நெருங்கிக் கொண்டிருக்கிறது! அவர் அக்கல்கோட் வந்தால் அது தடுத்து நிறுத்தப்படும்!' என்கிற உள்ளர்த்ததில் இவ்வாறு கூறினார். சுதமஹராஜோ ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு முன்னால் தான் இந்த உலகத்தை விட்டு சென்றுவிட வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார். அவர் சாவைப் பற்றி துளியும் கவலைப் படவில்லை.

சேவகர்கள் பலரிடம் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜை கட்டி அக்கல்கோட்டுக்கு இழுத்து வாருங்கள் என்று கூறிக்கொண்டே இருந்தார்! ஒரு தாய் தன் மகனுக்கு ஏற்படப் போகும் ஆபத்துகளில் இருந்து எப்படியாவது காப்பாற்றிவிட வேண்டும் என்று தவிப்பதைப் போல ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் தவித்துக் கொண்டிருந்தார். ஆனால் விதிக்கப்பட்டது நடந்தே தீரும்! ஸ்ரவண மாதத்தில் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் தன் உயிரை நீத்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடன் ஒன்றரக் கலந்துவிட்டார்! மும்பை மடத்தில் ஆயிரக்கணக்கானவர்கள் கூடி ஓலமிட்டனர். ஜாதி,மத வித்தியாசம் இல்லாமல் அனைவரும் அவருடைய இறுதிச் சடங்கில் கலந்து கொண்டனர்.

ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜுடைய பக்தி வார்த்தைகளால் விவரிக்க முடியாத ஒன்று. ஸ்ரீ விட்டலுக்கு நாமதேவ், துக்காராம் எப்படியோ, ஸ்ரீ கிருஷ்ணருக்கு உத்தவரும் அக்ரூரரும் எப்படியோ, ஸ்ரீ ராமருக்கு மாருதியும் ராமதாசும் எப்படியோ அதேபோல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ். ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடன் கலந்து விட்டாலும் அவர் விட்டுச்சென்ற அபங்கங்கள் நமக்கு கிடைத்த பொக்கிஷம்! அவற்றை நாமும் ரசித்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பக்தியில் மூழ்கி அமிர்தத்தை பருகுவோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 148

# மயிலும் பாதரசக் கல்லும்

ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் சமாதி அடைந்த தகவல் அக்கல்கோட்டுக்கு தந்தி மூலம் தெரிவிக்கப்பட்டது. இந்த விஷயம் ஸ்ரீ ஸ்வாமிக்கு தெரியாதா என்ன! ஆனால் அவர் ஏதுமறியாதது போல அந்த தந்தியை காக்குபாய்க்கு முன்னால் கொண்டு வைக்கும்படி கூறினார். தகவல் வந்தபோது ஸ்ரீ ஸ்வாமி சேமிப்பு அறையில் இருந்தார். அன்று ஸ்ரீ ஸ்வாமி வினோதமாக நடந்து கொண்டார். அவர் தகவல் தெரிந்தவுடன் தன் படுக்கையில் இருந்து எழுந்து கொண்டு, தன் கைகளால் தலையில் அடித்துக் கொண்டார். பின்னர் ஒந்த்கரின் வீட்டுக்குச் சென்றார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளை குளிக்கிறீர்களா! என்று கேட்டதற்கு சரி என்று கூறினார். ஆனால் குளித்துவிட்டு தன் உடலை துடைத்துக் கொள்ளவில்லை. உடலில் எந்தவித வாசனைப் பொருட்களையும் தடவிவிட அனுமதிக்கவில்லை. நெற்றியிலும் திலகம் எதுவும் பூசிக் கொள்ளவில்லை. ஆரத்தி எடுக்க அனுமதிக்கவில்லை. அன்று மிகவும் நிலையற்ற பாணியில் நடந்து கொண்டார்.

காக்குபாய் தகவல் தெரிந்ததும் வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொண்டு கதறினாள். அவளை ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் எவ்வளவோ தேற்றிய போதும் அவளுடைய துக்கம் குறையவேயில்லை. அவள் மஹராஜிடம், **“ஸ்வாமி, நான் என் குழந்தையை உங்களிடம்தானே ஒப்படைத்தேன்! நீங்கள் அவனை செல்ல எப்படி அனுமதிக்கலாம்?”** என்று ஒப்பாரியுடன் கேட்டாள். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **“நான் அவனை என் நெஞ்சில் சுமந்தேனே! எவ்வளவோ கூப்பிட்டு அனுப்பியும் அவன் வரவில்லையே! நான் என்ன செய்வது? நீ என்னை மகனாக ஏற்றுக் கொள். நான் அவனை நற்கதிக்கு அனுப்பியிருக்கிறேன்”** என்று கூறித் தேற்றினார். காக்குபாய் மிகுந்த பாக்கியசாலி! ஸ்ரீ ஸ்வாமிகளுக்கே தாயாகிவிட்டாளே! அவள் எப்போதெல்லாம் தன் மகனை நினைத்து அழுதாளோ அப்போதெல்லாம் ஸ்ரீ ஸ்வாமி அவளை தன் மார்போடு அணைத்துக் கொண்டு தேற்றினார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் பதினைந்து நாட்களுக்கு அவளுடனே இருந்து அவளுடைய மனோநிலையை சரி செய்தார். என்ன ஒரு பாக்கியம்! ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பக்தவத்சலன் ஆயிற்றே!





பின்னர் ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமிகள், **"மயில், மயில்"** என்கிற வார்த்தையை மீண்டும் மீண்டும் கூறிக்கொண்டே இருந்தார். எவருக்கும் அதன் அர்த்தம் புரியாததால், ஒரு சேவகர் காஸ்-பாகில் இருந்து மயில் ஒன்றை கொண்டுவந்தார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி அதை துளிகூட சட்டை செய்யவில்லை. அப்படியென்றால் ஸ்ரீ ஸ்வாமி வேறு எதையோ உணர்த்த நினைக்கிறார்! ஆனால் அவர் அவ்வாறு கூறுவது தொடர்ந்து கொண்டுதான் இருந்தது. அவர் காக்குபாயிடம், **"எனக்கு வேண்டியதை நீ கொடுப்பாயா?"** என்று கேட்டதற்கு, "என்னிடம் இப்போது என்ன இருக்கிறது!" என்றாள். அதற்கு, **"எனக்கு பாதரசக் கல்லைக் கொடு"** என்று பதிலளித்தார். **"ஸ்வாமி, அதற்கு நான் எங்கே போவது! நான் எவரிடமிருந்தாவது அதை எடுக்க வேண்டுமா? அல்லது கல்லின்மீது பாதரசம் பூசிக் கொடுக்க வேண்டுமா?"** என்று கேட்டதற்கு, **"நீ மறைத்து வைத்திருப்பதைக் கொடு"** என்றார். இதேபோன்று ஸ்ரீ ஸ்வாமி நாள் முழுவதும் கூறிக்கொண்டிருந்தார். அதன் அர்த்தம் என்ன என்பதை எவராலும் புரிந்து கொள்ள முடியவில்லை.

ஒருநாள் பிரம்மச்சாரி புவா, பாபா ஷென்வாய், கேரோபா மற்றும் சிலர் மும்பையிலிருந்து வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு, அவருடைய வாரிசு யார் என்று கேட்டனர். சிலர் பிரம்மச்சாரி புவாவை பரிந்துரைத்ததற்கு ஸ்ரீ ஸ்வாமி, **"அவன் உபயோகமற்றவன். அவன் கழிவுகளை கழுவதற்குத்தான் சரி. பாபா ஷென்வாயும் எந்த பிரயஜனமும் இல்லை"** என்றார். மீண்டும் **"மயில்..மயில்"** என்று கூறத் தொடங்கினார். பின்னர், **"நீங்கள் அனைவரும் அமைதியாக இருங்கள். நான் மயிலை கொண்டு வருகிறேன். என் மனதில் என்ன தோன்றுகிறதோ அதைச் செய்வேன்"** என்று கூறி அனைவர் வாயையும் அடைத்தார். மஹராஜ் எப்போதும் ஒரு குச்சியை வைத்துக் கொண்டு நடந்து செல்வார். காக்குபாய் பிரம்மச்சாரி புவாவிடம் ஸ்ரீ ஸ்வாமிக்கு ஒரு நல்ல குச்சியை வாங்கிக் கொடுக்குமாறு கூறினாள். அந்த புதிய குச்சியைப் பார்த்து, **"இது மயிலுக்குத்தான் தேவைப்படும்"** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறினார். காக்குபாய் ஒரு வெகுளி. அதே அவள் ஒரு விவேகமுள்ள பெண்ணாக இருந்திருந்தால் ஸ்ரீ ஸ்வாமி கூறும் 'மயில் மற்றும் பாதரசக் கல்'லின் அர்த்தத்தைப் புரிந்து கொண்டிருப்பாள்.

காக்குபாய்க்கு எட்டு அல்லது ஒன்பது வயதில் ஒரு மகன் இருந்தான். அவனது பெயர் தாதா, கொங்கனில் வசித்து வந்தான். மஹராஜ் அவனைத்தான் **'மயில், பாதரசக் கல்'** என்று கூறிக்கொண்டிருந்தார். தாதா ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருளால் சந்நியாச தீக்ஷை பெற்றுக்கொண்டு ஸ்ரீ ஸ்வாமி

சுதமஹராஜ் ஏற்படுத்திய மடங்களை கவனிக்கும் பொறுப்புகளை ஏற்றுக் கொண்டார். தொடக்கத்தில் தாதா, சிறுபிள்ளை என்பதால் இவை எதையும் விரும்பவில்லை. காக்குபாய் எப்படி தன் மகன் ஹரிபாவ் சந்நியாசம் பெற்றுக் கொள்வதை விரும்பவில்லையா அதேபோல் தாதா சந்நியாசி ஆவதையும் விரும்பவில்லை.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தாதாவை அக்கல்கோட்டுக்கு வரவழைத்தார். சில நாட்கள் அவர் அங்கு தங்கியிருந்த போது, ஸ்ரீ ஸ்வாமி அவருடைய தலையில் தன் பாதுகைகளை வைத்து சந்நியாச விருப்பத்தை அவருக்கு ஏற்படுத்தினார். காக்குபாய் அவரிடம் இந்த வேஷம் உனக்கு வேண்டாம் என்று கெஞ்சியபோது, **"நீங்கள் என்னைவிட்டு சென்றபோது எனக்கு ஆறு வயது. அப்போதில்லாத அக்கறை இப்போது வந்துவிட்டதா? இனி நான் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய சொத்து, ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் என்னுடையவர். நான் உங்களுடையவன் கிடையாது"** என்று கூறியபின் அவளால் எந்த மறுவார்த்தையும் பேச முடியவில்லை. அடுத்த நாளில் இருந்து தாதா வீடுவீடாக பிக்ஷை எடுக்கத் தொடங்கினார். இவற்றைப் பார்த்து வருத்தம் அடைந்த காக்குபாய் மஹராஜிடம் சென்று கோபத்துடன் சண்டையிட்டாள். அவர் அவளை ஒரு அறையில் வைத்து பூட்டுமாறு கோபத்துடன் கூச்சலிட்டார். பின்னர் அவள் சுந்தராபாயி போன்ற சேவகர்களிடம் சென்று ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் பரிந்துரைக்குமாறு கேட்டதற்கு, அவர் அவர்களை அடிப்பதற்காக தன் பாதுகைகளுடன் ஓடி வந்தார்.

ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் தாதாவை தன் மடியில் படுக்கவைத்துக் கொண்டு காதுகளில் ஊதி விளையாடுவார். அவ்வாறு ஒருநாள் விளையாடிக் கொண்டிருக்கும் போது காக்குபாயை அழைத்துவரச் சொல்லி அவளுடைய பாதங்களில் தாதாவை நமஸ்கரிக்குமாறு கூறினார். **"காக்குபாய் இனி உன்னுடைய தாய் கிடையாது. நீ அவளுடைய மகன் கிடையாது. நீ என்னுடையவன்"** என்று கூறி தன் கரங்களை தாதாவின் தலையில் வைத்தார். சச்சிதானந்த ஸ்வாமி குமார் என்கிற நாமத்துடன் தாதா மும்பை மடத்தில் தன் பணிகளை செய்து வந்தார். ஸ்ரீ ஸ்வாமியின் அருளால் தாதா மும்பை மடத்துக்கு புதிய கட்டிடத்தை எழுப்பி ஆத்மலிங்கத்தை அந்த மடத்தில் ஸ்தாபனம் செய்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழை பறக்கவிட்டார்.

ஹரிபாவ் என்கிற ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் மற்றும் அவருடைய குடும்பத்தின் மீது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கொண்டிருந்த அன்பு வர்ணனைக்கு

அப்பாற்பட்டது. காக்குபாய் எவ்வளவு புண்ணியம் செய்தவள் என்பதை புரிந்து கொள்ளும் பக்குவம் அவளுக்கு இல்லாததால், அவள் தன் இரு மகன்களையும் ஸ்ரீ ஸ்வாமி ஆட்கொண்ட போது தடுத்தாள். அவளுடைய தாய்ப்பாசம் அவள் கண்ணை மறைத்தது. இருப்பினும், அது எதையுமே ஸ்ரீ ஸ்வாமி பொருட்படுத்தாமல் அவர்கள் இருவரையும் தன் வசப்படுத்தி உலக நலனுக்காக சேவைகள் செய்ய வைத்து நற்கதி பெறச் செய்தார்.

இந்த அத்தியாயங்களைப் படித்து தெரிந்துகொண்டதால் மட்டுமே நாம் புண்ணியம் செய்தவர்கள் ஆனோம்! ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழ் மேலும் மேலும் பரவ நம்மையும் அவர் ஒரு கருவியாக எடுத்துக் கொண்டமைக்கு அவர் பாதகமலங்களில் நமஸ்கரித்து இந்த அத்தியாயத்தை நிறைவு செய்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 149

# சோலாப்பூரைச் சேர்ந்த நாராயண் பரசுராம்

சோலாப்பூரைச் சேர்ந்த நாராயண் பரசுராம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தர். அவரை ஸ்ரீ ஸ்வாமி கணபதி என்று அழைப்பார். நாராயண் மூலநோயினால் பாதிக்கப்பட்டிருந்தார். அவர் அனைத்து வைத்திய முறைகளை கையாண்டும், எந்தவித முன்னேற்றமும் ஏற்படவில்லை. நிலைமை மோசமானது. வேறு வழி இல்லாமல், அறுவை சிகிச்சை செய்வது என்று முடிவானது. அவர் நாளுக்கு நாள் பலவீனமாகிக் கொண்டே போனார். வீட்டில் கூட நடக்க முடியாத நிலை உருவானது. இறுதியாக தன் நிலையை அக்கல்கோட்டில் உள்ள பக்தரான மோரோபந்திடம் கடிதம் மூலம் தெரிவித்து, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் விண்ணப்பிக்குமாறும், அவரிடம் தனக்கு ஏதாவது வைத்திய முறையை கூறுமாறு பிரார்த்தனை செய்து கொள்ளச் சொன்னார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் அவரிடம், கோமியத்தை குடித்தால் நோய் குணமாகிவிடும் என்று கூறினார். இந்த வைத்தியத்தை மோரோபந்த் கடிதத்தில் எழுதி அனுப்பி

வைத்தார். அவர் சில நாட்களுக்கு அவ்வாறு செய்தவுடன், அவருடைய நோய் முற்றிலுமாக குணமானது.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் வினோதமான வைத்திய முறைகளைக் கூறி, நோய்களை குணப்படுத்தியிருப்பதை முந்தைய பல அத்தியாயங்களில் தெரிந்து கொண்டிருக்கிறோம். இதுபோன்ற லீலைகள் மூலம் அற்புதங்களை செய்து காட்ட வேண்டும் என்பது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நோக்கம் அல்ல. பக்தர்கள் குருவின் மீது கொண்டிருக்கும் முழு நம்பிக்கையே அவர்களுடைய அனைத்து பிரச்சனைகள் மற்றும் நோய்களில் இருந்து அவர்களை காப்பாற்றும் என்பதை உணர்த்துவதுதான் அவருடைய நோக்கம். ஆகவே நாமும் எந்தவித சந்தேகமும் இல்லாமல், குருவை முழு நம்பிக்கையுடன் துதிப்போமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 150

# வாசுதேவ் பல்வந்த் பட்கே

வாசுதேவ் பல்வந்த் பட்கே ஒரு சுதந்திரப் போராட்ட வீரர். கி.பி. 1857 சிப்பாய் கலவரத்திற்குப் பிறகு ஆங்கிலேயர்களின் அடக்குமுறை மிகவும் அதிகமாக இருந்ததால், மக்களின் நிலைமை மிகுந்த பரிதாபகரமாக ஆனது. கிறித்துவ மத போதகர்கள் தாழ்த்தப்பட்ட மக்களை தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்து, அனைவரையும் மதமாற்றம் செய்து கொண்டிருந்தனர். அச்சமயத்தில் வாசுதேவ் பல்வந்த் சுதந்திரப் போராட்டங்களில் கலந்து கொண்டு, தன் தாய்மண்ணை ஆங்கிலேயர்களிடமிருந்து காப்பற்ற வேண்டும் என்கிற முனைப்புடன் செயல்பட்டுக் கொண்டிருந்தார். அவர் முழுமூச்சாக போராட்டத்தில் இறங்குவதற்கு முன்பு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அறிவுரைகளைப் பெற்றுக் கொள்ளலாம் என்கிற எண்ணத்துடன் அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தார்.

வாசுதேவ் ஸ்ரீ தத்தாத்ரேயரின் பரம பக்தர். அவர் தத்தாத்ரேயரின் மேல் '**தத்த லஹரி**' என்கிற பெயரில் பல பாடல்களைப் பாடியிருக்கிறார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம் என்பதால், தன் பணிகளைத் துவங்குவதற்கு முன்னர் ஸ்ரீ ஸ்வாமியுடைய ஆசீர்வாதம் கண்டிப்பாக வேண்டும் என்று அவர் விரும்பினார். வாசுதேவ் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு, ஒரு வீரவாளை எடுத்து அவருடைய பாதங்களில் வைத்தார். தன் முயற்சிகளுக்கும், இந்த வாளுக்கும் ஆசீர்வாதங்களை வழங்குமாறு பிரார்த்தனை செய்து கொண்டார்.

ஸ்ரீ ஸ்வாமி அந்த வாளை எடுத்து தன் சேவகர் ஒருவரிடம் கொடுத்து, அருகில் இருக்கும் மரத்தில் வைக்குமாறு கூறினார். அந்த வாளை மீண்டும் வாசுதேவிடம் அளிக்கவில்லை. **"இதற்கு இன்னும் நேரம் வரவில்லை"** என்று அவரிடம் ஸ்ரீ ஸ்வாமிகள் கூறினார். இது வாசுதேவுக்கு மிகுந்த ஏமாற்றத்தை அளித்தது. இருப்பினும் அவர் தன் முயற்சிகளை கைவிடாமல், ஒரு சில போராட்டங்களில் கலந்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகள் அறிவுறுத்தியது போலவே அவர் அனைத்து முயற்சிகளிலும் தோல்வி அடைந்தார். அவர் பின்னர் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார். கி.பி. 1883 ஆம் ஆண்டு தனது 38வது வயதில் தன் இன்னுயிரை நீத்தார்.

சரியான நேரம் கனிந்து வரும்போதுதான் அனைத்து செயல்களிலும் வெற்றி பெற முடியும். பொறுமை இல்லாமல் அவசரப்பட்டால் தோல்விதான் வந்து சேரும். இதைத்தான் அவருக்கு ஸ்ரீ ஸ்வாமி முன்பே அறிவுறுத்தினார். இருப்பினும், விதி மிகவும் வலியது. அதனால் வாசுதேவ் என்னும் வீரனை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அறிவுரைகளை கேட்கவிடாமல் மரணம் ஆட்கொண்டு வந்துவிட்டது. ஆகவே, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வார்த்தைகளையும், அறிவுரைகளையும் பின்பற்றி வாழ்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 151

# அனைத்து உயிரினங்களுக்குள்ளும் நான் இருக்கிறேன்...

அக்கல்கோட்டில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய பரம பக்தரான கோண்டூ நானா என்றொருவர் இருந்தார். அவர் தன் வாயை காஸ்பாக்கில் உள்ள ஒரு கிணற்றில் சுத்தப்படுத்திக் கொண்டிருந்தார். அப்போது அவ்வழியாக பாம்பகர் சாஹேப் வந்து கொண்டிருந்தார். பொதுக் கிணற்றை எவரோ அசுத்தம் செய்து கொண்டிருப்பதைப் பார்த்த அவர், கோண்டூ நானாவை கெட்ட வார்த்தைகளால் வசை பாடிவிட்டு, தன் பூட்ஸ் கால்களால் அவரை இரண்டு அல்லது மூன்று முறை உதைத்தார். இதைத் தாங்க முடியாமல் கோண்டூ ஸ்ரீ ஸ்வாமியிடம் சென்று தனக்கு நேர்ந்தவைகளை விவரித்தார். அனைத்து விவரங்களையும் கேட்டுக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமி பதிலேதும் அளிக்கவில்லை.

சில நாட்களுக்குப் பிறகு, சாஹேப் எந்த காலினால் கோண்டூவை உதைத்தாரோ அந்த காலில் அவருக்கு காயம் ஏற்பட்டது. காயத்தின் தீவிரம் அதிகமாக இருந்ததால், அவரால் அந்தக் காலை நகர்த்தவே முடியவில்லை. அவர் எவ்வளவோ வைத்திய முறைகளை கையாண்டும் எதுவும் பலனளிக்கவில்லை. காலை வெட்டி எடுத்துவிட வேண்டும் என்று மருத்துவர் கூறிவிட்டார். சாஹேப் மனமுடைந்து விட்டார். அவர் மோரோ காசி என்கிற மாம்லத்தாரை விட்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் தன் காலுக்காக பிரார்த்தனை செய்து கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். மோரோ காசி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் தெரிவித்தவுடன், **"ஏ முட்டாளே! இதை ஏன் என்னிடம் கூறுகிறாய்?"** என்றார். சாஹேப்பினால் ஸ்ரீ ஸ்வாமிகளின் கோபத்திற்கான காரணத்தை புரிந்து கொள்ள முடியவில்லை.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் உலாவிக் கொண்டே சாஹேபின் பங்களாவை அடைந்தார். மஹராஜைப் பார்த்தவுடன் சாஹேப் தன் நாற்காலியை விட்டு எழுந்து அவருக்கு சலாம் கூறினார். அவர் மஹராஜிடம், **"நீங்கள் எங்கு சென்று கொண்டிருக்கிறீர்கள்?"** என்று கேட்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, "உன் மனைவியிடம்.." என்று பதிலளித்தார். சாஹேப் தன்னைத்தானே நொந்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமி அவரிடம், **"போசடிக்கே, நீ என்னை காலால்**

**உதைத்துவிட்டு, என்னிடமே மருந்து கேட்கிறாயா?"** என்று கோபமாகக் கூறினார். உடனே தான் கோண்டூ நானாவை உதைத்தது அவருக்கு நினைவுக்கு வந்தது.

ஸ்ரீ ஸ்வாமி மஹராஜின் கோபத்திற்கான காரணத்தை உணர்ந்து கொண்ட சாஹேப், தன் தலையை ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தின் மீது வைத்து, **"ஸ்வாமி, தயவுசெய்து என்னை மன்னித்துவிடுங்கள். என்னால் இந்த வலியின் வேதனையை தாள முடியவில்லை. ஏதாவது மருந்து கூறுங்கள்"** என்று கெஞ்சினார். மனம் திருந்தி மன்னிப்பு கேட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கருணை அவர்மீது பொழியத் தொடங்கியது. **"ஹலீமை (ஆளி விதையைப் போன்றது) தாராளமாக எடுத்துக் கொண்டு, அரிசி களைந்த தண்ணீருடன் சேர்த்து குடி, அதையே உன் காயத்தின் மீதும் தடவு."** என்று கூறினார். இவ்வாறு எட்டு நாட்களுக்கு செய்தவுடன் அவருடைய கால் முற்றிலும் குணமடைந்தது.

தவறு செய்வது மனித இயல்பு. அதை உணர்த்தி மன்னித்து அருள்வது தெய்வத்தின் இயல்பு. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் தர்பாரில் எந்தவித தவறுக்கும் மன்னிப்பு உண்டு, ஆனால் தன் தவறை உணர்ந்துகொண்டு திருந்தியவர்களுக்கு மட்டுமே! சாஹேப் அவர் செய்த தவறுக்கான தண்டனையை அனுபவித்துவிட்டார். பின்னர் மனம் திருந்தி மன்னிப்பு கேட்டவுடன், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அபயக்கரம் அவரை அணைத்துக் கொண்டு காப்பற்றி விட்டது. கருணாமூர்த்தியான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி உண்டாகட்டும்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 152

# அக்கல்கோட்டிலும் இருப்பார்... மற்ற இடங்களிலும் இருப்பார்...

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட்டில் வசித்து வந்தாலும், அவர் பல பக்தர்களுக்கு வேறு இடங்களிலும் காட்சி அளித்திருக்கிறார். அதை நிரூபிக்கும் விதமாக இரண்டு நிகழ்ச்சிகள் இந்த அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

## 1. துக்கோஜிராவ் ஹோல்கர்

ஒருமுறை துக்கோஜிராவ் ஹோல்கர் தன் இரு மகன்களுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்திருந்தார். அச்சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அண்ணா அர்னால்கரின் வீட்டுக்கு பின்னால் இருக்கும் ஆலமரத்தின் கீழே படுத்துக் கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்தவுடன் ஹோல்கர் ஆனந்தக் கண்ணீருடன், **"மஹராஜ் நீங்கள் எனக்கு அபு மலையில் தரிசனம் அளித்தீர்கள். இது இரண்டாவது முறை"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் அங்கு சுற்றியிருந்த மக்கள் அனைவரும், **"மஹராஜ் எப்போது அபு மலைக்குச் சென்றார்? அவர் எப்போதும் அக்கல்கோட்டில் தானே இருக்கிறார்!"** என்று பேசிக்கொண்டனர். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் எந்த உருவத்தில் தன் பக்தர்களுக்கு தரிசனம் அளிக்கிறார் என்பதைப் பற்றி எவருக்குமே தெரியாது. ஹோல்கர் அக்கல்கோட்டில் நான்கு நாட்கள் தங்கியிருந்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்குச் சேவைகள் செய்தபின்னர், பிராமணர்களுக்கு போஜனம் அளித்தார். பிறகு தன் சொந்த ஊருக்குச் சென்றுவிட்டார்.

## 2. நாராயண் பட்டுக்கு தரிசனம்

ஒருமுறை சக வருடம் *1792*இல் (கி.பி. *1870*) கேத் என்கிற ஊரைச் சேர்ந்த நாராயண் பட் ஸ்ரீகிரி மலையில் உள்ள வெங்கடேஸ்வர ஸ்வாமியை தரிசனம் செய்துவிட்டு திரும்பிக் கொண்டிருந்தார். அங்கு அவருக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தரிசனம் அளித்தார்.

அவர் அங்கு மஹராஜைக் கண்டவுடன் அவரிடம், **"மஹராஜ், நீங்கள் அக்கல்கோட்டில் தானே இருந்தீர்கள்? இங்கு எப்படி வந்தீர்கள்?"** என்று கேட்டார். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி, **"இது மிகவும் பழமையான கோவில். நான் இங்கு லக்ஷ்மி தேவியின் உற்சவங்களில் கலந்து கொள்ள வருவேன். நான் இங்கு எப்போதும் வருவேன்"** என்று கூறினார்.

நாராயண் பட் அக்கல்கோட் வந்தடைந்தவுடன் இந்த நிகழ்ச்சியைப் பற்றி அனைவரிடமும் ஆச்சரியத்துடன் விவரித்தார். உடனே சேவகர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமியிடம், **"மஹராஜ், நீங்கள் எப்போது அங்கு சென்றீர்கள்?"** என்று வினவியதற்கு, **"நான்கு மாதங்களுக்கு முன்பு.."** என்று கூறினார்.

ஆனால் மஹராஜ் அக்கல்கோட்டை விட்டு எங்குமே செல்லவில்லை என்பதை அனைவரும் அறிந்திருந்தனர். அருகில் இருக்கும் சில ஊர்களுக்குச் சென்றாலே இந்த சேவகர்கள் அவருடன்தான் இருப்பார்கள், அப்படியிருக்க

ஸ்ரீ ஸ்வாமி எப்படி அவ்வளவு தொலைவில் இருக்கும் இடத்திற்கு சென்றிருக்க முடியும் என்பது அனைவருக்கும் மிகுந்த ஆச்சரியத்தை அளித்தது.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நேரம், இடம், காலம் போன்ற விஷயங்கள் அனைத்தையும் கடந்தவர். அவர் நினைத்த மாத்திரத்தில் தனக்கு வேண்டிய இடங்களில் தன் பக்தர்களுக்கு காட்சியளிப்பார். அவருடைய அபார சக்தியை புரிந்துகொள்ளாத கூட்டமே அவருக்கு அருகில் மிகுதியாக சூழ்ந்திருந்தனர். அவருடைய உண்மையான சக்தியை உணர்ந்து கொண்டவர்கள் மிகவும் பாக்கியசாலிகள்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 153

# ஆலந்தி ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி ஸ்வாமி

ஆலந்தி ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி அல்லது விட்டல் ஸ்வாமி பண்டரிபுரத்தைச் சேர்ந்தவர். அவர் மிகச் சிறந்த பண்டிதர், யோகத்தில் உயர்ந்த நிலையில் இருந்தார். அவர் ஹடயோகத்தை பல நாட்களாக பயிற்சி செய்து கொண்டிருந்தார். அவர் தொடர்ந்து செய்து கொண்டிருந்த பயிற்சிகளால், அவருடைய ஆக்ஞா சக்கரம் விழிப்பு நிலையில் இருந்தது. பின்னர் சஹஸ்ரார சக்கரமும் விழிப்படைந்து, ஆனால் மண்டை ஓட்டில் இருக்கும் சிறிய துவாரமான பிரம்மரந்திரத்தை துளைப்பதற்காக அவர் எவ்வளவு முயற்சி செய்தும் அவரால் அந்த நிலையை அடைய முடியவில்லை. இதுதான் யோகத்தின் கடைசி நிலையான, ஜீவாத்மாவும் பரமாத்மாவும் கலக்கும் நிலை. அவர் அதை போதிப்பதற்கான சரியான குருவை தேடி அலைந்து கொண்டிருந்தார். அப்போது, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரைப் பற்றி கேள்விப்பட்டு அக்கல்கோட் வந்தடைந்தார்.

அன்று ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அரண்மனைக்கு வெளியே உள்ள களஞ்சியத்தின் வாயிலில் அமர்ந்திருந்தார். தன்னை தரிசனம் செய்வதற்காக ஒரு மகான் வருகிறார் என்பதை உணர்ந்து கொண்ட ஸ்ரீ ஸ்வாமி, தன் சேவகர்களிடம் தனக்கருகில் மான் தோல் ஆசனத்தைத் தயார் செய்து வைக்குமாறு கூறினார்.

அது மதிய வேளை, வெயில் சுட்டெரித்தது. ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்ய வந்துகொண்டிருந்தார். அவர் அருகில் வந்தவுடன் ஆக்ஞா சக்கரத்தைப் பற்றி விளக்கும் ஒரு சமஸ்கிருத ஸ்லோகத்தை ஸ்ரீ ஸ்வாமி கூறினார். யோகப் பார்வையால் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியைப் பார்த்தவுடன், அவர் சமாதி நிலைக்குச் சென்றுவிட்டார். இரண்டு மணி நேரங்களுக்கு பேரானந்த நிலையிலேயே அவர் இருந்தார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமி மீண்டும் தன் அருட்பார்வையை அவர்மீது செலுத்தியதும், தன் சுயநினைவுக்கு வந்தார். இவ்வளவு பயிற்சிகள் செய்தும் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியால் அடையமுடியாத அந்த பேரானந்த நிலையை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருட்பார்வை அருளிவிட்டது. இதற்குப் பெயர்தான் தீர்க்க தரிசனம்!

ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி எந்த நோக்கத்திற்காக ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்ய வந்தாரோ, அது எளிதாக நடந்து விட்டது! அவர் தன் ஆன்மிக தாகத்தைத் தணித்துக் கொள்ளும் விதமாக ஆலந்தி என்னும் இடத்தில் நிரந்தரமாகத் தங்கினார். அந்த இடத்தில்தான் ஞானேஸ்வர் மஹராஜ் என்னும் மகானுடைய ஜீவசமாதி அமைந்துள்ளது. அந்த புனிதம் வாய்ந்த இடத்தில் வசித்த பிராமணர்கள் வேதம், பகவத்கீதை மற்றும் ஞானேஸ்வரி ஆகிய புனித நூல்களை பாராயணம் செய்யாமல், இழிவான நிலையில் இருந்தனர். இதைப் பார்த்து மனமுடைந்த ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி, தன் யோக சித்திகள் மூலம் சுவையான உணவு பதார்த்தங்களை வரவழைத்து, அவ்வூரிலிருந்த பிராமணர்களுக்கு விருந்து வைத்தார். அதில் மிகவும் மகிழ்ச்சி அடைந்த பிராமணர்களிடம் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி, ஞானேஸ்வரியை தினமும் பாராயணம் செய்தால், இதேபோல விருந்து அளிப்பதாக உறுதி செய்தார். இவ்வாறு செய்யத் தொடங்கிய சில நாட்களிலேயே ஞானேஸ்வரியின் மீது அவர்களுக்கு நாட்டம் ஏற்படத் தொடங்கியது. தன் சித்திகளைக் கொண்டு அவ்வூரில் இருந்த பிராமணர்களை நல்வழிப்படுத்தி தர்மத்தை நிலைநாட்டினார்.

ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி அர்ஜுனனின் மறுஅவதாரம் என்று கருதப்படுகிறார். இதை நிரூபிக்கும் விதமாக ஒரு நிகழ்ச்சி ஆலந்தியில் நடைபெற்றது. ஞானேஸ்வர் மஹராஜுடைய பாதுகைகளை ஒரு மரத் தேரில் வைத்து ஊர்வலமாக எடுத்துச் செல்லும் வைபவம் நடைபெற்றது. அந்தத் தேர் மிகவும் உறுதியானதாக இருந்தமையால், அதை இழுக்க பலர் முயன்று கொண்டிருந்தனர். இருப்பினும் அது இருந்த இடத்தைவிட்டு நகராமல் அப்படியே நின்று கொண்டிருந்தது. இதனால் ஊர்வலம் தொடங்க முடியாமல் இருந்த சூழ்நிலையில், யோக சமாதியில் இருந்த ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியின் தியானத்தைக் கலைத்து, அவரிடம்





அனைத்து விவரங்களையும் தெரிவித்தனர். **"என் அருமை கிருஷ்ணா! என் பூர்வஜென்மத்தில் நீ எனக்கு சாரதியாக இருந்தாய். இப்போது நீ என்னை சாரதியாக இருக்க சொல்கிறாயா? உன் எண்ணம் போலவே நடக்கட்டும்"** என்று கூறிக்கொண்டே தேரின் மீது ஏறி அமர்ந்து கொண்டு அவர் கடிவாளத்தை பிடித்தவுடன் தேர் நகர்ந்தது.

இந்த இரு நிகழ்ச்சிகள் ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியின் அபார சக்தியை எடுத்துக் கூறுகிறது.

**இரண்டாவது முறையாக அக்கல்கோட் வருகை**

ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி இரண்டாவது முறையாக அக்கல்கோட் சென்றபோது ஸ்ரீ ஸ்வாமி ராமர் கோவிலில் தன் பக்தர்கள் மற்றும் சேவகர்கள் புடைசூழ இருந்தார். ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்தவுடன், சாஷ்டாங்கமாக அவர் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். உடனே ஸ்ரீ ஸ்வாமி அவரிடம், **"என்ன? இன்னும் உன் வேசி தொடர்பை விடவில்லையா?"** என்று கேட்டார். இதைக் கேட்டவுடன் சுற்றியிருந்த அனைவருக்கும் மிகுந்த அதிர்ச்சியாக இருந்தது. **"மஹராஜ், இப்போது நீங்கள் என்னை எச்சரித்து விட்டீர்கள். உங்கள் கருணையினால் நான் முழுமையாக விட்டுவிடுகிறேன்"** என்று அவர் பதிலளித்தார். உடனே மஹராஜ் வயிறு குலுங்க பலமாக சிரித்தார். ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொண்டு விடைபெற்றுச் சென்றார்.

இங்கு ஸ்ரீ ஸ்வாமி வேசி என்று குறிப்பிட்டது, சித்திகளை. யோக சக்திகள் சித்திகளை பயன்படுத்துவதற்குத் தூண்டும். அவ்வாறு செய்தால் பயிற்சி கைகூடாமல் போய்விடும். பயிற்சியின் நோக்கம் இந்த சித்திகளை வெளிப்படுத்துவதில் இல்லை, தெய்வீகத்தை உணர்வதில்தான் இருக்கிறது. ஆகவே ஸ்ரீ ஸ்வாமி அவரை சித்திகளை பயன்படுத்துவதை நிறுத்துமாறு அறிவுரை வழங்கினார்.

ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி ஆலந்தியில் 12 ஆண்டுகள் வாழ்ந்தார். அவர் யோகப் பயிற்சிகளை செய்து கொண்டும், பல நற்காரியங்களைச் செய்து கொண்டும் அங்கு வாழ்ந்து பல பக்தர்களை நல்வழிப் படுத்தினார். அவருடைய சமாதி கோவில் ஆலந்தியில் அமைந்துள்ளது. இன்றும் அவருடைய பக்தர்கள் அவருடைய புண்ணிய திதியை கோலாகலமாகக் கொண்டாடி வருகின்றனர்.

யோகிகளுக்கெல்லாம் மஹாயோகியான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதிக்கு குருவாக இருந்து அவருடைய யோகப்பாதையை சீர்படுத்தி அவரை உன்னதமான நிலைக்கு கொண்டு சென்றார். நாமும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் இந்த உலகத்திற்கான வஸ்துக்களை வேண்டி பிரார்த்தனை செய்யாமல், உன்னதமான யோகப் பாதைக்கு அழைத்துச் செல்லும்படி பிரார்த்தனை செய்து கொண்டு இந்த அத்தியாயத்தை நிறைவு செய்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 154

# மாலோஜி மன்னருக்கு தரிசனம்

அக்கல்கோட் மன்னரான மாலோஜிராவ் ராஜே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தர் என்பதை நாம் அறிவோம். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய அருள் அவருடைய சந்ததியினர் அனைவருக்கும் இருக்கிறது. அக்கல்கோட்டின் இப்போதைய மன்னரான மாலோஜிராவ் ராஜே *III* (2023) கூட ஸ்ரீ ஸ்வாமிகளின் பரம பக்தர். இந்த அத்தியாயத்தில் மாலோஜிராவ் ராஜேவுக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் காட்சியளித்த இரண்டு சம்பவங்கள் விவரிக்கப்பட்டுள்ளது.

**1. மாலோஜிராவ் ராஜேவுக்கு சோலாப்பூரில் தரிசனம்**

அது ஆங்கிலேயர்களின் ஆட்சி காலம். அக்கல்கோட் மாநிலத்தை விட்டு மாலோஜிராவ் ராஜே செல்ல வேண்டும் என்று ஆணை பிறப்பிக்கப்பட்டிருந்தது. அதனால் அவர் சோலாப்பூரில் வசித்து வந்தார். அவரால் அக்கல்கோட்டுக்குள் சென்று ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்ய முடியவில்லை, அதனால் அவர் மிகுந்த வருத்தத்தில் இருந்தார். சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமி, சோலாப்பூருக்கு ஒரு மைலுக்கு முன்னால் இருக்கும் தர்மராவ் போபடே என்கிற பூங்காவில் தங்கியிருந்தார். மிகவும் மகிழ்ச்சி அடைந்த மன்னர் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக நடந்தே சென்றார்.

மன்னர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு, வைரம் பதித்த அடிக்கையை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அணிவித்தார். ஆடம்பரமான

வேலைப்பாடுகளுடன் கூடிய ஒரு தொப்பி, கமண்டலம், ஒரு பாதுகை ஆகியவற்றையும் அணிவித்தார். அவர் உடல் முழுவதும் குங்குமப்பூ மற்றும் கஸ்தூரி கலந்த கலவையை பூசிவிட்டார். அந்த பூங்காவில் பூப்பந்தலால் அலங்கரித்திருந்தார், அதன் நறுமணம் அந்த இடம் முழுவதும் நிரம்பியிருந்தது. மேலும் அந்த இடம் முழுவதிலும் விளக்குகள் ஏற்றப்பட்டு, அலங்காரம் செய்யப்பட்டது. மன்னர் ஸ்ரீ ஸ்வாமியை ஒரு சிம்மாசனத்தில் அமருமாறு பணிந்தார். இரவு பத்து மணிவரை பக்தர்கள் கூட்டம் அலைமோதியது. பக்தர்கள் தங்களுக்குப் பிடித்தமான சேவைகளை செய்து கொண்டு, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நாமத்தை கோஷமிட்டுக் கொண்டிருந்தனர். ஸ்ரீ ஸ்வாமியின் வருகையால் தேங்காய் மற்றும் பழங்களின் விலை அதிகரித்தது. ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னால் தேங்காய் மலைபோல குவிந்திருந்தது.

மன்னர் பல நாட்களாக ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்ய முடியாத ஏக்கம் அன்று தணிந்தது. அவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் அன்று நாள் முழுவதும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்தார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் துரோகிகளைக் கூட ஆசீர்வதிக்கும் போது, தன் பக்தனை ஆசீர்வதிக்கமாட்டாரா? சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமி அக்கல்கோட் வந்தடைந்த பின்னர், ஆங்கிலேயர்கள் அக்கல்கோட் மன்னர் மீது பிறப்பித்த ஆணையை திரும்பப் பெற்றுக் கொண்டனர். மாலோஜி ராஜே அக்கல்கோட்டுக்கு மீண்டும் வந்து சேர்ந்தார்.

## 2. கடைசி தரிசனம்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சரித்திரம் வெறும் வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத அற்புதங்கள் நிறைந்தவை. எவ்வளவு முயற்சி செய்தாலும் அதை முழுமையாக விளக்க முடியாது. இதில் விவரிக்கப்பட்டுள்ள ஒவ்வொரு அற்புதங்களும் வாய்வழியாக கூறப்பட்டவை அல்லது ஒரு பக்தரின் அனுபவமாகும். ஒவ்வொருவரின் நற்கர்மாவைப் பொருத்தே அவர்களுக்கு அனுபவம் கிடைத்தது. மாலோஜிராவ் ராஜே மிகவும் புண்ணியம் செய்தவர். அவர் ஸ்ரீ ஸ்வாமியின் மேல் கொண்டிருந்த அதீத பக்தியினால் அவருடைய வம்சத்திற்கே ஸ்ரீ ஸ்வாமியின் அருள் கிடைத்தது.

மாலோஜிராவ் ராஜே நோய்வாய்ப்பட்டிருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்ய வேண்டும் என்று ஏங்கிக் கொண்டிருந்தார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி அரண்மனைக்கு வரவேயில்லை. இப்படியே 10-15 நாட்கள் சென்றன.

திடீரென ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அரண்மனைக்கு வந்து மன்னருக்கு தரிசனம் அளித்தார். மன்னர் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. ஸ்ரீ ஸ்வாமிகளின் அற்புதமான உருவத்தைக் கண்டவுடன் மன்னரின் உயிர் உடலை விட்டுப் பிரிந்தது. என்ன ஒரு பேரதிர்ஷ்டம் செய்திருக்கிறார்! தன் பக்தர்களுக்கு ஏதாவது துன்பம் என்றவுடன் அந்த இடத்திற்கு ஓடோடிச் சென்று அவர்களை காத்து ரட்சிப்பதில் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு நிகர் வேறெவரும் இல்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பக்தராக இருப்பதற்கும் பேரதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டுமே!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## *அத்தியாயம் 155*

# கோபால் ராமச்சந்திர கேள்கர்

கோபால் ராமச்சந்திர கேள்கர் ராஜாப்பூர் என்கிற ஊரைச் சேர்ந்தவர். அவர் ரயில்வேயில் பணிபுரிந்து கொண்டிருந்தார். அவர் பல நாட்களாக வயிற்று வலி மற்றும் ஜுரத்தினால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். அவர் வைத்தியத்திற்காக எவ்வளவோ செலவு செய்தும் எந்தவித பலனும் இல்லை. வைத்தியர்கள் அவரை வீட்டிலேயே தங்கிக் கொள்ளுமாறு கூறி வைத்தியச்சாலையிலிருந்து அனுப்பி விட்டனர். அனைத்து வழிகளும் அடைக்கப்பட்ட நிலையில், தான் வாழ்வதே வீண் என்று கருதினார். அதனால் மனமுடைந்து தற்கொலை செய்து கொள்வதற்காக டேம்பூர்ணி ரயில் நிலையத்தை அடைந்தார். ஆனால் அதற்கு துணிவில்லாமல், தன் சகோதரனுடைய வீட்டுக்குச் சென்றார். நாளுக்குநாள் அவருடைய வயிற்றுவலி அதிகரித்துக் கொண்டே போனது. சில நாட்களுக்குப் பிறகு ஒருவகையான வாயு அவர் உடலில் நுழைந்து கொண்டு, மிகுந்த உடல் வலியால் துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார். சேங்கொட்டையைக் கொண்டு வைத்தியங்கள் செய்தும் எந்தவித பலனும் இல்லை. தூக்கம் இல்லாமல் தவித்துக் கொண்டிருந்தார். இறந்து விடுவதே மேல் என்று அவருக்குத் தோன்றியது.

கேள்கர் ஒரு நாத்திகர். அவர் ஒருநாள் தன் வேதனையின் உச்சத்தில் இருந்தபோது, **"இந்த உலகத்தை காத்து ரட்சிக்கும் கடவுள் என்றொருவர் இருப்பாரானால், அவர் என் வேதனையை எட்டு நாட்களுக்குள் குணமாக்கி விட்டால், நான் என் வாழ்நாள் முழுவதும் கடவுளுக்கு சேவை செய்து கிடப்பேன்"** என்று உறுதி எடுத்துக் கொண்டார். **"கடவுளே தன் பரம பக்தனை தன்னிடம் இழுத்துக் கொள்வதற்காக இதுபோன்ற சபதங்களை எடுத்துக் கொள்ள வைப்பானோ?"** அற்புதம் நடந்தது! கேள்கரின் வயிற்று வலி சிறிது குணமானது. தன் வேண்டுதலை நிறைவேற்றுவதற்காக ஏதாவது ஒரு துறவிக்கு சேவை செய்யலாம் என்று முடிவு செய்து கொண்டார். அச்சமயத்தில் தேவ் மாம்லத்தார் மற்றும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஆகிய இருவரும் பிரபலமாக இருந்தனர். தேவ் மாம்லத்தாரிடம் சென்றால் தன் சகோதரன் மீண்டும் வீட்டிற்கு அழைத்துச் சென்று விடுவார் என்கிற பயத்தில் அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் சென்றார்.

தன் சகோதரனிடம் நண்பர்களை சந்திக்கப் போவதாகக் கூறிவிட்டு அக்கல்கோட் நோக்கிச் சென்றார். அக்கல்கோட் வந்தடைந்ததும் தன்னிடமிருந்த ஐந்து பைசாக்களில், ஒரு பைசாவுக்கு மட்டும் பேரீச்சம்பழங்களை வாங்கிக் கொண்டு, காஸ்-பாக்கில் உள்ள ஆலமரத்தின் கீழ் அமர்ந்திருந்த ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்துவிட்டு சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அதியற்புதமான உருவத்தைக் கண்டவுடன் தன் பிறவிப்பலனை அவர் உணர்ந்து கொண்டார். அவர் அங்கு தங்கியிருந்து ஸ்ரீ ஸ்வாமிகளிடம் குரு உபதேசம் பெற வேண்டும் என்கிற நோக்கத்தில் இருந்தார். ஆனால் நான்கு மாதங்கள் ஆகியும் அவ்வாறு எதுவும் நடக்கவில்லை. மஹராஜ் ஏதாவது கோபமாக பேசிக் கொண்டிருந்தாலும், கோபால் புவா அவர் பாதங்களில் தலையை வைக்கும் போது அமைதியாகி விடுவார். ஒருநாள் புவா தேஷ்முக்கின் வீட்டில் உறங்கிக் கொண்டிருக்கும் போது, மஹராஜ் அவருடைய கனவில் வந்து, **"நான் உன் நோயை குணமாக்குகிறேன்"** என்று கூறிக் கொண்டே அவருடைய வயற்றில் தன் கையால் தடவி விட்டு மறைந்து விட்டார். உடனே அவருக்கு சிறுநீர் கழிக்க வேண்டும் என்கிற உணர்வு ஏற்பட்டது. சுமார் 2 லிட்டருக்கு மேல் சிறுநீர் கழித்தவுடன் அவருடைய வயிறு தட்டையானது. இந்த அற்புதத்தைக் கண்டவுடன் புவாவுக்கு கண்ணீர் பெருக்கெடுத்தது. **"ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் என்னும் மகா வைத்தியர் இருக்கும்போது, வேறு எதுவுமே தேவையில்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் லீலைகளுக்கு எல்லையே இல்லை".**

அடுத்த நாள் காலையில் புவா ஸ்ரீ ஸ்வாமிகளின் தரிசனத்துக்காக சென்றபோது, **"இந்த பிராமணனின் வயிற்றைப் பாருங்கள்!"** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறியதை அங்கிருந்த எவராலும் புரிந்து கொள்ள முடியவில்லை. கோபால் புவா அனைவரிடமும் தனக்கு நேர்ந்ததைப் பற்றி விவரித்தார். அவர் மிகுந்த பக்தியுடன் ஸ்ரீ ஸ்வாமிகளை வணங்கிக் கொண்டிருந்தார். பதினைந்து நாட்களுக்குப் பிறகு மீண்டும் இன்னொரு கனவினால் ஆசீர்வதிக்கப்பட்டார். அதில், கோபால் புவாவும் சில சேவகர்களும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடன் ஒரு விளைநிலத்தில் அமர்ந்து கொண்டிருக்கிறார்கள். பதினைந்துக்கும் மேற்பட்ட இஸ்லாமியர்கள் வாளைத் தூக்கிக் கொண்டு, **"தீன், தீன்"** (இஸ்லாமியர்களின் வார்த்தை) என்று கூறிக் கொண்டே இவர்களை வெட்டி வீழ்த்த ஓடி வந்து கொண்டிருக்கின்றனர். அனைவரும் பயத்தில் இருந்தனர். கோபால்புவா பயத்தில் நடுங்கிக் கொண்டிருந்தார். உடனே ஸ்ரீ ஸ்வாமி அவரை தன் தோளில் சுமந்து கொண்டு காடுமேடுகளில் அடர்த்தியான மரங்களுக்கு நடுவே, ஒரு நதிக்கு அருகே கொண்டு செல்கிறார். அங்கு அவரை இறக்கிவிட்டு, தன் இடுப்பில் கைகளை வைத்துக் கொண்டு நிற்கிறார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் புவாவை தோளில் சுமந்து கொண்டு வரும்போது, புவா தன் கண்களை இறுக்கமாக மூடிக்கொண்டு அமர்ந்திருக்கிறார். இறக்கிவிட்டவுடன் தன் கண்களைத் திறந்து, ஆஜானுபாகுவாக இடுப்பில் கைகளை வைத்துக் கொண்டு நின்று கொண்டிருக்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து விட்டு, **"மஹராஜ், எனக்கு அனுகிரகம் அளியுங்கள்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். **"இன்னும் அதற்கு நேரம் இருக்கிறது"** என்று ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியவுடன் அவருடைய கனவு கலைந்து விழித்துக் கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகள் அவருக்கு இந்த கனவின் மூலம் எவ்வளவு பெரிய நம்பிக்கையை அளித்திருக்கிறார்! தன் பக்தர்களை துன்பங்களில் இருந்து காப்பாற்ற தான் அவர்களை தோளில் சுமந்து செல்வேன் என்று நமக்கு அவர் நம்பிக்கையூட்டுகிறார் அல்லவா?

### கேள்கர் மீது ஸ்ரீ ஸ்வாமி காட்டிய அதீத அன்பு

ஒரு மாதத்திற்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஹசனல் என்கிற இடத்தில் இரண்டு நாட்களுக்குத் தங்கினார். அவருடன் கேள்கரும் சென்றிருந்தார். அந்த ஊரில் ஒரே ஒரு கிணறுதான் இருந்தது, சேவகர்களோ பலர் இருந்தனர். அதனால் காலையில் விடியலுக்கு முன்பே குளித்துவிட வேண்டும் என்று கேள்கர் எண்ணிக்கொண்டார். காலையில் விழித்துக் கொண்டவுடன் புகை பிடிக்கும் பழக்கம் இருந்தமையால், அவர் ஹுக்காவை தயார் செய்வதற்காக பல இடங்களுக்கு அலைந்து திரிந்து கொண்டிருந்தார். அன்று ஸ்ரீ ஸ்வாமி

மஹராஜ் குல்கர்னியின் வீட்டு மாட்டுத்தொழுவத்தில் படுத்துக் கொண்டிருந்தார். அவர் ஆறு சேவகர்களுடன் தலையிலிருந்து பாதம் வரை போர்த்திக் கொண்டு உறங்கிக் கொண்டிருந்தார். அவருக்கு அருகில் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்ததைப் பார்த்து தன் ஹூக்கா தயாரிப்பதற்காக அதனருகில் சென்றார். உடனே ஸ்ரீ ஸ்வாமி குபீரென எழுந்து அமர்ந்து கொண்டார். பயத்தில் கோபால் புவா நடுங்கிக் கொண்டிருந்தார். கையில் வைத்துக் கொண்டிருந்த துணி கீழே விழுந்துவிட்டது. ஸ்ரீ ஸ்வாமி அவரை உற்று நோக்கினார். பயத்தில் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தை இறுக்கமாகப் பற்றிக் கொண்டு பிரார்த்தனை செய்து கொண்டார். கருணாமூர்த்தியான ஸ்ரீ ஸ்வாமி கோபால் புவாவை முழுமையாக ஆசீர்வதித்தார். புவாவுக்கு தன் வாழ்நாள் முழுவதுக்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஆசீர்வாதம் கிடைத்துவிட்டது போல் இருந்தது. அந்த சந்தோஷத்தில் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதங்களில் தன் தலையை வைத்து வணங்கிவிட்டு, கூப்பிய கரங்களுடன் நின்று கொண்டிருந்தார். சுற்றி உறங்கிக் கொண்டிருந்தவர்கள் விழித்துக் கொள்வது போல் தோன்றியவுடன் ஸ்ரீ ஸ்வாமி தன் போர்வையை போர்த்திக் கொண்டு படுத்துக் கொண்டார். கோபால் புவாவும் அந்த இடத்தை விட்டுக் கிளம்பினார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய ஆசீர்வாதம் ஒருவருக்கு எந்த நேரத்தில் கிடைக்கும் என்பது எவருக்கும் தெரியாது. ஸ்ரீ ஸ்வாமி கனவில் கூறிய அந்த நேரம் இதுதானோ!

**கோபால்புவாவின் கண்ணீர்**

பொழுது விடிந்தது. குளிப்பதற்காக கிணற்றுக்கு அருகில் சென்றார். பிராமணர்களிடம் பானை கேட்டதற்கு அவர்கள் தர மறுத்துவிட்டனர். பின்னர் ஒரு வேற்று ஜாதிக்காரரிடம் மண்பானையை வாங்கி குளித்துவிட்டு சென்றதை பலவந்த் ராவ் என்கிற சேவகர் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமிக்கு தினமும் ஹூக்கா தயாரிக்கும் சேவை செய்வார். அவர், **"இந்த கொங்கணி அசுத்தம் ஆகிவிட்டார். இவருடைய கைகளினால் கொண்டுவரப்பட்ட தீர்த்தத்தை ஸ்ரீ ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்யக்கூடாது"** என்று கூச்சலிட்டார். இதைக் கேட்டவுடன் கோபால் புவா மனம் வெம்பி கண்ணீர் சிந்தினார். **"இவருக்கு ஸ்ரீ ஸ்வாமியின் தீர்த்தத்தை அளித்தால் அவரின் அசுத்தம் நீங்கிவிடும்"** என்று சிலர் ஆலோசனை கூறினர். ஸ்ரீபாத பட் தீர்த்தத்தைக் கொடுத்து அவரை புனிதப் படுத்தினார்.

அன்றைய தினத்தில் மராட்டிய பாட்டீல் ஒருவர் மாம்பழச் சாறு விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். அதில் அனைவருக்கும் உணவு தயாரிக்கப்பட்டு பரிமாறப்பட்டது. எவராவது விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தால், மஹராஜுக்கு முதலில் ஒரு தட்டில் அனைத்து உணவுப் பொருட்களும் பரிமாறப்படும். அவர் வருகிறாரோ இல்லையோ, நைவேத்தியம் செய்யப்பட்ட பின்னர் அனைவருக்கும் உணவு பரிமாறப்படும். ஒரு சில சமயம் ஸ்ரீ ஸ்வாமி அழைப்பு கொடுப்பதற்கு முன்பே வந்துவிடுவார், சில சமயங்களில் தாமதமாக வருவார், சில சமயம் வரவே மாட்டார். அன்று நைவேத்தியம் செய்யப்பட்டு உணவு அனைவருக்கும் பரிமாறப்பட்டது. "இந்த கொங்கனியை பந்தியில் இருந்து தூரமாக அமர்ந்து கொண்டு சாப்பிடச் சொல்லுங்கள்" என்று எவரோ ஒருவர் குரல் கொடுத்தார். **"தேவையில்லை. இவர் ஸ்ரீ ஸ்வாமியின் தீர்த்தத்தினால் புனிதமாக்கப்பட்டு விட்டார்"** என்று ஸ்ரீபாத பட் கூறியபோதும் பல்வந்த் ராவ் புவாவின் தட்டை எடுத்து பந்தியை விட்டு தூரமாக வைத்தார். இதைக் கண்டவுடன் புவா மனமுடைந்து, **"நான் அனைவர் முன்னிலையிலும் அவமானப்படுத்தப்பட்டு விட்டேன். எனக்காக பேசுவதற்காக எவருமே இல்லை!"** என்று வருத்தப்பட்டுக் கொண்டே அழுதவாறு சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

**அநந்யாஸ்[2] சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே |**
**தேஷாம் நித்யாபி[4] யுக்தாநாம் யோக[3]க்ஷேமம் வஹாம்யஹம் || 9- 22||**

கீதையின் ஒன்பதாவது அத்தியாயத்தில் மேலே குறிப்பிடப்பட்டுள்ள ஸ்லோகம் வருகிறது. இதன் பொருள் என்னவென்றால், **"எவனொருவன் என்னை மட்டுமே தியானம் செய்து என் மீது முழுமையான பக்தியை செலுத்துகிறானோ, அவன் எப்போதும் என்னுடன் தொடர்பில் இருக்கிறான். நான் அவனுடைய தேவைகளை பூர்த்தி செய்கிறேன்"** என்பதே அதன் அர்த்தம். இதை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அன்று கோபால்புவாவுக்கு நிரூபித்தார்.

அன்று ஸ்ரீ ஸ்வாமிகளுக்காக ஒரு தட்டு பரிமாறப்பட்ட போதும் அவர் உணவருந்த வரவில்லை. அது அவரிடம் கொண்டு செல்லப்பட்டது. அவர் கோபத்துடன் அனைவரையும் வசைபாடினார். **"நான் அசுத்தம் ஆகிவிட்டேன். என்னை யாரும் தொட வேண்டாம். நான் உணவருந்த மாட்டேன்"** என்று கோபித்துக் கொண்டு சாணிக்குவியலுக்கு மேல் சென்று அமர்ந்து கொண்டார். எவரையும் அவருக்கு அருகில் வர அனுமதிக்கவில்லை. எவ்வளவோ கெஞ்சியும்




வரவில்லை. மாலை வரை இது தொடர்ந்தது. இரவு சிறிது சாந்தமாகி உணவு உட்கொண்டார். கருணாமூர்த்தியான ஸ்ரீ ஸ்வாமியின் பக்தன் ஒருவன் தனக்கு எவருமே இல்லை என்று வருந்தியது அவருடைய காதில் விழாதா! அந்த கோபத்தை இவ்வண்ணம் அனைவரிடமும் அவர் காட்டி, தன் பக்தனுக்காக எதுவேண்டுமானாலும் செய்வேன் என்பதை இந்த நிகழ்ச்சி மூலம் எடுத்துக் கூறுகிறார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு கோபால் புவாவிடம் வேற்றுமையாக எவரும் நடந்து கொள்ளவில்லை. அனைவருடன் சமமாக அமர்த்தப்பட்டு அவருக்கு உணவு பரிமாறப்பட்டது. இந்த அனுபவத்திற்குப் பிறகு கோபால் புவாவுக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மீது பக்தி அதிகரித்தது. எப்போதும் ஸ்ரீ ஸ்வாமியின் நாம ஜெபத்தைக் கூறிக் கொண்டே இருந்தார். அகிலாண்டகோடி பிரம்மாண்டத்திற்கும் அதிபதி எவரோ அவர் அக்கல்கோட்டில்தான் வசிக்கிறார் என்பதை அவர் உணர்ந்து கொண்டார். புனிதம் வாய்ந்த தீர்த்தங்களாக கருதப்படும் அனைத்து தீர்த்தங்களும் தங்களைப் புனிதப்படுத்திக் கொள்ள ஸ்ரீ ஸ்வாமியின் பாதம் தங்கள் மீது படாதா என்று ஏங்கிக் கொண்டிருக்கின்றன. அப்படிப்பட்ட புனிதமான தீர்த்தம் புவாவுக்கு அளிக்கப்பட்ட பின்னரும், அவர் தனிமைப்படுத்தப்பட்டார். மனிதன் கடவுளை மறந்தாலும், கடவுள் மனிதனை மறப்பதில்லை! மாயையின் பிடியில் சிக்கித் தவிக்கும் மனிதன், தன் பூர்வஜென்ம கர்மாக்களை அனுபவிக்கிறான். அதிலிருந்து எவராலும் தப்பிவிட முடியாது! பூர்வஜென்ம கர்மாவினாலோ அல்லது ஸ்ரீ ஸ்வாமியின் கோபத்திற்கு ஆளானதினாலோ, பலவந்த் ராவுக்கு சில நாட்களில் புத்தி தடுமாற்றம் ஏற்பட்டுவிட்டது.

**கோபால் கேள்கர் சிப்லுன் வருதல்**

கோபால் புவா எப்போதும் அனைவரிடமும் பின்வருமாறு கூறுவார். **“குரு என்றால் என்ன? சீடன் என்றால் என்ன? சரணாகதி என்றால் என்ன? இதனால் என்ன பயன்? இவை பற்றியெல்லாம் எனக்கு எதுவுமே தெரியாது. என் பூர்வஜென்ம புண்ணியங்களினால் நான் மஹராஜிடம் ஈர்க்கப்பட்டேன். அவருடைய புண்ணியம் வாய்ந்த தரிசனம் பலனளிக்கத் தொடங்கியது. ஆனால் என்னுள் இருந்த மனோபாவம் அதை முழுமையாக அனுபவிக்க விடவில்லை. என்ன செய்வது? இதற்காக நான் பலமுறை வருத்தப்பட்டிருக்கிறேன். ஒரு பயிர் நல்ல முறையில் துளிர்விட வேண்டுமானால் அதற்கு வளமையான நிலம், நல்ல விதை மற்றும் நல்ல மழை ஆகிய அனைத்தும் ஒருசேர தேவை. அதே**

**அந்த பயிரை வேலி அமைத்து பாதுகாத்து, களையெடுத்து ஆரோக்கியமாக பராமரிக்கும் போது அதன் விளைச்சல் இன்னும் அதிகரிக்கும். அதேபோலத்தான் ஒரு மனிதன் நற்குடும்பம், நல்ல நண்பர்கள் மற்றும் துறவிகளின் வழிகாட்டுதல் ஆகியவற்றுடன் வாழும் போது அவன் வாழ்க்கை வளமாகிவிடும், அவனுடைய பயணமும் மோக்ஷத்தை நோக்கி நகரும். பாதி வழியில் அவன் வழி தடுமாறி விழ நேர்ந்தாலும், குருவின் வழிகாட்டுதலுடன் அவனுடைய முடிவு சரியானதாக அமையும்"** என்று நம்பிக்கையூட்டும் வண்ணம் தன் வாழ்க்கையைப் பற்றி புவா கூறுவார்.

பலநாட்கள் ஆகியும் தன் கணவர் வீடு திரும்பாமல் இருப்பதை எண்ணி கவலையுற்ற கோபால் புவாவின் மனைவி, அக்கல்கோட் வந்தடைந்தாள். பின்னர் அங்கு தங்கி கணவனும் மனைவியுமாக ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தனர். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி அவர்கள் இருவரையும் அழைத்து, **"சிப்லுன் என்னும் ஊருக்கு அருகே மார்கண்டி என்கிற இடம் இருக்கிறது. பிரம்மச்சாரி புவாவிடம் இருக்கும் பாதுகைகளை வாங்கிக்கொண்டு நீயும் உன் மனைவியும் அந்த ஊரில் தங்கி அப்பாதுகைகளை வணங்கிக் கொண்டிருங்கள்"** என்று கூறினார். கிளம்பும்போது, இரண்டு தேங்காயையும், ஒரு காய்ந்த பேரீச்சம்பழத்தையும் கொடுத்து அனுப்பினார். சில நாட்கள் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜுடன் தங்கியிருந்துவிட்டு அவர் சிப்லுன் வந்தடைந்தார். அவ்வூரில் உள்ள காட்டுப்பகுதியில் ஸ்ரீ ஸ்வாமி சுதமஹராஜ் அளித்த பாதுகைகளை பிரம்மச்சாரி புவா ஸ்தாபனம் செய்திருந்தார். ஆனால் அவர் எப்போதும் பிசாசு நிலையிலேயே(சித்த நிலை) இருந்தார். கோபால் புவா இவருடன் தன் குடும்பத்தோடு வந்து தங்கியிருந்தார். வியாழக்கிழமைகளில் மட்டும் பிக்ஷை எடுப்பார், மற்ற நாட்களில் வியாழனன்று கிடைத்த அரிசியை கஞ்சி செய்து குடித்து வந்தனர். எப்போதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் தியானத்திலேயே இருந்த கோபால் புவாவைக் கண்ட ஊர் மக்கள், அவருக்காக ஒரு ஆசிரமத்தை கட்டிக் கொடுத்தனர்.

சில காலங்களுக்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமி ஆசீர்வதித்தது போல் புவாவுக்கு இரண்டு மகன்களும், ஒரு மகளும் பிறந்தனர்(இரண்டு தேங்காய், ஒரு காய்ந்த பேரிச்சம்பழம்). ஸ்ரீ ஸ்வாமியின் மீது அவர் கடுந்தவம் மேற்கொண்டு வந்ததால், அவருக்கு சில சக்திகள் கிடைத்தன. அதைக் கொண்டு பலருடைய நோயை குணமாக்குதல், பலருடைய விருப்பங்களை நிறைவேற்றுதல், சிலருக்கு ஆன்மிகத்தில் முன்னேற்றம் அடையச் செய்தல் ஆகியவற்றை செய்து




கொண்டிருந்தார். பின்னாட்களில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரைப் பற்றி கேள்விப்பட்டது, மற்றும் அவர் நேரில் பார்த்தது ஆகியவற்றை கோர்த்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த் பக்கர் என்னும் பெயரில் ஒரு புத்தகமாக்கினார். கருணா ஸ்தோத்திரம் மற்றும் சாதன்விவேக சாராம்ருதம் என்னும் ஒவி வடிவிலான பாடல்களையும் படைத்தார். ஸ்ரீ ஸ்வாமி கோபால்புவாவை ப்ரீதினந்தா என்று அழைப்பார். அதனால் தன் படைப்புகளில் தன்னை ப்ரீதினந்தா என்று குறிப்பிட்டுக் கொள்வார்.

## கோபால் புவாவின் செருக்கை அடக்குதல்

ஒருமுறை கோபால் புவாவின் ஆசிரமத்திற்கு துறவி ஒருவர் வந்திருந்தார். அவர் அங்கு இரண்டு மணி நேரத்திற்கும் மேல் இருந்தார். அவரிடம் கோபால் புவா, **"நீங்கள் எங்கிருந்து வந்திருக்கிறீர்கள்?"** என்று கேட்டதற்கு, **"எனக்கு தெரியாது"** என்று பதிலளித்தார். முழுமை அடைந்தவர்களின் பதில் இவ்வாறாகத்தான் இருக்குமோ என்று புவா நினைத்துக்கொண்டார். புறத்தில் அவர் அளித்த பதிலை புவா புரிந்து கொண்டார், ஆனால் அகத்தில் அவர் எந்த நிலையில் இருக்கிறார் என்பதை அவர் அறிந்திருக்கவில்லை. வந்திருந்த துறவியின் நடவடிக்கைகளால் புவா பெரிதும் கவரப்பட்டார். துறவியின் உடை மற்றும் பேச்சுக்களால் பலர் கவரப்பட்டு அவருடைய பாதத்தில் விழுந்து வணங்கினார்கள். அன்றிலிருந்து புவா கள் குடித்த குரங்கு போலானார். அவரும் துறவியைப் போலவே நடந்து கொள்ளத் தொடங்கினார். பின்னர் ஒருநாள் பிக்ஷை எடுப்பதற்காக ஊருக்குள் சென்றபோது அவரிடம் ஒருவர், **"நீங்கள் எங்கிருந்து வந்திருக்கிறீர்கள்?"** என்று கேட்டதற்கு, **"எனக்கு தெரியாது"** என்ற பதிலை அளித்தார்.

கோபால் புவா சில நாட்களுக்குப் பிறகு அக்கல்கோட் சென்றார். அன்று ஸ்ரீ ஸ்வாமிகள் ஓந்த்கரின் வீட்டில் இருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்தவுடன், **"நீ எங்கிருந்து வந்திருக்கிறாய்?"** என்று கேட்டார். அதற்கு புவா, **"சிப்லுனிலிருந்து.."** என்றார். **"சிப்லுன் எங்கிருக்கிறது?"** என்றதற்கு, **"கொங்கனில்"** என்று பதிலளித்தார். **"கொங்கன் எங்கிருக்கிறது"** என்று ஸ்ரீ ஸ்வாமி கேட்டதற்கு, **"மலைக்கு அருகில்.."** என்று கூறியபின் ஸ்ரீ ஸ்வாமிகளின் கேள்விகளுக்கான உண்மையான அர்த்தத்தை புரிந்து

கொண்டார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அடுக்கடுக்கான கேள்விகள் புவாவின் மன-ஓட்டத்தை வெளிப்படுத்தியது மட்டுமல்லாமல் தான் சர்வவியாபி என்பதையும் நிரூபித்தது. தன் பக்தர்கள் எவ்வளவு தொலைவில் இருந்தாலும், அவர்களுக்கு அருகிலேயே எப்போதும் ஸ்ரீ ஸ்வாமி நின்று கொண்டு, இல்லை .. இல்லை.. அவர்களின் ஆழ்மனதில் வாழ்ந்து கொண்டு அனைத்தையும் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறார்.

தன் அகம்பாவத்தை முற்றிலும் துறந்த கோபால்புவா ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"ஸ்வாமி, எனக்கு கொங்கன் பற்றியெல்லாம் தெரியாது"** என்று கூறியவுடன் ஸ்ரீ ஸ்வாமி கலகலவென சிரித்தார். அவருடைய சிரிப்பு அதிர்வுகளால் அவர் அமர்ந்திருந்த கட்டிலும் சேர்ந்து ஆடிக்கொண்டே சிரித்தது. இந்த நாடகத்தின் அர்த்தத்தை அங்கிருந்தவர்கள் எவராலும் புரிந்து கொள்ள முடியவில்லை. புவாவுக்கு தான் இவ்வாறு நடந்து கொண்டுவிட்டோமே என்கிற அவமானத்தில் இருந்தார். தன்னை மன்னிக்குமாறு ஸ்ரீ ஸ்வாமிகளிடம் கேட்டுக்கொண்டார்.

மஹராஜ் தன் பக்தர்களை நல்வழிப்படுத்த ஒன்று அவர்களை முகத்திற்கு நேராக திட்டுவார், இல்லையேல் சுற்றிவளைத்து ஏதாவது கூறி விளக்குவார். நாயின் வாலை அவ்வளவு எளிதாக நிமிர்த்திவிட முடியுமா? மனிதனும் அதுபோலத்தான். அவ்வளவு எளிதாக அவன் தன்னை மாற்றிக் கொள்வதில்லை! ஆனால் குருவின் நிழலில் வாழும் ஒருவன் தன்னை மாற்றிக் கொள்வதற்கு தேவைப்படும் அவகாசம் மிகவும் குறைவு. மனசாட்சியாக வாழும் அவனுடைய குரு, அவனை சரியான பாதைக்கு வழிநடத்திவிடுகிறார் என்பது திண்ணம்.

இத்துடன் கோபால் ராமச்சந்திர கேள்கரின் அனுபவங்கள் முடிவடைந்தன. நாத்திகரான கோபால் புவாவை ஸ்ரீ ஸ்வாமிகளே தேர்ந்தெடுத்து தனது பக்தனாக மாற்றி, அவருக்கு ஒரு மடத்தை நிர்வகிக்கும் பொறுப்பையும் கொடுத்து, அவரை பல அற்புதமான புத்தகங்களும் படைக்கச் செய்து ஆசீர்வதித்தது மிகப்பெரிய பாக்கியம் அல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 156

# கிணற்றுத் தண்ணீரை தூய்மையாக்குதல்

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மைந்தர்க்கியில் முகாமிட்டிருந்தார். ஊருக்கு வெளியே இருந்த நாத் ஆசிரமத்தில் அவர் மூன்று நாட்கள் தங்கியிருந்தார். அங்கு கீழே இறங்கி செல்லும் கிணறு ஒன்று இருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகளுடன் சுமார் 200 சேவகர்கள் இருந்தனர். அவர்கள் அனைவரும் இந்த ஒரே கிணற்றைத்தான் உபயோகித்துக் கொள்ள வேண்டும். அதனால் மூன்றாவது நாள் இந்த கிணறு மாசடைந்து,துர்நாற்றம் எடுத்தது. இந்த இடத்தில் இந்த நீர்நிலையைத் தவிர வேறுறொன்றும் இல்லாத காரணத்தால், மஹராஜ் வேறு இடத்திற்கு செல்வதுதான் உத்தமம் என்று அனைவரும் கருதினர். இக்கருத்தை மஹராஜிடம் சென்று தெரிவித்தபோது, அவர் அமர்ந்திருந்த இடத்தைவிட்டு நகரத் தயாராக இல்லை.

மதியம் ஆனது. சிலர் இரண்டு மைல்களுக்கு அப்பால் உள்ள கிணற்றில் நீராடிவிட்டு வந்தனர். தன் பக்தர்கள் படும் இன்னலைக் கண்டு கருணை கொண்டு ஸ்ரீ ஸ்வாமி தான் அமர்ந்திருந்த கட்டிலை விட்டு எழுந்து கொண்டு அந்த கிணற்றை நோக்கிச் சென்றார். கிணறு சுமார் 20 அடி ஆழம். ஸ்ரீ ஸ்வாமி தன் கையில் 2½ அடி நீளமுள்ள ஒரு குச்சியை வைத்திருந்தார். அந்தக் குச்சியை கிணற்றில் செலுத்திவிட்டு தன் மூக்கின் அருகில் வைத்து நுகர்ந்தார், பின்னர் மீண்டும் கிணற்றுனுள் செலுத்திவிட்டு அருகில் இருந்த ஆல மரத்தின் மீது வைத்தார். மீண்டும் அதே இடத்தில் வந்து அமர்ந்துகொண்டார். 2½ நீளமுள்ள ஒரு குச்சி எப்படி 20 அடிக்குச் சென்றது? ஒரு குச்சி எப்படி துர்நாற்றத்தை நீக்கியது என்பது ஸ்ரீ ஸ்வாமி மட்டுமே அறிந்த ரகசியம்.

சேவகர் ஒருவர் கிணற்றுக்குள் சென்று அந்த தண்ணீரை சுவைத்தபோது அதன் துர்நாற்றம் முற்றிலும் நீங்கி, சுத்தமான நீராக ஆகியிருந்தது. இந்த அதிசயத்தை பற்றி அவர் அனைவரிடமும் தெரிவித்தார். அனைவரும் சோதித்துப் பார்த்து மிகுந்த சந்தோஷம் அடைந்தனர். ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்! என்று ஆனந்தத்தில் கோஷமிட்டனர். நைவேத்தியம் தயார் செய்து

ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு படைத்தனர். மாலையில் தன் சேவகர்கள் அனைவரோடும் ஸ்ரீ ஸ்வாமி அக்கல்கோட் வந்தடைந்தார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நிகழ்த்தும் ஒவ்வொரு லீலையும் மிகவும் அற்புதமானதும், விவரிக்க முடியாததும் ஆகும். ஒருவரின் நற்பலன்கள் அதிகரிக்கும்போது மட்டுமே அவர்களுக்கு ஸ்ரீ ஸ்வாமியின் மீது பக்தி துளிர்விடும் என்பதில் எந்தவித ஐயமும் இல்லை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 157

# மன்யாபாவின் கதை

மைந்தர்க்கியில் வசித்துவந்த ஒரு பிராமணருக்கு இரண்டு மகன்களும், மூன்று மகள்களும் இருந்தனர். பூர்வ ஜென்ம கர்மாக்களின் பலனால் அவர்கள் அனைவரும் புத்தி சுவாதீனம் இல்லாதவர்களாக இருந்தனர், அவர்களில் ஒருவரான மன்யாபா ஊமையும் கூட. அவருக்கு 25 அல்லது 30 வயது இருக்கும். சில நாட்களுக்குப் பிறகு விதிவசத்தால் மன்யாபாவின் பெற்றோர்கள் மற்றும் உடன்பிறந்தவர்கள் நால்வரும் இறந்துவிட்டனர், அவர் அனாதை ஆகிவிட்டார். கிடைத்தை சாப்பிட்டுக் கொண்டு, நினைத்த இடத்தில் உறங்கிக் கொண்டு மைந்தர்க்கியில் சுற்றிக் கொண்டிருப்பார்.

மன்யாபாவின் விதியை மாற்றும் அந்தநாள் வந்தது. ஒரு சில பக்தர்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் செல்ல திட்டமிட்டனர். அவர்களுடன் சேர்ந்து மன்யாபாவும் அக்கல்கோட் சென்றார். அவர் எதுவுமே அறியாமல் கூட்டத்துடன் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜின் பாதத்தில் விழுந்தவுடன், **"ஏ! பித்தனே! உனக்கு என்ன வேண்டும்?"** என்று தன் திருவாயால் அவரே வரம் அளிப்பதற்கு ஏதுவாக கேள்வி கேட்டார். ஒன்றும் அறியாத மன்யாபா பதிலேதும் அளிக்கவில்லை. அருகில் இருந்த ஒருவர், **"மஹராஜ், இவருடைய**

**புத்தியை நேராக்குங்கள்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். அப்போது ஸ்ரீ ஸ்வாமி எதுவமே கூறவில்லை. வந்திருந்தவர்கள் இரண்டு நாட்கள் அக்கல்கோட்டில் தங்கியிருந்துவிட்டு கிளம்பினர். ஆனால் மன்யாபா மட்டும் அக்கல்கோட்டிலேயே தங்கிவிட்டார். அவர் இங்கு பதினைந்து நாட்கள் தங்கியிருந்தார்.

மஹராஜின் அன்புக்கு பாத்திரமான மன்யாபா, சில நாட்களில் அனைவருடைய கண்களுக்கும் நிறைவானவராக, ஆன்மிக நிலையில் நல்ல முன்னேற்றம் அடைந்தவராகத் தோன்றினார். அவருடைய ஊமைத்தன்மை முற்றிலுமாக நீங்கி, மராத்தியும், கன்னடமும் பேசத் தொடங்கினார். அவர் மக்களின் பிரார்த்தனைகளுக்கு பதில் அளிக்கத் தொடங்கினார். அவர்களுடைய பிரார்த்தனைகள் நிறைவேற வேண்டுமானால், மன்யாபாவை வீட்டுக்கு அழைத்துச் சென்று, அவர் '**ஆம்**' என்று உத்தரவு அளித்தால் காரியம் சித்தி ஆகிவிடும். இல்லையேல் நடைபெறாது. சிலர் '**ஆம்**' என்று கூறும்படி வற்புறுத்தினால், 'இல்லை,இல்லை' என்று அழுத்தந்திருத்தமாக கூறிவிடுவார். அவர்கள் **"ஏன் ஆம் என்று கூறவில்லை?"** என்று கேள்வியெழுப்பினால், "ஸ்வாமி என்னை அடிப்பார்! என் பிட்டத்தின் சதையை கிழித்து எடுத்து ரணமாக்கி விடுவார்" என்று கூறுவார். ஸ்ரீ ஸ்வாமி அவருக்குள் இருந்து கொண்டு வழிநடத்துகிறார் என்பது வெட்ட வெளிச்சமாகிறதல்லவா! மன்யாபா குழந்தைகள் உட்பட ஆண்களை '**தாதா**' என்றும் பெண்களை, '**அம்மா**' என்றும் அழைப்பார். அவர் எப்போதும் சித்த நிலையில் இருந்துகொண்டு குளிப்பது, ஆடை அணிந்துகொள்வது, நெற்றியில் சந்தனம் வைத்துக் கொள்வது போன்ற புற விஷயங்களில் அக்கறை இல்லாமல் சுற்றித் திரிந்து கொண்டிருப்பார்.

குரு, சாதனை போன்ற விஷயங்கள் எதைப் பற்றியுமே அறியாத மன்யாபாவை உன்னதமான நிலைக்கு ஸ்ரீ ஸ்வாமி கொண்டு சென்றுவிட்டார். அவருடைய பூர்வஜென்ம கர்மாக்களினால், உரிய நேரத்தில் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்து அப்படிப்பட்ட உயர்ந்த நிலையை அடைந்தார் என்றுதான் கூறவேண்டும். ஒருவர் யோகம், உபாசனை மற்றும் பக்தி ஆகியவற்றை பல ஜென்மங்களாக கடைபிடித்து வந்தாலும், ஸ்ரீ ஸ்வாமியின் அருள் இல்லாமல் எதுவுமே முழுமை அடையாது என்பது திண்ணம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# அத்தியாயம் 158

# ஹராட்கானைச் சேர்ந்த சுபேதார் பாபா

ஒருமுறை கோபால் புவா சிப்லுனிலிருந்து 20 பக்தர்களுடன் அக்கல்கோட்டுக்கு கிளம்பினார். அவர்களில் ஹராட்கான் என்கிற ஊரைச் சேர்ந்த சுபேதார் பாபாவின் குடும்பத்தினரும் வந்தனர். இவர்கள் அனைவரும் பண்டரிபுரம் வந்தடைந்தவுடன் சுபேதார் பாபாவுக்கு வயிற்றுப்போக்கு ஏற்படத் தொடங்கியது. அக்கல்கோட் வருவதற்குள் அவருடைய நிலை மிகவும் மோசமானது. அவர்கள் அனைவரும் அக்கல்கோட்டில் 8 நாட்கள் தங்கியிருந்து விட்டு, அடுத்தநாள் காலையில் சிப்லுனுக்கு கிளம்ப ஆயத்தமானார்கள். இதைக் கேட்டவுடன் சுபேதாரின் மகனான ராமச்சந்திரராவ் மிகவும் பதட்டம் அடைந்து அழுது கொண்டே, **"என் தந்தையின் நிலைமை மிகவும் மோசமாக உள்ளது. நாங்கள் இங்கு நோய் குணமாகும்வரை தங்கியிருக்க முடியாது. எந்தவித வைத்தியமும் கைகொடுக்கவில்லை. எங்களுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை"** என்று புலம்பினார். உடனே கோபால்புவா, **"ஸ்ரீ ஸ்வாமியை அடைக்கலம் அடைவது தவிர நமக்கு வேறு வழி ஏதாவது உண்டா? அவரிடம் பிரார்த்தனை செய்வோம். அவர் ஆசீர்வதித்தால், உன் தந்தைக்கு குணமாகும்"** என்று கூறினார்.

அடுத்த நாள் காலையில் கோபால்புவாவும், ராமச்சந்திர ராவும் குளித்துவிட்டு, இஞ்சி-சக்கரையையும் கலந்து ஒரு கிண்ணத்தில் எடுத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காக சென்றனர். அப்போது மணி ஒன்பதாகி இருந்தது. மஹராஜ் சோளப்பாவின் வீட்டில் இருந்தார். அவர்கள் ஸ்ரீ ஸ்வாமியை நமஸ்கரித்துவிட்டு, **"ஸ்வாமி, உங்கள் தரிசனத்திற்காக இவ்வளவு தொலைவிலிருந்து வந்திருக்கிறோம். நீங்கள் உங்கள் தரிசனத்தை அளித்து எங்களை சந்தோஷப் படுத்தி விட்டீர்கள். உங்கள் அனுமதியுடன் சிப்லுனுக்கு கிளம்புகிறோம். நாங்கள் விதியை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறோம். ஆனால் ஊர் போய் சேரும் வரை வழியில் எதுவும் நேர்ந்துவிடாமல் காத்தருள வேண்டுகிறோம். எது நடந்தாலும் வீட்டுக்கு சென்றபின் நடக்கட்டும்" என்று பிரார்த்தனை செய்து கொண்டனர். கருணையுள்ளம் கொண்ட மஹராஜ், "வீட்டுக்குச் செல்லுங்கள்"** என்று அனுமதி அளித்தார். அவர்கள் கொண்டு வந்திருந்த இஞ்சி-சர்க்கரை கலவை கிண்ணத்தை மஹராஜின் பாதத்தில் வைத்துவிட்டு கொண்டு வந்தனர். அதை நோயாளிக்கு மருந்தாகக் கொடுத்தனர்.

அனைவரும் மஹராஜை மீண்டும் தரிசனம் செய்துவிட்டு, ஒரு பானை முழுவதும் தண்ணீரை நிரப்பிக் கொண்டு பயணத்தை தொடங்கினர். இரவு தங்குவதற்காக வல்சங் என்ற இடத்தில் வண்டியை நிறுத்தினார்கள். இது அக்கல்கோட்டிலிருந்து 8 மைல்களுக்கு அப்பால் இருக்கிறது. வண்டியை விட்டு இறங்கியவுடன் சுபேதார் பாபாவுக்கு 15 முறை வயிற்றுப்போக்கு ஏற்பட்டது. இரவு முழுவதும் அவருக்கு எந்தவித பாதிப்பும் இல்லை. பின்னர் காலை மூன்று மணியளவில் வண்டி புறப்பட்டது. ஒன்பது மணிவரை பயணம் செய்தனர். அப்போதும் அவருடைய உடல்நிலை சீராக இருந்தது. ஆனால் வண்டியை நிறுத்தியவுடன், பாதிப்பு ஏற்பட்டது. இது அனைவருக்கும் மிகுந்த ஆச்சரியத்தை அளித்தது. புவா பிரார்த்தனை செய்துகொண்டதற்கு ஏற்ப நடைபெற்றது. அவருடைய நிலை இவ்வளவு மோசமாக இருந்தபோதிலும், இஞ்சி-சர்க்கரை கலவை மட்டுமே மருந்தாக அளிக்கப்பட்டது, மற்ற வைத்திய முறைகள் எந்தவித முன்னேற்றத்தையும் அளிக்கவில்லை. இதேபோல அவர்கள் சிப்லுன் வரை சென்றடைந்தனர்.

இவ்வளவு அற்புதங்களை செய்து காட்டிய போதும் இப்போதும், எப்போதும் பல குருடர்கள் இருந்து கொண்டுதான் இருக்கிறார்கள். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் லீலைகள் அனைத்தையும் விவரித்துக் கொண்டே சென்றால், ஒரு புத்தகம் போதுமா? அவற்றில் பக்கதர்களின் அனுபவங்களாக கிடைத்த சிலவற்றை மட்டுமே இந்த புத்தகத்தில் விவரிக்க இயன்றது. தெரியாத, அறியமுடியாத பல லீலைகளை ஸ்ரீ ஸ்வாமி இன்றும் என்றும் நிகழ்த்துக் கொண்டே இருக்கிறார் என்பதில் எந்தவித சந்தேகமும் இல்லை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 159

# விதியை மாற்ற முடியுமா?

ஒரு பிராமண தம்பதிக்கு வாரிசு இல்லை. அவர்கள் இருவரும் அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தனர். அந்த பெண்மணி இரண்டு-மூன்று முறை ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தனக்கு குழந்தை வரம் வேண்டி பிரார்த்தனை செய்து கொண்ட போதெல்லாம்,

**“ஏ! அது உன் விதியில் இல்லை”** என்று கூறினார். **“என் விதியில் அப்படி எழுதியிருக்கவில்லை என்றால், கடவுளைத் தேட வேண்டிய அவசியமே இல்லையே?”** என்று மீண்டும் மீண்டும் அவள் வலியுறுத்திக் கொண்டே இருந்தாள்.

ஒரு நாள் ஸ்ரீ ஸ்வாமி அவளை அழைத்து இரண்டு பேரீச்சம்பழங்களை கொடுத்துவிட்டு, **“உன் மகன்கள்”** என்று கூறினார். மிகுந்த மகிழ்ச்சியுடன் அவள் ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களில் விழுந்து வணங்கிவிட்டு வீட்டுக்குப் புறப்பட்டாள். அவள் ஜாதி பாகுபாடு பார்க்கும் குணமுடையவள். ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்ய தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்த பலர் வருவார்கள். தான் அசுத்தமாக இருப்பதாக எண்ணிக் கொண்டு ஊருக்கு வெளியே இருக்கும் குளத்தில் குளிப்பதற்காகச் சென்றாள். அப்போது சூரியன் மறைந்து கொண்டிருந்தான். ஸ்ரீ ஸ்வாமி அளித்த பேரீச்சம்பழங்களை பத்திரப் படுத்துவதற்காக மணலில் ஒரு குழி தோண்டி புதைத்துவிட்டு குளிக்கச் சென்றாள். விதிக்கு வலிமை அதிகம். குளித்து முடித்தவள், புதைத்து வைத்த பேரீச்சம்பழங்களை எடுத்துக் கொள்ள மறந்துவிட்டு சென்றுவிட்டாள். இரவு பத்து மணிக்கு பேரீச்சம்பழங்களைப் பற்றிய நினைவு அவளுக்கு வந்தது. இரவு நேரத்தில் சென்று தேட முடியாது என்பதால், காலை நேரத்தில் சென்று தேடிப் பார்க்கலாம் என்று முடிவு செய்து கொண்டாள்.

பொழுது விடிந்தது. எந்த இடத்தில் புதைத்தாளோ அங்கு தோண்டிப் பார்த்தபோது, பேரீச்சம் பழங்களுக்குப் பதிலாக இரண்டு முட்டைகள் இருந்தன. என்ன ஒரு அற்புதம்! இது என்ன முட்டை என்று எண்ணியவாறே அவற்றை எடுத்து பார்த்தபோது, அவை அவளுடைய கை தவறி கீழே விழுந்து உடைந்தன. அதிலிருந்து இரண்டு குருவிகள் பறந்து சென்றன. அவள் அடைந்த ஆச்சரியத்திற்கு எல்லையே இல்லை. இதைத்தான் கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை என்று கூறுவார்கள். ஸ்ரீ ஸ்வாமி அளித்த பேரிச்சம்பழம் அவளுடைய வயிற்றில் கருவாகியிருந்தால், மகன் பிறந்திருப்பான்! என்று தன்னைத்தானே நொந்து கொண்டு நடந்தவைகளை தன் கணவரிடம் விவரித்தாள். அனைவரும் அவளை வெகுவாக குற்றம் சாட்டினர். அவள் ஸ்ரீ ஸ்வாமியிடம் சென்றவுடன் அவர், **“ரண்டி (கெட்டவார்த்தை), என்னிடம் ஏன் பிரார்த்தனை செய்தாய்? இங்கிருந்து சென்று விடு”** என்று கோபத்தில் கெட்ட வார்த்தைகளால் வசை பாடினார். இருப்பினும் அவள் ஸ்ரீ ஸ்வாமியை விட்டு நீங்கவே இல்லை. அவள் தொடர்ந்து அவருக்கு சேவைகள் செய்து

கொண்டிருந்தாள். சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவள் மீது கருணை கொண்டு ஒரு தேங்காயை அளித்துவிட்டு செல்வதற்கு அனுமதி அளித்தார். பின்னர் அவளுக்கு ஒரு மகன் பிறந்தான்.

என்ன ஒரு அற்புதமான லீலை! விதியை மாற்ற முடியாது, இருப்பினும் நாம் தொடர்ந்து நம்பிக்கையுடன் செய்யும் பிரார்த்தனையும் குருவின் கருணையும் ஒருசேர பலனளித்தால் கண்டிப்பாக விதியை மாற்ற முடியும். மேலும் குருவின் அருள் அனைத்தையும் சாத்தியமாக்கும் என்கிற துணிச்சலை நமக்கு இந்த நிகழ்ச்சி தருகிறதல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 160

# விடாப்பிடியான பிரார்த்தனை கண்டிப்பாகப் பலன் தரும்

கோகிசரே என்கிற ஊரைச் சேர்ந்த பாவடேகர் புராணிக் மிகவும் ஏழ்மையில் வாடிக் கொண்டிருந்தார். அவர் தன் மனைவி மற்றும் தாயுடன் சொந்த ஊரிலிரிலிருந்து கிளம்பி ஊர் ஊராக சுற்றிக் கொண்டே அக்கல்கோட் வந்தடைந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்துவிட்டு ஒரு வீட்டில் தங்கியிருந்தார். பிக்ஷை எடுத்துதான் அவர் சாப்பிட வேண்டும். மூவரும் வெவ்வேறு திசைகளுக்கு சென்று பிக்ஷை எடுத்துவிட்டு, ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதை வழக்கமாக கொண்டிருந்தனர்.

வெறுமனே ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் மட்டும் செய்து கொண்டிருக்கிறோமே, அவருக்கு முன்னால் அமர்ந்து கொண்டு பாகவதத்தை பாராயணம் செய்யலாமே என்று புராணிக்குக்கு திடீரென ஒரு நாள் தோன்றியது. அவர் தன்னிடம் இருந்த பாகவத புராணத்தை எடுத்துக்கொண்டு சோளப்பாவின் வீட்டில் இருந்த ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து, **“ஸ்வாமி, நான் இந்த புராணத்தை பிரவசனம் செய்யப் போகிறேன்”** என்று கூறினார்.

அங்கிருந்தவர்கள் அனைவரும் அதற்கான ஏற்பாடுகளை செய்தனர். அவரும் பிரவசனத்தைத் துவங்கினார். மஹராஜுக்கு மெதுவாக கோபம் ஏற்படத் தொடங்கியது. ஒரு ஸ்லோகத்தை முடித்து இரண்டாவது ஸ்லோகத்தை தொடங்கியபோது, **"நிறுத்து, போசடிக்கே உன்னை யார் படிக்கச் சொன்னது?"** என்று கூச்சலிட்டார். பயத்தில் நடுங்கிக் கொண்டு படிப்பதை நிறுத்திவிட்டு அவர் வீட்டுக்குச் சென்றுவிட்டார். அடுத்த நாள் மதியம் வந்து ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்துவிட்டு ஸ்லோகத்தை படிக்கத் தொடங்கியவுடன், **"மாதர்சோத், இங்கிருந்து சென்றுவிடு"** என்று மீண்டும் கூச்சலிட்டார். சேவகர்கள் அனைவரும் புராணிக்கிடம் வந்து, **"மஹராஜ் கெட்டவார்த்தைகள் உபயோகிக்கிறார். நிறுத்திவிடுங்கள்"** என்று வலியுறுத்தினர். மூன்றாவது நாளும் இதே போல நடைபெற்றது. புராணிக் புவாவுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. ஸ்ரீ ஸ்வாமியின் வசவுகள் நிற்கும் வரை தொடர்ந்து தினமும் வந்து படிக்கலாம், எந்த நாளில் அவர் வசை பாடுவதை நிறுத்துகிறாரோ அன்றிலிருந்து தனக்கு நல்ல நிலை ஏற்படும், அப்போது தன் புராண பிரவசனத்தை நிறுத்திக் கொள்ளலாம் என்று தீர்மானம் செய்து கொண்டார். ஆறு மாத காலத்திற்கு தினமும் வசவுகளை வாங்கிக்கொண்டு தன் நிலைப்பாட்டில் உறுதியாக இருந்தார். பொறுமையை சோதிப்பது ஸ்ரீ ஸ்வாமிக்கு பிடித்தமான ஒன்றாயிற்றே!

**"நான் என்ன பாவம் செய்தேனோ தெரியவில்லை. இந்த ஜென்மத்தில் எந்த தீங்கும் செய்யவில்லை.இருப்பினும் மஹராஜ் என்னிடம் ஏன் இவ்வளவு கோபமாக இருக்கிறாரோ தெரியவில்லை. வேசிகளிடமும், இஸ்லாமியர்களிடமும், தாழ்த்தப்பட்டவர்களிடமும் அவர் கருணையை பொழிகிறார். ஆனால் என்னை வசை பாடிக் கொண்டே இருக்கிறார்"** என்று அனைவரிடமும் புராணிக் புவா புலம்பிக் கொண்டிருந்தார். **"நீங்கள் ஏதோ பெரும்பாவம் செய்திருக்கிறீர்கள்"** என்று சிலர் கூறினர். புவாவுக்கு இது தாளமுடியாத துன்பத்தை அளித்தது. இரவு வீட்டுக்கு வந்தவுடன் யோசனையில் ஆழ்ந்தவர், இப்படிப்பட்ட வாழ்க்கை வாழ்வதை விட தன் உயிரை முடித்துக் கொள்ளலாம் என்ற எண்ணம் அவர் மனதில் மேலோங்கியது. விடிந்தவுடன் காஜா பீர் தர்காவுக்கு அருகில் இருக்கும் இடுகாட்டுக்குச் சென்றார். அங்கிருக்கும் ஒரு குன்றில் ஆளரவம் இல்லாத ஒரு சிறு குகை உண்டு. அங்கு சென்று அமர்ந்துகொண்டார். அவருடைய மனைவியும், அன்னையும் இவரைக் காணாமல் தவித்துக் கொண்டிருந்தனர். இரு பெண்களும் உணவேதும் உண்ணாமல், அழுது அழுது





வீங்கிய கண்களுடன் தெருத்தெருவாக இவரைத் தேடி அலைந்தனர். இரவு வரத் தொடங்கியது. **"அவர் பக்கத்து கிராமத்திற்கு சென்றிருப்பார். வந்துவிடுவார்"** என்று சிலர் ஆறுதல் கூறினர். **"என்னிடம் கூறாமல் என் மகன் எங்குமே செல்ல மாட்டான்"** என்று அவருடைய அன்னை உறுதியாகக் கூறினாள்.

மூன்று நாட்களாகியும் புராணிக் வராததால் இரு பெண்களும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை அடைக்கலம் அடைந்தனர். ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதங்களைப் பற்றிக் கொண்டு ஓவென ஒப்பாரி வைத்தனர். **"ஸ்வாமி..! நாங்கள் எங்கள் ஊரில் வறுமையில் வாடிக் கொண்டிருந்தோம், உங்களை அடைக்கலம் அடைந்தால் அனைத்தும் சரியாகிவிடும் என்கிற நம்பிக்கையுடன் இங்கு வந்தும் எங்களுக்கு இப்படி நேர்ந்து விட்டதே! தந்தையே தன் குழந்தையை விலைக்கு விற்றால்! தாயே தன் குழந்தைக்கு விஷம் வைத்தால்! குழந்தை யாரிடம் சென்று அடைக்கலம் அடைவது? எங்களுக்கு அபயம் அளியுங்கள் ஸ்வாமி... என் மகன் எங்கிருக்கிறான் என்பது தெரியும் வரை நான் உங்கள் பாதத்தை விட மாட்டேன். தற்கொலை பாவம் என்றால் நீங்கள் எனக்கு அருள் புரியவேண்டும். உங்களால் பிரபஞ்சத்தை ஒரு நொடியில் அழித்துவிட்டு புதிதாக இன்னொன்றை உருவாக்க முடியும், ஊமையை பேச வைக்க முடியும், பிச்சைக்காரனை அரசனாக்க முடியும், முட்டாளை ஞானியாக்க முடியும், எங்களுடைய பிரச்சனை உங்களுக்கு ஒரு சிறு துரும்பு போன்றது. நீங்கள் நிகழ்த்திய அற்புதங்கள் பலவற்றை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இருப்பினும் எங்களுடைய பூர்வஜென்ம கர்மாக்கள் வலிமையுடன் இருக்கும்போது, நீங்கள்தான் என்ன செய்ய முடியும்? ஆனால் பரிசக்கல்லின் ஸ்பரிசம் பட்டவுடன் இரும்பு தங்கமாக மாறவில்லையா? அதேபோல உங்களுடைய தரிசனம் அனைத்துவிதமான துன்பங்களையும் அழித்துவிடுமே! தயவுசெய்து எங்களை ஆசீர்வதித்து, துன்பங்களில் இருந்து காப்பற்றுங்கள் ஸ்வாமி..."** என்று கெஞ்சினாள்.

அவளுடைய புலம்பல்களை கேட்டு பிரபஞ்சத்தின் தலைவரான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் வயிறு குலுங்கச் சிரித்தார். அதைப் பார்த்தவுடன் அந்த பெண்மணி, **"மஹராஜ், நீங்கள் பதில் அளிக்கும்வரை உங்கள் பாதத்தை விடவே மாட்டேன்"** என்று கூறிக் கொண்டே இன்னும் அழுத்தமாக அவர் பாதத்தை பிடித்துக் கொண்டாள். உறுதியான பக்தி ஸ்ரீ ஸ்வாமியை உருக வைத்து விடாதா என்ன? ஸ்ரீ ஸ்வாமியுடன் இருந்த நாய்களுள் ஒன்றான

மோட்டியாவை அழைத்து, **"ஏ! அவனை சென்று அழைத்துவா!"** என்று கூறி மஹராஜ் அனுப்பி வைத்தார். உடனே அந்த அதிசயம் நடந்தது. புராணிக் புவா அமர்ந்து கொண்டிருந்த இடத்திற்கு அந்த நாய் சென்றது. அதைக் கண்டவுடன், அது மஹராஜுடைய அழைப்பு என்பதை புராணிக் புவா அறிந்து கொண்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக நாயுடன் வந்தார்.

அவர் வந்தவுடன், **"விடாப்பிடியான பிரார்த்தனை கண்டிப்பாக பலனளிக்கும்"** என்ற அர்த்தத்துடன் வரும் துக்காராம் மஹராஜுடைய வரிகளை இரண்டு அல்லது மூன்று முறை ஸ்ரீ ஸ்வாமி கூறினார். புராணிக் புவா ஓடிச் சென்று ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களைப் பற்றிக் கொண்டார். தாயும் மகனும் ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களை தங்கள் கண்ணீரால் சுத்தம் செய்தனர். பின்னர் தங்கள் கைகளை கூப்பியவாறு, **"நாங்கள் என்ன செய்யவேண்டும் மஹராஜ்?"** என்று பவ்வியமாக கேட்டனர். **"அமருங்கள்"** என்று மஹராஜ் கூறினார். பறவைகளும், விலங்குகளுமே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வார்த்தைகளுக்குக் கட்டுப்படும் போது, இவர்கள் எம்மாத்திரம்? மூவரும் மூன்று நாட்கள் உபவாசத்தை அன்று முடித்துக் கொண்டனர். புராணிக் புவா மதியம் மீண்டும் தன் பாகவத பிரவசனத்தை துவங்கினார். ஸ்ரீ ஸ்வாமி அதைக் கேட்டு ரசித்தார்.

சில நாட்களுக்குப் பிறகு புராணிக் புவாவுக்கு ஒரு கனவு தோன்றியது. அதில் பூர்வஜென்மத்தில் அவர் ஒரு கசாப்புக்காரனாக பிறந்திருந்தார். அவர் வெட்டிய பல மிருகங்களில் பசுவும் அடங்கும். ஒருநாள் அவர் ஒரு மலைப்பகுதிக்கு குளிப்பதற்காக சென்றபோது ஒரு ஏழை பிராமணன் கிழிந்த ஆடை அணிந்து கொண்டு, குளிரில் நடுங்கிக் கொண்டிருப்பத்தைப் பார்த்து இரக்கப்பட்டு ஒரு வேட்டியும், போர்வையும் அவருக்கு அளித்தார். இந்த புண்ணியத்தினால் அவர் இந்த பிறவியில் பிராமணனாகப் பிறந்திருந்தார். ஆனால் பாவங்கள் மிகுதியாக இருந்ததால் இவ்வாறு துன்பங்களை அனுபவித்துக் கொண்டிருந்தார். உடனே அவருடைய கனவு கலைந்து விழித்துக் கொண்டார். விடிந்தவுடன் குளித்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காகச் சென்றார். அவரைக் கண்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், **"ஒருவர் தான் எவ்வளவு பாவங்கள் செய்திருக்கிறார் என்பது தெரியாமல் மற்றவர்களைக் குறை கூறுவது எந்த விதத்தில் ஞானமாகும்? மாதர்சோத், நீ அப்படிப்பட்ட ஞானத்தைப் பற்றி என்ன சொல்கிறாய்? நீ எவ்வளவு மிருகங்களைக் கொன்றிருக்கிறாய் என்பது உனக்குத் தெரியுமா?"** என்று கேட்டவுடன் தன் கனவுக்கான அர்த்தத்தை அவர் புரிந்து கொண்டார்.




சூரியன் எப்படி அனைத்து இடங்களிலும் தன் ஒளியை பரப்புகிறதோ, அதேபோல ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் தன் கருணை கடாக்ஷத்தினால் அனைவருடைய அறிவையும் ஞானத்தினால் ஒளியூட்டுகிறார். புராணிக் புவா தன் கர்மவினைகளை முழுமையாக அறிந்து கொண்டு ஸ்ரீ ஸ்வாமியின் பாதத்தை பிடித்துக் கொண்டு, "**நாங்கள் நன்றிக்கடனாக எங்கள் தோலை உங்களுக்கு செருப்பாக செய்து கொடுக்கிறோம் அல்லது எங்கள் உயிரையே உங்களுக்கு சமர்ப்பணம் செய்துவிடுகிறோம். எங்கள் பாவங்கள் அனைத்தும் தொலையட்டும். ஆனால் எப்போதும் உங்கள் பாதங்களை மட்டும் விடவே மாட்டேன் ஸ்வாமி...**" என்று கண்ணீர்விட்டு கதறினார். கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அவரை ஆசீர்வதித்தார். அவர் மிகுந்த மனத்திருப்தியுடன் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் விடைபெற்றுக் கொண்டு தன் வீட்டுக்குச் சென்றார். பின்னர் மஹராஜின் அனுக்கிரகம் அவருக்கு முழுமையாக கிடைத்து நல்ல முறையில் வாழ்ந்தார். நாமும் நம் தீய கர்மாக்களை எரித்து அழிக்க ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதங்களை விடாப்பிடியாக பிடித்துக்கொள்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 161

# பிராமணரைப் பிடித்த பிசாசு

பிசாசின் தொந்தரவினால் பாதிக்கப்பட்ட ஒரு பிராமணரும் அவருடைய மனைவியும் அக்கல்கோட்டுக்கு வந்தனர். அந்த பிராமணரை கையில் பிடித்துக் கொண்டே அவருடைய மனைவி தினமும் பிக்ஷை எடுப்பாள். அந்த பிராமணரோ அனைவரின் மீதும் காரி உமிழ்வார், கணவரின் மீது அதீத பிரியமுள்ள அந்தப் பெண் அனைவரிடமும் மன்னிப்பு கேட்பாள். மாலை நேரத்தில் தன் கணவனை பிடித்துக்கொண்டே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஆரத்தியை தரிசனம் செய்வதற்காக வருவாள். ஸ்ரீ ஸ்வாமியின் தெய்வீக ஒளியைக் கண்டால் அந்த பிராமணருக்கு பெரும் துன்பங்கள் ஏற்படும்.

ஆரத்தி நேரத்தில் பல வேடிக்கையான செயல்களில் அவர் ஈடுபடுவார். ஸ்ரீ ஸ்வாமியின் தீர்க்க தரிசனத்தை காண முடியாமல் அந்த இடத்தை விட்டு ஓடிவிடுவார். அந்த பெண்ணின் மீது இரக்கம் கொண்ட சேவகர்கள் சிலர் அந்த பிராமணரை துரத்தி பிடித்து அவளிடம் ஒப்படைப்பர். ஆரத்தியின் போது உண்டாகும் புனிதமான ஓசைகளை அவரால் கேட்க முடியாது, அதனால் அவர் தன் காதுகளை மூடிக் கொண்டும், நடனமாடிக் கொண்டும், தரையில் உருண்டுக் கொண்டும் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொள்வார்.

இதேபோல பல நாட்களுக்கு தொடர்ந்தது. அந்த பெண் ஸ்ரீ ஸ்வாமியிடம் தன் கணவனை குணப்படுத்தும்படி பிரார்த்தனை செய்து கொள்வாள். ஒருநாள் அந்த பிராமணரின் உடலில் இருந்த பிசாசு பேசத் தொடங்கியது. "தத்தரின் தர்பாரில் நியாயத்திற்கு இடம் இல்லை. ஸ்வாமி என்னை தேவையில்லாமல் அடித்து உதைக்கிறார்" என்று கூறிக்கொண்டே ஓவென கதறி அழுதது. "ஏன் அழுகிறாய்?" என்று மஹராஜ் கேட்டார். "மஹராஜ் இவர் என்னை 2000/- ரூபாய் ஏமாற்றிவிட்டார். நான் மிகவும் ஏழ்மையானவன் என்பதால் தற்கொலை செய்து கொண்டேன். அதனால் பிசாசாக அலைந்து கொண்டிருக்கிறேன். இவர் மட்டும் என்னை ஏமாற்றவில்லை என்றால் நான் தற்கொலை செய்து கொண்டிருக்க வேண்டியதில்லை. ஆகவே என்னை நிராகரிக்காமல் நியாயம் வழங்க வேண்டுகிறேன். அவர் என்னுடைய 2000/- ரூபாயை கொடுத்துவிட்டு என்னுடைய ஈமச்சடங்குகளை செய்ய வேண்டும். அப்படி செய்தால் நான் சென்று விடுகிறேன்" என்று கூறியது. "இவன் மிகவும் ஏழை" என்று மஹராஜ் கூறினார். **"நான்தான் அவரை ஏழையாகவும், குழந்தை இல்லாதவராகவும் ஆக்கினேன். அவர் என் பணத்தை திருப்பி அளித்தாக வேண்டும்"** என்று திட்டவட்டமாக கூறியது. **"இவன் சேவைகள் செய்துவிட்டான். உன் பணம் உனக்கு கிடைக்கவில்லையா என்ன?"** என்று ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் கேட்டார். கோபத்துடன் அந்த பிசாசு, **"அவர் என் பணத்தை திருப்பி அளிக்கும் வரை நான் செல்ல மாட்டேன்"** என்று கூறியது. இதைக் கேட்டவுடன் மஹராஜ் பலமாக சிரித்தார்.

ஸ்ரீ ஸ்வாமி அங்கிருந்த ஒருவரின் தலைப்பாகையை கழற்றி கொடுக்கச் சொன்னார். அதன் ஒரு முனையை ஒருவரிடம் கொடுத்துவிட்டு மறுமுனையை மரத்தூணில் இருந்த ஓட்டை வழியாக புகுத்தி தன் கையில் வைத்துக் கொண்டார். எதிர்முனையில் இருப்பவரை அந்த துணியை இழுக்குமாறு ஸ்ரீ ஸ்வாமி கூறினார். உடனே பிசாசு பிடித்த பிராமணரின் கை கால்கள் மற்றும் உடல் முழுவதும் தாளமுடியாத வலி ஏற்பட்டது. அவர் தரையில்

உட்கார்ந்துகொண்டு ஓவென அழுதார். **"மஹராஜ் என்னை விட்டுவிடுங்கள். நான் இனிமேல் அவரிடம் பணம் கேட்க மாட்டேன். நீங்கள் கூறும்படி நடந்து கொள்கிறேன்"** என்று அழுது புலம்பியது. கருணையின் மறுவடிவமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பாதுகைகளை அவர் மீது தூக்கி எறிந்தார். அந்த பிசாசு எழுந்து நின்றுகொண்டு, **"மஹராஜ், நான் இப்போது என்ன செய்ய வேண்டும்?"** என்று கேட்டது. **"அங்கிருக்கும் மரத்தின் கீழே சென்று அமர்ந்து கொள்"** என்று கூறி ஒரு புளியமரத்தை ஸ்ரீ ஸ்வாமி சுட்டிக்காட்டினார். பிசாசு சில நிமிடங்கள் அங்குமிங்கும் உலாவிவிட்டு, அந்த பிராமணரை விட்டு நீங்கியது.

பிராமணர் தன் சுயநினைவுக்கு வந்தார். அந்தப் பெண் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. இழந்த தன் வாழ்க்கை அவளுக்கு மீண்டும் கிடைத்து விட்டதல்லவா? அவள் ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களை தன் கண்ணீரால் தூய்மையாக்கினாள். அடுத்த நாள் காலையில் ஸ்ரீ ஸ்வாமிக்கு நைவேத்தியம் படைத்து விட்டு, **"மஹராஜ், நீங்கள் என் வாழ்க்கையின் பேரிடரை விலக்கி தள்ளி இருக்கிறீர்கள். நான் இப்போது இருக்கும் மனோநிலையை வெறும் வார்த்தைகளால் கூற முடியாது"** என்றாள். **"மஹராஜ் நாங்கள் இப்போது என்ன செய்வது?"** என்று கேட்டவுடன் மஹராஜ் தன் பாதுகைகளை அவள் மீது தூக்கி எறிந்தார். அதை அவள் பயபக்தியுடன் கொண்டு சென்று தன் காலம் முழுவதும் பூஜைகள் செய்து வணங்கி வந்தாள்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**



## அத்தியாயம் 162

# பக்தர்களுக்கு காட்சி அளித்தல்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை அவருடைய பக்தர்கள் அக்கல்கோட்டில் வந்துதான் தரிசனம் செய்யவேண்டும் என்பது இல்லை. அவர் ஸ்மர்த்ருகாமி. நினைத்த மாத்திரத்திலேயே தன் பக்தர்களுக்கு காட்சியளிக்கக் கூடியவர். இதனை விளக்கும் இரு நிகழ்ச்சிகளை இந்த அத்தியாயத்தில் விரிவாக பார்க்கலாம்.

*1.* மும்பையைச் சேர்ந்த வாமன் கோபால் ஒரு பிரதோஷ காலத்தில் தியானத்தில் இருந்தார். அப்போது ஒரு விதவைப் பெண்மணி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு மாதுளம் பழம் ஊட்டிவிடுவது போன்ற காட்சியைக் கண்டார். அவர் மூன்று நாட்களுக்கு முன்புதான் ஸ்ரீ ஸ்வாமிக்கு மாதுளம் பழம் கொடுத்து அனுப்பியிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி உண்பது அதே மாதுளம்பழமாகத்தான் இருக்குமோ என்று அவருக்கு தோன்றியது. அதை உறுதி செய்து கொள்வதற்காக அக்கல்கோட்டைச் சேர்ந்த பாபுராவ் மொகே மாம்லத்தாருக்கு ஒரு கடிதம் எழுதினார். பின்னர் அவருக்கு கிடைத்த பதில் கடிதத்தில் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுக்கு மாதுளம்பழத்தை சுந்தராபாயி ஊட்டி விட்டாள் என்பதை அறிந்து கொண்டு மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.

*2.* பாண்டுரங் கேஷவ் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தராக இருந்தார். அவர் அக்கல்கோட்டுக்கு வந்து ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். ஒருமுறை அவர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜை தரிசனம் செய்ய வந்தபோது, **"உன் பற்கள் எவ்வளவு இருக்கிறதோ அவ்வளவு வருடங்கள் நீ வாழ்வாய்"** என்று கூறிவிட்டு பிரசாதத்தை கொடுத்துவிட்டு மீண்டும் பெற்றுக் கொண்டார். மூன்று வருடங்களுக்குப் பிறகு அவருடைய உடல்நலம் பாதிப்படையத் தொடங்கியது. பின்னர் அவருடைய *33* வது வயதில் டபோய் என்கிற ஊரில் அவருடைய உயிர் பிரிந்தது. அவர் இறப்பதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவருக்கு ஸ்தூல ரூபத்தில் காட்சி அளித்தார்.




ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் வாழ்ந்த காலத்தில் மட்டுமல்லாமல் இன்றும் பலருக்கு தியான ரூபத்திலும், உன்னத நிலையில் இருப்பவர்களுக்கு ஸ்தூல ரூபத்திலும் காட்சி அளித்துக் கொண்டுதான் இருக்கிறார். மேலும் அவர் பல ரூபங்களில் நம் கண் முன்னே வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார், ஆனால் அவரை அடையாளம் கண்டுகொள்ள நம்மால்தான் இயலவில்லை. எப்போதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை நினைவில் கொண்டே வாழ்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 163

# ரஸவாதி சந்நியாசியும் வாமன் புவாவும்

பரோடாவைச் சேர்ந்த வாமன் புவாவைப் பற்றியும், அவருக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் வழங்கிய அனுபவங்களைப் பற்றியும் முந்தைய அத்தியாயம் ஒன்றில் விரிவாக விளக்கப்பட்டுள்ளதை நினைவு கொள்வோம். இந்த அத்தியாயத்தில் வாமன் புவா நாசிக்கில் சந்தித்த ரசவாதி சந்நியாசியைப் பற்றி விரிவாக ரசித்து படிக்கலாம்.

ரசவாதம் அறிந்தவர்களால் மண்ணையும் பொன்னாக முடியும். அந்த ஆற்றலைக் கற்று தேர்ந்த ஒரு சந்நியாசி கபாலேஸ்வர் கோவிலில் தங்கியிருந்தார். அவர் சந்நியாச தர்மங்கள் எதையும் கடைபிடிக்காமல், தன் இஷ்டம் போல ஆடம்பரமாக வாழ்ந்து கொண்டிருந்தார். தங்கத்தை பொன்னாக்கும் வித்தை தெரிந்திருந்ததால் பணக்காரர்களும், அரசர்களும் அவருடைய பக்தர்களாக இருந்தார்கள். சந்நியாசத்தின் நியதியான பிக்ஷை எடுப்பதை அவர் கீழ்த்தரமாக எண்ணுவார். அவருடைய அதிமேதாவித் தனத்தால் ஒரு ராணுவ அதிகாரியுடன் ஏற்பட்ட கைகலப்பில் அவருடைய காலில் அடிபட்டு கால் உடைந்துவிட்டது. அவரால் ஹிந்தி, மராத்தி மற்றும் உருது மொழிகளை சரளமாக பேச முடியும். தான் பஞ்சாப் மாநிலத்தைச் சேர்ந்தவர் என்று கூறுவார். யாராவது ரசவாதத்தைப் பற்றி அவதூறாகப் பேசினால் அவர்களை வசை பாடுவார்.

கி.பி. 1870 ஆம் ஆண்டில் வாமன்புவா படோத்கர் சிலருடன் நாசிக் சென்றிருந்தார். கங்கையில் நீராடிவிட்டு பஞ்சவடிக்கு சென்று தரிசனம் செய்துவிட்டு, கபாலேஸ்வர் கோவிலில் தங்கியிருந்த கோளப்ப பாபாவை தரிசனம் செய்யச் சென்றனர். அவர் வேதாந்தத்தில் ஞானியாக விளங்கினார். கோளப்ப பாபா அவர்களிடம், **"ரசவாத சந்நியாசி ஒருவர் காவியுடை அணிந்து கொண்டு கோவிலுக்கு மறுபக்கத்தில் இருக்கிறார். அவரிடம் துறவற தர்மத்திற்கான நெறிமுறைகள் எதுவும் தென்படவில்லை. நீங்கள் விரும்பினால் அவரைச் சென்று தரிசனம் செய்யுங்கள்"** என்றார்.

வாமன் புவாவும் மற்ற சிலரும் சென்று அந்த சந்நியாசியை தரிசனம் செய்தபோது அவர் அவர்களிடம், **"நான் தினமும் விடியற்காலையில் மரம் செடிகளில் இருந்து மூன்று முதல் நான்கு தோலாக்கள் தங்கம் தயாரிப்பேன். இதோ பாருங்கள்..."** என்று கூறிக்கொண்டே அந்த தங்கத்தை அவர்களிடம் காண்பித்தார். **"நாங்கள் ஒரு தோலா தங்கத்தை சில்லும் குழாயில் இருந்து தயாரிப்போம். கோரக்நாத்தும், மச்சேந்திர நாத்தும் செய்துகொண்டிருந்த அதே ரசவாதத்தை நான் செய்துகொண்டிருக்கிறேன். குரு தத்தாத்ரேயரே ரசவாதத்திற்காகத்தான் அவதரித்தார். ஸ்ரீ ராமரும் ஸ்ரீ கிருஷ்ணரும் ரசவாதம் செய்ததினால்தான் அவதாரம் என்று போற்றப்பட்டனர். சுருக்கமாக சொன்னால், ரசவாதம் செய்ய முடிந்தவர்கள் மட்டுமே உண்மையான அவதாரம் என்று அடையாளம் கண்டுகொள்ளப்பட வேண்டும். பணம் இல்லையென்றால் உணவுக்காக பிக்ஷை எடுக்கத்தான் வேண்டும். பிக்ஷை எடுப்பது ஒரு துறவியின் அடையாளமா? அது அவமானம்!! கடவுளால் முழுமையாக ஆசீர்வதிக்கப்பட்டவர் கண்டிப்பாக பிக்ஷை எடுக்கமாட்டார்"** என்றார்.

இதைக் கேட்டவுடன் வாமன்புவாவும் அவர் சகாக்களும், **"அப்படியென்றால் நீங்கள் எங்கு உணவு தயார் செய்வீர்கள்? ரசவாதம் என்றால் என்ன? ஒரு சந்நியாசிக்கு இரும்பைத் தொடுவதற்கு அனுமதி இருக்கிறதா?"** என்று கேட்டார். **"உங்கள் பெயர் என்ன? உங்கள் குரு யார்?"** என்று அவர் கோபமாக கேட்டார். **"என் பெயர் வாமன்புவா. அக்கல்கோட் மஹராஜ் என் குரு"** என்று புவா கூறிவிட்டு 'ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி உண்டாகட்டும்' என்று அவர்கள் கோஷம் எழுப்பினர். மிகுந்த கோபம் அடைந்த அந்த சந்நியாசி அவர்களை கெட்ட வார்த்தைகளால் வசை பாடிவிட்டு, **"முட்டாள்களே! அவரை புகழ்கிறீர்களே! அவரால் தங்கம் தயாரிக்க முடியுமா?"** என்று கேட்டார். **"ரசவாதி! அனாவசியமாக இழிவாகப் பேசாதீர்கள். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய ஆசீர்வாதத்தினால் கிடைக்கும் ரசவாதத்தை நீங்கள் புரிந்து கொண்டிருந்தீர்**

**களானால் அனைத்து இடங்களிலும் தங்கத்தை காண்பீர்கள். அது உங்கள் யதி உடைக்கு பொருத்தமாக இருந்திருக்கும். ஒருமுறையாவது அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்யுங்கள்"** என்று கூறினர். **"நான் ஒன்றும் அவரை சென்று தரிசனம் செய்யவேண்டிய அவசியம் இல்லை. அவருக்கு அவ்வளவு சக்திகள் இருந்தால், அந்த அற்புதம் இங்கேயே நிகழும். அப்போது நான் ஒத்துக் கொள்கிறேன். வெறும் வார்த்தைகளை நான் கேட்கத் தயாராக இல்லை"** என்று கூறியவுடன் வாமன் புவாவுக்கு மனது சங்கடப்பட்டது. உடனே அந்த இடத்தைவிட்டு கிளம்பி கோளப்ப பாபாவை சந்தித்து நடந்தவைகளை விவரித்தார். **"ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இதற்கான தண்டனையை கண்டிப்பாக அளிப்பார்"** என்று கூறினார். பின்னர் அவர்கள் அனைவரும் தாங்கள் தங்கியிருந்த இடத்திற்குச் சென்று, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நாமத்தை கூறிக்கொண்டே அன்று இரவு முழுவதையும் கழித்தனர்.

பொழுது விடிந்தவுடன் கங்கையில் நீராடிவிட்டு கோளப்ப ஸ்வாமியை தரிசனம் செய்ய வந்தபோது அவர் ஒரு செய்தியை அவர்களுக்கு விவரித்தார். **"அந்த சந்நியாசியுடைய சீடர் ஒருவர் வந்திருந்தார். இன்று காலை சந்நியாசி திரைக்கு பின்னர் பல மணி நேரங்கள் முயன்றும் அவரால் தங்கம் தயாரிக்க முடியவில்லையாம். அது கரியாகவே அப்படியே இருந்ததாம். அதனால் சந்நியாசி மிகுந்த கோபத்தில் இருக்கிறார். இன்று உணவு கூட தயாரிக்கப்படவில்லை. சேவகர்களை அடித்து துன்புறுத்தியதால் சந்நியாசியின் நற்பெயருக்கு களங்கம் ஏற்பட்டுவிட்டது. அதனால் அவருடைய பக்தர்கள் சிலர் சென்றுவிட்டனர். அவர், 'நான் அக்கல்கோட் சந்நியாசியை கொலை செய்யப்போகிறேன்' போன்று பலவாறு உளறிக் கொண்டிருக்கிறார் போலிருக்கிறது"** என்று பாபா விவரித்தவுடன் வாமன்புவா அந்த சந்நியாசி இருக்கும் இடத்திற்கு விரைந்தார்.

இவர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி உண்டாகட்டும் என்று பலமாக கோஷம் எழுப்பிக் கொண்டே அங்கு சென்றனர். அவர்களை கண்டவுடன் கோபத்தில் அவர்களுடைய தலையை உடைக்க ஒரு பெரிய பாறாங்கல்லை தூக்கிக் கொண்டு கெட்டவார்த்தைகளை கூறிக்கொண்டே, **"செத்து மடியுங்கள்"** என்று கூறியவாறு ஓடிவந்தார். அவருடைய கோபத்தை கண்டதும் இவர்கள் அனைவரும் பயத்தில் நடுங்கிக் கொண்டே, "ஸ்ரீ குரு ஸ்வாமி ஜய ஜய தத்த ராஜயோகி" என்று நம்பிக்கையுடன் கோஷமிட்டனர். உடனே அவர்கள் அனைவரும் மயக்கமடைந்து கீழே விழுந்தனர். சந்நியாசியின் கையில் இருந்த கல் அவர் தலையில் பட்டு அவரும் மயக்கமடைந்தார். சில மணி நேரங்களுக்குப் பின்னர் அனைவரும் சுயநினைவுக்கு வந்தனர்.

**"அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் உண்மையில் நல்லவர்! அவர்தான் நிஜம்"** என்று கூறிக்கொண்டே கங்கையை நோக்கிச் சென்ற அந்த சந்நியாசி, பாறாங்கல்லை அதில் போட்டுவிட்டு நதியில் ஸ்நானம் செய்தார். **"நீங்களும் ஸ்நானம் செய்யுங்கள்"** என்று வாமன்புவாவையும் மற்றவர்களையும் கூறினார். அவருடைய கோபம் முழுமையாக தணிந்து சாந்தமாகியிருந்தார். பின்னர் அவர்கள் தங்கியிருந்த இடத்திற்கு சென்றபின் வாமன்புவா அவரை ஏதாவது சாப்பிடுமாறு கூறினார். **"நான் அக்கல்கோட் ஸ்வாமியை தரிசனம் செய்யும்வரை எதுவும் சாப்பிடப் போவதில்லை. நீங்கள் எப்போது அக்கல்கோட் செல்கிறீர்கள்"** என்று புவாவிடம் கேட்டார். **"நாங்கள் எங்கள் ஊருக்கு சென்றுவிட்டு பின்னர் அக்கல்கோட் செல்வோம்"** என்று புவா தெரிவித்தார். வாமன் புவாவுடைய முகவரியை பெற்றுக்கொண்டு அக்கல்கோட்டில் நடப்பவைகளை கடிதம் மூலம் தெரிவிப்பதாக சந்நியாசி கூறினார். இருவரும் ஆரத் தழுவிக் கொண்டனர். **"ஸ்ரீ ஸ்வாமியின் குணத்தை கேட்கும்போதே என் அஹங்காரம் தூள்தூளாக்கி என் மனது லேசாகிவிட்டதே! அவரை நேரில் தரிசனம் செய்தால் என்ன நடக்குமோ?"** என்று கண்ணீர் மல்க சந்நியாசி கூறினார். அடுத்தநாள் தன் சீடன் ராம்சரணுடன் அக்கல்கோட் நோக்கி பயணித்தார். அக்கல்கோட்டில் அவருக்கு நேர்ந்த அனுபவங்களை ஒரு கடிதம் மூலம் வாமன் புவாவுக்கு தெரிவித்தார். வாமன் புவாவுக்கு அவர் எழுதிய கடிதம் இங்கு உங்களுக்காக,

**வாமன் புவாவுக்கு,**

நான் ராம்சரணுடன் அக்கல்கோட் வந்தடைந்தவுடன் மஹராஜை தரிசனம் செய்யச் சென்றோம். அப்போது ஸ்ரீ ஸ்வாமி காஸ்-பாகில் உள்ள மாடுகளுக்காக அமைக்கப்பட்டிருக்கும் நிழற்குடையில் கட்டிலில் இளைப்பாறிக் கொண்டிருந்தார். பக்தர்கள் அவரை சுற்றி அமர்ந்திருந்தனர். ஸ்ரீ ஸ்வாமி அவருக்கு முன்னால் வைக்கப்பட்டிருந்த பழங்களை வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தார். நான் அவரை நமஸ்கரித்தவுடன் கோபத்துடன் எழுந்து நின்றுகொண்டு, அங்கிருந்த ஒரு மரத்தைப் பார்த்து, **"என்னுடைய தலையில் கல்லை தூக்கிப் போடு. உன் அகங்காரத்தில் அனைவரையும் ஏளனமாக எண்ணுகிறாயா? இங்கு என்ன தேடிக் கொண்டிருக்கிறாய்? சந்நியாசியின் ஆண்மையை சோதிக்கிறாயா? கரியாக கல் போலவே இருந்துகொண்டு உன் வாழ்க்கையை கழிக்கப் போகிறாயா! ரசவாதத்தை இப்போது பார்! இங்கு என்ன பார்த்துக் கொண்டிருக்கிறாய்? அந்த மரத்தைப் பார்! அந்த கல்லால் உன் தலையில் அடித்துக் கொள். உன்**




**இடது பக்கம் இருக்கும் அந்த மரத்தை உன் கண்களை வரித்து முழுமையாகப் பார்! அதுதான் ரசவாதம்..**" என்று கூறிவிட்டு தன் வயிற்றில் கைகளை வைத்துக் கொண்டு குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியவை அனைத்தையும் உணர்ந்து கொண்டவுடன் எனக்கு பெருத்த அவமானமாக இருந்தது. நான் அனுபவித்துக் கொண்டிருந்த அவமானத்தை காட்டிலும் இறந்து விடுவதே மேல் என்று தோன்றியது. பூமி பிளந்து கொண்டு அப்போதே உள்ளே சென்றுவிடலாம் என்று தோன்றியது. ஆனால் அன்றிலிருந்துதான் எனக்கு நல்லகாலம் தொடங்கியது. குருவின் தரிசனத்தால் தன்யன் ஆனேன், தூய்மையடைந்தேன்! உங்களுக்கு மீண்டும் மீண்டும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். கடவுளே! என்னுடைய தீய நடவடிக்கைகளுக்காக மன்னிக்க வேண்டும். என்னுடைய இடது பக்கம் இருந்த வேப்பமரத்தை பார்த்தவுடன் அதிலிருந்து தண்ணீர் சொட்டியது, அது தங்க நிறத்தில் ஜொலித்தது. அந்த நீர்த்துளி எந்த இடத்தில் பூமியில் விழுந்ததோ அங்கு தங்க நிறத்தில் ஒரு தண்ணீர் பெருக்கெடுத்தது. நான் இதுபோன்ற ஒரு காட்சியை இதுவரை கண்டதுமில்லை, கேள்விப்பட்டதுமில்லை. நான் அந்த நீரில் கரைந்த மண் போல ஆனேன். என் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. என்னுடைய கை கால்கள் இருப்பது தென்பட்டாலும் என்னுடைய எண்ணம் எங்கேயோ பறந்து சென்று ஆவியாக மாறுவது போல உணர்ந்தேன்.

என் உடல் என்பது பொய், நான் வேறு என்பது போலிருந்தது. நான் என்பது என்ன? நான் இப்போது என்ன நிலையில் இருக்கிறேன்? இந்த உலகம் என்பது என்ன? ஆத்மா என்பது என்ன? ஆகிய விஷயங்களை அறிந்துகொள்ளத் தொடங்கினேன். ஆஹா! என்ன ஒரு அற்புதமான தரிசனம்! நம் ஆழ்மனதை தெளிவாக எடுத்துரைக்கும் குருவின் கருணையை உணர்ந்து கொண்டு, அவருடைய தொடுதலையும் தரிசனத்தையும் பெறுவது மிகவும் உன்னதமான அனுபவம். ஸ்ரீ ஸ்வாமி உண்மையில் சத்குரு! அவரே உண்மையில் கடவுள்! அவரே அனைத்து உயிரினங்களிலும் வீற்றிருக்கும் அழிவே இல்லாத அந்தராத்மா. உங்களுக்கு மீண்டும் மீண்டும் என் நன்றிகளை தெரிவித்துக் கொள்கிறேன். என்ன ஒரு பேரதிர்ஷ்டம்! என்ன ஒரு அற்புதமான வித்தியாசமான லீலை! ரசவாதம், இந்திர ஜாலம், மாயை, அவித்ய, ஆகியவை அனைத்தும் துன்பமயமானது மற்றும் உபயோகப்படாதவை.

நான் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், "**மஹராஜ், நீங்கள்தான் சாக்ஷாத் கடவுள், கருணைக் கடல். நான் உங்களுக்கு எந்தவிதமான சேவைகளும் செய்ததில்லை.**

**உங்கள் தரிசனத்தைக் கூட பெற்றதில்லை. இருப்பினும் உங்கள் கருணையால் எனக்கு அருள் புரிந்திருக்கிறீர்கள். நீங்களே அனைத்து உயிர்களையும் காத்து ரட்சிப்பவர் என்பதை எனக்கு நன்கு உணர்த்திவிட்டீர்கள். குரு தத்தரே! நீங்கள் எனக்கு இடும் ஆணை என்ன?"** என்று பவ்வியமாக கேட்டேன். **"மாஹூர்காட்டுக்கு(இது பிரசித்தி பெற்ற தத்தாத்ரேயர் க்ஷேத்திரம்) சென்று அங்கு அமைதியாக அமர்ந்திரு"** என்று அன்புடன் தத்த திகம்பரர் கூறினார். ஸ்ரீ ஸ்வாமிகளின் சாத்வீகமான வார்த்தைகளைக் கேட்டவுடன் நான் அவரிடம், **"ஸ்ரீ குரு, உங்கள் ஆணைக்கு அடி பணிகிறேன்"** என்று கூறியவுடன் அவர் என் மீது காவி உடையையும், மான் தோலையும் தூக்கி எறிந்தார். நான் அவற்றை ஏற்றுக் கொண்டு, சில நாட்களுக்கு என்னால் முடிந்த சேவைகளை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு செய்துவிட்டு, அவரிடம் பிரசாதம் பெற்றுக் கொண்டு மாஹூர்காட் நோக்கி புறப்பட்டேன்.

நான் ஸ்ரீ தத்தாத்ரேயரின் ஸ்தலமான மாஹூர்காட் வந்தடைந்ததும், மான் தோலை விரித்தவுடன் அங்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரைக் கண்டேன். மகிழ்ச்சியுடன் சாஷ்டாங்கமாக அவரை நமஸ்கரித்தேன். என் கண்களிலிருந்து கண்ணீர் பொங்கி வழிந்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சர்வ வியாபிதத்தை எண்ணி என் மனம் பூரிப்படைந்தது. ரசவாதத்தை நான் முழுமையாக புரிந்து கொண்டேன். நான் முன்னர் செய்து கொண்டிருந்த ரசவாதம் முற்றிலுமாக தவறு என்பதை உணர்ந்துவிட்டேன். உண்மையான ரசவாதத்தை ஒருவன் அறிந்து கொள்ளாத வரை பொய்யான ஒன்றையே நம்பிக் கொண்டிருப்பான். நான் எந்தவித சந்தேகமும் இல்லாமல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை மீண்டும் நமஸ்கரித்தவுடன் அவர் அங்கிருந்து மறைந்துவிட்டார். **"ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி உண்டாகட்டும்..."**

நான் இங்கு மிகவும் சந்தோஷமாக இருக்கிறேன். நீங்கள் ஸ்ரீ குரு மஹராஜின் உண்மையான பக்தன். ஆகவே என் அனுபவங்கள் அனைத்தையும் உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். தயவுசெய்து மன்னித்து, என் மீது அன்பு செலுத்துங்கள். இது என் தாழ்மையான வேண்டுகோள். **"சச்சிதானந்த நாராயணனுக்கு வெற்றி உண்டாகட்டும்"**.

இவ்வாறு நன்றி மல்க ஒரு கடிதத்தை வாமன்புவாவுக்கு அந்த சந்நியாசி எழுதியிருந்தார். அதை முழுமையாக படித்து அனுபவிக்கும் பாக்கியம் நமக்கு கிடைத்தது ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய கருணை தவிர வேறொன்றும் இல்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருள் ஒருவருக்கு எந்த நேரத்தில், எந்த





சூழ்நிலையில் கிடைக்கும் என்பதை எவராலும் ஊகிக்க முடியாது. அவை அனைத்தும் நம் பூர்வ ஜென்ம கர்மாக்களை பொறுத்தே அமைகிறது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 164

# கேட்காமலேயே அருள்மழை

*1.* கோபர்டே மிகப்பெரிய ஜமீன்தார். அவருக்கு ஒரு மகள் இருந்தாள் ஆனால் மகன் இல்லை. அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பக்தர். அவர் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்திருந்த போது அதைப்பற்றி ஸ்ரீ ஸ்வாமியிடம் கேட்டார். **"ஹரிவம்ச புராணத்தைக் கேள். உனக்கு மகன் பிறப்பான்"** என்று கூறி ஆசீர்வதித்தார். ஸ்ரீ ஸ்வாமி கூறியபடியே செய்தவுடன் அவருக்கு சில நாட்களில் மகன் பிறந்தான். அவர் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

ஒரு முறை க்ஷேத்திராடனத்தின் போது அவர் அக்கல்கோட் வந்திருந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அன்று பட்வர்தன் கோவிலுக்கு அருகில் அமர்ந்திருந்தார். தூய பக்தியுடன் கோபர்டே ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். பக்திப் பெருக்கில் அவர் கண்களில் இருந்து கண்ணீர் பெருக்கெடுத்தது. ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களை கண்ணீரால் அபிஷேகம் செய்தார். பின்னர் ஒரு காய்ந்த துணியில் துடைத்து விட்டு, கைகளை கூப்பிக் கொண்டு பவ்வியமாக நின்றுகொண்டிருந்தார். துறவிகளில் மிகவும் உயர்ந்தவரான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கெட்டுப்போன ஏழு பருப்புகளை எடுத்து கோபர்டேயின் கைகளில் அளித்துவிட்டு, **"பத்திரமாக உன் ஊருக்குச் செல். நற்காரியங்களை செய்துகொண்டிரு"** என்று ஆசீர்வதித்து ஒரு தேங்காயை அவரிடம் கொடுத்து அனுப்பி வைத்தார். மிகுந்த மனநிறைவுடன் அவர் சில நாட்கள் அக்கல்கோட்டில் தங்கியிருந்துவிட்டு பரோடா வந்து சேர்ந்தார்.

அவருக்கு இருந்த ஏழு விரோதிகளுக்கு சில நாட்களில் காலரா நோய் பாதிக்கப்பட்டு இறந்தனர். இதைத்தான் ஸ்ரீ ஸ்வாமி அவருக்கு கெட்டுப்போன பருப்பு மூலம் உணர்த்தினார் என்பதை புரிந்துகொண்டார். ஸ்ரீ ஸ்வாமியின்

பக்தர்கள் தங்கள் கஷ்டங்களை அவரிடம் பிரார்த்தனை செய்துகொள்ளகூட தேவையில்லை, எதுவும் கேட்காமலேயே அவர் தன் அருள் மழையை அனைவரின் மீதும் பொழிவார் என்பதை இந்த நிகழ்ச்சி உறுதிப்படுத்துகிறதல்லவா!

2. வறுமையினால் துன்பப்பட்டுக் கொண்டிருந்த ஒருவர் அக்கல்கோட்டில் சில நாட்கள் தங்கியிருந்தார். அவர் பலமணி நேரங்களுக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு முன்னால் கைகளை கூப்பியவாறு நின்று கொண்டிருப்பார். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி தாழ்த்தப்பட்டோர் குடியிருப்பு பகுதியில் இருந்தார். அந்த பக்தர் ஸ்ரீ ஸ்வாமி இருக்கும் இடத்திற்கு சென்று கைகளை கூப்பிக்கொண்டு நின்றுகொண்டிருப்பதை கவனித்தவுடன், **"ஏ! இந்த எலும்பை எடுத்துக் கொண்டு செல்!"** என்று கூறினார். எலும்பை எப்படி தொடுவது என்ற சந்தேகம் அவருக்கு இருந்தது. இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆணையை மீறக் கூடாதல்லவா! அதனால் சில எலும்புத் துண்டுகளை தன் வேட்டியில் கட்டியெடுத்துக் கொண்டு அவற்றை தூரமாக வைத்து விட்டு மீண்டும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து கைகளை கூப்பிக்கொண்டு நின்றார். **"ஏன் இன்னும் நின்றுகொண்டிருக்கிறாய்? கிளம்பு"** என்று மஹராஜ் கூறினார். வீட்டுக்கு வந்து பார்த்தபோது அந்த எலும்புத்துண்டுகள் தங்கமாக மாறியிருந்தது! அவர் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை.

பக்தரும் தனக்கு வேண்டியதை கேட்கவில்லை, ஸ்ரீ ஸ்வாமிகளும் அவரிடம் என்ன வேண்டும் என்று கேட்கவில்லை! ஆனால் பக்தரின் கவலை நிவர்த்தி ஆகிவிட்டது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பக்தர்களுக்கு குறை ஏதும் இருக்குமோ? குறையொன்றுமில்லை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 165

# ஒரு லட்சம் சம்பளம்

கணேஷ் பல்லால் முலேகர் நீதிமன்றத்தில் ஒரு சேவகனாக வேலை செய்துகொண்டிருந்தார். அவருடைய சகோதரன் திடீரென இறந்து விட்டதால் அவருக்கு ஆட்சியர் அலுவலகத்தில் குமாஸ்தா வேலை கிடைத்தது. ஆனால்

துரதிர்ஷ்டவசமாக இவருடைய கையெழுத்து நேர்த்தியாக இல்லாத காரணத்தால் ஆட்சியாளர் அவரை பணிநீக்கம் செய்தார். முந்தைய வேலையும் பறிபோன நிலையில் கணேஷ் வேலையில்லாமல் வீட்டில் இருக்க வேண்டியதாயிற்று. அதிகாரிகளை கெஞ்சுவதைக் காட்டிலும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை அடைக்கலம் அடைவதுதான் சரி என்ற எண்ணத்துடன் அவர் அக்கல்கோட் வந்தடைந்தார். அன்று ஸ்ரீ ஸ்வாமி ஒரு வீதியில் தங்கியிருந்தார். ஸ்ரீ ஸ்வாமியின் தரிசனத்தைக் கண்டவுடன் கணேஷ் பக்தி பரவசத்தில் கண்ணீர் விட்டார். ஸ்ரீ தத்தாத்ரேயரான ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களைப் பற்றிக் கொண்டு சிறிது நேரத்திற்கு கண்ணீரால் பாதபூஜை செய்துவிட்டு திருப்தி அடைந்தார். ஸ்ரீ ஸ்வாமிக்கு நைவேத்தியம் செய்து படைக்கலாம் என்ற எண்ணத்துடன் ஊருக்குள் சென்றார்.

நைவேத்தியம் சமைத்து கொண்டுவந்த போது ஸ்ரீ ஸ்வாமி காஸ்-பாகில் கிணற்றுக்கு அருகில் அமர்ந்து கொண்டிருந்தார். அப்போது அவர் மிகுந்த கோபத்துடன் இருந்தார். சேவகர்கள் எவராலும் அவருக்கு அருகில் செல்ல முடியவில்லை. கோபத்தின் உக்கிரத்தால் அனைவரும் 100 அடிக்கு அப்பால் நின்று கொண்டிருந்தனர். எவரேனும் நைவேத்தியம் கொண்டுவந்தால் அவர்களை கெட்ட வார்த்தைகளால் வசை பாடிக் கொண்டிருந்தார். அதனால் கணேஷ் சென்றுவிட்டு மீண்டும் மதியம் வந்தபோது ஸ்ரீ ஸ்வாமி சாந்தமான மனோநிலையில் இருந்தார். உடனே அவருக்கு சில சேவைகளை மகிழ்ச்சியுடன் செய்தார்.

கணேஷ் தினமும் நான்கு அல்லது ஐந்து முறை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தார். இதே போல சில நாட்களுக்கு தொடர்ந்தது. இருப்பினும் தேஜஸ்வியான ஆளுமை நிறைந்த ஸ்ரீ ஸ்வாமியை அவரால் நேருக்கு நேர் கண்டு தரிசனம் செய்ய முடியவில்லை. ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமியின் சேவகர்களுள் ஒருவர் இவரை மறுநாள் ராமநவமி என்பதால் வரும் போது தயிர் கொண்டு வருமாறு கூறினார். அந்த சேவகரிடம் கணேஷ், **“எனக்கு நீங்கள் ஒரு உபாயம் செய்ய வேண்டுமே! நான் நாளை வரும்போது கண்டிப்பாக தயிருடன் வருகிறேன்”** என்றார். அவர் என்ன வேண்டும் என்று கேட்டதற்கு, **“நான் வேலையை இழந்துவிட்டேன். அதைப்பற்றி ஸ்ரீ ஸ்வாமியிடம் கேட்க வேண்டும்”** என்றார். அந்த சேவகர் ஸ்ரீ ஸ்வாமியிடம் விண்ணப்பித்தவுடன், **“வேலை கிடைத்துவிட்டது, போ!”** என்றார். இதைகேட்டவுடன் மிகுந்த திருப்தி அடைந்த கணேஷ் மீண்டும் அந்த சேவகரிடம், **“ஊதியம் எவ்வளவு”** என்று கேட்குமாறு பணிந்தார். அதற்கு மஹராஜ், **“ஒரு லட்சம் ரூபாய், போ”** என்றார். மனிதனுக்கு எவ்வளவு அருள் கிடைத்தாலும் மீண்டும் மீண்டும் கடவுளை கேள்விகளால் சோதித்துப் பார்ப்பதில்




அவனுக்கு ஆனந்தம்தான்! கடவுளும் தன் குழந்தைகளுக்கு அள்ளிக் கொடுப்பதில் எந்த குறையும் வைப்பதில்லையே! கணேஷ் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. அடுத்த நாள் எட்டு அணாக்கள் மதிப்புள்ள தயிரை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு படைத்தார்.

கணேஷ் முலேகர் கையில் இருந்த பண இருப்புக்கள் தீர்த்துக்கொண்டே வந்தன. அவர் கானகாபூர் செல்வதற்காக கையில் சிறிது தொகை மட்டுமே வைத்திருந்தார். அதனால் அவர் அன்று ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காக சென்றபோது தேங்காய்க்கு பதிலாக இரண்டு காய்ந்த பேரிச்சம்பழங்களை கொண்டு சென்று படைத்தார். **"தேங்காய் கொண்டு வா!"** என்று ஸ்ரீ ஸ்வாமி ஆணையிட்டார். கையிருப்பு தீர்ந்துவிட்டதே என்ற கவலையுடன் ஸ்ரீ ஸ்வாமிக்கு தேங்காயை படைத்தார். ஆனால் கானகாபூர் செல்லும் வழியில் அவருக்கு ஸ்ரீ ஸ்வாமியின் அருளால் எட்டு அணாக்கள் கிடைத்தது. அவர் பயணத்தை திருப்தியுடன் முடித்துக் கொண்டு அக்கல்கோட்டுக்கு திரும்பியவுடன் அவருக்கு ரூபாய் 15/- சம்பளத்தில் பணி மீண்டும் கிடைத்துவிட்டது என்கிற தகவலைப் பெற்றார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் கூறியது உண்மையாகிவிட்டது! சில மாதங்களுக்குப் பிறகு ஆட்சியர் அலுவலகத்தில் ரூபாய் 20/- சம்பளத்துடன் பணியமர்த்தப்பட்டார். அதனால் அவர் அக்கல்கோட்டுக்கு பணிமாற்றம் செய்யப்பட்டிருந்தார். அவர் மிகுந்த சந்தோஷத்துடன் தினமும் வந்து ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்து கொண்டிருந்தார். ஐந்து வருடங்களில் அவர் தலைமை குமாஸ்தாவாகி, அதே வருடத்தில் மாம்லத்தாராகவும் ஆகிவிட்டார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கூறியது போல் ஒரு லட்சம் ரூபாய் வேலை அவருக்கு கிடைத்துவிட்டது!

மேலும் கணேஷ் பல்லால் முலேகர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சரித்திரத்தை, "ஸ்ரீ அக்கல்கோட் நிவாஸி ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடைய சரித்திரம்" என்கிற பெயரில் மராத்தியில் எழுதி புகழடைந்து, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தராக திகழ்ந்தார். ஒருவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஆசீர்வாதத்தை பெற்றால் அவர்களுடைய வாழ்வில் எதுவேண்டுமானாலும் நிகழும் என்பதற்கு இந்த நிகழ்ச்சி அற்புதமான சான்று அல்லவா?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# அத்தியாயம் 166

# வைத்தியநாதன்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பலருடைய தீராத நோய்களை குணமாக்கி அருளிய லீலைகளை முந்தைய பல அத்தியாயங்கள் வாயிலாக அறிந்து அனுபவித்தது போலவே, இந்த அத்தியாயத்திலும் சில அற்புதமான லீலைகளைப் படித்து ஆனந்தம் அடைவோமா?

## 1. ராமச்சந்திர கேரோபா

மும்பையைச் சேர்ந்த ராமச்சந்திர கேரோபா என்கிற பக்தர் ஒருவர் காச நோயினால் பாதிக்கப்பட்டிருந்தார். அவர் எவ்வளவோ வைத்திய முறைகளை கையாண்டும் எதுவும் பலனளிக்கவில்லை. அவருடைய முதலாளி கடனாளியாகி விட்டதால் ராமச்சந்திர கேரோபாவின் வேலை பறிபோனது. என்ன செய்வதென்று தெரியாமல் கவலையில் மூழ்கினார். விதியின் விளையாட்டு மிகவும் கொடுமையானது. உடல் வேதனை ஒரு பக்கம் என்றால் மனவேதனை மறுப்பக்கம் அவரை வாட்டி வதைத்தது. அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழைக் கேள்விப்பட்டு அவர் தன்னை கண்டிப்பாக பேரழிவிலிருந்து காப்பாற்றுவார் என்கிற நம்பிக்கையுடன் அக்கல்கோட் பயணம் மேற்கொண்டார்.

அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக தன் தாயுடன் அக்கல்கோட் சென்றடைந்தார். அன்று ஸ்ரீ ஸ்வாமி காஸ்-பாகில் ஒரு ஆலமரத்தின் கீழ் ஒரு கட்டிலில் சயன கோலத்தில் இருந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அதியற்புதமான உருவத்தைக் கண்டவுடன் அவர் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு, தான் கொண்டு வந்திருந்த பழங்கள் மற்றும் இனிப்புகளை சமர்ப்பணம் செய்துவிட்டு, தன் கைகளை கூப்பியவாறு நின்று கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி அழகாக சிரித்துக் கொண்டே, **“ஏ! இங்கு வா”** என்று அழைத்து, **“இந்த தேங்காயை வைத்துக் கொள்”** என்று கொடுத்து அருளினார். ராமச்சந்திர கேரோபாவுக்கு அனைத்தும் மிகவும் வியப்பாக இருந்தது. அவர் திகைப்பில் அப்படியே அமர்ந்திருந்தார். **“என்ன அப்படியே திகப்படைந்து அமர்ந்திருக்கிறாய்? உன் வீட்டுக்கு கிளம்பு”** என்று ஸ்ரீ ஸ்வாமி ஆணையிட்டார். **“உங்களுக்கு ஆசீர்வாதமும் பிரசாதமும் கிடைத்துவிட்டது. உடனடியாக வீட்டுக்கு கிளம்புங்கள்!”** என்று சேவகர்கள் துரிதப்படுத்தினர்.




ராமச்சந்திர கேரோபா சில நாட்கள் அக்கல்கோட்டில் தங்கியிருந்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் லீலைகளை மனதார கண்டுக்களித்துவிட்டு, ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சேவைகள் செய்துவிட்டு தன் சொந்த ஊருக்குப் பயணித்தார். சில நாட்களில் ராமச்சந்திர கேரோபாவின் உடல்நலத்தில் முன்னேற்றம் ஏற்படத் தொடங்கியது. பின்னர் நல்ல வேலையும் கிடைத்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மீது அவர் கொண்டிருந்த பக்தி பல மடங்காகப் பெருகியது. ராமச்சந்திர கேரோபா தன் மனக்கஷ்டத்தையும் உடல் கஷ்டத்தையும் ஸ்ரீ ஸ்வாமியிடம் முறையிடவே இல்லை, இருப்பினும் தேங்காயில் முழு ஆசீர்வாதங்களையும் அடக்கி அவரிடம் கொடுத்தனுப்பினார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பக்தர்களின் வாழ்க்கையில் நிகழ்த்தும் ஒவ்வொரு லீலைகளையும் உணர்ந்து முழுமையாக விவரிப்பது என்பது ஒரு சாதாரண மனிதனால் முடியாத காரியம் ஆயிற்றே!

## 2. கண் கோளாறைக் குணப்படுத்துதல்

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக ஒரு பெண்மணி வந்திருந்தாள். அவள் சில நாட்களாக கண் வலியால் வேதனை அனுபவித்துக் கொண்டிருந்தாள். அவள் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் தன் கண் வலியை குணப்படுத்துமாறு கேட்டதற்கு, **“எருமை மாட்டின் சிறுநீரை எடுத்து உன் கண்களில் ஊற்றிக் கொள்”** என்று வைத்தியம் கூறினார். அவளும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் கூறியபடியே மூன்று நாட்களுக்கு செய்தவுடன் அவள் கண் வலி முற்றிலும் குணமடைந்தது. அதே பெண்ணுக்கு கழுத்தில் இருந்த சீழ் பிடித்த கட்டி வெடித்து, அதனால் வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்தாள். அவள் அதற்கான வைத்தியத்தை ஸ்ரீ ஸ்வாமியிடம் கேட்டபோது, **“காளை மாட்டின் சிறுநீரை அதில் தடவினால் குணமாகும்”** என்று கூறினார். அவ்வாறே அவள் மூன்று அல்லது நான்கு நாட்களுக்குச் செய்தவுடன் அந்த கட்டி குணமடைந்தது.

புனேவைச் சேர்ந்த ஜானகி பாய் கண் நோயால் பாதிக்கப்பட்டிருந்தாள். அவள் பல வைத்திய முறைகளை கையாண்டும் எதுவும் பலனளிக்காதபோது, அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்துவிட்டு நிவாரணம் வேண்டி நின்றாள். **“யானையின் சிறுநீரை கண்களில் ஊற்றிக்கொண்டால், உனக்கு மீண்டும் பார்வை கிடைக்கும்”** என்று கூறி அருளினார். அவள் அவ்வாறு செய்தவுடன் நிவாரணம் கிடைத்தது. அவள் மிகுந்த சந்தோஷத்துடன் ஸ்ரீ ஸ்வாமிக்கு நைவேத்தியம் படைத்துவிட்டு தன் சொந்த ஊருக்குச் சென்றாள்.

### 3. அக்கல்கோட் நிர்வாகியின் கண் எரிச்சலை குணப்படுத்துதல்

அக்கல்கோட் அரசின் நிர்வாகத்தை கவனித்து வந்த ஸ்ரீ தினகர் ராவ் ஆனந்த் மிகுந்த எரிச்சலுடன் கூடிய கண் நோய் தொந்தரவினால் பாதிக்கப்பட்டி ருந்தார். அவருக்கு எந்த வைத்திய முறைகளும் நிவாரணம் அளிக்காததால், அவர் ஸ்ரீபாத பட்டிடம் தனக்காக ஸ்ரீ ஸ்வாமிகளிடம் பிரார்த்தனை செய்து ஏதாவது நிவாரணம் கேட்குமாறு கூறியிருந்தார். ஸ்ரீபாத பட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் சென்று, **"ஸ்வாமி, நிர்வாகியின் கண் எரிச்சலுக்கு மருந்து ஏதாவது கூறுங்கள்"** என்று வேண்டிக் கொண்டார். **"யானையின் சிறுநீரை மூன்று நாட்களுக்கு ஊற்றிக்கொள்ள சொல். சரியாகிவிடும்"** என்று கூறினார். நிர்வாகியும் அவ்வாறே செய்தவுடன் கண் எரிச்சல் நீங்கி தெளிவான பார்வையைப் பெற்றார். இது என்ன வினோதமான வைத்திய முறை! பல வைத்தியர்கள் முயற்சி செய்தும் நிவாரணம் அளிக்க முடியாத போது, யானையின் சிறுநீர் மிகப்பெரிய அற்புதத்தை நிகழ்த்தி விட்டதே! என்று அவர் ஆச்சரியம் அடைந்தார். இதுதான் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வார்த்தைகளின் மகிமை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வாயிலிருந்து வரும் ஒவ்வொரு வார்த்தையும் சத்தியம். அவை அனைத்தும் நிறைவேறியே தீரும்.

### 4. குஷ்டரோகத்தை குணப்படுத்துதல்

குஷ்டரோகத்தினால் பாதிக்கப்பட்டிருந்த அடியவர் ஒருவர் (பெயர் குறிப்பிடப்படவில்லை) சில நாட்கள் நாசிக்கில் தங்கியிருந்தார். பின்னர் பண்டரிபுரம் வந்து பிச்சை எடுத்து வாழ்ந்து கொண்டிருந்தார். தன் நோய் குணமாக வேண்டும் என்கிற எண்ணத்தில் பல ஊர்களுக்குச் சுற்றித் திரிந்து கொண்டிருந்தார். பண்டரிபுரத்தில் தங்கியிருந்த போது ஒருநாள் அவருக்கு கனவு தோன்றியது. அதில், **"அக்கல்கோட்டுக்கு செல். நீ நலம் பெறுவாய்"** என்று அசரீரி ஒலித்தது. இரண்டு நாட்களுக்குப் பிறகு மீண்டும் அதே கனவு தோன்றியது. உடனே நடந்தே அக்கல்கோட் வந்து சேர்ந்தார். அன்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் காஸ்-பாகில் இருந்தார். ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்துவிட்டு, அங்கேயே தங்கியிருந்தார். மூன்று வேளைகளும் ஸ்வாமியை தரிசனம் செய்வது, தீர்த்த பிரசாதம் அருந்துவது, ஜபம் செய்வது ஆகியவற்றை தொடர்ந்து மூன்று வருடங்களுக்கு செய்து கொண்டிருந்தார்.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காக ஒரு பிராமணர் வந்திருந்தார். **"ஏ! பிராமணரே, அரண்மனைக்கு பின்னால் ஒரு சந்தன மரம்**

**இருக்கிறது, அதிலிருந்து ஒரு கட்டையை கொண்டுவந்து கொடு"** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறியபடி அவர் கொண்டுவந்து கொடுத்தார். அதை வாங்கி ஸ்ரீ ஸ்வாமி குஷ்டரோகி அடியவரிடம் கொடுத்துவிட்டு, **"இந்த சந்தனத்தை இழைத்து உடல் முழுவதும் பூசிக் கொள். இந்த சந்தனக்கட்டை தீரும் நாளோடு உன் நோயும் குணமாகிவிடும்"** என்று கூறிவிட்டு கொடுத்தார். அவரும் அவ்வாறே செய்தார். மூன்று வருடங்களுக்குப் பிறகு அந்த கட்டை தீர்ந்தது, அவருடைய உடலும் பொன்னாக மாறியிருந்தது. அவர் சில நாட்கள் அக்கல்கோட்டில் தங்கியிருந்து ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் செய்துவிட்டு, பின்னர் தன் சொந்த ஊருக்குச் சென்றார்.

### 5. பாபுராவ் குல்கர்னியின் தொண்டையில் ஓட்டை

அக்கல்கோட்டுக்கு அருகில் இருக்கும் லோஹ்காவ் என்கிற ஊரில் வசித்து வந்த பாபுராவ் குல்கர்னிக்கு தொண்டையில் துவாரம் ஒன்று இருந்தது. அவர் உணவு அருந்தினாலோ அல்லது தண்ணீர் குடித்தாலோ அவை அவருடைய தொண்டையில் இருக்கும் துவாரம் மூலம் வெளியே வந்து கொண்டிருந்தது. இதனால் மிகவும் மனமுடைந்த பாபுராவ், கானகாபூர் சென்று ஸ்ரீ குருச்சரித்திர பாராயணம் மேற்கொண்டார். ஏழாவது நாள் பாராயணத்தின் போது அவருக்கு ஒரு காட்சி ப்ரத்யக்ஷமானது. **"கணபதியை வழிபடு"** என்ற உத்தரவு வந்தது. அவரும் அவ்வாறே பல நாட்கள் வழிபட்டுக் கொண்டிருந்தார். ஒருநாள் வழிபாடு சமயத்தில் பாம்பு ஒன்று அவருடைய உடலில் ஏறியது. அவர் பயந்து நடுங்கியவுடன், கணபதியின் சிலை கீழே விழுந்து உடைந்து விட்டது. அன்றிலிருந்து அவருடைய உடல்நலம் வெகுவாக பாதிப்படைந்தது.

பின்னர் சில நாட்களுக்குப் பிறகு அவருக்குத் தோன்றிய ஒரு கனவில் கடவுளின் தன்மைகளை விளக்கும் வகையில் அபங்கங்கள் இயற்றுமாறு கூறப்பட்டது. பின்னர் விழித்துக் கொண்டவுடன், **"எனக்கு அவ்வளவு ஞானம் இல்லையே! அபங்கங்களை எப்படி இயற்றுவது? ஆனால் கட்டளையை நிறைவேற்றித் தானே ஆக வேண்டும்!"** என்று எண்ணியவாறு 300- 400 அபங்கங்கள் இயற்றினார். இருப்பினும் அபங்கங்களின் கடைசி வரி முற்று பெறாமலேயே இருந்தது. பாபு சாஹேப் கவலை கொண்டு பிரார்த்தனை செய்து கொண்டவுடன் மீண்டும் ஒரு கனவு தோன்றியது. அதில், **"நான் அக்கல்கோட்டில் இப்போது அவதரித்துள்ளேன். அங்கு சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் பிரார்த்தனை செய்து கொள். உன் பிரார்த்தனைகள் அனைத்தும் நிறைவேறும்"** என்று உணர்த்தப்பட்டது.





அடுத்த நாள் அவர் அக்கல்கோட் சென்றடைந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்த பின்னர் , அவரை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து விட்டு, தன் கைகளை கூப்பியவாறு நின்று கொண்டிருந்தார். உடனே ஸ்ரீ ஸ்வாமி அழைத்து, தன் பாதத்தின் கட்டை விரலால் பாபு சாஹேபின் தொண்டையில் இருந்த ஓட்டையை தொட்டார். பின்னர் தன் புனித கரத்தினால் பாபு சாஹேபின் தலையை தொட்டு ஆசீர்வதித்தார். ஆஹா! பாபுராவ் சாஹேப் மிகுந்த புண்ணியம் செய்தவர்! ஸ்ரீ ஸ்வாமியின் பாதம் பட்டவுடனேயே அவர் தொண்டையில் இருந்த துவாரம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போனது. மேலும் ஸ்ரீ ஸ்வாமியின் ஸ்பரிசம் அவருடைய ஞானக் கண்ணைத் திறந்தது. அபங்கங்களின் கடைசி வரியை எழுதி முடித்தார். பின்னாட்களில் அவர் தாஸ் பாபு என்று புகழடைந்து துறவியானார். இதுவல்லவோ ஆசீர்வாதம்! நோயையும் குணப்படுத்தி, ஞானத்தையும் ஊட்டி, துறவியாகவும் மாற்றிவிட்டார் ஸ்ரீ ஸ்வாமி!

### 6. கோவிந்தபந்த் குல்கர்னியின் வயிற்றுவலி

போட்டி நதிக்கரையில் அமைந்திருக்கும் மமதாபாத் என்கிற ஊரைச் சேர்ந்த கோவிந்தபந்த் குல்கர்னி ஒரு ரிக்வேத பிராமணர். உணவு உட்கொண்டவுடன் அவருக்கு வயிற்றில் எரிச்சல் ஏற்பட்டு வாந்தியெடுத்துக் கொண்டிருந்தார். இதனால் மிகுந்த வேதனை அனுபவித்துக் கொண்டிருந் தமையால், தீர்வு தேடி கானகாபூருக்கு சென்று சேவைகள் செய்து கொண்டிருந்தார். சில நாட்களுக்குப் பிறகு அவருக்கு தோன்றிய ஒரு காட்சியில், **"உனக்கு பரபிரம்மாவின் தரிசனம் கிடைத்தவுடன் நோய் குணமாகும்"** என்று உணர்த்தப்பட்டது. இந்த கனவு தோன்றியவுடன் அவருடைய உறக்கம் கலைந்து விழித்துக்கொண்டு **"இந்த கலியுகத்தில் என்னைப் போன்ற ஒரு குடும்பஸ்தனுக்கு பரப்பிரம்மாவின் தரிசனம் எப்படி சாத்தியம்!"** என்ற யோசனையில் ஆழ்ந்தார். இக்கனவைப் பற்றி அவர் பாபா பட் என்னும் ஸ்ரீ ஸ்வாமியின் பக்தரிடம் விவரித்ததவுடன் அவர் ஸ்ரீ ஸ்வாமியிடம் பிரார்த்தனை செய்து கொண்டவுடன் அவருக்கு ஒரு காட்சி தோன்றியது. **"அந்த பரபிரம்மா அக்கல்கோட்டில் இருக்கிறார்"** என்று உணர்த்தப்பட்டது. உடனே கோவிந்தபந்த் ஸ்ரீ ஸ்வாமியின் பாதுகைகளை வணங்கிவிட்டு பிராமணர்களுக்கு போஜனம் அளித்துவிட்டு, அக்கல்கோட்டுக்கு பயணம் செய்தார்.

அன்று ஸ்ரீ ஸ்வாமி ஒரு பிராமணரின் வீட்டில் தன் லீலைகளை நிகழ்த்திக் கொண்டிருந்தார். அவரை வணங்கிவிட்டு கோவிந்த் நின்று

கொண்டிருந்தார். **"பசு சாணத்தையும், கோமியத்தையும் ஏழு நாட்களுக்கு உண்டு வந்தால் உன்னுடைய நோய் முற்றிலுமாக குணமாகிவிடும். நீ ஒரு வயதான பசுவை துன்புறுத்தியதால்தான் இந்த வலி வேதனைகளை அனுபவித்துக் கொண்டிருக்கிறாய்"** என்று கூறி ஆசி வழங்கினார். **"நீங்கள் முழுமையான சிவஸ்வரூபம்"** என்று கோவிந்த் ஸ்ரீ ஸ்வாமியை புகழ்ந்துவிட்டு அவர் கூறிய வைத்தியத்தை ஏழு நாட்களுக்குக் கடைபிடித்தார். அவருடைய நோய் முற்றிலுமாக குணமைடைந்தது. பின்னர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் அனுமதி பெற்றுக் கொண்டு தன் சொந்த ஊருக்குச் சென்றடைந்தார்.

ஸ்ரீ ஸ்வாமி தன் பக்தர்களின் நோய்கள் குணமாக வினோதமான பல வைத்திய முறைகளைக் கூறுவது வழக்கம். அது மிகவும் விசித்திரமாக இருக்கிறதே என்பதைப் பற்றி துளி கூட யோசிக்காமல் அவருடைய பக்தர்கள் அவற்றை கடைபிடிப்பார்கள், நோய்களிலிருந்து குணமும் அடைவார்கள். உண்மையான பக்தியும் நம்பிக்கையும் உடைய பக்தர்களின் வாழ்க்கையில் ஒவ்வொரு நொடியும் அவர் நிகழ்த்திய/நிகழ்த்திக் கொண்டிருக்கும் லீலைகளை ஒரு புத்தகத்தினுள் அடக்கி விட முடியுமா என்ன?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 167

# காலனிடமிருந்து காப்பாற்றி அருளுதல்

காசியைச் சேர்ந்த பஹீரெ சாஸ்திரி என்கிற அடியவர் ஸ்ரீ தத்தாத்ரேயரின் பரம பக்தர். அவர் பல நாட்கள் ஸ்ரீ தத்தரை பிரார்த்தனை செய்ததன் பலனாக அவருக்கு ஒரு மகன் பிறந்தான். அவர் தன் மகனுக்கு தத்தா என்று பெயர் சூட்டினார். சாஸ்திரி புவா ஜோதிடக் கலையில் சிறந்து விளங்கியதால் அவர் தன் மகனுடைய ஆயுட்காலம் வெறும் 14 ஆண்டுகள் மட்டுமே என்பதை அறிந்து கொண்டார். அவரும் அவருடைய மனைவியும் மிகுந்த மனவேதனை அடைந்தனர். அவர்கள் ஒரு துறவியை அணுகி ஏதேனும் பரிகாரம் செய்தால் தன் மகன் உயிர் பிழைப்பானா என்று கேட்டதற்கு,

**“அவதார புருஷருக்கு சேவைகள் செய்தால், இந்த பேரழிவிலிருந்து காப்பாற்றப்படுவீர்கள்”** என்று கூறினார். **“இந்த காலத்தில் அப்படிப்பட்ட ஆத்மாக்கள் இருக்கிறார்களா?”** என்று சந்தேகத்துடன் கேட்டார். **“நான் சில நாட்களுக்கு முன் அக்கல்கோட்டில் அப்படிப்பட்ட அவதார புருஷரை தரிசனம் செய்தேன். நீங்கள் அங்கு செல்லுங்கள்”** என்று அவருக்கு வழிகாட்டினார்.

சாஸ்திரி புவா தன் மனைவி மற்றும் மகனை அழைத்துக் கொண்டு அக்கல்கோட் வந்தடைந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தவுடன் பேரானந்தம் அடைந்தனர். அவர்கள் நான்கு ஆண்டுகள் அங்கேயே தங்கி ஒருமுகமாக ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தனர். குறிப்பிட்ட பேராபத்து நிறைந்த அந்த நாள் வந்தது. அன்று ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் காஸ்-பாகில் அமர்ந்திருந்த போது, இம்மூவரும் தரிசனத்துக்காக வந்தனர். அப்போது பலர் ஸ்ரீ ஸ்வாமியை சூழ்ந்திருந்தனர். சிறுவனுடைய உடல் நடுங்கத் தொடங்கியது. அவனுடைய கண்கள் வெளிறி, தொப்பென தரையில் விழுந்தான். ஸ்ரீ ஸ்வாமி, சாஸ்திரி புவாவை எள் கொண்டு வருமாறு கூறினார். எதற்காக ஸ்ரீ ஸ்வாமி எள்ளை கொண்டுவரச் சொல்கிறார் என்பதை அறிந்துகொண்ட புவா, **“ஸ்வாமி, நாங்கள் நான்கு ஆண்டுகளாக உங்களுக்கு சேவைகள் செய்தது இந்த நிகழ்வை தடுப்பதற்குத் தானே! இருப்பினும் ஏன் இப்படி நடக்கிறது?”** என்று பயத்தில் கதறினார். பெற்றோர்கள் இருவரும் ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களை பற்றிக்கொண்டு வாய்விட்டு அழுது புலம்பினர். தங்கள் மகனை காப்பாற்றுமாறு பிரார்த்தனை செய்து கொண்டனர்.

கருணையின் வடிவமான ஸ்ரீ ஸ்வாமி அவர்களிடம், **“ஏன் அழுகிறீர்கள்? சர்க்கரையையும் எள்ளையும் கலந்து இவனுடைய வாயில் போடுங்கள்”** என்று கூறினார். அடுத்த நொடியே அவர்கள் அவ்வாறு செய்தவுடன், ஆஹா! இறந்த மகன் மீண்டும் உயிர் பிழைத்துக் கொண்டான். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் காலனின் பிடியில் இருந்து அந்த சிறுவனைக் காப்பாற்றி அருளினார். அவர்கள் சில நாட்கள் அக்கல்கோட்டில் தங்கி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சேவைகள் செய்துவிட்டு, ஸ்ரீ ஸ்வாமியின் அனுமதியுடன் தங்கள் சொந்த ஊரான காசிக்குச் சென்றனர்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 168

# அபயக்கரம்

நாதோபா அக்கல்கோட் அரசின் பொருளாளராக இருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தர். அவர் எவ்வளவு பரபரப்பான வேலையில் இருந்தாலும், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை நினைவில் கொள்வதையும் அவரை தரிசனம் செய்வதையும் தவறவிட்டதில்லை. அவர் மிகுந்த பக்திமானாக இருந்தபோதிலும், நல்லவர்களுக்கும், தீயவர்களுக்கும் இடையே பகை ஏற்படுவது சகஜம் தானே! நாதோபாவுக்கு சில தீயவர்கள் பல தொந்தரவுகளை அளித்து வந்தனர்.

ஒருமுறை அவர்கள் நாதோபாவின் கஜானாவிலிருந்து 2000/- ரூபாய்களை திருடிவிட்டு, மன்னரிடம் சென்று கஜானாவில் 2000/- ரூபாய் குறைவதாக புகார் அளித்தனர். மன்னரும் நிர்வாகியும் கஜானாவை சோதித்துப் பார்த்ததில் 2000/- ரூபாய் குறைவதைக் கண்டுபிடித்து நாதோபாவை கைது செய்தனர். அவர் எவ்வளவோ அழுது கதறிய போதும், அவர்கள் அவர் கூறியது எதையும் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. திக்கற்றவனுக்கு ஸ்ரீ ஸ்வாமியைத் தவிர வேறுகதி உண்டோ? நாதோபா மனதார ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை பிரார்த்தனை செய்து கொண்டார். அவருடைய கதறல்கள் ஸ்ரீ ஸ்வாமியின் காதுகளுக்கு எட்டியது. அவரின் கருணை கடாக்ஷம் நாதோபாவின் மீது பொழியத் தொடங்கியது.

அடுத்த நாளான வியாழக்கிழமையன்று மன்னரும் தாஜிபாவும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்தனர். அவர்கள் இருவரும் கைகளை கூப்பிக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமிக்கு முன்னால் நின்று கொண்டிருந்தனர். **“ஏ! மாதர் சோத், இப்படித்தான் நீங்கள் கஜானாவை சோதனை செய்து எளியவனை துன்புறுத்துவீர்களா? உங்களுக்கு துயரம் வந்து சேரும்”** என்று திடமாகக் கூறினார். இருவரும் பயந்து நடுங்கிக் கொண்டு, “ஸ்வாமி, எங்களை மன்னித்து விடுங்கள்” என்று மீண்டும் மீண்டும் பிரார்த்தனை செய்து கொண்டனர். அவர்கள் அரண்மனைக்குச் சென்று கஜானாவை சோதித்தபோது அதில் ஒரு பைசா கூட குறைவாக இல்லை. இருவரும் தாங்கள் செய்த தவறுக்காக வருந்தினர். நாதோபாவும் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார்.





தான் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டதற்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருளாசிதான் காரணம் என்பதை நாதோபா புரிந்து கொண்டார். அவருடைய பக்தி பலமடங்காகப் பெருகியது. தன் வாழ்நாள் முழுவதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சேவைகள் செய்வதைத் தவிர வேறு பணிகள் செய்யவதில்லை என்று அவர் உறுதி எடுத்துக் கொண்டார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நீட்டிய அபயக்கரம் நாதோபாவை முழு சேவகராக மாற்றியது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 169

# ஹைதராபாத்தைச் சேர்ந்த லாலா சாஹேப்

லாலா சாஹேப் என்கிற பிராமணர் ஒருவர் நிஜாம் அரசு பணியில் வேலை செய்து கொண்டிருந்தார். அவர் வெண்குஷ்டத்தால் பாதிக்கப்பட்டிருந்தார். அவர் மிகுந்த மனவேதனையில் இருந்த போது ஒருவர் அவரிடம் அல்வால் என்னும் ஊரிலுள்ள வேங்கடாசலபதி கோவிலுக்குச் சென்று அனுஷ்டானங்களை கடைபிடித்தால் நிவாரணம் கிடைக்கும் என்று கூறினார். ஹைதராபாத்திலிருந்து 16 மைல்கள் தொலைவில் இருக்கும் அல்வாலில் ஆறு மாதங்கள் தங்கி அனுஷ்டானங்களை கடைபிடித்த போதும் அவருக்கு எந்தவித முன்னேற்றமும் ஏற்படவில்லை. வேறு வழி தெரியாமல் அவர் ஹைதராபாத் வந்து சேர்ந்தார்.

சில நாட்களுக்குப் பிறகு லாலா சாஹேப் அவர் வீட்டின் மேல்தளத்தில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தபோது ஒரு கனவு தோன்றியது. அதில் வனப்பான அழகு நிறைந்த பசு ஒன்று வந்தது. இந்த பசு எப்படி மேல்தளத்திற்கு வந்தது! என்று எண்ணியவாறே இது கனவா அல்லது நனவா! என்று யோசித்துக் கொண்டிருக்கையில் அந்த பசுவுக்குப் பின்னால் காவி உடை அணிந்த, தெய்வீக ஒளியுடன் கூடிய மஹாபுருஷர் ஒருவர் தோன்றினார். அவரை வணங்கிவிட்டு அவரிடம், **“நீங்கள் எங்கிருந்து வந்திருக்கிறீர்கள்? இந்த பசு**

**யாருடையது? கதவுகள் மூடியிருக்க உங்களால் எப்படி மேல்தளத்திற்கு வர முடிந்தது?"** என்று லாலா பல கேள்விகளை அவரிடம் எழுப்பினார். **"பசு என்னுடையதுதான். நான் கானகாபூருக்கும் சோலாப்பூருக்கும் மத்தியில் வசிக்கிறேன். நான் செல்வதற்கு எந்த இடத்திலாவது தடை இருக்கிறதா என்ன? நான் அனைத்து இடங்களுக்கும் ஸ்தூல ரூபத்திலோ அல்லது சூக்ஷ்ம ரூபத்திலோ நான் விரும்பியபடி செல்வேன்"** என்று கூறிவிட்டு மறைந்து விட்டார். உடனே லாலாவின் கனவு கலைந்து விட்டது. இது என்ன வினோதமான ஒரு கனவு! என்று லாலாவுக்கு மிகவும் குழப்பமாக இருந்தது. அவர் அடுத்தநாள் ஒரு துறவியைச் சந்தித்து தன் கனவைப் பற்றி அவரிடம் விவரித்தார். **"நீங்கள் அக்கல்கோட்டுக்குச் செல்லுங்கள். அங்கு ஒரு மஹாபுருஷர் இருக்கிறார். அவர் உங்களை ஆரோக்கியமானவராக ஆக்குவார் என்பதில் எனக்கு எந்தவித சந்தேகமும் இல்லை"** என்று அவர் கூறினார். தன் கனவிற்கும் இந்த துறவி கூறும் மஹாபுருஷருக்கும் ஏதோ தொடர்பு இருக்கிறது என்பதை உணர்ந்து கொண்ட லாலா, அக்கல்கோட் நோக்கி பயணித்தார்.

லாலா அக்கல்கோட் சென்றடைந்தவுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சோளப்பாவின் வீட்டில் இருப்பதைத் தெரிந்து கொண்டு அங்கு சென்றார். ஸ்ரீ ஸ்வாமி கட்டிலின் மேல் அமர்ந்து கொண்டிருந்தார், சேவகர்கள் அவரைச் சுற்றி இருந்தனர். ஸ்ரீ ஸ்வாமிக்கு முன்னால் ஒரு கபில பசுவும் இருந்தது. (ஸ்ரீ ஸ்வாமிக்கு மிகவும் பிரியமான இந்த கபிலப்பசுவின் சமாதி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சமாதி மடத்தின் கோசாலையில் உள்ளது). தான் கனவில் கண்டது இதே மஹாபுருஷரைத்தான் என்பதை லாலா புரிந்து கொண்டார். அஷ்டபாவ(*Bha*)மும் அவருள் எழும்பியது. அவர் மீண்டும் மீண்டும் ஸ்ரீ ஸ்வாமிகளை நமஸ்கரித்துக் கொண்டே இருந்தார். அவர் கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் வழிந்தோடியது. **"ஸ்வாமி, இது என்ன லீலை? உங்கள் சக்தியை என்னால் வர்ணிக்க முடியவில்லை. உங்களுக்கு கோடானு கோடி நன்றிகள் ஸ்வாமி... என்னுடைய 42 கோத்திரங்களும் இன்று தூய்மையாக்கப் பட்டுவிட்டது"** என்று ஸ்ரீ ஸ்வாமியை பலவாறு புகழ்ந்துவிட்டு, சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தபின்னர் கைகளை கூப்பியவாறு அமர்ந்து கொண்டார்.

மஹராஜ் அவரிடம், **"ஏ! என்னுடைய பசுவையா நீ அடிக்கிறாய்? நீ அவ்வளவு பலசாலியா?"** என்று கேட்டவுடன் லாலா தன்னை மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் செய்வதற்காக அவருக்கு அருகிலேயே தங்கியிருந்தார். **"நாய்களுக்கு ரொட்டிகள் இடு"** என்று

மஹராஜ் ஆணையிட்டார். அவ்வாறே அவர் தினமும் செய்து கொண்டிருந்தார். சில நாட்களுக்குப் பிறகு லாலாவின் வெண்குஷ்டம் குறையத் தொடங்கியது. பின்னர் அவர் முழுமையாக குணமடைந்து தகதகக்கும் மேனியைப் பெற்றார். மிகுந்த மனநிறைவுடன் ஸ்ரீ ஸ்வாமிகளிடமிருந்து அனுமதி பெற்றுக் கொண்டு ஹைதராபாத் சென்றடைந்தார்.

ஒருவரின் பூர்வ ஜென்ம கர்மாக்களினால் நோய் ஏற்பட்டு துன்பங்களை அனுபவித்தாலும், கடவுளை மனதார பிரார்த்தனை செய்து கொண்டால் அவர்களுக்கு கனவிலோ அல்லது எவர் மூலமாகவோ கடவுள் சரியான மார்க்கத்தைக் காட்டி அருளுவார் என்பதை இந்த அத்தியாயம் நமக்கு எடுத்துரைக்கிறதல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 170

# பெண் குரங்கு - சுந்தரி

பாம்பகர் சாஹேப் சுந்தரி என்கிற பெண் குரங்கை வளர்த்து வந்தார். அது சாதுவான பிராணியாகத்தான் இருந்தது, ஆனால் பின்னாட்களில் அனைவரையும் தாக்கத் தொடங்கி, பின் கடிக்கவும் செய்தது. மேலும் சாஹேபையே இரண்டு-மூன்று முறை கடித்து விட்டது. இது சாஹேபுக்கு மிகுந்த கோபத்தை ஏற்படுத்தியதால், அதை சுட்டுக் கொன்று விடுமாறு ஆணையிட்டார். இரண்டு காவலர்கள் சுந்தரியை சுட்டு வீழ்த்துவதற்காக சென்ற போது, அது ஓடிச்சென்று கண்டோபாவுக்கு பின்னால் ஒளிந்து கொண்டது. இதை கவனித்த புஜங்கா ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் சென்று, **“ஸ்வாமி, சுந்தரியை காவலர்கள் கொல்லப் போகிறார்கள். நான் அதை இங்கு அழைத்து வரட்டுமா?”** என்று கேட்டார். **“அழைத்து வா”** என்று மஹராஜ் கூறினார்.

புஜங்கா சுந்தரியிடம் சென்று, **“மஹராஜ் உன்னை அழைத்து வரச் சொல்கிறார். என்னோடு வா!”** என்று கூறி அழைத்தவுடன் நாய்க்குட்டி போல

புஜங்காவுடன் சென்றதைப் பார்த்த காவலர்கள் ஆச்சரியம் அடைந்தனர். ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்தவுடன், சுந்தரி அவர் பாதங்களின் மீது உருண்டது! அனைவரும் இந்த காட்சியைக் கண்டு உறைந்து நின்றனர். **"ஏ! குறும்புக்காரி, அனைவரையும் கடித்தாயா? நீ மிகவும் குறும்புக்காரி ஆகிவிட்டாய்! இன்றிலிருந்து நீ எவரையும் கடிக்கக் கூடாது! அப்படி நீ கடித்தால் அடி விழும்"** என்று செல்லமாக கண்டித்துவிட்டு மௌனமானார். பிறகு சுந்தரி எவரையும் கடிக்கவே இல்லை. மஹராஜ் எங்கிருக்கிறாரோ அவருக்கு அருகில் இருக்கும் மரத்தில் சுந்தரி இருப்பாள். சில சமயம் பக்தர்களுடன் இருப்பாள். ஸ்ரீ ஸ்வாமி தான் அணிந்து கொண்டிருக்கும் தொப்பியை சுந்தரிக்கு அணிவிப்பார், அவர் கழுத்தில் சூடியிருக்கும் மாலையை அவளுக்கு அணிவிப்பார், இனிப்புகள் வழங்குவார். ஸ்ரீ ஸ்வாமி எப்போதும் சுந்தரியுடன் விளையாடிக் கொண்டே இருப்பார். சில நாட்களுக்குப் பிறகு சுந்தரி இறந்துவிட்டது! பேரதிர்ஷ்டம் வாய்ந்த ஜந்து! அக்கல்கோட் வாசிகள் முறையாக ஈமச்சடங்குகள் செய்து, அவளை பூக்களால் அலங்கரித்து புதைத்தனர்.

ஜந்துக்களாக இருப்பினும், மனிதர்களாக இருப்பினும், ஸ்ரீ ஸ்வாமி மஹராஜின் பாதங்களை அடைக்கலம் அடைந்தால் அவர்களுடைய தலையெழுத்து முழுமையாக மாறிவிடும் என்பது திண்ணம். அனைத்து மனிதர்களும் ஏதாவது ஒரு கவலையோடுதான் இருக்கிறார்கள். ஒன்று உடலாலோ அல்லது மனத்தாலோ துன்பத்தை அனுபவித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். பூர்வஜன்ம தொடர்பினால் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் ஈர்க்கப்பட்டு, தங்கள் துன்பங்களை ஸ்ரீ ஸ்வாமியிடம் சமர்ப்பணம் செய்யும் போது, அவர்களின் கவலைகளிலிருந்து விடுபடுகின்றனர். **"சரியான தருணம் வருவதற்குள் அவசரப்பட்டால் அனைத்துமே வீண்தான்"** என்று துக்காராம் கூறுகிறார். அகங்காரத்தை தள்ளிவிட்டு, மனதாலும் உடலாலும் எந்தவித அவநம்பிக்கையும் இல்லாமல் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுக்கு சேவைகள் செய்தால் நம் அனைவருடைய வாழ்க்கையும் முன்னேற்றம் அடையும் என்பதில் எந்தவித சந்தேகமும் இல்லை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**





## அத்தியாயம் 171

# மல்லிகாகார்ஜுனரும் நானே!

புனேயைச் சேர்ந்த நந்தாராம் சுந்தர்ஜி கட்டுமானத் தொழில் நடத்தி வந்தார். அவருடைய சுக்கிலச் சுரப்பி (*prostate gland disease*) பாதிக்கப்பட்டு வலியில் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். பல வைத்திய முறைகளை கையாண்டும் அவருக்கு எதுவும் கை கொடுக்கவில்லை. அதனால் மிகுந்த விரக்தியில் இருந்தார். அவர் ஒருநாள் பாலகிருஷ்ண ஜோஷிக்கு அறிமுகமானார். **"அக்கல்கோட்டில் உள்ள ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை நீங்கள் தரிசனம் செய்தால் உங்கள் நோயிலிருந்து நிவாரணம் பெறுவீர்கள்"** என்று ஜோஷி அவரிடம் கூறினார். **"நானும் அவர் ஒரு மஹாபுருஷர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அவருடைய விபூதி இருந்தால் எனக்கு பூசிவிடுங்கள். எனக்கு சிறிது நிவாரணம் கிடைத்தவுடன் அவரை நேரில் சென்று தரிசனம் செய்கிறேன்"** என்று நந்தாராம் கூறினார். ஸ்ரீ ஸ்வாமியின் விபூதியை பூசிக் கொண்ட அந்த இரவு அவருக்கு சிறிது வலி குறைவாக இருந்தது, நல்ல நிம்மதியாக உறங்க முடிந்தது.

அடுத்த நாள் விடியற்காலையிலேயே அவர் அக்கல்கோட் நோக்கி புறப்பட்டார். அவர் அங்கு பாலகிருஷ்ண ஜோஷியின் வீட்டில் தங்கியிருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்துவிட்டு அனைவருக்கும் உணவு மற்றும் உடை தானம் செய்தார். தாராளமாக செலவு செய்து பிராமணர்களுக்கு போஜனம் அளித்தார். சில நாட்களில் அவருடைய உடல்நிலை நல்ல முன்னேற்றம் அடையத் தொடங்கியது.

நந்தாராம் திங்கட்கிழமைகளில் ஒரு அனுஷ்டானம் கடைபிடிப்பது வழக்கம், அதன் பொருட்டு அவர் மல்லிகார்ஜுனரை தரிசனம் செய்வதற்காகச் சென்றார். அந்த கோவிலின் பிரகாரத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அமர்ந்திருந்தார். ஜோஷியும் நந்தாராமும் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்துவிட்டு கோவிலுக்குள் சென்றனர். அங்கு சங்கரருக்குப் பதிலாக இருவரும் ஸ்ரீ ஸ்வாமியைக் கண்டனர். இருவரும் மிகுந்த ஆச்சரியம் அடைந்து, **"மூவுலகங்களையும் ஆளும் அரசரே! எங்கும் நிறைந்திருப்பவரே! பிரமாண்டத்தை தன்னுள் அடக்கி ஆள்பவரே! அன்பு மற்றும் கருணை நிறைந்தவரே! துக்கங்கள் அனைத்தையும் நீக்கி**

**அருளும் கருணைக்கடலே!"** என்று பலவாறு புகழ்ந்து வணங்கினர். எட்டு சாத்வீக பாவங்களும் ஒன்று சேர அவர்களுக்கு உண்டாகி, முழுமையாகத் தங்களை சமர்ப்பணம் செய்து பிரார்த்தனை செய்து கொண்டனர். **"ஸ்வாமி, எப்போதும் உங்களுக்கு சேவைகள் செய்ய எங்களுக்கு நீங்கள் அனுமதி அளிக்க வேண்டும்"** என்று கேட்டுக்கொண்டனர். ஸ்ரீ ஸ்வாமியும் கருணை கொண்டு சம்மதம் தெரிவித்தார். நந்தாராம் ஸ்ரீ ஸ்வாமியின் நைவேத்யத்திற்காக 10/- ரூபாய் அளித்து வந்தார். இவ்வாறு நந்தாராம் சுந்தர்ஜியை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஆசீர்வதித்து புண்ணியவான் ஆக்கினார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 172

# புனேவைச் சேர்ந்த அப்பா சாஹேப் சபனீஸ்

புனேவைச் சேர்ந்த ஸ்ரீ அப்பா சாஹேப் மிகுந்த செல்வந்தர். அவரும் அவருடைய மனைவியும் பிசாசு தொந்தரவினால் பாதிக்கப்பட்டிருந்தனர். அவர்கள் இருவரும் பிசாசின் பிடியில் இருக்கும் போது நான்கு அல்லது ஐந்து நாட்கள் வரை கூட அன்னம் தண்ணீர் இல்லாமல் இருப்பார்கள். அவர்கள் இந்த பாதிப்பில் இருந்து நிவாரணம் பெறுவதற்காக வாரக் கணக்காக ஸ்ரீ குரு சரித்திரம் பாராயணம் செய்வது, பஞ்சாக்ஷரி அனுஷ்டிப்பது போன்ற பல அனுஷ்டானங்களை கடைப்பிடித்தும் அவர்களுக்கு எந்தவித பயனும் இல்லை. இறுதி பட்சமாக நான்கு நபர்களுடன் கானகாபூர் சென்று ஸ்ரீ தத்தாத்ரேயருக்கு சேவைகள் செய்வது என்று முடிவெடுத்தனர். வழியில் அக்கல்கோட் வந்தடைந்தவுடன், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காகச் சென்றனர்.

அன்று ஸ்ரீ ஸ்வாமி கர்னல்காரின் வீட்டில் இருந்தார். ஸ்ரீ ஸ்வாமியின் தேஜஸ் நிறைந்த உருவத்தை கண்டவுடன் சபனீசின் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வழிந்தது. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு தேங்காய் மற்றும் பழங்களை சமர்ப்பணம் செய்துவிட்டு சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். **"ஸ்வாமி, நாங்கள்**

**இந்த நோயிலிருந்து விடுபடுவதற்காக கானகாபூருக்கு பயணிக்கிறோம். தாங்கள் எங்களை அதற்கு அனுமதிக்க வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டனர். **"அங்கு நீங்கள் செல்ல வேண்டாம், நான் அதை தகர்த்தெறிகிறேன்"** என்று கூறியவுடன் அவர்கள் அக்கல்கோட்டிலேயே ஐந்து வருடங்கள் தங்கி, மிகுந்த சிரத்தையுடன் பாதுகை அபிஷேகம், ஸ்ரீ குரு சரித்திர பாராயணம், பிக்ஷை எடுப்பது, ஆல மரத்தை இருவரும் சுற்றுவது போன்ற அனுஷ்டானங்களை கடைப்பிடித்து வந்தனர்.

ஒருநாள் அந்த பிசாசு மிகவும் ஆக்ரோஷமாகி, **"இந்த அனுஷ்டங்களினால் என்ன நடக்கப் போகிறது? நான் என்ன இந்த வழிமுறைகளால் சென்று விடுவேனா என்ன? நான் அவனை கொன்று விடுவேன். அவன்தான் நான் பிசாசாக அலைவதற்குக் காரணம்"** என்று அலறிக்கொண்டே இருந்தது. மஹராஜை தரிசனம் செய்வதற்காக சென்றால், அவருடைய ஒளிபொருந்திய மேனியை சபனீஸால் தரிசனம் செய்ய முடியாது, ஆரத்தியிலும் கலந்துகொள்ள முடியாது. சில நாட்களுக்குப் பிறகு தொடர்ந்து அவர் ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் செய்த பின் பிசாசு கொஞ்சம் சாந்தமாகி, **"நான் இப்போது என்ன செய்ய வேண்டும்? என்னால் இதற்கு மேல் அடியை தாங்கிக்கொள்ள முடியவில்லை"** என்று கெஞ்சி அழுதது. ஐந்து வருடங்களுக்குப் பிறகு சபனீஸை விட்டு விலகியது. அவரின் ஆரோக்கியம் சீரானது. பின்னர் அவர் அக்கல்கோட்டிலியேயே தங்கி தன் வக்கீல் தொழிலை மேற்கொண்டார்.

சில நாட்களுக்குப் பிறகு மீண்டும் அவருக்கு தொல்லைகள் ஆரம்பமானது. ஒருநாள் அவர் மஹராஜிடம் சென்று, **"ஸ்வாமி, என்னை மீண்டும் சாத்தான் தொந்தரவு செய்கிறது"** என்று கூறியவுடன், **"நீ ஏன் மீண்டும் வந்து தலையிடுகிறாய்?"** என்று கேட்டார். இந்த வார்த்தைகளை கேட்டவுடன் சபனீஸ் தன் வக்கீல் தொழிலை நிறுத்திவிட்டு, தான் சம்பாதித்த பணம் முழுவதையும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜின் சேவைகளுக்காக செலவழித்தார். ஒருநாள் சபனீஸுடைய தாயார் ஸ்ரீ ஸ்வாமியிடம் வந்து, **"சரஸ்வதிக்குத்தான் (சபனீசின் மனைவி) குழந்தைகள் இல்லையே, ஜமீன்தார் பதவியினால் எந்த பயனும் இல்லை"** என்று வருத்தத்துடன் பிரார்த்தனை செய்து கொண்டாள். **"குழந்தை கண்டிப்பாக பிறக்கும். போ!"** என்று கூறிவிட்டு ஒரு தேங்காயை அவள் மடி மீது போட்டார். சில நாட்களுக்குப் பிறகு அப்பெண்ணுக்கு ஒரு மகன் பிறந்தான். சிறிது காலத்திற்குப் பிறகு சபனீஸ் தன் சொந்த ஊருக்கு சென்றாலும், எப்போதும் அக்கல்கோட் வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

அக்கல்கோட்டில் ஒரு வீடு வாங்கி அதில் தங்குவதற்கான அனைத்து வசதிகளையும் செய்து வைத்திருந்தார். அவர் எப்போதும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பஜனைகள் செய்வதிலேயே மும்மரமாக இருப்பார். இவ்வாறு அனைத்து விதத்திலும் ஸ்ரீ ஸ்வாமி சபனீசின் குடும்பத்தை ஆசீர்வதித்து, தனக்கருகிலேயே வைத்துக்கொண்டார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 173

# மூழ்கிய கப்பலை மீட்டெடுத்தல்

மும்பையில் உள்ள தானே பகுதியைச் சேர்ந்தவர் லக்ஷ்மன். அவரிடம் வர்த்தக கப்பல் இருந்தன. ஒருமுறை பலமான புயல் காற்று வீசிய போது, அவருடைய கப்பல் ஒன்று மூழ்கிவிடும் நிலை உண்டானது. இந்த இக்கட்டான நிலையில் இருந்து மீள வேண்டுமானால் கடவுளின் துணை இருந்தால் மட்டுமே சாத்தியம் என்பதை அவர் புரிந்து கொண்டார். லக்ஷ்மன் முன்பே இரண்டு-மூன்று முறை அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்திருக்கிறார். அவருக்கு ஸ்ரீ ஸ்வாமியின் அபார சக்திகள் பற்றி நன்றாகத் தெரியும். உடனே ஸ்ரீ ஸ்வாமிகளை தன் மனதில் இருத்திக் கொண்டு அவர் நாமத்தைக் கூறத் தொடங்கினார். **“அக்கல்கோட் தாயே! எங்களை காப்பாற்ற ஓடி வர மாட்டாயா? கப்பல் மூழ்கி விடும் போலிருக்கிறதே! உன்னை விட்டால் எனக்கு வேறு வழி தெரியவில்லை”** என்று அழுது புலம்பினார்.

இவ்வாறு அங்கு நடந்து கொண்டிருந்த அதே சமயத்தில் அக்கல்கோட்டில் சோளப்பாவின் வீட்டில் உள்ள கட்டிலின் மேல் அமர்ந்து கொண்டிருந்த ஸ்ரீ ஸ்வாமி எழுந்து நின்று கொண்டார். தன் வலது கையை மேலிருந்து கீழ் சுழற்றிக் கொண்டே **“ஹு ஹு ஹு”** என்று ஒருவிதமான ஓசை எழுப்பினார். பின்னர் கட்டிலில் அமர்ந்து கொண்டார். சில நிமிடங்களுக்கு ஸ்ரீ ஸ்வாமியின் கைகளில் இருந்து தண்ணீர் ஊற்றிக் கொண்டே இருந்தது. அவரைச் சுற்றிருந்த சேவகர்கள் அந்தத் தண்ணீரை சுவைத்துப் பார்த்த போது, அது உப்பு கரித்தது.




அனைவரும் இந்த காட்சிகளை வினோதமாக பார்த்து விழித்தனர். **"மஹராஜ் உங்கள் கைகளிலிருந்து உப்புத்தண்ணீர் எப்படி வருகிறது?"** என்று சேவகர்கள் கேட்டதற்கு **"நான் ஒரு கப்பலை கடலில் மூழ்குவதில் இருந்து தூக்கி எடுத்தேன்"** என்று பதிலளித்தார். இந்த பதிலை அங்கிருந்தவர்கள் எவராலும் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்த நிகழ்ச்சி இங்கு அக்கல்கோட்டில் அரங்கேறிய அதே நேரத்தில் கடலில் திடீரென காற்றின் அளவு குறைந்து, கப்பல் மேலே எழும்புவது போல் அனைவருக்கும் தோன்றியது. தண்ணீர் முழுமையாக வடிந்தவுடன், அனைவரும் பத்திரமாக கரைக்கு வந்து சேர்ந்தனர்.

லக்ஷ்மன் மிகுந்த சந்தோஷத்துடன் நன்றி செலுத்துவதற்காக ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்ய தன் குடும்பத்துடன் அக்கல்கோட் வந்தார். தனக்கு நடைபெற்ற அனுபவங்களை அனைவருடனும் பகிர்ந்து கொண்டார். இந்த அதிசயம் நிறைந்த நிகழ்ச்சியை கேட்டு அனைவரும் மிகுந்த ஆச்சரியம் அடைந்து, ஸ்ரீ ஸ்வாமி அன்று ஏன் அப்படி நடந்து கொண்டார் என்பதையும் புரிந்து கொண்டனர்.

ஒருவருக்கு பேராபத்துகள் நிகழும் சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தம் மனதில் இருத்தி முழுமையான நம்பிக்கையுடன் பிரார்த்தனை செய்தால், எவ்வளவு பெரிய ஆபத்துகளிலிருந்தும் மீண்டு வரலாம் என்கிற நம்பிக்கையை இந்த நிகழ்ச்சி நமக்கு உணர்த்துகிறதல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 174

# சேவைக்கான பரிசு

மார்வாடி இளைஞன் ஒருவன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு மூன்று ஆண்டுகள் தொடர்ந்து சேவைகள் செய்து கொண்டிருந்தான். அவனுடைய பெற்றோர்கள் மற்றும் சொந்தபந்தங்கள் பலரும் அவனை மீண்டும் வீட்டுக்கு வருமாறு அழைத்து பல கடிதங்கள் போட்டும், அவன் ஸ்ரீ ஸ்வாமியை விட்டு வருவதாக இல்லை. மூன்று வருடங்களுக்குப் பிறகு அவனுடைய தந்தையும், மாமாவும் அவனை அழைத்து செல்வதற்காக அக்கல்கோட் வந்தனர்.





ஒரு நாள் அவர்கள் இருவரும் சோளப்பாவை சந்தித்து தங்கள் வீட்டு பிள்ளையை வீட்டுக்கு அனுப்ப ஸ்ரீ ஸ்வாமிகள் ஆணையிட வேண்டும், அதை அவரிடம் தெரிவிக்குமாறு கேட்டுக் கொண்டனர். **"மஹராஜ், மார்வாடி தன் மகனை வீட்டுக்கு அழைத்துச் செல்ல அனுமதி கேட்கிறார். உங்கள் விருப்பத்தை தெரிவியுங்கள்"** என்று சோளப்பா கேட்டுக் கொண்டார். மஹராஜ் அந்த மார்வாடி இளைஞனைப் பார்த்து, **"உன் வீட்டுக்குச் செல். பிறகு இங்கு வரலாம்"** என்று கூறினார். அவர்கள் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஸ்ரீ ஸ்வாமியை வணங்கிவிட்டு நைவேத்தியம் படைத்தனர். பின்னர் ஊருக்கு கிளம்புவதற்கான ஏற்பாடுகளை செய்துவிட்டு, ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்யலாம் என்று வந்தபோது அவர் தலித் குடியிருப்பில் இருந்தார். அங்கு சென்று அவர் பாதங்களில் விழுந்து வணங்கிவிட்டு, **"ஸ்வாமி, நாங்கள் எங்கள் பிரதேசத்திற்கு கிளம்புகிறோம்"** என்றனர். அந்த இளைஞனோ மீண்டும் மீண்டும் நமஸ்கரித்துவிட்டு, **"நான் இந்த பாதங்களை விட்டு பிரிந்து செல்கிறேன். அன்புகூர்ந்து உங்கள் பாதங்களின் தரிசனத்தை எனக்கு அவ்வப்போது அளிக்கவேண்டும். எனக்கு பிரசாதம் அளியுங்கள் ஸ்வாமி.."** என்று பிரிய மனமில்லாமல் வேண்டிக்கொண்டான். உடனே ஸ்ரீ ஸ்வாமி, **"இங்கு கொடுக்கல்-வாங்கல் வியாபாரம் நடக்கவில்லை. உனக்கு பிரசாதம் வேண்டுமென்றால் அங்கு குவிந்து கிடக்கும் எலும்புத் துண்டுகளில் நான்கினை எடுத்துக் கொள்"** என்று கூறினார். மார்வாடி இளைஞன் மிகுந்த பயத்துடன் நான்கு எலும்புத் துண்டுகளை எடுத்து ஒரு துணியில் முடிந்து கொண்டு தன் வீட்டுக்குச் சென்றடைந்தான். அதை அப்படியே வைத்து விட்டு அடுத்த நாள் காலையில் வந்து பார்த்தபோது, அந்த துணியின் எடை அதிகரித்திருந்தது. பிரித்து பார்த்தபோது, 5 கிலோ எடையுள்ள தங்கக் கட்டிகள் இருந்தன. மூன்று வருடங்கள் சேவைகள் செய்ததற்கான வெகுமதி அந்த இளைஞனுக்குக் கிடைத்துவிட்டது.

மீண்டும் அந்த இளைஞன் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்தான். அவன் ஸ்ரீ ஸ்வாமிக்கு முன்னால் 10 தோலாக்கள் தங்கத்தை வைத்துவிட்டு சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துவிட்டு, நடந்த அனைத்து நிகழ்ச்சிகளையும் சேவகர்கள் அனைவரிடமும் தெரிவித்தான். பின்னர் ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் செய்வதையே முழுநேர வேலையாக ஆக்கிக் கொண்டான். சொர்ணமயமான ஸ்ரீ ஸ்வாமிகளுடன் இருந்து அவருக்கு சேவைகள் செய்வதைக் காட்டிலும் மற்ற அனைத்தும் அற்பமே என்பதை அந்த இளைஞன் நன்கு அறிந்திருந்தான்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 175

# குரு வாக்கே திருவாக்கு

ஒரு நாள் சீமா என்கிற பெண் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்தாள். அச்சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி ஒரு கிணற்றின் அருகே அமர்ந்து கொண்டு அதன் சுவற்றில் விளையாடிக் கொண்டிருந்தார். சீமா கையில் வைத்திருந்த பாத்திரத்தை வாங்கி ஸ்ரீ ஸ்வாமிகள் கிணற்றுக்குள் போட்டுவிட்டார். சீமா அழுதுகொண்டே, **"மஹராஜ், நான் இப்போது எப்படி தண்ணீர் அருந்துவது?"** என்று கேட்டாள். **"கிணற்றுக்குள் குதித்து பாத்திரத்தை எடுத்துக் கொள்"** என்று மஹராஜ் கூறிய அடுத்த நொடியே எந்தவித மறு யோசனையும் இல்லாமல் அவள் கிணற்றுக்குள் குதித்துவிட்டாள். இதுவே குருபக்தி!

அவளை காப்பற்றுவதற்காக சிலர் கிணற்றுக்குள் குதிக்க முற்பட்டபோது, **"அவளை யாரும் வெளியே கொண்டு வர வேண்டாம்"** என்று ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் கூறிவிட்டார். **"மஹராஜ், சீமா மூழ்கி விட்டாள். அவளுடைய உடலை வெளியே எடுக்க வேண்டாமா?"** என்று அவர்கள் கேட்டதற்கு ஸ்ரீ ஸ்வாமி பலமாக சிரித்துக் கொண்டே, **"அந்த விதவை சாகமாட்டாள். இப்போது வெளியே வந்து விடுவாள்"** என்று கூறினார். அவ்வாறே சீமா சிரித்துக் கொண்டே தன் பாத்திரத்துடன் வெளியே வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்தாள். இக்காட்சியைக் கண்ட அனைவரும் ஆச்சரியம் அடைந்தனர்.

இது போன்ற லீலைகளை ஸ்ரீ ஸ்வாமி அவ்வப்போது நிகழ்த்துவார். ஒரு பக்தனுக்கும் குருவுக்கும் இடையே எப்படிப்பட்ட உறவு இருக்க வேண்டும், குருவாக்கின் மகிமை போன்ற ஆழ்ந்த விஷயங்களை அனைவருக்கும் பிரவசனம் செய்யாமல், இது போன்ற லீலைகள் மூலம் ஸ்ரீ ஸ்வாமி விளக்கினார். இவற்றை சிலர் புரிந்து கொண்டு உன்னத நிலையை அடைந்தனர். சிலரோ இதை மாயாஜாலமாகக் கண்டு களித்தனர். எவனொருவன் ஏன் என்கிற கேள்வியை தனக்குள் ஸ்தாபிக்கிறானோ, அதற்கான பதிலைத் தேடி அலைகிறான்! அவன் குருவின் வழிகாட்டுதலோடு பதிலைத் தேடும் போது, அவன் பாதை சுலபமாகிவிடுகிறது. குருவின் வாக்கை மீறாமல், அவர் அவனது வாழ்வில் நிகழ்த்தும் ஒவ்வொரு நல்ல மற்றும் தீய நிகழ்வுகளை குருவின் சங்கல்பம் என்று

உணர்ந்து நடந்து கொள்பவனே உண்மையான சீடனாகிறான். அப்படிப்பட்டச் சீடனை புடம் போட்ட தங்கமாக மாற்ற குரு பல்வேறு சோதனைகளை அளிக்கிறார். அவை அனைத்தையும் வென்று வருபவனை குரு சொக்கத் தங்கமாக மாற்றிவிடுகிறார்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 176

# சாதுர்மாஸ்யத்தில் மழை இல்லை

ஒரு வருடம் சாதுர்மாஸ்யம் முழுவதும் மழை பெய்யவில்லை. அதனால் தண்ணீர் தட்டுப்பாடு பிரச்சனை தலைவிரித்தாடியது. ஏதாவது ஒரு வழியில் தண்ணீர் பஞ்சத்தை தீர்க்க ஊரெங்கும் மக்கள் அனைவரும் அனுஷ்டானங்கள் கடைபிடிப்பது, ஹோமங்கள் செய்வது, சங்கரருக்கு அபிஷேகம் செய்வது போன்றவற்றை அனுஷ்டித்துக் கொண்டிருந்தனர். இருப்பினும் மழை பெய்வதற்கான சுவடே தெரியவில்லை.

ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஜேஹுர் என்கிற ஊருக்குச் சென்றிருந்தார். மழை வேண்டி அந்த ஊரில் இருந்த காசி விஸ்வநாதருக்கு தொடர்ந்து அபிஷேகங்கள் செய்து கொண்டிருந்தனர். பின்னர் தன் சேவகர்களுடன் ஸ்ரீ ஸ்வாமி வல்சங் என்கிற இடத்திற்குச் சென்றார், அங்கும் அனுஷ்டானங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. அந்த ஊரிலிருந்த மக்கள் ஸ்ரீ ஸ்வாமியை வரவேற்று ஸ்ரீ சங்கரரின் கோவிலுக்கு அழைத்துச் சென்றனர். **“மஹராஜ், எப்போது மழை பொழியும்?”** என்று அனைவரும் கேட்டனர். உடனே ஸ்ரீ ஸ்வாமி, சிவலிங்கம் மற்றும் கணேஷ மூர்த்தி இருந்த கற்பகிரகத்திற்குள் நுழைந்தார். ஸ்ரீ ஸ்வாமி அவர்களை வசைபாடிவிட்டு, **“ஏன் மழை பொழிய வைக்கவில்லை? உங்களுக்கு என்ன தானியங்கள் வேண்டுமா?”** என்று கேட்டு விட்டு ஒருவரை தானியங்களைக் கொண்டு வருமாறு ஆணையிட்டார். அதை எடுத்து சிலைகளின் மீது வாரி இறைத்தார். பின்னர் சரயி என்கிற ஊருக்குச் சென்றுவிட்டார். அரை மணிநேரத்திற்குப் பிறகு வானம் வெகுவாக இருட்டிக் கொண்டு, காற்று வீசத் தொடங்கியது. மிகப் பெரிய கருமையான மேகம்

ஒன்று தென்பட்டது. உடனே இடி மின்னலுடன் பலத்த மழை பொழியத் தொடங்கி, மூன்று நாட்கள் வரை தொடர்ந்தது. அந்த ஊர் மட்டுமல்லாமல், அவ்வூரைச் சுற்றிலும் 60 மைல்களுக்கு அதே போல் மழை பொழிந்தது. மக்கள் அனைவரும் மிகுந்த மகிழ்ச்சியடைந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்தனர். அவர்கள் சந்தோஷத்தில் ஆரத்தி எடுத்து, விதவிதமான நைவேத்தியங்களை படைத்தனர். **“சச்சிதானந்தப் பிரபு! பிரபஞ்சங்களின் தலைவரே! அனாதரட்சகரே! கருணைக்கடலே! நீங்கள் மழை பொழிய வைத்துவிட்டீர்கள்! தானியங்களுக்கு பலனை அளித்துவிட்டீர்கள்! ஸ்வாமி, உங்களுடைய கருணையினால் பஞ்சம் இப்போது முடிவுக்கு வந்துவிட்டது. இனி விளைச்சல் நல்ல முறையில் நடைபெறும்”** என்று சந்தோஷத்தில் வாயாரப் புகழ்ந்தனர்.

பஞ்சபூதங்களும் தன் கட்டுப்பாட்டில்தான் இருக்கிறது என்பதை நிரூபிக்கவே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இந்த அற்புதத்தை நிகழ்த்திக் காட்டினார். அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகனின் இசைவு இல்லாமல் ஒரு துரும்பு கூட அசையாதல்லவா!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## *அத்தியாயம் 177*

# ஜூன்னரைச் சேர்ந்த சாகு

புனேவுக்கு அருகில் உள்ள ஜூன்னர் என்னும் ஊரைச் சேர்ந்த சாகு என்கிற பெண்மணி குஷ்டரோகத்தினால் பாதிக்கப் பட்டிருந்தாள். நோயின் தாக்கம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போனது, எந்தவித வைத்திய முறைகளும் பலன் அளிக்காத காரணத்தால் அவள் வேதனையில் தவித்துக் கொண்டிருந்தாள். ஒருநாள் சரண்தாஸ் என்கிற துறவி அவளிடம் பிக்ஷைக்காக வந்திருந்தார். அவரிடம் தன் நிலைமையை அவள் கூறிய போது, **“அம்மா, அக்கல்கோட்டில் ஸ்வாமி சமர்த்தர் என்கிற சக்தி வாய்ந்த துறவி ஒருவர் இருக்கிறார். அவரை தரிசனம் செய்தாலே உங்கள் நோய் குணமாகிவிடும்.**

**நேரத்தை வீணடிக்காமல் உடனடியாக அவரை தரிசனம் செய்ய கிளம்புங்கள்”** என்று வழிகாட்டினார்.

சாகு தன் மகளை அழைத்துக் கொண்டு அக்கல்கோட் வந்தடைந்தாள். அன்று ஸ்ரீ ஸ்வாமி கண்டோபா கோவிலில் அமர்ந்திருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்துவிட்டு கைகளை கூப்பியவாறு அவள் நின்று கொண்டிருந்தாள். **“சாகு! நீ மலை அளவு கஷ்டத்தை அனுபவித்து விட்டாய். சரண்தாஸ் கூறியபடி நீ இங்கு வந்தது நல்லதாயிற்று. இந்த வெள்ளைக் கல்லை இழைத்து உன் உடல் முழுவதும் பூசிக் கொள்”** என்று கூறி அவளை ஆசீர்வதித்தார். அவள் ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் செய்து கொண்டே, பிக்ஷை எடுத்து சாப்பிட்டு வந்தாள். ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்துவிட்டு தீர்த்த பிரசாதத்தை பெற்றுக் கொள்வாள். வெள்ளைக் கல்லை இழைத்து உடல் முழுவதும் பூசிக் கொள்வாள். ஒரு மாதத்திற்குப் பிறகு அவள் உடல் பொன் மேனியாக மாறியிருந்தது. நோய் முற்றிலும் குணமாகியிருந்தது. பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அனுமதி பெற்றுக் கொண்டு தன் சொந்த ஊருக்குச் சென்றாள்.

எளியோரின் கஷ்டங்களை நீக்கி அருள்வதில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை விட சிறந்த ரட்சகர் எவருமில்லை. அதனால்தான் அனைவரும் அவரை அனாதைகளின் தாய் என்று புகழ்ந்து கூறுகின்றனர்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 178

# பசியைத் தணித்தல்

### அன்னபூரணியின் விருந்தோம்பல்

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கோணாலி என்கிற கிராமத்திற்கு அருகில் இருக்கும் காட்டில் பயணித்துக் கொண்டிருந்தார். அவருடன் நூற்றுக்கும் மேற்பட்ட சீடர்கள் இருந்தனர். அன்று ஸ்ரீ ஸ்வாமி காலையிலிருந்து உணவேதும் சாப்பிடாமல் தொடர்ந்து பயணத்திலேயே இருந்தார். அனைத்து சீடர்களும்

பசியால் வாடிக் கொண்டிருந்தனர். அனைவரும் ஸ்ரீ ஸ்வாமியை ஏதாவது ஒரு மரத்தின் கீழ் இளைப்பாறினால், தாங்கள் உணவு தயாரிப்பதாகக் கூறினர். **"அன்னபூரணி உங்களுக்கு உணவளிப்பாள். வாருங்கள்!"** என்று கூறியவாறே அடர்ந்த வனப்பகுதியில் சென்று கொண்டிருந்தார்.

சூரியன் மறையத் தொடங்கியது. ஸ்ரீபாத பட் தரையில் படுத்துக் கொண்டு, **"எங்களால் பசியைத் தாள முடியவில்லை. எங்கள் உயிரை எடுத்துவிட்டு நீங்கள் கிளம்புங்கள்"** என்றார். உடனே மஹராஜ் ஒரு மாமரத்தின் கீழ் நின்று கொண்டார். சேவகர்கள் அந்த இடத்தை சுத்தம் செய்து சமையல் செய்வதற்காக ஆயத்தம் செய்தனர். தண்ணீர் கொண்டுவர ஒரு மைலுக்கு அப்பால் செல்ல வேண்டும், ஸ்ரீபாத பட்டும் மற்ற சில சேவகர்களும் தண்ணீர் கொண்டு வந்தனர். மஹராஜிடம் ஏதாவது சாப்பிடும்படி அவர்கள் கேட்டதற்கு, **"நீங்கள் அனைவரும் முதலில் சாப்பிடுங்கள். பிறகு நான் சாப்பிடுகிறேன்"** என்று கூறினார். **"மஹராஜ், இந்த இரவில் இவ்வளவு நபர்களுக்கு எப்படி உணவு கிடைக்கும்!"** என்று ஸ்ரீபாத பட் கவலையுடன் வினவினார். **"வயலுக்கு அந்தப் பக்கம் செல். அன்னபூரணி உணவுடன் காத்துக் கொண்டிருக்கிறாள்"** என்று கூறினார். **"அங்கு யார் இந்த நேரத்தில் உணவுடன் காத்திருக்க முடியும்!"** என்று சில சேவகர்கள் சந்தேகத்துடன் வினவிய போதும், ஸ்ரீபாத பட் எந்தவித மறுயோசனையும் இல்லாமல் ஸ்ரீ ஸ்வாமி கூறிய இடத்திற்கு விளக்குகளை ஏந்திக் கொண்டு சென்றார்.

ஆஹா என்ன ஒரு அற்புதம்! ஸ்ரீ ஸ்வாமி கூறியபடியே சற்று தூரத்தில் ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். அவளிடம் சென்று, **"ஊருக்குள் செல்வதற்கு எவ்வளவு தூரம் செல்லவேண்டும்? அங்கு சென்றால் ஏதாவது உணவு கிடைக்குமா?"** என்று ஸ்ரீபாத பட் விசாரித்தார். **"நல்லவேளை நீங்கள் அனைவரும் வந்தீர்கள். என் ஊரிலிருந்து சிலர் வருவதாகக் கூறியிருந்தனர். அவர்கள் வராததால் அவர்களுக்காக சமைத்த உணவுகள் அனைத்தும் வீணாகிவிடுமோ என்று நினைத்துக் கொண்டிருந்தேன். தயவுசெய்து நீங்கள் இந்த உணவையும் தண்ணீரையும் எடுத்துக் கொள்ளுங்கள்"** என்று விருந்தோம்பல் செய்தாள். சாதம், பருப்பு, ரொட்டி, நெய், காய்கறிகள் கொண்ட விருந்தை அவர்களிடம் அளித்தாள். **"இந்த இரவு நேரத்தில் நீங்கள் எப்படி இங்கு தனிமையில் இருப்பீர்கள்? எங்களுடன் வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்யுங்கள்"** என்று ஸ்ரீபாத பட் அழைத்தார். **"என்னுடைய நமஸ்காரங்களை அவருக்கு தெரிவியுங்கள். என்னுடைய பெயர் அன்னபூரணி. நான் இன்னொரு சமயம் அவரை தரிசனம் செய்ய வருகிறேன்.நீங்கள் கிளம்புங்கள்"** என்று கூறி அனுப்பி

வைத்தாள். ஸ்ரீபாத பட்டும் மற்ற சேவகர்களும் தங்கள் நன்றியை தெரிவித்து விட்டுக் கிளம்பினர். சற்று தொலைவு சென்ற பின்னர் ஸ்ரீபாத பட் அந்த பெண்ணைத் திரும்பிப் பார்த்தபோது, அவள் அந்த இடத்தில் தென்படவில்லை. இது அனைவருக்கும் மிகுந்த ஆச்சரியத்தை அளித்தது!

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் உணவுகளை கொண்டு வந்து நைவேத்தியம் செய்து விட்டு, அனைவரும் வயிறார உண்டனர். பாபா ஜாதவ் உணவுக்குப் பின் ஸ்ரீ ஸ்வாமியுடன் உரையாடிக் கொண்டிருக்கும் போது, **"ஸ்வாமி, அந்தப் பெண் யார்? அவள் எங்கிருந்து வந்தாள்?"** என்று கேட்டதற்கு, **"அவள் என் குடும்பத்தைச் சேர்ந்தவள்"** என்று கூறினார். அனைவருக்கும் வந்து உணவளித்தது அன்னபூரணி தேவிதான் என்பதை புரிந்து கொண்டனர். **"அன்னபூரணியை அல்லவா தரிசனம் செய்திருக்கிறோம்! அதைக் கூட புரிந்துகொள்ள முடியாத முட்டாளாக இருந்திருக்கிறோமே"** என்று அனைவரும் தங்களை நொந்து கொண்டனர். **"ஸ்வாமி, இந்த பாத்திரங்களை என்ன செய்வது?"** என்று கேட்டதற்கு, **"அவை அனைத்தும் உங்களுடையதுதான்"** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறிவிட்டார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜின் கருணைக்கு எல்லைதான் ஏது! தன் பக்தனுக்கு பசி வந்தால் அன்னபூரணியையே ஆணையிட்டு உணவளிக்கச் செய்துவிடுவாரே!

### குகுபாய் ஜமீன்தார் அளித்த பொரி உருண்டை

ஒரு முறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட்டுக்கு அருகில் இருக்கும் சாடன் டுதானி என்கிற ஊருக்கு சுமார் 150 சேவகர்களுடன் சென்றிருந்தார். அந்த ஊரில் இருந்த ஒரு சிறிய குன்றின் மேல் ஒரு பக்கிரி வாழ்ந்து வந்தார். ஸ்ரீ ஸ்வாமியும் அவருடன் அந்த குன்றிலேயே தங்கியிருந்தார். ஸ்ரீ ஸ்வாமிக்கு சோளப்பா ஒரு உணவுத் தட்டை தன் மகன் கிருஷ்ணப்பா மூலம் கொடுத்தனுப்பி இருந்தார். ஸ்ரீ ஸ்வாமி அந்த பக்கிரியையும் அழைத்து உணவை பகிர்ந்து கொண்டார். அப்போது சேவகர்கள், **"மஹராஜ் பசியில் எங்கள் உயிர் போய்க்கொண்டிருக்கிறது"** என்று கூறியவுடன் **"ஏன் பசியால் சாகவேண்டும்? உங்கள் வயிறுமுட்ட பொறி உருண்டை சாப்பிடலாம்"** என்று கூறினார். அப்போது உடனே குகுபாய் ஜமீன்தார் தன் மகனுக்கு மொட்டை அடிப்பதற்காக தன் குடும்பத்துடன் ஹைதராபாத்தில் இருந்து அங்கு வந்து சேர்ந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமியை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துவிட்டு கைகளை கூப்பியவாறு நின்று கொண்டிருந்தார். மஹராஜ் அவரிடம், **"என் குழந்தைகள் பசியாக இருக்கிறார்கள்"** என்று கூறியவுடன் அனைவருக்கும் குகுபாய் ஜமீன்தார் தாராளமாக பொரி உருண்டைகளை வழங்கினார். அடுத்த நாள் அவருடைய மகனுக்கு மொட்டை





அடிக்கும் விழா இனிதே நடந்து முடிந்தது. அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டு, அனைத்து சேவகர்களுக்கும் தாராளமாக தக்ஷிணை வழங்கினார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அனுமதி பெற்றுக் கொண்டு தன் சொந்த ஊருக்குச் சென்றார்.

உணவோ பொன்னோ பொருளோ ஞானமோ, தன் பக்தனின் தேவை என்ன என்பதை நன்கு உணர்ந்து கொண்டு அதற்கு ஏற்றார் போல் ஸ்ரீ ஸ்வாமி அவர்களுக்கு வழங்கி விடுவார். நாம் அவரிடம் ஒன்று கேட்டால் பலமடங்காகக் கொடுப்பதில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு நிகர் வேறெவருமுண்டோ?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 179

# பல்லக்கின் பாரம் குறைந்தது

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கேத் என்கிற ஊரில் இருந்து அக்கல்கோட்டிற்குப் புறப்பட்டார். அப்போது பலத்த மழை பொழிந்தது, மண்ணுடன் கூடிய காற்று பலமாக வீசியது. ஸ்ரீ ஸ்வாமி பல்லக்கினுள் அமர்ந்திருந்தார், அதைச் சுமப்பதற்கு ஆறு நபர்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். பலத்த மழை காற்று பல்லக்கு தூக்கிகளுக்கு மிகுந்த சிரமத்தை ஏற்படுத்தியது. ஸ்ரீபாத பட் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"மஹாராஜ், பல்லக்கு மிகவும் பாரமாக இருக்கிறது. எங்களால் நடக்கவே முடியவில்லை"** என்று கூறியவுடன் கருணை கொண்ட ஸ்ரீ ஸ்வாமி மழையின் வேகத்தைக் குறைத்தார். பின்னர் சேவகர்கள் ஸ்ரீ ஸ்வாமியை ஒரு குதிரையின் மேல் அமர்த்தி அழைத்துச் சென்றனர். அந்த குதிரை மிகவும் சிறியதாக இருந்ததால் ஸ்ரீ ஸ்வாமியின் கால்கள் தரையில் பட்டது. **"ஸ்வாமி மஹாராஜ், நீங்கள் பல்லக்கிலேயே அமர்ந்து கொள்ளுங்கள். ஆனால் பல்லக்கின் பாரத்தை குறைத்து விடுங்கள்"** என்று கேட்டுக் கொண்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி வாய்விட்டு வயிறு குலுங்கச் சிரித்தார். பக்தர்களின் சிறுசிறு பிரார்த்தனைகளையும், விருப்பங்களையும் கூட நிறைவேற்றுபவரான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பல்லக்கின் பாரத்தைக் குறைத்து அருளினார். மென்மையான மலர் அந்த பல்லக்கினுள் அமர்ந்திருப்பது போன்ற உணர்வை அனைத்து சேவகர்களும்





உணர்ந்தனர்.

சேவகர்கள் அனைவரும் **'ஜய ஜய'** என்கிற கோஷத்துடன் கானகாபூர் வந்தடைந்தனர். அன்று அங்கு தங்கிவிட்டு அடுத்தநாள் காலையில் வாடி என்கிற ஊரை சென்றடைந்தனர். அந்த இடத்தில் அவர்களுக்கு உண்பதற்கு எதுவும் கிடைக்கவில்லை. மதியத்திற்கு மேல் கம்பை மாவாக அரைத்து ரொட்டி செய்து சாப்பிட்டனர், இருப்பினும் காய்கறி எதுவும் கிடைக்கவில்லை. **"மஹராஜ், நாம் அக்கல்கோட் சென்றுவிடலாம். இங்கு கம்பு கூட கிடைக்கவில்லை"** என்று சேவகர்கள் கூறினர். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி அவற்றைப் பற்றி எதுவும் தன் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. **"ஸ்வாமி, நாளை நாம் உபவாசம் இருக்க வேண்டியதுதானா!"** என்று மஹாதேவ் பட் கேட்டார். **"எதற்கு உபவாசம் இருக்க வேண்டும்? வயிறுமுட்ட நெய்யால் செய்த இனிப்புகளை சாப்பிடலாம்"** என்று கூறினார்.

அடுத்தநாள் காலையில் மொஹலாயில் இருந்து மஹாருத்ர ராவ் தன் குடும்பத்துடன் க்ஷேத்ராடனமாக ஸ்ரீ ஸ்வாமியை தரிசிக்க வந்தார். அவர் 150 க்கும் மேல் இருந்த அனைத்து சேவகர்களுக்கும் உணவு தயாரிக்க ஏற்பாடு செய்தார். ஸ்ரீ ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்த பின்னர் ஆரத்தி காண்பிக்கப்பட்டு, அவருக்கு நைவேத்தியம் செய்யப்பட்டது. அனைவருக்கும் உணவு பரிமாறப் பட்டது. திருப்தியுடன் வயிறுமுட்ட சாப்பிட்ட சேவகர்கள் அனைவரும் நிம்மதியாக உறங்கினர். அன்று இரவு திருடர்கள் சிலர் வந்து அனைவருடைய பொருட்களையும் களவாடி சென்று விட்டனர். திடீரென ஸ்ரீ குரு பலமாக சிரிக்கத் தொடங்கினார். அந்த சத்தம் கேட்டு உறங்கிக் கொண்டிருந்தவர்கள் அனைவரும் விழித்துக் கொண்டு, **"ஸ்வாமி, ஏன் சிரிக்கிறீர்கள்?"** என்று கேட்டதற்கு, **"திருடர்கள் அனைத்தையும் கொண்டு சென்றுவிட்டனர். இப்போது அனைவரும் பஜனை செய்யுங்கள்"** என்று கூறிக்கொண்டே சிரித்தார்.

ஸ்ரீபாத பட் தங்கள் பொருட்கள் அனைத்தையும் எங்கு சென்று தேடுவது? என்று ஸ்ரீ ஸ்வாமியிடம் கேட்டதற்கு, **"என் மகன்களிடம் தெரிவியுங்கள். அவர்கள் கண்டுபிடித்துக் கொடுப்பார்கள்"** என்று கூறினார். பசல்காவ்வுடைய குல்கர்னியிடம் தெரிவிக்கப்பட்டது. ஒரு சிலரை சந்தேகத்தில் அடித்து உதைத்தவுடன் அனைத்து பொருட்களும் மீட்கப்பட்டன. அனைவரிடமும் அவரவர்களுடைய பொருட்கள் வழங்கப்பட்டன. ஆனால் சத்குருவான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கட்டிலில் இருந்து பொருட்களை எடுத்தவர்களுக்கு தண்டனை எதுவும் வழங்கப்படாமல், அவர்கள் விடுவிக்கப்பட்டனர். இந்த

 

பிரபஞ்சத்திற்கே தலைவரான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடமிருந்து ஒரு பொருள் கிடைக்கப் பெற்றால் அது பிரசாதம் அல்லவா! அவற்றை களவு பொருளாகக் கொள்ள முடியாதே!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 180

# நீல்காவின் ஜமீன்தாருக்கு அருளுதல்

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் சேவகர்கள் புடைசூழ நல்துர்காவுக்குச் சென்றார். நீல்காவ் என்கிற ஊரைச் சேர்ந்த பாவ் சாஹேப் என்கிற ஜமீந்தார் ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்வதற்காக வந்திருந்தார். அவள் சோளப்பா மூலம் ஸ்ரீ ஸ்வாமிகளை தன் ஊருக்கு வந்து தங்களை ஆசீர்வதித்து புனிதமாக்கும்படி கேட்டுக் கொண்டார். **“நான் சனிக்கிழமை அங்கு வருகிறேன். போ!”** என்று ஸ்ரீ ஸ்வாமி அருளினார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் அக்கல்கோட்டுக்கு வந்துவிட்டார்.

சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நீல்காவ் பயணம் மேற்கொண்டார். ஸ்வாமிகள் வருவதை அறிந்த பாவ்சாஹேப், நீல்காவுக்கு 4 மைல்களுக்கு முன்பாகவே மேளதாளங்களுடன் எதிர்கொண்டு அழைத்தார். ஸ்ரீ ஸ்வாமிகளுடன் வந்த 200 க்கும் மேற்பட்ட சேவகர்களுக்கும் தங்குவதற்காக அனைத்து வசதிகளையும் ஏற்பாடு செய்திருந்தனர். ஸ்ரீ ஸ்வாமிகள் அமர்வதற்காக சிறப்பான அரியணை அமைக்கப்பட்டிருந்தது. கருணையின் வடிவமான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அந்த அரியணையில் அமர்ந்து கொண்டு அனைவரையும் மகிழ்ச்சியுடன் ஆசீர்வதித்தார். ஜமீன்தார் சுமார் 1000 விருந்தாளிகளுக்கு பூந்தி லட்டு தயார் செய்து வைத்திருந்தார். அடுத்த நாள் காலையில் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு மங்கள ஸ்நானம் செய்வித்து, வாசனை திரவியங்களால் நறுமணம் ஊட்டினார். அவருக்கு நெற்றியில் வைக்கப்பட்ட அக்ஷதையில் மூன்று அரிசிகள் கீழே விழுந்தன. அதை எடுத்த ஸ்ரீ ஸ்வாமி, ஜமீன்தாரின் கையில் ஒன்றையும், அவருடைய மனைவியின் கையில் இரண்டையும் கொடுத்தார், அதை அவர்கள் உண்டனர். கணவனும்

மனைவியும் சேர்ந்து ஸ்ரீ ஸ்வாமிக்கு ஆரத்தி எடுத்து நைவேத்தியம் படைத்தனர். முழு தக்ஷிணையையும் சமர்ப்பணம் செய்ததோடு மட்டுமல்லாமல், அங்கிருந்த பிராமணர்கள் அனைவருக்கும் ஒரு ரூபாய் தக்ஷிணை வழங்கினர். சோளப்பா, ஸ்ரீபாத பட், கிருஷ்ணப்பா போன்ற பிரதான சேவகர்களுக்கு வேஷ்டி மற்றும் சால்வை வழங்கி முறையாக வணங்கினார். நான்கு நாட்களுக்கு அன்னதானம் மற்றும் கீர்த்தனை போன்ற நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து கோலாகலமாக விழா போல அனைத்து நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

சிறந்த பக்தரான ஜமீன்தாருக்கு வாரிசு இல்லை. பாவ்சாஹேப் சோளப்பா மூலம் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தனக்கு வாரிசு அருளுமாறு பிரார்த்தனை செய்து கொண்டார். **"உனக்கு அறிவுள்ள மகன் பிறப்பான்"** என்று ஆசி வழங்கினார். பாவ்சாஹேப் மிகுந்த மனநிறைவு அடைந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் நான்கு நாட்களுக்குப் பிறகு அக்கல்கோட் கிளம்பியபோது வெகுதூரத்திற்குச் அவருடன் சென்று வழியனுப்பி வைத்துவிட்டு, தன் ஊருக்கு வந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் ஆசீர்வதித்தபடியே அதே வருடத்தில் அவருடைய மனைவி கர்ப்பம் தரித்தாள். பாவ் சாஹேப் ஒரு அரிசியை உண்டதால் அவர்களுக்கு ஒரு மகனும், அவருடைய மனைவி இரண்டு அரிசிகளை உண்டதால் இரண்டு மகள்களும் ஐந்து வருடங்களில் பிறந்தனர். பாவ்சாஹேப் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சிறந்த பக்தராக இருந்து கொண்டு, எப்போதும் அக்கல்கோட் வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 181

# அகம்பாவம்

ஒருமுறை கிரி, புரி மற்றும் பாரதி சம்பிரதாயத்தைச் சேர்ந்த மூன்று துறவிகள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக வந்திருந்தனர். அவர்கள் பார்ப்பதற்கு வாட்டசாட்டமாக, சமஸ்கிருதத்தில் கைதேர்ந்தவர்களாக இருந்தனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தொலைவிலிருந்து பார்த்தவுடன் அவரை

வணங்கும் எண்ணமில்லாமல் விஸ்வநாத் மற்றும் ஸ்ரீபாத பட்டிடம், **"இந்த ஸ்வாமி எங்கிருந்து வந்திருக்கிறார்? யார் இவர்? இவர் ஹம்சரா இல்லை பரமஹம்சரா? இவர் சந்நியாசியாக இருந்தாலும் கட்டில், மெத்தை போன்ற சுகங்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்! அவருடைய தண்டம் எங்கே? இதுபோன்ற முறைகள் எந்த சாஸ்திரத்தில் கொடுக்கப்பட்டுள்ளது? இதற்கு ஏதாவது ஆதாரம் இருக்கிறதா?"** என்று அகந்தையுடன் பல கேள்விகள் கேட்டனர். **"நீங்கள் உங்கள் சந்தேகங்கள் அனைத்தையும் ஸ்ரீ ஸ்வாமிகளிடமே கேட்டு தெளிவு படுத்திக் கொள்ளுங்கள்"** என்று ஸ்ரீபாத பட் கூறி அவர்களை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னால் நிற்க வைத்தார்.

ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னால் சென்றதும் மூவருடைய நாக்கும் தடித்து அவர்கள் பேசும் திறனை இழந்துவிட்டனர். அஞ்ஞானம் என்னும் திரை விலகினால் ஞானம் என்னும் கண் திறக்கப்பட்டு ஆழ்மனதை அறிந்து கொள்ள முடியும். அவர்கள் மூவரும் பேசும் திறனை இழந்தவுடன், வித்யாகர்வம் என்னும் இருள் அவர்கள் கண்களை விட்டு விலகி சத்குருவை அவர்களால் தரிசனம் செய்ய முடிந்தது. ஸ்ரீ ஸ்வாமியின் தெய்வீக பேரொளியை அவர்களால் நேருக்கு நேர் தாங்கிக் கொள்ள முடியவில்லை. உடனே அவர்கள் தங்களை மன்னிக்குமாறு ஸ்ரீ ஸ்வாமிகள் முன் பணிந்தனர். **"செய்த தவறை உணர்ந்து மன்னிப்பு கேட்பது தூய்மையைத் தரும்"** என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அவர்கள் அழுது கண்ணீர் சிந்தினர், உடல் முழுவதும் வியர்த்து நனைந்தது. அவர்களுடைய அகம்பாவம் முற்றிலுமாக நொறுங்கியது. கருணை கொண்ட ஸ்ரீ ஸ்வாமி அவர்களை தனக்கருகில் அழைத்து நாக்கை நீட்டுமாறு கூறினார். அவர்களுடைய நாக்கில் அவர் விபூதியை போட்டவுடன் அவர்களுடைய ஊமைத்தன்மை நீங்கியது.

பேசும் திறன் கிடைத்தவுடன் அவர்கள் பலவாறு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை புகழ்ந்தனர். "நாங்கள் எவ்வளவு அகம்பாவத்துடன் இருந்தோம்! தேளுக்கு அதன் கொடுக்கில் மட்டும்தான் விஷம் உள்ளது. மிகச்சிறிய அளவே ஞானம் கொண்ட நாங்கள் பலரை இழிவு படுத்தியிருக்கிறோம்! **'நான்'** என்கிற அகந்தையில் கட்டுண்டு கிடந்தோம். இதேபோல் நாங்கள் தொடர்ந்து வாழ்ந்திருந்தால் கண்டிப்பாக அழிவை சந்தித்திருப்போம். ஆனால் எங்களுடைய பூர்வ ஜென்ம புண்ணியங்களினால் உங்களை தரிசனம் செய்யும் பாக்கியம் பெற்றோம். அகம்பாவம் என்னும் இருள் நீக்கி சூரியன் போல எங்களுக்கு வெளிச்சத்தை காட்டினீர்கள். நாங்கள் எங்கள் பிறவிப்பலனை

பெற்றுவிட்டோம். சத்குருவே! உங்களுக்கு ஈடானவர் இந்த உலகில் இல்லை! தேவாதிதேவா, கருணைக்கடலே, மகிழ்ச்சியின் உருவகமே, ஏழைப் பங்காளனே, ஆபத்பாந்தவனே, பக்தவத்சலனே! உங்களுடைய லீலைகளை எந்த சாஸ்திரத்தினாலும் வர்ணிக்க முடியாது. அப்படியிருக்க எங்களால் முடியுமா? எங்களுடைய அறியாமையில் இருந்து எப்படி விடுவிக்கப்படுவது? நாங்கள் எப்படி பக்தர்களாக ஆவது?" என்று கூறிவிட்டு முழுமையாக சரணடைந்தனர். அதற்கு ஜகத்குருவான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், **"ஞானிகளின் வார்த்தைகள் மீது நம்பிக்கை கொள்ளுங்கள். அவரிடம் முழுமையாக சரணடையுங்கள். அகம்பாவத்தை முழுவதுமாக விட்டொழியுங்கள். பஜனையும், நாம ஸ்மரணத்தையும் கடைபிடியுங்கள். அவர் அளிக்கும் அனைத்தையும் திருப்தியுடன் ஏற்றுக் கொள்ளுங்கள். அனைவருடைய உடல், பேச்சு மற்றும் மனதில் கடவுள் இருக்கிறார். என் மீது முழுமையான பக்தி கொள்ளுங்கள். அனைத்தையும் கடவுள்தான் நடத்துகிறார் என்பதை நம்புங்கள். கடவுளிடம் முழுமையாக சரணடையுங்கள். அப்போது உங்களுடைய உபாசனை முழுமையாகி திருப்தி அடைவீர்கள். இப்போது நீங்கள் கிளம்பலாம்"** என்று கூறி ஆசீர்வதித்தார். **"ஸ்வாமி, நாங்கள் எங்கு செல்வது? உங்கள் பாதாரவிந்தத்திலேயே இருக்க எங்களுக்கு அனுமதி அளியுங்கள். மற்ற தீர்த்தங்கள், துறவிகள் மற்றும் க்ஷேத்திரங்கள் அனைத்தும் உங்கள் பாதகமலங்களை விட உயர்ந்ததா என்ன? அனைத்து பாவங்களையும் போக்கும் சக்தி உங்கள் பாதகமலங்களுக்கு உண்டல்லவா! எங்களுடைய பக்தி பன்மடங்காகப் பெருக வேண்டுமென்றால் நாங்கள் உங்கள் பாதங்களை விட்டு நீங்காமல் இருக்க வேண்டும். நாங்கள் எத்தனை பிறவிகள் எடுத்தாலும் உங்கள் பாதகமலங்களை மறக்காமல் இருக்க எங்களை நீங்கள் ஆசீர்வதிக்க வேண்டும்"** என்று கூறிக்கொண்டே நமஸ்கரித்தவாறு தரையில் மரக்கட்டைப் போல கிடந்தனர். பின்னர் சேவகர்கள் அவர்களை எழுப்பி தூக்கினர். ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களுக்கு பிரசாதம் அளித்து முழுமையாக ஆசீர்வதித்தார். பிறகு அவர்கள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சேவைகள் செய்து கொண்டு இருந்தனர். ஸ்ரீ ஸ்வாமி சமாதி ஆன பிறகு அவர்கள் புனித க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை மேற்கொண்டனர்.

நெருப்புக்கு அருகில் ஒரு மரக்கட்டை இருந்தால் அதுவும் நெருப்பாகிவிடும் தானே! **"நெருப்பில் மரக்கட்டையை இட்டால் தீப்பிழம்பு அதிகமாகும், ஆனால் மரக்கட்டை தன் தன்மையை இழந்துவிடும்"** என்று தியானேஸ்வர் மஹராஜ் கூறுகிறார். அதேபோல ஒருவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்





என்னும் நெருப்புடன் கலந்துவிட்டால், அவர் அவர்களை தனக்குள் ஆவாஹனம் செய்து கொண்டு விடுவார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஒவ்வொருவரின் வாழ்க்கையில் நிகழ்த்தும் லீலைகளை வெறும் வார்த்தைகளால் வர்ணித்து விட முடியுமோ!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 182

# காசி பிராமணர்களின் அகங்காரத்தை அடக்குதல்

ஸ்ரீபாத பட் என்கிற தக்ஷ கிரந்தி பிராமண பண்டிதர் ஒருவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்திருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமிக்கு சிரத்தையாக சேவைகள் செய்து கொண்டிருந்தார். அவரிடம் ஸ்ரீ ஸ்வாமி ஒருநாள், **"ஏ பிராமணரே! மூன்று மாத காலம் காசிக்கு செல்லும், பிறகு என்னை சந்திக்கவும்"** என்று கூறியவுடன் அவர் காசிக்குச் சென்றார். அங்கு அவர் மூன்று மாத காலங்கள் அங்கு தங்கி கங்கையில் நீராடிவிட்டு, விஸ்வேஸ்வரரை தரிசனம் செய்துவிட்டு வேத பண்டிதர்களுடன் உரையாடலில் ஈடுபடுவார். ஸ்ரீபாத பட் கூறும் எந்த கருத்தையும் அவர்கள் ஏற்றுக் கொள்ளாமல் அவரை அவமதித்தனர். அதனால் மனம் வெறுத்து **"எனக்கு எந்தவித கௌரவமும் தேவையில்லை"** என்று கூறிவிட்டு விஸ்வேஸ்வரரை தரிசனம் செய்வதற்காகச் சென்றார்.

விஸ்வேஸ்வரருக்கு முன்னால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் இடுப்பில் கைகளை வைத்துக் கொண்டு அங்கு நின்று கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமியைக் கண்டவுடன் பிராமணர் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். அங்கு கூடியிருந்த மக்கள் அனைவரும், **"இவர் பார்ப்பதற்கு மிகவும் தேஜஸ்வியாக இருக்கிறார். இவர் கண்டிப்பாக ஒரு அவதாரமாகத்தான் இருக்க வேண்டும்"** என்று பேசிக் கொண்டனர். சிலர் நாங்கள் இவரை ஹம்பியில் பார்த்திருக்கிறோம் என்று கூறினர். சிலர் இமயமலையிலும், சிலர் புரி ஜெகன்நாத்திலும் பார்த்திருப்பதாகக் கூறினர். ஒருசிலர் ஸ்ரீ ஸ்வாமிக்கு ஒரு பானை முழுவதும் கள்ளும் மாமிசமும்

படைத்து உண்ணுமாறு வற்புறுத்தினர். அச்சமயத்தில் ஒரு பெண் அங்கு திடீரென வந்து, **"இவர் முழுமையான பிரம்மம், பரமஹம்சர், கடவுளுக்கெல்லாம் கடவுளான விஸ்வேஸ்வரர். நீங்கள் அவரை தொந்தரவு செய்தால் அழிந்து நாசமாகிவிடுவீர்கள்"** என்று கூறிவிட்டு, அந்த கள் மற்றும் மாமிசத்தைத் தொட்டாள். கள் தண்ணீராகவும், மாமிசம் பழங்களாகவும் மாறின. அனைவரும் ஆச்சரியத்தில் உறைந்து நின்றனர்.

ஸ்ரீபாத பட் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் மீண்டும் நமஸ்கரித்திவிட்டு, **"மஹாராஜ், நீங்கள் அக்கல்கோட்டிலிருந்து எப்போது இங்கு வந்தீர்கள்?"** என்று கேட்டார். **"நான் அனைத்து இடங்களிலும் வசிக்கிறேன். உன்னுடைய வேலைக்காக நான் இங்கு வந்தேன். நீ வேத விற்பன்னர்களை சந்தித்து வேத மந்திரங்களை ஓது"** என்று கூறினார். ஸ்ரீபாத பட் காசி பிராமணர்களுடன் அமர்ந்து கொண்டு அவர்களுடைய தவறுகளை சுட்டிக் காட்டினார். காசி பிராமணர்கள் அனைவரும் ஆச்சரியம் அடைந்து அவருக்கு மரியாதை செய்து ஆசனம் கொடுத்து அமர்த்தினர். **"நாங்கள் உங்களுடைய ஞானத்தை உணர்ந்து கொள்ளாமல் அவமதித்து விட்டோம். தயவுசெய்து எங்களை மன்னித்துவிடுங்கள்"** என்று கூறிவிட்டு ஸ்ரீபாத பட்டுடைய பாதத்தில் விழுந்து வணங்கிவிட்டு அவருக்கு ஆடை ஆபரங்கள் அளித்து கௌரவித்தனர். பின்னர் ஸ்ரீபாத பட் அனைத்து பிராமணர்களுக்கும் போஜனம் அளித்துவிட்டு அக்கல்கோட் சென்றடைந்தார்.

அக்கல்கோட் வந்தடைந்தவுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்துவிட்டு அவரை வாயாறப் புகழ்ந்தார். **"மஹாராஜ், என்னைப் போன்ற சாதரணமான ஒருவரை நீங்கள் வேதங்கள் ஓத வைத்தீர்கள். உங்களுடைய லீலைகளை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது"** என்று கூறிவிட்டு நடந்தவைகளை அனைவரிடமும் விவரித்தார். அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி உண்டாகட்டும் என்று கோஷம் எழுப்பினர். நாமும் அனைத்து திசைகளிலும் சூழ்ந்திருக்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி உண்டாகட்டும் என்கிற கோஷத்துடன் இந்த அத்தியாயத்தை நிறைவு செய்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 183

# தண்டனையா? ஆசீர்வாதமா?

அக்கல்கோட்டில் ஸ்ரீ ராமர் கோவில் ஒன்று உள்ளது. ஹரிபாய் என்கிற விதவைப் பெண்மணி அந்த கோவிலில் தங்கிக் கொண்டு ஸ்ரீ ராமருக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தாள். அவள் பிக்ஷை எடுத்து தன் வயிற்றை நிரப்பிக் கொண்டு தசபோதம் போன்ற புத்தகங்களை செவிமடுத்தவாறு தன் காலத்தை கழித்துக் கொண்டிருந்தாள். தினமும் பாபா சபனீஸ் வேதாந்தத்தைப் பற்றி அங்கு கலந்துரை யாடுவார். சில சமயம் அதை கேட்பதற்கு ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ராமர் கோவிலுக்கு வருவதுண்டு.

ஒருநாள் வார்கரி காசிநாத் மஹேஸ்வட்கர், பாபா பட்னீஸ் போன்றோர், "இந்த ஸ்வாமி ஒரு பைத்தியக்காரரர். அவர் நான்காவது ஆஸ்ரமப் பாதையை கடைபிடித்தாலும், அதை விட்டு விலகித்தான் இருக்கிறார். அவர் இப்படி இருப்பதால்தான், பாபா புனித நூல்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்" என்று கூறிக்கொண்டிருக்கும் போதே பாம்பு ஒன்று அவர்களுள் ஒருவரை கொத்தி விட்டது. அனைவரும் மிகவும் பயந்து விட்டனர். அங்கிருந்தவர்கள் அனைவரும் பாம்பு கடிபட்ட ஆசாமியை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு முன்னால் கிடத்துமாறு வற்புறுத்தினர். வேறு வழி தெரியாமல் காசிநாத் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் அந்த மனிதரை கொண்டு சென்றார். **"எனக்கு பைத்தியம் பிடித்தால் உன் அப்பனிடமிருந்து ஏதாவது சென்றுவிடுமா? எந்தவித கஷ்டமும் அனுபவிக்காமல் உனக்கு உணவு கிடைத்துக் கொண்டிருப்பதால் நீ இவ்வாறு ஏளனமாகப் பேசிக்கொண்டிருக்கிறாய். அப்படித்தானே? நீ செய்துகொண்டிருக்கும் அனைத்து பித்தலாட்டங்களும் எனக்குத் தெரியும். உன்னுடைய எண்ணம் மற்றும் செயல் ஆகியவை அசுத்தம் நிரம்பியுள்ளது"** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறியவுடன் மஹேஸ்வட்கர் மற்றும் பட்னீஸ் மிகவும் வருத்தமடைந்து ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்தனர். **"மஹராஜ், நாங்கள் எங்கள் அறியாமையினால் உங்களை தவறாகப் பேசிவிட்டோம். தயவுசெய்து எங்களை மன்னித்து அருளுங்கள்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டவுடன் மஹராஜ் பாம்பு கடிபட்டவரை கருணையுடன் நோக்கினார். அந்த மனிதருக்கு சுயநினைவு வந்தது. பின்னர் பாம்பு கடிபட்டவர், மஹேஸ்வட்கர் மற்றும் பட்னீஸ் ஆகியோர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தர்களாக மாறினார்கள். இவ்வாறு சிறு தண்டனை அளித்து இவர்களை தன் பக்தர்களாக ஆக்கிக் கொண்ட ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கருணையை எப்படி விவரிப்பது?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**




## அத்தியாயம் 184

# நாராயண்தாஸுடைய மனைவியின் பிரசவம்

நாராயண்தாஸ் என்கிற குஜராத்தி பிராமணர் பீட் என்கிற நகரத்தில் வாழ்ந்து வந்தார். அவருடைய வீட்டுக்கு க்ஷேத்ராடனம் மேற்கொள்ளும் ஒரு பாதசாரி பிராமணர் வந்தார். அவர்கள் இருவரும் துறவிகளைப் பற்றி பேசிக் கொண்டிருந்தபோது, **"இந்த கலியுகத்தில் துறவிகள் தங்கள் வயிற்றை நிரப்பிக் கொள்வதற்கு மட்டுமே அலைந்து திரிகின்றனர். அற்புதங்களை மட்டுமே நிகழ்த்திக் காட்டும் ஒருவர் எப்படி அவதாரமாக இருக்க முடியும்?"** என்று நாராயண்தாஸ் கூறினார். "துறவிகளை அனாவசியமாக குறை கூறக் கூடாது" என்று கூறிவிட்டு அந்த பிராமணர் சென்றுவிட்டார்.

நாராயண்தாஸுடைய மனைவிக்கு பிரசவம் நெருங்கிக் கொண்டிருந்தது. அவளுக்கு பிரசவ வலி எடுக்கத் தொடங்கியது, பல மணி நேரங்கள் ஆகியும் குழந்தை பிறந்த பாடில்லை. நாராயண்தாஸ் மிகுந்த பயத்துடன், **"நான் அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமியை பற்றி அவதூறாகப் பேசியதால்தான் இவ்வாறு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது"** என்று எண்ணிக் கொண்டார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் மனதார மன்னிப்பு கேட்டுக் கொண்டு, "ஸ்வாமி, என்னை தயவுசெய்து இந்த துன்பத்திலிருந்து காப்பற்றுங்கள். நான் முழுமையாக உங்களிடம் சரணடைகிறேன்" என்று பிரார்த்தனை செய்து கொண்டார். அப்போது கருணைக் கடலான ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஒரு யதியின் ஆடையை தரித்துக் கொண்டு நாராயண்தாஸுடைய வீட்டுக்கு வந்து, **"நீ என்னை அந்த பிராமணரிடம் தவறாகப் பேசிவிட்டாய்"** என்று கூறினார். உடனே நாராயண்தாஸ் ஸ்ரீ ஸ்வாமியின் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு, "ஸ்வாமி, தயவு செய்து என்னை மன்னித்துவிடுங்கள். நான் அறியாமல் அவ்வாறு நடந்து கொண்டேன். என் மனைவி கடுமையான வலியில் துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறாள். அவளை காப்பாற்ற ஏதாவது வழி கூறுங்கள்" என்று மன்றாடி பிரார்த்தனை செய்து கொண்டார். **"அப்படியென்றால்,**

**நீ அக்கல்கோட் சென்று ருத்ராபிஷேகம் செய்து, 1000 ரூபாய் செலவு செய்து பிராமணர்களுக்கு உணவளி"** என்று கூறினார். "என் மனைவி மாலைக்குள் பிரசவித்துவிட்டால் நான் கண்டிப்பாக அவ்வாறு செய்கிறேன்" என்று அந்த பிராமணர் கூறியவுடன் ஸ்ரீ ஸ்வாமி மறைந்துவிட்டார். அனைவரின் ஆச்சரியத்திற்கும் இணங்க ஸ்ரீ ஸ்வாமியின் கருணையால், அவருடைய மனைவி மாலைக்குள் ஒரு ஆண் மகனைப் பெற்றெடுத்தாள்.

குழந்தைக்கு ஐந்து மாதம் ஆனது. நாராயண்தாஸ் தன் பிரார்த்தனையை நிறைவேற்றாமல் இருந்தார். ஒருநாள் அவருடைய மனைவி, "நாம் அக்கல்கோட்டுக்கு செல்ல வேண்டுமே!" என்று நினைவூட்டினாள். இதைக் கேட்டவுடன் நாராயண்தாஸுக்கு மனநிலை குழம்பி, அவர் தன் மனைவியை வசைபாடத் தொடங்கினார். தன் துணிகளை கிழித்துக் கொண்டு சாலைகளில் உருண்டு கொண்டிருந்தார். பிறகு அவருடைய மனைவியும், அன்னையும் மிகுந்த சிரமத்தில் அவரை எப்படியோ அக்கல்கோட்டுக்கு அழைத்து வந்தனர். அப்போது ஸ்ரீ ஸ்வாமி விருபாக்ஷி மோடியின் வீட்டில் இருந்தார். நாராயண்தாஸைக் கண்டவுடன் ஸ்ரீ ஸ்வாமி, **"நீ பிடிவாதக்காரன் ஆகிவிட்டாயா? உனக்கு இன்னும் வேண்டுமா?"** என்று கூறிவிட்டு எழுந்து சென்றுவிட்டார். மூவரும் ஸ்ரீ ஸ்வாமிக்கு நான்கு மாதங்கள் தொடர்ந்து சேவைகள் செய்து கொண்டிருந்தனர். ஒருநாள் நாராயண்தாஸுக்கு குணமடைந்தது. பிறகு அவர் ருத்திராபிஷேகம் செய்துவிட்டு பிராமணர்களுக்கு உணவளித்தார். ஸ்ரீ ஸ்வாமியின் அனுமதியுடன் தன் சொந்த ஊருக்குச் சென்றார்.

நாராயண்தாஸ் என்னும் பக்தரின் கர்மாக்களை ஸ்ரீ ஸ்வாமி எவ்வளவு நூதனமான முறையில் கழித்து அருளினார் என்பதை இந்த அத்தியாயம் அற்புதமாக விவரிக்கிறதல்லவா? ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதகமலங்களில் சரணடைந்த ஒருவருக்கு துன்பம் வந்தாலும் அவை வெகு விரைவாகவே நீங்கிவிடும் என்பதில் எந்தவித சந்தேகமும் வேண்டாம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# அத்தியாயம் 185

# வீரபத்திரரும் நானே...

கோவிந்தபட் என்கிற பிராமணர் கர்நாடகாவில் உள்ள தம்பா என்னும் ஊரைச் சேர்ந்தவர். அவர் சிறு வயதிலிருந்தே மிகவும் அமைதியான மற்றும் அடக்கமான குணமுடையவர். அவர் அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழைக் கேள்விப்பட்டு, ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்துவிட்டு அங்கு தங்கி அவருக்கு சேவைகள் செய்து கொண்டும், தினமும் நாமஸ்மரணம் செய்து கொண்டும் இருந்தார். அதன் பலனால் அவருக்கு வாக்கு சாதுர்ய சித்தி கிடைத்தது. மக்கள் தங்கள் காரிய சித்திக்காக அவரை எப்போதும் சூழ்ந்து கொண்டு பலன்களைக் கேட்டுக் கொண்டிருப்பர். அதனால் அவர் மிகவும் பிரபலமடைந்தார், இருப்பினும் ஸ்ரீ ஸ்வாமியின் மீது அவர் கொண்டிருந்த பக்தி அபரிமிதமானது.

கோவிந்த பட் ஒருநாள் வராலி என்கிற கிராமத்திற்குச் சென்றிருந்தபோது, ராசப்பா என்கிற வீரபத்திர ஸ்வாமியின் பக்தரைச் சந்தித்தார். ராசப்பா வீரபத்திர ஸ்வாமியின் மீது பாடல்கள் எழுதிக் கொண்டிருந்தார். அவர் வேறு எந்த தெய்வங்கள் மீதும் கவிதை/பாடல்கள் எழுதுவதில்லை. கோவிந்தா அவரை சந்தித்தபோது, **"ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம். அவரைப் பற்றியும் கவிதைகள் எழுதுங்கள்"** என்று வேண்டுகோள் விடுத்தார். **"நான் வீரபத்திரரைத் தவிர வேறு எவர் மீதும் கவிதை எழுதமாட்டேன்"** என்று அவர் உறுதியாகக் கூறிவிட்டார்.

இது கோவிந்த பட்டுக்கு மிகுந்த வருத்தத்தை அளித்தது. அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை மரியாதை குறைவாக நடத்தி விட்டார் என்ற வருத்தத்தில் உணவேதும் உண்ணாமல் ஏழு நாட்கள் தொடர்ந்து நாமஸ்மரணம் செய்து கொண்டிருந்தார். பிராமணரின் உறுதியைக் கண்டு மனம் உருகிய ஸ்ரீ ஸ்வாமி, ராசப்பாவின் கனவில் தோன்றி, **"என்னுடைய குணங்களுக்கும் வீரபத்திருடைய குணங்களுக்கும் வித்தியாசம் காட்டாமல் கவிதைகள் எழுது. அப்படி எங்களை வேறுபடுத்தினால் இழிவான நிலைக்குத் தள்ளப்படுவாய். உடனடியாக எழுந்து சென்று கோவிந்த பட்டின் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு அவரிடம் மன்னிப்பு கேள். உனக்கு எந்தவித சந்தேகமும் வேண்டாம்"** என்று கூறினார்.





ராசப்பா பயத்தில் விழித்துக் கொண்டு தம்பாவுக்குச் சென்று கோவிந்தபட்டுடைய பாதங்களைப் பற்றிக் கொண்டு, **"உங்களால் எனக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய தரிசனம் கிடைத்தது. எங்கள் வம்சமே புண்ணியம் அடைந்துவிட்டது"** என்று கூறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் குணங்களை விவரித்தார். ராசப்பா எழுதிய கவிதைகளை இப்போதும் நாம் படித்து ரசிக்கலாம்.

கோவிந்த பட் என்னும் பக்தரின் பிரேம பக்திக்கு ஸ்ரீ ஸ்வாமி அளித்த பரிசு அபரிமிதமானது. ஸ்ரீ ஸ்வாமி ராசப்பாவை தன் வசம் இழுத்துக் கொள்வதற்காக கோவிந்த பட் என்னும் பரம பக்தரை கருவியாக உபயோகப் படுத்திக் கொண்டார் என்றுதான் கூற வேண்டும். பக்தர்கள் மனது சிறிதளவு கூட நோகாமல் அவர்களுக்கு வாரி வழங்குவதில் ஸ்ரீ ஸ்வாமிக்கு இணை வேறெவருமுண்டோ?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 186

# கடனிலிருந்து விடுதலை

### மண்ணும் வெள்ளியும்

ஒரு தெலுங்கு பிராமணர் தீர்த்த யாத்திரையாக அக்கல்கோட் வந்தடைந்தார். அவர் வறுமையில் வாடிக் கொண்டிருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தவுடன் அவரிடம் ஸ்ரீ ஸ்வாமி, "ஏ பிராமணரே! எந்த விருப்பத்துடன் என்னை தரிசனம் செய்ய வந்துள்ளாய்?" என்று கேட்டார். **"மஹராஜ், நான் வறுமையில் தவித்துக் கொண்டிருக்கிறேன். தயவு செய்து உங்கள் அருளால் என்னை கடனிலிருந்து விடுவியுங்கள்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். **"நானோ சந்நியாசி. என்னிடம் ஏது பணம்? வேண்டுமென்றால் இந்த மண்ணை எடுத்துக் கொண்டு செல்"** என்று கூறினார். **"ஸ்வாமி, இதை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வது?"** என்று அவர் கேட்டதற்கு, **"வேண்டாம் என்றால், கிளம்பு"** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறிவிட்டார்.





**"மஹராஜ் இவ்வளவு தூரம் கூறுகிறாரே. இந்த மண்ணைக் கொண்டு சென்றால் பார்த்திவ லிங்கம் செய்வதற்காவது உபயோகப்படும்"** என்று மனதில் எண்ணிக் கொண்டு சிறிதளவு கெட்டியான மண்ணை எடுத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து வணங்கி விட்டு, தன் சொந்த ஊருக்குக் கிளம்பினார். சிறிது தூரம் சென்றவுடன் மணல் கட்டி கணத்தது. தன் பையை அவர் திறந்து பார்த்தபோது, அதில் மணலுக்குப் பதிலாக வெள்ளிக் கட்டி இருந்தது. அந்த பிராமணர் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. உடனே ஸ்ரீ ஸ்வாமியைப் புகழ்ந்து கோஷம் எழுப்பினார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் வார்த்தைகளை மறு யோசனைகள் இல்லாமல் நிறைவேற்றினால் அவர் மண்ணை வெள்ளி என்ன, பொன்னாகக் கூட மாற்றிவிடுவாரே! அந்த தெலுங்கு பிராமணர் தன் வறுமையில் இருந்து விடுபட்டு சந்தோஷமான வாழ்க்கையை வாழ்ந்தார்.

### நவ்ரோஜி பார்சி

மும்பையைச் சேர்ந்த பாஜோராஜி என்கிற பார்சி ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் செய்து கொண்டு அக்கல்கோட்டில் தங்கியிருந்தார். அவரை சந்திப்பதற்காக அவருடைய உறவினரான நவ்ரோஜி பார்சி மும்பையிலிருந்து வந்திருந்தார். அடுத்த நாள் இருவரும் அவர்கள் தங்கியிருந்த வாடாவின் கதவுகளை மூடிக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் லீலைகளைப் பற்றி பேசிக் கொண்டிருந்தனர். நவ்ரோஜியால் அவர் கூறியவைகளை நம்ப முடியவில்லை. அத்தருணத்தில் திடீரெனெ ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவர்கள் இருவருக்கும் நடுவே திகம்பர நிலையில் வந்து அமர்ந்தார். வாயிற்கதவுகள் மூடியிருக்க ஸ்ரீ ஸ்வாமிகளால் எப்படி உள்ளே வரமுடிந்தது என்பதை எண்ணி இருவரும் ஆச்சரியம் அடைந்து, **"ஸ்வாமி, கதவுகள் மூடியிருக்க நீங்கள் எப்படி உள்ளே வந்தீர்கள்?"** என்று வினவினர். **"கதவுகளா என்னை தடுத்துவிடும்?"** என்று கூறிவிட்டு சிரித்தார். இருவரும் ஸ்ரீ ஸ்வாமிகளை நமஸ்கரித்தனர். நவ்ரோஜி ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"மஹராஜ், நான் கடன் தொல்லையால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறேன். எனக்கு பணம் கிடைத்தால் மட்டுமே இந்த கடன்களில் இருந்து விடுபட முடியும். எனக்கு அருள் புரியங்கள் ஸ்வாமி.."** என்று பிரார்த்தனை செய்து கொண்டார்.

**"உனக்கு செல்வம் கிடைத்தால் எனக்கு என்ன தருவாய்?"** என்று ஸ்ரீ ஸ்வாமி கேட்டதற்கு, **"வருமானத்தில் கால் பாகத்தை உங்களுக்குத் தருகிறேன்**




**ஸ்வாமி**" என்று நவ்ரோஜி கூறினார். "**நீ நர்மதாவுக்கு செல்**" என்று கூறிவிட்டு மறைந்துவிட்டார். அவர்கள் சுற்றியிருந்த அனைத்து கதவுகளையும் சோதித்துப் பார்த்தபோது, அவை அனைத்தும் மூடித்தான் இருந்தன. அடுத்த நாள் காலையில் இவர்கள் இருவரும் ஸ்ரீ ஸ்வாமி எங்கிருக்கிறார் என்று விசாரித்தபோது, அவர் நான்கு மைல்களுக்கு அப்பால் உள்ள ராம்பூரில் இருப்பதை அறிந்து ஆச்சரியம் அடைந்தனர். பின்னர் இருவரும் மஹராஜின் தரிசனத்துக்காக சென்ற போது, "**உனக்கு குஜராத்திலிருந்து அழைப்பு வந்துவிட்டது. நீ கிளம்பலாம்**" என்று கூறியவுடன், அவர் ஸ்ரீ ஸ்வாமிக்கு தேங்காயை சமர்ப்பணம் செய்த பின்னர் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துவிட்டு மும்பை கிளம்பினார். ஊருக்கு சென்றடைந்தவுடன் அவருக்கு பரோடாவின் மன்னரான மல்ஹர் ராவ் கைக்வாட்டிடமிருந்து அழைப்பு வந்திருப்பதை அறிந்து கொண்டு அவரைச் சந்தித்தார். அவர் விலையுயர்ந்த ஆடை ஆபரணங்கள் மற்றும் செல்வங்களை வழங்கி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை அக்கல்கோட்டிலிருந்து பரோடாவுக்கு அழைத்து வருமாறு கூறினார்.

அடுத்தநாள் நவ்ரோஜி அக்கல்கோட் வந்து, "**மஹராஜ், உங்களை பரோடா மன்னர் அழைத்து வரச் சொன்னார்**" என்று கூறியதற்கு, "**நான் வரமுடியாது**" என்று கூறிவிட்டார். பின்னர் நவ்ரோஜி மும்பை வந்து மன்னரிடம் ஸ்ரீ ஸ்வாமியின் முடிவைப் பற்றி கூறினார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரிபூரண ஆசீர்வாதத்தினால் நவ்ரோஜிக்கு மிகுதியான செல்வம் கிடைத்தது, அவருடைய கடனும் ஒழிந்தது.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 187

# மாதவாச்சார்யாவின் இரண்டாவது திருமணம்

மாதவாச்சார்யா என்கிற பிராமண பண்டிதர் பீமா நதிக்கரையில் அமைந்துள்ள ஷிரூர் என்னும் ஊரில் வசித்து வந்தார். அவர் கடன் பிரச்சினைகளால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். மேலும் அவருடைய

மனைவி இறந்துவிட்டதால் அதீதமான கவலையில் பீடிக்கப்பட்டிருந்தார். அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தால் ஏதாவது வழி கிடைக்கும் என்கிற எண்ணத்தில் அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்தார். **"நல்ல நேரம்! விழிப்புடன் இரு"** என்று கூறி ஆசீர்வதித்து விட்டு ஒரு தேங்காயை அவருக்கு பிரசாதமாக அளித்தார். அவரைச் சுற்றி இருந்த அனைத்து சேவகர்களும் மாதவாச்சார்யாவை கிண்டல் செய்தனர். **"மஹராஜ், என்னை அனைவரும் கிண்டல் செய்கின்றனர். நான் எப்படி இந்த வயதில் திருமணம் செய்து கொள்வது? எனக்கு 50 வயதுக்கு மேல் ஆகிவிட்டது, மேலும் 5000 ரூபாய்க்கும் மேல் கடன் இருக்கிறது"** என்று கூறினார். **"வந்தவழியே கிளம்பு"** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறிவிட்டார். உடனே மாதவாச்சார்யா ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு அவருடைய உறவினர் ஒருவரின் வீட்டுக்கு வந்தடைந்தார்.

அவர் வந்து சேர்ந்த அதே நாளில் உறவினரின் இரு மகள்களுக்கும் திருமணம் நடைபெறவிருந்தது. இளைய மகளுடைய மணமகன் வந்து சேர்ந்துவிட்டான், ஆனால் மூத்த மகளுக்கு நிச்சயிக்கப்பட்டிருந்த மணமகன் எந்த காரணத்தினாலோ வரவில்லை. மூத்த மகளை வைத்துக் கொண்டு எப்படி இளைய மகளுக்கு திருமணம் செய்வது என்பது புரியாமல் தந்தை குழம்பிக் கொண்டிருந்தார். அச்சமயத்தில்தான் மாதவாச்சார்யா அங்கு வந்து சேர்ந்தார். மூத்த மகளை மாதவாச்சார்யாவுக்கு மணமுடிக்கலாம் என்று முடிவு செய்தனர். கையில் கொஞ்சம் கூட பணம் இல்லாமல், ஸ்ரீ ஸ்வாமியின் அருளால் அவருக்கு திருமணம் நடைபெற்றது. அவர் தன் புது மனைவியுடன் அக்கல்கோட் வந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்தார். மஹராஜ் அவர்களை ஆசீர்வதித்துவிட்டு, **"உங்கள் வீட்டுக்கு செல்லுங்கள். கடனிலிருந்து விடுபட்டு, குழந்தை மற்றும் பேரன்-பேத்திகளுடன் சந்தோஷமாக வாழ்வீர்கள்"** என்று கூறினார். மாதவாச்சார்யாவும் அவருடைய மனைவியும் ஷிரூர் சென்று மன நிறைவுடன் வாழ்ந்தனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய ஆசீர்வாதம் கிடைத்தால் சாத்தியமற்றது அனைத்தும் சாத்தியமாகிவிடுமே!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# அத்தியாயம் 188

# விட்டல்ராவ் மாம்லத்தார்

ஹைதராபாத்தில் விட்டல்ராவ் மாம்லத்தாராக இருந்தார். அவர் ஸ்ரீ மாணிக் பிரபுவின் பரம பக்தர். அவரின் நடத்தைகளின் காரணமாக அவருடைய வேலை பறிபோனது. மொகலாய அரசு அவரை கைது செய்துவிடும் என்பதை அறிந்து கொண்டதிலிருந்து அவர் மிகுந்த கவலையில் இருந்தார். அவருக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் அடைக்கலம் அடையவேண்டும் என்று உணர்த்தப்பட்டவுடன் அக்கல்கோட் புறப்பட்டார்.

அவர் இரவு நேரத்தில் அக்கல்கோட் வந்தடைந்தார். உடனே அனைத்து சேவகர்களையும் எழுப்பி ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தனக்காக பிரார்த்தனை செய்து கொள்ளுமாறு கூறினார். அப்போது ஸ்ரீ ஸ்வாமி தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு எழுந்து அமர்ந்தார். விட்டல்ராவ் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னால் சென்று கைகளை கூப்பியவாறு நின்றுகொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி மிகுந்த கோபத்துடன், **“நீ சிரித்துக்கொண்டே அநியாயங்கள் செய்வாய், ஆனால் அதன் பலன்களை அழுதுகொண்டே அனுபவிப்பாயா? உனக்கு என்ன ஒரு ஆணவம்? உனக்கு மாற்றான் மனைவியும், செல்வமும் தேவையாக இருக்கிறதா? என்னிடம் ஏன் வந்தாய்? இங்கிருந்து கிளம்பு. நான் என்ன உன் அப்பனுடைய வேலைக்காரனா?”** என்று ஆவேசமாக கூச்சலிட்டார். உடனே விட்டல்ராவ் ஸ்ரீ ஸ்வாமியின் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு, **“இனி இதுபோல் நான் நடந்து கொள்ளமாட்டேன். தயவு செய்து என்னை மன்னித்துவிடுங்கள். மன்னிப்பு கேட்பவர்களை காக்க வேண்டுமல்லவா? உங்களை விட்டால் இந்த உலகத்தில் என்னை காப்பாற்ற வேறெவருமில்லை”** என்று கூறிவிட்டு கதறினார்.

உடனே, **“நான் உன்னை மன்னித்துவிட்டேன். இனி எச்சரிக்கையுடன் நடந்து கொள்”** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறியவுடன் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு வெற்றி கோஷங்களை எழுப்பிக் கொண்டே ஹைதராபாத் சென்றடைந்தார். பின்னாட்களில் அவர் தண்டனையிலிருந்து விடுவிக்கப்பட்டு, மாம்லத்தார் பதவியும் கிடைத்தது.





குறிப்பிட்ட சங்கடமான சூழ்நிலைகள் நம் வாழ்க்கையில் ஏற்படும் போது, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் சரணடைந்தால் அனைத்தும் நன்மையில் முடியும் என்கிற சமயோஜித உணர்வு இருந்தமையால் விட்டல்ராவ் தண்டனையிலிருந்து தப்பித்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் முழுமையாக சரணடைந்தால், சங்கடமான சூழ்நிலைகளும் நம்மை நெருங்கிவிடுமோ?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

அத்தியாயம் 189

# குழந்தையான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்

ஒரு முறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக மும்பையிலிருந்து பாவ் ரஸூல் அக்கல்கோட் வந்திருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமியை வணங்கிவிட்டு அடுத்த நாள் பிராமண போஜனத்திற்காக ஏற்பாடு செய்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து, **“மஹராஜ், என்னுடைய வியாபாரம் நல்லமுறையில் முன்னேறினால் தங்கள் முன்னால் 200 ரூபாய் சமர்ப்பணம் செய்கிறேன்”** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். பின்னர் ஸ்ரீ ஸ்வாமியின் ஆசீர்வாதத்தினால் வியாபாரம் நல்ல முறையில் நடைபெற்று அவருக்கு லாபம் கிடைத்தது. ஆனால் அவர் தான் செய்து கொண்ட பிரார்த்தனையை மறந்துவிட்டார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பக்தர்கள் செய்து கொண்ட பிரார்த்தனைகளை நினைவூட்டி பெற்றுக் கொள்வார். அவ்வாறே அவர் ரஸூலிடமும் நடந்து கொண்டார். ஒருமுறை ரஸூல் அவருடைய வீட்டில் உணவருந்திக் கொண்டிருந்தபோது ஒரு குழந்தை அங்கு தவழ்ந்து வந்தது. அக்குழந்தையைப் பார்த்துவிட்டு, **“இது யாருடைய குழந்தை?”** என்று அவர் கேட்டவுடன் அக்குழந்தை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தராக மாறி ஒரு ஆசனத்தில் அமர்ந்து கொண்டார். **“ஏ! மாதர்சோத், என்னுடைய 200 ரூபாயைக் கொடுக்க மாட்டாயா?”** என்று கேட்டுவிட்டு மறைந்து விட்டார். ரஸூல் ஆச்சரியத்தில் உறைந்தார்.

உடனே அவர் தன் மனைவியை அழைத்துக் கொண்டு அக்கல்கோட்டுக்கு சென்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம், **“மஹராஜ், நான் செய்துகொண்ட பிரார்த்தனையை மறந்துவிட்டேன். இருப்பினும் எனக்கு தெய்வீக தரிசனம் அளித்து நீங்கள் நினைவூட்டிவிட்டீர்கள்”** என்று கூறிவிட்டு அவருடைய பாதத்தில் நமஸ்கரித்துவிட்டு மன்னிப்பு கேட்டுக் கொண்டார். அவர் 200 ரூபாயை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முன்னால் சமர்ப்பணம் செய்தவுடன், **“நீ வீட்டுக்கு வந்த விருந்தாளிக்கு சிறிதுகூட உணவளிக்கவில்லையே!”** என்று கூறியவுடன், **“மஹராஜ், இன்றிலிருந்து வீட்டுக்கு வருபவர்கள் அனைவருக்கும் கண்டிப்பாக உணவு மற்றும் தண்ணீர் அளிப்பேன்”** என்று ரஸூல் உறுதி அளித்தார். அடுத்த நாள் பிராமணர்களுக்கு போஜனம் அளித்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமியின் அனுமதியுடன் மும்பை சென்றடைந்தார்.

ஒரு பக்தன் தான் செய்து கொண்ட பிரார்த்தனைகளை நிறைவேற்றா விட்டால் அதற்கான கர்மப்பலன்களை அனுபவிக்க நேரிடும். ஆனால் பக்தவத்சலனான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பக்தனுக்கு அவ்வாறு நேர்ந்து விடக்கூடாது என்பதற்காக பல வழிகளில் அவர்களுக்கு அப்பிரார்த்தனைகளை நினைவூட்டி நிறைவேற்றச் செய்வார். ஆஹா! கருணைக்கடலான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை குருவாகப் பெற்றவர்கள் எவ்வளவு பாக்கியசாலிகள்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

### அத்தியாயம் 190

# கேஜ் என்கிற ஊரில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த மடம்

மொஹலாய் மாகாணத்தில் அம்பேஜோகை என்கிற ஊருக்கு அருகில் கேஜ் என்றொரு ஊர் உள்ளது. அங்கு வசதியான ரிக்வேத பிராமணரான மகாருத்திர ராவ் தேஷ்பாண்டே வசித்து வந்தார். அவருடைய வருமானத்தில் நிஜாம் அரசு தலையிட்டு சில தடைகளை விதித்திருந்தனர். அந்த ஆணையிலிருந்து விடுவித்துக்கொள்ள அவர் எவ்வளவோ முயற்சி செய்தும் எதுவும் பலனளிக்கவில்லை. வேறு வழி தெரியாமல் பீட் என்னும் மாகாணத்தில்

உள்ள ஒரு துறவியிடம் அடைக்கலம் அடைந்தார். **“நீ பரமஹம்சரான அக்கல்கோட்டில் வசிக்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் சென்றால் உன் பிரார்த்தனை நிறைவேறும்”** என்று வழிகாட்டி அவரை அனுப்பி வைத்தார்.

தேஷ்பாண்டே அக்கல்கோட் வந்தடைந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் முன்னால் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். **“நான்கு ஸ்தூபிகள் உள்ள இடத்திற்குச் செல். உன்னுடைய நிலம் விடுவிக்கப்படும்”** என்று கூறி அருளாசி வழங்கினார். ஸ்ரீ ஸ்வாமியின் வார்த்தைகளை கேட்டவுடன் அவருடைய சர்வ வல்லமையை நினைத்து மிகுந்து மகிழ்ச்சியுடன் அவர் ஹைதராபாத் பயணம் மேற்கொண்டார். அவர் அங்கு சென்றடைந்த அதே நாளில் அந்த ஆணை ரத்து செய்யப்பட்டு, அவருடைய வருமானம் தடையிலிருந்து விலக்கப்பட்டது. தேஷ்பாண்டே ஆனந்தத்தில் மிதந்து கொண்டே, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நாமத்தை ஸ்மரணம் செய்து கொண்டு அக்கல்கோட் வந்து சேர்ந்தார். நடந்தவைகளை ஸ்ரீ ஸ்வாமிகளிடம் கூறிவிட்டு, அவருடைய பரம பக்தராக மாறினார்.

தேஷ்பாண்டே ஒரு முறை பண்டரிபுரம் சென்றிருந்தார். அங்கு பண்டரிநாதனுக்குப் பதிலாக ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரைக் கண்டு ஆச்சரியம் அடைந்தார். ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்த சந்தோஷத்தில் பிராமணர்களுக்கு போஜனம் ஏற்பாடு செய்தார். ஸ்ரீ ஸ்வாமிக்கு வெற்றி உண்டாகட்டும் என்று கோஷம் எழுப்பிக் கொண்டே தன் ஊருக்குச் சென்றடைந்தார். பின்னர் சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமியின் அருளால் அவருக்கு ஒரு பானை புதையல் கிடைத்தது. உடனே அவர் அக்கல்கோட் வந்தடைந்து ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்தபோது, **“ஆயிரம் பிராமணர்களுக்கு போஜனம் ஏற்பாடு செய்”** என்று ஸ்ரீ ஸ்வாமி ஆணையிட்டார். அவ்வாறு செய்துவிட்டு தன் ஊருக்கு சென்றடைந்த அடுத்த நாள் கடுமையான காய்ச்சலால் அவர் பாதிக்கப்பட்டார். அவருடைய உயிர் பிரிந்துவிடும் என்கிற நிலை உருவானது. தேஷ்பாண்டேயின் மூத்த மகனான ரகுத்தம்ராவ் மிகுந்த பீதியுடன் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்தார். **“என் தந்தையை நாங்கள் இழந்து விட்டால், எங்கள் குடும்பமே நிலைகுலைந்து விடும். தாயும் தந்தையுமான ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ், தயவு கொண்டு அவரை காப்பாற்றுங்கள்”** என்று கதறினார். **“எல்லாம் சரியாகிவிடும். வீட்டுக்கு செல்”** என்று ஸ்ரீ ஸ்வாமி தைரியம்

கூறியவுடன் அவர் மனநிறைவுடன் ஸ்ரீ ஸ்வாமியின் தீர்த்தத்தை கொண்டு சென்று அவருடைய தந்தையின் வாயில் ஊற்றினார். எட்டு நாட்களில் தேஷ்பாண்டே குணமடைந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்தார். அவர் பாதத்தில் நமஸ்கரித்துவிட்டு, **“ஸ்வாமி, என்னை மரணத்திலிருந்து காப்பாற்றிவிட்டீர்கள். இந்த பக்தனுக்கு ஏதாவது சேவை செய்ய கட்டளையிடுங்கள்”** என்று கேட்டுக்கொண்டு, ஸ்ரீ ஸ்வாமிக்கு முன்னால் பத்து ரூபாயை காணிக்கையாக வைத்தார். ஸ்ரீ ஸ்வாமி மஹாராஜ் சிரித்துக் கொண்டே, **“எனக்கு பணம் தேவையில்லை. வீட்டுக்குச் செல். இதை வீட்டிலுள்ள குப்பைத் தொட்டியில் போடு, இந்த கல்லை அங்கு போடு”** என்று கூறினார்.

அச்சமயத்தில் மும்பையிலிருந்து ஹரிச்சந்திரா என்கிற பக்தர் ஒருவர் வந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமியின் ஆயிரம் பாதுகைகளை தயார் செய்து, அவற்றை பக்தர்களுக்கு இலவசமாக விநியோகம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமியின் வார்த்தைகளைக் கேட்டவுடன் அவர் ஒரு பாதுகையை எடுத்து தேஷ்பாண்டேவுக்கு அளித்தார். தேஷ்பாண்டே ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களில் அணிவித்துவிட்டு, அப்புனித பாதுகைகளை கேஜுக்கு கொண்டு சென்றார். அவர் ஒரு தரிசு நிலத்தில் ஆசிரமம் அமைத்து, ஸ்ரீ ஸ்வாமிக்கு காணிக்கையாக அளித்த பணத்தைக் கொண்டு கட்டிடம் கட்டி, அப்பாதுகைகளை அங்கு ஸ்தாபனம் செய்தார். பின்னர் காசி, ப்ரயாக் போன்ற இடங்களுக்கு தீர்த்த யாத்திரை மேற்கொண்ட பின்னர், சந்நியாசம் பெற்றுக் கொண்டார். பின்னாட்களில் அவருடைய மகன் ஆசிரமத்தை நிர்வகித்தார்.

தேஷ்பாண்டே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தராக விளங்கினார். ஸ்ரீ ஸ்வாமியின் லீலைகளைப் பற்றி எவரேனும் விவரித்தால் அவருடைய கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் பெருக்கெடுக்கும். ஒவ்வொரு வருடமும் அக்கல்கோட் வந்து ஆயிரம் பிராமணர்களுக்கு போஜனம் அளிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். ஒருமுறை அக்கல்கோட் வந்திருந்த போது, அவருடைய உடல்நிலை மோசமாக இருந்தது. தன்னுடைய உயிர் பிரியப்போகிறது என்பதை உணர்ந்துகொண்டு, அனைவரிடமும் தன்னுடைய சமாதி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு அருகிலேயே இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். சக வருடம் 1817 ஆம் (கி.பி. 1895) ஆண்டு அவருடைய உயிர் பிரிந்தது. அவருடைய சமாதி ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கமலப் பாதங்களுக்கு அருகிலேயே அமைக்கப்பட்டது. இப்படிப்பட்ட

பேரதிர்ஷ்டம் எவருக்குத்தான் கிடைக்கும்! தேஷ்பாண்டேவைப் பின்பற்றி நாமும் ஸ்ரீ ஸ்வாமியுடன் கலக்க வேண்டும் என்கிற பிரார்த்தனையுடன் இந்த அத்தியாயத்தை நிறைவு செய்வோம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 191

# தயாள மூர்த்தி

அக்கல்கோட்டிலிருந்து எட்டு மைல்களுக்கு அப்பால், சோலாப்பூர் மாவட்டத்தில் போராமணி என்றொரு கிராமம் இருக்கிறது. அங்கு கண்பத்ராவ் ஹூக்கீரே வசித்து வந்தார். அவர் பல எருமை மாடுகள் மற்றும் பசு மாடுகளை வளர்த்து வந்தார். அவற்றுள் மூன்று எருமைகள் களவு போய்விட்டன. எவ்வளவு தேடியும் கிடைக்காமல், ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் வந்து, **"எருமைகள் கிடைத்தால், ஒரு எருமையையோ அல்லது அதற்கு ஈடான பணத்தையோ உங்கள் பாதங்களில் சமர்ப்பிக்கிறேன்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். அடுத்தநாள் காலையில் அந்த எருமைகள் ஊருக்கு வெளியே இருக்கும் பழைய வீட்டில் கட்டப்பட்டிருப்பதாக கண்பத் ராவுக்கு தகவல் வந்தது. உடனே சென்று பார்த்தபோது, அனைவர் ஆச்சரியத்திற்கும் இணங்க அவை அவருடைய எருமைகள்தான்.

பின்னர் கண்பத்ராவ் தன்னுடைய பிரார்த்தனையை நிறைவேற்றும் விதமாக, இரண்டு எருமைகளின் விலைக்கு ஈடான இரண்டு பளபளப்பான பாத்திரங்களையும், ஒரு மலட்டு எருமையையும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சமர்ப்பணம் செய்தார். நாம் தவறுதலாக நெய்யையோ, எண்ணெய்யையோ பூமியில் சிந்தி விட்டால், அதை ஸ்ரீ கிருஷ்ணருக்கு படைத்ததாக எண்ணிக் கொள்ளலாம் என்று கூறுவார்கள். ஆனால் அது அவருக்கு அளிக்கப்பட்ட நைவேத்தியம் என்று கண்டிப்பாக எடுத்துக் கொள்ள முடியாது, இது ஒரு ஏமாற்று வேலை. ஒருவர் கடவுளையே ஏமாற்றும் எண்ணம் உடையவராக இருந்தால், ஏன் சக மனிதர்களை ஏமாற்ற மாட்டார்!

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கண்பத்ராவிடம், **"என்னுடைய எருமையை நீயே வைத்துக் கொள்"** என்று சிரித்துக் கொண்டே கூறினார். பேராசை கொண்ட கண்பத்ராவ் அதை தன் வீட்டுக்குக் கொண்டு வந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் நிழலுக்குள் இருக்கும் மனிதனோ, மிருகமோ அல்லது பறவையோ அவருடைய கருணையை உடனடியாக பெற்றுவிடுகின்றன, இதுதான் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் உண்மையான குணம். இந்த எருமை மாடும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கருணை நிழலுக்குள் அடைக்கலம் அடைந்துவிட்டது. பின்னாட்களில் அந்த மலட்டு எருமை மிகுதியாக பால் கொடுக்கத் தொடங்கியது. ஆனால் கண்பத்ராவோ அது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு அளிக்கப்பட்ட எருமை என்பதை மறந்து விட்டார். அவர் ஒரு துளி பால்கூட ஸ்ரீ ஸ்வாமிக்கு நைவேத்தியம் அளிக்கவில்லை. பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் செய்யும் மாபாதக செயலையும் மன்னிக்கத்தானே செய்வார்கள்! அப்படிப்பட்டவர் தானே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும்! தாயுமானவரான ஸ்ரீ ஸ்வாமி, கண்பத்ராவுக்கு எந்தவித தண்டனையும் அளிக்காமல் மன்னித்தருளினார். ஆனால் அந்த எருமை சில காலங்கள் வாழ்ந்துவிட்டு இறந்தது. தயாள மூர்த்தியான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் லீலைகளை எப்படித்தான் விவரிப்பது!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 192

# மதம்பிடித்த யானை பூனை போலானது

அக்கல்கோட் பட்டத்து யானையான கவ்வார், மஹீபதி கோவிலுக்கு அருகில் உள்ள கொட்டகையில் கட்டப்பட்டிருக்கும். ஒரு சமயம் அந்த யானைக்கு மதம் பிடித்துவிட்டது. அதன் நான்கு கால்களும் இரும்புச் சங்கிலியால் பிணைக்கப்பட்டிருந்தாலும், தன் துதிக்கையால் கல்லை எடுத்து அவ்வழியாக வருவோர் போவோர் அனைவரையும் தாக்கிக் கொண்டிருந்தது. ஊர் மக்கள் பயந்து நடுங்கிக் கொண்டு அவ்வழியாக செல்வதை தவிர்த்து வந்தனர். மிருகங்களும் அவ்வழியாக செல்வதற்கு தடை விதிக்கப்பட்டிருந்தது.

எப்போது வேண்டுமானாலும் சங்கிலியிலிருந்து விடுவித்துக் கொண்டு அனைவரையும் தாக்கிவிடும் என்கிற நிலை இருந்தது. ஆயுதம் ஏந்திய காவலர்கள் காவலுக்கு போடப்பட்டனர்.

நிலைமை கட்டுக்கடங்காமல் போகவே மஹாராஜா ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்து யோசனை கேட்பதற்காக வந்தார். **"மஹராஜ், என் யானைக்கு மதம் பிடித்து கட்டுக்கடங்காமல் இருக்கிறது. மக்கள் அனைவரும் பீதியில் தவிக்கின்றனர். அதை சுட்டுவிடலாமா?"** என்று ஸ்ரீ ஸ்வாமியிடம் யோசனை கேட்டதற்கு, **"வேண்டாம்"** என்று கருணாமூர்த்தி பதிலளித்தார். உடனே ஸ்ரீ ஸ்வாமி தன் சேவகர்களுடன் யானை கொட்டகைக்குப் புறப்பட்டார். வழியில் மக்கள் அனைவரும் யானை அனைவரின் மீதும் கற்களை வீசி எரிவதால் பாதுகாப்பாக செல்லும்படி எச்சரித்தனர். சில சேவகர்கள் தங்களுடன் இருப்பது அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகன் என்பதை உணராமல் பின்னோக்கி சென்றனர். ஸ்ரீ ஸ்வாமியின் கருணையால் மரணத்தின் பிடியில் இருந்து தப்பியவர்கள் கூட இவ்வாறு நடந்து கொண்டது வியப்பூட்டத்தான் செய்கிறது. பூரணமான நம்பிக்கையுடைய சேவகர்களான சோளப்பாவும் பாபா யாதவும் எந்தவித மறுயோசனையும் இல்லாமல் ஸ்ரீ ஸ்வாமியுடன் சென்றனர்.

மஹராஜ் யானைக்கு முன்னால் சென்று கெட்ட வார்த்தைகளால் வசை பாடிவிட்டு, **"ஏ பைத்தியக்கார யானையே! வெறி கொண்டு விட்டாயா? உன் பூர்வஜன்மத்தை மறந்துவிட்டாயா? எவ்வளவு ஏறினாலும், வீழ்வது உறுதி. உன் பைத்தியக்காரத்தனத்தையும் அகந்தையையும் விட்டொழி"** என்று தன் இடுப்பில் கைகளை வைத்துக் கொண்டு உறுதியாகக் கூறினார். இதைக் கேட்டவுடன் மதம் கொண்ட யானை பூனை போலாகி தன் முன்னங்கால்களை மடித்துக் கொண்டு தன் துதிக்கையால் ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களை வருடிவிட்டு கண்ணீர் சிந்தியது. ஆஹா! என்ன ஒரு அற்புதமான காட்சி. அனைத்து ஜீவராசிகளின் மீதும் கருணையைப் பொழிவதில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு நிகருண்டோ! அந்த யானை சாவில் இருந்து தப்பித்தது. வாயில்லா ஜீவராசிகள் கூட ஸ்ரீ ஸ்வாமியின் சக்தியை உணர்ந்து கொண்டு அவரிடம் முழுமையாக சரணடையும்போது, ஆறறிவுள்ள மனிதனுக்குத்தான் எவ்வளவு சந்தேகங்கள்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# ஜங்கம குருவுக்கு மோக்ஷம்

அக்கல்கோட்டிலிருந்து எட்டு யோஜனை தூரத்தில் சித்தன்கேரி என்றொரு ஊர் இருக்கிறது. அந்த ஊரில் ஜங்கம ஜாதியினரின் குருவான சித்தப்பா (த்த-*dhdha*) வசித்து வந்தார். அவர் அங்கு ஒரு ஆசிரமத்தை ஏற்படுத்தியிருந்தார். அந்த ஆசிரமத்தில் பசு, எருமை, குதிரை மற்றும் யானை போன்ற பிராணிகள் வளர்க்கப்பட்டன. மேலும் சித்தப்பா மிகச்சிறந்த பக்திமான். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழைக் கேள்விப்பட்டு அவரை தரிசனம் செய்வதற்காக ஒரு பல்லக்கில் தன் பக்தர்களுடன் அக்கல்கோட் வந்து அங்கிருக்கும் ஜங்கம ஆசிரமத்தில் தங்கினார். அவர் வருகை புரிந்த அன்று ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஊருக்கு வெளியே உள்ள ஜங்கம ஆசிரமத்தில் தங்கியிருந்தார்.

ஜங்கம குரு ஸ்நானம் செய்துவிட்டு, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக தன் இருப்பிடத்திலிருந்து நடந்தே வந்தார். ஸ்ரீ ஸ்வாமியின் தேஜஸ்வியான உருவத்தைக் கண்டவுடன் அவருடைய அஞ்ஞானம் அனைத்தும் விலகி ஞானக் கொழுந்தாக மாறினார். அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புகழை ஆடிப் பாடினார். அவர் ஆடிக்கொண்டிருக்கும் போது ஆனந்தப் பெருக்கில் திடீரென ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களைப் பற்றிக் கொண்டு, **"மஹராஜ், இன்று என்னுடைய அபிலாஷைகள் அனைத்தும் நிறைவேறிவிட்டன. உங்கள் தரிசனத்தால் தன்யன் ஆனேன். இந்த குருத்துவத்தை வைத்துக்கொண்டு நான் என்ன செய்வது? மஹராஜ், எனக்கு உங்கள் பாதங்களைத் தவிர வேறு எதுவும் வேண்டாம்"** என்று பணிவுடன் கூறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமிக்கு முன்னால் எழுந்து நின்றார். மாலை ஆகியும் தண்ணீர் கூட அவருடைய உதட்டில் படாமல் ஸ்ரீ ஸ்வாமியின் தரிசனத்தில் திளைத்துக் கொண்டிருந்தார். இவர் பட்டினியாக இருப்பதால்,அவருடைய சீடர்களும் உணவேதும் எடுத்துக் கொள்ளவில்லை. கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமி, **"நான் உனக்கு ரொட்டி அளிக்கிறேன். உன்னால் அதை ஜீரணம் செய்ய முடியுமா?"** என்று கேட்டதற்கு **"மஹராஜ், நீங்கள் அளிக்கும் அனைத்தையும் நான் மட்டுமல்ல அனைத்து ஜீவராசிகளாலும் ஜீரணம் செய்ய முடியும்"** என்று சித்தப்பா கூறினார்.

அச்சமயத்தில் ஒரு ஆட்டிடையனை ஸ்ரீ ஸ்வாமி அழைத்து, **“உன்னிடம் ரொட்டி இருந்தால் இங்கு கொண்டு வா”** என்று கூறினார். அவன் தன்னிடம் இருந்த ரொட்டியை ஸ்ரீ ஸ்வாமிக்கு முன்னால் வைத்தவுடன் ஸ்ரீ ஸ்வாமி அதை எடுத்து சித்தப்பாவிடம் அளித்தார். ஜங்கமர்கள் சிவபக்தர்கள். அவர்கள் வேற்று ஜாதியினர் அளிக்கும் உணவையோ அல்லது தண்ணீரையோ தொடக்கூட மாட்டார்கள். இருப்பினும் சித்தப்பா எந்தவித மறு யோசனையும் இல்லாமல், ஸ்ரீ ஸ்வாமி அளித்த பிரசாதத்தை எடுத்துக் கொண்டார். தான் ஆசிரமத்தின் குரு என்கிற பெருமை அவரிடமிருந்து அன்று விலகிவிட்டது. அவர் ஒரு பிரம்ம ஸ்வரூபமாக மாறியிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி அவரை அருகில் அழைத்து, **“நீ உன் ஊருக்குச் சென்றபின் பிரம்மத்தை முழுமையாக உணரும் அனுபவத்தைப் பெறுவாய். பற்றற்றவனாக இரு. அனைவரிடமும் எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாமல், உன் இனிமையான பேச்சுக்களால் அனைவருக்கும் சந்தோஷத்தைக் கொடு”** என்று கூறி ஆசி வழங்கினார்.

இவ்வாறு சித்தப்பா ஆசீர்வதிக்கப்பட்டு, தன் அகம்பாவம் அனைத்தையும் துறந்து மோக்ஷ கதியை அடைந்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சித்தப்பாவுக்கு கூறிய அறிவுரையை நாமும் பின்பற்றி, முழு நிறைவான வாழ்க்கையை வாழ்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 194

## பரிக்ஷை

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பீமா நதிக்கரையில் அமைந்துள்ள கேத் என்னும் ஊருக்கு சென்றிருந்தார். அங்கு மிகவும் பிரசித்தி பெற்ற எல்லம்மா தேவி கோவிலில் தன் பக்தர்களுடன் தங்கியிருந்தார். அந்த ஊரில் ராமசார்யா மற்றும் சீதாராமச்சார்யா என்கிற வேத பண்டிதர்கள் இருந்தனர். மனூர் என்கிற ஊரின் கிராமத் தலைவரான அப்பா சாஹெப் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தர். அவர் மிகுந்த பக்தி சிரத்தையுடன் ஸ்ரீ ஸ்வாமியை வணங்கிவிட்டு

அவருடைய பாத தீர்த்தத்தை எடுத்து தன் குடும்பத்தினருக்கு அளித்தார். இதை கவனித்துக் கொண்டிருந்த இரு வேத பண்டிதர்களும், **"இங்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது? இவரென்ன சந்நியாசியா! அவருக்கு ஜாதி, கோத்திரம் போன்ற எதுவுமே கிடையாது. அவர் நினைத்த இடங்களிலெல்லாம் சாப்பிடுகிறார். ஒரு கிராமத்தின் தலைவர் இவரைப் போய் வணங்குவது சரியா? அவர் கண்டிப்பாக தாழ்த்தப்பட்டவராகத்தான் இருக்க வேண்டும். கண்டிப்பாக அவருடன் எவரும் தொடர்பில் இருக்கக் கூடாது"** என்று பேசிக் கொண்டனர்.

அந்த பண்டிதர்களுள் ஒருவரான சீதாராமச்சார்யா, **"எதையும் சோதனை செய்யாமல் முடிவுக்கு வர வேண்டாம். நாம் அந்த யதிக்கு ஒரு பரிக்ஷை வைக்கலாம். பின்னர் முடிவு செய்து கொள்ளலாம்"** என்று யோசனை கூறினார். **"எப்படி?"** என்று ராமச்சார்யா கேட்டதற்கு, **"நீ பாகவதம், பகவத்கீதை போன்றவற்றிலிருக்கும் மிகவும் கடினமான ஸ்லோகங்களை அதன் அர்த்தத்துடன் உன் மனதுக்குள் ஓது, அதன் மீதிப் பகுதியை அவர் விளக்கங்களுடன் கூறினாரானால் அவரை அவதாரம் என்று ஏற்றுக்கொண்டு, அவருடைய பாத தீர்த்தத்தை பிரசாதமாக எடுத்துக் கொள்வதில் எந்த தவறும் இல்லை என்று முடிவு செய்து கொள்ளலாம்"** என்று முடிவு செய்தனர். அவதாரமாக இருப்பினும் சோதனைகளுக்கு உட்பட வேண்டித்தானே இருக்கிறது!

அடுத்தநாள் காலையில் இருவரும் எல்லம்மா கோவிலுக்குச் சென்றனர். அங்கு மைந்தர்கியின் ஜமீன்தார் ஹூக்காவை தயார் நிலையில் வைத்துக் கொண்டு காத்திருந்தார். மஹராஜ் துயிலெழுந்து அமர்ந்து கொண்டவுடன் ஜமீன்தார் ஹூக்காவை ஶ்ரீ ஸ்வாமிகளிடம் அளித்தார். மஹராஜ் அவரிடம், **"இன்று நீ முதலில் புகைத்துவிட்டுக் கொடு. என்னை சோதனை செய்வதற்காக ஒரு கூட்டம் வந்திருக்கிறது"** என்று கூறினார். பண்டிதர்கள் அனைவரும் ஶ்ரீ ஸ்வாமிகளின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு சுவற்றுக்கு மறுபக்கம் நின்றுகொண்டிருந்தனர். வந்திருந்தவர்கள் ஶ்ரீ ஸ்வாமியை இன்னும் நேரில் சந்திக்கவோ அல்லது அவரிடம் ஆசீர்வாதம் பெற்றுக்கொள்ளவோ இல்லை. ஆனால் அவர்களுடைய நீச புத்தியை அறிந்து கொண்ட ஶ்ரீ ஸ்வாமி, ரிக் வேதத்திலிருந்து கடினமான ஸ்லோகத்தையும், பாகவத்திலிருந்து சில ஸ்லோகங்களையும், பகவத் கீதையிலிருந்து சில ஸ்லோகங்களையும் ஓதிவிட்டு, யோக ரகசியத்தை விளக்கிவிட்டு, பின்னர் உபநிஷத், யஜுர்வேதம் மற்றும் சாம வேதத்திலிருந்து சில மந்திரங்களை உச்சாடனம் செய்தார். அனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்த பண்டிதர்கள் அனைவரும் திக்குமுக்காடிப் போயினர்.

தங்களை தாங்களே கன்னத்தில் அறைந்து கொண்டனர். ராமச்சார்யாவின் அகம்பாவம் முற்றிலுமாக நீங்கி விட்டது. அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதங்களில் விழுந்து வணங்கிவிட்டு, **"மஹராஜ், நீங்கள் ஒரு மஹா அவதாரம் என்பதில் எந்தவித மாற்றுக் கருத்தும் இல்லை"** என்று கூறிவிட்டு, அனைவரும் ஸ்ரீ ஸ்வாமியுடைய பாத தீர்த்தத்தை பிரசாதமாக ஏற்றுக் கொண்டு, அவருடைய புகழை வாயாரப் பாடினர்.

ஒரு தாய் தன் குழந்தை அறியாமையில் செய்யும் தவறை உடனடியாக மன்னித்து விடுவாள். அவள் அக்குழந்தைக்கு புத்திமதி கூறி நல்வழிப்படுத்து வதிலேயே முனைப்பாக இருப்பாள். தாயுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பக்தர்களிடம் அப்படித்தானே நடந்து கொள்வார்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 195

# வருமானத்துக்கு வழி

மொஹலாய் மாவட்டத்தில் உள்ள கெஜலெ என்கிற ஊரில் கோவிந்தராவ் மொஹிதே வசித்து வந்தார். அவருக்குப் பல நாட்களாக குழந்தை பாக்கியம் இல்லாமல் இருந்தது. பின்னர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அனுக்கிரகத்தினால் அவருக்கு குழந்தை பாக்கியம் கிடைத்தது. கோவிந்தராவ் ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்திருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமிக்கு நமஸ்காரம் செய்துவிட்டு, **"மஹராஜ், என்னுடைய குடும்பம் இப்போது வளர்ந்துவிட்டது, ஆனால் வருமானம் மிகவும் குறைவாகவே உள்ளது. என்ன செய்வது? கௌரவத்துடன் வாழ்க்கையை நகர்த்துவது குறித்து எனக்கு மிகவும் கவலையாக இருக்கிறது"** என்று வருத்தத்துடன் தன் மனக்கவலைகளை ஸ்ரீ ஸ்வாமியிடம் சமர்ப்பித்தார். **"உன் விளைநிலத்தில் ஒரு கிணறு வெட்டி, கரும்பு மற்றும் மஞ்சளை பயிர் செய்"** என்று வழிகாட்டினார். **"ஸ்வாமி நான் கிணறு வெட்டினேன், ஆனால் தண்ணீர் கிடைக்கவில்லை"** என்று கோவிந்தராவ் கூறியதற்கு, **"உன் விளைநிலத்தில் இருக்கும் அத்திமரம்,**

**அரசமரம் மற்றும் இச்சி மரத்துக்கு நடுவே தோண்டினால் தண்ணீர் கிடைக்கும்"** என்று கூறி அருளினார்.

கோவிந்தராவ் தன் ஊருக்குச் சென்று ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியவாறே கிணறு தோண்டினார். ஆனால் அவருக்கு ஏமாற்றம்தான் மிஞ்சியது. உடனே அவர் அக்கல்கோட் கிளம்பி வந்து ஸ்ரீ ஸ்வாமிகளிடம், **"மஹராஜ், உங்கள் ஆணைப்படியே நீங்கள் கூறிய இடத்தில் கிணறு தோண்டினேன். ஆனால் தண்ணீர் கிடைக்கவில்லை"** என்று வருத்தத்துடன் தெரிவித்தார். **"ஏய்! கருப்பு யானையின் தலையை உடைத்து நொறுக்கு. உனக்கு ஏராளமான தண்ணீர் கிடைக்கும்"** என்று கூறினார். ஸ்ரீ ஸ்வாமியின் வார்த்தைகளை கோவிந்தராவால் புரிந்துகொள்ள முடியவில்லை. **"மஹராஜ், யானையின் தலை என்றால் என்ன?"** என்று அவர் வினவியதற்கு ஸ்ரீபாத பட் பதிலளித்தார். **"அத்தி மரத்திற்கு அருகில் யானையின் தலையைப் போன்ற ஒரு கருப்பு நிறத்தில் ஒரு கல் இருக்கிறது. அதை உடைத்தால் உங்களுக்கு தண்ணீர் கிடைக்கும் என்று ஸ்ரீ ஸ்வாமி கூறுகிறார்"** என்று விவரித்தார்.

மிகுந்த மகிழ்ச்சியுடன் கோவிந்தராவ் தன் விளைநிலத்துக்குச் சென்று அந்த கல்லை உடைத்தவுடன், தண்ணீர் யானையின் துதிக்கையிலிருந்து வருவது போல பிரவாகம் எடுத்தது. கோவிந்தராவும் அங்கு சுற்றியிருந்த மற்றவர்களும் ஆச்சரியம் அடைந்தனர். ஸ்ரீ ஸ்வாமியின் கருணையால் கோவிந்தராவுக்கு நல்ல விளைச்சல் கிடைத்தது. வருமானம் பெருகியதால் அவரால் நிம்மதியுடன் குடும்பத்தை நிர்வகிக்க முடிந்தது.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் பக்தர்கள் ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் ஒரு அங்கமாகவே திகழ்ந்து வந்தார்/வருகிறார். சிறு சிறு இன்னல்களுக்குக் கூட அவர்கள் வேறு எவரையும் அடைக்கலம் தேடுவதில்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் எந்தவித சலிப்பும் இல்லாமல் அனைவருடைய அற்பமான இன்னல்களைக் கூட காதாரக் கேட்டு, தீர்த்து வைத்துக் கொண்டிருந்தார். அவரவர்களுடைய நிலைக்கு ஏற்றாற் போலத்தானே பிரார்த்தனைகளும் இருக்கும்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 196

# சங்கேஸ்வர் சங்கராச்சாரியார்

ஒருமுறை சங்கேஸ்வர் மடத்தைச் சேர்ந்த சங்கராச்சாரியார் அக்கல்கோட் வருகை புரிந்திருந்தார். அவரை மாலோஜிராவ் ராஜே முறையாக சோடச உபசாரங்கள் செய்து வரவேற்றார். சங்கராச்சாரியாருடன் மெத்த படித்த வேத ஞானிகள், ஜோதிடக்கலை நிபுணர்கள் ஆகியோர் வந்திருந்தனர். அவர்கள் அனைவருக்கும் விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த விழாவில் கலந்து கொள்வதற்காக ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் சோளப்பாவும் வந்தனர். ஸ்ரீ ஸ்வாமியை அங்கு எவரும் மரியாதையாக நடத்தாமல், **"இந்த சந்நியாசி எங்கு வேண்டுமானாலும் சாப்பிடுவார். அதனால் அவருக்கு வெளியே தனியாக உணவு பரிமாற வேண்டும்"** என்பது போன்று ஏதேதோ கிசுகிசுத்தனர். அனைவரும் உணவுக்காக அமர்ந்தனர். நல்ல சுவையான உணவுகள் பரிமாறப்பட்டன. அப்போது ஒரு ஆச்சரியம் நடந்தது. பரிமாறப்பட்ட உணவுகள் அனைத்தும் புழுக்களாக மாறியிருந்தன. சங்கராச்சார்யரும் மற்ற பிராமணர்களும் எதுவும் புரியாமல் திடுக்கிட்டனர். அப்போது ஒரு வயதான பிராமணர், **"ஸ்ரீ தத்தாத்ரேயருக்கு அவமானம் நிகழ்ந்துவிட்டது. அதனால்தான் இவ்வாறு நடைபெறுகிறது"** என்று கூறினார்.

இதைக் கேட்டவுடன் ஆச்சாரியர் தன் ஆசனத்தை விட்டு எழுந்து வந்து ஸ்ரீ ஸ்வாமிகளிடம் வந்து, **"மஹராஜ், தயவுசெய்து எங்களை மன்னித்துவிடுங்கள். நீங்கள் இந்த ஜகத்திற்கே குரு. நான் மிகப்பெரிய நிலையில் இருப்பதாக எண்ணிக் கொண்டு உங்களை அவமதித்து விட்டேன். தயவுசெய்து எங்களை மன்னித்து விட்டு, ஆசனத்தை ஏற்றுக் கொள்ளுமாறு தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்"** என்றார். **"நான் ஒரு தாழ்ந்த சந்நியாசி என்றால் உங்களுடன் இருக்கும் மூன்று பண்டிதர்கள் யார் என்று உங்களுக்குத் தெரியுமா? அவர்களுடைய இஸ்லாமியத் தந்தையைப் பற்றி நீங்கள் அவர்களிடமும் அவர்களுடைய தாயிடமும் கேளுங்கள். நீங்களே இவ்வாறு நடந்து கொள்வது நியாயமா? தலையை மழித்துக் கொண்டால் இவர்கள் ஞானிகள் ஆகிவிட முடியுமா? அப்படியென்றால் மெத்த படித்தவர்களின் நிலைதான் என்ன?"** என்று கேள்விகளை அடுக்கினார்.

அனைவருக்கும் பெருத்த அவமானமாக இருந்தது. தங்கள் தலைகளை தாழ்த்திக் கொண்டு நின்றுகொண்டிருந்தனர். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின்

பாதங்களைப் பற்றிக் கொண்டு தங்களை மன்னிக்குமாறு மன்றாடினர். கருணாமூர்த்தியான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அனைவரையும் மன்னித்ததன் அடையாளமாக பரிமாறப்பட்ட உணவுகள் அனைத்தும் ருசியான பதார்த்தங்களாக மாறியிருந்தன. அனைவரும் மிகுந்த சந்தோஷத்துடன் ருசித்து சாப்பிட்டனர். அனைவரும் தக்ஷிணை மற்றும் தாம்பூலத்தைப் பெற்றுக் கொண்டு, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு ஜய கோஷம் எழுப்பினர். ஆச்சார்யரும் ஸ்ரீ ஸ்வாமியிடம் அனுமதி பெற்றுக் கொண்டு விடைபெற்றுச் சென்றார்.

அகம்பாவம் என்னும் எமன் நம்முடன் இருக்கும் வரை குருவின் கருணையைப் பெறுவதற்கு சாத்தியமே இல்லை. அனைவரையும் சரி சமமாக மதித்து, நமக்கு கிடைத்திருக்கும் நல்வாழ்க்கைக்கு நன்றி தெரிவித்து வாழப் பழகிக் கொண்டால், குருவின் கருணையை இந்த உலகத்தில் மட்டுமல்லாமல், அனைத்து உலகங்களிலும் பெறலாம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 197

# பக்தவத்சலன்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பக்தர்களுக்காகவே பிறவி எடுத்து வந்தவர். அவர் அனுப்பொழுதும் பக்தர்களின் நலனையே கருத்தில் கொண்டு லீலைகள் புரிந்து கொண்டிருந்தார். பக்தர்களை நல்வழிப்படுத்தி, அவர்களை கர்ம பந்தங்களிலிருந்து விடுவிப்பது மட்டுமல்லாமல், அவர்களுடைய சிறுசிறு விருப்பங்களையும் நிறைவேற்றி எப்போதும் தன் நிழலிலேயே தாயைப்போல பாதுகாத்து வந்தார்/வருகிறார். இந்த அத்தியாயத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் லீலைகள் சிலவற்றை கதம்பமாகப் பார்க்கலாம்.

### 1. காவல்கார நாகங்கள்

ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அக்கல்கோட்டுக்கு வெளியே உள்ள ஸ்ரீ ராமச்சந்திரரின் கோவிலில் வெகு நேரத்திற்கு இருந்தார். பின்னர் ஒரு மாமரத்தின் கீழ் சென்று அமர்ந்தார். அங்கு ஒரு சுத்தமான நீருடன் ஒரு

குளம் இருந்தது. அப்போது அவருடன் இருந்த சீடர்கள் அனைவரும், **"மஹராஜ், இங்கு சமைப்பதற்கான வசதிகள் இல்லை. மேலும் விளக்கை ஏற்றினால் காற்றில் அணைந்து கொண்டே இருக்கிறது. என்ன செய்வதென்று தெரியவில்லை. தயவுசெய்து அக்கல்கோட்டுக்கு கிளம்புங்கள்"** என்று மன்றாடிக் கேட்டுக் கொண்டனர். **"என்னுடைய மகள் வரவேண்டும்"** என்று ஸ்ரீ ஸ்வாமி பதிலளித்தார். அங்கிருந்தவர்கள் எவருக்கும் ஸ்ரீ ஸ்வாமியின் வார்த்தைகளை புரிந்து கொள்ள முடியவில்லை. **"உங்கள் அனைவரையும் திருடனிடமிருந்து பாதுகாக்க நான்கு நாகங்களை நியமித்திருக்கிறேன்"** என்று மீண்டும் ஸ்ரீ ஸ்வாமி கூறினார். இவ்வாறு கூறிவிட்டு ஸ்ரீ ஸ்வாமி உறங்கிவிட்டார். சேவகர்களும் உறங்கிவிட்டனர்.

நள்ளிரவு ஆனது. சில திருடர்கள் அனைவருடைய பொருட்களையும் களவாட வந்தனர். காவலுக்கு இருந்த நான்கு நாகங்களும் அவர்களை துரத்திக் கொண்டு சென்றன. திருடர்கள் பயத்தில் ஓடி விட்டனர். சேவகர்கள் அனைவரும் திருடர்களின் நடமாட்டத்தால் விழித்துக் கொண்டனர். விளக்கை ஏற்றி பார்த்தபோது, அங்கு நான்கு நாகங்கள் இருந்தன. அனைவரும் ஸ்ரீ ஸ்வாமிக்கு ஜயஜய கோஷம் எழுப்பி ஆனந்தம் அடைந்தனர்.

## 2. அறுபது வயது ஜமீன்தாருக்கு புத்திர பாக்கியம்

மொஹலாயில் அப்துல்பூர் என்றொரு ஊர் உள்ளது. அந்த ஊரின் ஜமீன்தாரான தேஷ்பாண்டேவுக்கு அறுபது வயதாகியும் புத்திர பாக்கியம் இல்லை. அவர் தன் இரு மனைவிகளுடன் கானகாபூரில் சேவைகள் செய்து கொண்டிருந்தபோது அவருக்கு ஒரு கனவு தோன்றியது. **"நான் உலகத்தை உயர்த்துவதற்காக அக்கல்கோட்டில் யதியின் உடையில் வாசம் செய்து கொண்டிருக்கிறேன். அங்கு சென்றால் உன் பிரார்த்தனைகள் அனைத்தும் நிறைவேறும்"** என்று உணர்த்தப்பட்டது. இவ்விஷயத்தை அவர் தன் மனைவிகளிடம் தெரிவித்துவிட்டு, ஸ்ரீ குருவுக்கு நைவேத்தியம் படைத்துவிட்டு, பிராமண போஜனத்திற்கு ஏற்பாடு செய்தார். பின்னர் அக்கல்கோட் பயணம் மேற்கொண்டார். அவர் அக்கல்கோட் சென்றடைந்தபோது, ஸ்ரீ ஸ்வாமி பகவத் தச்சரின் இல்லத்தில் இருந்தார். ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்தவுடன், அவர் ஒரு அவதாரம் என்பதை தேஷ்பாண்டே உணர்ந்து கொண்டார். தன் இரு மனைவிகளுடன் ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு நின்றுகொண்டிருந்தார். **"நீ நூறு ரூபாய் கொடுத்தால் கத்திரிக்காய் கிடைக்கும், ஆயிரம் ரூபாய் கொடுத்தால் யானை கிடைக்கும்"** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறினார்.

ஸ்ரீ ஸ்வாமி தேங்காயை தேஷ்பாண்டேயின் முதல் மனைவியிடம் கொடுத்து அதை இரண்டாமவளின் முந்தானையில் போடச் சொன்னார். மூவரும் ஸ்ரீ ஸ்வாமியை மனதார வணங்கிவிட்டு, பிராமண போஜனம் அளித்துவிட்டு சொந்த ஊருக்குச் சென்றுவிட்டனர். சிலநாட்களுக்குப் பிறகு தேஷ்பாண்டேவுக்கு இரண்டு மகன்களும், இரண்டு மகள்களும் பிறந்தனர். சில வருடங்களில் தேஷ்பாண்டே முழு நிறைவுடன் இயற்கை எய்தினார்.

### 3. பால்காரனுக்குக் கிடைத்த தண்டனை

அது மக மாதம். குரு ப்ரதிபாடா நெருங்கிக் கொண்டிருந்தது. பால் விலை இருமடங்காக அதிகரித்திருந்தது. மல்லு கவாலி என்கிற பால்காரன் பாலின் விலையை அதிகரித்தது மட்டுமல்லாமல், அதிகப்படியான தண்ணீரையும் கலந்து வியாபாரம் செய்தான். மேலும் பால் கெட்டுப்போய் கொண்டிருந்ததால், மக்கள் அனைவரும் தவித்திக் கொண்டிருந்தனர். அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி மஹராஜிடம் தாங்கள் படும் இன்னல்களைப் பற்றி முறையிட்டனர். அவ்வாறு முறையிட்ட உடனேயே மல்லு கவாலியுடைய 15-20 எருமைகள் எவரையும் அருகில் நெருங்க அனுமதிக்கவில்லை, மேலும் காம்புகளிலிருந்து பாலுக்கு பதிலாக ரத்தம் வெளியே வந்தது. பால்காரன் பயந்து நடுங்கிக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் அடைக்கலம் அடைந்தான். தான் செய்த தவறுக்காக மன்னிக்குமாறு மன்றாடிக் கேட்டுக் கொண்டான். கருணாமூர்த்தி சிரித்துக் கொண்டே, **“போ, எல்லாம் சரியாகிவிடும்”** என்று கூறியருளினார். பின்னர் அவன் ஸ்ரீ ஸ்வாமியின் தீர்த்தத்தையும், விபூதியையும் எருமையின் காம்புகளில் தடவியவுடன் ரத்தத்துக்கு பதிலாக பால் வெளிவரத் தொடங்கியது. பின்னர் அவன் தினமும் 1 லிட்டர் பாலை ஏழை எளியவர்களுக்கு தானமாக அளிக்கத் தொடங்கினான். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருள் அவனை புண்ணியவான் ஆக்கிவிட்டது!

### 4. ஸ்ரீபாத பட்டின் பக்தி

ஒரு அஸ்வினி மாதத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் சேவகர்கள் புடைசூழ சந்திரபாகா நதிக்கரையில் அமைந்துள்ள மனூர் என்கிற ஊருக்குச் சென்றார். அது மழைக்காலம் என்பதால் நதியில் வெள்ளம் பெருக்கெடுத்திருந்தது. அப்போது சோளப்பா, ஸ்ரீபாத பட் போன்ற சேவகர்கள் ஸ்ரீ ஸ்வாமியுடன் இருந்தனர். சோளப்பா ஸ்ரீ ஸ்வாமியிடம், “மஹராஜ், சமைப்பதற்கு தேவையான மளிகைப்பொருட்கள் எதுவும் இல்லை. என்ன செய்வது?” என்று கேட்டவுடன்,

“நதியை கடந்து செல்வது சிரமம்தான். படகுகளும் அக்கரையில் இருக்கின்றன, யார் அக்கரைக்குச் சென்று படகுகளைக் கொண்டு வருவார்கள்?” என்று ஸ்ரீ ஸ்வாமி கேட்டார். **“நதியைக் கடந்து செல்ல நம்மிடம் பாதுகாப்பு கவசம் எதுவும் இல்லை. இந்த வெள்ளத்தில் நதியில் இறங்குவது தற்கொலைக்குச் சமம்”** என்று சோளப்பா கூறினார். ஸ்ரீ ஸ்வாமி சிரித்துக் கொண்டே, **“நம் குண்டு பண்டிட் சென்றால் கண்டிப்பாக படகைக் கொண்டு வந்துவிடுவான்”** என்று கூறினார். ஸ்ரீ ஸ்வாமி ஸ்ரீபாத பட்டை குண்டன் என்று அழைப்பார். ஸ்ரீ ஸ்வாமி ஆணையிட்ட அடுத்த நொடியே எந்தவித மறு-யோசனையும் இல்லாமல், ஸ்ரீபாத பட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி உண்டாகட்டும் என்று கூறிக்கொண்டே வெள்ளத்தில் குதித்தார். இதுவல்லவோ பக்தி! சரணாகதி! மற்ற சேவகர்கள் அனைவரும் பயந்து கொண்டே, “மஹராஜ், தயவுசெய்து ஸ்ரீபாத பட்டை பத்திரமாக கொண்டுவந்து சேர்த்து விடுங்கள்” என்று பிரார்த்தனை செய்து கொண்டனர். **“அவனால் எப்படி சாக முடியும்? சிறிது நேரத்தில் படகுடன் வந்துவிடுவான்”** என்று கூறினார். ஸ்ரீ ஸ்வாமியின் நாமத்தை நினைத்துக் கொண்டே ஸ்ரீபாத பட் அக்கரையை அடைந்து படகுடன் வந்தார். அனைவருடைய ஆச்சரியத்திற்கும் எல்லையே இல்லை.

### 5. காலரா நோய்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் மனூரில் தங்கியிருந்த போது, அங்கு காலராவின் தாக்கம் அதிகமாக இருந்தது. தினமும் பதினைந்திலிருந்து இருபது பேராவது இறந்து கொண்டிருந்தனர். அந்த கிராமத்தின் தலைவர் ஸ்ரீ ஸ்வாமியை சந்தித்து, **“என்னுடைய மகன் மரணப் படுக்கையில் இருக்கிறான். தயவுசெய்து அவனுக்கு உயிர்ப்பிச்சை அளியுங்கள் ஸ்வாமி..”** என்று கதறியவாறு பிரார்த்தனை செய்து கொண்டார். அவர் மீது மிகுந்த இரக்கம் கொண்டு, ஸ்ரீ ஸ்வாமி அவருடைய வீட்டுக்குச் சென்று அவர் வீட்டு தாழ்வாரத்தில் அமர்ந்து கொண்டார். சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிகளிடம், “மஹராஜ், அவருடைய மகன் இறந்து கொண்டிருக்கிறான். நாம் உடனடியாக கிளம்ப வேண்டும்” என்று கூறி துரிதப்படுத்தினார். உடனே ஸ்ரீ ஸ்வாமி, **“அவன் எங்கு இறந்து கொண்டிருக்கிறான்? அவன் உடல் முழுவதும் வேம்பு இலையை அரைத்து தடவிவிட்டு, அதை சிறிது அவனுடைய வாயிலும் போடுங்கள்”** என்று கூறினார். உடனே அவ்வாறு செய்யப்பட்டது. அந்த சிறுவனின் உடலில் அசைவுகள் தென்பட்டது. அவன் மெதுவாக தன் கண்களைத் திறந்து பார்த்தான். கிராமத் தலைவரின் குடும்பத்தினர் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை.

அடுத்த நாள் அவர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு நைவேத்தியம் படைத்துவிட்டு, பிராமணர்களுக்கு போஜனம் ஏற்பாடு செய்தார். இந்த நிகழ்ச்சி நடைபெற்ற அடுத்த நாளில் இருந்து, அந்த ஊரில் காலராவின் தாக்கம் குறையத் தொடங்கியது.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருள் இருந்தால் எது வேண்டுமானாலும் சாத்தியமாகும். அவர் நினைத்தால் இந்த பிரபஞ்சத்தை உருவாக்கவும் முடியும், நிர்மூலம் ஆக்கிவிடவும் முடியும். இதை முழுமையாக உணர்ந்து கொண்டவர்கள் பாக்கியசாலிகள்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 198

# பேராசை

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் பிரார்த்தனை செய்து கொண்டு, அவற்றை நிறைவேற்ற விரும்பாத இருவருக்கு என்ன நடந்தது என்பதைப் பற்றி இந்த அத்தியாயத்தில் பார்க்கலாம்.

### 1. சொத்து பிரச்சனை

கோபால் மற்றும் மாருதி என்கிற சகோதரர்கள் மொஹலாய் மாவட்டத்தில் உள்ள நல்துர்கா எனும் ஊரைச் சேர்ந்தவர்கள். அவர்களுடைய மாற்றாந்தாயுடைய மகனுக்கும், இந்த இரு சகோதரர்களுக்கும் இடையே சொத்து பிரச்சனை இருந்தது. ஒருமுறை அவர்களுக்குள் பிரச்சனை அதிகமாக இருந்த போது மூன்றாவது மகன் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் பின்வருமாறு பிரார்த்தனை செய்து கொண்டான். **"மஹராஜ், சொத்தில் பாதி பாகம் எனக்குக் கிடைத்தால், அதில் 25% பகுதியை உங்களுக்கு தானமாக அளிக்கிறேன்"** என்பதே அந்த பிரார்த்தனை. அவனுடைய விருப்பம் போலவே ஸ்ரீ ஸ்வாமியின் அனுக்கிரகத்தினால் சொத்தின் பாதி பாகம் அவனுக்குக் கிடைத்தது. ஆனால் அவனுக்கு பிரார்த்தனையை நிறைவேற்றுவதற்கு விருப்பம் இல்லை. பலரும் இவ்வாறு நடந்து கொள்வது சரியல்ல என்று அவனுக்கு அறிவுரை வழங்கினர்.

இருப்பினும் அவன் எவருடைய வார்த்தைகளுக்கும் சிறிதளவு கூட மதிப்பளிக்காமல் கஞ்சத்தனத்துடன் நடந்து கொண்டான். ஒருவரின் கர்மவினை தீமையாக இருப்பின், அவர்கள் எவருடைய அறிவுரையையும் கேட்கும் நிலையில் இருப்பதில்லை. அதற்குண்டான பலனை அவர்கள் அனுபவித்துத்தான் தீர வேண்டும்.

இந்த கஞ்சன் பயத்தின் காரணமாக தன் பணத்தை பூமிக்குக் கீழ் புதைத்து வைத்தான். தன்வினை தன்னைச் சுடும் என்பதற்கேற்ப, புதைத்து வைத்த அனைத்தும் கரியாக மாறியது. என்ன செய்வதென்று தெரியாமல் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அடைக்கலம் அடைய அக்கல்கோட் வந்தடைந்தான். நடந்தவைகள் அனைத்தையும் விவரித்துவிட்டு தன்னை மன்னிக்குமாறு கேட்டுக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதத்தில் விழுந்து வணங்கினான். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சிரித்துக் கொண்டே, **"உன் ஆசைப்படி கடவுள் உனக்கு செல்வதை அளித்தார். ஆனால் அவரே அவற்றை எடுத்துக் கொண்டுவிட்டார். உனக்கு அளிப்பதற்கு என்னிடம் எதுவுமில்லை. உன் பிரார்த்தனை எவ்வழியோ அதன் பலன்களும் அவ்வழியே! நீ இப்போது உன் வீட்டுக்கு கிளம்பலாம்"** என்று திட்டவட்டமாகக் கூறிவிட்டார். அவன் மிகுந்த வருத்தத்துடன் கிளம்பினான்.

## 2. ஸ்ரீ மோரேஸ்வர் ஹரிநாகர்

பர்கான்பூர் என்கிற ஊரைச் சேர்ந்த ஸ்ரீ மோரேஸ்வர் ஹரிநாகர் இந்தோரை சேர்ந்த ஒருவரிடம் வேலை செய்து கொண்டிருந்தார். அவர் தன் முதலாளியை ஏமாற்றி செல்வங்களை அபகரித்தார். அதன் காரணமாக பல கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டிருந்தார். ஒருமுறை அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம், தன் கஷ்டங்கள் அனைத்தும் தீர்ந்துவிட்டால், ஐம்பது ரூபாய் செலவு செய்து பாதுகைகளுக்கு வெள்ளிக் காப்பு செய்வதாக பிரார்த்தனை செய்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமியின் கருணையால் அனைத்து கஷ்டங்களிலிருந்தும் விடுபட்டு சந்தோஷமாக வாழத் தொடங்கினார். தன் பிரார்த்தனையை நிறைவேற்ற வேண்டும் என்கிற நிலை உண்டான போது அவருக்கு மனம் மாறியது. பின்னர் அவர் அக்கல்கோட் வந்து அனைவரிடமும், **"நான் ஸ்ரீ ஸ்வாமிக்கு பிரார்த்தனை செய்து கொண்டேன். ஆனால் அவர் அதை நிறைவேற்றும்படி கேட்கும்வரை நிறைவேற்றப் போவதில்லை"** என்று பெருமையுடன் கூறினார்.





மூன்று மாதங்களுக்குப் பிறகு அவர் ஸ்ரீ ஸ்வாமிக்கு அருகில் அமர்ந்துகொண்டு, தன் தொழிலைப் பற்றி பெருமையுடன் பேசிக் கொண்டிருந்தார். அப்போது ஸ்ரீ ஸ்வாமி, **"கடவுளின் பணத்தை சாப்பிட்டுக் கொண்டு இது போன்ற கதைகளை கூறிக் கொண்டிருக்கிறாயா? உனக்கு வெட்கமாக இல்லை! முட்டாளே!"** என்று கோபத்துடன் வசை பாடினார். இது போன்ற வார்த்தைகளை கேட்பதற்கு இறந்து விடலாம் என்று மோரேவுக்குத் தோன்றியது. அவர் உடனே ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களைப் பற்றிக் கொண்டு, தன்னை மன்னிக்குமாறு கேட்டுக் கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதுகைகளை எடுத்துக் கொண்டு புனேவுக்குச் சென்று அவற்றிக்கு வெள்ளிக்காப்பு செய்து, ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சமர்ப்பணம் செய்தார். பின்னர் பிராமணர்களுக்கு போஜனம் அளித்துவிட்டு, **"மஹாராஜ், எனக்கு வாரிசு இல்லாமல் கஷ்டம் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். தயவு செய்து எனக்கு புத்திரபாக்கியம் அருள் புரியுங்கள்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். உடனே ஸ்ரீ ஸ்வாமி அவருக்கு ஒரு தேங்காயை அளித்தார். ஒரு வருடத்தில் அவருக்கு மகன் பிறந்தான். அவனுக்கு தத்தா என்று பெயரிட்டார். பின்னர் மோரேஸ்வரும் அவரது மனைவியும் குழந்தையுடன் அக்கல்கோட் வந்து மொட்டை அடிக்கும் வைபவத்தை அங்கு கொண்டாடினர். அனைவருக்கும் தாராளமாக தக்ஷிணை அளித்துவிட்டு, பிராமண போஜனம் அளித்த பின்னர் தன் சொந்த ஊருக்குச் சென்றடைந்தார்.

நம் பிரார்த்தனைகள் நிறைவேறிய பின், கடவுள் என்ன நம் கண்களுக்குப் புலப்படாதவர் தானே! அவர் நம்மை கடன் கொடுத்தவர் போல நேரில் வந்தா கேட்டுவிடப் போகிறார்! என்கிற மனோபாவம் பலரிடம் இருக்கத்தான் செய்கிறது. சிலரோ தாங்கள் செய்து கொண்ட பிரார்த்தனைகளையே மறந்து விடுகின்றனர். சிலர் பல வருடங்கள் கழித்து நிறைவேற்றுவார்கள். இவ்வாறெல்லாம் செய்யாமல், பிரார்த்தனைகளை உடனுக்குடன் நிறைவேற்றும் போது, கடவுள் மிகவும் மகிழ்ச்சி அடைந்து மேலும் அதீதமான நற்பலன்களை அளிக்கத் தொடங்குவார் என்பதில் எந்தவித ஐயமும் இல்லை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 199

# மல்லிகார்ஜுனன் என்னும் இசைக்கலைஞர்

வாரணாசியில் வாழ்ந்து வந்த ஜங்கம ஜாதியைச் சேர்ந்த மல்லிகார்ஜுனன், கீர்த்தனைகள் பாடுவதில் வல்லவர். அவர் தியானேஸ்வரி, பாகவதம், பகவத் கீதை போன்றவற்றில் மிகுந்த புலமை பெற்றிருந்தார். ஒருமுறை அவர் கீர்த்தனை நிகழ்த்துவதற்காக அக்கல்கோட் வந்திருந்தார். அவருடன் நான்கு பக்கவாத்தியக்காரர்களும் வந்திருந்தனர். அவர் அரண்மனையில் கீர்த்தனைகள் நிகழ்த்திவிட்டு, ஜங்கமர்களின் ஆசிரமத்திற்குச் சென்று கொண்டிருந்தார். வழியில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அமர்ந்து கொண்டிருப்பதைப் பார்த்து, **"இந்த சந்நியாசி அவதாரமா என்ன?"** என்று கேட்டவுடன் அனைவரும் ஆமோதித்தனர். இவரைப் போன்ற உன்னதமான நிலையில் இருப்பவர்களுக்கு செருக்கு தானாகவே வந்து சேர்ந்து விடுகிறதே! ஸ்ரீ ஸ்வாமியை நமஸ்கரிக்கலாமா வேண்டாமா என்கிற சந்தேகம் அவருடைய மனத்தில் எழும்பியது. அவருடைய மன ஓட்டத்தை உணர்ந்து கொண்ட ஸ்ரீ ஸ்வாமி, **"என்னை சங்கடத்திற்கு ஆட்படுத்தாதே. நீ நமஸ்கரிக்கிறாயா இல்லையா என்பதைப் பற்றியெல்லாம் எனக்கு எந்த கவலையும் இல்லை"** என்று கூறினார். இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் கீர்த்தனக்காரருக்கு தூக்கிவாரிப் போட்டது. உடனே அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு, **"மஹராஜ், நீங்கள்தான் சதாசிவன். தயவுசெய்து என்னை மன்னித்துவிடுங்கள். உங்களைப் பற்றி சரியாக புரிந்து கொள்ளாமல் சந்தேகப்பட்டு விட்டேன்"** என்று வேண்டிக் கேட்டுக்கொண்டு ஸ்ரீ ஸ்வாமியை ஜங்கமர்கள் ஆசிரமத்திற்கு வருமாறு அழைப்பு விடுத்தார்.

மல்லிகார்ஜுனனின் உண்மையான அன்புக்குக் கட்டுப்பட்டு, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவருடன் ஆசிரமத்திற்குச் சென்றார். மல்லிகார்ஜுன் ஸ்ரீ ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்துவிட்டு நைவேத்தியம் படைத்தார், உச்சிஷ்டத்தை பிரசாதமாக உண்டார். அவர் தன் கைகளை கூப்பிக்கொண்டு, **"மஹராஜ், என்னுடைய மகள் மூன்று வருடங்களாக குழந்தை பாக்கியம் இல்லாமல் வருத்தத்தில் இருக்கிறாள். அவளுக்கு கரு உருவாகி கலைந்து கொண்டே இருக்கிறது. இது எனக்கு மிகுந்த வேதனையை அளிக்கிறது. தாங்கள் அருள் புரிய வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். **"பயப்படாதே. கண்டிப்பாக குழந்தை பிறக்கும்"** என்று ஸ்ரீ ஸ்வாமி ஆசி கூறினார். சோளப்பா

ஸ்ரீ ஸ்வாமிகளின் தீர்த்தத்தை பிரசாதமாக அவருடைய மகளுக்கு அளிக்குமாறு கூறினார். மேலும் ஸ்ரீ ஸ்வாமியுடைய முகத்துணியையும் அளித்தார்.

மல்லிகார்ஜுனன் ஸ்ரீ ஸ்வாமியின் அனுமதியுடன் கிளம்பிச் சென்று தீர்த்த பிரசாதத்தை தன் மகளுக்கு அளித்தார். ஸ்ரீ ஸ்வாமியின் அருளால் அவளுக்கு அழகான மகன் பிறந்தான். அவர் ஸ்ரீ ஸ்வாமியுடைய முகத்துணியை பூஜையில் வைத்துவிட்டு, பக்தர்கள் அனைவருக்கும் ஸ்ரீ ஸ்வாமியை நினைவுபடுத்திக் கொண்டு விபூதியை பிரசாதமாக அளிக்கத் தொடங்கினார். அனைவருடைய பிரச்சனைகளையும் அவர் அளித்த விபூதி நிவர்த்தி செய்தது. நாளாவட்டத்தில் அவர் ஸ்ரீ ஸ்வாமியின் ஆசீர்வாதத்தினால் மிகவும் பிரபலம் அடைந்தார். அவருக்கு தக்ஷிணையும் தாராளமாகக் கிடைத்தது. கிடைக்கும் பணத்தை ஜங்கமர்களின் போஜனத்திற்காக செலவழித்தார்.

அவர் ஸ்ரவண மாதத்தில் ஏழு நாட்கள் தொடர்ந்து போஜனம் அளிப்பதாக பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். அதை வாரணாசியில் நிறைவேற்றுவதாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இந்த நிகழ்ச்சி வாரணாசியில் நடைபெற்றுக் கொண்டிருந்த சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அரண்மனையில் தங்கியிருந்தார். அவர் ஏழு நாட்களும் எதுவுமே சாப்பிடவில்லை. சேவகர்கள் கவலையுடன் வந்து, **“மஹராஜ், நீங்கள் ஏழு நாட்களாக ஒன்றுமே சாப்பிடாமல் இருக்கிறீர்கள்”** என்று தெரிவித்ததற்கு, **“மல்லிகார்ஜுனன் வாரணாசியில் அளித்த போஜனத்தில் திருப்தி அடைந்து விட்டேன்”** என்று பதிலளித்தார். இதைக் கேட்டவுடன் அனைவருக்கும் மிகவும் ஆச்சரியமாக இருந்தது. ஸ்ரீ ஸ்வாமி உண்மையிலேயே வாரணாசி சென்றாரா என்பதை சோதிக்க எண்ணிய அரசன் ஒரு குதிரை வீரனை வாரணாசிக்கு அனுப்பினார். **“மஹராஜ் தன் சேவகர்களுடன் ஏழு நாட்கள் இங்கு வந்து உணவருந்தினார்”** என்று மல்லிகார்ஜுனன் உறுதி படுத்தினார். இதை அறிந்து கொண்ட அரசர் மிகுந்த ஆச்சரியம் அடைந்தார். அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு ஜய ஜய கோஷம் எழுப்பி தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர்.

ஸ்தூல ரூபத்தில் வாழ்ந்து கொண்டிருந்தபோதே, பல இடங்களில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் காட்சி அளித்த அற்புதத்தை இந்த அத்தியாயம் மூலம் அறிந்து கொண்டோம். இப்போது சூக்ஷ்ம ரூபமாக திகழும் ஸ்ரீ ஸ்வாமி, நமக்கு அருகிலேயே எப்போதும் நிழல் போல இருப்பதை உணர்ந்து கொள்ளும் பக்குவத்தை அளிக்கும்படி பிரார்த்தனை செய்து கொண்டு இந்த அத்தியாயத்தை நிறைவு செய்வோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# அத்தியாயம் 200

# நல்துர்காவில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்..

நல்துர்கா என்னும் ஊருக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் அவ்வப்போது சென்று தங்குவார். அங்கு அவருக்கு பலர் பக்தர்காளாக இருந்தனர். முந்தைய அத்தியாயங்கள் சிலவற்றிலும் ஸ்ரீ ஸ்வாமி நல்துர்காவில் நிகழ்த்திய லீலைகள் விவேரிக்கப்பட்டுள்ளன. அப்படி அவர் ஒருமுறை அங்கு தங்கியிருந்த போது நடைபெற்ற இரண்டு சுவையான சம்பவங்கள் இந்த அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

## 1. பைராம்ஜி என்னும் தாசில்தார்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நல்துர்காவில் தங்கியிருந்த போது பைராம்ஜி என்னும் தாசில்தாருக்குக் கீழ் வேலை செய்யும் குமாஸ்தா, தான் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்வதற்காக செல்லவேண்டும் என்று அவரிடம் அனுமதி கேட்டார். பைராம்ஜி ஒரு பார்சி. அவர் கோபத்துடன் தன் குமாஸ்தாவிடம், **“நீங்கள் அனைவரும் முட்டாள் கிராமத்து மக்கள். மனிதர்களை தரிசனம் செய்வதால் உங்களுக்கு என்ன பலன் கிடைக்கப்போகிறது? இவரைப் போன்ற துறவிகளையும் சந்நியாசிகளையும் கண்டிப்பாக வணங்கக் கூடாது”** என்று கூறினார். அன்றைய தினம் ஹைதராபாத்திலிருந்து சாலர்ஜங்கின் திவான் அந்த அலுவலகத்திற்கு வந்திருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமியின் பரம பக்தர் என்பதால் அவருடைய தரிசனத்துக்காகக் கிளம்பினார். அவருடன் சேர்ந்து கொண்டு அனைத்து குமாஸ்தாக்களும் கிளம்பினார்கள். பைராம்ஜியால் எதுவும் பேச முடியவில்லை. அனைவரும் ஸ்ரீ ஸ்வாமியை மனதார தரிசனம் செய்தனர். பின்னர் நிஜாம் ஸ்ரீ ஸ்வாமியின் அனுமதியுடன் தன் சொந்த ஊரான ஹைதராபாதுக்குப் புறப்பட்டுச் சென்றார். அடுத்த நாள் பைராம்ஜி குமாஸ்தாக்கள் அனைவருக்கும் தன்னுடைய அனுமதி இல்லாமல் ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்யச் சென்றதற்காக அபராதம் விதித்தார். அனைத்து குமாஸ்தாக்களும் கோபத்துடன், **“இவருக்கு நாம் அனைவரும் புத்தி புகட்ட வேண்டும். இவரை கண்டிப்பாக ஸ்ரீ ஸ்வாமியின் தரிசனத்துக்கு அழைத்து செல்ல வேண்டும்”** என்று முடிவு செய்தனர்.





குமாஸ்தாக்கள் அனைவரும் பைராம்ஜியிடம் சென்று, **“இன்று சந்நியாசியை தரிசனம் செய்வதற்காக பல பக்தர்கள் கூடியுள்ளனர். நாம் அங்கு சென்றால் மகிழ்ச்சியாக நேரத்தை கழிக்கலாம்”** என்று கூறி அழைத்துச் சென்றனர். அனைத்து மதத்தைச் சேர்ந்தவர்களும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை சுற்றி நின்று கொண்டு வெற்றி கோஷம் எழுப்பிக் கொண்டிருந்தனர். அவரைச் சுற்றி தேங்காய் மலை போல குவிந்திருந்தது. அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பக்தி வெள்ளத்தில் மூழ்கியிருந்தனர். அந்த சூழலில் பைராம்ஜி தனது சுயநினைவை இழந்து தரையில் விழுந்தார். அப்போது ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், **“ஏ கழுதையே! நீ தீய நடவடிக்கைகள் செய்து கொலை செய்துகொண்டிருக்கிறாய். இதைத்தான் உன் மதம் போதனை செய்கின்றதா?”** என்று கேட்டவுடன் பைராம்ஜி தன்னை மன்னிக்குமாறு மீண்டும் மீண்டும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். **“நீங்கள்தான் என் தாய் மற்றும் தந்தை. கருணைக் கடலே! என்னை மன்னித்துவிடுங்கள்”** என்று கேட்டுக் கொண்டார். எட்டு நாட்கள் அலுவலகத்திற்கு விடுப்பு எடுத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடன் தங்கியிருந்தார்.

அவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தனக்கு ஏதாவது போதனை வழங்கும்படி கேட்டுக் கொண்டிருந்தார். **“அனைத்து மதங்களும் மற்றவர்களுக்கு உதவ வேண்டும், கொலை செய்தல் கூடாது, எவரையும் துன்புறுத்தக் கூடாது, கர்வம் கூடாது, வேற்றுமை பார்க்கக் கூடாது, உண்மை-நியாயம் ஆகிய பாதைகளில் பயணம் செய்ய வேண்டும், எப்போதும் கடவுளின் நினைவோடு இருக்க வேண்டும், சரி எது - தவறு எது என்பதை ஆராய்ந்து நடந்து கொள்ள வேண்டும், விருந்தோம்பல் செய்ய வேண்டும், நியாயமாக பொருள் ஈட்ட வேண்டும், அனைவருடைய நலனிலும் அக்கறை செலுத்த வேண்டும், பக்தர்கள் மற்றும் பாதசாரிகளுக்காகக் குளம் வெட்டுதல், கிணறு தோண்டுதல் போன்ற பொதுக் காரியங்களில் ஈடுபட வேண்டும் என்பதையே போதனை செய்கின்றன. நம் மனது முழுவதும் கருணை, நிம்மதி மற்றும் மன்னிப்பு ஆகிய குணங்களால் நிரம்பியிருக்க வேண்டும். இம்முறையில் வாழ்ந்தாலே மனித வாழ்க்கை முழுமை அடைந்து, பரமானந்தம் பெறலாம்”** என்று அறிவுரை வழங்கினார்.

இவை அனைத்தையும் கேட்டவுடன் பைராம்ஜி மட்டுமல்ல நாமும் பேரானந்த நிலையில் அல்லவா இருக்கின்றோம்! நாமும் பைராம்ஜி செய்தது போலவே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் கமலப் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து, ஸ்ரீ ஸ்வாமி கூறிய வழியிலேயே வாழ்ந்து பேரானந்தம் அடைவோமாக!




## 2. ராமேஸ்வரத்திலிருந்து வந்த கதாகாலட்சேபம் நடத்துபவர்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நல்துர்காவில் இருந்த சமயத்தில் ராமேஸ்வரத்தி லிருந்து கதாகாலட்சேபம் செய்யும் பண்டிதர் ஒருவர் வந்தார். அவர் வீணையை மீட்டிக் கொண்டே புராணக்கதைகளை பாடுவதில் வல்லவர். அவர் நல்துர்காவில் எப்படியாவது தனது நிகழ்ச்சியை நடத்தி விட வேண்டும் என்கிற துடிப்பில் இருந்தார். ஆனால் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு சேவைகள் செய்வதிலேயே முனைப்பாக இருந்தனர். அவருக்குத் தன் கலையின் மீது மிகுந்த கர்வம் இருந்தது மட்டுமல்லாமல், முன்கோபியாகவும் இருந்தார். கோபத்தின் உச்சத்திற்கே சென்ற அவர், நிகழ்ச்சி ஒருங்கிணைப் பாளரிடம் சென்று, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரைப் பற்றி இழிவாகப் பேசினார். அவர் சாதாரண மனிதர் தானே ஒழிய துறவியெல்லாம் இல்லை என்று பலவாறு கூறிக்கொண்டிருந்தார். பண்டிதரின் பொறாமை அதிகரித்துக் கொண்டே போனது.

இவ்வாறு நடந்து கொண்டிருந்த அதே சமயத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், **"இந்த பண்டிதருக்கு பொறாமையில் புத்தி கலங்கி விட்டது. புராண கதைக்கு ஏற்பாடு செய்து, அவருக்கு பணத்தை கொடுத்து சமாதானப்படுத்துங்கள்"** என்று சிரித்துக் கொண்டே கூறினார். இதைக் கேட்டவுடன் அனைவருக்கும் பண்டிதரின் மீது நம்பிக்கை இல்லாமல் போனது. அவருடைய கதாகாலட்சேபத்தைக் கேட்க எவரும் தயாராக இல்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன்னைப் பற்றி கூறிய கருத்தை அறிந்து கொண்ட பண்டிதருக்கு அவமானமாக இருந்தது. அவர் உடனடியாக ஸ்ரீ ஸ்வாமிகளை தரிசனம் செய்து அவருடைய பாதத்தை இறுக்கமாக பற்றிக் கொண்டு, **"மஹராஜ், நான் உங்களை சங்கடப்படுத்தி விட்டேன். என்னைப் போல கொடூரமானவன் எவரும் இருக்கமுடியாது. பணம் மற்றும் பதவி இருப்பதாக அகந்தை கொண்டு இவ்வாறு நடந்து கொண்டுவிட்டேன். பணத்தின் தேவைதான் என்ன? மனைவி மற்றும் குழந்தைகளை சந்தோஷமாக வைத்துக் கொள்ளத்தானே! அந்த பணம் எரிந்து சாம்பலாகட்டும். குழந்தைகளும் மனைவியும் மரிக்கட்டும். பிரம்ம ஸ்வரூபியான உங்களை நான் அவதூறாகப் பேசி விட்டேன். ஆனால் என் பூர்வ ஜென்மத்தின் நல்வினைகளினால் சரியான நேரத்தில் ஞானக்கண் திறக்கப் பெற்றேன். கருணைக்கடலே, தயவுகூர்ந்து என்னை மன்னித்தருளுங்கள்!"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார்.

அடுத்த நாள் அவருடைய புராண கதாகாலட்சேபத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அவர் **'மகன்'** என்னும் தலைப்பில் பிரவசனம் செய்யத்





தொடங்கினார். **“ஒருவருக்கு மகன் பிறந்தால் சொர்க்கத்தில் இடம் கிடைக்கும். குழந்தை இல்லாதவர்களுக்கு எந்தவித முன்னேற்றமும் இருக்காது”** என்று கூறிக்கொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமி உடனே, “ஏ! இது போன்ற பேச்சுக்களையும், வெற்று அறிவாளித்தனத்தையும் விவரிக்கும் புராணக் கதைகளை நிறுத்து. குழந்தைகள் இல்லாதவர்களுக்கு கதியே இல்லை என்பது போலல்லவா நீ கூறுகிறாய்! அந்த கிளிக்கு மகன் இருக்கிறானா? வீணை வாசிப்பவனுக்கு மகன் இருக்கிறானா? குழந்தைகள் இல்லை என்பதற்காக அவர்கள் நரகத்திற்கா போவார்கள்? நீ அறிவில்லாமல் ஏதோ உளறிக் கொண்டிருக்கிறாய். குழந்தைகள் இல்லாதவர்களுக்கு சொர்க்கத்தில் இடமில்லை என்று கூறுவதற்கு உனக்கு எவ்வளவு துணிச்சல் வேண்டும்? தெரிந்துகொள்! மகன் பிறப்பதனால் ஒருவருக்கு மோக்ஷம் கிடைப்பதில்லை. அப்படி அது உண்மை என்றால் நாய், பன்றி போன்ற ஜந்துக்களும் சொர்க்கத்தில் இடம் பிடிக்கும். மகன் பிறப்பதனால் ஒரு தந்தை சொர்க்கத்திற்குச் செல்வதில்லை, மாறாக ஒரு மகனை வளர்க்கும் பாவத்தினால் கூட ஒரு தந்தை நரகத்திற்குச் செல்ல நேரிடும்” என்று அறிவுரை கூறினார்.

பின்னர் சோளப்பா ஸ்ரீ ஸ்வாமி பேசியவற்றை விளக்கமாக எடுத்துக் கூறினார். **“கிளி என்றால் சுகாச்சாரியார், வீணை வாசிப்பவர் என்றால் நாரதர். பல சான்றோர்களுக்கு வாரிசு இல்லையென்றாலும் மோக்ஷம் கிடைத்திருக்கிறது. கலியுகத்தில் வாழ்ந்த சங்கராச்சாரியார் போன்ற பல மகான்கள் வாரிசு இல்லாமலேயே பிரம்மபதத்தை அடையவில்லையா? மகாத்மாக்கள், நல்ல மனிதர்கள், துறவிகள், யோகிகள், பக்தர்கள், சிறந்த மனிதர்கள், ஞானிகள், பண்டிதர்கள் மற்றும் கடவுள் நம்பிக்கையுள்ளவர்கள் அனைவரும் வாரிசுகள் இல்லாமலேயே பிரம்மபதத்தை அடைந்துள்ளனர். ஆகவே வாரிசு இல்லாதவர்களுக்கு மார்க்கமே கிடையாது என்பது போல கருத்து தெரிவிப்பது நியாயமற்றது”** என்று விளக்கினார். இவற்றை உணர்ந்து கொண்டவுடன் பண்டிதரின் கர்வம் முழுமையாக நீங்கியது. அவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் தன்னை முழுமையாக சரணடைந்து கொண்டார். சிறிது காலத்திற்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமியின் அருளால் அவருக்கு ஒரு மகன் பிறந்தான்.

இதுபோன்ற எளிமையாக, தற்காலத்திற்கும் ஏற்றாற்போல் அறிவுரை கூற வேறு எவராலும் முடியாது. மூடநம்பிக்கை என்னும் சாத்தானை அழித்து, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் மீது முழு நம்பிக்கையுடன் சரணடைவோமாக!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 201

# லீலைகளின் நாயகன்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் செய்த பலவகையான லீலைகளை நாம் தொடர்ந்து அனுபவித்துக் கொண்டு இருக்கிறோம். இந்த அத்தியாயத்தில் அவர் செய்த வித்தியாசமான சில லீலைகளைப் பார்க்கலாம்.

### 1. மோரோபா குல்கர்னியின் மனைவியுடைய வயிற்று வலி

அக்கல்கோட்டில் மோரோபா குல்கர்னி என்கிற பக்தர் வசித்து வந்தார். அவருடைய வீட்டுக்கு ஸ்ரீ ஸ்வாமி அடிக்கடி செல்வது வழக்கம். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி அவருடைய வீட்டில் இருந்த போது குல்கர்னியின் மனைவிக்கு வயிற்று வலியின் தாக்கம் மிகவும் அதிகமாக இருந்தது.வலியின் வேதனை மிகவும் அதிகமாக இருந்தமையால், நள்ளிரவு நேரத்தில் அவள் தன் உயிரை மாய்த்துக் கொள்ளும் நோக்கத்துடன் கிணற்றடிக்குச் சென்றாள். அப்போது மஹராஜ் விழித்துக் கொண்டு, **"யார் கிணற்றுக்குள் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்ள போகிறார்கள், பார்"** என்று தன் சேவகர்களிடம் கூறியதற்கு அவர்கள், **"இந்த நள்ளிரவு நேரத்தில் யார் உயிரை மாய்த்துக் கொள்ளப் போகிறார்கள்? நீங்கள் தயவுசெய்து நன்றாக உறங்குங்கள்"** என்று கூறினர். **"உங்கள் அனைவருக்கும் மிருக புத்திதான் இருக்கிறது. நான் கூறும் உண்மையை கவனிக்கும் அறிவில்லை. முட்டாள்களே!"** என்று கடிந்து கொண்டவுடன் அனைவரும் கிணற்றை நோக்கி ஓடினர். அப்போது கிணற்றுக்குள் குதிப்பதற்கு தயாராக நின்று கொண்டிருக்கும் அந்தப் பெண்ணை பிடித்துக் கொண்டுவந்து ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம் ஒப்படைத்தனர். அனைவரும் அது மோரோபாவின் மனைவி என்பதை அறிந்து கொண்டனர். மோரோபா ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு, **"மஹராஜ், நீங்கள் என்னை பேரிடரிலிருந்து காப்பற்றி விட்டீர்கள். தயவுசெய்து என்னை ரட்சிக்க வேண்டும்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமியின் அருளால் அப்பெண்ணுடைய வயிற்று வலி முற்றிலுமாக குணமடைந்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருள் கடாக்ஷத்திற்குதான் எல்லை உண்டோ!

## 2. பிராமணப் பெண்ணை கேலி செய்வது

அக்கல்கோட்டில் சௌகார் கிணறு என்றொரு இடம் உண்டு. அந்த கிணற்றுக்கு அருகில் ஒரு பிராமணப் பெண் தனக்கருகில் தண்ணீர் பானையை வைத்துவிட்டு, தன் துணிகளை துவைத்துக் கொண்டிருந்தாள். அச்சமயம் ஸ்ரீ ஸ்வாமி அந்த வழியாக கடந்து சென்று கொண்டிருந்தார். அப்போது ஸ்ரீ ஸ்வாமி அந்த பெண்ணுடைய பானையை கிணற்றுக்குள் தள்ளிவிட்டு, அந்த பெண்ணிற்கு முன்னால் சென்று அமர்ந்து கொண்டார். தன் வேலை முடிந்ததும் அந்தப் பெண் தன் பானையைத் தேடியபோது எங்கும் கிடைக்கவில்லை. **"வீட்டுக்குச் சென்றால் கண்டிப்பாக அடி-உதைதான் கிடைக்கும், என்ன செய்வதென்றே தெரியவில்லையே!"** என்று புலம்பியவாறு பயங்கரமாக அழத் தொடங்கினாள். கிணற்றுக்குள் ஒருவர் சென்று தேடிப் பார்த்தும் கிடைக்கவில்லை. ஆனால் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரோ பலமாக சிரித்துக் கொண்டே, **"பானை உன்னுடைய காலடியில் தானே இருக்கிறது! எதற்காக கூச்சலிட்டு அனைவரையும் ஏமாற்றிக் கொண்டிருக்கிறாய்?"** என்று கேட்டார். அந்தப் பெண் தன் காலடியில் பார்த்தபோது, அந்த பானை அங்கு இருந்தது. அனைவரும் அவளைப் பார்த்து ஏளனமாக சிரித்தனர். அவமானத்தில் அந்தப் பெண் தன் பானையைத் தூக்கிக் கொண்டு வேகமாக தன் வீட்டுக்குச் சென்று விட்டாள். இதுபோன்ற விநோதனமான விளையாட்டுகளையும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் புரிவதுண்டு. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இருக்கும் இடத்தில் கலகலப்புக்கு குறைவே இருக்காது. நம் வாழ்க்கையின் சந்தோஷம் இது போன்ற கலகலப்பான தருணங்களில் தானே உயிர் பெறுகின்றது! ஸ்ரீ ஸ்வாமியும் அதை இது போன்ற நிகழ்ச்சிகள் மூலம் நமக்கு உணர்த்துகிறார்.

## 3. சிருங்கேரி ஆசிரமத்திலிருந்து வந்த பண்டிதர்

ஒருமுறை சிருங்கேரி ஆசிரமத்திலிருந்து பண்டிதர் ஒருவர் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை தரிசனம் செய்வதற்காக அக்கல்கோட் வந்திருந்தார். அவர் ஸ்ரீ ஸ்வாமியின் குழந்தைத்தனமான விளையாட்டுக்களைப் பார்த்துவிட்டு பாவ்டேக்கர் புராணிக்கிடம், **"இந்த பைத்தியக்காரருடன் ஏன் தங்கியிருக்கிறாய்? இவருடன் இருந்தால் உனக்கு எந்தவித பிரயோஜனமும் இருக்காது. நீ என்னுடைய வந்தாயானால் நான் உனக்கு சாஸ்திரங்களை கற்றுத் தருகிறேன்"** என்று கூறினார். இதைக் கேட்டவுடன் பாவ்டேக்கர் அவருடன் வருவதற்கு சம்மதித்தார். சர்வ வியாபியான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் இவர்களுடைய உரையாடலை அறிந்து கொண்டிருக்க மாட்டாரா என்ன? இரவில் பாவ்டேக்கர்

தன்னுடைய அறையில் உறங்கிக் கொண்டிருந்தார். தாளிட்டிருந்த அவருடைய அறைக் கதவு திறக்கப்படும் ஓசை கேட்டவுடன், பாவ்டேக்கர் விழித்துக் கொண்டார். அவர் கண்விழித்தபோது ஸ்ரீ ஸ்வாமி ஆஜானுபாகுவாக நின்றுகொண்டிருந்தார். உடனே அவர் ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களை இறுக்கமாகப் பற்றிக் கொண்டார். **“ம்ம்.. சாஸ்திரங்களை எப்போது கற்றுக் கொள்ளப் போகிறாய்? இந்த பண்டிதர் காமம் போன்ற ஐந்து எதிரிகளை (காமம், குரோதம், லோபம், மோஹம், அகங்காரம்) வென்று விட்டாரா?”** என்று கேட்டு விட்டு மறைந்து விட்டார். பாவ்டேக்கர் தான் செய்த தவறை உணர்ந்து கொண்டு மிகவும் வருந்தினார்.

அடுத்த நாள் காலை ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பாதங்களை நமஸ்கரித்துவிட்டு தன் பயணத்தை ரத்து செய்தார். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு பாவ்டேக்கரின் மீது அலாதி பிரியம் உண்டு. தான் இன்னும் சில நாட்களில் தன் உடலை உதிர்க்க போவதை அறிந்த ஸ்ரீ ஸ்வாமி, அவரை பார்ஷி என்னும் ஊருக்கு அனுப்பி வைத்தார். ஸ்ரீ ஸ்வாமியின் உயிர்ப்பிரிவை அவர் நேரில் கண்டால், அது அவருடைய தியானத்தை பாதிக்கும் என்பதை ஸ்ரீ ஸ்வாமி நன்றாக அறிந்திருந்தார். தன் முடிவு நெருங்கிக் கொண்டிருக்கும் தருணத்தில் ஸ்ரீ ஸ்வாமி ஒரு சேவகரை அழைத்து, **“இந்த விளையாட்டு பொருட்கள் அனைத்தையும் பாவ்டேக்கர் அக்கல்கோட் வரும்போது அவரிடம் கொடுத்துவிடு”** என்று கூறினார். இதுவல்லவோ தாயுள்ளம்!

பாவ்டேக்கர் ஸ்ரீ ஸ்வாமியின் சமாதிக்குப் பிறகு அக்கல்கோட் வந்தபோது அனைத்து பொருட்களும் அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவை இன்றும் பார்ஷியில் உள்ள பாவ்டேக்கரின் பூஜை அறையில் பாதுகாப்பாக உள்ளது. ஒருமுறை பாவ்டேக்கர் நரசிங்கவாடிக்கு ஒரு யக்ஞத்திற்காக சென்றிருந்த போது தேம்பே ஸ்வாமிகள் (ஸ்ரீ வாசுதேவானந்த சரஸ்வதி) அவரிடம், **“உங்களுடைய குரு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் ஸ்ரீ தத்தாத்ரேயருடைய அவதாரம். யக்ஞம் செய்ய முதலில் அவருடைய அனுமதியைப் பெற்றுக் கொள்ளுங்கள்”** என்று கூறினார். இதன் மூலம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரம் என்பதை தேம்பே ஸ்வாமி அனைவருக்கும் பறைசாற்றுகிறார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய முக்கியமான போதனைகளுள் ஒன்று என்னவென்றால், **“உலக பந்தங்களில் விருப்பம் இருப்பதில் எந்தவித தவறும் இல்லை, ஆனால் நமது நோக்கம் ஆன்மிக முன்னேற்றத்திலேயே இருக்க வேண்டும்”** என்பதே ஆகும். அவருடைய போதனைகளை மிகவும்




எளிமையாகவும், அனைவரும் பின்பற்றும் வகையில் அமைந்திருப்பதால், அவர் பக்தவத்சலனாகத் திகழ்வதில் எந்தவித ஆச்சரியமும் இல்லை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 202

# சோளப்பாவின் கடைசி நாட்கள்

இந்த அத்தியாயத்தில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பிரதான பக்தரான ஸ்ரீ சோளப்பாவின் மறைவைப் பற்றியும் அவர் தன் பக்தர்கள் மீது கொண்டுள்ள அதீதமான அன்பைப் பற்றியும் விரிவாக அறிந்து கொள்ளப் போகிறோம். ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் ஸ்தூல உடலை துறப்பதற்கு ஆறு மாதங்களுக்கு முன்பே ஸ்ரீ ஸ்வாமியின் பரம சீடரான சோளப்பா தன் உயிரை நீத்தார். அது கி.பி. *1877*, அஸ்வயுஜ மாதம். மஹராஜ் மனூர் என்னும் ஊருக்குச் சென்றிருந்தார். அந்த ஊரில் ஓடிக் கொண்டிருந்த பீமா நதிக்கு பக்தர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமியை அழைத்துச் சென்றனர். அங்கு அவர் சில நேரத்திற்கு விளையாடிக் கொண்டிருந்தார். பின்னர் நதியின் அக்கரையில் அமைந்துள்ள சிந்தாபூர் என்னும் ஊரில் மலையும், அழகான கோவிலும் உள்ளது. அந்த கோவிலில் ஸ்ரீ ஸ்வாமி அமர்ந்துகொண்டார். சேவகர்கள் அனைவரும் மனூரிலேயே இருந்தனர். ஸ்ரீ ஸ்வாமியுடன் சோளப்பா இருந்தார். **“மனூருக்குச் செல்லும் பாதை மிகவும் முட்கள் மற்றும் புதர்கள் நிறைந்த காட்டுப்பாதை. அனைவரையும் இங்கு அழைத்து வா, நாம் மாற்றுப்பாதையில் சென்று விடலாம்”** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறினார். ஆனால் சோளப்பாவோ, **“நாம் இந்த வழியாகவே செல்லலாம்”** என்று பிடிவாதமாக கூறினார்.

விதியில் இருந்து எவரால் தப்ப முடியும்! மஹராஜ் முற்றும் உணர்ந்தவர் என்பதால், நடைபெறப் போகும் அனைத்தையும் அறிந்திருந்தார். பக்தவத்சலனின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியது. மஹராஜ் மறுபேச்சு எதுவும் பேசாமல், சோளப்பாவுடன் மனூர் சென்றடைந்தார். பல்லக்கு தூக்கிகளில் இருவர் காலரா நோய் தாக்கப்பட்டு இறந்துவிட்டனர். அடுத்த நாள் ஸ்ரீ ஸ்வாமி வாடி என்னும் ஊருக்குச் சென்று அங்கிருக்கும் தேவி

கோவிலில் தங்கினார். அங்கு அவர் அமர்ந்து கொண்டு விளையாடிக் கொண்டிருந்தபோது, அவர் கையில் இருந்த வளையல் ஒன்றை தூக்கி தூரமாக வீசி எறிந்தார். அதைக் கொண்டுவந்து சோளப்பா கொடுத்தவுடன் அவரிடம், **"நீயே வைத்துக் கொள்"** என்று கூறிவிட்டார்.

மாலை ஆனது. சோளப்பா பிளேக் நோயால் பாதிக்கப்பட்டிருந்தார். காட்டில் இடவசதி சரியாக இல்லை. அவரை வாடி கிராமத்தில் இருக்கும் மாருதி கோவிலுக்கு அழைத்துச் சென்றனர். அவருக்கு நோயின் தாக்கம் அதிகரித்துக் கொண்டே போனது. நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு அவருடைய கைகால்கள் துவண்டு போயின. தான் இறந்து விடுவோம் என்பதை சோளப்பா உணர்ந்து கொண்டார். ஸ்ரீ ஸ்வாமி மஹராஜுடன் இருந்த பாளப்பா மற்றும் கண்பத் ராவை பார்க்க சோளப்பா விரும்பினார். மஹராஜ் பாளப்பாவை செல்ல அனுமதிக்கவில்லை. கண்பத்ராவை மட்டும் சென்று பார்க்கும்படி கூறினார். மூன்று முறை பாளப்பாவுக்கு அழைப்பு விடுத்த பின்னர், அவர் ஸ்வாமியின் சரண தீர்த்தத்தை எடுத்துக் கொண்டு சென்று சோளப்பாவை சந்தித்தார்.

மஹராஜ் சோளப்பாவை சந்திக்க மறுத்துவிட்டார். தன் அத்யந்த பக்தனை அச்சூழ்நிலையில் அவர் காண விரும்பவில்லையோ? மஹராஜ் சோளப்பாவை அங்கேயே விட்டுவிட்டு அக்கல்கோட் சென்றுவிட்டார். அடுத்த நாள் காலை மூன்று மணியளவில் சோளப்பா என்னும் பரம பக்தன் ஸ்ரீ ஸ்வாமியை விட்டு பிரிந்து சென்றுவிட்டார். அக்கல்கோட் வந்தடைந்த நாளிலிருந்து சோளப்பா ஸ்ரீ ஸ்வாமியுடன் நிழல் போலவே இருந்தார். அன்று ஸ்ரீ ஸ்வாமி மிகவும் கலக்கமான மனநிலையில் இருந்தார். மஹாராணி ஸ்ரீ ஸ்வாமியிடம், **"ஏன் இன்று வித்தியாசமாக நடந்து கொள்கிறீர்கள்"** என்று கேட்டதற்கு, **"என்ன செய்வது? நான் சோளைய்யாவின் பிரிவால் தவித்துக் கொண்டிருக்கிறேன். நான் இனி யாரோடு விளையாடுவது? அவன் இல்லாமல் நான் என்ன செய்வது! ஏழு பிறவிகளாக என்னோடு இருந்தவனை நான் இழந்துவிட்டேன். நானும் சீக்கிரமாகவே சென்றுவிடுவேன்"** என்று தழுதழுத்த குரலில் சோகமாகக் கூறினார். இதைக் கேட்டவுடன் மஹாராணி மிகுந்த கலக்கமுற்றாள். இதுவல்லவோ தூய்மையான அன்பு! தாய்கூட தன் குழந்தையிடம் செலுத்தமுடியாத அன்பையல்லவா ஸ்ரீ ஸ்வாமி தன் பக்தர்கள் மீது செலுத்துகிறார்!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**





## அத்தியாயம் 203

# சமாதி மந்திர்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய மடம் நல்ல முறையில் அமைக்கப்பட வேண்டும் என்று பல பக்தர்கள் விரும்பினார்கள். அதன் அடிப்படையில் சோளப்பா, ஸ்ரீபாத பட் மற்றும் பலர் பணம் வசூலித்து மடம் கட்ட ஏற்பாடுகள் செய்தனர். கி.பி. 1868 ஆம் ஆண்டு மடம் கட்டும் வேலை துவங்கியது. ஸ்ரீ ஸ்வாமியின் உத்தரவுக்கேற்ப கோவில் கட்டும் பணி நடைபெற்றது. கோவிலின் கர்ப்பகிரகத்தில் ஒரு குகை போல இருக்கும் இடத்தில் அமர்ந்து கொண்டு ஸ்ரீ ஸ்வாமி தியானம் மேற்கொள்வார். அந்த குகை ஸ்ரீ ஸ்வாமிக்கு சமாதியாக இருக்க வேண்டும் என்பது சோளப்பாவின் விருப்பம். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி சோளப்பாவிடம் வந்து, **"சோளைய்யா என்ன செய்து கொண்டிருக்கிறாய்?"** என்று கேட்டார். "ஒன்றுமில்லை மஹராஜ்" என்று அவர் பதிலளித்தார். உடனே ஸ்ரீ ஸ்வாமி, "சோளைய்யா, நான் உன்னைத்தான் முதலில் அதில் போடப்போகிறேன். பிறகுதான் நான் செல்வேன்" என்று கூறினார். அதுபோலவே சோளப்பா ஸ்ரீ ஸ்வாமிக்கு முன்னதாகவே தன் உயிரைத் துறந்தார்.

ஸ்ரீ ஸ்வாமி ஒரு மக மாதம் பௌர்ணமியன்று ஒரு யக்ஞத்திற்கு ஏற்பாடு செய்து, அங்கு சில கடவுள்களின் சிலைகளை பிரதிஷ்டை செய்தார். தத்த பாதுகைகள் பிரதிஷ்டை செய்யப்பட்டன. கணேசர் இடது பக்கத்திலும், வலது பக்கத்தில் அமர கோடீஸ்வர சிவலிங்கமும் ஸ்தாபிக்கப்பட்டது. வேதமந்திரங்கள் ஓதப்பட்டன. ஸ்ரீ ஸ்வாமி பாதாளத்தில் உள்ள குகையில் அமர்ந்து கொண்டு தியானம் மேற்கொண்டார். ஸ்ரீ ஸ்வாமி குகையில் இருந்து வெளியே வந்தவுடன் உரத்த குரலில் வேதங்களை ஓதிக் கொண்டே வந்தார். இக்காட்சியை கண்ட அனைவரும் ஆனந்தப் பெருக்கில் திளைத்தனர். வேதமந்திரங்களை ஜபிப்பதாலும் புனித நூல்களை (ஸ்ரீ குரு சரித்திரம், ஸ்ரீபாத ஸ்ரீவல்லப சரிதாம்ருதம், சாய் சத்சரித்திரம் போன்ற நூல்கள்) பாராயணம் செய்வதாலும் அனைவருடைய விருப்பங்களும் நிறைவேறும் என்று ஸ்ரீ ஸ்வாமி உறுதி அளித்தார். அப்படி புத்தகங்களைப் பாராயணம் செய்யும் போது மனதில் முழு நம்பிக்கையுடன் பாராயணம் செய்ய வேண்டும் என்று அனைவருக்கும் அறிவுரை கூறினார். கருவறைக்குக் கீழ் குகை அமைக்கப்





பட்டதற்கான காரணத்தை சில பக்தர்கள் ஸ்ரீ ஸ்வாமியிடம் கேட்டதற்கு, **"இங்கு ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் கடவுள் அனைவரும் என்னுடைய விருந்தாளிகள். விருந்தோம்பல் நம் கலாச்சாரத்தில் மிகவும் முக்கியமானது. அதனால்தான் அவர்களுக்கு உயரமான இடத்தை அளித்துள்ளேன்"** என்று கூறினார். இவ்வாறு அனைத்து ஏற்பாடுகளையும் ஸ்ரீ ஸ்வாமியே ஏற்பாடு செய்து கொண்டார்.

எப்படி ஷீரடி சாய்பாபா மேகா என்னும் தன் பரம பக்தன் உயிர் நீத்த போது அழுது துடித்தாரோ அதேபோல ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் தன் பரம பக்தரான சோளப்பாவின் மறைவை தாங்கிக் கொள்ள முடியாமல் தவித்தார். ஸ்ரீ ஸ்வாமி தன் பக்தர்களின் மீது கொண்டுள்ள அளவில்லாத பாசம் எப்படிப்பட்டது என்பதை சோளப்பவின் மறைவின் மூலம் நாம் உணர்ந்து கொள்ளலாம். அக்கல்கோட் வந்தடைந்த நாள் முதல் ஸ்ரீ ஸ்வாமியுடன் சோளப்பா பயணித்தார். 22 வருடங்கள் இடைவிடாது செய்த சேவைக்கு பலனாக ஸ்ரீ ஸ்வாமியின் சமாதி மந்திர் சோளப்பாவின் வீட்டிலேயே அமைந்தது. இதுதான் பக்தவத்சலனான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருடைய உண்மையான குணத்தின் வெளிப்பாடு, அவர் தன் பக்தர்களின் மீது கொண்டுள்ள அளவில்லாத பாசத்தின் வெளிப்பாடு!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 204

# மஹாசமாதி லீலை

சோளப்பா என்னும் பரம பக்தன் தன் இன்னுயிரை நீத்த பிறகு ஸ்ரீ ஸ்வாமியின் உடல்நிலை மோசம் அடையத் தொடங்கியது. அவர் மெத்தையில் படுத்து உறங்குவதை நிறுத்திக் கொண்டார், மெத்தை சுருட்டி மரக்கிளையில் தொங்கவிடப்பட்டது. பக்தர்கள் ஆரத்தி எடுப்பதை தடுக்கும் வண்ணம் தன் கைகளை உயர்த்திக் காட்டுவார் அல்லது நெய் தீபங்களை பிடுங்கி வீசிவிடுவார். அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயகனாக இருப்பினும் , மாயை அவரையும் விட்டுவைக்கவில்லை. தன் பரம பக்தனின் பிரிவைத் தாங்கிக் கொள்ள முடியாமல், தான் விரைவில் இந்த ஸ்தூல உடலை விட்டு நீங்கி விடுவேன்

என்பதை அவர் பலரிடமும் சூசகமாக தெரிவித்தார். அப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் பின்வருமாறு:

*1.* ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி சால்கர் என்னும் கிராமத்திற்குச் சென்றிருந்தார். அங்கிருக்கும் அடர்ந்த காட்டுக்குள் சென்று தங்கினார். இருப்பினும் மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து அவரை தரிசனம் செய்வர். ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி ஹூக்காவை புகைத்துக் கொண்டிருக்கும் போது பாசத்தோடு பாளப்பாவிடம், **"பாளப்பா நான் வெகுதூரம் பயணிக்கப் போகிறேன். நீயும் என்னோடு வருகிறாயா? ஆனால் நாம் உயரத்திற்கு செல்ல வேண்டும்!"** என்று கேட்டவுடன், பாளப்பா சரி என்பது போல தலையை அசைத்து விட்டு, ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களைப் பற்றிக் கொண்டார். ஸ்ரீ ஸ்வாமி தான் வெகு தூரம் பயணிக்கப் போவதை பாளப்பாவிடம் சூசகமாக வெளிப்படுத்தினார், ஆனால் அதை பாளப்பா பின்னாட்களில்தான் உணர்ந்து கொண்டார்.

*2.* சால்க்கரிலிருந்து ஸ்ரீ ஸ்வாமி அக்கல்கோட் வந்தடைந்து ஜங்கம மடத்துக்கு அருகில் இருக்கும் ஒரு லிங்காயத் துறவியின் சமாதியில் தங்கியிருந்தார். ஒருநாள் பாவ்டேக்கரிடம் 500 வரட்டிகளை கொண்டுவருமாறு கூறினார். அவற்றை ஜங்கம மடத்திலுள்ள சிவலிங்கத்தின் மேல் அடுக்கி வைக்கும்படி கூறினார். ஸ்ரீ ஸ்வாமியே அவற்றின் மீது தீ மூட்டி ஹோமம் நிகழ்த்தினார். மேலும் 5 சேர் பேரீச்சம்பழம், பழங்கள் மற்றும் அரிசி, வெற்றிலைபாக்கு, தேங்காய் போன்றவற்றை கொண்டுவரும்படி பக்தர்களிடம் கூறினார். நெய்யை அத்தீயில் ஊற்றும்படி கூறினார். என்ன நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்பது புரியாமல் அனைவரும் வியப்புடன் அனைத்தையும் பார்த்துக் கொண்டிருந்தனர். அடுத்த நாள் காலையில் சாம்பலை சுத்தப்படுத்தும்படி ஸ்ரீ ஸ்வாமி ஆணையிட்டார். அப்போது லிங்கத்தை சுற்றியிருக்கும் தரை பிளவுற்றிருந்தது, ஆனால் சிவலிங்கத்திற்கு எந்தவித பாதிப்பும் ஏற்படாமல் அதன் பிரகாசம் அதிகரித்திருந்தது. ஜங்கம சாதுக்கள் அனைவரும் ஆச்சரியத்தில் மூழ்கினர். இந்த சிவலிங்கத்தை சுற்றியிருக்கும் தரைப்பாகம் பிளவுற்றிருப்பது போல ஸ்ரீ ஸ்வாமியின் ஸ்தூல உடல் இந்த உலகத்தை விட்டு பிரிந்தாலும், அவர் அந்த சிவலிங்கத்தைப் போல பிரகாசத்துடன் எப்போதும் திகழ்வார் என்பதை அல்லவா இந்த நிகழ்ச்சி உணர்த்துகிறது?

*3.* ஒருநாள் ஸ்ரீ ஸ்வாமி தாத்யா சுபேதாரின் வீட்டுக்குச் சென்றிருந்தார். அவ்வீட்டிலிருந்த துளசி மாடத்தை எடுத்து முரளிதர் கோவிலுக்கு அருகில்

இருக்கும் குளத்தில் போடுமாறு ஒரு சேவகரிடம் ஸ்ரீ ஸ்வாமி ஆணையிட்டார். அந்த மாடம் 'குபுக்' என்ற ஓசையுடன் தண்ணீருக்குள்ளே மூழ்கியது. அனைவரையும் கோஷங்கள் எழுப்பும்படி ஸ்ரீ ஸ்வாமி கூறினார். மாடம் தண்ணீருக்குள் மூழ்குவது நடைபெறப்போகும் நிகழ்ச்சிக்கான மற்றொரு முன்னோடி.

4. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் நாகன்ஹள்ளி என்னும் கிராமத்திற்குச் சென்றிருந்தார். அங்கிருந்து கிளம்பும்போது, இதுவே இந்த கிராமத்திற்குத் தான் வருவது கடைசி முறை என்று கூறினார். பொதுவாக ஸ்ரீ ஸ்வாமி பஜனைகள் பாட மாட்டார், ஆனால் பஜனைகளில் கலந்து கொள்வார். அப்படியிருக்க அந்த முறை அவர் ஒரு பஜனைப் பாடலைப் பாடினார். அதுவாவது,

**"சிவ ஹர சங்கர, நமாமி சங்கர சிவ சங்கர சம்போ-**
**ஹே கிரிஜாபதி பவானி சங்கர சிவ சங்கர சம்போ"**

என்பதே அந்த பஜனைப் பாடல்.

கிராமத்துவாசிகள் அனைவரையும் சேர்ந்து தன்னுடன் பாடுமாறு கூறினார்.

5. ஒருமுறை ஸ்ரீ ஸ்வாமி கூழாங்கற்களை எடுத்து ஒரு ஸ்தூபி போல உருவாக்கினார். இதைக் கண்ட அனைவரும் இது என்ன முன்னறிவிப்பா! என்று யோசித்தனர். ஸ்ரீ ஸ்வாமி தங்களை விட்டு பிரிந்து சென்றுவிடுவாரோ என்கிற பீதி அனைவரையையும் வாட்டியது.

பக்தர்களின் மனம் சிறிது கூட வருத்தத்தில் ஆழ்ந்து விடக் கூடாது என்கிற தாயுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமி, அவர்களை இது போன்ற பலவிதமான முன்னறிவிப்புகள் மூலம் தயார் படுத்தினார். தான் இந்த ஸ்தூல உடலை துறந்தாலும், என்றென்றும் அவர்களுடன் இருப்பதாக அனைவரிடமும் பலமுறை உத்தரவாதம் அளித்திருக்கிறார்.

### கி.பி. 1878, சைத்ர மாதம் கிருஷ்ண பக்ஷ த்ரியோதசி

தாத்யா சுபேதாரின் வீட்டிலிருந்து வந்த அடுத்தநாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு காய்ச்சல் அதிகரித்தது. காய்ச்சல் குறைவதற்கான சுவடே தெரியவில்லை. அவரின் உடல்நிலை மோசம் அடைந்து கொண்டே போனது. உணவு எடுத்துக் கொள்வதை நிறுத்திக் கொண்டார். சகாராம் லோக்கண்டே

என்னும் சேவகர் ஸ்ரீ ஸ்வாமிக்கு மிகவும் பிடித்தமான இடமான வட வ்ருக்ஷத்திற்கு அருகில் பல்லக்கில் வைத்து அழைத்துச் சென்றார். காய்ச்சல் அதிகமாக இருந்தாலும், ஸ்ரீ ஸ்வாமி தன் தினசரி வேலைகளான ஸ்நானம் போன்றவற்றை எந்தவித தடங்கலும் இல்லாமல் நிகழ்த்திக் கொண்டிருந்தார். எவரையும் தேவையில்லாமல் தன்னருகில் அவர் அனுமதிக்கவில்லை. சுந்தராபாயி ஸ்ரீ ஸ்வாமிக்கு சேவைகள் செய்து கொண்டிருந்தாள். நோயின் தாக்கத்தினால் அவர் பலவீனமாக இருந்தாலும், அவருடைய தேஜஸ் குறையவேயில்லை. அவரை சிறிதளவேனும் உணவு உட்கொள்ளுமாறு பக்தர்கள் வற்புறுத்தினர். சுந்தராபாயி இரு கவளம் உணவை ஊட்டிவிட்டாள். **"ஸ்வாமி மஹராஜ், நீங்கள் எப்போது குணமடைவீர்கள்?"** என்று சுந்தராபாயி கேட்டதற்கு, **"குணமடைய வாய்ப்பேயில்லை. நான் கிளம்ப வேண்டிய நேரம் வந்துவிட்டது"** என்று கூறியவுடன் சுற்றியிருந்தவர்கள் அனைவருக்கும் இடி விழுந்தது போலானது. தாயை விட்டு பிரியும் குழந்தையைப் போல அனைவரும் அழுது துடித்தனர். மருத்துவர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமியை சோதித்துப் பார்க்க வந்த வண்ணம் இருந்தனர். அவர்கள் பரிந்துரைத்த எந்த மருந்தையும் அவர் எடுத்துக் கொள்ளவில்லை. அவர்கள் ஸ்ரீ ஸ்வாமியுடைய நாடியை சோதித்தால், **"உன் அப்பனுடைய நாடியை சோத்தித்துக் கொள்"** என்பார். **"நான் உயிரிழந்தால் உன் அப்பனுக்கு எதுவும் ஆகிவிடாது"** என்று கூறுவார்.

ஸ்ரீ ஸ்வாமி நம்பிக்கையான வார்த்தைகளை கூறுவார் என்கிற எண்ணத்தில் சுந்தராபாயி மீண்டும் ஸ்ரீ ஸ்வாமியிடம், **"எப்போது குணமடைவீர்கள்"** என்று கேட்டதற்கு, **"மலைகள் என்னை அழைக்கும்போது"** என்று பதிலளித்தார். யோகிகளுக்கு மறைவு என்பதும் உண்டோ! அவர் மீண்டும் தான் அவதரித்து வருவேன் என்பதை சூசகமாக கூறினார். ஸ்ரீபாத பட் ஸ்ரீ ஸ்வாமியிடம், **"ஸ்வாமி, நீங்கள் எப்போது குணமடைவீர்கள்?"** என்று கேட்டதற்கு, **"பண்டரிபுரம் பற்றியெறியும் போது"** என்று பதிலளித்தார். அதாவது அதர்மம் ஓங்கும் போது என்பதே அதன் பொருள். மஹாத்மாக்கள் நம்மைப் போல கர்மாக்களை கழிப்பதற்காக இந்த உலகத்தில் தோன்றுவதில்லை. அவர்கள் தங்கள் நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக அவதரித்துவிட்டு, மக்களை தர்மப் பாதைக்கு அழைத்து சென்ற பின்னர் தங்கள் அவதாரத்தை முடித்துக் கொள்வர். பின்னர் தேவைகள் ஏற்படும் போது மீண்டும் அவதரிப்பர்.

அன்றைய தினத்தில், அனைத்து பக்தர்களும் சூழ்ந்திருக்க ஸ்ரீ ஸ்வாமி அவர்களுடைய கவலையான மனோநிலையை மாற்றும் எண்ணத்துடன்,

தனக்கு விருப்பமான நாவிதனான கோபாலை அழைத்து, சவரம் மற்றும் ஸ்நானம் செய்து கொண்டார். அனைவரும் அவருக்கு உற்சாகமாக ஆரத்தி எடுத்தனர். ஏழு நாட்களாக அவர் உணவேதும் எடுத்துக் கொள்ளாதபோதும், அவருடைய உற்சாகத்திற்குக் குறைவே இல்லை. அனைவரின் நலனையும் விசாரித்தார். ஸ்ரீபாத பட்டை வட வ்ருக்ஷத்திற்குக் கீழ் ஒரு குழியை தோண்டச் சொல்லி அதில் அமர்ந்து கொண்டு தியானித்தார். கண்பத் ராவை வீட்டில் பூஜையறை அமைத்து, சடங்குகளை முறையாக மேற்கொள்ளும்படி அறிவுறுத்தினார். பாளப்பாவை அக்கல்கோட்டிலேயே தங்கும்படி ஆணையிட்டார்.

பக்கதர்களின் கோரிக்கையை நிறைவேற்றும் பொருட்டு, சிறிதளவு சாதமும் தண்ணீரும் ஸ்ரீ ஸ்வாமி எடுத்துக் கொண்டார். பாளப்பா அளித்த தாம்பூலத்தையும் மறுக்காமல் ஏற்றுக் கொண்டார். ஆஹா! ஸ்ரீ ஸ்வாமியல்லவோ பக்தப்ரியன்! அவர் மெத்தையின் மீது அமர்த்தப்பட்டார். அவருடைய முகம் மேலும் பிரகாசம் அடைந்தது. தெய்வீக ஒளி அந்த இடம் முழுவதும் பரவியது. **“நான் இருக்கிறேன்”** என்று அனைவருக்கும் நம்பிக்கையூட்டும் வண்ணம், தன் கைகளை உயர்த்தி ஆசீர்வதித்தார். சூரியன் இன்னும் சில நிமிடங்களில் அஸ்தமனம் ஆகப்போகிறது, இந்த உலகமே இருளில் மூழ்கப்போகிறது என்பதை அனைவரும் அறிந்து கொண்டனர். அனைவரும் தாளமுடியாத துக்கத்தில் இருந்தனர். அனுஷ்டானங்கள் மேற்கொள்ளலாமா என்று சில பக்தர்கள் கேட்டதற்கு ஸ்ரீ ஸ்வாமி மறுத்துவிட்டார். ஆனால் பசுக்கள் மற்றும் கன்றுகளை அவிழ்த்துவிடுவதற்கு சம்மதம் தெரிவித்தார். அப்போது மதியம் மணி ஒன்று. பசுக்களும் கன்றுகளும் ஸ்ரீ ஸ்வாமியிடம் ஓடிவந்து, அவருடைய கட்டிலை சூழ்ந்து கொண்டன. அவை என்னதான் உணர்ந்து கொண்டனவோ தெரியவில்லை! அவைகளின் கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தோடின. ஸ்ரீ ஸ்வாமி பாசத்துடன் பசுக்களை வருடிக் கொடுத்தார். ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களை மெதுவாக தன் தலையால் தொட்டுவிட்டு, பிரிய மனமில்லாமல் அந்த இடத்தை விட்டுச் சென்றன.

**“மீன ராசி, சனி இப்போது இருக்கும் இந்த நிமிடம் புனிதமானது. இந்த நேரத்தில் அனைவரும் தானம் அளிப்பார்கள்”** என்று ஸ்ரீ ஸ்வாமி கூறியவுடன், **“ஸ்வாமி, ஏதாவது தானம் அளிக்கிறீர்களா?”** என்று ஒரு பக்தர் கேட்டார். **“என்னிடம் இப்போது என்ன இருக்கிறது? வெறும் கௌபீனம் மட்டுமே இருக்கிறது. அதையும் நான் விரைவில் துறக்கப் போகிறேன்”** என்று பதிலளித்தார்.





அப்போது ராமசாஸ்திரி அளித்த 350/- ரூபாய் மதிப்புள்ள சால்வை ஸ்ரீ ஸ்வாமியிடம் இருந்தது. அது அவரிடம் கொடுக்கப்பட்டது. அப்போது இன்னொரு பக்தர், "ஸ்வாமி, குளிர் மிகவும் அதிகமாக இருக்கிறது. நாம் உள்ளே செல்லலாம்" என்று கூறியதற்கு மறுப்பு தெரிவித்துவிட்டு, **"நான் இந்த மரத்துடன் ஐக்கியம் ஆக வேண்டும்"** என்று ஆலமரத்தை சுட்டிக்காட்டிக் கூறினார். மஹாராணி ஸ்ரீ ஸ்வாமியின் தரிசனத்துக்காக வந்திருந்தார். ஸ்ரீ ஸ்வாமி உற்சாகத்துடன் காணப்பட்டதைக் கண்டு அவருக்கு சிறிது நம்பிக்கை ஏற்பட்டது. அவர் தரிசனத்தை முடித்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றுவிட்டார்.

மாலை மணி நான்கை எட்டியது. அந்த நிமிடமும் நெருங்கிக் கொண்டே இருந்தது! ஸ்ரீ ஸ்வாமி ஒரு சேவகரை தலையணை ஒன்றை கொண்டுவருமாறு கூறினார்.(சிலர் அவர் பத்மாசனத்தில் அமர்ந்து கொண்டார் என்றும் கூறுகின்றனர்) அதில் சாய்ந்து கொண்டு கண்களை மூடிக் கொண்டார். அருகில் இருந்த மருத்துவர் அவர் நாடியை சோதித்துப் பார்த்தபோது, அவருடைய உயிர் பிரிந்து விட்டதை உறுதிப்படுத்தினார். அழுகை சத்தம் விண்ணைப் பிளந்தது. அனைவரும் தங்கள் மார்பிலும் தலையிலும் அடித்துக் கொண்டு அழுது புரண்டனர். இந்த உலகமே இருண்டுவிட்டதே! மஹராஜ்.., ஸ்வாமி.., தத்தாத்ரேயா... அன்னையே... தந்தையே... எங்களை விட்டு சென்றுவிட்டாயா? என்று கதறினர். கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமி அனைவருடைய ஓலங்களைக் கேட்டு தன் கண்களை திறந்து பார்த்தார். அனைவருக்கும் மீண்டும் ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. அனைவருக்கும் தன் கைகளால் அமைதியாக இருக்கும்படி சைகை செய்தார். என்ன நடக்கப்போகிறது என்று அனைவரும் ஆச்சரியத்துடன் கவனித்தபோது, ஸ்ரீ ஸ்வாமி மஹராஜ் ஒரு ஸ்லோகத்தைக் கூறினார். பகவத்கீதையில் உள்ள ஒன்பதாவது அத்தியாயத்தின் 22வது ஸ்லோகமான

**அநந்யாஸ்[2]சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே |**
**தேஷாம் நித்யாபி[4]யுக்தாநாம் யோக[3]க்ஷேமம் வஹாம்யஹம் || 9- 22||**

என்னும் ஸ்லோகத்தைக் கூறி **"தன்னை மட்டுமே தியானிக்கும் ஒருவனுக்கு, அவனுடைய அனைத்து தேவைகளையும் நிவர்த்தி செய்வேன்"** என்று வாக்குறுதி அளித்துவிட்டு தன் அபயஹஸ்தத்தால் ஆசீர்வாதம் செய்துவிட்டு கண்களை மீண்டும் மூடிக்கொண்டார். இது என்ன கனவா! என்று அனைவரும் குழம்பி மீண்டும் அழத் தொடங்கினர். இதுபோல

பக்தவாத்சல்யத்தை இனிமேலும் அனுபவிக்க இயலுமோ! என்று பக்தர்கள் துடித்தனர்.

**ஜன்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்வத...**
**த்யக்த்வா தேஹம் புனர்ஜன்ம நைதி மாமேதி ஸோர்ஜுன...||4-9||**

என்கிற பகவத் கீதையின் கூற்றுப்படி, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் போன்ற அவதாரங்களின் பிறவி நோக்கத்தை உணர்ந்தவர்கள் அவருடன் ஐக்கியம் ஆகிவிடுகிறார்கள்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் அவதாரத்தை முடித்துக் கொண்டார் என்கிற விஷயம் காட்டுத்தீ போலப் பரவியது. மக்கள் கடல் போல குவிந்தனர். அக்கல்கோட் முழுவதும் அழுகுரல்கள் எதிரொலித்தது. ஒருமணி நேரத்தில் ஒரு மரப் பல்லக்கு அலங்காரத்துடன் தயார் செய்யப்பட்டது. வேத கோஷங்களுடன், ஸ்ரீ ஸ்வாமிக்கு பண்டிதர்கள் அபிஷேகம் செய்தனர். விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, கடைசி ஆரத்தியை அனைவரும் உரத்த குரலில் பாடினார்கள். சரஸ்வதி தேவியே பாடியது போல அனைவரும் உணர்ந்தனர். யானை சேனை படைகளுடன், மேளதாளம், பஜனைகள், பட்டாசு சப்தத்துடன், வாசனை பொருட்கள் தூவிக் கொண்டே ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஸ்தூல உடல் மரியாதையுடன் பல்லக்கில் வைக்கப்பட்டு ஊர்வலமாக சோளப்பாவின் வீட்டுக்கு அருகில் அமைக்கப்பட்டிருந்த குழிக்குள் சம்பிரதாய முறைப்படி வைக்கப்பட்டது. மீண்டும் ஆரத்தி காட்டப்பட்டு அந்த குழி மூடப்பட்டது. சம்பிரதாயங்கள் அனைத்தும் முடிவடைய நள்ளிரவு ஆனபோதும், ஸ்ரீ ஸ்வாமியுடைய முகத்தில் தேஜஸ் குறையவே இல்லை.

**அனந்த கோடி பிரமாண்ட நாயக் ராஜாதி ராஜ யோகிராஜ**
**அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி உண்டாகட்டும்**
**அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தருக்கு வெற்றி உண்டாகட்டும்**

என்ற கோஷம் உலகமெங்கும் பரவியது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சைதன்யம் இந்த பிரபஞ்சம் முழுவதும் வியாபித்தது. பக்தவத்சலனான ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர், தன் மாயையான ஸ்தூல உடலைத் உதிர்த்து விட்டாலும், என்றைக்கும் நம் அனைவருடைய மனதிலும் நீக்கமற நிறைந்திருக்கிறார் என்பதில் எந்தவித சந்தேகமும் இல்லை.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

## அத்தியாயம் 205

# எனக்கு அழிவே இல்லை...

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் ஸ்தூல உடல் மறைந்தாலும் அவர் இன்றும் அனைவருடைய பிரார்த்தனைகளை செவிமடுத்து, அதற்கான பதில்களை கனவிலோ, வேறு விதமாகவோ அருளிக் கொண்டுதான் இருக்கிறார். கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வந்து தன் பக்கதர்களை ரட்சிப்பதில் எந்தவித வித்தியாசமும் காட்டவில்லை. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சமாதி அடைந்தபிறகு தன் பக்தர்களுக்கு அளித்த காட்சிகளை இந்த அத்தியாயத்தில் பார்க்கலாம்.

### 1. ஸ்ரீ பாளப்பாவை தேற்றுவது

ஸ்ரீ ஸ்வாமியின் பரம பக்தரான பாளப்பாவால் ஸ்ரீ ஸ்வாமியின் பிரிவை தாங்கிக் கொள்ள முடியவில்லை. அந்திம காரியங்களின் போது பாளப்பா தைரியமாக காணப்பட்டாலும் நாட்கள் செல்லச் செல்ல இடிந்து போனார். ஸ்ரீ ஸ்வாமி இல்லாத இந்த உலகத்தில் இனி வாழ முடியாது என்பதை உணர்ந்து கொண்டு தன் உயிரை மாய்த்துக் கொள்ள, ஆகாரத்தைத் தவிர்த்து, ஒரு சொட்டு தண்ணீர் கூட அருந்தாமல் ஸ்ரீ ஸ்வாமியின் நினைவுகளிலேயே மூழ்கினார். இந்த உண்ணாவிரதத்தின் மூன்றாவது நாள் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் கமண்டலத்துடன் அவருக்குக் காட்சி அளித்தார். சந்தோஷ வெள்ளத்தில் பாளப்பா ஸ்ரீ ஸ்வாமியின் பாதங்களைப் பற்றிக் கொண்டார். ஸ்ரீ ஸ்வாமியே தன் கரங்களால் பாளப்பாவை எழுப்பி நிறுத்தி, **“மகனே! வருத்தப்படாதே. இது உனக்கு நன்மை அளிக்காது. நான் உனக்கு என் பாதுகைகளை அளித்துள்ளேனே! அதில் என்னை தரிசனம் செய்து கொள். நான் உன்னுடன்தான் இருக்கிறேன். நான் தினமும் நீ செய்யும் சேவைகளை ஏற்றுக் கொண்டுதான் இருக்கிறேன். என் ஸ்தூல உடலுடன் இருக்கும் பிணைப்பை கடந்து, என் ஸ்வயம் ஸ்வரூபமான குணத்தை உணர்ந்து கொள். அது அனைத்து உயிர்களிலும் வியாபித்திருக்கிறது. என்னுடைய பரிபூரண ஆசீர்வாதம் உனக்கு எப்போதும் உண்டு”** என்று கூறிவிட்டு மறைந்துவிட்டார். ஸ்ரீ ஸ்வாமியின் அறிவுரைகளைக் கேட்டு திருப்தி அடைந்த பாளப்பாவுக்கு தைரியம் ஏற்பட்டது. பாளப்பா சிறிது காலத்திற்குப் பிறகு குருமந்திர் என்னும் இடத்தை நிறுவி அதில் ஸ்ரீ ஸ்வாமி அவருக்கு அளித்த பாதுகைகளை பிரதிஷ்டை செய்தார்.

## 2. நீல்காவ்வில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர்

நீல்காவின் முன்னாள் நிஜாமான பாவ் சாஹேப் ஜமீன்தார் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் பரம பக்தர். ஸ்ரீ ஸ்வாமி முன்னர் ஒரு சமயம் அவருடைய வீட்டுக்கு வந்த போது அவருக்கு வழிபாடுகள் செய்து திலகமும் அக்ஷதையும் இட்டு பூஜைகள் செய்தார். ஸ்ரீ ஸ்வாமியின் திலகத்திலிருந்து விழுந்த அக்ஷதைகளில் மூன்றை எடுத்து அவர் நிஜாம் தம்பதிக்கு பிரசாதமாக அளித்தார். அப்போது அவர்களுக்கு குழந்தைகள் இல்லை. ஸ்ரீ ஸ்வாமியின் ஆசீர்வாதத்தினால் அவர்களுக்கு இரு மகள்களும், ஒரு மகனும் பிறந்தனர்.

ஸ்ரீ ஸ்வாமி சமாதி அடைவதற்கு முன்னர் வந்த தத்த ஜெயந்தியின் போது பாவ் சாஹேப் அக்கல்கோட் சென்று ஸ்ரீ ஸ்வாமியை தரிசனம் செய்துவிட்டு தன்னுடைய வீட்டுக்கு வர வேண்டும் என்று அழைப்பு விடுத்தார். **"கண்டிப்பாக உன் விருப்பம் நிறைவேறும்"** என்று ஸ்ரீ ஸ்வாமி ஆசீர்வதித்தார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி சில மாதங்களில் சமாதி அடைந்துவிட்டார். பாவ் சாஹேப் தூரமான இடத்தில் வசிப்பதால் அவருக்கு ஸ்ரீ ஸ்வாமி சமாதி அடைந்த தகவல் தெரியவில்லை. சமாதி அடைந்து ஐந்து நாட்களுக்குப் பிறகு நீல்காவ் நகரத்தின் புறநகரில் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தோன்றியுள்ளதாக தகவல் பரவியது. அவர் அங்கு சென்று தரிசனம் செய்துவிட்டு, தன் வீட்டுக்கு அழைப்பு விடுத்தார். **"கண்டிப்பாக நாளை வருகிறேன்"** என்று அவரிடம் ஸ்ரீ ஸ்வாமி உறுதி அளித்தார்.

அடுத்தநாள் காலையில் பாவ் சாஹேப் ஸ்ரீ ஸ்வாமி இருந்த இடத்திற்கு சென்று பார்த்தபோது அவர் அங்கு இல்லை. மிகுந்த வருத்தத்துடன் அவர் ஒரு தூதுவனை அக்கல்கோட் அனுப்பி தன் வீட்டுக்கு அழைப்பு விடுக்குமாறு அனுப்பி வைத்தார். அந்த தூதுவன் அக்கல்கோட் சென்றடைவதற்கு முன்பாகவே ஸ்ரீ ஸ்வாமி அவருடைய வீட்டில் தோன்றினார். அப்போதுதான் பாவ் சாஹேப் சாப்பாட்டுக்காக அமர்ந்தார். ஸ்ரீ ஸ்வாமி வந்திருப்பதை கவனித்த பாவ் சாஹேப் உடனடியாகச் சென்று அவரை அழைத்து வந்து உணவுக்காக அமரவைத்தார். ஆனால் ஸ்ரீ ஸ்வாமி திடீரென அப்போது தென்படவில்லை. இந்நிகழ்ச்சி நடைபெற்றது சனிக்கிழமையன்று. ஸ்ரீ ஸ்வாமியின் சமாதி அடைந்ததோ அதற்கு முன்னால் வந்த செவ்வாய்க் கிழமையன்று. தூதுவன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சமாதி அடைந்த செய்தியுடன் வந்து சேர்ந்தான். இதைக் கேட்டவுடன் பாவ் சாஹேப்புக்கு வருத்தம் இருந்தாலும், தான் அளித்த வாக்கை ஸ்ரீ ஸ்வாமி நிறைவேற்றியதை எண்ணி பூரிப்படைந்தார். கடவுள் தன் பக்தனை ஏமாற்றுவதே இல்லை!





## 3. புனேவைச் சேர்ந்த வாமன்ராவ் கோலப்

புனேவைச் சேர்ந்த வாமன்ராவ் கோலப் கராச்சியில் பொறியியல் துறையில் வேலை செய்து கொண்டிருந்தார். அவர் மக்களை துன்புறுத்தி பணம் வசூல் செய்து கொண்டிருந்தார். பின்னர் திருமணமான ஒரு பெண்ணுடன் தகாத உறவில் ஈடுபட்டார். அதை கண்டுபிடித்த அப்பெண்ணின் கணவன் அவரின் மீது வழக்கு பதிவு செய்தான். அவர் சிறையில் அடைக்கப்பட்டார். தன் தவறை உணர்ந்து முழு மனதுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரிடம், **"அக்கல்கோட்டில் வாசம் செய்யும் அன்னையே! என்னை காத்து ரட்சிப்பாயாக. இனி இது போன்ற இழிவான செயலில் நான் ஈடுபட மாட்டேன். தயவுசெய்து என்னை காப்பாற்றுங்கள்"** என்று பிரார்த்தனை செய்து கொண்டே மயங்கி விழுந்தார். பசு எப்படி தன் கன்றை நோக்கி ஓடுமோ, அதேபோல ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் தன் பக்தனை நோக்கி ஓடோடி வந்தார். அவர் திகம்பரராக அவருக்கு காட்சி அளித்தார். அவர் வாமன்ராவை அரவணைத்துக் கொண்டு, **"பயப்படாதே! உன் கஷ்டங்கள் அனைத்தும் விரைவில் சரியாகிவிடும்"** என்று கூறிவிட்டு மறைந்து விட்டார். வாமன்ராவ் சுயநினைவுக்கு வந்தவுடன் அங்கு எவரும் தென்படவில்லை.

அடுத்த நாள் காலையில் வழக்கு விசாரணைக்கு வந்தது. சரியான சாட்சிகள் இல்லாத காரணத்தால், வழக்கை நிரூபிக்க முடியவில்லை. கோலப் விடுவிக்கப்பட்டார். அவர் தன் வேலையை ராஜினாமா செய்துவிட்டு அக்கல்கோட் சென்றடைந்தார். அங்கு சென்று விசாரித்தபோது, ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சமாதி அடைந்துவிட்டார் என்ற தகவலை அறிந்து கொண்டு மிகுந்த சோகத்தில் ஆழ்ந்தார். இருப்பினும் அவருக்கு தரிசனம் அளித்ததை உணர்ந்து ஆச்சரியத்தில் மூழ்கினார். அவர் ஸ்ரீ ஸ்வாமிக்கு நைவேத்தியம் படைத்துவிட்டு, பிராமண போஜனம் அளித்துவிட்டு தன் சொந்த ஊருக்கு பயணித்தார்.

மகான்கள் பிறப்பதும் இல்லை; அழிவதும் இல்லை; அவர்கள் என்றென்றும் நம்முடன் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்களை உணர்ந்து அனுபவிக்கும் ஞானம் நம்மில் பலருக்கு இல்லை என்பதே சத்தியமான உண்மை!

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சீடர்கள்

சத்குரு தன் சீடனையும் தன்னைப் போலவே ஆக்கி விடுகிறார். குருவின் கருணா கடாக்ஷம் முழுமையாக கிடைக்கப் பெற்ற ஒரு பக்தன், தன் குருவின் கட்டளைக்கிணங்க தன் வழிமுறைகளை மாற்றிக் கொள்கிறான். பின்னர் அவன் ஆன்மிக நிலையில் அதீத முன்னேற்றம் அடைந்து குருவுடன் ஐக்கியம் ஆகிவிடுகிறான். அப்படிபட்ட உன்னதமான நிலைக்கு ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் தன் சீடர்கள் பலரை இட்டுச் சென்றிருக்கிறார். சத்குருவான சிலரின் பெயர்கள் இங்கு பட்டியலாக அளிக்கப்பட்டுள்ளது.

1. ஸ்ரீ கிருஷ்ண சரஸ்வதி அல்லது கும்பார் ஸ்வாமி- கோல்ஹாபூர்
2. பாளப்பா மஹராஜ் - அக்கல்கோட்
3. பீட்க்கார் மஹராஜ்- புனே
4. நரசிம்ம சரஸ்வதி- ஆலந்தி
5. வாமன் புவா வாமோரிக்கர்
6. தாகூர் தாஸ் புவா - மும்பை
7. ஹரி பாவ் அல்லது ஸ்வாமி சுத மஹராஜ்- மும்பை
8. கோபால் புவா கேல்கர் அல்லது ஸ்வாமி ப்ரீதானந்த ஸ்வாமி குமார்- சிப்லுன்
9. தாத் மஹராஜ் - மும்பை
10. தேவ் மாம்லத்தார் - நாசிக்
11. ஆனந்த்நாத் மஹராஜ் வெங்குர்லா
12. ஆனந்த் பாரதி அல்லது லக்ஷ்மி கோலி- தானே மும்பை
13. ரங்கோலி மஹராஜ் - கோல்ஹாபூர்
14. மைந்தர்கியின் ஜமீந்தார்
15. சீதாராம் புவா- மங்கள் வேடா
16. தாதா சாஹேப் அல்லது சச்சிதானந்த ஸ்வாமி குமார் - மும்பை
17. கோலப்ப பாபா- நாசிக்





18. கல் புவா - புனே

19. மயூரானந்த சரஸ்வதி - சோப்பாரா

20. நானா ரேக்கி- அஹமது நகர்

21. ஷங்கர் மஹராஜ்- புனே

22. ஜங்கிலி மஹராஜ் - புனே

23. பாவ்டேகர் புவா - பார்ஷி

24. சச்சிதானந்த மஹராஜ் - பண்டரிபுரம்

25. ஸ்ரீபதி பாபா மஹராஜ் - மஹாலுங்கே

26. கோபாலகிருஷ்ண ஸ்வாமி- ஹுபரி

27. கஜானன் மஹராஜ் - அக்கல்கோட்

இங்கு குறிப்பிடப்பட்டுள்ள மகான்கள் மட்டுமல்லாமல், இமயம் முதல் குமரி வரை பலரை மகான்களாக மாற்றியுள்ளார். மேலும் மக்களை நல்வழி படுத்துவதற்காக, இன்றும் பலருக்கு மானசீக குருவாக இருந்து கொண்டு இந்த உலகத்தை வழிநடத்திக் கொண்டிருக்கிறார் என்பது திண்ணம்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

# நிறைவு

அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் என்னும் ஸ்ரீ தத்தாத்திரேய அவதாரியின் லீலா வினோதம் அள்ள அள்ள குறையாத அமிர்தம் போன்றது. அவருடைய அவதாரத்தின் ஸ்தூல உடல் மறைவில் இருந்தாலும், இன்றும் அவர் தன் கருணா கடாக்ஷத்தை, லீலைகள் புரிவதை தொடர்ந்து நிகழ்த்திக் கொண்டுதான் இருக்கிறார்.

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் வாழ்ந்த காலத்தில் அவரை தரிசனம் செய்வதற்காக பலவகையான பக்தர்கள் வருவார்கள். கலியுகத்தில் தீய எண்ணம் கொண்ட மக்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டுதான் இருக்கிறது. முந்தைய யுகங்களில் ராக்ஷசர்களாக பிறவி எடுத்தவர்கள் இந்த யுகத்தில் நம்மிடையே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இந்த கலியின் பிரபாவத்திலிருந்து தப்பிக்க பலவகையான பரிகாரங்களையும் பாராயணங்களையும் செய்ய வேண்டியுள்ளது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் எப்போதும் வேதங்கள் மற்றும் புராணங்களில் வரும் ஸ்லோகங்களின் வரிகள், அபங்கங்களின் சில பாட்டு வரிகள் ஆகிவயற்றை முணுமுணுத்துக் கொண்டே இருப்பார். அவற்றில் மிக முக்கியமான ஒரு ஸ்லோகமானது:

**த்யான மூலம் குரோர் மூர்த்தி**
**பூஜா மூலம் குரோர் பதம்**
**மந்த்ரமூலம் குரோர் வாக்யம்**
**மோக்ஷ மூலம் குரோர் கிருபா!**

குருவின் உருவமே தியானத்திற்கு உகந்தது. குருவின் பாதங்களே வழிபாட்டுக்கு உகந்தது. குருவின் வாக்கே மந்திரம். குருவின் கிருபையிருந்தால் மோக்ஷம் நிச்சயம்.




இந்த உலகத்தில் வாழும் அனைத்து ஜீவராசிகளின் நலனுக்காக பிரார்த்தனை செய்து, அனைவருக்கும் குருவின் கருணை கடாக்ஷம் முழுமையாக கிடைக்க வேண்டும் என்கிற மனப்பூர்வமான பிரார்த்தனையுடன் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சரித்திரத்தை நிறைவு செய்வோமாக!

**அனந்த கோடி பிரம்மாண்ட நாயக**
**ராஜாதி ராஜ யோகிராஜ**
**அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த மஹராஜுக்கு**
**வெற்றி உண்டாகட்டும்!!**

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

***சுபமஸ்து***

लोका: समस्ता: सुखिनो भवन्तु



# हम गया नहीं, जिंदा है!
## நான் எங்கும் செல்லவில்லை, உயிருடன்தான் இருக்கிறேன்

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் உயிர் ஸ்தூல உடலைப் பிரிந்து பிரபஞ்சத்தில் கலக்கப்போகும் சமயத்தில் அவர் தன் பக்தர்களுக்கு நம்பிக்கையூட்டும் வண்ணம், (हम गया नहीं,जिंदा है! ஹம் கயா நஹி ஜிந்தா ஹென்) நான் எங்கும் செல்லவில்லை, உயிருடன்தான் இருக்கிறேன் என்று கூறினார். அதை நிரூபிக்கும் வகையில் இந்த புத்தகத்தை எழுதிக் கொண்டிருக்கும் சமயத்தில் சில லீலைகள் நடந்தேறின. அவை உங்களுக்காக!!

**1. திரு. சஞ்சய் சங்கர் நாரங்கிகர் மற்றும் அக்கல்கோட் ராஜேவின் அறிமுகம்:**

திரு. சஞ்சய் சங்கர் நாரங்கிகர் மும்பையைச் சேர்ந்த ஸ்ரீ ஸ்வாமி பக்தர். அவருடைய அறிமுகம் அவருடைய *youtube* சேனல் வாயிலாக எனக்கு கிடைத்தது. அவர் நான் அக்கல்கோட் வரவேண்டும் என்றும், அங்கிருக்கும் அனைத்து இடங்களையும் அவரே நேரில் வந்து சுற்றிக் காட்டுவதாக கூறி அழைத்தார். நாங்கள் நால்வர் சென்னையிலிருந்து கானகாபூர் சென்று ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதியை தரிசனம் செய்துவிட்டு, அக்கல்கோட் சென்றடைந்தோம். அதுவரை எங்களனைவரையும் நேரில் கண்டிராத திரு. சஞ்சய், நாங்கள் அங்கு வசதியாக தங்க *AC* அறையை முன்பதிவு செய்து வைத்து, எங்களுக்காக ஒரு நாள் முன்னதாகவே அங்கு வந்து காத்திருந்தார். எங்களுக்கு எந்தவித சிரமும் ஏற்படாமல் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் பார்த்துக்கொண்டார். அனைத்து இடங்களுக்கும் எப்படி செல்ல வேண்டும், அங்கு நடைபெற்ற லீலைகள் ஆகியவற்றை திரு.சஞ்சய் மூலம் ஸ்வாமியே விளக்கினார் என்று உணர்ந்து கொண்டோம். புதிய அரண்மனையில் உள்ள அருங்காட்சியகத்தை காண்பதற்காக சென்ற போது, அங்கிருந்த ஸ்ரீ மாலோஜி ராஜே *III* வை ஸ்ரீ ஸ்வாமி சந்திக்க வைத்தார். நாங்கள் தமிழ்நாட்டில் இருந்து வந்திருப்பதை

அறிந்து மிகுந்த சந்தோஷத்துடன் வரவேற்று உபசரித்தார். மேலும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் புத்தகம் தமிழில் நல்ல முறையில் வரவேண்டும் என்று வாழ்த்துக்கள் கூறி அனுப்பினார். இவை அனைத்தும் எங்களுக்கு மிகுந்த ஆச்சரியத்தையும், ஸ்ரீ ஸ்வாமியே அனைத்தையும் வழி நடத்துகிறார் என்பதை உணர வைத்தார். மேலும் ஸ்ரீ ஸ்வாமியே என்னை கருவியாகக் கொண்டு இந்த புத்தகத்தை எழுதுகிறார் என்பதை பல சமயங்களில் உணர்த்தினார். இந்த புத்தகம் முழுமையடைந்து நீங்கள் அனைவரும் பாராயணம் செய்வது ஸ்ரீ ஸ்வாமியின் சங்கல்பம் மட்டுமே!

## 2. ஸ்ரீ தத்தாத்ரேயர் சிலை வீட்டுக்கு வந்தது

ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரும் ஸ்ரீ தத்தாத்ரேயரும் வேறல்ல என்பது நாம் அறிந்த ஒன்று. இந்த புத்தகம் எழுதிக் கொண்டிருந்த சமயத்தில் இந்த சம்பவம் நடந்தது. மயிலாடுதுறையில் இருக்கும் ஒரு சாய்பாபா கோவிலில் ஸ்தாபனம் செய்வதற்காக ஒரு தத்தாத்ரேயர் சிலையை அந்த கோவில் நிர்வாகிகள் ராஜஸ்தானிலிருந்து வரவழைத்தனர். வண்டியோட்டி ஸ்ரீ தத்தாத்திரேய ஸ்வாமியை சென்னையிலேயே இறக்கி வைத்து விடுவதாக கூறியதால், அந்த நிர்வாகி எங்கள் வீட்டில் சில நாட்களுக்கு வைத்திருக்கும்படி கூறினார். கரும்பு தின்ன கூலியா? நானும் சம்மதித்தேன். ஆனால் பெட்டியை திறக்கவில்லை. ஒரு வாரத்தில் வருவதாக கூறிய அந்த நிர்வாகி, கடைசியில் வரவேயில்லை (அவர் திடீரென மரணம் அடைந்துவிட்டார்). என்ன செய்வதென்று புரியாமல் தவித்த போது, அந்த பெட்டியை திறந்து என்னை வெளியே எடு என்று ஸ்ரீ தத்தாத்ரேயர் கூறுவது போல கேட்டுக்கொண்டே இருந்தது. ஒரு வியாழக்கிழமையன்று அந்த கோவிலின் தற்போதைய நிர்வாகிகளின் அனுமதியோடு ஸ்ரீ தத்தரை அப்பெட்டியில் இருந்து விடுவித்து, தினசரி பூஜைகள் நடக்கத் தொடங்கின. அதுவரை மெதுவாக சென்று கொண்டிருந்த எழுத்துப்பணி, துரிதப்படுத்தப்பட்டு முடிவடைந்தது. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தர் சிலா ரூபமாக வந்து வழிநடத்தினார். ஸ்ரீ தத்தாத்ரேயரின் அருளால் அனைத்து வேலைகளும் எந்தவித தடையும் இல்லாமல் நடந்தேறியது. அவரே அருகில் அமர்ந்து கொண்டல்லவா இந்த சரித்திரத்தை எழுத வைத்தார்! உலக தமிழ் பக்தர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் சரித்திரத்தை பாராயணம் செய்து இன்புற்றிருக்க வேண்டும் என்பதற்காக ஸ்ரீ தத்தாத்ரேயர் நிகழ்த்திய அற்புதமான லீலை அல்லவோ இது!

## 3. அக்கல்கோட் பயணத்திற்கு ஒரு வழிகாட்டி

நான் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரின் அருளால் புத்தக எழுத்துப்பணியை நிறைவு செய்து அதை ஸ்ரீ ஸ்வாமியிடம் சமர்ப்பணம் செய்வதற்காக 2023 மார்ச் மாதம், என் குடும்பத்துடன் அக்கல்கோட் பயணம் மேற்கொண்டேன். அப்போது ஒரு கடையில் உணவு வாங்கிக் கொண்டிருந்தபோது முகம் தெரியாத அன்பர் ஒருவர் வந்து நீங்கள் தமிழரா அல்லது மலையாளியா என்று என் கணவரிடம் வினவினார். நாங்கள் சென்னையிலிருந்து இங்கு வந்ததற்கான காரணத்தை அவரிடம் விவரித்தபோது அவர் மிகவும் மகிழ்ச்சியடைந்து எங்களுக்கு பாதாம் பால் வாங்கிக் கொடுத்து உபசரித்தார். அவர் தன்னுடைய பெயர் திரு. விஜயகுமார் என்றும், தான் சில காலங்கள் சென்னையில் பணி செய்திருப்பதால் தமிழ்மொழி சிறிதளவு தெரியும் என்று கூறியது எங்களுக்கு மிகவும் மகிழ்ச்சியளித்தது. அவருடைய கைபேசி எண்ணை பெற்றுக் கொண்டு நாங்கள் விடைபெற்றுக் கொண்டோம். இந்த நிகழ்ச்சி எதற்காக நிகழ்ந்தது என்பதற்கான காரணம் பின்னாட்களில் எங்களுக்கு புரிந்தது. ஸ்ரீ ஸ்வாமி காரண காரியம் இல்லாமல் எதையும் செய்வதில்லை.

அதே ஆண்டு ஏப்ரல் மாதம் ஒரு பக்தர்கள் குழு தமிழ்நாட்டிலிருந்து கானகாபூர், அக்கல்கோட், ஷீரடி ஆகிய இடங்களுக்கு பயணம் மேற்கொண்டனர். அவர்களுக்கு மராத்தி மற்றும் ஹிந்தி மொழியில் பரிட்சயம் இல்லாததால், அக்கல்கோட்டில் சுற்றிப்பார்க்க ஒரு வழிகாட்டி துணை தேவைப்படுவதாக கூறினர். உடனே எனக்கு திரு. விஜயகுமார் அவர்களின் நினைவு வந்தது. அவரிடம் கூறியவுடன் தன் பாக்கியமாக கருதுவதாகக் கூறினார். தன் வேலைகள் அனைத்தையும் தள்ளி வைத்துவிட்டு ,அவர்களுக்கு *AC* அறை முதல் டாக்ஸி வரை அனைத்து ஏற்பாடுகளையும் செய்து கொடுத்து, இரண்டு நாட்கள் அவர்களுடன் அனைத்து இடங்களையும் சுற்றிக் காட்டி அற்புதமாக தரிசனம் செய்து வைத்தார். தமிழ்நாட்டிலிருந்து சென்ற பக்தர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமியின் அன்பு மழையில் நனைந்து ஆனந்தப் பரவசம் அடைந்தனர். அக்கல்கோட்டை விட்டு பிரிய மனமில்லாமல், தங்கள் பயணத்தை தொடர்ந்தனர். அன்பு என்னும் வலையில் தன் பக்தர்களை கட்டிப் போட்டிருக்கும் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தரை விட்டுப் பிரிய கல்மனம் படைத்தவரால் கூட முடியாதல்லவா! அப்படியென்றால் அவர் பக்தர்களுக்கு?

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

ஓம் திகம்பராய நம: |
ஓம் வைராக்யாம்பராய நம: |
ஓம் ஜ்ஞாநாம்பராய நம: |
ஓம் ஸ்வாநந்தாம்பராய நம: |
ஓம் அதி திவ்ய தேஜாம்பராய நம: |
ஓம் காவ்ய ஷக்தி ப்ரதாயிநே நம: |
ஓம் அம்ருத மந்த்ர தாயிநே நம: |
ஓம் திவ்ய ஜ்ஞாநதாய நம: |
ஓம் திவ்ய சக்ஷுதாயிநே நம: |
ஓம் சித்தாகர்ஷணாய நம: || 10 ||

ஓம் சித்தப்ரஷாந்தாய நம: |
ஓம் திவ்யாநு ஸந்தாந ப்ரதாயிநே நம: |
ஓம் ஸத் குணவிவர்தநாய நம: |
ஓம் அஷ்ட ஸித்தி தாயகாய நம: |
ஓம் பக்தி வைராக்யதாய நம: |
ஓம் புக்தி முக்தி ஷக்தி ப்ரதாயிநே நம: |
ஓம் ஆத்ம விஜ்ஞாந ப்ரேரகாய நம: |
ஓம் அம்ருதா நந்ததாய நம: |
ஓம் கர்வ தஹநாய நம: |
ஓம் ஷட்ரிபு ஹரிதாய நம: || 20 ||

ஓம் பக்த ஸம்ரக்ஷகாய நம: |
ஓம் அநந்த கோடி ப்ரஹ்மாண்ட ப்ரமுகாய நம: |
ஓம் சைதந்யதேஜஸே நம: |
ஓம் ஸ்ரீஸமர்த யதயே நம: |
ஓம் ஆஜாநுபாஹவே நம: |
ஓம் ஆதிகுரவே நம: |
ஓம் ஸ்ரீபாத ஸ்ரீவல்லபாய நம: |
ஓம் ந்ருஸிம்ஹபாநுஸரஸ்வத்யை நம: |
ஓம் அவதூத தத்தாத்ரேயாய நம: |
ஓம் சஞ்சலேஷ்வராய நம: || 30 ||

ஓம் குரவபுரவாஸிநே நம: |
ஓம் கந்தர்வபுரவாஸிநே நம: |
ஓம் கிரநாரவாஸிநே நம: |
ஓம் ஶ்ரீஷைல்யநிவாஸிநே நம: |
ஓம் ஓங்காரவாஸிநே நம: |
ஓம் ஆத்மஸூர்யாய நம: |
ஓம் ப்ரகரதேஜ:ப்ரவர்திநே நம: |
ஓம் அமோக தேஜாநந்தாய நம: |
ஓம் தைதீப்ய தேஜோதராய நம: |
ஓம் பரமஸித்த யோகேஷ்வராய நம: || 40 ||

ஓம் க்ருஷ்ணாநந்த-அதிப்ரியாய நம: |
ஓம் யோகிராஜ ராஜேஷ்வராய நம: |
ஓம் அகாரண காருண்யமூர்தயே நம: |
ஓம் சிரஞ்ஜீவ சைதந்யாய நம: |
ஓம் ஸ்வாநந்த கந்தஸ்வாமிநே நம: |
ஓம் ஸ்மர்த்ருகாமிநே நம: |
ஓம் நித்யசிதாநந்தாய நம: |
ஓம் பக்த சிந்தாமணீஷ்வராய நம: |
ஓம் அசிந்த்ய நிரஞ்ஜநாய நம: |
ஓம் தயாநிதயே நம: || 50 ||

ஓம் பக்த ஹ்ருதய நரேஷாய நம: |
ஓம் ஷரணாகத கவசாய நம: |
ஓம் வேத ஸ்பூர்திதாயிநே நம: |
ஓம் மஹாமந்த்ர ராஜாய நம: |
ஓம் அநாஹத நாதப்ரதாநாய நம: |
ஓம் ஸுகோமல பாதாம்புஜாய நம: |
ஓம் சித்ஷக்த்யாத்மநே நம: |
ஓம் அதிஸ்திராய நம: |
ஓம் மாத்யாஹ்ந பிக்ஷாப்ரியாய நம: |
ஓம் ப்ரேம பிக்ஷாங்கிதாய நம: || 60 ||

ஓம் யோக க்ஷேம வாஹிநே நம: |
ஓம் பக்த கல்பவ்ருக்ஷாய நம: |
ஓம் அநந்த ஷக்தி ஸூத்ரதாராய நம: |
ஓம் பரப்ரஹ்மனே நம: |
ஓம் அதி த்ருப்த பரமத்ருப்தாய நம: |
ஓம் ஸ்வாவலம்பந ஸூத்ரதாத்ரே நம: |
ஓம் பால்ய பாவப்ரியாய நம: |
ஓம் பக்திநிதாநாய நம: |
ஓம் அஸமர்த ஸாமர்த்யதாயிநே நம: |
ஓம் யோக ஸித்திதாயகாய நம: || 70 ||

ஓம் ஔதும்பர ப்ரியாய நம: |
ஓம் வஜ்ர ஸுகோமல தநுதாரகாய நம: |
ஓம் த்ரிமூர்த்தித்வஜ தாரகாய நம: |
ஓம் சிதாகாஷ வ்யாப்தாய நம: |
ஓம் கேஷர சந்தந கஸ்தூரீ ஸுகந்தப்ரியாய நம: |
ஓம் ஸாதக ஸஞ்ஜீவந்யை நம: |
ஓம் குண்டலிநீ ஸ்பூர்திதாத்ரே நம: |
ஓம் அலக்ஷ்ய காலாய நம: |
ஓம் ஆநந்தவர்தநாய நம: |
ஓம் ஸுகநிதாநாய நம: || 80 ||

ஓம் உபமாதீதே நம: |
ஓம் பக்தி ஸங்கீதப்ரியாய நம: |
ஓம் அகாரண ஸித்தி க்ருபாகாரகாய நம: |
ஓம் பவபய பஞ்ஜநாய நம: |
ஓம் ஸ்மித ஹாஸ்யா நந்தாய நம: |
ஓம் ஸங்கல்ப ஸித்தாய நம: |
ஓம் ஸங்கல்ப ஸித்திதாத்ரே நம: |
ஓம் ஸர்வபந்த மோக்ஷதாயகாய நம: |
ஓம் ஜ்ஞாநாதீத ஜ்ஞாந பாஸ்கராய நம: |
ஓம் ஸ்ரீகீர்தி நாம மந்த்ராப்யாம் நம: || 90 ||






ஓம் அபய வரதாயிநே நம: |
ஓம் குரு லீலாம்ருத தாராய நம: |
ஓம் குரு லீலாம்ருத தாரகாய நம: |
ஓம் வஜ்ர ஸுகோமல ஹ்ருதயதாரிணே நம: |
ஓம் ஸவிகல்பாதீத நிர்விகல்ப ஸமாதிப்யாம் நம: |
ஓம் நிர்விகல்பாதீத ஸஹஜ ஸமாதிப்யாம் நம: |
ஓம் த்ரிகாலாதீத த்ரிகால ஜ்ஞாநிநே நம: |
ஓம் பாவாதீத பாவ ஸமாதிப்யாம் நம: |
ஓம் ப்ரஹ்மாதீத-அணுரேணு வ்யாபகாய நம: |
ஓம் த்ரிகுணாதீத ஸகுண ஸாகார ஸுலக்ஷணாய நம: || 100 ||

ஓம் பந்தநாதீத பக்தி கிரணபந்தாய நம: |
ஓம் தேஹாதீத ஸதேஹ தர்ஷந தாயகாய நம: |
ஓம் சிந்தநாதீத ப்ரேமசிந்தந ப்ரகர்ஷணாய நம: |
ஓம் மௌநாதீத-உந்மநீ பாவப்ரியாய நம: |
ஓம் புத்தயதீத ஸத்புத்தி ப்ரேரகாய நம: |
ஓம் மத்ப்ரிய-பிதாமஹ ஸத்குருப்யாம் நம: |
ஓம் பவித்ரதமதாத்யாஸாஹேப சரணார விந்தாப்யாம் நம: |
ஓம் அக்கலகோட ஸ்வாமி ஸமர்தாய நம: || 108 ||

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தார்ப்பணமஸ்து!!**



# அக்கல்கோட் பயண விவரங்கள்

அக்கல்கோட் மஹாராஷ்டிர மாநிலத்தில் அமைந்துள்ளது. இவ்வூர் சோலாப்பூர் என்னும் ஊருக்கு அருகாமையில் உள்ளது. சென்னையிலிருந்து இங்கு சென்றடைய ரயில் மார்க்கமாகவோ அல்லது விமானம் மூலமாகவோ சென்றடையலாம். அக்கல்கோட் ரோடு ரயில் நிலையத்தில் இறங்கி பேருந்து மூலம் சென்றடையலாம். மும்பை செல்லும் ரயில்கள் அனைத்தும் இந்த வழித்தடத்தில் செல்லும். சோலாப்பூர் சென்றாலும் அங்கிருந்து அக்கல்கோட்டுக்கு பேருந்து வசதிகள் உள்ளன. விமானம் மூலம் சென்றால் காலபுராகி விமான நிலையத்தில் இறங்கி சுமார் 100 கி.மீ தொலைவில் உள்ள அக்கல்கோட்டுக்கு டாக்ஸி மூலம் செல்லலாம்.

**அக்கல்கோட்டில் பார்க்க/தரிசிக்க வேண்டிய இடங்கள்**

1. ஸ்ரீ ஸ்வாமி சமாதி மடம்
2. வட வ்ருக்ஷ மந்திர்
3. ஸ்ரீ குரு மந்திர்
4. கண்டோபா மந்திர்
5. ராஜே ராய் மடம்
6. ஜோஷி மடம்
7. ஷேக் நூருதீன் பாபா தர்கா
8. சிவபுரி
9. பழைய அரண்மனை (வெளிப்புறத்திலிருந்து)
10. புது அரண்மனை மற்றும் அருங்காட்சியகம்
11. ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த புகைப்பட அருங்காட்சியகம்

அக்கல்கோட்டில் பக்தர்கள் தங்குவதற்காக குறைந்த கட்டணத்தில் வட வ்ருக்ஷ மந்திருக்கு அருகில் பக்த நிவாஸ் உள்ளது. மேலும் ராஜே ராய் மடம் மற்றும் கோவிலை சுற்றி பல இடங்களில் குறைந்த கட்டணத்தில் இட வசதிகள் உள்ளன. பக்த நிவாஸுக்கு அருகில்





மிகப்பெரிய அன்னசத்திரம் உள்ளது. இங்கு இலவசமாக அன்னதானம் அளிக்கப்படுகிறது.

(அக்கல்கோட் சமாதி மடத்தின் பூஜாரி- அனுப் மஹராஜ் - *94053 02380*)

**அக்கல்கோட்டுக்கு அருகில் இருக்கும் புனித க்ஷேத்திரங்கள்**

1. **கானகாபூர்** - *75* கி.மீ (பார்க்க வேண்டிய இடங்கள்: பீம- அமரஜ சங்கம், ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி ஆலயம், குமஸி, கடக்கஞ்சி)
2. **மாணிக் நகர்-** *125* கி.மீ (ஸ்ரீ மாணிக் பிரபு சமாதி மந்திர்)
3. **துல்ஜாபூர்** - *65* கி.மீ (மராட்டிய மன்னர்களின் குலதெய்வமான துல்ஜா பவானி ஆலயம்)
4. **பண்டரிபுரம்** - *110* கி.மீ (ஸ்ரீ பாண்டுரங்கன்- ரகுமாயி கோவில் மற்றும் பல இடங்கள்)
5. **ஷீர்டி** - *450* கி.மீ

பயணத்தை கானகாபூரில் இருந்து துவங்கி அக்கல்கோட் வழியாக ஷீர்டி வரை சென்று முடித்தால் வசதியாக இருக்கும்.

**ஜய ஜய ஸ்ரீ ஸ்வாமி சமர்த்!!**

